பாகம் 1

# தந்த்ரா

## ரகசியங்கள்




விஞ்ஞான் பைரவ் தந்த்ராவின் புதிய விளக்கம்

கண்ணதாசன் பதிப்பகம்

# தந்த்ரா ரகசியங்கள்

(விஞ்ஞான பைரவ் தந்த்ராவின் புதிய விளக்கம்)

பாகம் - 1

ஓஷோ

மொழிபெயர்ப்பு:

தியான் சித்தார்த்

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,

தியாகராய நகர், சென்னை - 600 017.

போன் : 24332682

கண்ணதாசன் பதிப்பக வெளியீடு எண்: 333

முதற் பதிப்பு : மே, 2003
இரண்டாம் பதிப்பு : பிப்ரவரி, 2004

E-mail : kannadhasan@vsnl.net
Our Website : www.kannadhasan.com

பதிப்பாசிரியர் - காந்தி கண்ணதாசன்



**Price Rs. 250/-**

- Translated By : Dyan Siddarth
- Second Edition : February, 2004
- Copies : 1200
- Publishing Editor : GANDHI KANNADHASAN
- Published by : KANNADHASAN PATHIPPAGAM
  23, Kannadhasan Salai,
  Thiyagaraya Nagar, Chennai - 017.
  Ph: 2433 2682, 52077776
- Our Branches : ★ No.1, Annai Complex,
  III Street, Vasantha Nagar,
  **Madurai - 625 003.** Ph. 0452 - 2608793.
  ★ No. 37, Bharathy Street,
  **Pondicherry - 605 001.** Ph: 0413-2221332
- Our Bankers : State Bank of India, T. Nagar, Chennai-17.

- Laser Typeset : Dhanalakshmi Enterprises, Chennai-33. Ph: 24716143
- Printed at : United Bind Graphics, Ph: 2498 4693.

# பொருளடக்கம்



## அத்தியாயங்கள்

# மொழிபெயர்ப்பாளரின் முன்னுரை

இந்த மொழிபெயர்ப்பு வாய்ப்பிற்கு
எனது கண்ணீர் முத்துக்களைக் கோர்த்து
நன்றி மாலை சமர்ப்பிக்கிறேன்.

ஆதரவு தந்த வெளியீட்டாளர்
காந்தி கண்ணதாசன்,
ஆருயிர்த் தோழி மா தியான் ப்ரியா
இருவருக்கும் இதில்
பெரும் பங்குண்டு.

இது அறிவுப்பசி தீர்க்கப் படிக்கும்
புத்தகம் அல்ல.

இது ஞானப்பசி போக்கும்
தியான வழிகாட்டி.

இதை ஒரே மூச்சில் படிக்க வேண்டாம்,
ஒவ்வொன்றாய் அனுபவித்துப் பாருங்கள்.

இதிலுள்ள பிழைகளைச் சுட்டிக்காட்டி
வெளியீட்டாளருக்கு எழுதினால்
அடுத்த பதிப்பில் சரி செய்ய
உதவியாக இருக்கும்.

நன்றி,

**தியான் சித்தார்த்.**

# இப்புத்தகத்திலுள்ள தியான யுக்திகள்

1. இரு மூச்சுகளின் இடைவெளியைக் கவனி.
2. இரு மூச்சுகளுக்கு இடையிலுள்ள வளையும் புள்ளியைக் கவனி.
3. இரு மூச்சுகளும் கலக்கும் புள்ளியைக் கவனி.
4. மூச்சு நிற்கையில் விழிப்புணர்வு கொள்.
5. உனது கவனத்தை மூன்றாவது கண் மேல் வை.
6. உனது தினசரிச் செயல்களின்போது இடைவெளியின் மீது கவனம் கொள்.
7. கனவில் விழிப்புணர்வு அடைய ஒரு யுக்தி.
8. திரும்பும் புள்ளியைப் பக்தியோடு கவனி.

9(a). இறந்தவனைப் போலப் படு.

9(b). இமைக்காமல் விழித்துப் பார்.

9(c). எதையாவது உறிஞ்சு பின் உறிஞ்சுதலாகவே மாறிவிடு.

10. அணைப்பாக மாறு.
11. உனது புலன்களை மூடு, கல்லைப் போல மாறு.
12. நீ எடையற்றவனாக மாறுவாயாக.
13. ஒரே பொருளின் மேல் முழுக் கவனத்தையும் குவி அல்லது வை.
14. உனது விழிப்புணர்வை உனது முதுகுத் தண்டின் மேல் வை.
15. தலையினுடைய எல்லாத் திறப்புக்களையும் மூடு.

16. உனது இதயத்தில் புலன்களை உள்வாங்கு.

17. தேர்ந்தெடுக்காதே, நடுவில் வைத்திரு.

18. ஒரு பொருளை அன்போடு பார்.

19. உனது புட்டத்தில் மட்டும் உட்காரு.

20. ஓடும் வாகனத்தில் தியானம் செய்வது எப்படி?

21. உனது உடலின் ஒரு வலியின் மேல் கவனத்தைக் குவி.

22. அடையாளம் கொள்ளாமல் உன் இறந்த காலத்தைப் பார்.

23. ஒரு பொருளை உணரு, அதுவாக மாறு.

24. எழும் உணர்ச்சிகளைக் கவனி.

# அறிமுகம்

இந்த வரிசைப் பேச்சுக்களின் பிற்பகுதியில் ஓஷோ தியானத்தை ஒரு விஞ்ஞானம் என்றே கூறுகிறார். இது ஒரு எளிய பேச்சுத்தான் என்றாலும் ஆழமான அர்த்தம் கொண்டது. அறிவுபூர்வமான நம்பிக்கையோ, உணர்ச்சிபூர்வமான நம்பிக் கையோ, சடங்கோ அல்ல. இது விஞ்ஞானம். ஆனால் நாமறிந்த வெளி உலகத்தில் சோதிக்கப்படும் விஞ்ஞானம் அல்ல. மாறாக உள் உலகத்தில் சோதனைக்கு உள்ளாக்கிக் கொள்ளும் விஞ்ஞானம் இது.

பல நூற்றாண்டுகளாக ஞானிகளால் அறியப்பட்டு வரும் விஞ்ஞானம் இது. அதே சமயம் பொதுமக்களால் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டது. இது புத்தகம் படித்து அறியக்கூடிய அறிவுடம்பு கொண்டதல்ல. ஆயினும் சுட்டிக்காட்டும் வார்த்தைகள் சொல்லித்தரப் படலாம். இந்த ''விஞ்ஞான பைரவ தந்த்ரா'' என்ற சூத்திரங்கள் கூட இப்படிக் காப்பாற்றப் பட்டுள்ளவைதான். ஆனால் இந்த வார்த்தைகள் சுட்டிக் காட்டும் அனுபவத்தை அதே அனுபவமடைந்த ஒருவரால் மட்டுமே தர முடியும். அது ஒரு குருவினால் மட்டுமே சிஷ்யனுக்குத் தரக் கூடியது.

நாகரிக மனிதன், குறிப்பிட்டுச் சொன்னால் மேற்கத்திய உலகம், இப்போது அதனால் கவரப்பட்ட கிழக்கத்திய உலகம் ஆகிய எல்லாமே தியானம் என்றால் என்ன என்பதையே மறந்துவிட்டன. அதனிடத்தில் நம்பிக்கைகளையும், சடங்குகளை யும் நிரப்பிவிட்டன. நாம் அழகால் கட்டுண்டு போகும்போது, நாம் அன்பால் நாவடைத்துப் போகும்போது, நமக்குத் தியானத் தின் கண நேர அனுபவம் கிடைக்கின்றது. ஆனால் வெளியே பார்ப்பதற்கு மட்டுமே சொல்லித் தரப்பட்டு பழக்கப்படுத்தப் பட்டுள்ள நமக்கு உள்ளே பார்க்கும் வாய்ப்பும் அதன் சிறப்பும் தெரிவதேயில்லை. அப்படி நினைத்தாலும் நாம் வெளியே இருக்கும் பரபரப்பிலும், சிக்கலிலும், ஈடுபட்டுள்ள வெளிச்

செயல்களின் சம்பந்தத்திலும் எங்கு எப்படி ஆரம்பிப்பது என்பது நமக்குத் தெரிவதில்லை.

ஓஷோவில் நுழையுங்கள். அவர் தனது வாழ்நாள் முழுவதும் விஞ்ஞானபூர்வமான தியானத்தைப் பழமையி லிருந்து மீட்டுப் புதுப்பித்து இன்றைய மனிதனுக்கு ஏற்றவாறு கொடுப்பதிலேயே ஈடுபட்டிருந்தார். இந்த வரிசைப் பேச்சுக்கள் அவரது மிக முக்கிய குறிப்பிடத்தக்க பணியாகும். இவை சிவன் தனது இணையான தேவிக்கு உபதேசித்த சூத்திரங்களின் விளக்கமாகும். ''விஞ்ஞான பைரவ் தந்த்ரா'' வின் 112 தியான முறைகளின் மேல் ஓஷோ பேசியுள்ள இது 21ஆம் நூற்றாண் டிற்காகப் புதியதாய் பிறந்த தியானத்தின் முழு விஞ்ஞானமும் அடங்கிய விளக்கமாகும். ஓஷோ சொல்கிறார், ''இந்த உலகத்தின் எல்லாவிதமான ஆண் மற்றும் பெண்ணுக்கான ஒரு தியான முறை இதில் இருக்கிறது.'' அவர் ஒவ்வொரு முறை யையும் விளக்குகிறார். அதன் மேல் எழும் கேள்விகளுக்கும் விடை அளிக்கிறார். அவர் கேட்பவர்களைப் பரிசோதித்துப் பார்க்க உற்சாகப்படுத்துகிறார். விளையாட்டுத் தன்மையுடனும், தளர்வுடனும் செய்து பார்த்து, எது ''க்ளிக்'' ஆகிறது என்பதைக் கண்டுகொள்ளச் சொல்கிறார். நீ எல்லா முறைகளையும் பரிசோதித்துப் பார்த்தும் எதுவும் பிடிபடவில்லை என்றால் தியானம் உனக்கானது அல்ல என்கிறார்.

ஆகவே நீங்கள் வெறும் படிப்பவர் அல்ல. மாறாக உங்கள் உள் உலகத்தின் விஞ்ஞானியாக மாற வேண்டும். இதுவே மிக முக்கியமான விஷயம். மேலும் இதைத் தொடர்கையில், நீங்கள் சில விஷயங்களை அறிந்துகொள்வது நல்லது. ஆகவே அவற்றை இந்த அறிமுகத்தில் தருகிறேன்.

இந்தப் புத்தகத்தின் ஆரம்பத்தில், ஓஷோ யோகா, தந்த்ரா இரண்டும் முரண்பட்டது என்கிறார். யோகா வைராக்கியத்தின் பாதை என்றும், தந்த்ரா 'சரணாகதி' அல்லது 'நடப்பதை அனுமதித்து விடுவது' எனும் பாதை என்றும் கூறுகிறார். மேற்கத்தியவர்கள் ஏற்கனவே மிகுந்த வைராக்கியம்

உடையவர்களாயிருப்பதால் யோகா அவர்களுக்குப் பெருமளவு உதவ முடியாது என்கிறார். தந்த்ரா என்பது ஏற்றுக்கொள்ளும் பாதை.

**"தந்த்ரா என்ன சொல்கிறது என்றால் நீ எப்படி இருக்கிறாயோ அப்படியே உன்னை ஏற்றுக்கொள். நீ பல்வேறு பரிமாணங்களைக் கொண்ட சக்தியின் மிகப்பெரிய அறிய முடியாத புதிர். ஏற்றுக் கொண்டு அந்த சக்தியோடு நகரு. ஆழமான உணர்ச்சி விழிப்புடனும், விழிப்பு உணர்வுடனும், அன்புடனும், புரிதலுடனும் நகரு. அவைகளோடு நகரு. அப்போது ஒவ்வொரு ஆசையும் அதை நீ தாண்டிச் செல்ல உதவும் படிக்கட்டாக இருக்கும். பின் எந்தச் சக்தியும் உதவி புரிவதாக மாறிவிடும். பிறகு இந்த உலகமே நிர்வாணம் அல்லது முக்தி, இந்த உடம்பே ஆலயம் – புனித ஆலயம், புனித ஸ்தலம்."**

ஓஷோ மேலும் சொல்கிறார், நமக்கு அன்பாயிருப்பது எப்படி என்று தெரிந்திருந்தால் எந்தத் தியான முறையும் தேவையில்லை – என்று. ஆனால் நமக்குக் கணநேர அன்பு அனுபவமே இருப்பதால் இந்த முறைகள் நமது எல்லை தாண்டிப் போக உதவும். ஆனாலும் ஓஷோவின் வழிகாட்டுதல் இல்லாமல் இந்த சூத்திரங்களைப் புரிந்துகொள்வது மிகவும் கடினம்.

முறைகளைப் பொறுமையாக விளக்கிக் கொண்டு வரும்போதே ஓஷோ எந்த முறை எப்படிப்பட்டவருக்கு உகந்தது என்பதையும் தெளிவாக்குகிறார். உதாரணமாக, சிந்தனாவாதிகளுக்கு உகந்தது, உணர்ச்சிகரமானவர்களுக்கு உகந்தது என்றெல்லாம் விளக்குகிறார்.

**"யோசனை, உணர்ச்சி – இதுதான் இரண்டு அடிப்படைப் பிரிவுகள்..... இதில் உனது பிரிவை முதலில் கண்டுபிடித்துக் கொள். எந்தப் பிரிவும் உயர்ந்ததோ தாழ்ந்ததோ இல்லை. யோசிக்கும் பிரிவு உயர்ந்தது என்றோ**

**உணர்ச்சிகரப் பிரிவு உயர்ந்தது என்றோ நினைக்காதே – அப்படி ஏதும் இல்லை! இவை வெறும் பிரிவுகள். யாரும் உயர்ந்தவரோ தாழ்ந்தவரோ அல்ல."**

இந்த வித விளக்கங்கள் நமக்கு ஒத்துவராத முறைகளைப் பரிசோதிப்பதில் நாம் கால விரயம் செய்வதைத் தடுத்து உதவுகிறது.

இந்தத் தியானங்கள் மிகவும் வித்தியாசமானவை. மற்றொரு விதத்தில் – அவை ஒவ்வொன்றும் வெவ்வேறு புலன்களை அடிப்படையாகக் கொண்டவை. சில கண்களுடனும், பார்வையுடனும், நோக்குடனும், கற்பனையுடனும் தொடர்பு கொண்டவை. சில ஓசையுடனும், கேட்பதனுடனும் தொடர்புடையன. சில சுவையுடனும், நகர்தலுடனும் தொடர்புடையன.

இந்தத் தியானங்கள் உடலின் பல்வேறு சக்தி மையங்களுடனும் தொடர்புடையனவாயும் உள்ளன. செக்ஸ் மையம் அல்லது மூல மையத்திற்கு சக்தியைக் கொண்டு செல்லும் தியான முறைகளும் உள்ளன. ஹரா மையத்திற்கு, இதயத்தைத் திறக்க வைக்கும் சில, தொண்டை மையத்திற்கு, மூன்றாம் கண்ணிற்குச் சில, உச்சந்தலை மையத்திற்கு என்று பலவகைகள் உள்ளன.

இவை சிவனால், தனது துணை, காதலி தேவிக்குக் கொடுக்கப்பட்டவையாதலால் பெண்களுக்கு மட்டுமே உரியதான சில தியானங்களும் இதில் உள்ளன.

ஓஷோ ஆண், பெண் சக்தி வித்தியாசங்களைப் பற்றிப் பேசுகிறார். மேலும் அவர் எந்தத் தியானங்கள் ஆண் அல்லது பெண்களுக்கு ஏற்றது என்றும் சுட்டிக் காட்டுகிறார். இது குறித்து மேலும் கொஞ்சம் பின்னால் நான் கூறுகிறேன்.

**தியானங்களைப் பரிசோதித்தல் :**

இந்தத் தியானங்கள் மிகவும் பழங்காலத்தவை என்ற போதிலும், அவை இன்றும் சக்தியுள்ளவை. ஒருவேளை

அதிகமாகக் கூட இருக்கலாம். ஓஷோவின் வழிகாட்டுதலோடு அவற்றைப் பயன்படுத்தும் போது. இந்தக் கடந்த 3 வருடமாக சுவாமி தேவ வதூத்தும் நானும் இவைகளை ஓஷோ பல்கலைக்கழகம், பூனாவில் நாங்கள் நடத்திய 'எஸோடரிக் சைன்ஸ் டிரய்னிங்' வகுப்பில் பயன்படுத்தினோம். இந்த 3 மாத வகுப்பில் 112 தியானங்களையும் பயன்படுத்த முடியவில்லை. ஆகவே நாங்கள் 55 அல்லது 60 தியானங்களை எடுத்துக் கொண்டோம். 7 சக்தி மையங்களின் விளக்க வரைபடத்தின் அடிப்படையில் இவற்றைத் தேர்வு செய்தோம். ஓஷோ இந்த வரிசை எதையும் இந்தப் புத்தகத்தில் கொடுக்கவில்லை. மேலும் இப்படித்தான் இதைச் செய்ய வேண்டுமென்பதும் இல்லை யெனினும் இது எங்களுக்கு இந்தப் பயிற்சி வகுப்பில் நன்றாக அமைந்தது.

பயிற்சி வகுப்பின் ஒவ்வொருவருக்கும் ஓஷோவின் விளக்கத்தோடு தியானமுறைகளின் நகல் ஒன்று தரப்பட்டது. பின் முழுக் குழுவும் அந்த முறையைப் பயன்படுத்திப் பரிசோதிக்கப்பட்டது. நாங்கள் பலருக்கும் பொருந்தக்கூடிய பல தியானங்களை அறிமுகப்படுத்தினோம். ஆனால் தினமும் எல்லா தியானங்களையும் செய்ய வழியில்லை. அப்படியும் 'இருள் தியானம்' (Darkness Meditation) தினமும் நாங்கள் செய்தோம். இந்த வகுப்பின் விளைவாக இப்போது நூற்றுக்கணக்கானவர்கள் இந்த முறைகளைப் பரிசோதித்து வியப்பளிக்கும் விடைகளைக் கண்டுள்ளனர். நான் இந்தத் தியானங்களை அந்தப் பயிற்சி வகுப்பில் பயன்படுத்திய விதத்தையும் அதன் மூலம் நாங்கள் அறிந்தவைகளையும் சிறிதே உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்.

முதலில், வதூத்தும் நானும் அந்தப் பயிற்சி வகுப்பின் வழிநடத்துனர்கள் என்ற வகையில் ஒன்றைப் புரிந்து கொண்டோம். அது நாங்கள் சிறிது காலமாவது செய்து பார்க்காத முறையை அறிமுகப்படுத்த முடியாது. நாங்கள் குறைந்த பட்சம் ஒரு வருடமாக இந்தப் பயிற்சி வகுப்பு நடத்த முன்னேற்பாடு

செய்து கொண்டோம். பல டஜன் தியானங்களை முயற்சி செய்து பார்த்தோம் . பல தடவைகள் நாங்கள் முன்னறியாத இடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டோம். சில சமயம் பயமுறுத்தும், சில சமயம் பரவசமூட்டும் அனுபவங்கள் அவை. நாங்கள் பரிசோதகரும் பரிசோதிக்கும் பொருளும் இணைந்த விதமான விஞ்ஞான சோதனை செய்யும் விஞ்ஞானிகள் போல் உணர்ந் தோம். ஒரு குழுவில் இந்தத் தியானங்களைச் செய்வதும், அவைகளை நடத்துவதும் ஒரு நினைத்துப் பார்க்க முடியாத ஆசிர்வாதம் ஆகும்.

பயிற்சி வகுப்பைத் தலைமை ஏற்று நடத்திய எனக்கு ஒரு தியானம் மிகவும் உதவியாய் இருந்தது. பயிற்சியின் இடையே பங்கு பெறுபவர்களின் அனுபவத்தைக் கேட்போம். அப்போது அவர்கள் சொல்வதைச் சரிவரக் கேட்க அதே லயத்தில் இருக்க வேண்டும். அதற்காக நாங்கள் ''இதயத்தின் மூலம் கேட்பது'' என்ற இந்தத் தியானத்தைச் செய்வோம். ஓஷோ இதை விவரிக்கிறார்:

> ''இசையைக் கேட்கும்பொழுது, அதை இதயத்தி லிருந்து கேள். இசை உனது இதயத்தை வந்து தொடுவதை உணர்; இதயம் அதனுடன் இசைவு கொள்ளட்டும், உனது புலன்கள் இதயத்துடன் இணையட்டும், தலையுடன் வேண்டாம்''.

இந்தத் தியானத்தின் மூலமாக நான் மற்றவர்கள் சொல்வதை இதயத்திலிருந்து கேட்க முடிந்தது. அவர்கள் சொல்ல வருவதைப் புரிந்து கொள்ளுமளவு அவர்களோடு வயப்பட முடிந்தது. தியான அனுபவத்தை வார்த்தைகளில் வடிப்பது என்பது முற்றிலுமாகச் சாத்தியமில்லை. சில சமயங்களில் சிலர் சொல்லும் அனுபவங்கள் அவர்கள் பயித்தியகார விடுதிக்குச் செல்ல வேண்டியவர்கள் என்று எண்ணத்தோன்றும்! ஆனால் சாதுவான கேஸ்கள், அப்படியும்.....

உதாரணமாக நாங்கள் பயிற்சியின் துவக்கத்தில் செய்த 'பார்க்கும் தியான'த்தில் எல்லோரும் தோட்டத்திற்குச் சென்று

ஏதாவது ஒரு செடியைப் பார்க்க வேண்டும். இதில் ஒரு குறிப்பிட்ட கணத்தில் திசை மாறிக் கண்கள் வழியாக சக்தி உள்ளே திரும்ப ஆரம்பிக்கும். இந்தத் தியானத்தை ஓஷோ விளக்குகிறார் :

> "நீ ஒரு மலரை அல்லது முகத்தைப் பார்க்கும்பொழுது, ஒரு குறிப்பிட்ட சக்தியை நீ வீசுகிறாய் – ஏனெனில் உனது பார்வை என்பது சக்தி..... திடீரென்று உனது கவனம் உன்னிடமே திரும்ப வரும். அது ஒரு வட்டமாக மாறும்..... எண்ணங்கள் எதுவும் இல்லாத பொழுது இது நிகழும். இப்போது நீ மலரை மட்டும் பார்க்கவில்லை, பார்ப்பவனையும் பார்க்கிறாய். அந்தச் சமயம் மலரும், பார்ப்பவனும் இரு பொருள்களாகி நீ இரண்டையும் பார்க்கும் சாட்சி பாவத்திலிருப்பாய்".

இந்தத் தியானத்தை முயற்சித்தவர்கள் என்னிடம் 'செடி என்னைப் பார்ப்பது போல உணர்ந்தேன்', 'செடி என்னை நேசிப்பதை உணர்ந்தேன்', 'செடியும் நானும் ஒன்றாகி விட்டதாக உணர்ந்தேன்', மற்றொருவர் 'எனக்கும் செடிக்கும் எந்த இடைவெளியும் இல்லாமல் உணர்ந்தேன்' என்றெல்லாம் கூறியுள்ளனர். நமது சமுதாய அமைப்பில் ஒருவர் 'செடி எனக்குள் வாழ்வதாக உணருகிறேன்' என்றோ 'எனக்கும் செடிக்கும் இடையே சக்தி பாய்கிறது' என்றோ சொன்னால் மற்றவர்கள் பயித்தியம் பிடித்துவிட்டது என்றோ அல்லது ஒரு மாதிரி என்றோ சந்தேகப்படுவார்கள்.

ஆகவே நாங்கள் மற்றவர்கள் அனுபவத்தை இருவிதமாக இருந்து கேட்க வேண்டும். ஒன்று எங்கள் தியான அனுபவம், மற்றது 'இதயத்திலிருந்து கேட்பது' என்ற நிலை. இல்லா விட்டால் மற்றவர்கள் சொல்வதைப் புரிந்துகொள்ள முடியாது.

சில சமயம் இந்தப் 'பார்க்கும் தியான'த்தின் ஆரம்பத்தில் சிலருடைய உடல் எதிர்ச்செயலில் பாதிக்கப்படும். சிலர் கண்களில் எரிச்சலை உணர்வார்கள், கண்ணீர் பொங்கிவரும்,

கண்ணை மூடிக்கொள்ளத் தோன்றும், திறந்து வைத்திருப்பது போராட்டமாக இருக்கும். சிலருக்கு உடம்பு வேறுவிதமாகப் பாதிக்கப்படும். அப்போதெல்லாம் நாங்கள் உடனே டாக்டரிடம் சென்று சோதித்துக்கொள்ளச் சொல்வோம். எல்லாம் சரியாக இருந்தால் அது சக்தி நகர்தலின் விளைவு என்று முடிவு செய்வோம். பிறகு அவர்களின் சக்தி தியானம் புரிய இணக்கமாக இருக்கும் விதத்தைக் கண்டுகொள்ள உதவுவோம். ஆனால் பொதுவாக அவரவர்களே தங்கள் உள்ளுணர்வுப்படி சக்தியை இயல்பாகவும், சமனாகவும் பாயும் வழியைக் கண்டு கொள்வார்கள். அப்படி அவர்கள் செய்ய ஆரம்பித்த உடனேயே, உடல் தளர்வடையும், உடல் பாதிப்புகள் மறைந்து போகும். வெகு சீக்கிரம் அவர்கள் தங்கள் கண்களை இமைக்காமல் நீண்ட நேரம் வைத்திருக்க முடியுமென்பதைத் தெரிந்து கொள்வார்கள்.

பின்னால் அவர்கள் வந்து சொல்வார்கள் : ''நான் 'பார்க்கும் தியான'த்தை இப்போது எங்கு வேண்டுமானாலும் செய்ய முடியும் – ஒரு வரிசையில் ஐந்து நிமிடம் நிற்க நேரும்போது, ஒரு ஆளரவமற்ற தெருவில், ஒரு டாக்டரின் பார்வைக்குக் காத்திருக்க நேரும்போது இப்படி எங்கும் செய்ய முடியும். எல்லாம் கலக்கம் தீர்ந்து அமைதியாகிவிட்டது. ஆனால் நான் அந்தச் செடி என்னைப் பார்க்கிறது என்று நர்ஸிடம் போய்ச் சொல்ல மாட்டேன்!''

**இதயம் வாயிலாதல் :**

உண்மையில், எனது அனுபவத்தைப் பொருத்தவரை 'இதய தியானங்கள்' செய்வது தியானத்தில் முழுதாக ஈடுபட விரும்பும் எல்லோருக்குமே மிகவும் முக்கியம். தியானம் இரண்டே இரண்டு படிகளைக் கொண்டது என்று சொல்லலாம். முதல் படி தலையிலிருந்து இதயத்திற்கு, இரண்டாவது படி இதயத்திலிருந்து தொப்புளுக்கு, அதாவது நிஜமான மையத்திற்கு. ஆகவே நாங்கள் 'இதய தியானங்களை, பயிற்சி யின் ஆரம்பத்திலேயே அறிமுகப்படுத்தினோம். அதோடு இடை இடையே அந்த மூன்று மாத காலத்திலும் புகுத்தினோம்.

ஆரம்பத்தில் பங்கு பெற்றவர்கள் இதயம் என்ற வெளியை அறியவேயில்லை. ஓஷோ சொல்கிறார்,

> "மனதைத் தயார்ப்படுத்தப் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் உள்ளன. ஆனால் இதயத்தைத் தயார்ப்படுத்த எந்த இடமும் இல்லை..... பார்க்கப் போனால் மனிதன் நாகரிகமடைய அடைய இதயத்திலிருந்து மேன்மேலும் விலகிச் செல்கிறான். நாம் அதைச் சுத்தமாக மறந்துவிட்டோம் - அது இருப்பதையே, அதைத் தயார் செய்வதைப் பற்றிய தேவையையும் நாம் மறந்து விட்டோம்"

ஆகவே நாங்கள் மறைமுகமாக இதயத்திற்குப் போனோம். ஒரு பயிற்சியின் போது ஒருவருக்கொருவர் எதிர் எதிராக அமர்ந்துகொண்டு ஒருவர் மற்றொருவரின் உணர்ச்சிகளுக்குத் தன்னை உள்முகமாக லயப்படுத்திக் கொள்ள வேண்டும். பெரும்பாலானவர்களுக்கு, தாங்கள் உணர்வது தொண்ணூறு சதம் சரியாக இருப்பதை அறிந்ததும் ஆச்சரியமும் மகிழ்ச்சி யுமாக இருந்தது. இந்த நிலையில் பொதுவாக நாம் மற்றவரின் இதயத்தோடு வயப்பட்டு விட்டதாகப் பலரும் நினைக்கலாம். ஆனால் அப்படி ஆகியிருக்க வேண்டிய அவசியமில்லை.

மற்றொரு 'பார்க்கும் தியானம்' நாங்கள் பயன் படுத்தினோம். அதன் பெயர் 'அன்பின் கண்கள்.' நாங்கள் கண்களை மூடிக்கொள்ளச் சொல்வோம். பின் காதலன், காதலியை அல்லது பிறந்த குழந்தையை எப்படி அவர்கள் பார்ப்பார்கள் என்று நினைத்துப் பார்க்கச் சொல்வோம். பின் கண்களைத் திறந்து ரூமில் உள்ளவர்களை அதே கண்களுடன் பார்க்கச் சொல்வோம். ஒரு ஞானியை, அவர்கள் மிகவும் நேசிக்கும் ஒருவரைப் பார்க்கும் கண்களுடன் பார்க்கச் சொல்வோம். இந்த 'அன்பின் கண்கள்' தியானமும் மற்றவர் களுடன் ஒரு லயத்தை, இசைவைக் கொடுக்கிறது. ஆனால் இதுவும் கூட இதயத்தின் சக்தியல்ல. மாறாக இரண்டாம்

மையத்தைச் சேர்ந்ததே என்றபோதிலும் இதில் இதயத்தின் சக்தியும் இருக்கலாம்.

மற்றொருவருடன் லயமும், இசைவும் கொள்ள இன்னொரு வழி நான் ஏற்கனவே குறிப்பிட்ட 'இதயத்தின் மூலம் கேட்பது' என்ற தியானம். இதில் 'ஒருவர் தான் கேட்கும் குரல்கள் அனைத்தும், தான் கேட்கும் ஒலிகள் அனைத்தும், ரூமில் கேட்பவை, வெளியிலிருந்து கேட்பவை அனைத்தையும் தான் தன் இதயத்திலிருந்து கேட்பதாகக் கற்பனை செய்து கொள்கிறார். இது 'பார்க்கும் தியான'த்தைப் போன்றதே யானாலும் இதில் செய்பவர் கேட்பவராக மட்டும் இருக்கிறார். இருந்த போதும் இதுவும் ஒருவரை மற்றொருவரின் லயத்திற்கும், இசைவிற்கும் இட்டுச் செல்லும்.

இந்த அனுபவங்களுடன் நாங்கள் ஆரம்பிக்கிறோம். இவை 'இதய தியானங்கள்' அல்ல என்று தெரிந்தாலும் கூட இப்படித் துவங்குவது ஏனெனில் இது சைக்கிள் ஓட்டிப் பழகுவது போல. ஆரம்பத்தில் சரியாக ஓட்ட முடியாமல் சிலமுறை கீழே விழலாம். காலால் பெடலை மிதிப்பது, கையால் ஹேண்டில்பாரைச் சரியாகப் பிடித்துத் திருப்பிச் சரியான திசையில் ஓட்டுவது என ஒவ்வொன்றிலும் கவனம் தேவைப்படும். எந்த மரத்தை நோக்கியும் நாம் போகவில்லை என்று சுற்றிலும் பார்த்துக் கொள்ள வேண்டும், மணி அடிக்க வேண்டும், பிரேக் எங்கே என்று ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆரம்பத்தில் மிகவும் சிக்கல்தான். மெதுவாக ஒருவர் அந்த 'நேக்'கைப் (knack) பெற்று ஒரு கட்டத்தில் சுலபமாக சைக்கிளை ஓட்ட ஆரம்பிக்கிறார். இது போலத்தான் இதய தியானங்களும்.

ஆரம்ப அடிகள் மிகவும் முக்கியமானவை. ஆகவே சில தியானங்களை இப்போது முயற்சிப்போம். உதாரணமாக மற்றொருவரின் தன்னுணர்வைத் தனது தன்னுணர்வாக அறிந்து கொள்ளும் தியானம் ஒன்று உள்ளது. இதன் ஆரம்பத்தில் ஒருவர்

மற்றொருவரின் தன்னுணர்வின் அனுபவத்தை அடைவதில்லை. ஆனால் மற்றொருவரின் இடத்தில் தான் இருப்பதாகவும் அவரின் உணர்வுகளையும் அறிகின்றனர். பொதுவாக அவரின் உணர்ச்சிகளைத் தாங்களும் உணர்வர். இது இரண்டாவது சக்கரத்தின் மூலமே கூட சாத்தியம். இது உண்மையில் இதய மையத்தின் சக்தியல்ல, இரண்டாவது மையத்தின் சக்தியே என்றாலும் கூட இது ஒரு நல்ல ஆரம்பம்.

பிறகு பங்கு பெறுபவர்கள் மேலும் மேலும் தியானங் களைச் செய்யச் செய்ய அவர்கள் உணர்ச்சிகள், உணர்வுகள் ஆகிய மட்டங்களைத் தாண்டி 'இதயத்தின் வெட்ட வெளி' என்ற இடத்தை அடைகின்றனர். இங்கு அன்பு என்ற உணர்வு திடீரென்று நாம் அழைக்கும் பாசம் என்பதிலிருந்து சாந்தம் என்பதாக மாறுகிறது. இந்த இடத்திலிருந்துதான் பங்கு பெறுபவர் 'இதயம் திறத்தல்' என்ற அனுபவத்திற்குள் நுழைகிறார். இது வரை அடையும் அனுபவங்கள் இதயம் திறப்பதாக இருந்தாலும் உறுதியாக அப்படி இருக்கும் எனச் சொல்வதற்கில்லை.

ஒருமுறை இதயம் திறந்துவிட்டால் எதையும் அதுவாகவே ஏற்றுக் கொள்ளும் தன்மை வந்துவிடும். மிக ஆழமான ஏற்றுக்கொள்ளல் அது. ஒருமுறை அந்த ஏற்கும் தன்மை வந்துவிட்டால் அவர் தனக்குள் பார்த்து, தனக்குள் நடப்பவை களைக் காணும் திறமை பெற்றுவிடுகிறார். இந்த ஏற்புத்தன்மை வரும்வரையில் ஒருவருக்குள் இருப்பவை ஒளிந்தே இருக்கின்றன.

நாம் அனைவரும் நமது பண்பாட்டின் மூலமாகக் குற்றம் கூறவும், குறை காணவும், கருத்து கணிக்கவும், நம்மை நாமே உதாசீனப்படுத்தவுமே கற்றுத்தரப் பட்டிருக்கிறோம். ஆகவே இந்தக் குற்றம், குறை, கருத்துக்கணிப்பு, உதாசீனப்படுத்தியது ஆகிய எல்லாம் நமக்குள்ளே ஒளிந்து கொள்கின்றன. அவைகளை நம்மால் பார்க்க முடிவதில்லை. ஆகவே

உண்மையில் இதயம் திறப்பதற்குமுன் தியானம் ஆரம்பிக்க இயலாது.

ஆகவேதான் ஓஷோ தியானத்தின் நுழைவாயிலாக இதயத்தைக் கூறியுள்ளார் என்று நான் எண்ணுகிறேன். இந்த வெற்று வெளி, இந்த ஏற்புத்தன்மை வரும்போது, இது எல்லோரும் நினைக்கும் அன்பாக, ஒரு பிணைப்பு உணர்ச்சியாக இருக்காது. நாம் வழக்கமாக அன்பு என்று அழைக்கும் பற்றும், ஈர்ப்பும் வெறும் ரசாயன மற்றும் ஹார்மோன்களின் ஒன்றுக் கொன்றான பதில் மட்டுமே.

நான் புரிந்துகொண்ட வரையில் அன்பு என்பதற்கு ஓஷோ கொடுக்கும் அர்த்தம்..... உண்மையில் பயிற்சியின் போது நாங்கள் அன்பு என்ற வார்த்தையைப் பயன்படுத்தவேயில்லை. ஏனெனில் அது எதைக் குறிக்கிறது என்பது குறித்து எல்லோருக்கும் ஏகப்பட்ட குழப்பம் இருந்தது. ஓஷோ கூறுகிறார் :

> "அன்பே மிக உயர்ந்த முறைதான். ஆனால் அன்பு மிகவும் கஷ்டம் – ஒரு வகையில் சாத்தியமே இல்லை. அன்பு என்பது, உன்னைத் தன்னுணர்விலிருந்து வெளியே எடுத்து விடுவது, அதே சமயம் உனது "நான்" இருந்த அதே இடத்தில் மற்றொருவரை வைப்பது. உனக்குப் பதிலாக மற்றொருவரை மாற்றிக் கொள்வதே அன்பு – அதாவது நீ இல்லையென்றாகி மற்றொருவரே இருப்பவர் ஆவது."

இப்போது, நம்மில் பலருக்கும் இது போன்ற அன்பு கண நேர அனுபவமாக மட்டுமே இருக்க முடியும் என்று நான் எண்ணுகிறேன். ஆகவே நாங்கள் அன்பு என்ற வார்த்தையை விலக்கி விட்டு ஏற்புத்தன்மை, கருணை, உள்ளுணர்வு, விளையாட்டுத் தன்மை, அமைதி, சிரத்தை போன்ற வார்த்தைகளைப் பயன்படுத்தினோம் – ஏனெனில் இதய மையம் திறக்கும்போது முதன்முறையாக வெளிப்படும் குணங்கள் இவை.

இப்போது, இதயம் திறக்காமல் தியான அனுபவத்தை ஒருவர் பெற முடியாது என்று சொல்வதன் காரணம் என்ன வென்றால், தியான அனுபவம் பெற ஒருவருக்குக் கருத்துக் கணிப்பு எதுவும் இருக்கக் கூடாது. ஓஷோ தியானத்தின் மிக முக்கிய குணங்களாகக் கூறுபவை பார்த்தல், தளர்வாயிருத்தல் மற்றும் கருத்துக்கணிப்பற்ற தன்மை. ஒருவர் தனது இதயம் திறந்த பின்பே கணிப்புகள் எதுவுமின்றி எதுவானாலும் ஏற்றுக் கொள்ள முடியும். பிறகு தனக்குள் இருப்பதைப் பார்ப்பது சாத்தியம். ஒரு சில அடிகள் முன்னேறிச் சென்ற சிலரால் மற்றவர்களின் உள்ளே இருப்பதைப் பார்க்க முடியக் கூடும். ஆனால் அதில் ஒன்றுமில்லை. முக்கியம் என்னவென்றால் தனக்குள்ளே எந்தவிதக் கணிப்புமின்றி முழுமையான ஏற்றுக் கொள்ளுதலோடு தன்னையே பார்ப்பதுதான். மேலும் அதை வெறுமனே பார்ப்பதோடு அதை எந்த வகையிலும் மாற்றவோ, வெளியே எறியவோ முயற்சிக்காமல் அதை அப்படியே இருக்கும் வகையில் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதை மாற்ற முயற்சிக்க வேண்டும் என்ற கருத்துக் கூட உன்னை நீயே குறை கூறும் ஒரு நுட்பமான செயல் தான்.

ஆகவே இதயம் திறந்து ஏற்புத் தன்மையை உணரும் பொழுது, அங்கு சக்தியின், இயல்புத்தன்மையின், பலதரப் பட்டதின், விளையாட்டுத் தன்மையின் மிகப்பெரிய வெளிப்பாடு இருக்கும். மேலும் இதன்பின் ஒருவர் சமதளத்தில், படிப்படியாக, ஒரு காலைத் தூக்கி முன் வைத்து, பிறகு அடுத்த காலைத் தூக்கி அதற்கு முன் வைத்து என்று வளர்வதில்லை – மாறாக வளர்ச்சி உயர் நிலையில் ஒரேயடியாக ஏற்படுகிறது. இந்தச் சமயத்தில் மிகப்பெரிய அளவிலான படைப்பாற்றலும் வெளிப்படுகிறது.

***சக்கரங்களை அறிதல் :***

இந்தத் தியானங்கள் முடிந்து ஓரிரு மாதங்களுக்குப் பின்பே பொதுவாக இந்த இதயத்தின் வெற்றுவெளியை அதன் சாந்தத் தன்மையை எல்லோரும் கண்டுபிடிக்கின்றனர். ஆனால் இந்த

ஏற்புத்தன்மை வந்தவுடன் ஒரு மிக ஆழமான ஆராய்ந்தறிதல் துவங்கக் கூடும். பங்குகொள்பவர்கள் தங்களுக்குள் பல இரகசியங்களை அறிய ஆரம்பிக்கின்றனர். அப்படி அவர்கள் இரகசியங்களைக் கண்டுபிடித்து அறிந்து கொள்ளும் அதே சமயம் அவை வாழ்வின் சாதாரண நடைமுறை உண்மைகளா யிருப்பதையும் அறிகின்றனர்.

இதயத்தின் இந்த வெளி திறந்த பின்பு தான், அடியிலுள்ள சக்கரங்களுக்குப் போக முடியும். அங்கு மூன்றாவது சக்கரத்தில் சக்தியின் ஆற்றலை அல்லது சக்தியின் தவறாற்றலை ஆராய்ந் தறியலாம். இரண்டாவது சக்கரத்தில் கோபம், சோகம், பயம் போன்ற உணர்ச்சிகளை, முதலாவது அல்லது மூல சக்கரத்தில் இறப்பு பிறப்பு பயம், உயிர் வாழும் போராட்ட பயம், செக்ஸ் ஆகியவற்றை ஆராய்ந்தறியலாம்.

உணர்வற்ற இடத்தில் அடைந்து கிடக்கும் விஷயங்கள், கோப்பை ஒன்றில் ஊற்றும் மது பொங்கி வருவதுபோல மேலெழும்பும். அவை மேலே வந்து வெளியேறும், மேலும் மேலும் வந்து உடைந்து வெளியேறும். நாம் இதயத்திலேயே தொடர்ந்து இருக்கையில் குறை கூறுதலோ, கணிப்போ, எதிர்ப்பு உணர்ச்சியோ இருக்காது. அப்போது மேலும் மேலும் அடக்கி வைக்கப்பட்டுள்ளவை தானாகவே வெளியாகும். இப்படி அடக்கியவைகள் எல்லாம் வெளியேறியபின் மதிப்பு மிக்கவைகள் தானாகவே மேலெழும்பும். ஆகவே முதலில் அடக்கியவைகளின் வெளிப்பாடு, இது குப்பைக் கூளங்களைக் கூட்டி வெளியே வீசுவது போல. இதன் பின் மதிப்புமிக்கவைகள் தோன்ற ஆரம்பிக்கும். கீழ் மையங்கள் இவ்வாறு அவற்றில் அடக்கி வைக்கப்பட்டுள்ளவைகளையும், பயங்களையும் திறந்து சுத்தம் செய்யப்பட்டபின், சக்தி பாயாமல் தடையா யிருந்தவைகள் எல்லாம் போய்விடுகின்றன.

இவ்வாறு திறந்தவுடன், சக்தி கீழ் மையத்திலிருந்து இதயத்திற்குப் பாய்கிறது. பின் அங்கிருந்து தொண்டை மையத்திற்குப் பாய்கிறது. படைப்பாற்றல் திறக்கிறது. இயல்புத்

தன்மை எழுகிறது. இதன்பின் கணத்திற்குக் கணம் வாழ்க்கை துவங்குகிறது. மற்றவர்கள் வழி, சட்டம், உணர்வற்ற நிலையிலுள்ள கட்டுப்பாட்டு முறைகள், அடக்கியவைகளின் தொடர்பு இவற்றின்படி வாழ்வதைத் தவிர்த்து விடுகிறோம். இந்த இயல்புத்தன்மை, நளினம், அன்பின் வெளிப்பாடு இவற்றிலிருந்து விளையாட்டுத் தன்மையும், தன்னைப் பார்த்தே சிரித்துக்கொள்ளும் பக்குவமும் பிறக்கிறது. இந்தச் சிரிப்புத்தான் அருமருந்து.

இது நடந்தவுடன், நாம் மூன்றாவது கண்ணைத் திறக்கும் தியானங்களைச் செய்ய ஆரம்பிக்கிறோம். மூன்றாவது கண்ணைத் திறக்க இரு வழிகள் உள்ளன. இந்த ஆறாவது சக்கரத்தைத் திறக்க ஒரு வழி சக்தியை முதுகெலும்பின் அடியிலிருந்து எழுப்பி முதுகெலும்பின் வழியாக எல்லா மையங்களின் மூலமாக இந்த மூன்றாவது கண்ணில் வந்து மோதச் செய்வது. மற்றொரு வழி நேரடியாகப் 'பார்க்கும் தியான'ங்களைப் பயன்படுத்துவது.

ஓஷோவின் கூற்றுப்படி, நமது சக்தியில் எண்பது சதவீதம் கண்களின் மூலமாக விரயமாகிறது. கண்களின் மூலம் நாமறியாமலே போய்க்கொண்டிருக்கிறது. நாம் சக்தியை இழக்கிறோம். 'பார்க்கும் தியான'ங்களில் இந்த சக்தி திரும்பிக் கண்களின் மூலமாக உள்ளே வந்து மூன்றாவது கண்ணில் மோதி அதைத் திறக்கிறது. ஒவ்வொருவருக்கும் ஒரு முறை பயனளிக்கும். அதைப் பரிசோதித்தே அறிந்து கொள்ள வேண்டும். ஓஷோ ஒரு மிக அழகான 'கௌரிசங்கர் தியானம்' என்ற தியானத்தை நமக்கு வடிவமைத்துக் கொடுத்துள்ளார். இதில் நீலநிற ஒளி பயன்படுத்தப்படுகிறது. இது மூன்றாவது கண்ணைத் திறக்கும் மிக அழகான விதமாகும்.

**அன்பின் வட்டம் :**

கீழ் சக்கரங்கள் இப்படிச் சுத்தமான பின்னர்தான் நாம் 'தந்த்ரா' என்ற பெயரில் குறிக்கும் தியானங்களைச் செய்து

பார்க்கும் பக்குவம் ஏற்படுகிறது. நாங்கள் குழுவினரிடையே இந்தத் தியானங்களை விளக்கிச் சொல்லமட்டுமே முடியும். இந்தத் 'தந்த்ரா' தியானங்களை முயற்சிக்க விரும்புபவர்கள், தியானத்திற்குத் தகுந்தபடி தனியாகவோ அல்லது காதலியுடனோ தங்கள் சொந்தப் பொறுப்பிலேயே செய்துகொள்ள வேண்டும்.

ஆயினும் நான் இந்தவகைத் தியானங்களில் என் அனுபவத்தைச் சிறிதே உங்களுக்குச் சொல்கிறேன். முதலில் நான் 'தந்த்ரா' என்பதன் அர்த்தத்தைத் தெளிவு படுத்த விரும்புகிறேன். தந்த்ரா என்றால் செக்ஸ், பாலுணர்வு என்று அர்த்தமல்ல. மாறாக தந்த்ரா என்பது தியான நிலையைத் தொட செக்ஸைப் பயன்படுத்திக் கொள்ளும் அன்பு. இதை முதலில் தெளிவாக்கிக் கொள்ளுவோம். ஓஷோ சொல்கிறார் :

"தந்த்ரா என்றால் இதுதான் : அன்பு தியானமாக மாறுவது. இப்போது நீ ஏன் தந்த்ரா அன்பு மற்றும் செக்ஸைப் பற்றி இவ்வளவு பேசுகிறது என்பதைப் புரிந்துகொள்ளலாம். ஏன்? ஏனெனில் இந்த மேலோட்ட மான பரிமாணத்தை, இந்த உலகத்தைக் கடந்து செல்ல மிகச் சுலபமான இயற்கையான வழி அன்பு என்பதே.....

அன்பு திடீரென்று உன் பரிமாணத்தை மாற்றி விடுகிறது. நீ காலக் கணக்கிலிருந்து நழுவிக் காலம் கடந்ததைச் சந்திக்கிறாய். அன்பு தியானமாக மாற முடியும். மிக ஆழமான தியானமாக மாற முடியும்.....

சிவாவிற்கு அன்பு மிகப்பெரிய வாயில். அவருக்கு செக்ஸ் என்பது கண்டிக்கத் தக்கதல்ல. அவருக்கு செக்ஸ் என்பது விதை, அன்பு என்பது மலர். ஆகவே விதையைக் கண்டித்தால் மலரையும் கண்டிப்பவனாகிறாய். செக்ஸ் அன்பாக மாற முடியும். அப்படி அது அன்பாக மாறிவிட்டால் அது முடமாக்கப்படுகிறது. ஆகவே முடமாக்கப்படுவதைக் கண்டியுங்கள், செக்ஸை அல்ல. அன்பு மலர வேண்டும், செக்ஸ் அன்பாக மாற வேண்டும்.

**அப்படி அது மாறவில்லையென்றால் அது செக்ஸின் குற்றமல்ல, உன்னுடைய குற்றம்.**

**செக்ஸ் செக்ஸோடு நின்றுவிடக் கூடாது. இதுவே தந்த்ரா சொல்லுவது. அது அன்பாக மாற்றப்பட வேண்டும். அன்பும் அன்பாக நின்றுவிடக்கூடாது. அதுவும் ஒளியாக, தியான அனுபவமாக, முடிவான நிலையாக, ஞானத்தின் சிகரமாக மாற்றப்பட வேண்டும். அன்பை எப்படி மாற்றுவது? செய்பவனை மறந்து செயலாக மாறு. அன்பில் ஈடுபடும்போது அன்பாகவே இரு – வெறும் அன்பாக மட்டும். அப்போது அது உன்னுடைய அன்பல்ல, என்னுடைய அன்போ, மற்றொருவரின் அன்போ அல்ல – அது வெறும் அன்பு. நீ அங்கு இல்லாதபோது, நீ அந்த மூலசக்தியின் கைகளில் இருக்கும்போது, அந்த நிலையில் நீ அன்பாய் இருக்கிறாய் என்பது இல்லை. அன்பு உன்னுள் நிரம்பி மூழ்கடித்துவிட்ட நிலையில் நீ மறைந்து விடுகிறாய், நீ சக்திப் பிரவாகமாகவே மாறிவிடுகிறாய்''**

இந்தப் புத்தகத்தில் பல அடிப்படையான செய்து பார்க்கக்கூடிய தியானங்கள் உள்ளன. ஆனால் முதலில் ஒன்றைப் புரிந்துகொள்ள வேண்டும். அது, நாம் இப்போது செக்ஸைப் பயன்படுத்தும் விதத்தில் அது ஒரு தியானமாக முடியாது. தந்த்ராவைப் பொருத்த வரையில், அதன் பார்வைப்படி, நாம் செக்ஸை முறைகேடாகப் பயன்படுத்துகிறோம். எப்படியெனில் நாம் அதைக் காலம்காலமாகக் கண்டித்தே வருகிறோம். நமது எல்லோருக்கும் பொதுவான உணர்வற்ற ஆழத்தில் (Collective Unconscious) இந்த செக்ஸைக் குறை கூறும், கண்டிக்கும் போக்கு புதைந்து கிடக்கிறது. இது கூட நமக்குத் தெரியாது. ஓஷோ கூறுகிறார் :

**''செக்ஸ் என்பது பாவச்செயல் என்று தொடர்ந்து மனிதனிடம் வற்புறுத்தி வந்தது ஒரு மிகப் பெரிய தடைகல்லை உன்னுள் ஏற்படுத்தி இருக்கிறது. நீ ஒருபோதும் உன்னை முழுமையாக அனுமதிப்பதில்லை.**

எப்போதும் உன்னுள் ஏதோவொன்று விலகி நின்று கண்டித்துக் கொண்டே இருக்கிறது. இது புதிய தலைமுறை யிடம் கூட இருக்கிறது. அவர்கள், செக்ஸ் பற்றிய பழமை கருத்து எங்களுக்கில்லை, நாங்கள் அதனால் அழுத்தப் படவோ, கஷ்டப்படுவதோ இல்லை என்று சொல்லலாம், இருந்தபோதும் உனது உணர்வற்ற நிலையிலிருப்பதை வெளியேற்றி விடுவது அவ்வளவு சுலபமல்ல. அது பல நூற்றாண்டுகளாக ஏற்றி வைக்கப்பட்டது. மனிதனின் முழு கடந்தகாலமும் அதில் இருக்கிறது. ஆகவே உணர்வோடு நீ அதைக் கண்டிக்காத போதும், உணர்வற்ற நிலையி லிருந்து கண்டனம் நடந்து கொண்டுதான் இருக்கிறது. நீ முழுமையாக ஒருபோதும் அதில் இல்லை. எப்போதும் ஏதோ ஒன்று குறைகிறது. அப்படிக் குறைவது உன்னைக் கூறு போடுகிறது. தந்த்ரா முழுமையாக அதனுள் நுழையச் சொல்கிறது. உன்னை, உனது நாகரிகத்தை, உனது மதத்தை, உனது பண்பாட்டை, உனது கோட்பாடுகளை மறந்துவிடு. எல்லாவற்றையும் மறந்துவிடு. செக்ஸ் செயலில் முழுமையாக இறங்கு, அதைத் தவிர எதுவும் இல்லாமல் அதில் ஈடுபடு. சுத்தமாக எந்த யோசனையும் இல்லாமலாகிவிடு. அப்போது மட்டுமே நீ மற்றொரு வருடன் ஒன்றும் அனுபவத்தைக் காணும் விழிப்புணர்வு நிகழும். பின் இந்த ஒன்றும் உணர்வுக்கு ஒரு பார்ட்னர் தேடுவதிலிருந்து விடுபட்டு இந்த முழு அண்டத்துடன் ஒன்ற முயற்சிக்க முடியும். நீ மரத்துடன், நிலவுடன், எதனுடனும் செக்ஸில் ஈடுபட முடியும். ஒருமுறை இந்த வட்டத்தை எப்படி உருவாக்குவது என்று உனக்குத் தெரிந்துவிட்டால், எதனுடனும் இதை உருவாக்கிக் கொள்ளலாம் – எதுவுமே இல்லாமலும் உருவாக்கிக் கொள்ளலாம்''

இதன் அடிப்படையில் ஓஷோ சில தியானங்களைப் பெண்களுக்கும், சிலவற்றை ஆண்களுக்கும் உகந்ததாகக்

கூறுகிறார். ஆண் பெண் இருவரின் உடலியல் வித்தியாசங்களின் அடிப்படையில் அவர் இப்படிப் பிரித்திருக்கிறார். முதலில் கூறும்போது அவர் ஆண் பெண் இருவருமே பாதி ஆண் பாதி பெண், ஏனெனில் அவர்கள் ஆண்பெண் இருவரிலிருந்தும் பிறந்தவர்கள் என்கிறார். பிறகு விளக்கும்போது ஆணின் உடம்பில் பாசிடிவ் இடம், பெண்ணின் உடம்பில் நெகடிவ் இடம் என்று மாறிமாறி இருப்பதைச் சொல்கிறார். ஒரு ஆணுக்கு மூலாதாரச் சக்கரம் பாஸிடிவ் சக்தி கொண்டது, ஆகவே அது அங்கிருந்து எழும்ப முடியும். ஆகையால் தான் ஆண்கள் குண்டலினி சக்தி முதுகெலும்பில் எழும்புவதை உணர்கின்றனர். மேலும் ஓஷோ சொல்கிறார், ஒரு பெண்ணுக்கு மூலாதார சக்கரத்தில் இருப்பது நெகடிவ் சக்தி. ஆகவே உடலின் அந்த இடத்தில் பெண் ஆழமாக உள்வாங்கிக் கொள்ள முடியும். அதனால் பெண்ணுக்கு முழுமையாக அனுமதித்துவிடும் சாத்தியம் உள்ளது.

பெண்களின் பாஸிடிவ் சக்தி அவர்களின் மார்பகங்களில் உள்ளது. ஆகவே பெண்களுக்கான இரண்டு தியானங்கள் உள்ளன. ஒன்று, ''அக்குள்களின் இடைவெளிப் பகுதி முழுவதிலும்''. அதாவது இதய மையத்தின் முழுப் பகுதியிலும் உள்ள சக்தியைப் பற்றிய விழிப்புணர்வு பெறுவது. பெண்கள் இந்தப் பகுதியைக் கவனித்தால் சக்தியை உணர்வர். இரண்டாவது தியானம், பெண்கள் தங்கள் இரு முலைக் காம்புகளின் மீதும் ஒரே நேரத்தில் முழுக் கவனத்தையும் செலுத்துவது. ஓஷோ இதைப்பற்றிச் சொல்லும்போது இது உடலுக்கு மிகுந்த நறுமணத்தைக் கொண்டு வரும், உடலின் எடை கூடச் சிலருக்குக் குறையலாம், தங்களை லேசாக உணரலாம், காட்சிகள் தோன்றலாம் என்று கூறுகிறார். இதே போன்று ஒரு ஆணுக்கான தியானம் தனது பிறப்புறுப்பின் அடியின் மீது முழுக் கவனமும் செலுத்துவது. இது ஏனெனில் ஆணுக்கு அந்த இடம்தான் பாஸிடிவ் சக்தி உள்ள இடம். ஓஷோ சொல்கிறார் :

"ஒரு ஆண் தனது மார்பகங்களின் மேல் முழுக் கவனம் செலுத்த முற்பட்டால் அவர் மிகவும் சங்கடத்திற் குள்ளாவார். முயற்சி செய்து பாருங்கள். ஐந்து நிமிடத்திற் குள் வேர்த்துக் கொட்ட ஆரம்பிக்கும், சங்கடமாயிருக்கும். ஏனெனில் ஆணின் மார்பகங்கள் நெகடிவ் சக்தி உள்ளவை. ஆகவே அவை உனக்கு நெகடிவ்வைத் தருகின்றன. உடல் ஏதோ கோளாறு செய்யும், சரியில்லாமல் போகும், சங்கடப் படுத்தும், கஷ்டப்படும். ஆனால் பெண்களின் மார்பகங்கள் பாஸிடிவ். பெண்கள் தங்கள் மார்பகங்களின் அருகில் முழுக் கவனம் செலுத்தினால் அவர்கள் வெகு சந்தோஷத்தை அடைவர். மிகுந்த ஆனந்தமும், மிகவும் இனிமையாகவும் உணர்வர். புவி ஈர்ப்பே குறைந்துவிடும், மிகவும் லேசாக, பறப்பது போல உணர்வர். இந்தக் கவனத்தால் பலதும் மாறும். அவர்கள் தாய்மையை அதிகம் உணர்வர். நீங்கள் தாயாகாமல் இருக்கலாம். ஆனால் தாய்மையை அடைவீர்கள். எல்லோருடனும் உங்கள் உறவு மேலும் கருணையுடன், தாய்மை உணர்வோடு அமையும். ஆனால் இந்த முழுக் கவனம் செலுத்துவதும் மிகவும் தளர்வான நிலையில் செய்ய வேண்டும். இறுக்கமான இருக்கையில் செய்யக் கூடாது. நீங்கள் இறுக்கமாக இருந்தால் உங்களுக்கும் உங்கள் மார்பகத்திற்கும் இடையே ஒரு பிரிவு வந்துவிடும். தளர்வடையுங்கள், அவற்றில் கரைந்து போங்கள், நீங்களே இல்லாமல் போய்விட்டதாயும் வெறும் மார்பகங்களே இருப்பதாகவும் உணருங்கள். இது போன்று ஆண் செய்ய வேண்டுமென்றால் அவர் தனது செக்ஸ் மையத்தில் செய்ய வேண்டும், மார்பகத்தில் அல்ல. ஆகவேதான் குண்டலினி யோகம் எல்லாவற்றிலும் மூலாதாரச் சக்கரம் முக்கியத்துவம் பெறுகிறது. ஆண் தனது செக்ஸ் உறுப்பின் அடியில் முழுக் கவனம் செலுத்த வேண்டும். அங்குத்தான் ஆண் பாஸிடிவ், அங்குத்தான் அவனது படைப்பாற்றல் இருக்கிறது."

ஆணும் பெண்ணும் சேர்ந்து செய்யும் தியானங்களும் உள்ளன – ஒன்று ''செக்ஸில் ஈடுபடும் பொழுது வெளியேற்றத்தை நாடாதீர்கள்'' என்பது. மற்றொன்று ''அன்பின் வட்டம்'' என்ற தியானம். ஆணும் பெண்ணும் கலவியில் (செக்ஸில்) ஈடுபடும் பொழுது, ஆண் தனது பாஸிடிவ் சக்தியுள்ள மூலச் சக்கரத்திலிருந்து பெண்ணுக்கு சக்தியைக் கொடுக்கிறார். பெண் தனது நெகடிவ்வாக உள்வாங்கிக் கொள்ளும் முதல் சக்கரத்தில் அதைப் பெறும்போது அது பெண்ணின் பாஸிடிவ் சக்தியாக உள்ள இதயப்பகுதி வரை எழும்பச் சாத்தியமிருக்கிறது. பின் அது அங்கிருந்து ஆணின் நெகடிவ் பகுதியாய் உள்ள அவரது இதயப் பகுதிவரை பாய முடியும். அப்படி அதை ஆண் திரும்பப் பெற்றால் அது மறுபடியும் ஆணின் மூலச் சக்கரத்திற்கே திரும்பும். இப்போது 'அன்பு சக்தி வட்டம்' உருவாகிறது.

ஒருமுறை இதை நான் ஆணிடம் சொல்லாமலே முயற்சி செய்தேன். எனது இதயத்திற்கு ஏராளமாக சக்தி வந்து, என் இதயம் வெடித்துவிடப் போவது போல உணர்ந்தேன். ஆகவே நான் ஆணிடம் ''உனது இதயத்தைக் கொஞ்சம் திறக்கிறாயா?' என்று கேட்டேன். உடனே அவர் அப்படிச் செய்ய எங்களிடையே 'அன்பு சக்தி வட்டம்' உருவாகியது.

'அன்பு வட்டம்' உருவாகும்போது ஒரு மின்னல் வெட்டு போன்ற அனுபவம் ஏற்படலாம் என்று ஓஷோ கூறுகிறார். அது, ஆண் திடீரென்று பெண்ணைப் போல உணருவான், பெண் திடீரென்று ஆணைப் போல உணருவாள். இது கண நேரத்திற்குப் பிறகு பழையபடி ஆகிவிடும்.

**''இரண்டு காதலர்கள் உண்மையிலேயே சந்தித்து ஒரு வட்டமாக ஆகும்போது ஒரு திடீர் மாற்றம் ஏற்படும். கண நேரம் காதலன் காதலியாகவும், காதலி காதலனாகவும் ஆகிவிடுவர். அடுத்த கணம் திரும்பவும் காதலன் காதலனாகவும், காதலி காதலியாகவும் வந்து விடுவர். சக்தி**

பாய்வதால், அது ஒரு வட்டமாக மாறுவதால், ஆண் கண நேரம் பெண்ணாகவும், பெண் கண நேரம் ஆணாகவும் ஆகின்றனர்.''

இதோடு கூட, இரண்டு நீங்கள் தனியாகச் செய்யும் தந்த்ரா தியானங்களும் உள்ளன. இவை, செக்ஸில் ஈடுபடும்போது நாம் உணரும் பரவசம் உண்மையில் அடுத்தவரிடமிருந்து கிடைப்பது அல்ல என்பதைப் புரிந்துகொள்வதின் அடிப்படையில் அமைந்தவை. ஓஷோ சொல்கிறார்:

''இரண்டு காதலர்கள் அங்கிருக்கும் பொழுது, மெது மெதுவாக இரண்டுபேரும் காணாமல் போய்விடுகிறார்கள். தூய்மையான இருத்தல் மட்டும் மிஞ்சி நிற்கிறது – எந்த 'நான்' என்பதுமில்லாமல், எந்தச் சச்சரவும் இல்லாமல்..... வெறும் ஒரு பரிமாற்றம் மட்டும். அந்தப் பரிமாற்றத்தில் ஒருவர் ஆனந்தத்தை உணர்கிறார். அடுத்தவர் உனக்கு இன்பம் தருகிறார் என்று தவறான விளக்கம் கொடுக்கப் பட்டுள்ளது. நீங்கள் உங்களை அறியாமல் ஆழமாக ஒரு தியான முறையில் ஈடுபட்டுள்ளதால் எழும் பரவசமே இது. நீங்கள் இதைத் தன்னுணர்வோடு செய்ய முடியும். அப்படித் தன்னுணர்வோடு செய்யும்போது இன்னும் ஆழமாகச் செல்லலாம். ஏனெனில் அப்போது நீங்கள் வெளியே ஈடுபாடு கொள்வதில்லை. பரவசம் உன்னால் ஏற்படுகிறது என்பதை ஞாபகத்தில் கொள். நீங்கள் அடுத்தவரிடம் மிகவும் கரைந்து போவதில் தான் பரவசம் நிகழ்கிறது.''

தனியாகச் செய்யும் தந்த்ரா தியானங்களில் முதலாவது ''செக்ஸில் உலுக்குதல்''. உண்மையில் இதைப் பார்ட்னரோடு சேர்ந்தும் செய்யலாம். அப்படிச் செய்யும் போது இது கலவியில் முழுமையாய் ஈடுபட உதவும். மற்றொரு தனியாகச் செய்யும் தியானம் ''பார்ட்னர் இல்லாமல் கலவி செய்வது''. 'அன்பு வட்டத்தை' ஒரு பார்ட்னருடன் அனுபவித்திருந்தால் நீங்கள் இதைத் தனியாகச் செய்யலாம். ஓஷோ கூறுகிறார் :

''உனக்கு, நீ இல்லாமல் போய் துடிக்கும் ஒரே சக்தியை மட்டும் உணர்ந்த கணத்தின் அனுபவம் இருந் தால், இரண்டு பார்ட்னர்கள் மறைந்து போய் பார்ட்னரோடு ஏற்பட்ட வட்டம் மட்டுமேயாக இருந்த கணம் தெரிந்தால், அந்தக் கணத்தில் நீ மட்டுமே இருந்தாய், உன் பார்ட்னருக்கு அவர் மட்டுமே இருந்தார் நீயில்லை, பார்ட்னர்கள் மறைந்துவிட்டனர், அந்த ஒருமை உனக்குள் மையம் கொண்டிருக்கிறது. பெண்களுக்கு இதை உணர்வது எளிது. ஏனெனில் அவர்கள் எப்போதும் கலவியில் ஈடுபடும்போது கண்களை மூடிக் கொள்கின் றனர். இந்த வட்டத்தை நீ ஒருவனாக ஏற்படுத்திக் கொள்ள முடியும். ஏனெனில் ஆணில் ஆணும்பெண்ணும் பெண்ணில் பெண்ணும்ஆணும் சேர்ந்தே உள்ளனர். நீங்கள் ஆண் பெண் இருவர் சேர்ந்து உருவாக்கப் பட்டவர்களே. ஆகவே உங்களின் பாதி மற்றொன்றாகவே இருக்கிறது. நீ எல்லாவற்றையும் முழுமையாக மறந்து விட்டு உனக்குள் வட்டத்தை ஏற்படுத்திக் கொள்ள முடியும். உனது ஆண் உனது பெண்ணை, உனக்குள் ளிருக்கும் பெண் உனக்குள்ளிருக்கும் ஆணைச் சந்திக்கும் போது நீ உனக்குள்ளே தழுவிக் கொள்பவனாகிறாய். இப்படி இந்த வட்டம் உருவான பின் மட்டுமே உண்மையான பிரம்மச்சரியம் ஏற்படுகிறது.''

*இருள் தியானம் :*

நாள் ஆரம்பத்தில் நாங்கள் பயிற்சியின் மூன்று மாத காலமும் ''இருள் தியானம்'' தொடர்ந்து செய்தோம் என்று சொல்லியிருந்தேன். நாங்கள் கதவு, ஜன்னல் எல்லாவற்றையும் ஒளி புக வழியில்லாமல் அடைக்க ஏற்பாடு செய்து கொண்டோம். அறை சுத்தமாக இருட்டாயிருக்கும், முழு இருட்டு, அதில் நாங்கள் ஒரு மணி நேரம் இருப்போம். நாங்கள் கண்களைத் திறந்து வைத்திருப்போம். கண்களை, தண்ணீரை உறிஞ்சும் ஸ்பான்ஞ்ச் போல மிகவும் திறந்து எல்லாவற்றையும்

உள்வாங்கிக் கொள்ளுமாறு, இருட்டை ஏற்குமாறு வைத்திருப்போம். நாங்கள் உடம்பு முழுவதும் இருட்டால் நிறைய அனுமதிப்போம். இதுதான் 'இருள் தியான'த்தின் முதல் நிலை.

நீங்கள் இந்தத் தியானத்தைச் செய்ய ஆரம்பித்தால் ஓஷோ கூறியுள்ள ஒன்றை மிக முக்கியமாகக் கடைபிடிக்க வேண்டும். அது, நீங்கள் ஒரு ஒளி சம்பந்தப்பட்ட தியானமோ, அசைவுகள் கொண்ட தியானமோ இந்த இருள் தியானத்துடன் இணைந்து செய்ய வேண்டும். இல்லாவிட்டால் சக்தி முழுவதும் உள்ளேபோய் தேங்கி தடை ஏற்படுத்தலாம்.

இருள் தியானத்தின் இரண்டாவது நிலையில் 45 நிமிடத்திற்குக் கண்களைத் திறந்தவாறு அமர்ந்து இருளை உள்வாங்கிக் கொள்ள வேண்டும். அடுத்து தாயின் கருப்பையில் இருப்பது போல, முட்டைக்குள் இருப்பது போலப் படுத்துக் கொள்ள வேண்டும்.

பல மாதங்களாக இருள் தியானம் செய்த பின் மூன்றாவது கட்டம் ஒன்று உள்ளது. நீங்கள் இருள் தியானம் முடிந்து அறையை விட்டு வெளியேறும் பொழுது, அது இரவானாலும் பகலானாலும் உங்களோடு கொஞ்சம் இருளையும் உங்களுக்குள் வைத்து எடுத்துச் செல்ல வேண்டும். அடிப்படையில் இந்தத் தியானம் உங்கள் சக்தியைச் சாந்தமாகவும், தளர்வாகவும், உள்வாங்குமுகமாகவும் மாற்றுகிறது.

இருள் தியானத்தில் பங்குபெற்ற ஒருவர், ''இந்த இருள் தியானம் செய்வது நான் பரந்த எல்லையற்ற வெளியில் இருப்பதற்கான சாத்தியத்தைக் கொடுத்துள்ளது'' என்று கூறினார். மற்றொருவர் இந்த இருள் தியானத்தால் ''நான் குணமாகிறேன் – மிகவும் இதமாக இருக்கிறது. கர்நாடக இசை போல'' என்று கூறினார். இன்னொருவர், ''நான் மூன்று நாட்கள் கண்களைக் கட்டிக் கொண்டு காதுகளை அடைத்துக் கொண்டு இருந்தபோது அடையாத ஆழத்தை ஒரு மணி நேரம் இந்த இருள் தியானம் செய்வதில் அடைந்தேன்'' என்று சொன்னார்.

*தியானங்களை முயற்சித்தல் :*

நான் ஓஷோவின் அணுகுமுறை முற்றிலும் விஞ்ஞான பூர்வமானது என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். ஓஷோ ஒருபோதும் அவர் ஒரு முறையைப் பற்றிக் கூறுவதை நம்பச் சொல்வதில்லை. அவர் எப்போதும் நாமே முயற்சித்துப் பார்ப்பதையே ஊக்கப்படுத்துகிறார். ஆகவே இந்தப் புத்தகத்தைப் படித்துவிட்டு, திரும்பவும் அலமாரியில் எந்தத் தியானத்தையும் முயற்சிக்காமல் வைத்துவிட்டால், அவை வெறும் செய்திகளாக, அறிவாக இருக்குமேயன்றி, அவை உனது தேடலுக்கு எந்தவிதத்திலும் உதவ இயலாது. எல்லா முறைகளும் எல்லோருக்கும் பொருந்துபவை அல்ல. ஆனால் இந்த 112 முறைகளில் ஏதாவது ஒன்றாவது எந்தவிதத்தைச் சேர்ந்தவருக்கும் பொருந்தும்.

இந்தப் பலவிதமான முறைகளை ஓஷோ விளக்கிச் சொல்வதைப் படிக்கும் பொழுதே, ஏதாவது ஒன்று உனக்கு 'க்ளிக்' ஆவதைக் காணலாம். இதுதான் முயன்று பார்க்க வேண்டியது. அதில் ஒரு ஈடுபாடு ஏற்பட்டால் அந்த முறையை மூன்று நாட்களுக்கு விளையாடு, பின் போதும், சுலபமாக எடுத்துக்கொள் என்று ஓஷோ சொல்கிறார். மேலும் தொடர்ந்து அந்த முறை நல்லதாகப் பட்டால், உனது விழிப்புணர்வை அதிகரிக்க உதவினால், மூன்று மாதங்களுக்கு அதை முயன்று பார் என்று ஓஷோ கூறுகிறார்.

படித்துப் பார்க்கும் பொழுது புரிந்தாலும் கூட, அந்த முறையை முயற்சி செய்வதென்றால், அதை மறுபடியும் படித்துப் பார்த்து ஓஷோ சொல்வதைப் புரிந்துகொள்ள வேண்டும். அப்போது அந்த முறையைச் செய்யும்போது உங்களால் நுட்பமான, நுண்ணிய விஷயங்களை அறிய முடியும்.

தியானங்களை நேர்மையாகச் செய்து பார்க்கும் ஒருவருக்கு அவரது உண்மை என்ன என்பதைக் கண்டுகொள்ள முடியும். ஆகவே எந்த முறையாய் இருந்தாலும் அதன் விளைவு

உங்களுக்கு எப்படி என்பதை உறுதிபட நீங்களே அறிந்து கொள்ளலாம். ஆனால் இதில் ஒன்றை நினைவில் வையுங்கள் : ஓஷோவின் வழிப் பார்வையின்படி தியானங்களைப் பார்ப் போமேயானால், முறைகள் எல்லாம் ''செய்வது'' அல்ல. ஆகவே பலன் எதிர்பார்ப்பதைத் தவிர்க்க முயலுங்கள். ஓஷோ சொல்கிறார் :

''பரவசம் ஒரு பக்கவிளைவு, நீ அதை நேரடியாகப் பிடிக்க முடியாது. அது மிகவும் மென்மையானது. ஆகவே அதை மறைமுகமாகவே அணுக வேண்டும். எதையாவது செய்யும்போது அது நிகழ்கிறது. நீங்கள் அதை நேரடியாக அணுக முடியாது..... நீங்கள் பலனை மட்டுமே குறி வைத்தால், அது ஒருபோதும் நிகழாது. அப்போது மிகவும் மாறிவிடும். மக்கள் என்னிடம் வந்து, ''நீங்கள் தியானம் செய்தால் இது நிகழும் என்று சொன்னீர்கள். ஆனால் நாங்கள் தியானம் செய்து பார்த்தால் எதுவும் நிகழ வில்லையே'' என்று கூறுகிறார்கள். அவர்கள் சொல்வது சரிதான், ஆனால் அவர்கள் நிபந்தனையை மறந்து விட்டார்கள். நீங்கள் பலனை மறந்துவிட வேண்டும், அப்போதுதான் அது நிகழும். நீங்கள் செயலில் முழுமை யாக இருக்க வேண்டும். நீங்கள் எந்த அளவு செயலில் இருக்கிறீர்களோ, அவ்வளவு விரைவில் பலன் நிகழும். ஆனால் அது எப்போதும் மறைமுகமானதே. நீங்கள் உங்கள் பலத்தைப் பயன்படுத்த முடியாது, வன்முறையால் சாதிக்க முடியாது. அது மிகவும் மென்மையானது, அதன் மேல் சக்தியைப் பிரயோகிக்க முடியாது. நீங்கள் வேறு எங்காவது மிகவும் முழுமையாக ஈடுபட்டிருக்கும் போது உங்கள் உள்வெளி காலியாய் இருக்கும்போது மட்டுமே அது உன்னிடம் வர முடியும். இந்த முறைகள் எல்லாமே மறைமுகமானவை. ஆன்மிக நிகழ்வுக்கான நேரடி முறை எதுவுமே கிடையாது''

ஒருமுறை உனக்கு அந்த அனுபவம் கிடைத்துவிட்டால், சிரத்தை எழுகிறது. இந்தத் தியானங்களுடனான எனது

அனுபவத்தை விவரிக்கும் ஒரு அழகான கதை உள்ளது. அது ஒரு ஏழை மரம்வெட்டி ஒரு ஸுஃபி ஞானியைக் காட்டில் சந்தித்த கதை. அந்த வயதான ஸுஃபி இவனிடம் அருகிலேயே ஒரு பித்தளைச் சுரங்கம் இருக்கும்போது நீ ஏன் மரத்தை வெட்டிக் கொண்டிருக்கிறாய் - அங்கு ஒரு நாள் வேலை செய்து எடுப்பதில் ஒரு வாரம் நீ வாழலாமே என்கிறார். அந்த மரம்வெட்டி அப்படியே பித்தளையை எடுத்துச் செல்கிறான். அது தாராளமாக ஒரு வாரத்திற்குப் போதும். அவன் தனது நன்றியைத் தெரிவிக்கப் போகும்போது ஸுஃபி சொல்கிறார், இன்னும் கொஞ்ச தூரம் போனால் ஒரு வெள்ளிச் சுரங்கமே இருக்கிறது. அதில் ஒரு நாள் வேலை செய்தால் உன் ஒரு மாதத்திற்குப் போதுமே என்று. அவன் அவ்வாறே செய்கிறான். அது ஒரு மாதத்திற்குத் தாராளமாக இருக்கிறது. அவன் தனது நன்றியைத் தெரிவிக்கப் போகும்போது ஸுஃபி சொல்கிறார், இன்னும் கொஞ்சம் போனால் அங்கு ஒரு தங்கச் சுரங்கமே இருக்கிறதே என்று. அவன் அவ்வாறே போய் கொஞ்சம் தங்கம் வெட்டி எடுத்து வருகிறான். அது அவனுக்கு ஒரு வருடத்திற்குப் போதும்! இந்த முறை ஞானியைப் பார்க்க வரும்போது புதுத் துணிகளோடு செல்வந்தனாய் வருகிறான். வந்து அவரிடம் இன்னும் கொஞ்சத் தொலைவில் ஏதாவது இருக்கிறதா என்று கேட்கிறான். அதற்கு ஸுஃபி வைரச் சுரங்கம் இருக்கிறது என்கிறார். அவன் போய் வாழ்நாள் முழுவதற்கும் தேவைப்படு மளவு எடுத்துக் கொள்கிறான். ஆனால் அப்போது அவனுக்கு உறைக்கிறது, அட, இந்த ஸுஃபி இந்தத் தங்கம் வைரம் எதைப் பற்றியும் லட்சியம் செய்யாமல் அந்த மரத்தடியிலேயே அமர்ந்திருக்கிறாரே என்று. ஸுஃபி சொல்கிறார், வைரங்களைத் தாண்டி இன்னும் இருக்கிறது, அது ஒருவன் தனக்குள் சுரங்கத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். அதுவரை அவன் எதையும் அடைந்தவனில்லை. ஆக அவன் ஞானியின் அருகில் அமர்கிறான், நாள் முழுவதும் ஆனந்தத்தில் கரைகிறது. பின்னால் அவன் ஞானியிடம், ஏன் இந்த ஆனந்தப் பரவசத்தைப் பற்றி முதலிலேயே நீங்கள் என்னிடம் சொல்லவில்லை என்று

கேட்கிறான். அதற்கு ஸுஃபி சொல்கிறார், ''நீ கேட்டிருக்க மாட்டாய். முதலில் வைரங்கள் கிடைக்க வேண்டும். இப்போது நீ வீடு திரும்பலாம். ஏனெனில் உனது பொக்கிஷச் சுரங்கம் இப்போது உனக்குள்ளேயே இருக்கிறது.''

இந்தக் கதை ஓஷோவுடனான எனது அனுபவத்தைத் தெளிவாக விவரிப்பதாகும். ஓஷோ சொல்வதைக் கேட்பதும், கண்டுபிடிப்பதும், புரிந்து கொள்வதும், தவறாகப் புரிந்து கொள்வதும், கடைசியாக 1976ல் இந்தத் தியானங்களைக் கண்டு கொண்டதும் அப்படியே. மெது மெதுவாக அவரின் ஒவ்வொரு யோசனையும் எனக்குள் என்னை ஆழமாக, மேலும் ஆழமாகக் கொண்டு செல்லச் செல்ல, சிரத்தையும் வளர்ந்தது. இப்போது வரை எனது சிரத்தை மிக ஆழமாகவும், உறுதியாகவும் வளர்ந்திருக்குமளவு நான் இந்த முறைகளை முயற்சிப்பதின் பரிசுகளும் ஆழமாகவும், உறுதியாகவும் உள்ளன.

எனக்கும் 'வாதூத்'துக்கும் இந்தப் பயிற்சிக்காலத்தில் உண்மை ஆர்வமுள்ளவர்களோடு ஒரே அறையில் தியானத்தில் ஈடுபடக் கிடைத்த வாய்ப்பு நினைத்துப் பார்க்கவே முடியாத ஆசீர்வாதமே. மாசுமறுவற்ற நிலையில் மனதைக் கடந்ததில் ஏன்? மனதால் கண்டு கொள்ளக் கூட முடியாததில் தங்களைக் கரையவிட்டுக் கொண்ட இவர்களின் இடையே பலமுறை 'ஆஹா' என்று நான் உணர்ந்திருக்கிறேன்.

இந்தப் பயிற்சி மற்றொரு விதத்திலும் எல்லோருக்கும் மிக அழகாக அமைந்தது. அது, பங்குபெற்றவர்கள் அனைவரும் ஒருவரையொருவர் பாராட்டவும், மதிக்கவும் ஆரம்பித்தது. அவர்கள் ஒவ்வொருவரின் அனுபவமும் வித்தியாசமானது, ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது என்பதைப் புரிந்துகொண்டனர். தினசரி வாழ்க்கையைப் போலவே தங்கள் அனுபவத்தை முற்றிலும் தனித்தன்மையுடன் அப்படியே அனுமதித்துவிட அறிந்து கொண்டனர்.

ஓஷோ இந்தப் புத்தகத்தின் ஆரம்பத்திலேயே சொல்கிறார், அதாவது ஒரு தியான முறை உண்மையாகவே நமக்கு வேலை

செய்யும்பொழுது முதலில் ஒரு மாறும் சமயம் வரும். அந்தச் சமயத்தில் தொந்தரவாக உணர்வோம் அல்லது நமது தொந்தரவு களை அதிகம் உணர்வோம். அந்தத் தியானமுறை இதன் பின்தான் அமைதிக்கு இட்டுச் செல்ல முடியும். எங்கள் பயிற்சியின்போது சில சமயம் தினசரி வாழ்வில் உள்ள சிக்கல் மேலே வரும் அல்லது அது பிரதானமாக மாறும் ஒரு குறிப்பிட்ட தியானத்தைச் செய்யும்போது. இப்படி எழும் ஒவ்வொன்றும் நாம் ஆழமான அந்தப் பிரச்சனையைப் பார்க்கும் போது அதுவே ஒரு தெளிவைக் கொடுப்பதை நாங்கள் அனைவரும் உணர ஆரம்பித்தோம். அவ்வளவு ஒரு அன்பை, கருணையை அது வெளிக்கொண்டு வர முடியும்.

ஒருவர் இப்படி ஒரு பிரச்சனையில் புகுந்து வெளிவந்த பின், அவர்கள் அதே பிரச்சனையுடன் மற்றொருவர் போராடிக் கொண்டிருப்பதைப் பார்க்க முடியும். அப்போது அவர்கள் அந்த மற்றொருவரின் கண்களுக்குள் எந்தக் கணிப்புமில்லாமல், எந்தக் குறைகூறலும், உதாசீனப்படுத்தலும், கண்டித்தலும் இல்லாமல் ஆழமாக, நேரே பார்க்க முடியும். அதோடு அந்த மற்றொருவரை மிகுந்த புரிதலுடனும், மென்மையுடனும் ஊக்கப்படுத்தவும் முடியும். அந்தப் பிரச்சனையில் போராடிக் கொண்டிருக்கும் மற்றொருவரும் இவரின் கண்களில் அன்பையும் ஏற்பையும் கண்டுகொள்ள முடியும். இது ஒரு பெரிய தேறுதலாகும். இதனால் இரண்டாமவர் தைரியமும் பலமும் கொண்டு தொடர்கிறார் - பின் இருவரும் தோளோடு தோள் ஒரே புரிதலுடனும் கருணையுடனும் சேர்ந்து நின்று அவர்கள் பயணித்த பாதையின் அதே கல்லில் மோதும் அடுத்தவரை வரவேற்கின்றனர்.

ஆகவே ஒன்றுசேர்ந்து தியானிப்பதும், அந்த முழு மாற்றத்திலும் பங்கு கொள்வதும் மிகவும் வளமாக்கும் அனுபவம், கிடைத்தற்கரிய ஒன்று. பயிற்சியின் கடைசியில் ஒவ்வொருவரும் பொதுவாக இரண்டு அல்லது மூன்று தங்களுக்கேற்ற தியானங்களுடன் மேலும் தொடர்ந்து ஆழமாகச்

செல்வர். இப்படித் தொடர்ந்து ஈடுபட்டுத் தியானத்தின் ஆழத்தைத் தொடுபவர்களுக்கு என்ன நேருகிறது என்றால், ம்ம்ம், நல்லது, ஒன்றும் விளக்குவதற்கில்லை.

ஜனவரி 19, 1990ம் ஆண்டு ஓஷோ தனது உடலை நீத்தார். அதற்கு முன் அவர் அவரது மக்களிடம் கரைந்துவிடுவேன் என்று சொன்னார். நீங்கள் அதில் ஒருவர் என்றால், அது உண்மை என்பது ஏற்கனவே உங்களுக்குத் தெரிந்திருக்கும். மேலும் ஓஷோவின் இந்த வார்த்தைகள் உங்களுக்கு மிகவும் பொருள் பொதிந்ததாக இருக்கும். அப்படியில்லாமல் இதுவே உங்களது முதல் அடியானால், 'விஞ்ஞான பைரவ் தந்த்ரா'வைப் படித்து அதன் முறைகளை அனுபவித்துப் பார்ப்பதில், ஓஷோவின் இருப்பையும், எதனாலும் பாதிக்கமுடியாத அந்தச் சக்தியையும் அறிந்துணர்ந்து ஆசிர்வதிக்கப்படுவீர்கள். இந்த சக்தி அலையில் நீங்கள் உங்கள் வீடு நோக்கிய அற்புதப் பயணத்தை மேற் கொள்ளலாம்.

மா தேவ வதூதா.
மா யோக ரஞ்சனா.

## சூத்திரம்

### தேவி கேட்கிறாள் :

- ஓ சிவனே! நீ உண்மையில் என்ன?
- வியப்பு நிறைந்த இந்தப் பேரண்டம் யாது?
- விதை எதனால் ஆனது?
- பேரண்டச் சக்கரத்தின் மையமாய் இருப்பவர் யார்?
- உருவங்களில் நிறைந்தும் உருவங்களைக் கடந்தும் இருக்கின்ற இந்த வாழ்க்கை என்ன?
- காலம் இடம் பெயர் விளக்கம் இவற்றையெல்லாம் கடந்து இந்த வாழ்வில் புகுவது எங்ஙனம்?
- எனது சந்தேகங்களைப் போக்குவீர்களாக!

★★★

## சில ஆரம்பகட்ட விளக்கங்கள்.

முதலில் 'விஞ்ஞான பைரவ் தந்த்ரா'வின் உலகம் அறிவுபூர்வமானது அல்ல. அது தத்துவ ரீதியானதும் அல்ல. அதைப் பொருத்தவரை தத்துவார்த்தமான முடிவுகள் அர்த்த மற்றவை. அது முறையின் மீதும் டெக்னிக் மீதும் அக்கறை கொண்டுள்ளதே அன்றிக் கருத்துக்கள் மீது அக்கறை கொண்ட தல்ல. 'தந்த்ரா' என்ற வார்த்தைக்குப் பொருள் யுக்தி, டெக்னிக், முறை, வழி என்பதுதான். ஆகவே அது தத்துவார்த்தமானது அல்ல என்பதை நன்றாகக் குறித்துக் கொள்ளுங்கள். அது அறிவு பூர்வமான பிரச்சனைகள் மற்றும் தேடுதல்களைப் பற்றி அக்கறை கொண்டதல்ல, அது விஷயங்களின் 'ஏன்' என்பதில் அக்கறை கொண்டதல்ல, அது 'எப்படி' என்பதில் அக்கறை கொண்டது. அதாவது, எது உண்மை என்பதில் அல்ல. மாறாக எப்படி உண்மையை அடைவது என்பதில் அக்கறை கொண்டது.

'தந்த்ரா'வின் பொருள் டெக்னிக். ஆகவே இந்நூல் விஞ்ஞான பூர்வமானது. விஞ்ஞானம் ஏன் என்பதில் அக்கறையுடையதல்ல, விஞ்ஞானம் எப்படி என்பதில் அக்கறையுடையது. இதுவே விஞ்ஞானத்திற்கும் தத்துவத்திற்கும் ஆன அடிப்படை வித்தியாசம். தத்துவம் வினவுகிறது, ''ஏன் இந்த ஜீவிதம்?'' விஞ்ஞானம் வினவுகிறது, ''எப்படி இந்த ஜீவிதம்?'' எப்படி? என்று கேட்கிற தருணத்திலேயே உனக்கு முறை, டெக்னிக் முக்கியமானதாகி விடுகிறது. தத்துவ வடிவம் அர்த்தமற்றதாகிவிடுகிறது, அனுபவப்படுதலே முக்கியமானதாகி விடுகிறது.

தந்த்ரா ஒரு விஞ்ஞானம், தந்த்ரா ஒரு தத்துவமல்ல. தத்துவத்தைப் புரிந்துகொள்வது சுலபம். ஏனெனில் அதற்கு உன் அறிவு மட்டுமே போதும். உன்னால் ஒரு மொழியைப் புரிந்துகொள்ள முடியுமென்றால், ஒரு கருத்தைப் புரிந்துகொள்ள முடியுமென்றால், தத்துவத்தைப் புரிந்துகொண்டு விடலாம். நீ மாற வேண்டியதில்லை. நீ எந்த நிலைமாற்றமும் அடைய

வேண்டியதில்லை. நீ நீயாகவே தத்துவத்தைப் புரிந்து கொள்ளலாம், ஆனால் தந்த்ரா சாத்தியமில்லை.

உனக்கு ஒரு மாற்றம் தேவைப்படும்..... சொல்லப் போனால், ஒரு நிலைமாற்றம் தேவைப்படும். நீ வித்தியாசப்பட வில்லை என்றால் தந்த்ராவைப் புரிந்துகொள்ள முடியாது. ஏனெனில் தந்த்ரா ஒரு அறிவுபூர்வமான கணிப்பு அல்ல, அது ஒரு அனுபவம். நீ அந்த அனுபவத்தை வரவேற்கவும், உட்படவும் தயாராக இல்லையெனில், அது உனக்கு நிகழாது.

தத்துவம் மனம் சம்பந்தப்பட்டது. உனது தலை அதற்குப் போதும்; நீ முழுமையாகத் தேவையில்லை. தந்த்ராவிற்கு நீ முழுமையாகத் தேவை. அது ஒரு ஆழமான சவால். நீ அதில் முழுமையாக இறங்கியாக வேண்டும். அது துண்டு துண்டானது அல்ல. அதைப் பெற ஒரு வித்தியாசமான அணுகுமுறை, வித்தியாசமான நடைமுறை, வித்தியாசமான மனம் வேண்டும். தேவி, இதனால்தான், தத்துவரீதியான கேள்விகளைப் போலக் கேட்கிறாள். தந்த்ரா தேவியின் கேள்விகளோடு ஆரம்பமாகிறது. எல்லாக் கேள்விகளையும் தத்துவார்த்தமாக சமாளிக்க முடியும்.

உண்மையாகச் சொன்னால், எந்தக் கேள்வியையும் இரு வகையில் சமாளிக்கலாம்: தத்துவார்த்தமாக அல்லது முழுமை யுடன், அறிவுபூர்வமாக அல்லது இருத்தலிலிருந்து. உதாரண மாக, யாராவது ஒருவர் ''அன்பு என்றால் என்ன?'' என்று கேட்டால், நீ அறிவுபூர்வமாக அதைச் சமாளிக்க முடியும். நீ அதை விளக்கலாம், நீ நிலவிவரும் பல கருத்துக்களைக் கூறலாம், நீ ஒரு குறிப்பிட்ட கருத்துக்கணிப்புக்காக வாதாடலாம். நீயே ஒரு நடைமுறையை, ஒரு கொள்கையைக் கூட உருவாக்க முடியும். ஆனால் நீ அன்பைச் சிறிதும் உணராதவனாக இருக்கலாம்.

ஒரு கொள்கையை உருவாக்க, அனுபவம் தேவையில்லை. அதோடு மேலும் அனுபவம் குறைவாக இருக்குமளவு நன்மையே. ஏனெனில் அப்போது உனது கொள்கையைச் சிறிதும்

தயக்கமின்றி நீ வெளியிடலாம். ஒரு குருடனால் மட்டுமே, ஒளி என்பது என்ன என்பதை மிகச் சுலபமாக வரையறுக்க முடியும். உனக்குத் தெரியாதபோது நீ உறுதிபடச் சொல்கிறாய். அறியாமை எப்போதும் உறுதிபடக் கூறும், அறிந்தது தயங்கும். நீ அதிகமாக அறிந்திருந்தால், அந்த அளவு அதை வலியுறுத்தும் உறுதியான அடித்தளம் நழுவக் காண்பாய். மேலும் உண்மையிலேயே அறிந்தவர்கள், அவர்கள் அறியாதவர்களாகி விடுவர். அவர்கள் ஒரு குழந்தையைப் போல எளியவர்களாய், ஒரு மடையனைப் போல எளிமையானவர்களாய் ஆகிவிடுவர்.

உனக்குக் குறைவாகத் தெரிந்த அளவு நல்லது. தத்துவார்த்தமாயிருக்க, கருத்துக்களை முன் வைப்பதற்கு, கொள்கைகளுக்கு இப்படி இருப்பது சவுகரியமானது. ஒரு பிரச்சனையை அறிவுபூர்வமாக மட்டும் சமாளிப்பது மிகவும் சுலபம். ஆனால் ஒரு பிரச்சனையை இருந்து சமாளிப்பது – அதாவது பிரச்சனையைப் பற்றி வெறுமனே யோசிப்பதல்ல, அதை வாழ்ந்து பார்ப்பது, அதில் மூழ்கிப் பார்ப்பது, அது உன்னையே மாற்றினாலும் பரவாயில்லையென்று அதில் நுழைவது – கஷ்டமானது. அதாவது, அன்பை அறிய ஒருவன் அன்பில் ஈடுபட வேண்டும். ஆனால் இது ஆபத்தானது. ஏனெனில் நீ பழையபடியே இருக்கமாட்டாய். அந்த அனுபவம் உன்னை மாற்றிவிடும். நீ அன்பில் ஈடுபடும் கணமே, நீ ஒரு வேறு மனிதனாய் மாற ஆரம்பிக்கிறாய். எனவே நீ அதிலிருந்து வெளியே வரும் பொழுது, உன்னுடைய பழைய முகத்தை அடையாளம் காண முடியாது. இந்த முகம் உன்னுடையதா யிருக்காது. ஒரு துண்டிப்பு நிகழ்ந்திருக்கும். இப்போது ஒரு இடைவெளி ஏற்பட்டிருக்கும். பழைய ஆள் செத்துப்போய் புது ஆள் வந்திருக்கிறான். இதுதான் மறுபிறப்பு என்பது – இரண்டுமுறை பிறந்தவன்.

தந்த்ரா தத்துவார்த்தமானதல்ல. அது இருத்தலோடு கூடியது. ஆகவே தேவி தத்துவார்த்தமானது போன்ற கேள்வி களைக் கேட்டிருந்தாலும், சிவா அவைகளுக்கு அப்படிப்

பதிலளிக்கப் போவதில்லை. இதை ஆரம்பத்திலேயே புரிந்து கொள்வது நல்லது. இல்லாவிட்டால் நீங்கள் குழப்பமடையக் கூடும். ஏனெனில் சிவா ஒரு கேள்விக்குக் கூடப் பதிலளிக்கப் போவதில்லை. தேவி கேட்கும் எந்தக் கேள்விக்கும் சிவா கொஞ்சம்கூடப் பதிலளிக்கப் போவதில்லை. ஆனாலும் பதிலளிக்கிறார்! உண்மையில் அவர் மட்டுமே இந்தக் கேள்விகளுக்குப் பதிலளித்திருக்கிறார். வேறு எவரும் பதிலளித்ததில்லை – ஆனால் வேறொரு மட்டத்தில்.

தேவி கேட்கிறாள், ''ஓ சிவனே! நீ உண்மையில் என்ன?'' அவர் இதற்குப் பதில் சொல்லப் போவதில்லை. மாறாக ஒரு முறையை, ஒரு டெக்னிக்கைக் கொடுக்கிறார். இந்த முறையை, டெக்னிக்கைத் தேவி கடைபிடித்தால், அவள் தெரிந்து கொள்வாள். ஆகவே பதில் சுற்றி வருகிறது, அது நேரடியாக இல்லை. அவர் ''நான் யார்?'' என்று சொல்லப் போவதில்லை. அவர் ஒரு டெக்னிக்கைக் கொடுப்பார் – செய்து பார், உனக்குத் தெரியும்.

தந்த்ராவைப் பொருத்தவரை, செய்வதே அறிந்து கொள்வது, வேறு அறிதல் இல்லை. நீ எதையும் செய்து பார்க்காமல், நீ மாறாமல், நீ ஒரு புதிய 'பார்வை பெறாமல், பார்க்காமல், நீ அறிவுபூர்வமானதை விட்டுவிட்டு முற்றிலும் மாறுபட்ட பரிமாணத்திற்கு நகராமல், விடை கிடையாது. பதில்களைக் கொடுக்க முடியும். ஆனால் அவை அனைத்தும் பொய்களே. எல்லாத் தத்துவங்களும் பொய். நீ ஒரு கேள்வி கேட்டவுடன் தத்துவம் உனக்கு ஒரு பதிலைத் தருகிறது. அது உன்னைத் திருப்திப்படுத்தலாம் அல்லது திருப்திப்படுத்தாமல் போகலாம். அது உன்னைத் திருப்திப்படுத்தினால், நீ அந்தத் தத்துவத்திற்கு மாறியவனாகிறாய். ஆனால் நீ பழையபடியே இருக்கிறாய். அது உன்னைத் திருப்திப்படுத்தவில்லையென்றால், வேறு மாற்றிக்கொள்ள வேறு தத்துவங்களைத் தேடிக்கொண்டே இருக்கிறாய். ஆனால் நீ பழையபடியேதான் இருக்கிறாய், நீ சிறிதும் தொடப்படுவதில்லை, நீ மாறுவதில்லை.

ஆகவே நீ ஒரு இந்துவா, முகமதியனா, கிறித்துவனா, ஜைனனா என்பது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவதில்லை. இந்த இந்து, முகமதியன், கிறித்துவன் என்ற முகமூடிகளுக்குப் பின்னால் இருக்கும் மனிதன் ஒருவனே. வெறும் வார்த்தைகள் அல்லது, ஆடைகளில் தான் வேறுபாடு. சர்ச்சுக்கும், கோவிலுக்கும், மசூதிக்கும் போகும் ஆள் ஒருவனேதான். வெறும் முகங்களே மாறுகின்றன. மேலும் இந்த முகங்கள் உண்மையான முகங்களல்ல, அவை முகமூடிகளே. இந்த முகமூடிகளுக்குப் பின்னால் நீ ஒரே மனிதனையே பார்ப்பாய் - அதே கோபம், அதே ஆத்திரம், அதே வன்முறை, அதே பேராசை, அதே காமம் - எல்லாம் ஒன்றுதான். முகமதியனுடைய காமம் இந்துவின் காமத்திலிருந்து வேறுபட்டதா? கிறித்துவனின் வன்முறை இந்துவின் வன்முறையிலிருந்து வேறுபட்டதா? இல்லை, ஒன்றுதான்! உண்மை நிலை ஒன்றாகவே இருக்கிறது, வெறும் ஆடைகளே மாறுபட்டிருக் கின்றன.

தந்த்ரா உன்னுடைய ஆடைகளைப் பற்றி அக்கறை கொண்டதன்று, தந்த்ரா உன்னிடம் அக்கறை கொண்டது. நீ ஒரு கேள்வி கேட்டால், அது நீ இருக்குமிடத்தையே காட்டுகிறது. மேலும் அது நீ எங்கேயிருந்தாலும், பார்க்கும் நிலையில் இல்லை என்பதையே காட்டுகிறது. அதனாலேயே கேள்வி எழுந்துள்ளது. ஒரு குருடன், ''ஒளி என்பது என்ன?'' என்று கேள்வி கேட்கிறான், உடனே தத்துவம் ஒளி என்பது என்ன என்று பதில் சொல்ல ஆரம்பிக்கிறது. ஆனால் தந்த்ரா அந்த மனிதனுக்கு ஆபரேஷன் செய்ய ஆரம்பிக்கும். அந்த மனிதனை, அவனாலேயே பார்க்க முடியும்படி, மாற்றும். தந்த்ரா, ஒளி என்பது என்ன என்று சொல்லாது. தந்த்ரா, எப்படிப் பார்வை பெறுவது, எப்படி ஒளி பெறுவது, எப்படிக் கண் பெறுவது என்றே சொல்லும். பார்வை கிடைக்கும்போது, விடை தானாகவே கிடைக்கிறது. தந்த்ரா விடை கொடுப்பதில்லை, தந்த்ரா டெக்னிக்கைக் கொடுக்கிறது, அதன்மூலம் விடை கிடைக்கிறது.

இப்படிப்பட்ட பதில் அறிவுபூர்வமானதாக மட்டும் இருக்கப் போவதில்லை. நீ ஒளியைப் பற்றிக் குருடனிடம் ஏதாவது கூறினால், அது அறிவுபூர்வமானது மட்டும். ஆனால் குருடன் அவனே பார்வை பெற்றால், அது முழு இருத்தல். இதுவே, தந்த்ரா இருத்தலைக் கூடியது என்று நான் சொல்வதன் பொருள். ஆகவே சிவா, தேவியின் கேள்விகளுக்குப் பதிலளிக்கப் போவதில்லை; ஆனாலும் பதிலளிப்பார் - இது முதல் விஷயம்.

இரண்டாவது விஷயம் : இது ஒரு மாறுபட்ட மொழி. இதைப் பற்றிக் கொஞ்சமாவது இதில் நுழைவதற்கு முன்னால் நீ தெரிந்து கொள்ள வேண்டும். எல்லா தந்த்ராவின் பழமையான புத்தகங்களும் சிவன், தேவியின் உரையாடலாகவே உள்ளது. தேவி கேட்பாள், சிவன் பதிலளிப்பார். எல்லாப் புத்தகங்களும் இப்படியே ஆரம்பிக்கின்றன. ஏன்? ஏன் இந்த முறை? இது மிகவும் முக்கியமானது. இது குரு சிஷ்யனுக்கு இடையிலான உரையாடலன்று, இது இரு காதலர்க்கு இடையிலான உரையாடல். இதன் மூலம் தந்த்ரா மிகவும் அர்த்தமுள்ள முக்கியமான ஒரு விஷயத்தைச் சொல்கிறது; அதாவது ஆழமான உண்மைகளைக் கொடுப்பதற்கு, இருவரிடையேயும் அன்பு இருப்பது மிகவும் அவசியம் - சிஷ்யனுக்கும் குருவுக்கும். சிஷ்யனும் குருவும் மிகவும் ஆழமாக அன்பு கொண்டவர்களாக வேண்டும். அப்போதுதான், உயர்ந்ததை, கடந்ததை, வெளிப்படுத்த இயலும்.

ஆகவே இது அன்பின் மொழி; சிஷ்யன் அன்பு வழிப்பட்டவனாக இருக்க வேண்டும். ஆனால் இது மட்டும் போதாது. ஏனெனில் நண்பர்கள் தங்களிடையே அன்பு கொண்டவர்களாக இருக்க முடியும். தந்த்ரா சிஷ்யன் வாங்கிக் கொள்ளும் தன்மையுடன் இருக்க வேண்டும் என்கிறது. ஆகவே சிஷ்யன் ஒரு பெண்ணின் பெற்றுக் கொள்ளும் தன்மையில் இருக்க வேண்டும். அப்போது மட்டுமே ஏதாவது சாத்தியம். நீ சிஷ்யன் ஒருவன் பெண்ணாக இருக்க வேண்டும் என்று இதற்கு

அர்த்தமல்ல. ஆனால் சிஷ்யன் பெண்ணின் ஏற்றுக்கொள்ளும் தன்மையுடையவனாக இருக்க வேண்டும். தேவி கேட்கிறாள் என்று சொல்லும்போது, பெற்றுக்கொள்ளும் தன்மையுடன் கேட்பது என்றே அர்த்தம். இப்படிப் பெண்தன்மையை வற்புறுத்துவது ஏன்?

ஆணும் பெண்ணும் உடல்ரீதியாக மட்டும் மாறுபட்டவர்களல்ல, உளரீதியாகவும் அவர்கள் மாறுபட்டவர்கள். செக்ஸ் என்பது உடலளவில் மட்டும் மாறுபட்டது அல்ல; உள்ளத்து அளவிலும் மாறுபட்டது. ஒரு பெண் உள்ளம் என்பது ஏற்றுக் கொள்வது – முழுதாக ஏற்றுக்கொள்ளல், சரணடைதல், அன்பு. ஒரு சிஷ்யனுக்குப் பெண் உள்ளம் தேவை. அது இல்லாவிட்டால் அவனால் எதுவும் கற்றுக்கொள்ள முடியாது. நீ கேள்வி கேட்கலாம், ஆனால் நீ திறந்திருந்தாலொழிய உனக்கு விடையை அளிக்க முடியாது. நீ கேள்வியைக் கேட்டுவிட்டும் கூட, மூடியவனாகவே தொடர்ந்து இருக்கலாம். அப்போது பதில் உனக்குள் நுழைய முடியாது. உன்னுடைய கதவுகள் மூடிக் கிடக்கின்றன; நீ சவமாயிருக்கிறாய். நீ திறந்த உள்ளத்தோடு இல்லை.

ஒரு பெண்மை உள்வாங்கும் தன்மை என்பதன் அர்த்தம், உள் ஆழத்தில் கருப்பையைப்போல உள்வாங்கிக் கொள்வது; அப்போதுதான் நீ பெற முடியும். இதோடு மட்டுமல்ல – இன்னும் பல விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. ஒரு பெண் வெறுமனே எதையோ பெற்றுக்கொள்கிறாள் என்பதல்ல, அதை வாங்கிக் கொண்ட கணமே, அது அவளுடைய உடம்பின் பாகமாக மாறிவிடுகிறது. ஒரு குழந்தையை வாங்கிக் கொள்கிறாள். ஒரு பெண் கர்ப்பமாகிறாள்; கர்ப்பமான கணத்திலேயே, அந்தக் குழந்தை அந்தப் பெண்ணின் உடலில் ஒரு பாகமாகி விடுகிறது. அது தனியானதல்ல, அது வெளிப் பொருளல்ல. அது ஒன்றாகிவிடுகிறது. இப்போது குழந்தை தாயோடு சேர்ந்துள்ள ஒன்றாக வாழ்வதில்லை. தாயாகவே, தாயின் பாகமாகவே இருக்கிறது. மேலும் குழந்தை ஏற்றுக்கொள்ளப்பட்டதோடு

மட்டுமல்ல, பெண் உடல் படைப்புத்தன்மை கொள்கிறது, குழந்தை வளர ஆரம்பிக்கிறது.

ஒரு சிஷ்யனுக்குக் கருப்பை போன்ற உள்வாங்கும் தன்மை தேவை. பெறப்பட்டதையெல்லாம் வெறும் குப்பைகளைப் போலச் சேர்த்து வைத்துக்கொள்ளக் கூடாது. அவை உன்னிடம் வளர வேண்டும், அவை உன் இரத்தமாகவும், எலும்புகளாகவும் மாற வேண்டும். அவை உன் பாகமாகிவிட வேண்டும். அவை வளர வேண்டும். இந்த வளர்ச்சி உன்னை மாற்றும், உன்னை நிலைமாற்றம் செய்யும். ஆகவேதான் தந்த்ரா இந்த யுக்தியைப் பயன்படுத்துகிறது. எல்லா தந்த்ராவின் பழமையான புத்தகங் களும், தேவி ஒரு கேள்வி கேட்பதிலும் சிவா மறுமொழி சொல்வதிலுமே ஆரம்பிக்கிறது. தேவி சிவாவின் ராணி, சிவாவின் பெண்மைப் பகுதி.

மேலும் ஒரு விஷயம்..... தற்போதுள்ள முன்னேறிய உளவியல், முக்கியமாக ஆழ் உளவியல், ஒவ்வொரு மனிதனும் ஆணும் பெண்ணும் இரண்டும்தான் என்று சொல்கிறது. வெறும் ஆண் மட்டுமோ, வெறும் பெண் மட்டுமோ இல்லை, எல்லோரும் இரண்டு பாலாரே. இரண்டு பாலும் இருக்கிறது. இது மிகவும் சமீபத்திய மேற்கத்திய ஆராய்ச்சி. ஆனால் ஆயிரக்கணக்கான வருடங்களாகத் தந்த்ராவிற்கு இது மிக அடிப்படையான கருத்துக்கணிப்பாக இருந்து வருகிறது. நீ சிவனின் அர்த்தநாரீஸ்வரர் படங்களைக் கண்டிப்பாகப் பார்த் திருப்பாய் – பாதிப்பெண், பாதிஆண். மனித குல வரலாற்றி லேயே இது போன்ற ஒரு கொள்கை வேறெங்கும் இல்லை. சிவா பாதி ஆண் பாதி பெண்ணாகவே வர்ணிக்கப்படுகிறார்.

ஆகவே தேவி வெறும் ராணியல்ல, அவள் சிவனின் மறுபாதி. எனவே ஒரு சிஷ்யன் குருவின் மறுபாதியானா லொழிய, உயர்ந்த உண்மைகளை, புதிரான முறைகளைச் சொல்லிக் கொடுக்க முடியாது. நீ ஒன்றிவிடும்பொழுது அங்குச் சந்தேகத்திற்கு இடமில்லை. நீ குருவோடு ஒன்றாகிவிடும் பொழுது – முழுமையாக ஒன்றிவிடும்போது, ஆழமாகக்

9486477163



கலந்து விட்டபின் - அங்கு விவாதம் இல்லை, தர்க்கம் இல்லை, விளக்கம் இல்லை. ஒருவன் முழுமையாக ஏற்றுக் கொள்கிறான், ஒருவன் கருப்பையைப் போல ஆகிவிடுகிறான். அதன் பிறகு சொல்லிக் கொடுத்தது உன்னில் வளர ஆரம்பிக்கிறது, உன்னை மாற்றுகிறது.

ஆகவேதான் தந்த்ரா அன்பு மொழியால் எழுதப்பட்டுள்ளது. அன்பு மொழியைப் பற்றி மேலுமொன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். இரண்டு விதமான மொழிகள் உள்ளன: தர்க்க மொழி, அன்பு மொழி. இந்த இரண்டிற்கும் அடிப்படையாகவே வேறுபாடுகள் உண்டு.

தர்க்க மொழி தாக்குவது, வாக்குவாதம் செய்வது, வன்முறையாவது. நான் தர்க்க மொழியை உபயோகித்தால் நான் உன் உள்ளத்தைத் தாக்குபவன் ஆவேன். இது நான் உன்னை ஏற்றுக்கொள்ளச் செய்ய, உன்னை மாற்ற, உன்னை என் கைப்பாவையாக்க முயற்சி செய்வது. என்னுடைய வாதம் சரியானது, உன்னுடையது தவறு. தர்க்க மொழி ஆணவமயமானது: ''நான் சரி நீ தவறு, ஆகவே நான் சரியென்றும் நீ தவறு என்றும் நிரூபிக்க வேண்டும்.'' எனக்கு உன்னைப் பற்றிய அக்கறை ஒன்றுமில்லை. எனக்கு என் ஆணவத்தின் மேலேயே அக்கறை. எனது நான் எப்போதும் ''சரி.''

அன்புமொழி முற்றிலும் வேறானது. நான் என் ஆணவத்தின் மேல் அக்கறை கொண்டிருக்கவில்லை. நான் உன்னிடம் அக்கறை கொண்டிருக்கிறேன். நான் எதையோ நிரூபிப்பதில் அக்கறை கொள்ளவில்லை. என் ஆணவத்திற்கு வலுவூட்டிக் கொள்வதில்லை. நான் உன்னிடம் அக்கறை கொண்டிருக்கிறேன். நீ வளர உதவவும், நீ மாற்றமடைய உதவவும், நீ மறுபிறப்பெடுக்க உதவவும் கொண்டுள்ள கருணை இது.

இரண்டாவதாக, தர்க்கம் எப்போதும் அறிவுபூர்வமானது. கருத்துக் கணிப்புகளும், கொள்கைகளும் முக்கியத்துவம்

வாய்ந்தவையாய் இருக்கும். விவாதம் செய்வது முக்கியத்துவம் உள்ளதாய் இருக்கும். அன்பு மொழியில் சொல்வது அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததல்ல; பதிலாக, சொல்லும் வழியே முக்கியத்துவம் வாய்ந்தது. வார்த்தை, பாத்திரம், முக்கியமானதல்ல; செய்தி, பாத்திரத்திலுள்ள பொருள் முக்கியம். அன்பு மொழி இதயத்தோடு இதயம் பேசுவது. மனமும் மனமும் செய்யும் ஆலோசனையல்ல. இது ஒரு விவாதமல்ல, இது ஒரு பரிமாற்றம்.

ஆகவே இது அரிதானது; தேவி சிவனின் மடியில் அமர்ந்து கொண்டு கேட்கிறாள், சிவா பதிலளிக்கிறார். இது ஒரு அன்புப் பரிமாற்றம் - எந்தப் பூசலும் இல்லை. சிவா தனக்குத்தானே பேசிக் கொள்வது போன்றது. அன்பு, அன்பு மொழியின் மேல் ஏன் இத்தனை வலியுறுத்தல்? ஏனெனில் நீ உன் குருவின்பால் அன்போடிருக்கையில், முழுப் பார்வையும் மாறுகிறது. அது வித்தியாசப்படுகிறது. அப்போது நீ அவரின் வார்த்தைகளைக் கேட்பதில்லை, அப்போது நீ அவரையே குடிக்கிறாய். அப்போது வார்த்தைகள் முக்கியமல்ல. உண்மையில், வார்த்தைகளின் இடையே உள்ள மௌனம் மிகவும் முக்கியத்துவம் பெறுகிறது. அவர் சொல்வது அர்த்தமுள்ளதாக இருக்கலாம் அல்லது அர்த்தமற்றதாக இருக்கலாம்... ஆனால் அவரின் கண்கள், அவரின் அசைவுகள், அவரின் கருணை, அவரின் அன்பு, அதுவே முக்கியமாகிறது.

அதனால்தான் தந்த்ராவிற்குக் குறிப்பிட்ட யுக்திகள், நடைமுறைகள் உள்ளன. ஒவ்வொரு பழமையான புத்தகமும், தேவி கேட்பதுடனும் சிவா பதிலளிப்பதனுடனுமே துவங்குகிறது. எந்த வாக்குவாதமும் அங்கு எழப்போவதில்லை, எந்த வீணான வார்த்தைக்கும் இடமில்லை. அவை உள்ளதைச் சொல்லும் எளிமையான வாசகங்கள், யாரையும் சரிக்கட்டும் நோக்கமில்லாத தந்தி போன்ற செய்திகள். ஆனால் நாம் தொடர்புபடுத்திக் கொள்ள வேண்டியவை.

நீ சிவனை, உனது உள்ளம் மூடிய நிலையில் சந்தித்துக் கேள்வி கேட்பதாக வைத்துக் கொண்டால், அவர் உனக்கு இப்படிப் பதிலளிக்க மாட்டார். முதலில் உன் மூடிய தன்மை உடைக்கப்பட வேண்டும். பிறகு அவர் உன்னை ஆக்கிரமிக்க வேண்டும். பிறகு நீ ஆராய்ந்தறியாமலே திணித்துக்கொண்டுள்ள கருத்துக்கள், கொள்கைகளை அழிக்க வேண்டும். உனது இறந்தகாலத்தைச் சுத்தமாக ஒழித்த பின்பே உனக்கு ஏதாவது கொடுக்க முடியும். ஆனால் அவருடைய ராணி தேவியைப் பொருத்தவரை அப்படியல்ல; தேவியிடம் எந்த இறந்தகாலமும் இல்லை.

நினைவில் வை, நீ ஆழமான அன்பில் இருக்கும்போது உன் மனம் நின்றுவிடுகிறது. அப்போது இறந்தகாலம் இல்லை; நிகழ் கணமே எல்லாமுமாக ஆகிவிடுகிறது. அன்பில் திளைக்கும்பொழுது நிகழ்வே ஒரே நேரம், இப்போதே எல்லாமும் – இறந்தகாலமோ, எதிர்காலமோ இல்லை. ஆகவே தேவி உள்ளம் திறந்திருக்கிறாள். எந்த அரணும், தடையும் இல்லை – நீக்க வேண்டியதோ, அழிக்க வேண்டியதோ எதுவுமில்லை. நிலம் தயாராக உள்ளது, விதை போட வேண்டியது மட்டும்தான். நிலம் தயாராயிருப்பது மட்டுமல்ல, வரவேற்கிறது, காத்து நிற்கிறது, கருவூட்டச் சொல்லிக் கேட்கிறது.

ஆகவே நாம் ஆலோசிக்கப் போகிற இந்த வார்த்தைகள் எல்லாம் தந்தி வாக்கியங்கள் போலவே இருக்கும். அவை வெறும் சூத்திரங்கள். ஆனால் ஒவ்வொரு சூத்திரமும், சிவாவின் ஒவ்வொரு தந்திச் செய்திகளும், ஒரு வேதத்தை ஒத்தவை, ஒரு பைபிளுக்கு நிகரானவை, ஒரு குரானின் மதிப்புள்ளவை. ஒவ்வொரு வாக்கியமும் ஒரு பெரும் சாத்திரத்தின் அடிப்படையாக அமையக்கூடியவை. சாத்திரங்கள் தர்க்கரீதியானவை – நீ அதை முன்னிறுத்தி, காப்பாற்றி, வாதம் செய்ய வேண்டும். இங்கு எந்த விவாதமும் இல்லை, எளிய அன்பின் வெளிப்பாடுகள் மட்டுமே.

மூன்றாவதாக, 'விஞ்ஞான் பைரவ் தந்த்ரா' என்ற வார்த்தைகளின் அர்த்தம், உணர்வு தாண்டிப் போகும் யுக்தி என்பதே. 'விஞ்ஞான்' என்றால் உணர்வு, 'பைரவ்' என்றால் உணர்வு கடந்த நிலை, தந்த்ரா என்றால் யுக்தி, வழி, முறை, டெக்னிக். அதாவது உணர்வைக் கடந்து செல்லும் யுக்தி. இதுவே மிகப் பெரும் கோட்பாடு - எந்தவிதக் கோட்பாடும் இல்லாத போதும்.

நாம் உணர்வற்று இருக்கிறோம். ஆகவே எல்லா மதப் போதனைகளும், எப்படி உணர்வற்ற நிலையைத் தாண்டிச் செல்வது, எப்படி உணர்வடைவது என்பதிலேயே அக்கறை கொண்டுள்ளன. உதாரணமாக ஜெ. கிருஷ்ணமூர்த்தி, ஜென், இவையெல்லாம் எப்படி மேலும் அதிக உணர்வைக் கொண்டு வருவது என்பதிலேயே அக்கறை காட்டுகின்றன. ஏனெனில் நாம் உணர்வற்றிருக்கிறோம். எனவே எப்படி மேலும் கவனம், விழிப்புணர்வு கொள்வது? உணர்வற்ற நிலையிலிருந்து எப்படி உணர்வுள்ள நிலைக்குப் போவது?

ஆனால் தந்த்ரா இதை இரட்டைத்தன்மை என்கிறது - உணர்வற்ற நிலையும் உணர்வுள்ள நிலையும். நீ உணர்வற்ற நிலையிலிருந்து உணர்வுள்ள நிலைக்கு நகரும்பொழுது, நீ இரட்டைத்தன்மையின் ஒன்றிலிருந்து மற்றொன்றிற்கே நகர் கிறாய். இரண்டையும் தாண்டிச் செல்! நீ இரண்டையும் தாண்டிச் செல்லாதவரை, நீ முடிவானதை ஒருபோதும் அடைய முடியாது. ஆகவே உணர்வற்றிருத்தல், உணர்வோடிருத்தல், இரண்டையும் விட்டுவிட்டு, கடந்து போ, இருப்பது மட்டுமாயிரு. உணர் வோடும் இருக்க வேண்டாம், உணர்வில்லாமலும் இருக்க வேண்டாம் - இருப்பதாக மட்டும் இரு! இது யோகாவைக் கடந்து செல்வது, ஜென்னைக் கடந்து செல்வது, எல்லாப் போதனைகளையும் கடந்து செல்வது.

'விஞ்ஞான்' என்றால் உணர்வுநிலை. 'பைரவ்' என்பது கடந்து சென்ற ஒருவனைக் குறிக்கும் தந்த்ராவின் ஒரு சிறப்புச்

சொல். அதனால்தான் சிவா, பைரவர் என்றும், தேவி, பைரவி என்றும் அறியப்படுகின்றனர் - இரட்டைத் தன்மையைத் தாண்டிச் சென்றுவிட்டவர்கள்.

நமது அனுபவத்தில் அன்பு மட்டுமே ஒரு துளி இந்தச் சுவையைத் தர முடியும். அதனால்தான் தந்த்ராவின் தெரிதலுக்கு அன்பு மிக அடிப்படையான யுக்தியாக உள்ளது. நமது அனுபவத்தில், இரட்டைத் தன்மையைத் தாண்டி அன்பு மட்டுமே போவதையே நாம் கூறலாம். இரண்டு பேர் ஒருவரையொருவர் நேசிக்கும்போது, அதில் ஆழமாக மூழ்கிச் செல்லும்போது, இருவராக இருப்பது மேலும் மேலும் குறைந்து, மேலும் மேலும் ஒருவராகின்றனர். ஒரு நிலையில், பெயரளவிலேயே இருவராக இருக்கும் உச்சக் கட்டம் வருகிறது. உள்ளளவில் அவர்களிருவரும் ஒருவரே; இரட்டைத் தன்மையைக் கடந்து சென்றுவிட்டனர்.

இந்த விதத்தில் மட்டுமே ஜீஸஸ் கூறிய ''கடவுள் அன்பே'' என்ற கூற்று அர்த்தமுள்ளதாகிறது; மற்றபடி இல்லை. நமது அனுபவத்தில் அன்பு கடவுளுக்கு மிகவும் நெருங்கியதாயுள்ளது. எனவே கிறித்தவர்கள் விளக்கமளிக்கும் 'கடவுள் உன்னை நேசிக்கிறார்' - ஒரு தந்தை உன்னை நேசிப்பதைப் போல என்பது உண்மையல்ல. மடத்தனம்! ''கடவுள் அன்பே'' என்பது ஒரு தந்த்ரா கூற்று. அதன் பொருள், நமது அனுபவத்தில் நாமறிந்த அன்பு ஒன்று மட்டுமே கடவுளுக்கு மிக அருகில் கொண்டு செல்வதாக இருக்கிறது. ஏன்? ஏனெனில் அன்பில் ஒருமையை உணர்கிறோம். உடல்கள் இரண்டாகவே இருந்த போதிலும், உடல்களைத் தாண்டிய ஏதோவொன்று ஒன்றுகலந்து ஒன்றாகிறது.

இதனாலேயே உடலுறவில் இவ்வளவு அதிக நாட்டம் உள்ளது. உண்மையான நாட்டம் ஒருமைக்குத் தான். ஆனால் அந்த ஒருமை உடலுறவிலானதல்ல. உடலுறவில் இரு உடல்களும் ஒன்றாவது போன்ற பொய்யுணர்வே ஏற்படுகிறது. ஆனால் அவை ஒன்றாவதில்லை. அவை ஒன்றொடொன்று

இணைகின்றன, அவ்வளவே. ஆனாலும் ஒரு கண நேரம் இரு உடல்களும் மற்றொன்றில் தங்களை மறக்கின்றன. அப்போது ஒருவித உடலளவிலான ஒருமைத் தன்மை உணரப்படுகிறது. இந்த விருப்பத்தில் எந்தத் தவறும் இல்லை. ஆனால் இதோடு நின்றுவிடுவது ஆபத்தானது. இந்த நாட்டம், ஒருமையை உணர உள்ள ஆழமான தேடலையே காட்டுகிறது.

அன்பில், உயர் மட்டத்தில், உள்ளே உள்ளது நெருங்கி, மற்றொன்றோடு கலக்கிறது. அப்போது ஒரு ஒருமைத்தன்மை உணர்வு கிடைக்கிறது. இரட்டைத் தன்மை காணாமல் போகிறது. இந்த இரட்டைத்தன்மை இல்லாத அன்பில் மட்டுமே, எந்த நிலையில் பைரவர் இருக்கிறார் என்ற ஒரு துளிச் சுவையை நாம் பெறுகிறோம். நாம் பைரவரின் நிலையை, பின்னோக்கித் திரும்புதல் இல்லாத முழுமையான அன்பு நிலை, அன்பின் உச்சியிலிருந்து எப்போதும் கீழிறங்காத நிலை என்று சொல்லலாம். அது உச்சியிலேயே இருந்து கொண்டிருப்பது.

நாம் கைலாசத்தை சிவா வசிக்குமிடமாகச் செய்துள் ளோம். இது ஒரு குறியீடு மட்டுமே: அது மிக உயர்ந்த சிகரம், பனிமூடிய சிகரம். நாம் அதை சிவா வசிக்குமிடமாக்கி யுள்ளோம். நாம் அங்குப் போகலாம். ஆனால் திரும்பி வந்தாக வேண்டும். அது நமது வசிப்பிடமாக ஆக முடியாது. நாம் புனிதப் பயணமாகப் போகலாம். அது ஒரு தீர்த்தயாத்திரை – ஒரு புனிதப் பயணம், நாம் ஒரு கணம் அந்த உயர்ந்த சிகரத்தைத் தொட முடியும், பிறகு நாம் திரும்பியாக வேண்டும்.

அன்பில் இந்தப் புனிதப் பயணம் ஏற்படுகிறது. ஆனால் எல்லோருக்கும் அல்ல. ஏனெனில் கிட்டத்தட்ட ஒருவரும் செக்ஸை, உடலுறவைத் தாண்டிச் செல்வது இல்லை. ஆகவே நாம் பள்ளத்தாக்கில், இருண்ட பள்ளத்தாக்கிலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறோம். சில நேரங்களில் சிலர் அன்பின் சிகரத்திற்குச் செல்கின்றனர். ஆனால் பிறகு திரும்ப விழுந்து விடுகின்றனர். ஏனெனில் சிகரம் மிகவும் கிறங்க வைக்கிறது.

அது மிகவும் உயரம், நீ மிகவும் தாழ்வு, ஆகவே அங்கு வாழ்வது மிகவும் கடினம். நேசித்தவர்களுக்குத் தெரியும், தொடர்ந்து அன்பிலேயே இருப்பது எவ்வளவு கடினம் என்று. ஒருவர் திரும்பத் திரும்பக் கீழே வரவேண்டியுள்ளது. அது சிவாவின் வசிப்பிடம். அவர் அங்கு வசிக்கிறார், அது அவரது இல்லம்.

ஒரு பைரவர் அன்பிலேயே வாழ்கிறார்; அதுவே அவரது இடம். நான் அதுவே அவர் இருப்பிடம் என்று சொல்லும் போது, அவருக்கு அன்பைப் பற்றிய உணர்வுகூட இருக்காது என்று சொல்கிறேன் – ஏனெனில் நீ கைலாசத்திலேயே வசிப்பவனாய் இருக்கும்பட்சத்தில், இது கைலாசம், இது சிகரம் என்ற உணர்வே இருக்காது. சிகரமே சமவெளி போலாகிவிடும். சிவாவிற்கு அன்பைப் பற்றிய விழிப்புணர்வே கிடையாது. நமக்கு அன்பைப் பற்றிய உணர்வு இருக்கிறது. ஏனெனில் நாம் அன்பற்ற நிலையிலேயே வாழ்கிறோம். ஆகவே இந்த வித்தியாசத்தால், நாம் அன்பை உணர்கிறோம். சிவா அன்பே. பைரவரின் நிலை என்பதன் பொருள், அன்பாக மாறிவிட்ட ஒருவன். அன்பு செய்பவனல்ல – அன்பாகவே மாறிவிட்டவன், சிகரத்திலேயே வாசம் செய்பவன். சிகரமே அவன் இருப்பிட மாகிவிட்டது.

இந்த உயர்ந்த சிகரத்தை அடைவது எங்ஙனம் சாத்தியம்? இரட்டைத்தன்மையைக் கடந்து, உணர்வற்ற நிலை கடந்து, உணர்வு நிலை கடந்து, உடலைக் கடந்து, ஆன்மாவைக் கடந்து, உலகைக் கடந்து, மோட்சம், விடுதலை என்று அழைக்கப் படுவதைக் கடந்து – இந்த சிகரத்தை எப்படி எட்டுவது? அதற்கான டெக்னிக், யுக்தியே தந்த்ரா. ஆனால் தந்த்ரா வெறும் யுக்தி மட்டுமே. ஆகவே அதைப் புரிந்துகொள்வது சிரமமாகவே இருக்கும். முதலில் தேவி கேட்கும் கேள்விகளைப் புரிந்து கொள்வோம்.

ஓ சிவனே! நீ உண்மையில் என்ன? இந்தக் கேள்வி எதற்காக? நீயும் இந்தக் கேள்வியைக் கேட்கலாம். ஆனால்

அர்த்தம் இதுவாக இருக்காது. ஆகவே, ஏன் தேவி, 'நீ உண்மையில் என்ன?' என்று கேட்கிறாள் என்பதைப் புரிந்துகொள்ள முயற்சி செய். தேவி ஆழமான அன்பில் இருக்கிறாள். நீ ஆழமான அன்பில் இருக்கும்போது, முதல் முறையாக உன் இயல்பைச் சந்திக்கிறாய். அதன் பிறகு சிவா ஒரு உருவமல்ல, சிவா ஒரு உடம்பல்ல. நீ அன்பில் மூழ்கியிருக்கும்போது, உன் அன்பிற்கினியவரின் உடல் மறைந்து போகிறது, காணாமல் போகிறது. உருவம் மறைந்து போய், உருவமற்றது வெளிப்படுகிறது. நீ ஒரு அடிமுடி இல்லாததைச் சந்திக்கிறாய். ஆகவேதான் நாம் அன்பைப் பற்றி மிகவும் பயப்படுகிறோம். நாம் ஒரு உடலை நேர்கொள்ள முடியும், நாம் ஒரு முகத்தை நேர்கொள்ள முடியும், நாம் ஒரு உருவத்தை நேர்கொள்ள முடியும், ஆனால் அடிமுடியில்லாததை நேர் கொள்ள நாம் பயப்படுகிறோம்.

நீ ஒருவரை நேசித்தால், நீ உண்மையாகவே நேசித்தால், அவருடைய உடம்பு கண்டிப்பாக மறைந்து போகும். ஒரு சில கண நேர உச்சிகளில், சிகரத்தில், உருவம் கரைந்துபோய்விடும். அப்போது நீ உன் அன்பிற்கினியவர் மூலமாக நீ உருவமற்ற தன்மைக்குள் நுழைவாய். எனவேதான் நாம் பயப்படுகிறோம் – இது அடிமுடியில்லாத பள்ளத்தில் விழுவது. ஆகவே இந்தக் கேள்வி வெறும் குறுகுறுப்பில் எழும் கேள்வியல்ல.

### ❖ *ஓ சிவனே! நீ உண்மையில் என்ன?*

தேவி உறுதியாக உருவத்தின்பாலான அன்பில் விழுந் திருக்க வேண்டும். விஷயங்கள் அந்தவழியில்தான் ஆரம்பிக்கும். அவள் அந்த ஆளை ஒரு ஆணாக நேசித்திருக்க வேண்டும். ஆனால் இப்போது அன்பு வளர்ந்த நிலையில், அன்பு மலர்ந்த நிலையில், இந்த ஆண் மறைந்துவிட்டான். அவன் உருவமற்றவ னாகி விட்டான். இப்போது அவனை எங்கேயும் கண்டுபிடிக்க முடியாது. 'ஓ சிவனே! நீ உண்மையில் என்ன?' இந்தக் கேள்வி அன்பின் வெகு தீவிரமான தருணத்தில் கேட்கப்பட்ட கேள்வி.

கேள்விகள் எழும்போது, எப்படிப்பட்ட மனநிலையிலிருந்து கேட்கப்பட்டவை என்பதைப் பொருத்து அவை வேறுபடுகின்றன.

ஆகவே சூழ்நிலையை, அந்தக் கேள்வி பிறந்த சமயத்தை, உன் உள்ளத்தில் உருவாக்கிக்கொள். தேவி இழந்த தவிப்பில் இருக்க வேண்டும் - சிவன் அரூபமாகிவிட்டார். அன்பு சிகரத்தை எட்டும்போது அன்பிற்கினியவர் மறைந்து போகிறார். ஏன் இப்படி நடக்கிறது? ஏனெனில் உண்மையாக, எல்லோருமே உருவமற்றவர்கள்தான். நீ ஒரு உடம்பல்ல. நீ உடம்பாக நகர்கிறாய், நீ உடம்பாக வாழ்கிறாய். ஆனால் நீ ஒரு உடம்பல்ல. ஒருவனை வெளியிலிருந்து பார்க்கும் பொழுது, அவன் ஒரு உடம்பு. அன்பு உள்ளே ஊடுருவுகிறது, பிறகு அந்த ஆளை நாம் வெளியேயிருந்து பார்ப்பதில்லை. அன்பு ஒருவனை, அவன் தன்னைத் தனக்குள்ளிருந்து பார்ப்பதைப் போலப் பார்க்கிறது. அப்போது உருவம் மறைந்துபோகிறது.

ஒரு ஜென் துறவி, 'ரின்ஜாய்' ஞானமடைந்தார். உடனே அவர் கேட்ட முதல் கேள்வி, ''என் உடம்பு எங்கே? என் உடம்பு எங்கே போயிற்று?'' தொடர்ந்து அவர் தேட ஆரம்பித்தார். அவர் அவருடைய சிஷ்யர்களைக் கூப்பிட்டுச் சொன்னார், ''போய் என்னுடைய உடம்பு எங்கே என்று கண்டுபிடியுங்கள். நான் என் உடம்பை இழந்துவிட்டேன்.''

அவர் அரூபத்தினுள் நுழைந்துவிட்டார். நீயும் ஒரு அரூப இருப்புதான், ஆனால் நீ உன்னை நேரடியாகத் தெரிந்து கொள்ளாமல், அடுத்தவர்களின் கண்கள் மூலமாகவே அறிவாய். பிரதிபலிக்கும் கண்ணாடி மூலமே உன்னை உனக்குத் தெரியும், உன் கண்களை மூடி யோசி, தியானம் செய்: பிரதிபலிக்கும் கண்ணாடி இல்லையென்றால், நீ உன் முகத்தை எப்படி அறிந்திருக்க முடியும்? பிரதிபலிக்கும் கண்ணாடி இல்லையென்றால், முகமே இல்லாமல் போயிருக்கக் கூடும். உனக்கு ஒரு முகம் இல்லை; பிரதிபலிக்கும் கண்ணாடிகளே உனக்கு முகத்தைக் கொடுக்கிறது. பிரதிபலிக்கும் கண்ணாடிகள் இல்லாத

உலகத்தைக் கற்பனை செய்துபார் நீ தனியாக இருப்பதாக வைத்துக்கொள் – பிரதிபலிப்புகளே இல்லை, மற்றவர்களின் கண்கள் காட்டும் பிரதிபலிப்புகளும் இல்லை. நீ தனியாக ஒரு தனித்த தீவில் இருக்கிறாய்; எதுவும் உன்னைப் பிரதிபலிக்காது. அப்போது உனக்கு ஒரு முகம் இருக்குமா? உனக்குச் சுத்தமாக முகமே இருக்காது. நமக்கு நம்மைப்பற்றி அடுத்தவர் மூலமாகவே தெரியும். ஆனால் அடுத்தவர்களுக்கு வெளி உருவம் மட்டுமே தெரியும். இதனால்தான் நாம் இந்த வெளித்தோற்றத்துடன் நம்மைச் சேர்த்துப் பார்க்கிறோம்.

மற்றொரு ஜென் ஞானி, 'ஹயாகுஜோ' எப்போதும் தனது சிஷ்யர்களிடம் கூறுவார், ''தியானத்தில் நீ உன் தலையை இழந்துவிட்டால், உடனே என்னிடம் வா. உன் தலை இல்லாதபொழுது, உடனே என்னிடம் வா. நீ தலையைக் காணவில்லையே என்று உணர ஆரம்பிக்கும்போது, பயம் எதுவும் கொள்ளாதே, உடனே என்னிடம் வா. இதுவே சரியான தருணம். அப்போது உனக்கு ஏதாவது சொல்லித்தர முடியும்.'' தலையிருக்கும்போது, எதுவும் கற்றுத்தர வாய்ப்பில்லை. தலை எப்போதும் குறுக்கே வந்துகொண்டேயிருக்கும்.

தேவி சிவாவிடம் கேட்கிறாள், ''ஓ சிவனே! நீ உண்மையில் என்ன?'' – நீ யார்? உருவம் மறைந்துவிட்டது; எனவே இந்தக் கேள்வி. அன்பில் நீ அடுத்தவரிடம் அவராகவே புகுகிறாய். நீ நீயாகப் புகுவதில்லை. நீ ஒன்றிவிடுகிறாய், முதல்முறையாக நீ அடிமுடியில்லாத ஆழத்தை அறிகிறாய் – ஒரு அரூப இருப்பை.

இதனால்தான் தொடரும் பல நூற்றாண்டுகளாக, நூற்றாண்டுகள் நூற்றாண்டுகளாக, நாம் சிவனுக்கு எந்தச் சிலைவடிவும், எந்தச் சித்திர வடிவும் கொடுக்கவில்லை. நாம் 'சிவலிங்க'த்தை மட்டுமே செய்து வருகிறோம் – இது ஒரு குறியிடு மட்டுமே. சிவலிங்கம் ஒரு அரூப வடிவமே. நீ ஒருவரை நேசிக்கும்பொழுது, நீ ஒருவருக்குள் புகும்பொழுது,

அவர் ஒரு வெறும் பிரகாசமான இருப்பாக மாறிவிடுகிறார். சிவலிங்கம் என்பது ஒரு பிரகாச இருப்பு மட்டுமே, ஒரு ஒளி வடிவம் மட்டுமே. அதனால்தான் தேவி கேட்கிறாள்,

நீ உண்மையில் என்ன?

## ❖ வியப்பு நிறைந்த இந்தப் பேரண்டம் யாது?

நாம் பேரண்டத்தை அறிவோம், ஆனால் அதை வியப்பு நிறைந்ததாக நாம் ஒருபோதும் அறியோம். குழந்தைகளுக்குத் தெரியும், நேசிப்பவர்கள் அறிவார்கள். சில சமயங்களில் கவிஞர்களும், பித்துப் பிடித்தவர்களும் அறிவார்கள். நாம் இந்த உலகத்தை வியப்பு நிறைந்ததாக அறிய மாட்டோம். எல்லாம் திரும்பத் திரும்ப நடப்பதே – வியப்படைய ஒன்றுமில்லை, கவிதை ஒன்றுமில்லை, வெறும் வரண்ட உரைநடை. அது உனக்குள் ஒரு பாடலை உருவாக்குவதில்லை. அது உனக்குள் ஒரு நடனத்தை உருவாக்குவதில்லை. அது உள்ளே ஒரு கவிதையைப் பிறப்பிப்பதில்லை. இந்த முழுப் பேரண்டமும் இயந்திரத்தனமாகத் தெரிகிறது. குழந்தைகள் இதை வியப்பு நிறைந்த விழிகளுடன் பார்க்கின்றனர். விழிகளில் வியப்பு நிறைந்திருக்கும் பொழுது, பேரண்டத்திலும் வியப்பு நிறைகிறது.

நீ நேசிக்கும்பொழுது, நீ மறுபடியும் குழந்தையைப் போலாகிறாய். ஜீஸஸ் சொல்கிறார், ''குழந்தை போன்று இருப்பவர்கள் மட்டுமே எனது கடவுளின் பேரரசில் நுழைய முடியும்.'' ஏன்? ஏனெனில் இந்தப் பேரண்டம் உனக்கு வியப்பூட்டுவதாக இல்லையெனில், நீ மதத்தன்மை உள்ளவனாக முடியாது. இந்தப் பேரண்டத்தை விளக்க முடியும் – ஆனால் அப்போது உன் அணுகுமுறை விஞ்ஞானபூர்வமாகிறது. இந்தப் பேரண்டம் அறிந்தது, அறியாதது என்பதாக இருக்கிறது என்பதே விஞ்ஞானம். அறியாதது எந்த ஒரு சமயத்திலாவது அறியப்படக் கூடும். ஆனால் அது அறியமுடியாதது அல்ல. ஆனால் உன்

விழிகளில் வியப்பு நிறைந்திருக்கும் பொழுது, இப்பேரண்டம் அறியமுடியாததாக, ஒரு அவிழ்க்கமுடியாத புதிராக மாறுகிறது.

தேவி கேட்கிறாள், ''வியப்பு நிறைந்த இந்தப் பேரண்டம் யாது?'' திடீரென்று சொந்தக் கேள்வியிலிருந்து ஒரு பொதுக் கேள்விக்குத் தாவுகிறாள். அவள் முதலில் கேட்டது, ''நீ உண்மையில் என்ன?'' அடுத்து திடீரென்று, ''வியப்பு நிறைந்த இந்தப் பேரண்டம் யாது?''

உருவம் மறையும்பொழுது, உன் அன்பிற்கினியவர் பேரண்டமாக, அரூபமாக, எல்லையற்றவராக ஆகிவிடுகிறார். திடீரென்று, தான் சிவாவைப் பற்றிக் கேள்வி கேட்கவில்லை என்பதைத் தேவி உணர்கிறாள்; அவள் முழுப் பேரண்டத்தையும் பற்றிக் கேள்வி கேட்கிறாள். சிவாவே முழு அண்டமாகவும் மாறிவிட்டார். இப்போது எல்லா நட்சத்திரங்களும் அவருள்ளே நகர்ந்து கொண்டிருக்கின்றன. எல்லாத் திடப்பொருள்களும், முழு வெளியும் அவரால் சூழப்பட்டுள்ளது. இப்போது தன்னகத்தே அனைத்தையும் கொண்ட மிகப்பெரிய உண்மை அவர் – ''எல்லாவற்றையும் சூழ்ந்து கொண்டிருப்பவர்.'' 'கார்ல் ஜாஸ்பர்ஸ்' கடவுளை 'எல்லாவற்றையும் சூழ்ந்திருப்பவர்' என்று வரையறுத்தார்.

நீ அன்பில், ஆழத்திற்கு, நெருக்கமான அன்பு உலகத்திற்கு நுழையும்போது அன்பிற்கினியவர் என்ற ஒருவர் மறைகிறார், உருவம் மறைகிறது, அவர் பேரண்டத்திற்குச் செல்லும் ஒரு வாயிலாகிறார். உனது ஆர்வம் விஞ்ஞானத்தைச் சார்ந்திருக்கலாம் – அப்படியானால் நீ தர்க்கத்தின் மூலமே அணுக வேண்டும். அப்போது நீ அரூபத்தைப் பற்றி யோசிக்கக் கூடாது. அப்போது உருவற்றதைப் பற்றி ஜாக்கிரதை; உருவத்தோடு திருப்திப்பட்டுக்கொள். விஞ்ஞானம் எப்போதும் உருவத்திடம் அக்கறை கொண்டதே. உருவமற்ற, அரூபமான ஒன்று விஞ்ஞான மனத்திடம் முன்வைக்கப்பட்டாலும், அவன் அதற்கு ஒரு உருவம் கொடுத்துவிடுவான் – அது உருவெடுத்தாலொழிய

அதற்கு எந்த அர்த்தமுமில்லை. முதலில் ஒரு உருவம் கொடு; ஒரு குறிப்பிட்ட உருவம் கொடு; அதன் பிறகே அதைப் பற்றிய ஆராய்ச்சி துவங்குகிறது.

நேசத்தில், இன்னும் அங்கு ஒரு உருவம் இருந்தால் அங்கு அதற்கு முடிவு வந்துவிடும். உருவத்தை விடு! உருவங்கள் அரூபங்களாக, தெளிவற்று, எல்லையற்று மாறிவிடும்போது, எல்லாமும் இன்னொன்றில் கலந்துவிடும்போது, இந்த முழுப் பேரண்டமும் ஒருமையாக மாறுகிறது. அப்போதுதான் அது வியப்பு நிறைந்த பேரண்டமாகிறது.

❖ **''விதை எதனால் ஆனது?''**

தேவி தொடர்கிறாள். பேரண்டத்திலிருந்து அவர் ''விதை எதனால் ஆனது?'' என்று கேட்க ஆரம்பிக்கிறாள். இந்த உருவங்கடந்த, வியப்பு நிறைந்த பேரண்டம், இது எங்கிருந்து வந்தது? இது எங்கு ஆரம்பித்தது? அல்லது இதற்குத் துவக்கமேயில்லையா? விதை எது?

❖ **''பேரண்டச் சக்கரத்தின் மையமாயிருப்பவர் யார்?''**

என்று தேவி கேட்கிறாள். இந்தச் சக்கரம் தொடர்ந்து சுழன்று கொண்டே இருக்கிறது – இந்த மாபெரும் மாற்றங்கள், இந்த மாறாத ஓட்டம். ஆனால் யார் இந்தச் சக்கரத்தின் மையம்? எங்கே இதன் அச்சு, மையம், அந்த அசையாத மையம்?

அவள் எந்தப் பதிலுக்காகவும் நிறுத்தவில்லை. அவள் கேட்டுக் கொண்டே போகிறாள், – யாரைப் பார்த்தும் அவள் கேட்கவில்லை என்பது போல, தனக்குத்தானே பேசிக் கொள்வது போல.

❖ **காலம், இடம், பெயர், விளக்கம், இவற்றையெல்லாம் கடந்து இந்த வாழ்வில் புகுவது எங்ஙனம்?**

❖ எனது சந்தேகங்களைப் போக்குவீர்களாக!''

தேவியின் வற்புறுத்தல் கேள்விகளின் மீது அல்ல, மாறாக சந்தேகங்களின் மீது: ''எனது சந்தேகங்களைப் போக்குவீர் களாக!'' இது மிகவும் முக்கியமானது. நீ ஒரு அறிவுபூர்வமான கேள்வியைக் கேட்பதாக வைத்துக்கொண்டால், உனது பிரச்சனையைத் தீர்க்கும் ஒரு குறிப்பிட்ட பதிலை நீ கேட்கிறாய். ஆனால் தேவி சொல்கிறாள், ''எனது சந்தேகங்களைப் போக்குவீர்களாக!'' அவள் உண்மையில் பதில்களைப் பற்றிக் கேட்கவில்லை. அவள் அவளுடைய மனம் மாற்றம் பெற வேண்டுமென்று கேட்கிறாள். ஏனெனில் எந்தப் பதில் கிடைத் தாலும், சந்தேகப்படும் மனம் தொடர்ந்து சந்தேகப்பட்டுக் கொண்டேதான் இருக்கும். குறித்துக் கொள் இதை : ஒரு சந்தேகப்படும் மனம் எப்போதும் ஒரு சந்தேகப்படும் மனமாகவே இருக்கும். பதில்கள் முக்கியமற்றவை. நீ சந்தேகப் படும் மனமுடையவனாக இருந்து, நான் ஒரு பதில் சொன்னால், நீ அதையும் சந்தேகப்படுவாய். நான் மற்றொரு பதில் சொன்னால், நீ அதையும் தான் சந்தேகப்படுவாய். நீ சந்தேக மனம் கொண்டிருக்கிறாய். ஒரு சந்தேக மனம் என்றால் அதன் அர்த்தம், நீ எதற்கும் ஒரு கேள்விக் குறியைப் போடுவாய் என்பதே. ஆகவே பதில்கள் பயனற்றவை. நீ கேட்கிறாய், ''இந்த உலகத்தைப் படைத்தது யார்?'' நான் சொல்கிறேன், ''அ'' இந்த உலகத்தைப் படைத்தார். உடனே நீ கண்டிப்பாகக் கேட்பாய், '' 'அ' வைப் படைத்தது யார்?'' ஆகவே உண்மையான பிரச்சனை, கேள்விகளுக்கு எப்படிப் பதில் சொல்வது என்பதல்ல. உண்மையான பிரச்சனை, எப்படிச் சந்தேக மனத்தை மாற்றுவது, எப்படிச் சந்தேகப்படாத மனதை உருவாக்குவது – அல்லது நம்பகத்தன்மை உள்ளதை உருவாக்குவது. ஆகவேதான் தேவி சொல்கிறாள், ''எனது சந்தேகங்களைப் போக்குவீர்களாக!''

மேலும் இரண்டு, மூன்று விஷயங்கள்.... நீ ஒரு கேள்வியைக் கேட்கும்போது, நீ அதைப் பல காரணங்களுக்

காகக் கேட்கலாம். ஒன்று இதுவாக இருக்கலாம். அதாவது நீ உறுதி செய்துகொள்ள வேண்டும். உனக்குப் பதில் ஏற்கனவே தெரியும், பதில் உன்னிடம் இருக்கிறது, உனது பதில் சரிதான் என்பதை நீ உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். அப்படி யானால் உனது கேள்வி தவறானது. போலியானது; அது ஒரு கேள்வியல்ல. நீ உண்மையில் மாற்றமடையத் தயாரில்லாத பொழுது, வெறும் உன் குறுகுறுப்புக்காக, நீ கேள்வி கேட்கலாம்.

மனம் கேள்வி கேட்டுக்கொண்டே இருக்கிறது. மனத்தில் கேள்விகள், மரத்தில் இலை விடுவதுபோல, வந்து கொண்டே இருக்கும். இது மனதின் இயல்பு, அதன் இயற்கை. கேள்வி கேட்பது, கேள்விகளை எழுப்பிக்கொண்டே இருப்பது அது. என்ன கேள்வி நீ கேட்கிறாய் என்பது முக்கியமல்ல, மனதிடம் எதைக் கொடுத்தாலும் அது ஒரு கேள்வியை உருவாக்கிவிடும். அது கேள்வியை அரைத்துக் கொடுக்கும், உருவாக்கிக் கொடுக்கும் இயந்திரம். ஆகவே அதனிடம் எதைக் கொடுத் தாலும் அதை அது துண்டுகளாக வெட்டிப் பல கேள்விகளை உருவாக்கிவிடும். ஒரு கேள்விக்குப் பதில் கிடைத்தால், மனம் அந்தப் பதிலிலிருந்து பல கேள்விகளை உருவாக்கிவிடும். இதுவே தத்துவத்தின் முழு வரலாறாய் இருந்து வருகிறது.

'பெர்னாண்ட் ரசல்' சொல்கிறார், தான் ஒரு குழந்தையாக இருந்தபோது நினைத்துக் கொண்டாராம்: என்றாவது ஒரு நாள், எல்லாத் தத்துவங்களையும் புரிந்துகொள்ளும் அளவு நான் பக்குவப்படும்போது, எல்லாக் கேள்விகளுக்கும் எனக்கு விடை கிடைக்கும். பின்னால், அவர் தனது எண்பதாவது வயதில் சொல்கிறார், ''இப்போதும் என்னுடைய கேள்விகள் எல்லாம் அங்கேயே நிற்கின்றன, நான் குழந்தையாக இருந்தபோது இருந்த அதே இடத்தில். இப்போது மேலும் பல கேள்விகள் இந்தத் தத்துவக் கோட்பாடுகளால் வந்துவிட்டது.'' ஆகவே அவர் சொன்னார், ''நான் எனது இளம் பிராயத்தில் தத்துவம் என்பது முடிவான விடைகளுக்கான தேடல் என்று எப்போதும்

சொல்லுவேன். ஆனால் இப்போது அப்படிச் சொல்ல முடியாது. தத்துவம் என்பது முடிவில்லாமல் கேள்விகளைத் தொடுக்கும் தேடல்.

ஆகவே ஒரு கேள்வி ஒரு பதிலையும் பல கேள்விகளையும் உருவாக்குகிறது. சந்தேக மனமே பிரச்சனை. தேவி சொல்கிறாள். ''எனது கேள்விகளில் அக்கறை கொள்ள வேண்டாம். நான் பல விஷயங்களைக் கேட்டிருக்கிறேன்: நீ உண்மையில் என்ன? வியப்புநிறைந்த இந்தப் பேரண்டம் யாது? விதை எதனால் ஆனது? பேரண்டச் சக்கரத்தின் மையமாய் இருப்பவர் யார்? உருவங்களில் நிறைந்தும் உருவங்களைக் கடந்தும் இருக்கின்ற இந்த வாழ்க்கை என்ன? காலம், இடம், பெயர், விளக்கம் இவற்றையெல்லாம் கடந்து இந்த வாழ்வில் புகுவது எங்ஙனம்? ஆனால் என் கேள்விகளில் அக்கறை கொள்ள வேண்டாம். எனது சந்தேகங்களைப் போக்குவீர்களாக. நான் இந்தக் கேள்விகளை எல்லாம் கேட்டதற்குக் காரணம், அவை என் மனத்தில் இருந்தது. நான் என் மனதை உங்களுக்குத் திறந்து காட்டவே இந்தக் கேள்விகளைக் கேட்டேன். ஆகவே அவற்றை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம். உண்மையில், பதில்கள் எனது தேவையை நிறைவு செய்ய மாட்டா. எனது தேவை... ''எனது சந்தேகங்களைப் போக்குவீர்களாக!''

ஆனால் சந்தேகங்களைக் களைவது எப்படி? எந்தப் பதிலாவது உதவுமா? உன் சந்தேகங்களைப் போக்கும்படியான பதில் ஏதாவது உள்ளதா? மனம் என்பது சந்தேகம். மனம் சந்தேகப்படுகிறது என்பதல்ல, மனம்தான் சந்தேகம்! மனம் கரைந்து போனாலொழிய, சந்தேகங்களைக் களைவது சாத்திய மில்லை.

சிவா பதில் சொல்வார். அவரது பதில்கள் டெக்னிக்குகள், யுக்திகள் – மிகப் பழமையான, மிகவும் புராதனமான யுக்திகள். ஆனால் நீ அவைகளைப் புதியவை என்றும் அழைக்கலாம். ஏனெனில் அவற்றோடு சேர்ப்பதற்கு, புகுத்துவதற்கு எதுவு

மில்லை. அவை முழுமையானவை – நூற்றிப் பன்னிரண்டு யுக்திகள். அவை எல்லா சாத்தியங்களிலும், மனதைத் தூய்மைப் படுத்தும். மனதைக் கடந்து செல்லும் எல்லா வழிகளையும் கொண்டுள்ளவை. ஒரே ஒரு வழிமுறை கூட சிவாவின் நூற்றிப் பன்னிரண்டு முறைகளோடு சேர்க்க முடியாது. இந்த 'விஞ்ஞான் பைரவ் தந்த்ரா' என்ற புத்தகம் ஐயாயிரம் ஆண்டு பழமையானது. எதுவும் சேர்க்க முடியாது, எதையும் புகுத்த எந்தவிதச் சாத்தியமுமில்லை. இது விரிவானது, முழுமையானது. இது மிகவும் புராதனமானது, இருந்தபோதும் மிகவும் புதியது, மிகவும் புதுமையானது. பழமையான மலைகளைப் போலப் பழமைவாய்ந்தது – இந்த முறைகள் என்றென்றுமானவையாகத் தோன்றுகின்றன – மேலும் இவை சூரியனில் மறையும் பனித்துளி போன்றவை. ஏனெனில் இவை அவ்வளவு புத்துணர்வுடையவை.

இந்த நூற்றிப் பன்னிரண்டு தியான முறைகளிலும், மனதை மாற்றும் முழு விஞ்ஞானமும் அடங்கியுள்ளது. நாம் அவற்றில் ஒவ்வொன்றாக நுழைவோம். நாம் முதலில் அறிவுபூர்வமாக அதைப் புரிந்துகொள்ள முயற்சிப்போம். ஆனால் அறிவை ஒரு கருவியாக மட்டும் பயன்படுத்துங்கள், அதை எஜமானன் ஆக்காதீர்கள். ஒன்றைப் புரிந்துகொள்ள உதவும் கருவியாகப் பயன்படுத்துங்கள், ஆனால் அதைக் கொண்டு தடைகளை உருவாக்கிக் கொண்டே போகாதீர்கள். நாம் இந்த யுக்திகளைப் பற்றிப் பேசும்போது, உங்கள் இறந்தகால அறிவை ஒதுக்கி வைத்துவிடுங்கள். உங்கள் அறிதல்களை, நீங்கள் சேகரித்த எந்தத் தகவலாய் இருந்தாலும் அவற்றை, எல்லாவற்றையும் ஒதுக்கி வைத்துவிடுங்கள் – அவை நடந்து வந்த ரோட்டில் சேர்ந்த குப்பைகளே.

இந்த முறைகளை ஒரு புத்துணர்வான மனத்துடன் நேர்கொள்ளுங்கள் – கவனத்துடன், அதே சமயம், வாதம் செய்யாமல். வாதம் செய்யும் மனம், கவனத்துடன் இருக்கும் மனம் என்ற தவறான அபிப்பிராயத்தை உருவாக்கிக்

கொள்ளாதீர்கள். அது அப்படியல்ல, ஏனெனில் வாதம் செய்ய முனைகின்ற கணத்திலேயே நீ விழிப்புணர்வை இழந்து விடுகிறாய், நீ கவனத்தை இழந்து விடுகிறாய். அதன்பின் அங்கு நீ இல்லை.

இந்த முறைகள் எந்த மதத்திற்கும் சொந்தமானவை அல்ல. நினைவில் கொள். இவை இந்து மதத்தைச் சேர்ந்ததல்ல, 'ஐன்ஸ்டின்' என்ற யூதர் கண்டுபிடித்ததால் எப்படிப் 'பொதுச் சார்பியல் கோட்பாடு' யூத மதத்தைச் சேர்ந்ததாகாதோ அப்படியே இதுவும். ரேடியோவும், டெலிவிஷனும் கிறித்துவ மதத்தைச் சேர்ந்ததல்ல. ''ஏன் மின்சாரத்தைப் பயன்படுத்துகிறாய்?'' என்று ஒருவரும் சொல்வதில்லை. மின்சாரம் கிறித்துவ மதத்தைச் சேர்ந்தது. ஏனெனில் ஒரு கிறித்துவருடைய மனமே இதைக் கண்டுபிடித்தது.'' விஞ்ஞானம் ஒரு இனத்திற்கோ, மதத்திற்கோ சொந்தமானதல்ல – தந்த்ரா ஒரு விஞ்ஞானமே. ஆகவே நினைவில் கொள், இது சிறிதும் இந்து மதத்தைச் சேர்ந்ததல்ல. இந்த யுக்திகள் இந்துக்களால் கண்டுபிடிக்கப்பட்டன. ஆனால் இந்த யுக்திகள் இந்து மதத்தைச் சேர்ந்தவையல்ல. ஆகவேதான் இந்த யுக்திகள் எந்த மதச் சடங்குகளையும் குறிப்பிட்டுச் சொல்வதில்லை. எந்தக் கோயிலும் தேவையில்லை. நீ உள்ளளவிலேயே ஒரு கோயிலை நிறைவு செய்கிறாய். நீ தான் பரிசோதனைக் கூடம்; முழுப் பரிசோதனையும் உனக்குள் நடக்கப் போகிறது. எந்த நம்பிக்கையும், தேவையில்லை.

இது மதமல்ல, இது விஞ்ஞானம். எந்த நம்பிக்கையும் தேவையில்லை. குரானிலோ, வேதத்திலோ, புத்தரிடமோ, மகாவீரரிடமோ நம்பிக்கை வைக்கத் தேவையில்லை. இல்லை, எந்த நம்பிக்கையும் தேவையில்லை. பரிசோதனை செய்து பார்க்கத் தைரியமிருந்தால் போதும்; இதுவே இதன் அழகு. ஒரு முகமதியன் இதைக் கடைபிடித்து, அதன்மூலம் குரானின் ஆழமான அர்த்தங்களை அறிய முடியும். ஒரு இந்து கடைபிடிப் பதன் மூலம், முதன் முறையாக வேதம் சொல்வது என்ன என்று தெரிந்து கொள்ளலாம். ஒரு ஜைனர், ஒரு புத்தமதக்காரர்

கடைபிடிக்க முடியும்; அவர்கள் அவர்களது மதத்தை விட வேண்டியதில்லை. தந்த்ரா அவர்களை நிறைவு செய்யும், அவர்கள் இருக்குமிடத்திலேயே. அவர்கள் தேர்ந்தெடுத்த பாதை எதுவாக இருந்தபோதிலும், தந்த்ரா உதவி புரியும்.

ஆகவே நினைவில் கொள்: தந்த்ரா சுத்தமான விஞ்ஞானம். நீ ஒரு இந்துவாக, ஒரு முகமதியனாக, ஒரு பார்சியாக அல்லது வேறு எதுவாக இருந்தாலும் – தந்த்ரா உனது மதத்தைத் தொடவே தொடாது. தந்த்ரா சொல்கிறது, மதம் என்பது சமுதாய சமாச்சாரம். ஆகவே நீ எதைச் சேர்ந்தவனாகவும் இருந்து கொள்; அதில் எந்த முக்கியத்துவமுமில்லை. ஆனாலும் நீ உன்னை மாற்றிக் கொள்ளலாம். அப்படிப்பட்ட மாற்றத்திற்கு ஒரு விஞ்ஞான பூர்வமான வழிமுறையே தேவை. நீ உடல்நல மில்லாதபோது, நீ நோயில் விழுந்துவிட்டபோது அல்லது உனக்குக் காசநோய் பிடித்துவிட்டபோது அல்லது வேறு ஏதோ நோய் வந்துவிடும் போது, நீ ஒரு இந்துவா, முகமதியனா என்பது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவதில்லை. காச நோய், இந்துத்வத்திடமும், இஸ்லாமிடத்திலும், உன் எந்த நம்பிக்கைகளிடத்திலும் – அரசியல், சமூக அல்லது மத ரீதியானவைகள், எந்த வித்தியாசமும் பாராட்டுவதில்லை. காசநோய் விஞ்ஞானபூர்வமாகத் தீர்க்கப்பட வேண்டும். இந்து காசநோய், முகமதிய காசநோய் என்று எதுவுமில்லை.

நீ அறியாமையிலிருக்கிறாய், நீ முரண்பட்டுக் கிடக்கிறாய், நீ தூக்கத்திலிருக்கிறாய். இதுதான் நோய், ஆன்மிக நோய். இந்த நோயைத் தந்த்ரா குணப்படுத்த வேண்டும். நீ ஒரு பொருட்டல்ல, உன் நம்பிக்கைகள் ஒரு பொருட்டல்ல. நீ ஓரிடத்தில் பிறந்திருப்பதும், மற்றொருவர் மற்றொரு இடத்தில் பிறந்திருப்பதும் வெறும் தற்செயலான ஒன்றே. வெறும் தற்செயலானது இது. உன் மதம் வெறும் தற்செயலானதே. ஆகவே அதைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்காதே. உன்னை மாற்றிக்கொள்ள சில விஞ்ஞானபூர்வமான வழிமுறைகளைப் பயன்படுத்து.

தந்த்ரா மிகவும் பிரபலமானதல்ல. அப்படியே அதைப் பற்றித் தெரிந்திருந்தாலும், அது மிகவும் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது. அதற்குக் காரணங்கள் இருக்கின்றன. எந்த அளவு விஞ்ஞானம் உயர்ந்ததோ, பரிசுத்தமானதோ, அந்த அளவு பொதுமக்கள் அதைத் தெரிந்துகொள்ளும் சாத்தியமும் குறைவு. நமக்குப் 'பொதுச் சார்பியல் கோட்பாடு' என்ற பெயர் மட்டும் தான் தெரியும். இதைக் கண்டுபிடித்த 'ஐன்ஸ்டீன்' உயிரோடிருந்த காலத்தில் இதைப் புரிந்து கொண்டவர்கள் உலகத்திலேயே பன்னிரண்டு பேர்தான் இருந்தார்கள் என்று சொல்வதுண்டு. முழு உலகத்திலும் வெறும் பன்னிரண்டு மூளைகளே அதைப் புரிந்துகொள்ள முடிந்தது. ஐன்ஸ்டீனுக்கே இதை யாராவது ஒருவருக்குப் புரியவைப்பது, புரியும்படி செய்வது மிகவும் கடினமாகவே இருந்தது. ஏனெனில் அது மிகவும் உயரத்தில் நகர்கிறது, அது உன் தலைக்கு மேலே செல்கிறது. ஆனால் அதைப் புரிந்துகொள்ள முடியும். சில நுணுக்கங்களும், கணித அறிவும் தேவைப்படுகிறது. அதற்கு ஒரு பயிற்சி தேவைப் படுகிறது. அப்போது அதைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் தந்த்ரா அதைவிடக் கடினம். ஏனெனில் எந்தப் பயிற்சியும் உதவ முடியாது. மாற்றமடைவது மட்டுமே உதவ முடியும்.

இதனால்தான் தந்த்ரா பொதுமக்களால் ஒருபோதும் புரிந்து கொள்ள முடியாதது ஆகிவிட்டது. நீ ஒன்றைப் புரிந்துகொள்ள முடியாதபோது எப்போதும் இது நடக்கும். அதாவது அதை நீ தவறாகப் புரிந்துகொள்வாய். ஏனெனில் அப்போதுதான் நீ ''சரி, நமக்குப் புரிந்துவிட்டது'' என்று நினைத்துக்கொள்ள முடியும். நீ எதுவும் தெரியாத வெளியில் சும்மாயிருக்க முடியாது.

இரண்டாவதாக, ஒன்றை நீ புரிந்துகொள்ள முடியாத போது, நீ அதைப் பழிக்க ஆரம்பிக்கிறாய். ஏனெனில் அது உன்னை அவமானப்படுத்துவதாக உள்ளது. உன்னால் புரிந்து கொள்ள முடியாததா! நீ? நீ புரிந்துகொள்ள முடியாதா? அது சாத்தியமில்லை. அதிலேயே ஏதாவது கோளாறு கண்டிப்பாக இருக்க வேண்டும். ஒருவன் பழிக்க ஆரம்பிக்கிறான், ஒருவன்

மடத்தனமாகப் பேச ஆரம்பிக்கிறான், அதன்பின் ''இப்போது சரியாகப் போய்விட்டது'' என்று நினைத்துக் கொள்கிறான்.

ஆகவே தந்த்ரா புரிந்துகொள்ளப்படவில்லை; தந்த்ரா தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டது. அது அவ்வளவு ஆழமும் அவ்வளவு உயரமும் கொண்டதாகையால் இது இயற்கைதான். இரண்டாவதாக, தந்த்ரா இரட்டைத் தன்மையைக் கடந்து போவதால், அதன் அடிப்படை நிலைப்பாடே சமூக ஒழுக்கத்தைத் தாண்டி நிற்கிறது. தயவு செய்து இந்த வார்த்தைகளைப் புரிந்து கொள்ளுங்கள்: ஒழுக்கம், ஒழுக்கமின்மை, ஒழுக்கம் கடந்தது. நாம் ஒழுக்கத்தைப் புரிந்து கொள்கிறோம், நாம் ஒழுக்கமின்மையைப் புரிந்து கொள்கிறோம். ஆனால் ஒன்று ஒழுக்கம் கடந்தது – ஒழுக்கம், ஒழுக்கமின்மை இரண்டையும் கடந்தது – என்றால் அதைப் புரிந்துகொள்வது சிரமமாயிருக்கிறது.

தந்த்ரா ஒழுக்கம் கடந்தது. இதை இப்படிப் பாருங்கள்..... ஒரு மருந்து ஒழுக்கம் கடந்தது. அது ஒழுக்கமானதோ, ஒழுக்கமற்றதோ அல்ல. அதை ஒரு திருடனிடம் கொடுத்தாலும் அது உதவி செய்யும், அதை ஒரு துறவியிடம் கொடுத்தாலும் அது உதவி செய்யும். அது திருடனையும், துறவியையும் எந்தவிதத்திலும் வித்தியாசப்படுத்திப் பார்க்காது. மருந்து, ''இவன் ஒரு திருடன் ஆகவே நான் இவனைக் கொல்லப் போகிறேன், இவர் ஒரு துறவி ஆகவே இவருக்கு உதவப் போகிறேன்'' என்று சொல்ல முடியாது. ஒரு மருந்தென்பது விஞ்ஞானபூர்வமான பொருள். நீ ஒரு திருடனாக இருக்கிறாயா அல்லது துறவியாக இருக்கிறாயா என்பது அதற்கு ஒரு பொருட்டல்ல.

தந்த்ரா ஒழுக்கம் கடந்தது. தந்த்ரா சொல்கிறது எந்த ஒழுக்கமும் தேவையில்லை – எந்த ஒரு குறிப்பிட்ட ஒழுக்கமும் தேவையில்லை. அதற்கு மாறாக, நீ ஒழுக்கமற்றவனாக இருக்கிறாய். ஏனெனில் நீ மிகவும் அமைதியற்ற மனத்துடன் இருக்கிறாய். ஆகவே தந்த்ரா எந்த நிபந்தனையும் விதிப்பதில்லை. அதாவது நீ முதலில் ஒழுக்கமுள்ளவனாக மாற

வேண்டும். அதன் பிறகுதான் தந்த்ராவைப் பயிற்சி செய்ய வேண்டும் என்பதில்லை. இது முட்டாள்தனமானது என்கிறது தந்த்ரா.

ஒருவருக்கு உடல்நலக்குறைவு, காய்ச்சல், டாக்டர் வந்து பார்த்துவிட்டுச் சொல்கிறார், ''முதலில் காய்ச்சலைக் குறையுங்கள்; முதலில் உடம்பு நன்றாகட்டும். அப்போதுதான் நான் மருந்து கொடுக்க முடியும்.'' இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது.

ஒரு திருடன் துறவியிடம் வந்து, ''நான் ஒரு திருடன், எப்படித் தியானிப்பது என்று சொல்லுங்கள்'' என்கிறான். அந்தத் துறவி சொல்கிறார், ''முதலில் உன் தொழிலை விடு. நீ திருடனாய் இருந்துகொண்டே எப்படித் தியானம் செய்ய முடியும்?''

ஒரு குடிகாரன் வந்து கேட்கிறான், ''நான் ஒரு குடிகாரன். நான் தியானம் செய்வது எப்படி?'' அந்தத் துறவி, ''அதற்கு முதல் நிபந்தனை நீ குடிப்பதை விட வேண்டும், அப்போதுதான் தியானம் செய்ய முடியும்'' என்கிறார். இந்த நிபந்தனைகள் தற்கொலைக்குக் கொண்டு செல்வதாயுள்ளன. ஒரு மனிதன், குடிகாரனாய் அல்லது திருடனாய் அல்லது ஒழுக்கக்கேடானவனாய் இருக்கக் காரணம் அவன் அமைதியற்ற, நலக்குறைவு கொண்ட மனத்துடன் இருப்பதுதான். இவை நோயுற்ற மனத்தின் விளைவுகள், தொடர் நிகழ்வுகளே. அப்படியிருக்கையில் அவனிடம், ''முதலில் நலமடை, பிறகு நீ தியானம் செய்யலாம்'' என்று சொல்லப்படுகிறது. ஆனால் பிறகெதற்குத் தியானம் தேவை? தியானம் மருந்து போன்றதே. அது ஒரு மருந்தே.

தந்த்ரா ஒழுக்கம் கடந்தது. அது உன்னிடம் நீ யார் என்று கேட்பதில்லை. நீ ஒரு மனிதனாயிருப்பது போதும். நீ எங்கிருந்தாலும், நீ எப்படியிருந்தாலும், நீ ஏற்றுக்கொள்ளப் படுகிறாய்.

உனக்குப் பொருந்துகின்ற ஒரு யுக்தியைத் தேர்ந்தெடு, உன் முழுச் சக்தியையும் அதில் கொடு, அதன்பின் நீ பழைய ஆளாகக் கண்டிப்பாக இருக்கமாட்டாய். உண்மையான, ஆதாரபூர்வமான யுக்திகள் எப்போதும் இப்படித்தான் இருக்கும். நான் நிபந்தனை களை விதிக்கிறேன் என்றால், என்னிடம் போலியான யுக்தியே இருக்கிறது என்பதையே அது காட்டுகிறது – நான் சொல்கிறேன், ''முதலில் இதைச் செய், முதலில் அதைச் செய்யாதே, அப்புறம் பிறகு.....'' இப்படிப்பட்ட நிபந்தனைகள் நிறைவேற்ற சாத்திய மற்றவை. ஏனெனில் ஒரு திருடன் அவன் திருடும் பொருட்களை மாற்றிக் கொள்ள முடியும். ஆனால் திருட்டுத்தனம் இல்லாத வனாக மாற முடியாது.

ஒரு பேராசைக்காரன் பேராசைப்படும் பொருட்களை மாற்றிக் கொள்ள முடியும். ஆனால் பேராசையில்லாதவனாக மாற முடியாது. நீ அவனிடம் திணிக்கலாம், அல்லது அவனே அவன்மீது பேராசையற்ற தன்மையைத் திணித்துக்கொள்ளலாம். ஆனால் அதுவும் கூட ஒரு விதப் பேராசையின் அடிப்படையி லேயே இருக்கும். சொர்க்கம் கிடைக்குமென்று வாக்குறுதி வழங்கப்பட்டால் அவன் பேராசையற்றவனாயிருக்க முயற்சி செய்யக்கூடும். ஆனால் இது எல்லாவற்றையும் மீறிய பேராசை. சொர்க்கம், மோட்சம், விடுதலை, சத்–சித்–ஆனந்த், பிரபஞ்ச இருப்பு, முழு உணர்வு நிலை, பரம சுகம் – இவைகள் அவன் பேராசை கொண்ட பொருட்களாயிருக்கும்.

தந்த்ரா சொல்கிறது நீ மனிதனை மாற்ற முடியாது. அவன் அதனால் மாறக்கூடிய ஆதாரபூர்வமான யுக்திகளை அவனுக்குக் கொடுக்காவிட்டால் மாற்ற முடியாது. வெறும் போதனைகளால் எதுவும் மாறியதில்லை. இதை நீ உலகம் முழுவதும் பார்க்க லாம். தந்த்ரா சொல்லுவது எல்லாம் இந்த உலகம் முழுவதும் எல்லோராலும் எழுதப்பட்டுள்ளது. கணக்கிலடங்கா போதனை கள், கணக்கில்லாத ஒழுக்கக் கோட்பாடுகள், ஏராளமான பூசாரிகள், போதகர்கள், ஓதுவார்கள் – உலகம் முழுவதும் இவர்களால் நிறைந்து வழிகிறது. ஆனாலும் எல்லாம் அவ்வளவு அசிங்கமாகவும் அவ்வளவு ஒழுக்கக்கேடாகவும் இருக்கிறது.

ஏன் இப்படி நடந்துகொண்டிருக்கிறது? உன் ஆஸ்பத்திரிகளை இந்தப் போதகர்களிடம் கொடுத்தால், அதுவும் இப்படியாகி விடும். அவர்கள் அங்குப் போய் போதனை செய்ய ஆரம்பித்துவிடுவார்கள். மேலும் அவர்கள் அங்கிருக்கும் ஒவ்வொரு நோயாளியையும், ''நீ பாவி! நீதான் இந்த நோயை உண்டாக்கிக் கொண்டாய்; நீயே இப்போது இந்த நோயை மாற்று'' என்று நினைக்கச் செய்துவிடுவார்கள். ஓதுவார்களிடம் ஆஸ்பத்திரிகள் கொடுக்கப்பட்டால், அந்த ஆஸ்பத்திரிகளின் நிலை எப்படி இருக்கும்? இந்த முழு உலகமும் இருக்கும் நிலைக்கு வந்து விடும்.

போதகர்கள் போதித்துக் கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் மக்களிடம் தொடர்ந்து, ''கோபம் கொள்ளாதே'' என்று எந்தவித யுக்தியும், டெக்னிக்கும் கொடுக்காமலே சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். நாம் இதை நீண்ட நெடுங்காலமாய் கேட்டுக் கொண்டிருப்பதால், நாம் இந்தக் கேள்வியைக்கூட ஒருபோதும் எழுப்புவதில்லை: ''நீ என்ன சொல்கிறாய்? நான் கோபத்தோடு இருக்கிறேன், நீ என்னிடம் ''கோபம் கொள்ளாதே'' என்று சும்மா சொன்னால் போதுமா? எப்படி அது சாத்தியம்? நான் கோபமாய் இருக்கும்போது அதன் அர்த்தம் ''நான்'' கோபம் இப்போது என்பதே. ஆனால் நீ சும்மா சொல்கிறாய், ''கோபப்படாதே: அப்படியானால் நான் என்னையே அமுக்கிக்கொள்ளத்தான் வேண்டும்.''

ஆனால் அப்படி அமுக்கிக்கொள்வது அதிக கோபத்தையே உண்டுபண்ணும். அது குற்றவுணர்வைத் தோற்றுவிக்கும் – ஏனெனில் நான் என்னை மாற்றிக்கொள்ள முயன்று, அப்படி என்னை மாற்றிக்கொள்ள முடியாவிட்டால், அது தாழ்வு மனப்பான்மையையே உண்டாக்கும். அது எனக்கு நான் ஒரு பாவி என்ற உணர்வையே, அதாவது நான் கையாலாகாதவன், என்னால் எனது கோபத்தை வெற்றிகொள்ள முடியவில்லை என்ற உணர்வையே கொடுக்கும். யாரும் வெற்றிபெற முடியாது! உனக்குச் சில ஆயுதங்கள் தேவை, உனக்குச் சில யுக்திகள்

தேவை, ஏனெனில் உனது கோபம் என்பது அமைதியற்ற மனத்தின் ஒரு அடையாளமே. அமைதியற்ற மனதை மாற்றி விட்டால் அதன் அடையாளமும் மாறிவிடும். கோபம், உள்ளே என்ன இருக்கிறது என்பதைக் காட்டுகிறது அவ்வளவே. உள்ளே உள்ளதை மாற்று. அப்போது வெளியே உள்ளது மாறிவிடும்.

ஆகவே தந்த்ரா உனது ஒழுக்கம் என்ற பெயரில் அழைக்கப்படுவதைப் பொருட்படுத்துவதில்லை. உண்மையில், ஒழுக்கத்தை வற்புறுத்துவது கீழானது, சிறுமைப்படுத்துவது, அது மனிதத்தன்மையில்லாதது. என்னிடம் வரும் ஒருவரிடம் நான், ''கோபத்தை முதலில் விடுங்கள், செக்ஸை முதலில் விடுங்கள், இதை விடுங்கள், அதை விடுங்கள்'' என்று சொன்னால், நான் மனிதத்தன்மையில்லாதவன். நான் சொல்வது சாத்தியமில்லாதது. இப்படிச் சாத்தியமில்லாமல் போவது அந்த மனிதனை அவனுக்குள்ளேயே கூனிக் குறுகச் செய்யும். அவன் தாழ்ந்தவனாக உணர ஆரம்பிப்பான். அவன் அவனுக்குள்ளேயே, அவன் சொந்தக் கண்களின் முன்பே சிறுமை அடைவான். சாத்தியமில்லாததை அவன் முயற்சி செய்து பார்த்தால், அவன் தோல்வியே அடைவான். அப்படி அவன் தோற்கும்போது தான் ஒரு பாவி என்பதையே உறுதிப்படுத்திக் கொள்வான்.

போதகர்கள் இந்த உலகம் முழுவதையும் ''நீங்கள் பாவிகள்'' என்று உறுதியாக நினைக்கச் செய்து விட்டார்கள். இது அவர்களுக்கு நல்லது. ஏனெனில் நீ இப்படி நம்பவில்லை யென்றால் அவர்கள் தொழிலைத் தொடர்ந்து நடத்த முடியாது. நீங்கள் கண்டிப்பாகப் பாவிகளாயிருக்க வேண்டும். அப்போது மட்டுமே சர்ச்சுகள், கோவில்கள், மசூதிகள் எல்லாம் தொடர்ந்து கொழிக்க முடியும். உங்கள் ஜீவிதம் பாவமாய் இருப்பதே அவர்களது வெற்றி. உன் குற்றவுணர்வே மிக உயர்ந்த சர்ச்சுகள் எல்லாவற்றின் அஸ்திவாரம். நீ அதிக குற்றவுணர்வு கொண் டிருந்தால், அதிக சர்ச்சுகள் மேலும் மேலும் அதிக உயரங்களை எட்டும். அவைகள் உனது குற்றவுணர்வின் மேல், உன் பாவத்தின் மேல், உன் தாழ்வு மனப்பான்மையின் மேலேயே

கட்டப்பட்டுள்ளன. இப்படியாகத்தான் அவை தாழ்ந்த மனித குலத்தை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன.

தந்த்ரா உன் ஒழுக்கம் என்ற பெயரில் அழைக்கப் படுவதைப் பற்றி, உன் சமூக முகதாட்சண்யங்கள் இன்னும் இது போன்றவை பற்றி, அக்கறைப்படுவதில்லை. இதன் அர்த்தம் தந்த்ரா ஒழுக்கக்கேடாயிருக்கச் சொல்கிறது என்பதல்ல – அல்ல! தந்த்ரா உன் ஒழுக்கத்தைப் பற்றிச் சிறிதும் அக்கறை கொண்ட தாக இல்லை. ஆகவே ஒழுக்கக்கேட்டைப் பற்றியும் அது சொல்வதில்லை. தந்த்ரா மன மாற்றத்திற்கான விஞ்ஞான பூர்வமான யுக்திகளைக் கொடுக்கிறது, இப்படி மனம் மாற்ற மடையும் போது உன் குணாதிசயமும் மாறும். உன் அடிப்படை கட்டமைப்பே மாறும்போது, உன் முழுக் கட்டமைப்பும் மாறிப் போகும்.

இந்தத் தந்த்ராவின் ஒழுக்கம் கடந்த நிலைபாட்டினால், உன் துறவிகள் என்ற பெயரில் அழைக்கப்படுபவர்களால் தந்த்ராவைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவர்கள் எல்லோரும் அதை எதிர்த்து நின்றார்கள் – ஏனெனில், தந்த்ரா வெற்றி பெற்று விட்டால், மதத்தின் பெயரால் நடந்து கொண்டிருக்கும் இந்த எல்லா மடத்தனங்களும் நின்றாக வேண்டும்.

இதைப் பார்: கிறித்துவ மதம் விஞ்ஞான வளர்ச்சியை எதிர்த்துப் பெரிதும் போராடியது ஏன்? விஞ்ஞான வளர்ச்சி வெளி உலகத்தில் வந்துவிட்டால், உளவியல், ஆன்மிக உலகங்களிலும் விஞ்ஞானம் நுழையும் காலம் வெகு தூரத்திலில்லை என்ற ஒரே காரணம்தான். ஆகவேதான் கிறித்துவ மதம் விஞ்ஞான வளர்ச்சிக்கு எதிராக சண்டையிட ஆரம்பித்தது. மேலும் ஒரு டெக்னிக்கை, யுக்தியைப் பயன்படுத்திப் பொருளை மாற்ற முடியும் என்றால், மனதையும் ஒரு யுக்தியைப் பயன்படுத்தி மாற்றமுடியும் என்பதை அறிந்துகொள்ளும் நாள் வெகு தூரத்திலில்லை – ஏனெனில் மனம் என்பது நுட்பமான பொருளைத் தவிர்த்து வேறொன்றல்ல.

இதுவே தந்த்ராவின் நிலை, அதாவது மனம் நுட்பமான பொருளன்றி வேறொன்றும் இல்லை; அதை மாற்ற முடியும். மேலும் வித்தியாச மனத்தை நீ பெறுகையில் உன் உலகமும் வித்தியாசப்பட்டுவிடும். ஏனெனில் நீ மனத்தின் மூலமாகவே பார்க்கிறாய். நீ பார்க்கும் உலகம், நீ பார்க்கும்படியாக இருக்க ஒரு குறிப்பிட்ட மனமே காரணம். மனதை மாற்று, பிறகு நீ பார்த்தால் அங்கு வேறு ஒரு உலகம் இருக்கும். இப்போது மனமே இல்லையென்றால்..... இதுவே தந்த்ராவின் இறுதி, மனமற்ற ஒரு நிலையைக் கொண்டு வருவது. அப்போது உலகை எந்த இடைத்தரகரும் இல்லாமல் பார். இடைத்தரகர் இல்லாத போது, நீ உண்மையானதை நேருக்கு நேர் சந்திக்கிறாய். ஏனெனில் இப்போது உனக்கும், உண்மையானதற்கும் இடையில் ஒருவரும் இல்லை. அப்போது எதுவும் பிறழ்ந்து தெரியாது.

ஆகவே தந்த்ரா சொல்கிறது மனம் எங்கு இல்லையோ, அதுவே பைரவரின் நிலை – மனமற்ற நிலை. முதல் தடவையாக உலகத்தைப் பார்க்கிறாய். இருப்பதை அதுபோலவே, உனக்கு மனமிருந்தால், நீ உலகத்தை உற்பத்தி செய்து கொண்டே, மாற்றிப் பார்த்துக்கொண்டே, கற்பனையைப் பொருத்திக் கொண்டே போகிறாய். ஆக முதலில் மனதை மாற்று, பிறகு மனதிலிருந்து மனமற்ற நிலைக்கு மாறு. இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகள் ஒவ்வொருவருக்கும் உதவ முடியும். ஒரு குறிப்பிட்ட முறை உனக்குப் பயனளிக்காததாய் இருக்கலாம். அதனால்தான் சிவா தொடர்ந்து பல முறைகளைக் கூறுகிறார். உனக்குப் பொருந்தும் ஏதாவது ஒரு முறையைத் தேர்ந்தெடு. உனக்குப் பொருத்தமானது எது என்று தெரிந்து கொள்வது ஒன்றும் சிரமமில்லை.

நாம் ஒவ்வொரு முறையையும், உங்களையும் உங்கள் மனத்தையும் மாற்றக்கூடிய உங்களுக்கான ஒரு முறையை தேர்ந்தெடுப்பது எப்படி என்பதையும், புரிந்து கொள்ள முயற்சிப் போம். இந்தப் புரிந்து கொள்ளல், இந்த அறிவுபூர்வமான

புரிந்துகொள்ளல் ஒரு அடிப்படைத் தேவைதான் என்றாலும், இதுவே முடிவல்ல. நான் எதைப்பற்றியெல்லாம் இங்கே பேசுகிறேனோ, அவைகளை முயற்சி செய்.

உண்மையில், நீ உனக்குச் சரியான முறையை முயற்சி செய்யும்போது அது உடனே 'க்ளிக்' ஆகும், வேலை செய்யும். நான் இங்குத் தினமும் முறைகளைப் பற்றிப் பேசிக் கொண்டே இருப்பேன். நீங்கள் முயற்சி செய்யுங்கள். அவற்றோடு கொஞ்சம் விளையாடுங்கள் – இல்லத்திற்குச் சென்று முயலுங்கள். சரியான முறை, நீ அதை எப்போது செய்கிறாயோ, உடனே 'க்ளிக்' ஆகிவிடும், செயல்பட்டு விடும். ஏதோவொன்று உனக்குள் வெடிக்கும், உனக்கே தெரியும் ''இந்த முறைதான் எனக்குச் சரியானது.'' ஆனால் முயற்சி தேவை, திடீரென்று ஒரு நாள் ஒரு யுக்தி உன்னைப் பிடித்துக் கொள்வதைப் பார்த்து நீயே கூட ஆச்சரியப்படலாம்.

ஆகவே நான் இங்குப் பேசிக் கொண்டிருக்கையிலேயே, இதற்கு இணையாக இந்த முறைகளுடன் விளையாடிக் கொண்டிரு. நான் விளையாடிக் கொண்டிருங்கள் என்று சொல்கிறேன். ஏனெனில் நீங்கள் மிகவும் சீரியஸாக இருக்கக் கூடாது. சும்மா விளையாடு! ஏதாவதொன்று உனக்குப் பொருந்த லாம். உனக்கு அது பொருந்தினால், பிறகு ஆழமாகப் போ, முழுதாக அதனுள் போ – முழு வீச்சுடன், நேர்மையுடன், உன் முழு சக்தியுடன், உன் முழு மனத்துடன். ஆனால் அதற்கு முன் சும்மா விளையாடு.

நான் பார்க்கிறேன், அதாவது நீ விளையாடும் பொழுது உன் மனம் மேலும் திறந்ததாக இருக்கிறது. நீ சீரியஸாக இருக்கும் பொழுது உன் மனம் அவ்வளவு திறந்திருப்பதில்லை, அது மூடியிருக்கிறது. ஆகவே சும்மா விளையாடு. ரொம்பவும் சீரியஸாக இருக்காதே, சும்மா விளையாடு. இந்த முறைகள் மிகவும் எளிமையானவை. ஆகவே நீ இவற்றுடன் சும்மா விளையாட முடியும்.

ஒரு முறையை எடுத்துக்கொண்டு அதோடு குறைந்தது மூன்று நாட்களுக்கு விளையாடு. அது உனக்கு ஒரு விதமான நெருக்கத்தைக் கொடுத்தால், அது உனக்கு ஒரு விதமான நல்லுணர்வைக் கொடுத்தால், அது உனக்கு ஒரு விதத்தில் உனக்கானது அது என்ற உணர்வைக் கொடுத்தால், அதன்பின் அதில் முழு வீச்சுடன் இரு. பிறகு மற்றவர்களை மறந்துவிடு, மற்ற முறைகளுடன் விளையாடாதே. உன் முறையைப் பிடித்துக் கொள் – குறைந்தது மூன்று மாதத்திற்கு. அற்புதங்கள் சாத்தியமே. ஒரே விஷயம் என்னவென்றால் அந்த யுக்தி உனக்கானதாய் இருக்க வேண்டும். அந்த யுக்தி உனக்கானது இல்லையென்றால், எதுவும் நடக்காது. நீ அந்த முறையோடு பல பிறவிகள் முயற்சி செய்தாலும், ஒன்றும் நடக்காது. ஆனால் அந்த முறை உனக்கானது என்றால் மூன்று நிமிடங்கள் போதுமானது.

ஆகவே இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளும் உனக்கு அற்புத அனுபவமாக முடியும், அல்லது அவை வெறும் கேள்வி ஞானமாகலாம் – இது உன்னைப் பொருத்தது. நான் ஒவ்வொரு முறையையும் எத்தனை விதமான கோணங்களில் சாத்தியமோ அத்தனை விதமாக விவரித்துக் கொண்டே போவேன். நீ அதோடு உனக்கு ஒரு நெருக்கத்தை உணர்ந்தால், அதோடு மூன்று நாட்கள் விளையாடு. நீ அது உனக்குப் பொருந்துவதாக உணர்ந்தால், ஏதோவொன்று உனக்குக் 'க்ளிக்' ஆனால், செயல்பட்டால், தொடர்ந்து மூன்று மாதங்களுக்குச் செய்.

வாழ்வு ஒரு அற்புதம். நீ அதன் புதிரை அறியவில்லை என்றால், அதை எப்படி அணுகுவது என்பதை நீ அறியவில்லை என்பதையே காட்டுகிறது.

சிவா நூற்றிப் பன்னிரண்டு முறைகளை முன்வைக்கிறார். சாத்தியமான எல்லா முறைகளும் இவ்வளவே. எதுவும் 'க்ளிக்' ஆகவில்லை, செயல்படவில்லை என்றால், எதுவும் இது உனக்கானது என்ற உணர்வைக் கொடுக்கவில்லையென்றால்,

உனக்கு எந்த முறையும் பாக்கியில்லை – இதை நினைவில் கொள். பிறகு ஆன்மிகத்தை மறந்துவிட்டு சந்தோஷமாயிரு. ஆன்மிகம் உனக்கானது அல்ல.

ஆனால் இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளும் முழு மனிதகுலத்திற்கே ஆனது – கடந்து சென்றுவிட்ட எல்லாக் காலங்களுக்கும், வரப்போகிற எல்லாக் காலங்களுக்குமானது. ''இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளும் எனக்குப் பயனற்றது'' என்று சொல்லக்கூடிய மனிதன், எந்தக் காலத்திலும் எப்போதும் இருந்ததில்லை, இருக்கவும் முடியாது. சாத்தியமில்லை! அது சாத்தியமில்லை!!

எல்லா வகையான மனங்களும் கணக்கிலெடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. எல்லா சாத்தியமான வகை மனத்திற்கும் ஒரு யுக்தி, டெக்னிக், தந்த்ராவில் கொடுக்கப்பட்டுள்ளது. இன்னும் பொருத்தமான மனிதன் தோன்றாத டெக்னிக்குகள் இதில் உள்ளன. அவை எதிர்காலத்திற்கு உரியவை. இப்போது பொருத்தமான மனிதனே இல்லாத யுக்திகள் இதில் உள்ளன. அவை இறந்தகாலத்திற்கு உரித்ததாய் இருந்தவை. ஆனால் பயப்பட வேண்டாம். உங்களுக்கான பல முறைகளும் இதில் உள்ளன.

நாம் இந்தப் பயணத்தை நாளை முதல் ஆரம்பிப்போம்.

## கேள்விகள்

- யோகாவிற்கும் தந்த்ராவிற்கும் என்ன வித்தியாசம்?
- சரணாகதி பாதையில், சரியான யுக்தியை எப்படிக் கண்டுபிடிப்பது?
- கடைபிடிக்கும் யுக்தி வெற்றியைத் தருமா என்பதைத் தெரிந்துகொள்வது எப்படி?

★★★

பல கேள்விகள் இங்குள்ளன. அதில் முதலாவது:

❖ "யோகாவிற்கும் தந்த்ராவிற்கும் என்ன வித்தியாசம்? இரண்டும் ஒன்றுதானா?"

தந்த்ராவும் யோகாவும் அடிப்படையாக வேறுபட்டவை. அவை ஒரே இலக்கையே அடைகின்றன. ஆனாலும் அவைகளின் பாதைகள் வேறுபட்டவை மட்டுமல்ல, எதிரெதிரானவையும் கூட. ஆகவே இது தெளிவாகப் புரிந்துகொள்ளப்பட வேண்டும். யோகா வழியும் முறையானதுதான், யோகாவும் ஒரு யுக்திதான். யோகா ஒரு தத்துவமல்ல. தந்த்ராவைப் போலவே யோகாவும் செயல், முறை, யுக்தி, டெக்னிக்கைச் சார்ந்ததே. யோகாவிலும் செயல்படுதல் மூலமே அடையப்படுகிறது, ஆனால் வழி வித்தியாசமானது.

யோகாவில் ஒருவன் சண்டை போட வேண்டும், அது போர் வீரனின் பாதை. தந்த்ராவின் பாதையில் ஒருவன் சண்டையிடுவது என்பதே இல்லை. பதிலாக, அதற்கு எதிராக, ஒருவன் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் – விழிப்புணர்வை விட்டு விடாமல்.

யோகா என்பது விழிப்புணர்வோடு அமுக்குவது, தந்த்ரா என்பது விழிப்புணர்வோடு அனுபவிப்பது.

தந்த்ரா சொல்கிறது நீ எதுவாக இருப்பினும், உயர்ந்த நிலை அதற்கு எதிரானது அல்ல. அது ஒரு வளர்ச்சி, நீ வளர்ந்து அந்த உயர்ந்த நிலையை அடைய முடியும். உனக்கும் உண்மை நிலைக்கும் நடுவில் எந்த விரோதமும் கிடையாது. நீ அதன் பாகம், ஆகவே எந்தப் போராட்டமும், எந்தப் பூசலும், எந்த விரோதமும், இயற்கையோடு தேவையில்லை. நீ இயற்கையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நீ எப்படி இருந்தாலும் அப்படியிருப்பதைக் கடந்து போக, தாண்டிப்போகப் பயன் படுத்திக்கொள்ள வேண்டும்.

யோகாவில், தாண்டிச்செல்ல உன்னோடு நீ சண்டையிட வேண்டும். யோகாவில், இந்த உலகமும், மோட்சமும், அதாவது விடுதலையும் – நீ எப்படி இருக்கிறாயோ அதுவும், நீ எப்படி உயர முடியுமோ அதுவும் – எதிரெதிர் விஷயங்கள். அமுக்கு, சண்டையிடு, நீ இருக்கும் நிலையை இல்லாமல் ஆக்கு, அப்போதுதான் நீ அடையக்கூடிய உயர்ந்த நிலையை நீ அடைய முடியும். யோகாவில் தாண்டிச் செல்வது என்பது இறப்பைப் போல. நீ உனது உண்மையான நிலை பிறக்க முதலில் சாக வேண்டும்.

தந்த்ராவின் பார்வையில் யோகா ஒரு ஆழமான தற்கொலை. உன் இயற்கையான சுயத்தை நீ கட்டாயம் கொல்ல வேண்டும் – உன் உடம்பு, உன் உணர்வுகள், உன் ஆசைகள், எல்லாவற்றையும். தந்த்ரா சொல்கிறது நீ எப்படியோ அப்படியே உன்னை ஏற்றுக்கொள். இது ஆழமான ஏற்பு. உனக்கும் உண்மை நிலைக்கும் நடுவில் எந்த இடைவெளியையும் உருவாக்கிக் கொள்ளாதே – உலகத்திற்கும், நிர்வாணத்திற்கும், அதாவது விடுதலைக்கும், எந்த இடைவெளியையும் உருவாக்காதே. தந்த்ராவில் எந்த வித்தியாசமும் இல்லை, சாவது தேவை யில்லை. உன் மறுபிறப்பிற்கு, சாவு தேவையில்லை – மாறாக ஒரு நிலை கடந்து போவதே தேவை. இப்படி நிலைகடந்து போவதற்கு, உன்னையே பயன்படுத்திக் கொள்.

உதாரணமாக, செக்ஸ், பாலுணர்வு இருக்கிறது, இது அடிப்படை சக்தி. நீ புகுந்து வந்த, உன்னோடுள்ள அடிப்படை சக்தி இது. உனது ஜீவிதத்தின், உடம்பின் அடிப்படை செல்கள் பாலுணர்வு கொண்டவை. ஆகவேதான் மனித மனம் பாலுணர்வைச் சுற்றியே வட்டமிடுகிறது. யோகாவிற்கு நீ கட்டாயம் இதனுடன் சண்டையிட வேண்டும். சண்டை யிடுவதன் மூலம் நீ உனக்குள் ஒரு புதிய மையத்தை உருவாக்குகிறாய். எவ்வளவு அதிகமாக எதிர்த்து நிற்கிறாயோ அந்த அளவு நீ புதிய மையத்தில் வலிமை அடைகிறாய். அப்போது பாலுணர்வு உன் மையமாக இல்லாமல் போகிறது.

விழிப்புணர்வோடு பாலுணர்வை எதிர்த்து நிற்கையில், ஒரு புதிய ஜீவிதம், ஒரு புதிய அழுத்தம், ஒரு புதிய உருவம் உருவாகிறது உனக்கு. அதன்பின் பாலுணர்வு உன் சக்தியல்ல. நீ பாலுணர்வை எதிர்த்து நிற்பதன் மூலம் சக்தியை உருவாக்கு வாய். ஒரு மாறுபட்ட சக்தி உன்னிடம் ஏற்படும், ஒரு மாறுபட்ட மையத்தில் இருப்பாய்.

தந்த்ராவிற்குப் பாலுணர்வு சக்தியைப் பயன்படுத்த வேண்டும். அதை எதிர்க்காதே, அதை மாற்று. அதை எதிரியாகப் பார்க்காதே, நண்பனாக இரு. அது உன் சக்தி. அது தீமையல்ல, அது தவறல்ல. எல்லா சக்திகளும் இயற்கையானவையே. அதை உனக்குச் சாதகமாகப் பயன்படுத்தலாம், அதை உனக்கு எதிராகவும் பயன்படுத்தலாம். அதை ஒரு தடையாக, முட்டுக் கட்டையாக ஆக்கிக் கொள்ளலாம், அல்லது அதை ஒரு படியாகவும் ஆக்கிக் கொள்ளலாம். அது பயன்படுத்தக் கூடியது. சரியாகப் பயன்படுத்தினால், அது நண்பனாக மாறுகிறது, தவறாகப் பயன்படுத்தினால், அது எதிரியாக மாறுகிறது. ஆனால் அது இரண்டுமல்ல. சக்தி வெறும் இயற்கையானது மட்டுமே. ஒரு சாதாரண மனிதன் பாலுணர்வைப் பயன்படுத்துவது போலப் பயன்படுத்தினால், அது பகைவனாகிறது, அது அவனை அழிக்கிறது, அவன் அதில் காணாமல் போகிறான்.

யோகா எதிரான நிலை எடுக்கிறது – சாதாரண மனத்திற்கு எதிரான நிலை. சாதாரண மனம், தான் படும் ஆசைகளாலேயே தான் அழிந்து விடுகிறது. ஆகவே யோகா ஆசையை நிறுத்தச் சொல்கிறது, ஆசையற்று இருக்கச் சொல்கிறது. ஆசையை எதிர், உனக்குள் ஆசையற்ற ஒரு புதிய வலிமையை உருவாக்கு.

தந்த்ரா சொல்கிறது, ஆசையைப் பற்றி விழிப்புணர்வு கொள், எந்த எதிர்ப்பையும் கொண்டு வராதே. முழு உணர்வோடு ஆசையினுள் போ, அப்படி முழு உணர்வோடு ஆசையினுள் போகையில் நீ அந்த நிலையைக் கடக்கிறாய். நீ அதனுள் இருக்கிறாய் ஆனாலும் நீ அதில் இல்லை. நீ அதில்

புகுந்து வருகிறாய், ஆனாலும் நீ எப்போதும் வெளியிலேயே இருக்கிறாய்.

யோகாவிடம் ஈர்ப்பு அதிகமிருக்கிறது. ஏனெனில் யோகா சாதாரண மனத்தின் எதிர் துருவம். எனவே சாதாரண மனம் யோகாவின் மொழியைப் புரிந்துகொள்ள முடியும். பாலுணர்வு எப்படி உன்னை ஆட்டுவிக்கிறதென்று உனக்குத் தெரியும் – அது உன்னை எப்படி அழிக்கிறது, உன்னை அடிமைப்படுத்தி அதைச் சுற்றியே ஆட்டுவிக்கிறது ஒரு பொம்மை போல என்று தெரியும். உன் அனுபவத்தால் இது உனக்குத் தெரியும். ஆகவே யோகா இதை எதிர்த்து நில் என்று சொல்லும்போது உடனே நீ அந்த மொழியைப் புரிந்துகொள்கிறாய். இதுதான் அந்த ஈர்ப்பு, யோகாவின்பால் உள்ள ஈர்ப்பு.

தந்த்ரா அவ்வளவு சுலபமாக ஈர்க்க முடியாது. இது கஷ்டமாகத் தெரிகிறது: எப்படி ஆசையில் அதில் அமிழ்ந்து போகாமல் சவாரி செய்வது? எப்படிப் பாலுணர்வுச் செயலில் உணர்வோடு, முழு விழிப்புணர்வோடு இருப்பது? சாதாரண மனம் இது குறித்துப் பயப்படுகிறது. இது ஆபத்தாகத் தெரிகிறது. உண்மையில் தந்த்ராவில் இல்லை ஆபத்து; பாலுணர்வைப் பற்றி உனக்குத் தெரிந்தவையெல்லாம்தான் இந்த ஆபத்தை உனக்கு உருவாக்குகிறது. உனக்கு உன்னைப் பற்றித் தெரியும், உனக்கு உன்னை நீயே எப்படி ஏமாற்றிக் கொள்வது என்று தெரியும். உனக்கு உன் மனம் மிகவும் குள்ளநரித்தனமானது என்று தெரியும். நீ ஆசையில், பாலுணர்வில், மற்ற எல்லாவற்றிலும் மூழ்கிக்கொண்டே, நீ முழு விழிப்புணர்வுடன் செயல்படுவதாக உன்னையே ஏமாற்றிக்கொள்ள உன்னால் முடியும். இதனால் தான் உனக்கு தந்த்ரா ஆபத்தாகத் தெரிகிறது.

ஆபத்து தந்த்ராவில் இல்லை, அது உன்னிடம் இருக்கிறது. யோகாவின் ஈர்ப்பும் உன்னால்தான் இருக்கிறது – உன்னுடைய சாதாரண மனம், பாலுணர்வு அமுக்கப்பட்ட, பாலுணர்வுப் பசிகொண்ட, பாலுணர்வு ஈடுபாடு கொண்ட மனம் தான் காரணம். சாதாரண மனம் பாலுணர்வு தொடர்பாக ஆரோக்கிய

மாக இல்லாததாலேயே யோகா ஈர்க்கிறது. தற்போதையதைவிட ஆரோக்கியமான மனிதகுலத்தில், ஆரோக்கியமான பாலுணர் வோடு உள்ளதில், இயற்கையான, இயல்பான பாலுணர்வுள்ள நிலையில், விஷயம் வேறாக இருக்கும். நாம் இயல்பாக, இயற்கையாக இல்லை. நாம் சுத்தமாக இயல்புகெட்டு, ஆரோக்கியமற்று, பித்துப் பிடித்து இருக்கிறோம். ஆனால் எல்லோரும் இப்படி இருப்பதால், நாம் இதை ஒருபோதும் உணர்வதில்லை.

பயித்தியக்காரத்தனம் மிகவும் இயல்பாகிவிட்டதால், பயித்தியம் பிடிக்காமல் இருப்பது வேண்டுமானால் இயல்பற்றது என்றாகிவிட்டது. ஒரு புத்தர் இயல்புக்கு மாறானவர், ஒரு ஜீஸஸ் இயல்புக்கு மாறானவர் நம்மிடையே. அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்களல்ல. இந்தத் தவறான இயல்பாகிவிட்ட தன்மைதான் நோய். இந்த வகை தவறான இயல்பு கொண்ட மனமே யோகாவிடம் ஈர்ப்பை உண்டு பண்ணுகிறது. நீ பாலுணர்வை இயற்கையாக – அதைச் சுற்றி எந்தத் தத்துவமும் இல்லாமல், அதற்கு எதிராகவோ ஆதரவாகவோ எந்தத் தத்துவமும் இல்லாமல் – நீ பாலுணர்வை உனது கைகளைப் போல, கண்களைப் போல எடுத்துக்கொள்ள முடிந்தால், அது ஒரு இயற்கையான விஷயம் என்று ஏற்றுக் கொள்ளப்பட்டால், அப்போது தந்த்ராவிடம் ஈர்ப்பு வரும். அப்போதுதான் தந்த்ரா பலருக்கும் பயனுள்ளதாக ஆக முடியும்.

தந்த்ராவின் காலம் நெருங்கி வருகிறது. விரைவில் தந்த்ரா பொதுமக்களிடையே முதன்முறையாக வெடிக்கப் போகிறது. ஏனெனில் முதன் முறையாகப் பாலுணர்வை இயற்கையானதாக எடுத்துக்கொள்ளக் கூடிய தருணம் வந்துள்ளது, காலம் வந்து விட்டது. இந்த வெடிப்பு, இந்தப் பரவல், மேற்கத்திய நாடுகளி லிருந்து வருவது சாத்தியம். ஏனெனில் 'ப்ராய்ட்', 'ஜங்', 'ரிச்' ஆகியோர் தகுந்த பின்புலத்தை, ஏற்பாட்டை உருவாக்கி யுள்ளனர். அவர்களுக்கு தந்த்ராவைப் பற்றி எதுவும் தெரியாது, ஆனால் தந்த்ரா வளர்வதற்குத் தகுந்த பண்பட்ட நிலத்தைத்

தயாரித்துள்ளனர். மேற்கத்திய உளவியல், மனிதனின் அடிப்படை நோய் எங்கோ பாலுணர்வைச் சுற்றியே உள்ளது. மனிதனின் அடிப்படைப் பயித்தியக்காரத்தனம் பாலுணர்வு தொடர்புள்ளதே, என்ற முடிவுக்கு வந்துள்ளது.

ஆகவே இந்தப் பாலுணர்வுத் தொடர்பை இல்லாமல் செய்தாலொழிய மனிதன் இயற்கையானவனாக, இயல்பான வனாக முடியாது. மனிதனின் பாலுணர்வைப் பற்றிய அணுகு முறைகளே அவன் தவறாகப் போனதற்குக் காரணம். எந்த அணுகுமுறையும் தேவையில்லை. அப்போதுதான் நீ இயற்கை யாக இருக்கிறாய். உன் கண்களைப் பற்றி உனக்கு என்ன அணுகுமுறை இருக்கிறது? அவை தீமையா அல்லது அவை புனிதமானவையா? நீ உன் கண்களுக்கு ஆதரவாளனா அல்லது அவைகளுக்கு எதிர்ப்பானவனா? எந்த ஒரு அணுகுமுறையும் இல்லை! அதனால்தான் உன் கண்கள் இயல்பாக உள்ளன.

ஏதாவது அணுகுமுறையை எடுத்துக்கொள் – உன் கண்கள் தீமை என்று நினைத்துக் கொள். அதன்பின் பார்ப்பது சிரமமாகி விடும். அதன்பின் பார்ப்பது என்பது பாலுணர்வு ஒரு பிரச்சனை யாக உருவெடுத்துள்ளதைப் போலவே ஆகிவிடும். அதன்பின் பார்ப்பதற்கு விரும்புவாய், பார்ப்பதற்கு ஆசைப்படுவாய், பார்ப்பதற்கு ஏங்குவாய். ஆனால் நீ பார்க்கும்பொழுது நீ குற்றவுணர்ச்சி கொள்வாய். நீ எப்பொழுதெல்லாம் பார்க் கிறாயோ அப்போதெல்லாம் ஏதோ தவறு செய்துவிட்டதைப் போல, நீ பாவம் செய்துவிட்டதைப் போலக் குற்றவுணர்ச்சி அடைவாய். நீ அந்தப் பார்க்கும் உன் கருவிகளையே கொன்று விட விரும்புவாய், நீ உன் கண்களை அழித்துக்கொள்ள விரும்புவாய். மேலும் நீ எந்த அளவு அவைகளை அழிக்க விரும்புகிறாயோ அந்த அளவு கண்களே உன் மையமாகிப் போகும். இதனால் மடத்தனமான ஒரு செயலை நீ ஆரம்பிப்பாய் : நீ மேலும் மேலும் பார்க்க விரும்புவாய், அதே சமயம் நீ மேலும் மேலும் குற்றம் புரிவதாக உணர்வாய். இதுவே தான் பாலுணர்வு மையத்திலும் நிகழ்ந்துள்ளது.

தந்த்ரா சொல்கிறது, நீ எப்படியிருப்பினும் அதை ஏற்றுக் கொள். இது தான் அடிப்படை – முழுமையாக ஏற்றுக்கொள்ளல். முழுமையாக ஏற்றுக்கொள்வதன் மூலம் மட்டுமே வளர முடியும். அதன்மூலம் உன் எல்லா 'சக்திகளையும் பயன்படுத்து. எப்படி அவைகளை நீ பயன்படுத்த முடியும்? முதலில் ஏற்றுக்கொள், பின் அந்த சக்திகள் என்னென்ன என்பதைக் கண்டுபிடி – பாலுணர்வு என்பது என்ன, இந்த விஷயம் என்ன? நமக்கு அதோடு பழக்கமில்லை. நாம் பாலுணர்வைப் பற்றிப் பல விஷயங்களை, அடுத்தவர்கள் சொல்லிக்கொடுத்த விதமாகவே அறிந்துள்ளோம். நாம் பாலுணர்வுக் கலவியில் ஈடுபட்டவர்களாக இருக்கலாம், ஆனால் ஒரு குற்றவுணர்வுடன், அமுக்கப்பட்ட அணுகுமுறையில், அவசரத்தில், பதட்டத்தி லேயே செய்திருப்போம். சுமையை இறக்கி வைக்க ஏதாவது அவசரமாய் செய்ய வேண்டும் அவ்வளவுதான். பாலுணர்வுக் கலவி ஒரு அன்பான செயல் அல்ல. நீ அதில் ஆனந்தமாய் இருப்பதில்லை, ஆனால் அதை நீ விடவும் முடியாது. நீ எந்த அளவு அதை விட்டுவிட முயற்சிக்கிறாயோ அந்த அளவு அது வசீகரமாக மாறுகிறது. எந்த அளவு அதை விலக்க விரும்புகிறாயோ அந்த அளவு நீ அதன் அழைப்பை உணருகிறாய்.

உன்னால் அதை மறுதலிக்க முடியாது, ஆனால் இப்படி மறுதலிக்கும், அழித்துவிடும் மனப்பாங்கு, அந்த மனத்தையே அழித்து விடுகிறது. அந்த விழிப்புணர்வை, அதைப் புரிந்து கொள்ளக்கூடிய அந்த நுண்ணுணர்வையே அழித்துவிடுகிறது. ஆகவே பாலுணர்வு அதில் எந்த நுண்ணுணர்வும் இல்லாமல் தொடர்ந்து கொண்டே போகிறது. அப்போது அதை நீ புரிந்து கொள்ள முடியாது. ஒரு ஆழமான நுண்ணுணர்வு மட்டுமே எதையும் புரிந்துகொள்ள முடியும்; ஆழமான உணர்வே, ஆழமாக அதில் செல்லுதல் மூலமே, எதையும் புரிந்துகொள்ள முடியும. ஒரு கவிஞன் மலர் தோட்டத்தின் நடுவே செல்லும் மனநிலையில் நீ பாலுணர்வில் சென்றால் தான், அப்போது மட்டுமே, அதைப் புரிந்துகொள்ள முடியும்! உனக்கு மலர்களைப்

பற்றிக் குற்றவுணர்வு இருந்தால், நீ பூந்தோட்டத்தைக் கடந்து சென்றாலும், மூடிய கண்களுடன்தான் கடந்து செல்வாய். மேலும் நீ பதட்டத்திலும், ஆழமான பயித்தியக்காரத்தனமான அவசரத்திலும் இருப்பாய். எப்படியாவது நீ பூந்தோட்டத்தை விட்டு வெளியேறிவிட வேண்டும். இப்படிப்பட்ட நிலையில் நீ எப்படி விழிப்புணர்வோடு இருக்க முடியும்?

ஆகவே தந்த்ரா சொல்கிறது, நீ எப்படியாயினும் அதை அப்படியே ஏற்றுக்கொள். நீ பலபல பரிமாணங்கள் கொண்ட சக்திகளையுடைய மாபெரும் புதிர். அதை ஏற்றுக்கொள், பின் அந்த ஒவ்வொரு சக்தியோடும், ஆழமான நுண்ணுணர்வோடும், விழிப்புணர்வோடும், அன்போடும், புரிதலோடும் செல். அதோடு போ! அப்போது ஒவ்வொரு ஆசையும் அதைக் கடந்து செல்வதற்கான வண்டியாக மாறும். அப்போது எல்லா சக்திகளும் உதவுவதாக மாறும். அதன்பின் இந்த உலகமே நிர்வாணம், மோட்சம், விடுதலையாகும், இந்த உடலே கோவிலாகும் – புனிதக் கோயில், புனித இடம்.

யோகா மறுப்பது, தந்த்ரா உறுதி செய்வது. யோகா இரட்டைத் தன்மை அடிப்படையில் சிந்திக்கிறது – அதுவே 'யோகா' என்ற வார்த்தைக்கே காரணம். யோகா என்பதன் அர்த்தம் இரண்டு விஷயங்களை ஒன்றுசேர்ப்பது, இரண்டு விஷயங்களைப் பூட்டுதல் (இரு காளைகளை வண்டி ஓட்டப் பூட்டுவது போல). ஆனால் இரண்டு விஷயங்கள் அங்குள்ளன, இரட்டைத் தன்மை அங்குள்ளது. தந்த்ரா சொல்கிறது, இரட்டைத் தன்மை என்பது கிடையாது. இரட்டைத் தன்மையே இருக்கிறது என்கிறபோது, நீ அவற்றை ஒன்றுசேர்க்க முடியாது. எவ்வளவு நீ முயற்சி செய்தாலும் அவை தொடர்ந்து இரண்டாகவே இருக்கும். எப்படி நீ அவற்றைச் சேர்த்தாலும் அவை தொடர்ந்து இரண்டாகவே இருக்கும், சண்டை தொடரும், இரட்டைத்தன்மை தொடர்ந்து இருக்கும்.

உலகமும், தெய்விகமும் இரண்டு என்றால், பின் அவற்றை ஒன்று சேர்ப்பதென்பது முடியாது. அவை உண்மை

யில் இரண்டில்லாமல், வெறும் பார்வைக்கே இரண்டாகத் தெரிவதாயிருந்தால், அப்போது மட்டுமே அவை ஒன்றாக முடியும். உன் உடம்பும், ஆன்மாவும் இரண்டு என்றால், பின் அவற்றை ஒன்றாக்க முடியாது. நீயும் கடவுளும் இரண்டு என்றால், பின் அவைகளை ஒன்றுசேர்க்க எந்தச் சாத்தியமும் இல்லை. அவை தொடர்ந்து இரண்டாகவே இருக்கும்.

தந்த்ரா சொல்கிறது; இரட்டைத்தன்மை கிடையாது, அது வெறும் தோற்றமே. ஆகவே தோற்றம் வலிமையாய் வளர ஏன் உதவ வேண்டும்? தந்த்ரா கேட்கிறது, ஏன் இந்த இரட்டைத் தன்மையுள்ள தோற்றம் வலிமையாய் வளர உதவ வேண்டும்? இந்தக் கணமே இதைக் கரைத்துவிடு, ஒன்றாகு! ஏற்றுக் கொள்வதன் மூலம் நீ ஒன்றாகிறாய், சண்டையின் மூலமல்ல. உலகத்தை ஏற்றுக்கொள், உடலை ஏற்றுக்கொள், அதில் பாவித்திருக்கும், இயல்பாகக் குடியிருக்கும் எல்லாவற்றையும் ஏற்றுக்கொள். வேறு ஒரு மையத்தை உன்னிடம் உருவாக்கிக் கொள்ளாதே. ஏனெனில் தந்த்ராவைப் பொருத்தவரை அந்த வேறு ஒரு மையம் என்பது உன் ஆணவத்தைத் தவிர வேறல்ல. ஆணவத்தை உருவாக்காதே. நீ எப்படி இருக்கிறாய் என்பதில் மட்டும் விழிப்புணர்வு கொள். நீ சண்டையிட்டால், அப்போது ஆணவம் அங்கு இருக்கும்.

ஆகவே ஆணவமற்ற யோகியைப் பார்ப்பது மிகவும் கடினம். யோகிகள் ஆணவமற்று இருப்பதைப் பற்றிப் பேசிக் கொண்டே இருக்கலாம். ஆனால் அவர்கள் ஆணவமற்று இருக்க முடியாது. அவர்கள் பின்பற்றும் வழிமுறையே ஆணவத்தை உருவாக்கி விடுகிறது. சண்டையே அவர்கள் வழி. நீ சண்டையிட்டால், நீ கண்டிப்பாக ஆணவத்தை உருவாக்குவாய். அதிக அளவு நீ சண்டையிட்டால், அதிக அளவு ஆணவம் வலிமை பெறும். நீ சண்டையில் வெற்றி பெற்றுவிட்டால், நீ ஆணவத்தின் உச்சியை அடைவாய்.

தந்த்ரா சொல்கிறது, சண்டை வேண்டாம்! அப்போது ஆணவத்திற்கு அங்குச் சாத்தியமே இல்லை. நாம் தந்த்ராவைப்

புரிந்துகொள்ளும்பொழுது அங்குப் பல பிரச்சனைகள் எழலாம். ஏனெனில் நம்மைப் பொருத்தவரை, சண்டையில்லையென்றால் அங்கே ஈடுபாடு வந்துவிடும். நமக்குச் சண்டையில்லை என்றால் ஈடுபடுதல். இதனால் நமக்குப் பயமாயிருக்கிறது. நாம் பல பிறவிகளாக எல்லாவற்றிலும் ஈடுபட்டு, சம்பந்தப்பட்டு, நாம் எங்கும் போய்ச்சேரவில்லை. ஆனால் தந்த்ராவிற்கு ஈடுபடுவது என்பது நமது ஈடுபடுவது என்பது போல அல்ல. தந்த்ரா சொல்கிறது, ஈடுபடு ஆனால் விழிப்புணர்வோடிரு.

நீ கோபமாயிருக்கிறாய்..... தந்த்ரா கோபப்படாதே என்று சொல்லாது. முழு இதயத்தோடு கோபப்படு, அதோடு விழிப் புணர்வோடிரு என்று தந்த்ரா சொல்லும். தந்த்ரா கோபத்துக்கு எதிரானது அல்ல, தந்த்ரா ஆன்மிக உறக்கத்திற்கே, ஆன்மிக உணர்வற்ற நிலைக்கே, எதிரானது. விழிப்புணர்வோடிருந்து கோபமாகவுமிரு. இதுதான் யுக்தியின் ரகசியம் – அதாவது நீ விழிப்புணர்வோடிருந்தால் கோபம் மாற்றமடைகிறது : அது கருணையாக மாறுகிறது. ஆகவே தந்த்ரா சொல்கிறது, கோபம் உனது எதிரி அல்ல; இது கருணை விதை உருவில் இருக்கும் நிலை. அதே கோபம், அந்த அதே சக்தி, கருணையாக மாற்ற மடையும்.

நீ அதனுடன் சண்டையிட்டால், அப்போது அங்கே கருணைக்குச் சாத்தியம் ஏதுமிருக்காது. ஆகவே நீ சண்டையில், அமுக்குவதில், வெற்றி பெற்றால், நீ ஒரு சவமாயிருப்பாய். அங்குக் கோபமிருக்காது. ஏனெனில் நீ அதை அமுக்கிவிட்டாய், ஆனால் அங்குக் கருணையுமிருக்காது. ஏனெனில் கோபமே கருணையாக மாற்றப்பட முடியும். நீ உன் அமுக்கலில் வெற்றி பெற்றால் – அது சாத்தியமில்லை – அப்புறம் அங்குப் பாலுணர்வு இருக்காது, ஆனால் அன்பும் இருக்காது, ஏனெனில் பாலுணர்வு இறந்துவிட்ட பிறகு அன்பாக வளர்ச்சியடைய எந்த சக்தியும் அங்கு இருக்காது. எனவே நீ பாலுணர்வு இல்லாமல் இருப்பாய், ஆனால் அன்பும் சேர்ந்து உன்னிடம் இருக்காது. இதில் முழு முயற்சியும் தவறாகிவிட்டது. ஏனெனில் அன்பு

இல்லாமல் தெய்விகம் கிடையாது, அன்பு இல்லாமல் விடுதலை கிடையாது, அன்பு இல்லாமல் சுதந்திரம் கிடையாது.

தந்த்ரா சொல்கிறது, அதே சக்திகள் மாற்றப்பட வேண்டும். இதை இப்படிச் சொல்லலாம் : நீ உலகத்திற்கு எதிரானால், நிர்வாணா, மோட்சமும் இல்லை – ஏனெனில் இந்த உலகமே மோட்சமாக மாற்றப்பட வேண்டியது. ஆனால் நீ மூலமாய் இருக்கின்ற அடிப்படை சக்திகளுக்கே எதிராக இருக்கிறாய்.

ஆகவே தந்த்ரா ரசவாதம் சொல்கிறது, சண்டையிடாதே, உனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சக்திகளோடு நண்பனாயிரு. அவைகளுக்கு நல்வரவு கூறு. உன்னிடம் கோபமிருப்பதற்கு, உன்னிடம் பாலுணர்வு இருப்பதற்கு, உன்னிடம் பேராசை இருப்பதற்கு, நன்றியுணர்வு கொள். நன்றியுணர்வு கொள், ஏனெனில் இவைகள் தான் மறைந்திருக்கும் ஆதாரங்கள். மேலும் அவைகளை மாற்ற முடியும், திறக்க முடியும். இப்படிப் பாலுணர்வு மாற்றமடையும்போது அதுவே அன்பாக மலர்கிறது. விஷம் போய்விட்டது, அசிங்கம் அகன்றுவிட்டது.

விதை அசிங்கம், ஆனால் வாழ்ந்து எழும்பொழுது, அது முளைவிட்டு மலர்களாகப் பூக்கிறது. அப்போது அங்கு அழகு இருக்கிறது. விதைகளை வீசி எறியாதே. ஏனெனில் அப்போது நீ மலர்களையும் சேர்த்தே எறிகிறாய். அவைகள் இன்னும் அங்கு இல்லை, அவைகள் இன்னும் தோன்றவில்லை. ஆகவே நீ பார்க்க முடியவில்லை. அவைகள் உருவெடுக்கவில்லை என்றாலும் அவை அங்கே உள்ளன. இந்த விதையைப் பயன்படுத்து. அதன் மூலம் நீ மலர்களை அடையலாம். எனவே முதலில் ஏற்றுக்கொள்வதும், நுண்ணுணர்வுள்ள புரிதலும், விழிப்புணர்வும் ஏற்படட்டும். பின் ஈடுபடுவது அனுமதிக்கப் படுகிறது.

மேலும் உண்மையிலேயே மிகவும் ஆச்சரியமான ஒரு விஷயம், அதே சமயம் தந்த்ராவின் ஒரு மிக ஆழமான கண்டுபிடிப்பு, இது என்னவென்றால் : நீ எதையெல்லாம் உன்

பகைவனாக எடுத்துக் கொள்கிறாயோ – பேராசை, கோபம், வெறுப்பு, பாலுணர்வு, எதுவாயிருந்தாலும் – அப்படி நீ அவைகளைப் பகைவனாக எடுத்துக்கொள்வதே அவைகளை உன் பகைவர்கள் ஆக்குகிறது. அவைகளைத் தெய்விகப் பரிசுகளாக எடுத்துக் கொண்டு, அவைகளை மிகுந்த நன்றியுணர்வு கொண்ட இதயத்துடன் அணுகுங்கள். உதாரணமாக, தந்த்ரா பாலுணர்வு சக்தியை மாற்றுவதற்கான பல யுக்திகளைக் கொண்டுள்ளது. பாலுணர்வுக் கலவியை நீ ஒரு தெய்விகக் கோவிலை நெருங்குவது போல நெருங்கு. பாலுணர்வுக் கலவியை ஒரு வழிபாடுபோல, ஒரு தியானத்தைப் போல அணுகு. அதன் புனிதத்தை உணர்.

அதனால்தான் கஜுராஹோ, பூரி, கொனாரக், ஒவ்வொரு கோவிலிலும் ஆண்பெண் கலவிச் சிற்பங்கள் உள்ளன. கோவில்களின் சுவர்களில் பாலுணர்வுக் கலவிகளைப் பார்ப்பது பொருத்தமற்றதாகவே தெரியும். குறிப்பாகக் கிறித்துவம், இஸ்லாம், ஜைனம் ஆகியவைகளுக்கு இது நினைத்துப் பார்க்க முடியாததாக, எதிர்மறையாகத் தெரிகிறது. கோவில் எப்படிக் கலவிச் சிற்பங்களுடன் சம்பந்தப்பட முடியும்? கஜுராஹோ கோவில்களின் வெளிப்புறச் சுவர்களில், நினைத்துப் பார்க்கக்கூடிய அனைத்து விதப் பாலுணர்வுச் செயல்களும், கலவி நிலைகளும், கல்லில் படம் பிடிக்கப்பட்டுள்ளது. ஏன்? நமது மனதைப் பொருத்தவரை, கோவில்களில் இதற்கு எந்த இடமுமில்லை. கிறித்துவம் தனது எந்த சர்ச் சுவர்களிலும் கஜுராஹோ படங்களை நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. சாத்தியமேயில்லை!

இப்போதய, நாகரிக, இந்துக்களும் குற்ற உணர்வு அடைகிறார்கள். ஏனெனில் தற்போதுள்ள இந்துக்களின் மனம் கிறித்துவர்களாலேயே உருவாக்கப்பட்டுள்ளது. இவர்கள் ''இந்து – கிறித்துவர்கள்'' – இது மிகவும் மோசம். ஏனெனில் கிறித்துவனாய் இருப்பது சரி, ஆனால் இந்து – கிறித்துவனாய் இருப்பது எதிலும் பொருந்தாது. இவர்கள் குற்ற உணர்வு கொள்கிறார்கள்.

ஒரு இந்துத் தலைவர், 'புருஷோத்தம்தாஸ் டாண்டன்' இந்தக் கோயில்கள் எல்லாம் நம்மைச் சேர்ந்தவையல்ல, இவைகளை எல்லாம் அழித்துவிட வேண்டும் என்று கூடச் சொன்னார். உண்மையில், அவைகள் நம்மைச் சேர்ந்தவை போலத் தெரிய வில்லை. ஏனெனில் நீண்ட காலமாக, பல நூற்றாண்டுகளாக, தந்த்ரா நமது இதயத்தில் இல்லை. தந்த்ரா ஒரு முக்கிய வழியாக இருந்ததில்லை. யோகாவே முக்கிய வழியாக இருந்து வந்திருக் கிறது, யோகாவைப் பொருத்தவரை 'கஜுராஹோ' நினைத்துப் பார்க்க முடியாதது, – அது கண்டிப்பாக அழிக்க வேண்டியது.

தந்த்ரா சொல்கிறது, பாலுணர்வுக் கலவியை நெருங்கும் போது நீ ஒரு புனிதமான கோவிலில் நுழைவது போல இருக்க வேண்டும். அதற்காகத் தான் அவர்களுடைய புனித கோவில் களில் பாலுணர்வுச் செயல்களை, கல்வியைச் சிற்பங்களாக்கி யுள்ளனர். அவர்கள், புனித கோவிலில் காலடி எடுத்து வைப்பது போலப் பாலுணர்வை நெருங்கச் சொல்லிச் சொல் கிறார்கள். ஆகவே, உண்மையில், ஒரு புனித கோவிலில் நீ நுழையும்போது அங்குப் பாலுணர்வு கண்டிப்பாக இருக்க வேண்டும், அப்போதுதான் அவை இரண்டும் சேர்ந்ததாக, இணைந்ததாக, உன் மனத்தில் ஆகும். அப்போதுதான் இந்த உலகமும் தெய்விகமும் ஒன்றுக்கொன்று சண்டையிடுபவை யல்ல, அவை ஒன்றே என்று உன்னால் உணர முடியும். அவை வேறுபட்டவையல்ல, அவை ஒன்றுக்கொன்று உதவிக் கொள்ளும் எதிர்துருவங்களே. அவை எதிரெதிர்த் துருவங்களாக இருப்பதாலேயே அவை இருக்கின்றன. இந்தத் துருவ நிலை போய்விட்டால், முழு உலகமும் போய்விடும். ஆகவே எல்லாவற்றின் ஊடேயும் ஓடிக்கொண்டிருக்கும் ஒருமைத் தன்மையைப் பார். வெளியே எதிரெதிர்த் துருவங்களாக இருப்பதை மட்டும் பார்க்காதே, உள்ளே அவைகளை ஒன்றாக இணைக்கும் மின்சாரம் போன்ற ஓட்டத்தைப் பார்.

தந்த்ராவிற்கு எல்லாமே புனிதம். நினைவில் கொள், தந்த்ராவிற்கு எல்லாமே புனிதம்; புனிதமற்றது எதுவும்

கிடையாது. இதை இப்படிப் பாருங்கள் : மதத்தைச் சாராத வனுக்கு எதிலும் எந்தப் புனிதமும் இல்லை; மதத்தைக் கடைபிடிப்பதாகக் கருதப்படுபவர்களுக்குச் சில புனிதமானது, சில புனிதமற்றது. தந்த்ராவிற்கு எல்லாமே புனிதமானது.

ஒரு கிறித்துவத் தூதர் சில தினங்களுக்கு முன் என்னோடு இருந்தார். அவர் சொன்னார், ''கடவுள் இந்த உலகத்தைப் படைத்தார்.''

நான் கேட்டேன், ''யார் பாவத்தைப் படைத்தது.''

அவர் சொன்னார், ''சாத்தான்.''

நான் கேட்டேன், ''யார் சாத்தானைப் படைத்தது.''

இப்போது அவர் மாட்டிக்கொண்டார். அவர் சொன்னார், ''வேறு எப்படி, கடவுள்தான் சாத்தானைப் படைத்தார்.''

கடவுள் சாத்தானைப் படைத்தார், சாத்தான் பாவத்தைப் படைத்தது. அப்படியானால் யார் உண்மையான பாவி – சாத்தானா, கடவுளா? ஆனால் இரட்டைத்தன்மை கருத்து எப்பொழுதும் இது போன்ற மடத்தனங்களையே கொண்டு வரும். தந்த்ராவிற்குக் கடவுளும், சாத்தானும் இரண்டல்ல. உண்மையில், தந்த்ராவிற்குச் 'சாத்தான்' என்று அழைக்கக் கூடிய ஒன்றே கிடையாது, எல்லாமே தெய்விகம்தான், எல்லாமே புனிதமானதே. இதுவே சரியான பார்வையாக, ஆழமானதாகத் தெரிகிறது. இந்த உலகத்தில் புனிதமில்லாதது இருக்குமானால், எங்கிருந்து அது வரும், எப்படி அது வர முடியும்?

இதற்கு இரண்டுவித விளக்கங்களே இருக்க முடியும். முதலாவது, கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் சொல்வதுபோல எல்லாமும் ஒரு புனிதமும் அற்றவை என்பது. இந்தப் பார்வை சரிதான். இவனும் ஒரு இரட்டைத்தன்மையை ஏற்காதவன்தான்; இவன் உலகத்தில் ஒரு புனிதத்தையும் பார்ப்பதில்லை. இரண்டாவது, தந்த்ரா சொல்வது – இவன் சொல்கிறான் எல்லாமே புனிதமானது. இவனும் ஒரு இரட்டைத்தன்மையை

ஏற்காதவன் தான். ஆனால் இந்த இருவருக்கிடையில், மதத்தைச் சார்ந்தவர்களாகக் கருதப்படுபவர்கள் – ஆனால் உண்மையில் மதத்தன்மை அற்றவர்கள் – இருக்கிறார்கள். இவர்கள் மதத் தன்மை உடையவர்களுமில்லை, மதத்தன்மை அற்றவர்களு மில்லை. ஏனெனில் எப்போதும் இவர்கள் முரண்பட்டே இருக்கிறார்கள். இவர்களின் முழுக் கருத்துக்கணிப்பும் எதிரெதிர் முனைகளைச் சந்திக்க வைக்க முயல்கிறது. ஆனால் இந்த முனைகள் சந்தித்துக்கொள்ள முடியாதவை.

ஒரே ஒரு செல், ஒரே ஒரு அணு, இந்த உலகத்தில் புனிதமற்றது என்றால் கூட, இந்த முழு உலகமும் புனிதமற்றது தான். ஏனெனில் எப்படி ஒரு புனிதமற்ற அணு இந்தப் புனிதமான உலகத்தில் இருக்க முடியும்? எப்படி அது இருப்பது சாத்தியம்? அது எல்லாவற்றாலும் ஆதரிக்கப்பட்டே இருக்கிறது. அது இருப்பதற்கு எல்லாவற்றின் ஆதரவும் கண்டிப்பாக வேண்டும். அப்படி இந்தப் புனிதமற்ற அணு புனிதமான மற்ற எல்லாப் பொருள்களும் ஆதரிக்கப்படுகிறது என்றால், இவைகளுக்கிடையே வித்தியாசம் என்ன இருக்கிறது? ஆகவே இந்த உலகம் முழுதுமாக, எந்த நிபந்தனையுமற்று புனிதமானது, அல்லது இது புனிதமற்றது; இரண்டுக்கும் நடுவிலான பாதை சாத்தியமில்லை.

தந்த்ரா சொல்கிறது, எல்லாமும் புனிதமானது, அதனால் தான் நாம் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. தந்த்ராவை ஒரு குறிப்பிட்ட அணுகுமுறை என்று நாம் அழைப்பதா யிருந்தால், அதனுடைய்து ஒரு ஆழமான இரட்டைத்தன்மை அற்ற அணுகுமுறையாகும். ஆனால் அது ஒரு அணுகுமுறை அல்ல. ஏனெனில் எந்த அணுகுமுறையும் இரட்டைத்தன்மை கொண்டதாகவே இருக்க முடியும். அது எதற்கும் எதிரானதல்ல. ஆகவே அது எந்தக் குறிப்பிட்ட அணுகுமுறையுமல்ல. அது ஒரு உணரப்பட்ட ஒருமை, வாழப்பட்ட ஒருமை.

இவையே யோகா, தந்த்ரா என்ற இரு பாதைகள். தந்த்ரா மிகவும் ஈர்ப்புள்ளதாக இருக்க முடியாது. அதன் காரணம் நமது

முடமாய்க் கிடக்கும் மனம். ஆனால் எப்பொழுதெல்லாம் உள்ளே ஆரோக்கியமாயுள்ள குழப்பமற்ற ஒருவன் தோன்றுகிறானோ, அவனுக்கு தந்த்ரா அழகாக இருக்கும். அவன் மட்டுமே தந்த்ராவைப் புரிந்துகொள்ள முடியும். யோகாவிடம் ஈர்ப்பு, சுலபமான ஈர்ப்பு உள்ளது, அதன் காரணம் நமது அலைமோதும் மனமே.

நினைவில் கொள், இறுதியில் உன் மனமே ஒன்றை வசீகரமுள்ளதாகவோ, வசீகரமற்றதாகவோ ஆக்குகிறது. ஆகவே உண்மையில், நீயே தீர்மானிக்கிறாய்.

இந்தப் பாதைகள் வேறுபட்டவை. நான் யோகா மூலமாக ஒருவன் அடைய முடியாது என்று சொல்லவில்லை. ஒருவன் யோகாவின் மூலமாகவும் அடைய முடியும், ஆனால் இப்போது நிலவிவரும் யோகா மூலமாக அல்ல. இப்போது நிலவிவருவது யோகா அல்ல, மாறாக உன் நோய்வாய்ப்பட்ட மனத்தின் விளக்கங்கள். இறுதி நிலையை அடைய யோகா கண்டிப்பாக ஒரு வழியாக இருக்க முடியும், ஆனால் அதற்கும் உன் மனம் ஆரோக்கியமாக இருந்தால் மட்டுமே முடியும், உன் மனம் நோய்வாய்ப்படாமல், வியாதியில்லாமல். அப்போது யோகா உனக்கு வேறு தோற்றத்தைக் கொடுக்கும்.

உதாரணமாக, மகாவீரர் யோகாவின் பாதையில் சென்றவர். ஆனால் அவர் உண்மையில் பாலுணர்வை அமுக்கவில்லை. அவர் அதை அறிந்துகொண்டார், அவர் அதை வாழ்ந்து பார்த்தார், அவர் அதனுடன் ஆழமாகச் சென்றார். ஆனால் அது அவருக்குப் பயனற்றதாக இருந்தது, ஆகவே அது விழுந்து விட்டது. கௌதம புத்தர் யோகாவின் பாதையில் சென்றவர். ஆனால் அவர் உலகத்தினிடையே வாழ்ந்து பார்த்தவர். அவர் அதனுடன் ஆழமாகச் சென்றவர். அவர் சண்டையிடவில்லை.

ஒருமுறை ஒன்றை நீ அறிந்துகொண்டுவிட்டால், நீ அதனிடமிருந்து விடுதலை அடைகிறாய். ஒரு மரத்திலிருந்து காய்ந்து போன இலைகள் உதிர்வது போல அது உதிர்ந்து

போகிறது. இது துறப்பது அல்ல, இங்கு இதில் எந்தச் சண்டையும் இல்லை. புத்தரின் முகத்தைப் பார் – அது ஒரு போர்வீரனின் முகத்தைப் போல இல்லை. அவர் சண்டை போடவில்லை. அவர் மிகவும் தளர்வுற்ற நிலையிலிருக்கிறார்; தளர்வு நிலைக்கே அவர் முகம் ஒரு அடையாளமாய் இருக்கிறது..... சண்டையில்லை.

உன் யோகிகளைப் பார். அவர் முகத்திலேயே சண்டை தெளிவாகத் தெரிகிறது. அடி ஆழத்தில் ஏகப்பட்ட குமுறல்கள் அங்குள்ளன – இப்போது அவர்கள் எரிமலைகளின் மேல் உட்கார்ந்திருக்கிறார்கள். நீ அவர்களின் கண்களைப் பார், முகத்தைப் பார், உன்னால் உணர முடியும். ஆழமாக அடியில் எங்கேயோ அவர்கள் தங்களின் நோய்களை எல்லாம் அமுக்கி வைத்திருக்கிறார்கள். அவர்கள் எதையும் தாண்டிச் செல்ல வில்லை.

ஒரு ஆரோக்கியமான உலகத்தில், எங்கு ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கையை ஆணித்தரமாக, தனிமனிதனாக, மற்றவரைக் காப்பியடிக்காமல், தங்கள் வாழ்வைத் தங்கள் வழியில் வாழ்கிறார்களோ அங்கு இரண்டுமே சாத்தியம். ஒருவன் ஆழமான நுண்ணுணர்வைக் கற்று அதன் மூலமே ஆசைகளைக் கடந்து செல்லலாம் அல்லது ஒருவன் அவனது எல்லா ஆசைகளுமே பயனற்றதாகி அவை உதிர்ந்துவிடும் நிலைக்கு வரலாம். எனவே யோகாவும் வழிநடத்திச் செல்லலாம், ஆனால் என்னைப் பொருத்தவரை தந்த்ரா வழிநடத்தக் கூடிய சாத்தியமுள்ள அதே உலகத்திலேயே யோகாவும் வழிகாட்ட முடியும் – இதை நினைவில் கொள். நமக்கு ஆரோக்கிய மனம், இயற்கையான மனிதன் வேண்டும். இயற்கையான மனிதன் இருக்கக்கூடிய அந்த உலகத்தில், தந்த்ரா, யோகா இரண்டுமே ஆசைகளைக் கடந்துசெல்ல வழிகாட்டும்.

நம் நோய்வாய்ப்பட்ட சமூகத்தில், இது யோகாவாலும் முடியாது, தந்த்ராவாலும் முடியாது. ஏனெனில் நாம்

யோகாவைத் தேர்ந்தெடுப்பதாக வைத்துக் கொண்டால், அதை நாம் நமது ஆசைகள் பயனற்றுப் போய்விட்டதால் தேர்ந் தெடுப்பதில்லை – கண்டிப்பாக இல்லை! அவைகளுக்கு இன்னும் அர்த்தமிருக்கிறது; அவைகள் தாமாகவே உதிர்ந்துவிட வில்லை. நாம் அவைகளைத் தள்ளவே வேண்டியுள்ளது. நாம் யோகாவைத் தேர்ந்தெடுத்தால், அதை நாம் ஒரு அடக்குதலுக் கான, அமுக்கி வைப்பதற்கான யுக்தியாகவே தேர்ந்தெடுக் கிறோம். நாம் தந்த்ராவைத் தேர்ந்தெடுத்தால், அதை நாம் ஒரு தந்திரமாக, ஒரு ஏமாற்றுதலுக்காக, ஈடுபடுவதற்கு ஒரு காரணம் காட்டவே தேர்ந்தெடுக்கிறோம்.

ஆகவே ஒரு ஆரோக்கியமற்ற மனத்திடம் யோகாவும் வேலை செய்ய முடியாது, தந்த்ராவும் வேலை செய்ய முடியாது. அவை இரண்டுமே ஏமாற்று வேலையில்தான் போய் முடியும். ஒரு ஆரோக்கியமான மனம், குறிப்பாகப் பாலுணர்வில் ஆரோக்கியமான மனம், எதையும் ஆரம்பிக்குமுன் தேவை. பின் உன் பாதையைத் தேர்ந்தெடுப்பது ஒன்றும் சிரமமல்ல. நீ யோகாவைத் தேர்ந்தெடுக்கலாம், நீ தந்த்ராவைத் தேர்ந் தெடுக்கலாம்.

அடிப்படையாக மனிதர்களில் இரண்டு வகை உள்ளனர்; ஆண், பெண். நான் உடல் ரீதியாக இதைச் சொல்லவில்லை, உளரீதியாக. அடிப்படையில் உளவியல் ரீதியாக ஆணாக உள்ளவர்களுக்கு – வேகம், வன்முறை, வெளியார்வம் – யோகாவே அவர்கள் பாதை. அடிப்படையில் பெண்ணுள்ளம் கொண்டவர்களுக்கு – உள்வாங்கிக் கொள்ளும், அமைதியான, வன்முறையற்ற – தந்த்ராவே இவர்கள் பாதை. இதைக் குறித்துக் கொள்ளுங்கள்: தந்த்ராவிற்குக் காளிமாதா, தாரா, பைரவிகள், மற்றும் பல தேவிகள் – பெண் தெய்வங்கள் – மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. யோகாவில் எந்தப் பெண் தெய்வமும் குறிப்பிடப்பட்டுள்ளதாக நீ கேள்விப்பட மாட்டாய். தந்த்ரா பெண் தெய்வங்கள் கொண்டது, யோகா ஆண் கடவுள் களைக் கொண்டது. யோகா வெளிச் செல்லும் சக்தி, தந்த்ரா

உள்முகமாகச் செல்லும் சக்தி. எனவே இன்றைய உளவியல் சொற்களில் குறிப்பிடுவதாயிருந்தால், யோகா வெளிமுகமானது, தந்த்ரா உள்முகமானது. ஆகவே உன் குணத்தைப் பொருத்ததே அது. நீ உள்முகமான குணம் கொண்டவனாயிருந்தால், சண்டை போடுவது உனக்கு ஆகாது. நீ வெளிமுகமானவனாய் இருந்தால், அப்போது சண்டை போடுவதே உனக்கானது.

ஆனால் நாம் வெறும் குழப்பத்திலிருக்கிறோம், நாம் முழுதும் கலைந்து கிடக்கிறோம், ஆகவேதான் எதுவும் உதவுவதில்லை. மாறாக எல்லாமே தொல்லை கொடுக்கின்றன. யோகா உன்னைத் தொந்தரவு செய்யும், தந்த்ரா உன்னைத் தொந்தரவு செய்யும். எல்லா மருந்துகளும் உனக்குப் புதிய நோயையே உருவாக்குவதாக இருக்கும். ஏனெனில் மருந்தைத் தேர்ந்தெடுப்பவர் நோயுள்ளவர், ஆரோக்கியமற்றவர். எனவே அவர் தேர்ந்தெடுத்ததின் பலனும் நோய் கொடுப்பதாகவே இருக்கும். ஆகவே நான் யோகாவின் மூலமாக நீ அடைய முடியாது என்று சொல்லவில்லை, நான் தந்த்ராவை வலியுறுத்திக் கூறுகிறேன். ஏனெனில் நாம் தந்த்ரா என்றால் என்ன என்று புரிந்துகொள்ள முயலப்போகிறோம். மற்றொரு கேள்வி :

❖ "சரணாகதிப் பாதையில், ஒரு ஆன்மசாதகன் இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளில் சரியான முறையை எப்படிக் கண்டுபிடிப்பது?"

வைராக்கியத்தின் பாதையில் பல முறைகள் உள்ளன – இந்த நூற்றுப் பன்னிரண்டு முறைகளும். சரணாகதிப் பாதையில், சரணாகதியடையும். அதுவேதான் முறை, வேறு எந்த முறையும் இல்லை. நினைவில் கொள். எல்லா முறைகளுமே சரணாகதி அடையாதவர்களுடையது, ஏனெனில் ஒரு முறை என்பதன் அர்த்தம் அது உன்னைச் சார்ந்தது. நீ ஏதாவது செய்ய முடியும், யுக்தி உள்ளது, நீ செய்து பார். சரணாகதிப் பாதையில் நீ அங்கு இனியும் இல்லை, ஆகவே நீ எதுவும் செய்ய முடியாது. நீ இறுதியானதை, முடிவானதை, செய்துவிட்டாய்; நீ சரணாகதி

அடைந்து விட்டாய். சரணாகதிப் பாதையில், சரணாகதி யடைவதே ஒரே முறை.

இந்த எல்லா நூற்றுப் பன்னிரண்டு முறைகளுக்கும் ஒரு குறிப்பிட்ட வைராக்கியம் வேண்டும்; அவற்றிற்கு நீ செய்யக் கூடிய சிலது வேண்டும். நீ உன் சக்தியைக் கொண்டு வருவது, நீ உன் சக்தியைச் சமநிலைப்படுத்துவது, நீ உன் குழப்பத்திற் கிடையே ஒரு மையத்தை உருவாக்குவது, இப்படி நீ ஏதாவது செய்கிறாய். உனது முயற்சி முக்கியம், அடிப்படை, தேவை. சரணாகதிப் பாதையில் ஒன்றே ஒன்றுதான் வேண்டும் – நீ சரணாகதியடைதல். நாம் இந்த நூற்றுப் பன்னிரண்டு முறைகளி னுள்ளும் ஆழமாகப் போகப் போகிறோம். ஆகவே சரணா கதியைப் பற்றிச் சிலவற்றைச் சொல்வது நல்லது. ஏனெனில் அதற்கு முறை கிடையாது.

இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளிலும் சரணாகதியைப் பற்றி எதுவும் கிடையாது. ஏன் சிவா சரணாகதியைப் பற்றி எதுவும் சொல்லவில்லை? ஏனெனில் எதுவும் சொல்ல முடியாது. பைரவி, தேவி, அவள் சிவாவை எந்த முறை மூலமும் அடையவில்லை. அவள் சரணாகதி அடைந்து விட்டாள். இதைக் கவனமாகக் குறித்துக் கொள்ளுங்கள். இந்தக் கேள்விகளை அவள் அவளுக்காகக் கேட்கவில்லை, இந்தக் கேள்விகள் மனிதகுலம் முழுமைக்குமாகக் கேட்கப்படுகிறது. அவள் சிவாவை அடைந்துவிட்டாள். அவள் ஏற்கனவே சிவாவின் தொடையில் உட்கார்ந்திருக்கிறாள், அவள் ஏற்கனவே அவனைத் தழுவிக்கொண்டு விட்டாள். அவள் அவனோடு ஒன்றாகி விட்டாள், ஆனாலும் அவள் கேட்கிறாள்.

ஆகவே ஒன்றை நினைவில் வை : அவள் அவளுக்காகக் கேட்கவில்லை, அதற்குத் தேவையில்லை. அவள் மனித குலம் முழுவதற்குமாகவே கேட்கிறாள்.

அவளே அடைந்துவிட்டாள் என்றால், ஏன் அவள் சிவனைக் கேட்க வேண்டும்? அவள் தானே மனிதகுலத்திடம்

சொல்ல முடியாதா? அவள் சரணாகதிப் பாதையின் மூலம் வந்தவள். ஆகவே அவளுக்கு முறைகளைப் பற்றி எதுவும் தெரியாது. அவள் அன்பின் மூலமாக வந்தடைந்தவள், அன்பு தனக்குத் தானே போதுமானது, அன்பிற்கு வேறு எதுவும் தேவை யில்லை. அவள் அன்பின் மூலமாக வந்தவள். ஆகவே அவளுக்கு எந்த யுக்தி, முறை பற்றியும் எதுவும் தெரியாது. அதனால்தான் அவள் கேட்கிறாள்.

சிவா நூற்றிப் பன்னிரண்டு முறைகளையும் விவரிக்கிறார். அவரும் சரணாகதியைப் பற்றிப் பேச மாட்டார். ஏனெனில் சரணாகதி உண்மையில் ஒரு முறையே அல்ல. எல்லா முறைகளும் பயனற்றுப் போன பின்பே, நீ எந்த முறையின் மூலமாகவும் அடைய முடியாது போன பின்பே, நீ சரணாகதி அடைகிறாய். நீ உன்னால் முடிந்த அளவு முயற்சித்துப் பார்த்து விட்டாய். நீ எல்லாக் கதவுகளையும் தட்டிவிட்டாய். ஆனால் ஒரு கதவும் திறக்கவில்லை, நீ எல்லாப் பாதைகளிலும் பயணித்து விட்டாய். ஆனால் எந்தப் பாதையும் போய்ச் சேரவில்லை. நீ உன்னால் என்னென்ன முடியுமோ செய்து பார்த்துவிட்டாய், இப்போது நீ நிராதரவாக உணர்கிறாய். இந்த முழு நிராதரவான நிலையில் சரணாகதி ஏற்படுகிறது. ஆகவே சரணாகதிப் பாதையில் எந்த முறையும் இல்லை.

ஆனால் சரணாகதி என்பது என்ன? அது எப்படி வேலை செய்கிறது? மேலும் சரணாகதி வேலை செய்கிறது என்றால், நூற்றிப் பன்னிரண்டு முறைகளுக்கும் என்ன தேவை? எதற்கு அவற்றுள் தேவையில்லாமல் நுழைய வேண்டும்? – மனம் கேட்கும். சரி! சரணாகதி வேலை செய்கிறதென்றால், சரணாகதி அடைந்துவிடுவதே சிறந்தது. எதற்காக முறைகளின் பின்னால் தேடிப் போக வேண்டும்? மேலும் அதில் யாருக்குத் தெரியும் எந்த முறை உனக்குப் பொருந்தும் அல்லது பொருந்தாது என்று? அதைக் கண்டுபிடிக்க பல பிறவிகள் ஆகலாம். ஆகவே சரணாகதி அடைவதே நல்லது. ஆனால் அது கடினம். சரணாகதியே இந்த உலகத்தில் மிகவும் கடினமான காரியம்.

முறைகள் கடினமானவை அல்ல. அவை சுலபமானவை, நீ உனக்குப் பயிற்சி கொடுத்துக் கொள்ளலாம். ஆனால் சரணா கதிக்கு நீ உனக்குப் பயிற்சி கொடுத்துக்கொள்ள முடியாது... பயிற்சி சாத்தியமில்லை! நீ, எப்படிச் சரணடைவது என்று கேட்க முடியாது; அந்தக் கேள்வியே அபத்தம். சரணாகதி அடைவது எப்படி என்று நீ எப்படிக் கேட்க முடியும்? எப்படி நேசிப்பது என்று உன்னால் கேட்க முடியுமா?

ஒன்று, அன்பு இருக்கிறது அல்லது அது இல்லை. ஆனால் நீ நேசிப்பது எப்படி என்று கேட்க முடியாது. மேலும், யாராவது நேசிப்பது எப்படி என்று உனக்குச் சொல்லியோ, கற்றோ தருவார்களானால், நினைவில் வை, நீ ஒருபோதும் நேசிக்க முடியாது. ஒருமுறை ஒரு யுக்தியை உனக்கு அன்பு செய்வதற்குக் கொடுத்துவிட்டால், நீ அந்த யுக்தியையே பிடித்துக் கொள்வாய். ஆகவேதான் நடிப்பவர்களால் நேசிக்க முடியாது. அவர்களுக்கு ஏராளமான முறைகள், ஏராளமான யுக்திகள் தெரியும் – அதோடு நாமெல்லோரும் நடிப்பவர்களே. ஒருமுறை உனக்கு நேசிப்பது எப்படி என்ற தந்திரம் தெரிந்துவிட்டால், பிறகு நேசம் மலரவே மலராது. ஏனெனில் நீ ஒரு தவறானதை, ஏமாற்றை உருவாக்க முடியும். அப்படிப் பொய்யானதில் நீ அதைவிட்டு வெளியே இருக்கிறாய், சம்பந்தப்படுவதில்லை. ஆகவே நீ பாதுகாப்பாய் இருக்கிறாய்.

நேசம் உன்னை முழுவதுமாகத் திறப்பது, அரணில்லாதது. இது ஆபத்தானது, நீ பாதுகாப்பற்றுப் போகிறாய். நாம் எப்படி நேசிப்பது என்று கேட்க முடியாது, நாம் எப்படிச் சரணடைவது என்று கேட்க முடியாது. அது நிகழ்கிறது! நேசம் நிகழ்கிறது, சரணாகதி நிகழ்கிறது – நேசமும் சரணாகதியும் ஆழமாக ஒன்றே. ஆனால் அது என்ன? நம்மால் சரணாகதி எப்படி அடைவது என்று அறிந்துகொள்ள முடியாவிட்டாலும், நாம் நம்மை எப்படிப் பாதுகாத்துக் கொள்கிறோம், நாம் நம்மை எப்படிச் சரணடையாமல் தடுத்துக் கொள்கிறோம், என்றாவது நாம்

அறிந்து கொள்ளலாம். இது அறியக் கூடியதே. மேலும் இது உதவக்கூடியதும் ஆகும்.

நீ எப்படி இன்னும் சரணாகதி அடையாமல் இருக்கிறாய்? சரணாகதி அடையாமலிருக்க உன் யுக்தி என்ன? நீ இதுவரை நேசத்தில் விழவில்லையென்றால், உண்மைப் பிரச்சனை எப்படி நேசிப்பது என்பதல்ல. உண்மைப் பிரச்சனை என்னவென்றால் நீ எப்படி நேசிக்காமலேயே வாழ்ந்து வருகிறாய், உன் தந்திரம் என்ன, உன் யுக்தி என்ன, உன் கட்டமைப்பு என்ன – உன் தற்காப்புக் கட்டமைப்பு, எப்படி நீ அன்பில்லாமல் வாழ்ந்து வருகிறாய் – இதைப் புரிந்துகொள்ள முடியும், மேலும் இதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

முதல் விஷயம் : நாம் ஆணவத்தோடு வாழ்கிறோம். ஆணவத்தால், ஆணவத்தில் மையம் கொண்டு வாழ்கிறோம். நானாக, நான் யார் என்று தெரியாமலேயே. நான் ஆர்ப்பரித்துக் கொண்டே போகிறேன், ''எனது நானை'' இந்த ''நான் ஆகி இருப்பது'' ஒரு பொய். ஏனெனில் எனக்கு நான் யார் என்றே தெரியாது. எனக்கு நான் யார் என்று தெரியாமலே எப்படி நான் ''நானாக'' முடியும்? இந்த ''நான்'' ஒரு பொய்யான ''நான்''. இந்தத் தவறான ''நான்'' என்பதுதான் ஆணவம். இதுவே தற்காப்பு. இதுவே உன்னைச் சரணாகதி அடைவதிலிருந்து பாதுகாக்கிறது.

நீ சரணாகதி அடைய முடியாது, ஆனால் நீ இந்தத் தற்காப்பு நடவடிக்கையைப் பற்றிய விழிப்புணர்வு கொள்ள லாம். நீ அதைப் பற்றிய முழு விழிப்புணர்வு அடையும்போது, அது கரைந்து போய்விடுகிறது. அதற்கு வலிமை சேர்க்காமல், கொஞ்சம் கொஞ்சமாக விழிப்புணர்வடைகையில், ஒரு நாள் நீ உணர்வாய், ''நான் இல்லை''. நீ ''நான் இல்லை'' என்று உணரும் கணத்திலேயே சரணாகதி நிகழ்கிறது. ஆகவே நீ இருக்கிறாயோ என்பதைக் கண்டுபிடிக்க முயற்சி செய். உண்மையில், இது ''நான்'' என்று அழைக்கக்கூடிய ஏதாவது ஒரு

மையம் உன்னிடம் இருக்கிறதா? உன்னுள் ஆழமாகப் போ, இந்த ''நான்'' என்பது எங்கிருக்கிறது என்பதைத் தேடிக் கண்டு பிடிக்க முயற்சி செய், இந்த ஆணவத்தின் வசிப்பிடம் எங்கே.

ரின்சாய் தனது குருவிடம் சென்று கேட்டார், ''எனக்கு விடுதலையைக் கொடுங்கள்!''

குரு சொன்னார், ''உன்னைக் கொண்டுவா. நீ இருந்தால், உனக்கு நான் விடுதலை தருகிறேன். ஆனால் நீயே இல்லை என்றால், பின் எப்படி நான் உன்னை விடுவிக்க முடியும்? நீ ஏற்கனவே சுதந்திரமானவன், சுதந்திரமுள்ளவன்.'' அவனது குரு சொன்னார், ''உண்மையில் அது நீ சுதந்திரம் பெறுவதில்லை, சுதந்திரம் என்பதே ''உன்''னிடமிருந்து சுதந்திரம் தான். ஆகவே போ, இந்த ''நான்'' எங்கே என்று கண்டுபிடி, நீ எங்கே என்று கண்டுபிடி, பின் என்னிடம் வா. இதுதான் தியானம். போய் தியானி.''

சிஷ்யன் ரின்சாய் சென்று வாரங்கள், மாதங்கள் தியானித்து விட்டுத் திரும்பி வந்தார். வந்து சொன்னார், ''நான் இந்த உடம்பல்ல, இந்தவரை மட்டுமே என்னால் கண்டுபிடிக்க முடிந்தது.'' குரு சொன்னார், ''இந்த அளவு நீ சுதந்திரமாகி விட்டாய். திரும்பப் போ. கண்டுபிடிக்க முயற்சி செய்.''

திரும்பவும் முயற்சித்தார், தியானித்தார், பின் கண்டு பிடித்தார், ''நான் என் மனமல்ல, ஏனெனில் என்னால் எண்ணங்களைப் பார்க்க முடிகிறது. பார்ப்பவன் கண்டிப்பாகப் பார்க்கப்படுவதைவிட வேறுபட்டவன் – நான் என் மனமல்ல.'' அவர் வந்து சொன்னார், ''நான் என் மனமல்ல.''

குரு சொன்னார், ''இப்போது நீ முக்கால் பாகம் விடுதலை பெற்றுவிட்டாய். இப்போது மறுபடியும் போய் நீ யார் என்பதைக் கண்டுபிடி.''

ரின்சாய் சிந்தித்தார், ''நான் என் உடம்பல்ல, நான் என் மனமல்ல.'' அவர் நன்கு படித்தவர், கற்றவர், நன்றாகச்

சொல்லிக் கொடுக்கப்பட்டவர். ஆகவே அவர் யோசித்தார், ''நான் என் உடம்பல்ல, நான் என் மனமல்ல, அப்படியானால் நான் என் ஆன்மா தான்.'' ஆனாலும் அவர் தியானித்தார். அதன் மூலம் அவர் ஆன்மா என்று ஒன்றும் இல்லை என்பதைக் கண்டு பிடித்தார். ஏனெனில் ஆன்மா என்பது வெறும் உன் மூளையிலுள்ள தகவல்களே தவிர வேறொன்றும் அல்ல – வெறும் கோட்பாடுகள், வார்த்தைகள், தத்துவங்கள்.

ஆகவே ஒருநாள் அவர் ஓடிவந்து சொன்னார், ''இப்போது நான் இல்லாமல் போய்விட்டேன்.''

குரு கேட்டார், ''இப்போது நான் உனக்கு விடுதலை யடையும் மார்க்கங்களைச் சொல்லித் தர வேண்டுமா?''

ரின்சாய் சொன்னார், ''நான் சுதந்திரமடைந்து விட்டேன். ஏனெனில் நான் இல்லாமல் போய்விட்டேன். பந்தத்தில் சிக்கிக் கொள்ள அங்கு ஒருவரும் இல்லை. நான் ஒரு வெறும் வெற்றிடம், ஒன்றுமில்லாமை.''

ஒன்றுமில்லாமை ஒன்றே விடுதலை அடைய முடியும். நீ ஏதாவது ஒன்றாயிருந்தால், நீ பந்தத்தில் இருப்பாய். நீ இருந்தால், நீ பந்தத்திலேயே இருப்பாய். வெறும் இடம், வெட்ட வெளி, சுதந்திரமடைய முடியும். பின் அதை நீ கட்ட முடியாது. ரின்சாய் ஓடிவந்து சொன்னார், ''நான் இல்லாமல் போய்விட்டேன். எங்கும் என்னைக் கண்டுபிடிக்க முடிய வில்லை.'' இதுதான் சுதந்திரம். முதல் தடவையாக அவர் குருவின் பாதங்களை வணங்கினார் – முதல் தடவையாக! உண்மையில் முதல் தடவையாக அல்ல, ஏனெனில் இதற்கு முன்னும் பல தடவை குருவின் பாதங்களை வணங்கியுள்ளார். ஆனால் குரு சொன்னார், ''முதல் தடவையாக நீ என் பாதங்களை வணங்குகிறாய்.''

ரின்சாய் கேட்டார், ''ஏன் முதல் தடவை என்று சொல்கிறீர்கள்? நான் பலமுறை உங்கள் பாதங்களை வணங்கி யுள்ளேன்.'' குரு சொன்னார், ''ஆனால் நீ அங்கு இருந்தாய்,

ஆகவே நீ ஏற்கனவே அங்கு இருக்கையில் எப்படி நீ என் பாதங்களை வணங்க முடியும்? நீ அங்கு இருக்கும்போது எப்படி நீ என் பாதத்தை வணங்குவாய்?''

''நான்'' ஒருபோதும் எவருடைய பாதத்தையும் தொட முடியாது. பார்வைக்கு அது யாரோ ஒருவருடைய பாதங்களை வணங்குவதாகத் தோற்றமளித்தாலும், அது அதனுடைய பாதங் களையே வணங்கிக் கொள்கிறது, ஒரு சுற்று வழியில். ''முதல் தடவையாக நீ என் பாதங்களை வணங்கியுள்ளாய்'' குரு மேலும் சொன்னார், ''ஏனெனில் இப்போது நீ இல்லாமல் போய் விட்டாய். அதோடு இதுவே கடைசி முறையும் ஆகும்.'' குரு சொன்னார், ''இதுவே முதலும் கடைசியும்.''

சரணாகதி நீ இல்லாத பொழுதே நிகழ்கிறது. ஆகவே 'நீ' சரணாகதி அடைய முடியாது. அதனால்தான் சரணாகதி ஒரு யுக்தியாக ஆக முடியாது. நீ சரணாகதி அடைய முடியாது – நீதான் தடையே. நீ அங்கு இல்லையானால், அங்குச் சரணாகதி இருக்கிறது. ஆகவே நீயும் சரணாகதியும் சேர்ந்து இருக்க முடியாது. உனக்கும் சரணாகதிக்கும் நடுவில் சேர்ந்து வாழும் சாத்தியம் இல்லை. ஒன்று நீ இருக்கிறாய் அல்லது சரணாகதி இருக்கிறது. ஆகவே நீ எங்கே இருக்கிறாய், நீ யார் என்று கண்டு பிடி. இந்தத் தேடல் பலபல ஆச்சரியமான விடைகளைக் கொண்டுவரும்.

ரமண மகரிஷி எப்போதும் சொல்வார், ''உள்ளே தேடு, நான் யார்? என்று.'' இது தவறாகப் புரிந்துகொள்ளப் பட்டுள்ளது. அவருடைய நெருங்கிய சிஷ்யர்கள் கூட இதன் அர்த்தத்தைப் புரிந்து கொள்ளவில்லை. அவர்கள் இது உண்மை யிலேயே ''நான் யார்?'' என்பதைக் கண்டுபிடித்துக் கொள்ள உதவும் தேடல் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படியல்ல அது! ''நான் யார்?'' என்று நீ தொடர்ந்து உள்ளே தேடப்போனால், 'நான் என்பதேயில்லை' என்ற முடிவுக்கே நீ வந்தாக வேண்டும். இந்தத் தேடல் உண்மையில் ''நான் யார்?''

என்று கண்டுபிடிப்பதற்காக இல்லை. உண்மையில் இந்தத் தேடல் கரைந்து விடுவதற்காக.

நான் இந்த யுக்தியைப் பல பேருக்குக் கொடுத்திருக் கிறேன், ''நான் யார்?'' என்று உள்ளே தேடுங்கள். ஒரு மாதம், இரண்டு மாதம் கழித்து, அவர்கள் என்னிடம் வந்து சொல்வார்கள், ''இன்னும் நான் கண்டுபிடிக்கவில்லை ''நான் யார்?'' என்பதை. கேள்வி இன்னும் அதுவேதான்; பதில்தான் அங்கில்லை.''

நான் சொல்வேன், ''தொடருங்கள் தேடலை. என்றாவது ஒரு நாள் பதில் கிடைக்கும்.'' அவர்களும் பதில் கிடைக்கும் என்று நம்பிச் செல்வார்கள். ஆனால் பதில் எதுவும் கிடைக்கப் போவதில்லை. அதற்குப் பதிலாக, கேள்வியே கரைந்து போய் விடும். ''நீ இதுதான்'' என்று ஒரு பதில் அங்கு வரப் போவதில்லை. கேள்வி கரைந்து போவதே நிகழும். ''நான் யார்?'' என்று கேட்பதற்குக் கூட ஒருவரும் அங்கு இல்லாமல் போய்விடுவர். அப்போது நீ அறிந்து கொள்வாய்.

''நான்'' என்பது இல்லாதபோது, உண்மையான ''நான்'' வெளிப்படுகிறது. ஆணவமற்ற நிலையில், நீ முதன்முறையாக உன் ஜீவிதத்தை, இருப்பைச் சந்திக்கிறாய். இந்த ஜீவிதம், இருப்பு எதுவுமில்லாதது. இப்போது நீ சரணாகதி அடையலாம், இப்போது நீ சரணாகதி அடைந்தவன்தான், இப்போது நீ சரணாகதியே தான். ஆகவே எந்த யுக்தியும் சாத்தியமில்லை, அல்லது எதிர்மறையான, ''நான் யார்'' என்று தேடு என்பது போன்ற யுக்தியே சாத்தியம்.

சரணாகதி எப்படி வேலை செய்கிறது? நீ சரணாகதி யடைந்தால் என்ன நிகழ்கிறது? நாம் முறைகள் எப்படி வேலை செய்கின்றன என்று புரிந்துகொள்ளப் போகிறோம். நாம் முறை களினுள் ஆழமாகச் சென்று, அது எப்படி வேலை செய்கிறது என்பதை அறிந்துகொள்ளப் போகிறோம். அவைகளுடைய செயல்பாட்டில் ஒரு விஞ்ஞான அடிப்படை உள்ளது.

நீ சரணாகதியடைகையில் நீ ஒரு பள்ளத்தாக்காக ஆகிறாய்; நீ ஆணவத்திலிருக்கும் போது நீ ஒரு சிகரத்தைப் போலாகிறாய். ஆணவம் என்றால் நீ மற்றவர்களைவிட உயர்ந்தவன், நீ ஒரு குறிப்பிடத்தக்கவன். மற்றவர்கள் உன்னை அங்கிகரிக்கலாம், அங்கிகரிக்காமல் போகலாம் – அது வேறு விஷயம். நீ உன்னை மற்றவரை விட உயர்வாக அங்கிகரித்துக் கொண்டுள்ளாய். நீ ஒரு சிகரத்தைப் போல; எதுவும் உனக்குள் நுழைய முடியாது.

ஒருவன் சரணாகதியடையும்போது, ஒருவன் பள்ளத் தாக்கைப் போல ஆகிவிடுகிறான். ஒருவன் ஆழமடைகிறான், ஆனால் உயர்வதில்லை. அப்போது இந்த முழுப் பிரபஞ்ச இருப்பும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் அவனுள் பாய ஆரம்பிக்கிறது. அவன் ஒரு வெறும் வெற்றிடம், வெறும் ஆழம், அடிமுடியில்லாத குழி. முழுப் பிரபஞ்சமும் எல்லா இடத்தி லிருந்தும் கொட்ட ஆரம்பிக்கிறது. கடவுள் அவனை நோக்கி எல்லா இடத்திலிருந்தும் ஓடி வருகிறார், எல்லா உயிர்களி லிருந்தும் அவனுள் புகுகிறார், அவனை நிறைக்கிறார் என்று நீ சொல்லலாம்.

இந்தச் சரணாகதி, இப்படிப் பள்ளத்தாக்காக மாறுதல், அடிமுடியில்லாத ஆழமாதல், பல வகைகளில் உணரப்படக் கூடும். சிறிய அளவிலான சரணாகதிகள் உள்ளன, பெரிய அளவிலான சரணாகதிகள் உள்ளன. சிறிய அளவிலான சரணாகதி களிலும் கூட நீ அதை உணர முடியும். ஒரு குருவிடம் சரணாகதி யடைவது சிறிய அளவிலான சரணாகதி. ஆனாலும் நீ அதை உடனே உணர்வாய். ஏனெனில் குரு உடனே உன்னிடம் பாய ஆரம்பிக்கிறார். நீ ஒரு குருவிடம் சரணடைந்தால், உடனே அவருடைய சக்தி உன்னில் ஓடுவதை நீ உணர முடியும். சக்தி உன்னில் பாய்வதை உன்னால் உணரமுடியவில்லையென்றால், அப்போது, சிறிய அளவில் கூட நீ சரணாகதி அடையவில்லை என்பதை நீ நன்றாக அறிவாய்.

நமக்கு அர்த்தமற்றவை ஆகிவிட்ட பல கதைகள் உள்ளன. ஏனெனில் அவை எப்படி நடந்தன என்று நமக்குத் தெரிய

வில்லை. 'மகாகாசிபா' புத்தரிடம் வந்தார், புத்தர் அவருடைய தலையைத் தன் கரங்களால் தொட்டார், உடனே அது நடந்தது. மகாகாசிபா ஆடத் தொடங்கி விட்டார். ஆனந்தா புத்தரிடம் கேட்டார், ''அவனுக்கு என்ன நடந்தது? நான் உன்னோடு நாற்பது வருடமாக இருந்து வருகிறேன்! அவனுக்கென்ன பயித்தியமா? அல்லது மற்றவர்களை மடையனாக்கப் பார்க்கிறானா? அவனுக்கு என்ன நிகழ்ந்தது? நான் உனது பாதங்களை ஆயிரம் ஆயிரம் முறைகள் வணங்கியிருக்கிறேன்.''

ஆனந்தாவைப் பொருத்தவரை, இந்த மகாகாசிபா ஒன்று பயித்தியம் அல்லது அவன் ஏமாற்றப் பார்க்கிறான் என்றுதான் தோன்றும். ஆனந்தா புத்தருடன் நாற்பது வருடமாக இருக்கிறான், ஆனால் ஒரு பிரச்சனை. ஆனந்தா புத்தருடைய மூத்த சகோதரன், அவருடைய அண்ணன், அது தான் பிரச்சனை. நாற்பது வருடங்களுக்கு முன்பு ஆனந்தா புத்தரிடம் வந்தபோது, அவர் புத்தரிடம் முதலில் சொன்னது இதுதான்: ''நான் உன் மூத்த சகோதரன். ஆனால் உன் உபதேசத்தைப் பெற்றுக்கொண்ட பிறகு நான் உன்னுடைய சிஷ்யன் ஆகிவிடுவேன். ஆகவே உன் சிஷ்யனாவதற்கு முன் எனக்கு மூன்று விஷயங்கள் நீ கொடுக்க வேண்டும். ஏனெனில் அதன்பின் நான் கேட்க முடியாது. ஒன்று, நான் எப்போதும் உன்னுடன் இருப்பேன். இந்த உறுதி மொழியைக் கொடு, அதாவது நீ ஒருபோதும் என்னிடம் 'வேறு எங்காவது போ' என்று சொல்லக் கூடாது. நான் உன்னைப் பின்பற்றிக் கொண்டேதான் இருப்பேன்.

''இரண்டாவது, நீ உறங்கும் அதே அறையில்தான் நானும் உறங்குவேன். நீ என்னிடம் 'வெளியே போ' என்று சொல்லக் கூடாது. நான் உன் நிழல்போல உன்னுடனேயே இருப்பேன். மூன்றாவது, நான் யாரையாவது எந்த நேரத்தில் கூட்டி வந்தாலும், நடுநிசியில் கூட, நீ அவர்களுக்குப் பதில் சொல்ல வேண்டும். நீ, 'இது அதற்கான நேரமல்ல' என்று சொல்லக் கூடாது. இந்த மூன்று உறுதிமொழிகளையும் இன்னும் நான் உன் மூத்த சகோதரனாக இருக்கையிலேயே கொடு, ஏனெனில் உன்

சிஷ்யனாக மாறிவிட்ட பிறகு நான் நீ சொல்வதையே கடைபிடிக்க வேண்டும். இப்போதுவரை நீ என்னைவிட இளையவன், ஆகவே இந்த உறுதிமொழிகளை எனக்குக் கொடு.''

இப்படியாக புத்தர் வாக்குக் கொடுத்தார், இதுவே பிரச்சனையாகிவிட்டது. நாற்பது வருடமாக ஆனந்தா புத்தருடனேயே இருக்கிறார். ஆனாலும் சரணாகதி அடைய முடியவில்லை. ஏனெனில் சரணாகதி அடையும் வழியல்ல இது.

ஆனந்தா பலப்பல முறைகள் கேட்டிருக்கிறார், ''எப்போது நான் அடையப் போகிறேன்?''

புத்தர் சொன்னார், ''நான் இறந்தாலொழிய, நீ அடைய முடியாது.''

அது போலவே ஆனந்தா புத்தர் இறந்த பின்பே அடைய முடிகிறது.

இந்த மகாகாசிபாவிற்குத் திடீரென்று என்ன நிகழ்ந்தது? புத்தர் எல்லோரிடமும் ஒன்றுபோல இல்லையா? - மகா காசிபருக்கு மட்டும் அனுகூலம் செய்கிறாரா? அவர் அப்படி இல்லை. அவர் ஊற்று, வற்றாத ஊற்று. ஆனால் நீ ஒரு பள்ளத்தாக்காக, ஒரு கருப்பையாக இருந்தால்தான் வாங்கிக் கொள்ள முடியும். நீ அவரை விட உயரத்தில் இருந்தால் எப்படிப் பெற முடியும்? அந்தப் பொங்கிப் பெருகும் சக்தி உன்னிடம் வரமுடியாது, அது உன்னை விட்டுவிடும். ஆகவே குனியுங்கள். குருவிடம் ஒரு சிறிய அளவிலான சரணாகதியில் கூட, சக்தி பிரவாகிக்கும். திடீரென்று, உடனடியாக, நீ மாபெரும் சக்தியின் வாகனமாகி விடுவாய்.

ஆயிரம் ஆயிரம் கதைகள் உள்ளன..... வெறும் தொடுதலால், வெறும் பார்வையால், ஒருவன் ஞானமடைந்திருக்கிறான். அவை நமக்குப் பொருத்தமாகப் படுவதில்லை. எப்படி இது சாத்தியம்? இது சாத்தியமா! குரு ஒரு பார்வை உன் கண்களுக்குள் பார்ப்பதே உன் முழு ஜீவிதத்தையும்,

இருப்பையும் மாற்றிவிடக் கூடியது. ஆனால் உன் கண்கள் வெறுமையாகவும், பள்ளத்தாக்கு போலவும் இருந்தால் மட்டுமே அப்படி மாற்ற முடியும். உன்னால் குருவின் பார்வையைப் பெற்றுக்கொள்ள முடிந்தால், நீ உடனே மாறி விடுவாய், ஆகவே இது போன்ற சிறிய அளவிலான சரணாகதிகள், நீ உன் முழுமையான சரணாகதிக்கு முன் நிகழும். இந்தச் சிறிய அளவிலான சரணாகதிகள் உள்ளன. முழுச் சரணாகதிக்குத் தயார் செய்யும். ஒரே ஒருமுறை சரணாகதியின் மூலமாக, இதுவரை அறியாத ஒன்றை, நம்ப முடியாத ஒன்றை, எதிர்பாராத ஒன்றை, கனவிலும் எதிர்பார்க்க முடியாத ஒன்றை நீ பெறுவதை நீயே உணரும்போது, அப்போது நீ பெரிய அளவிலான சரணாகதிக்குத் தயாராவாய். இதுதான் குருவின் வேலை - உன் சிறிய அளவிலான சரணாகதியில் உனக்கு உதவுவதன் மூலம் நீ பெரிய அளவிலான சரணாகதியை, முழுமையான சரணாகதியை அடைய தைரியம் பெற முடியும்.

**ஒரு கடைசிக் கேள்வி!**

---

❖ *ஒருவர் கடைபிடிக்கும் ஒரு குறிப்பிட்ட யுக்தி முடிவான நிலைக்கு அவரை இட்டுச் செல்லும் என்பதை மிகச்சரியாகக் குறிப்பிட்டுக் காட்டுபவை எவை?*

---

அப்படிக் குறிப்பிட்டுக் காட்டுபவை உள்ளன. ஒன்று, நீ உனக்குள் ஒரு வேறுபட்ட அடையாளத்தை உணர்வாய். நீ பழைய ஆள் அல்ல. ஒரு யுக்தி உனக்குப் பொருந்தினால், உடனே நீ வேறு ஆளாகிவிடுவாய். நீ ஒரு கணவனானால், நீ இனியும் அதே கணவன் அல்ல. நீ ஒரு கடைக்காரன் என்றால், நீ இனியும் அதே கடைக்காரன் அல்ல. நீ எதாயிருந்தாலும், ஒரு யுக்தி உனக்குப் பொருந்திவிட்டால், நீ இனியும் அதே ஆள் அல்ல; இது முதல் குறி. ஆகவே நீ ஏதோ புதிதாக உன்னிடம் உணர ஆரம்பித்தால், ஏதோ உனக்கு நிகழ்கிறது என்பதை அறிந்துகொள். நீ தொடர்ந்து பழையபடி, எதையும் புதிதாக உணரவில்லையென்றால், ஒன்றும் நடக்கவில்லை. இதுதான் ஒரு

யுக்தி உனக்குப் பொருந்துகிறதா என்பதற்கு முதல் அடையாளம். அது பொருந்தினால், உடனே நீ மாற்றம் செய்யப்படுவாய், ஒரு வேறுபட்ட மனிதனாக மாற்றப்படுவாய். திடீரென்று இது நடக்கும் : நீ உலகத்தை வேறு மாதிரியாகப் பார்ப்பாய். கண்கள் அதே தான். ஆனால் அவற்றின் பின்னால் இருக்கும் ஆள் வேறு.

இரண்டாவது, இறுக்கம், பதட்டம், குழப்பம் ஆகிய இவற்றை ஏற்படுத்துபவையெல்லாம் உதிர ஆரம்பிக்கும். இந்த முறையை வருடக் கணக்கில் கடைபிடித்தபின், அதன் பிறகு உன் முரண்பாடுகள், பதட்டங்கள், இறுக்கங்கள் உதிர்வதல்ல இது – அப்படியல்ல! முறை உனக்கும் பொருந்தினால், உடனே அவை உதிர ஆரம்பிக்கும். ஒரு துள்ளல், துடிப்பு உன்னிடம் வந்திருப்பதை நீ உணரலாம், உன் சுமை இறங்கியுள்ளது. முறை உனக்குப் பொருந்தினால், புவிசர்ப்புத்தன்மை தலைகீழாகி விட்டதைப்போல, நீ உணர ஆரம்பிப்பாய். அப்போது பூமி உன்னைக் கீழ்நோக்கி இழுக்காது. பதிலாக ஆகாயம் உன்னை மேல் நோக்கி இழுக்கும். ஒரு விமானம் புறப்படும்போது நீ எப்படி உணர்வாய்? எல்லாம் பாதிக்கப்படும். திடீரென்று ஒரு குதி, பின் புவிசர்ப்பு அர்த்தமில்லாததாக ஆகிவிடுகிறது. இப்போது பூமி உன்னைக் கீழே இழுப்பதில்லை, நீ புவி ஈர்ப்பிலிருந்து விலகிப் போய்க்கொண்டிருக்கிறாய்.

இதே குதி நிகழும், ஒரு தியான முறை உனக்குப் பொருந்தும்போது. திடீரென்று நீ மேலெழுந்து விடுகிறாய். திடீரென்று நீ பூமி அர்த்தமற்றதாகி விட்டதுபோல உணர்கிறாய்; புவிசர்ப்பு இப்போது இல்லை. அது உன்னைக் கீழே இழுக்கவில்லை, நீ மேல்நோக்கி இழுக்கப்படுவாய். மதத்தின் சொற்களில் இதற்குப் பெயர் ''அருள்.'' இரண்டு சக்திகள் உள்ளன – புவிசர்ப்பு, அருள். அருள் என்பதன் அர்த்தம் நீ மேல் நோக்கி இழுக்கப்படுவது; ஈர்ப்புவிசை என்பதன் பொருள் நீ கீழ் நோக்கி இழுக்கப்படுவது.

அதனால்தான் பலர் தியானிக்கும்பொழுது திடீரென்று அவர்களுக்கு எடையில்லாததைப்போல உணர்கின்றனர்.

அதனால் தான் பலர் உள்ளே மேல்ஈர்ப்பை உணர்கின்றனர். ஒரு யுக்தி பொருந்தும்போது பலரும் என்னிடம் சொல்லியுள்ளனர் : ''இது புதுமை! நாங்கள் கண்ணை மூடியதும், நாங்கள் பூமிக்குச் சிறிதே மேலே இருப்பதாக உணர்கிறோம் – ஒரு அடி, இரண்டு அடி, பூமிக்கு நான்கு அடி மேலே கூட. ஆனால் நாங்கள் கண்களைத் திறந்து பார்த்தால் நாங்கள் தரையிலேயே இருக்கிறோம்; நாங்கள் கண்களை மூடியிருந்தபோது நாங்கள் மேலே ஈர்க்கப்பட்டிருந்தோம். இது என்ன? நாங்கள் கண்களைத் திறந்தபொழுது நாங்கள் தரையின் மீதே இருந்தோம்! நாங்கள் ஒருபோதும் மேலே ஈர்க்கப்படவில்லை.''

உடல் தரையிலேயே தொடர்ந்து இருக்கிறது, ஆனால் நீ மேலே ஈர்க்கப்படுகிறாய். இது மேலீர்ப்பு என்பது உண்மையில் மேலேயிருந்து இழுக்கும் ஒரு விசைதான். ஒரு யுக்தி பொருந்தும் பொழுது நீ மேலே இழுக்கப்படுகிறாய். ஏனெனில் யுக்தி வேலை செய்யும் விதமே உன்னை மேல்நோக்கிய விசைக்கு உரித்தாக்குவதே. இதுவே யுக்தியின் அர்த்தம் : உன்னை மேலே இழுக்கக்கூடிய சக்திக்கு உரியவனாக உன்னை மாற்றுவது. ஆகவே அது பொருந்தினால், உனக்குத் தெரியும் – நீ எடையற்ற வனாக மாறிவிடுகிறாய்.

மூன்றாவதாக, நீ செய்வது எதுவ'ாக இருந்தாலும், எதுவாக, எப்படிப்பட்ட சிறிய ஒன்றுமில்லாததாய் இருந்தாலும், வித்தியாசமாயிருக்கும். நீ வித்தியாசமாக நடப்பாய், நீ வித்தியாசமாக உட்காருவாய், நீ வித்தியாசமாகச் சாப்பிடுவாய். எல்லாமே வித்தியாசமாயிருக்கும். இந்த வித்தியாசத்தை நீ எல்லாவற்றிலும் உணர்வாய். சில சமயம் வித்தியாசமாய் இருக்கும் இந்தப் புதிய அனுபவம் பயத்தை உண்டுபண்ணும். ஒருவன் திரும்பிப் போய் பழையபடியே இருக்க விரும்புவான். ஏனெனில் பழையதோடு ஒருவன் மிகவும் ஒத்துப்போய் விட்டான். அது பழகிப்போன உலகம், மிகவும் சலிப்பைத் தருவதாக இருந்தாலும் நீ அதில் திறமைசாலி.

இப்போது நீ எங்கும் ஒரு இடைவெளியை உணருவாய். நீ உன் திறமையை இழந்துவிட்டது போல உணருவாய். நீ உன் பயன் குறைந்து போய் விட்டதாக உணருவாய். நீ எல்லா இடத்திலும் ஒரு வெளி ஆளாக இருப்பதாக உணருவாய். ஒருவன் இப்படியிருக்கும் காலத்தைக் கடந்து சென்றுதான் ஆக வேண்டும். நீ மறுபடியும் ஒத்துப் போனவனாய் ஆவாய். நீ மாறி இருக்கிறாய், உலகமல்ல, அதனால்தான் நீ பொருந்துவதில்லை. ஆகவே மூன்றாவதான விஷயத்தை நினைவில் வை: ஒரு யுக்தி உனக்குப் பொருந்தும்போது, நீ இந்த உலகத்தில் பொருந்த மாட்டாய். நீ பொருத்தமற்றவனாக ஆகிவிடுவாய். எல்லா இடத்திலும் ஏதோ லூசாக இருக்கும், ஏதாவது ஒரு போல்ட் இல்லாமலிருக்கும். எல்லா இடத்திலும் அங்கு ஏதோ பூகம்பம் நடந்துவிட்டதைப்போல நீ உணருவாய். ஆனால் எல்லாமும் பழையபடியே இருக்கின்றன; நீ மட்டுமே, நீதான் மாறி விட்டாய். நீ மறுபடியும் வேறொரு மட்டத்தில் உயர்ந்த மட்டத்தில் ஒத்திசைவை அடைவாய்.

இது, ஒரு குழந்தை வளர்ந்து பாலுணர்வுப் பிராயத்திற்கு மாறும்போது ஏற்படும் கொந்தளிப்பைப் போலவே உணரப் படுகிறது. பதினான்கு அல்லது பதினைந்து வயதில் ஒவ்வொரு பையனும் தான் ஏதோ வித்தியாசமாய் ஆகிவிட்டதாக உணருகிறான். ஒரு புதிய சக்தி நுழைந்துள்ளது - பாலுணர்வு. அது இதுவரை அங்கில்லை அல்லது அது இருந்தது, ஆனால் மறைந்திருந்தது. இப்போது முதன்முறையாக அவன் ஒரு புதிய விதமான சக்திக்கு உரியவனாகி மாறி இருக்கிறான். ஆகவேதான் பையன்கள் மிகவும் தடுமாற்றமாய் இருக்கிறார்கள்; இளம் பெண்கள், பையன்கள், அவர்கள் பாலுணர்வு பூப்படையும் போது, அவர்கள் மிகவும் தடுமாறுகிறார்கள். அவர்கள் எங்கே என்றே தெரிவதில்லை. அவர்கள் இனிமேல் சிறுவர்களில்லை, ஆனால் இன்னும் ஆளாகவுமில்லை, ஆகவே இடையே இருக்கிறார்கள், எங்கும் பொருந்தாமல். சிறுவர்களுடன் விளையாடினால் அதுவும் அசிங்கமாய் படுகிறது அவர்களுக்கு -

அவர்கள் பெரியவர்களாகிவிட்டனர். பெரியவர்களுடன் நட்பு ஏற்படுத்திக் கொண்டால் அதுவும் அவர்களுக்கு அசிங்கமாகவே இருக்கிறது – இன்னும் அவர்கள் சிறுவர்கள். அவர்கள் யாருடனும் பொருந்துவதில்லை.

ஒரு யுக்தி உனக்குப் பொருந்தும்போது இதே போலத்தான் நிகழ்கிறது. ஒரு புதிய சக்தி மையம், பாலுணர்வை விடப் பெரிய ஒன்றுக்கு நீ உரியவன் ஆகிறாய். நீ மறுபடியும் ஒரு மாறுதல் நடக்கும் காலத்திலிருக்கிறாய். இப்போது நீ இந்த உலகத்திலோ, உலகத்திலுள்ள மனிதர்களிடத்தோ, பொருந்த முடியாது. நீ உலகின் சாதாரண ஆளும் அல்ல, நீ புனிதமான வர்களின் உலகத்திலும் இன்னும் பொருந்தவில்லை; இப்போது இரண்டிற்கும் இடையில் ஒருவன் சங்கடமாக உணருகிறான்.

ஒரு யுக்தி, டெக்னிக் உனக்குப் பொருந்தினால், இந்த மூன்று விஷயங்களும் வெளிப்படும். நான் இதுபோன்ற விஷயங் களைச் சொல்வேன் என்று நீங்கள் எதிர்பார்த்திருக்க மாட்டீர்கள். நீ அதிக அமைதியை அடைவாய், அதிக சாந்தத்தை அடைவாய் என்று சொல்வேன் என்று நீங்கள் எதிர்பார்த்திருக்கலாம். ஆனால் நான் அதற்கு நேர்மாறாகக் கூறுகிறேன்; நீ அதிக அலைக் கழிப்புக்கு உள்ளாவாய். ஒரு யுக்தி உனக்குப் பொருந்தும்போது நீ அதிக அலைகழிப்பை அடைவாய், அதிக அமைதியை அல்ல. அமைதி பின்னால் வருவது. அலைகழிப்பு வராமல் அமைதி வந்தால், தெரிந்து கொள், இது ஒரு யுக்தி அல்ல. மாறாகப் பழைய கட்டுக்கோப்பிற்கு ஏற்றவாறு இன்னும் கொஞ்சம் ஒத்துப் போவதே இது.

அதனால்தான் அதிகமான மக்கள் தியானிப்பதற்கு பதிலாகத் தொழுகைக்குப் போகிறார்கள். ஏனெனில் பிரார்த் தனை உன்னைத் தேற்றுகிறது. அது உன்னைப் பொருத்துகிறது. சரி செய்கிறது, உன் உலகத்தோடு. தற்போது உளவியல் நிபுணர்கள் என்ன செய்து வருகிறார்களோ, அதையேதான் உண்மையில் பிரார்த்தனை செய்கிறது. நீ அலைக்கழிக்கப்

பட்டால், அவர்கள் உன் அலைக்கழிப்பைக் குறைக்கிறார்கள், முறைப்படுத்தப்பட்டுள்ளதற்கு உன்னைச் சரி செய்கிறார்கள், சமூகத்திற்கு குடும்பத்திற்கு ஏற்புடையவனாக்குகிறார்கள். ஆகவே ஒன்று, இரண்டு அல்லது மூன்று வருடங்களுக்கு ஒரு உளவியல் நிபுணரிடம் போவதால் நீ நன்றாகி விடுவதில்லை. ஆனால் நீ அதிகம் சரிக்கட்டப்பட்டு விடுவாய். பிரார்த்தனை அதையே செய்கிறது, பூசாரிகள் அதையே செய்கிறார்கள் - அவர்கள் உன்னைச் சரிகட்டுகிறார்கள் மேலும் மேலும்.

உன் குழந்தை இறந்துவிட்டது. அதனால் நீ அலைக் கழிப்பில் இருக்கிறாய், அப்போது நீ ஒரு மதபோதகரிடம் போகிறாய். அவர் சொல்கிறார், ''அலைக்கழிப்புக்கு உள்ளாகாதே. கடவுள் மீது அதிக அன்பு காட்டும் குழந்தைகளே சீக்கிரம் இறக்கின்றன. அவர் அழைத்துக் கொள்கிறார்.'' நீ திருப்தி அடைகிறாய். உனது குழந்தை ''அழைத்துக் கொள்ளப் பட்டது.'' கடவுள் அந்தக் குழந்தையை அதிகம் நேசிக்கிறார். அல்லது அந்த மதபோதகர் வேறு ஏதாவது சொல்கிறார் : ''கவலைப்படாதே, ஆன்மா ஒருபோதும் இறப்பதில்லை. உன் குழந்தை சொர்க்கத்திலிருக்கிறது.''

சில தினங்களுக்கு முன்பாக ஒரு பெண் இங்கு இருந்தாள். அவளது கணவன் போன மாதத்தில்தான் இறந்து போனான். அவள் சங்கடத்திலிருந்தாள். அவள் என்னிடம் வந்து சொன்னாள், ''என் கணவர் ஒரு நல்ல இடத்தில் மறுபிறப்பு எடுத்திருக்கிறார் என்ற உறுதி மட்டும் கொடுங்கள் போதும், அதன்பின் எல்லாம் சரியாகிவிடும். அவர் நரகத்திற்குப் போக வில்லை, அல்லது அவர் ஒரு மிருகமாகப் பிறக்கவில்லை, அவர் சொர்க்கத்திலிருக்கிறார் அல்லது அவர் கடவுளாகிவிட்டார் அல்லது அதுபோல ஏதாவது ஆகிவிட்டார் என்பதை மட்டும் உறுதி செய்யுங்கள். நீங்கள் இதை மட்டும் எனக்கு உறுதியாகச் சொன்னால் போதும், பிறகு மற்றவையெல்லாம் சரிதான். அதன் பின் நான் அதைத் தாங்கிக்கொள்ள முடியும்; இல்லாவிட்டால் நான் வருத்தத்திலேயே இருப்பேன்.''

மதபோதகர் சொல்லியிருப்பார், ''சரி! உன் கணவன் ஏழாவது சொர்க்கத்தில் கடவுளாகப் பிறந்திருக்கிறான், மிகவும் ஆனந்தமாக இருக்கிறான். அவன் மேலும் உனக்காக அங்குக் காத்திருக்கிறான்.''

இந்தப் பிரார்த்தனைகள், அவை உன்னைப் பழைய பாணிக்கு சரி செய்கின்றன..... நீ தேறிவிடுகிறாய்.

தியானம் ஒரு விஞ்ஞானம். அது நீ சரிகட்டிக் கொள் வதற்கு உதவப் போவதில்லை, அது நீ மாற்றம் அடையவே உதவப் போகிறது. இந்த மூன்று குறிகளும் அடையாளங்களாக அங்கு இருக்கும் என்று அதனால்தான் நான் சொல்கிறேன். அமைதி வரும். ஆனால் அது சரிகட்டுவதால் வராது. உள்ளே மலரும் மலர்ச்சியால் அமைதி வரும். அப்போது அமைதி சமுதாயத்தை, குடும்பத்தை, உலகத்தை, வியாபாரத்தை சரிகட்டியதால் ஏற்பட்ட அமைதியாக இருக்காது. அப்போது அமைதி இந்தப் பேரண்டத்தோடு உண்மையிலேயே உள்ள ஒத்திசைவாய் இருக்கும்.

அப்போது ஒரு ஆழமான ஒத்திசைவு உனக்கும், முழுமைக்கும் இடையே மலரும், அதில் அங்கு அமைதி யிருக்கும் – ஆனால் அது பின்னால் வருவது. முதலில் நீ சங்கடத்திற்கு ஆளாவாய், முதலில் நீ பித்துப் பிடித்தவனாய் ஆவாய் – ஏனெனில் நீ பயித்தியம்தான், அதைப்பற்றிய விழிப் புணர்வு இல்லை அவ்வளவுதான்.

ஒரு யுக்தி பொருந்தினால், அது நீ எதுவெல்லாமோ அதையெல்லாம் உன் விழிப்புணர்வுக்குக் கொண்டுவரும். உன் குழப்பம், உன் மனம், உன் பயித்தியக்காரத்தனம் எல்லாமும் வெளிச்சத்திற்கு வரும். நீ ஒரு வெறும் இருண்ட கலைந்த குவியல். ஒரு யுக்தி பொருந்தும் போது, அது ஏதோ திடீரென்று வெளிச்சமடித்தது போலாகும். உன் கலைந்து கிடக்கும் குவியல் மொத்தமும் தெரியவரும். முதல் தடவையாக நீ உண்மை யிலேயே நீ இருக்கும்படியாக உன்னைச் சந்திப்பாய். நீ

விளக்கை அணைத்துவிட்டு மறுபடியும் உறங்கப் போக விரும்புவாய், ஏனெனில் இது பயமுறுத்துவது. இந்தச் சமயத்தில்தான் குரு உதவியாக இருக்கிறார். அவர் சொல்கிறார், ''பயப்படாதே. இது வெறும் ஆரம்பம்தான். இதிலிருந்து தப்பிப் போகாதே.''

முதலில் இந்த வெளிச்சம் நீ எப்படி இருக்கிறாயோ அதைக் காட்டுகிறது; ஆனால் நீ தொடர்ந்து மேலும் மேலும் சென்றால், அது நீ எப்படி இருக்க முடியுமோ அப்படி உன்னை மாற்றுகிறது.

இன்று இது போதும்.




# மூச்சு —
# பேரண்டத்திற்கு
# ஒரு பாலம்

## சூத்திரங்கள்

சிவா பதில் சொல்கிறார் :

1. ஒளி வீசுபவனே, இந்த அனுபவம் இரண்டு மூச்சுகளுக்கு இடையில் கிடைக்கலாம். மூச்சு உள்ளே வந்து திரும்புவதற்குச் சற்றுமுன் – கிடைக்கப் பெற்றவராகலாம்.

2. மூச்சு வருவதிலிருந்து போவதற்குத் திரும்புகையில், மறுபடியும் மூச்சு போவதிலிருந்து வருவதற்கு வளைகையில் – இந்த இரண்டு வளைவுகளிலும், அதை உணர்வாயாக.

3. அல்லது, எப்பொழுதெல்லாம் உள்மூச்சும் வெளி மூச்சும் கலக்கிறதோ, அந்தச் சமயத்தில், சக்தி அற்றதும், சக்தி நிறைந்ததும் ஆன மையத்தைத் தொடுவாயாக.

4. அல்லது, மூச்சு முழுவதுமாக வெளியேறி, பின் நின்றுவிடும் போது அல்லது முழுவதும் உள்ளே வந்து பின் நின்றுவிடும் போது – இது போன்ற பேரண்ட சிறு நிறுத்தத்தில், ஒருவனுடைய சிறிய சுயம் காணாமல் போகிறது. இது தூய்மையற்ற ஒருவனுக்கே கடினமானது.

**ச**த்தியம் எப்பொழுதும் இங்கேயே உள்ளது. அது ஏற்கனவே இருப்பதுதான். அது ஏதோ எதிர்காலத்தில் சாதிக்க வேண்டியது அல்ல. இங்கேயே இப்பொழுதே நீ சத்தியம்தான். ஆகவே அது ஏதோ உருவாக்கப்பட வேண்டியதோ, அல்லது அது ஏதோ கண்டுபிடிக்க வேண்டியதோ, அல்லது அது ஏதோ தேட வேண்டியதோ இல்லை. இதைத் தெளிவாகப் புரிந்துகொள்; அப்போது இந்த யுக்திகளைப் புரிந்துகொள்வது சுலபமாக இருக்கும், செய்வதும் சுலபம்.

மனம் என்பது ஆசைப்படும் இயந்திரம். மனம் எப்போதும் ஆசையிலேயே இருக்கிறது. எப்போதும் எதை யாவது தேடிக்கொண்டு, எதையாவது கேட்டுக்கொண்டு. எப்பொழுதும் அதன் பொருள் எதிர்காலத்திலேயே உள்ளது; மனம் நிகழ்காலத்தைப் பற்றிச் சிறிதும் அக்கறை கொள்வ தில்லை. இந்த இக்கணத்தில் மனம் நகர முடியாது – அங்கு அதற்கு இடமில்லை. மனதிற்கு, அது நகர்வதற்கு எதிர்காலம் தேவை. அது எதிர்காலத்திலோ அல்லது இறந்த காலத்திலோ தான் நகர முடியும். அது நிகழ்காலத்தில் நகர முடியாது, அதற்கு இடமில்லை. சத்தியம் நிகழ்காலத்தில் இருக்கிறது, மனம் எப்பொழுதும் எதிர்காலத்திலோ அல்லது இறந்த காலத்திலோ இருக்கிறது. ஆகவே மனதிற்கும் சத்தியத்திற்கும் இடையிலான சந்திப்பு நிகழ்வதே இல்லை.

மனம் இந்த உலகிலுள்ள பொருட்களை நாடும்போது, அது அவ்வளவு சிரமமான விஷயமில்லை, இந்தப் பிரச்சனை மடத்தனம் இல்லை; இதைத் தீர்த்து வைத்து விடலாம். ஆனால் மனம் சத்தியத்தை நாட ஆரம்பிக்கும்போது அந்த முயற்சியே முட்டாள்தனமானதாக ஆகிவிடுகிறது. ஏனெனில் சத்தியம் எப்பொழுதும் இங்கு, இப்போது இருக்கிறது, மனம் எப்பொழுதும் அங்கு, அப்பால் இருக்கிறது. சந்திப்பதே இல்லை. ஆகவே முதல் விஷயமாக இதைப் புரிந்துகொள் : நீ சத்தியத்தைத் தேட முடியாது. நீ அதைக் காண முடியும். ஆனால் நீ அதை விரும்ப முடியாது. அந்த விருப்பமே தடையாகிறது.

நீ நாடுகின்ற கணத்திலேயே, நீ நிகழ்காலத்தை விட்டு விலகிச் சென்றுவிடுகிறாய், உன்னிடமிருந்து விலகிச் சென்று விடுகிறாய். ஏனெனில் நீ எப்போதும் நிகழ்காலத்தில் இருப் பவனே. தேடுபவன் எப்போதும் நிகழ்காலத்திலேயே இருக் கிறான், தேடுவது எப்போதும் எதிர்காலத்திலேயே இருக்கிறது; நீ தேடுவது எதுவாயிருந்தாலும் அதை நீ சந்திக்கப் போவ தில்லை. லா வோட்ஸ¤ சொல்கிறார், ''தேடுவதை நிறுத்து; இல்லாவிட்டால் உனக்குக் கிடைக்காது. தேடுவதை விடு, உடனே கிடைக்கும். தேடுங்கள், கண்டடைவீர்கள் என்பது அல்ல.''

சிவாவின் இந்த எல்லா யுக்திகளுமே மனதை எதிர்காலத்தி லிருந்தும், இறந்தகாலத்திலிருந்தும், நிகழ்காலத்திற்குத் திருப்பு வதுதான். நீ எதைத் தேடுகிறாயோ அது ஏற்கனவே அங்கிருக் கிறது. ஏற்கனவே அது அப்படித்தான். மனம் தேடுதலிலிருந்து தேடாமைக்குத் திருப்பபப்பட வேண்டும். அது சிரமம். நீ இதைப்பற்றி அறிவுபூர்வமாகச் சிந்தித்தால் இது மிகவும் கடினம். எப்படி மனதைத் தேடுதலிலிருந்து தேடாமைக்குத் திருப்புவது? – மனம் தேடாமையைத் தேடுவதே தன் தேடலாக்கிக் கொண்டு விடும்! பின் மனம் சொல்லும், ''தேடுவதை நிறுத்து.'' அதற்கு மனம் சொல்லும், ''நான் தேடக் கூடாது.'' அதன்பின் மனம் சொல்லும், ''இப்போது தேடாமையை அடைவதே என் குறி. நான் இப்போது ஆசையற்ற நிலையை ஆசைப்படுகிறேன்.'' தேடுதல் மறுபடியும் வந்துவிட்டது, ஆசை பின்கதவு வழியாக மறுபடியும் நுழைந்துவிட்டது. ஆகவேதான் உலக விஷயங் களைத் தேடும் மக்கள் இருக்கிறார்கள், இந்த உலகத்தைச் சேராத விஷயங்களைத் தேடுவதாக எண்ணிக் கொண்டிருக்கும் மக்கள் இருக்கிறார்கள். எல்லா விஷயங்களும் உலகத்தைச் சேர்ந்த வையே. ஏனெனில் ''தேடுதலே'' உலகம்.

ஆகவே நீ உலகத்தைச் சேராத எதையும் தேட முடியாது. நீ ஒன்றைத் தேடுகின்ற கணமே, அது உலகத்தைச் சேர்ந்ததாகி விடுகிறது. நீ கடவுளைத் தேடினால், உன் கடவுள் உலகத்தின்

ஒரு பாகமே. நீ மோட்சத்தை – விடுதலையை – நிர்வாணாவைத் தேடினால், உன் விடுதலை இந்த உலகின் பாகமாகிவிடுகிறது, உன் விடுதலை இந்த உலகைக் கடந்தடையும் ஏதோ வொன்றல்ல. ஏனெனில் தேடுதலே உலகம், ஆசையே உலகம். ஆகவே நீ நிர்வாணாவை ஆசைப்பட முடியாது, நீ ஆசையற்ற நிலையை ஆசைப்பட முடியாது. நீ அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்ள முயன்றால், இது ஒரு முடிச்சு ஆகிவிடும்.

சிவா கேள்விகளைப் பற்றி எதுவும் சொல்லவில்லை. அவர் உடனடியாக யுக்திகளைக் கொடுக்கத் துவங்கிவிட்டார். இவை அறிவு சாராதவை. அவர் தேவியிடம், ''சத்தியம் இங்கே இருக்கிறது. அதைத் தேடாதே அப்போது நீ கண்டுகொள்வாய்'' என்று சொல்லவில்லை. அவர் உடனடியாக யுக்திகளைக் கொடுக்கிறார். இவை அறிவு சாராதவை. இவைகளைச் செய், மனம் திரும்பும். திரும்புவது ஒரு தொடர் விளைவு, ஒரு துணை விளைவு – அதுவல்ல குறி. திரும்புவது என்பது ஒரு பக்க விளைவுதான்.

நீ ஒரு யுக்தியைச் செய்தால், உன் மனம் தனது எதிர்கால, இறந்தகாலப் பயணங்களிலிருந்து திரும்பும். திடீரென்று நீ நிகழ்காலத்தில் இருப்பதைக் காண்பாய். அதனால் தான் புத்தர் யுக்திகளைக் கொடுத்தார், லா வோட்ஸு யுக்திகளைக் கொடுத்தார், கிருஷ்ணா யுக்திகளைக் கொடுத்தார். ஆனால் அவர்கள் எப்பொழுதும் தங்கள் யுக்திகளை அறிவுபூர்வமான கோட்பாடுகளுடன் சேர்த்தே அறிமுகப்படுத்தினர். சிவா மட்டுமே வித்தியாசமானவர். அவர் உடனடியாக யுக்திகளைக் கொடுக்கிறார், எந்த அறிவுபூர்வமான விளக்கமும் இல்லை, எந்த அறிவுபூர்வமான அறிமுகமும் இல்லை. ஏனெனில் அவருக்குத் தெரியும் மனம் தந்திரமானது, குள்ளநரித் தனத்தின் எல்லை. அது எந்த விஷயத்தையும் ஒரு பிரச்சனையாக மாற்றக் கூடியது. தேடாமை ஒரு பிரச்சனை ஆகிவிடும்.

எப்படி ஆசைப்படாமல் இருப்பது என்று என்னிடம் வந்து கேட்கும் மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஆசையற்றிருக்க

ஆசைப்படுகிறார்கள். நீங்கள் ஆசைப்படாவிட்டால் பரமசுகத்தை அடைவீர்கள், நீங்கள் ஆசைப்படாவிட்டால் நீங்கள் விடுதலை அடைவீர்கள், நீங்கள் ஆசைப்படாவிட்டால் உங்களுக்குத் துன்பமே இருக்காது என்று இவர்களிடம் யாரோ சொல்லி யிருக்கிறார்கள் அல்லது இவர்கள் எங்கேயோ படித்திருக் கிறார்கள், அல்லது இவர்கள் ஆன்மிக அரட்டையை எங்கோ கேட்டிருக்கிறார்கள். இப்போது அவர்கள் மனம், அந்தத் துன்பமில்லாத நிலையை அடைய ஏங்குகிறது. ஆகவே அவர்கள் எப்படி ஆசைப்படாமல் இருப்பது என்று கேட்கிறார்கள். அவர்கள் மனங்கள் வித்தை காட்டுகின்றன. அவர்கள் இன்னும் ஆசைப்படவே செய்கிறார்கள், ஒரே விஷயம் என்னவென்றால் ஆசைப்படும் பொருள் மாறியுள்ளது. அவர்கள் பணத்தின் மேல் ஆசைப்பட்டார்கள், அவர்கள் புகழின் மேல் ஆசைப்பட்டார்கள், அவர்கள் கௌரவத்தின் மேல் ஆசைப்பட்டார்கள், அவர்கள் அதிகாரத்தின் மேல் ஆசைப்பட்டார்கள், இப்போது அவர்கள் ஆசைப்படாமலிருக்க ஆசைப்படுகிறார்கள். வெறும் பொருள் தான் மாறியுள்ளது, அவர்கள் அப்படியேதான் இருக்கிறார்கள், அவர்கள் ஆசைப்படுவதும் அப்படியேதான் இருக்கிறது. ஆனால் இப்போது அவர்களின் ஆசை மேலும் ஏமாற்றக்கூடியதாக மாறியுள்ளது.

இதனாலேயே சிவா உடனடியாகத் தொடர்கிறார், எந்தவித அறிமுகமும் செய்யாமல். அவர் உடனடியாக யுக்திகளைப் பற்றிப் பேச ஆரம்பிக்கிறார். இந்த யுக்திகள், கடைபிடிக்கப் பட்டால், உன் மனத்தைத் திடீரென்று திருப்பும்: அது நிகழ்காலத்திற்கு வரும். அப்படி மனம் நிகழ்காலத்திற்கு வரும்போது அது நின்றுவிடும், அது அதன்பின் இருக்காது. நீ நிகழ்காலத்தில் ஒரு மனமாக இருக்க முடியாது, அது சாத்தியமில்லை, இந்தக் கணம், நீ இங்கு, இப்போது இருந்தால், நீ எப்படி மனமாக இருக்க முடியும்? எண்ணங்கள் நின்றுவிடும். ஏனெனில் அவை நகர முடியாது. நிகழ்காலத்தில் நகர்வதற்கு எந்த இடமுமில்லை; நீ யோசிக்க முடியாது. நீ இந்தக்

கணத்திலேயே இருக்கிறாய் என்றால் நீ எப்படி நகர முடியும்? மனம் நின்று விடுகிறது, நீ மனமற்ற நிலையை அடைகிறாய்.

ஆகவே உண்மையான விஷயம், எப்படி இங்கே இப்போது இருப்பது என்பதே. நீ முயற்சிக்கலாம், ஆனால் முயற்சி பலனளிக்காமல் போகலாம் – ஏனெனில் நீ நிகழ் காலத்தில் இருக்க வேண்டும் என்று ஒரு குறி ஏற்படுத்திக் கொண்டால், அப்போதே அந்தக் குறி எதிர்காலத்திற்கு நகர்ந்து விடுகிறது, எப்படி நிகழ்காலத்தில் இருப்பது என்று நீ கேட்கும் பொழுது, மறுபடியும் நீ எதிர்காலத்தைப் பற்றியே கேட்கிறாய். இந்தக் கணம் அந்தத் தேடலில் நகர்ந்து கொண்டிருக்கிறது,'' எப்படி நிகழ்காலத்திலிருப்பது, எப்படி இங்கு, இப்போது இருப்பது?'' இந்த நிகழ்கால கணம் இந்த யோசனையில் போய்க் கொண்டிருக்கிறது, அதே சமயம் உனது மனம் கனவுகளைப் பின்னவும், உருவாக்கவும் ஆரம்பிக்கும் : என்றாவது ஒரு நாள் எந்த அசைவும், எந்த நோக்கமும், எந்தத் தேடலும் இல்லாத நிலையிலுள்ள மனதை நீ அடைவாய். அப்போது அங்குப் பரமசுகம் கிடைக்கும் – எனவே எப்படி நிகழ்காலத்தில் இருப்பது?

சிவா அதைப்பற்றி எதுவும் சொல்வதில்லை, அவர் ஒரு யுக்தியை மட்டுமே கொடுக்கிறார். நீ அதைச் செய், அப்போது திடீரென்று இங்கு இப்போது நீ இருப்பதைக் காண்பாய். இந்த உள் ஜீவிதம் இங்கு இப்போது இருப்பதே சத்தியம், இந்த உள் ஜீவிதம் இங்கு இப்போது இருப்பதே சுதந்திரம், இந்த உள் ஜீவிதம் இங்கு இப்போது இருப்பதே நிர்வாணா.

முதல் ஒன்பது யுக்திகளும் மூச்சோடு தொடர்புள்ளவை. ஆகவே மூச்சைப் பற்றி ஒரு சில விஷயங்கள் புரிந்து கொள்வோம், அதன்பின் யுக்திகளுக்குச் செல்வோம். நாம் பிறந்ததிலிருந்து இறக்கும்வரை தொடர்ந்து மூச்சுவிட்டுக் கொண்டேயிருக்கிறோம். பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் எல்லாமே மாறுகிறது. எல்லாமே மாறுகிறது, எதுவும்

தொடர்ந்து ஒன்றுபோல் இருப்பதில்லை, மூச்சு மட்டுமே மாறாத ஒன்றாக இருக்கிறது.

ஒரு குழந்தை வாலிபமடைகிறது; வாலிபன் முதுமை யடைகிறான். அவனுக்கு நோய் வரும், அவன் உடம்பு அசிங்கமாக மாறும். எல்லாமும் மாறும். அவன் சந்தோஷமா யிருப்பான், சந்தோஷமில்லாமல் இருப்பான், துன்பப்படுவான்; எல்லாமும் மாறிக் கொண்டே போகும். ஆனால் இந்த இரண்டுக்கும் இடையே என்ன நடந்தாலும், ஒருவன் சுவாசித்தே ஆக வேண்டும். மகிழ்ச்சியோ மகிழ்ச்சியில்லையோ, வாலிபமோ முதுமையோ, வெற்றியோ தோல்வியோ, – நீ எப்படியிருந்தாலும், அது முக்கியமல்ல – ஒரு விஷயம் உறுதி: பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே நீ சுவாசித்தே ஆக வேண்டும்.

மூச்சு தொடர்ந்து ஓடிக்கொண்டேயிருக்கும்; எந்த இடைவெளியும் சாத்தியமில்லை. ஒரே ஒரு கணம் நீ மூச்சுவிட மறந்தால் கூட, நீ இருக்க மாட்டாய். அதனால்தான் நீ மூச்சுவிடத் தேவையில்லை. ஏனெனில் அப்போது அது சிரமமாகி விடலாம். யாரோ ஒருவர் மூச்சுவிட மறந்து போகலாம், அதன்பின் எதுவும் செய்ய முடியாது. ஆகவே, உண்மையில், நீ மூச்சு விட்டுக் கொண்டிருப்பதில்லை. ஏனெனில் அதற்கு நீ தேவையில்லை. நீ ஆழமான உறக்கத்திலிருக்கிறாய், சுவாசம் நடந்து கொண் டிருக்கிறது; நீ உணர்வற்ற நிலையிலிருக்கிறாய், அப்போதும் சுவாசம் நடந்து கொண்டிருக்கிறது, நீ ஆழமான கோமாவில் இருக்கிறாய், அப்போதும் சுவாசம் நடந்து கொண்டிருக்கிறது. நீ தேவைப்படுவதில்லை; சுவாசம் என்ற ஒன்று, நீ இருப்பதைப் பொருட்படுத்தாமல் நடந்து கொண்டிருப்பது.

அது உனது தன்மையில் எப்போதும் மாறாதிருக்கும் ஒரு உண்மை – இது முதல் விஷயம். வாழ்க்கைக்கு மிகவும் ஆதாரமானதும், அடிப்படையானதுமான ஒன்று அது – இது இரண்டாவது விஷயம். நீ மூச்சு இல்லாமல் உயிரோடிருக்க

முடியாது. ஆகவே மூச்சும், வாழ்க்கையும் ஒரே அர்த்தம் கொடுப்பவை. மூச்சே வாழ்வின் இயக்கம், ஆகவே வாழ்வு மூச்சோடு ஆழமாக இணைந்துள்ளது. ஆகவேதான் நாங்கள், இந்தியாவில், இதை 'பிராணா' என்று அழைக்கிறோம். நாங்கள் இரண்டுக்கும் ஒரே வார்த்தை கொடுத்துள்ளோம் – 'பிராணன்' என்றால் வலிவு, உயிர்த்துடிப்பு. உன் வாழ்க்கை உன் மூச்சு தான்.

மூன்றாவதாக, உன் மூச்சுதான் உன் உடம்பிற்கும் உனக்கும் இருக்கும் பாலம். இடைவிடாமல், மூச்சு உன்னை உன் உடலோடு இணைத்துக் கொண்டிருக்கிறது, உன் இடை வெளியை நிரப்பிக் கொண்டிருக்கிறது, உன்னை உன் உடம்போடு தொடர்புபடுத்திக் கொண்டிருக்கிறது. மூச்சு உனது உடம்புக்கு மட்டும் ஒரு பாலமல்ல, அது உனக்கும் பேரண்டத் திற்கும் இடையிலான பாலமாகவும் இருக்கிறது. இந்த உடம்பு என்பது உன்னிடம் வந்துள்ள, உனக்கு அருகாமையில் வந்துள்ள, பேரண்டமே.

உனது உடல் பேரண்டத்தின் ஒரு பாகமே. உடம்பிலுள்ள அனைத்தும் இந்தப் பேரண்டத்தின் பாகமே – ஒவ்வொரு துகளும், ஒவ்வொரு 'செல்'லும். இதுவே பேரண்டத்தை அணுக மிகக் குறுகிய வழி. மூச்சே பாலம். பாலம் உடைந்துவிட்டால், நீ இந்த உடம்பில் இனி இருக்க முடியாது. பாலம் உடைந்துவிட்டால், நீ இந்தப் பேரண்டத்தில் இனி இல்லை. நீ வேறு ஏதோ தெரியாத பரிமாணத்திற்குச் சென்றுவிடுவாய். அதன்பின் உன்னைக் கால வெளியில் காண முடியாது. ஆகவே, மூன்றாவதாக, மூச்சு உனக்கும் காலவெளிக்கும் இடையே பாலமாக உள்ளது.

மூச்சு, ஆகவே, மிகவும் முக்கியமானதாகி விட்டது – முதன்மை முக்கியத்துவமானது. ஆகவே முதல் ஒன்பது யுக்திகளும் சுவாசத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. நீ உனது சுவாசத்தில் ஏதாவது செய்ய முடியுமென்றால், நீ திடீரென்று நிகழ்காலத்திற்குத் திரும்புவாய். நீ உனது மூச்சில்

ஏதாவது செய்ய முடியுமென்றால், நீ வாழ்வின் ஊற்றுக் கண்ணையே அடைவாய். நீ உனது சுவாசத்தில் ஏதாவது செய்ய முடியுமென்றால், நீ காலவெளியைக் கடந்து சென்றுவிட முடியும். நீ உனது சுவாசத்தில் ஏதாவது செய்ய முடியுமென்றால், நீ இந்த உலகத்திலும் அதே சமயம் அதைத் தாண்டியும் இருப்பாய்.

மூச்சுக்கு இரண்டு முனைகள் உள்ளன. ஒன்று, உடலையும் பேரண்டத்தையும் அது தொடும் இடம், மற்றொன்று, உன்னையும் பேரண்டத்தைக் கடந்துள்ளதையும் அது தொடும் இடம். நமக்கு மூச்சின் ஒரு பாகமே தெரியும். அது பேரண்டத்திற்குள், உடம்பிற்குள் நுழையும்போது, நமக்குத் தெரியும். ஆனால் அது எப்பொழுதும் உடம்பிலிருந்து உடம்பற்றதற்குள், உடம்பற்றதிலிருந்து உடம்புக்குள் நகர்ந்து கொண்டே இருக்கிறது. நமக்கு அந்த அடுத்தமுனை தெரியாது, பாலத்தின் அடுத்த பகுதி, பாலத்தின் எதிர்ப் பக்கம், அடுத்த முனை பற்றிய விழிப்புணர்வை நீ அடைந்து விட்டால், திடீரென்று நீ மாற்றமடைவாய், வேறு ஒரு பரிமாணத்திற்குப் போவாய்.

ஆனால் நினைவில் வை, சிவா என்ன சொல்லப் போகிறாரோ அது யோகா அல்ல, அது தந்த்ரா. யோகாவும் மூச்சுடன் வேலை செய்கிறது, ஆனால் யோகாவும், தந்த்ராவும் வேலை செய்யும் வழிகள் அடிப்படையில் வேறுபட்டவை. யோகா மூச்சை ஒரு ஒழுங்குக்குள் கொண்டுவர முயற்சிக்கிறது. நீ உனது மூச்சை ஒழுங்குபடுத்தினால் உனது ஆரோக்கியம் வளரும். நீ உனது மூச்சை ஒரு குறிப்பிட்ட முறையில் ஒழுங்கு படுத்தினால், மூச்சின் இரகசியங்களை நீ அறிந்து கொண்டால், உனது ஆயுள் அதிகரிக்கும்; உனது ஆரோக்கியம் அதிகரிக்கும், உனது வாழ்நாள் அதிகமாகும். நீ அதிக வலிமை பெறுவாய், அதிக சக்தியோடு இருப்பாய், அதிக ஊட்டத்தோடு, உயிர்த் துடிப்போடு, இளமையோடு, புத்துணர்வோடு இருப்பாய். ஆனால் தந்த்ரா அதில் அக்கறை கொண்டதல்ல. தந்த்ராவிற்கு

மூச்சை எந்தவிதமாக ஒழுங்குபடுத்துவதிலும் அக்கறையில்லை. மாறாக, உள்ளே திரும்ப ஒரு யுக்தியாக மூச்சைப் பயன்படுத்து வதிலேயே அக்கறை. ஒருவன் ஒரு குறிப்பிட்ட விதமாக மூச்சுவிடப் பயிற்சி செய்யவோ, ஒரு குறிப்பிட்ட முறைப்படி மூச்சுவிடவோ அல்லது ஒரு குறிப்பிட்ட இசைவோடு மூச்சுவிடவோ வேண்டாம் - தேவையில்லை! ஒருவன் மூச்சை அதன் போக்கிலேயே எடுத்துக்கொள்ள வேண்டும். ஒருவன் மூச்சின் ஒரு சில குறிப்பிட்ட புள்ளிகளைக் குறித்து வெறும் விழிப்புணர்வு மட்டுமே கொள்ள வேண்டும்.

ஒரு சில குறிப்பிட்ட புள்ளிகள் உள்ளன. ஆனால் நமக்கு அதைப் பற்றிய விழிப்புணர்வு கிடையாது. நாம் மூச்சு விட்டுக் கொண்டே இருக்கிறோம், நாம் மூச்சு விட்டுக்கொண்டே இருப்போம் - நாம் மூச்சு விட்டுக்கொண்டே பிறந்தோம், நாம் மூச்சு விட்டுக்கொண்டே இறப்போம் - ஆனால் நமக்குக் குறிப்பிட்ட புள்ளிகளைப் பற்றிய விழிப்புணர்வு கிடையாது. இது மிகவும் அதிசயமானதுதான். மனிதன் அண்டவெளியை ஆழமாக அலசுகிறான், தேடுகிறான். மனிதன் சந்திரனுக்குப் போகிறான்; மனிதன் அதையும் தாண்டிச் செல்ல முயல்கிறான், பூமியிலிருந்து அண்டவெளிக்கு. ஆனாலும் மனிதன் தனது வாழ்வுக்கு மிகவும் அருகிலுள்ள பாகத்தைப் பற்றி இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. மூச்சில் குறிப்பிட்ட சில புள்ளிகள் இருக்கின்றன. அவற்றை நீ ஒருபோதும் கவனித்ததில்லை. ஆனால் அந்தப் புள்ளிகளே வாயில்கள் - வேறு உலகத்திற்கு, வேறு ஜீவிதத்திற்கு, வேறு உணர்வு நிலைக்குச் செல்வதற்கான மிக அருகாமையிலுள்ள வாயில்கள். ஆனால் அவை மிகவும் நுட்பமானவை.

சந்திரனை நோக்குவது மிகவும் கடினமானதல்ல. சந்திரனுக்குப் போவது கூட மிகவும் கடினமானதல்ல, அது ஒரு சாதாரணப் பயணம். இயந்திரங்கள் உனக்குத் தேவை, தொழில்நுட்பம் உனக்குத் தேவை, சேகரிக்கப்பட்ட தகவல்கள் உனக்குத் தேவை, அதன்பின் நீ அங்கே போய்விடலாம்.

மூச்சுதான் உனக்கு மிகவும் அருகாமையில் இருப்பது, ஆனால் ஒன்று எவ்வளவு அருகாமையில் இருக்கிறதோ அந்த அளவு அதை நோக்குவது கடினம். அது எவ்வளவு அருகில் இருக்கிறதோ, அவ்வளவு அதிகக் கஷ்டம்; எவ்வளவு சுலபமாகத் தெரியும்படி உள்ளதோ, அவ்வளவு அதிகம் கடினம். அது உனக்கு அவ்வளவு அருகில் உள்ளது, அதாவது உனக்கும் உன் மூச்சுக்கும் இடைவெளியே இல்லை அல்லது அங்கு மிகக் குறைந்த இடைவெளியே உள்ளது. ஆகவே நீ மிக உன்னிப்பாகப் பார்க்க வேண்டும், அப்போது மட்டுமே நீ குறிப்பிட்ட சில புள்ளிகளைப் பற்றிய விழிப்புணர்வு அடைய முடியும். இந்தப் புள்ளிகளே இந்த யுக்திகளின் அடிப்படை.

இப்போது நான் ஒவ்வொரு யுக்தியாக எடுத்துக் கொள்கிறேன்.

*1 – இரண்டு மூச்சுகளின் இடைவெளியைக் கவனி.*

---

❖ *"சிவா பதில் சொல்கிறார் : ஒளி வீசுபவளே, இந்த அனுபவம் இரண்டு மூச்சுகளுக்கு இடையில் கிடைக்கலாம். மூச்சு உள்ளே வந்து திரும்புவதற்குச் சற்றுமுன் – கிடைக்கப் பெற்றவர் ஆகலாம்."*

---

இதுதான் யுக்தி : ஒளி வீசுபவளே, இந்த அனுபவம் இரண்டு மூச்சுகளுக்கு இடையில் கிடைக்கலாம். மூச்சு உள்ளே வந்து – அதாவது இறங்கி – பின் திரும்புவதற்குச் சற்றுமுன் – அதாவது ஏறுவது – கிடைக்கப் பெற்றவர் ஆகலாம்.

இந்த இரண்டு புள்ளிகளுக்கிடையே விழிப்புணர்வோடு இரு..... அப்போது நிகழ்கிறது. உனது மூச்சு உள்ளே வரும் போது, கவனி. அது திரும்புவதற்குச் சற்றுமுன், அது வெளியேறத் துவங்குவதற்குச் சற்றுமுன், (ஒரு கண நேரம் அல்லது ஆயிரத்தில் ஒரு பங்கு கண நேரத்திற்கு, மூச்சு அங்கில்லை). ஒரு மூச்சு உள்ளே வருகிறது; பின் ஒரு குறிப்பிட்ட புள்ளியில் மூச்சு நிற்கிறது. அதன்பின் மூச்சு

வெளியேறுகிறது. மூச்சு வெளியேறிய பின், மறுபடியும் ஒரு கண நேரத்திற்கு அல்லது கணத்தின் ஒரு பங்கு நேரத்திற்கு, மூச்சு நிற்கிறது. அதன்பின் மூச்சு உள்ளே வருகிறது.

மூச்சு உள்ளே வருவதற்கு முன்பு அல்லது வெளியேறு வதற்கு முன்பு, மூச்சு நின்றுவிடுகிற ஒரு கணம் உள்ளது. அந்தக் கணத்தில் அது நிகழ்வது சாத்தியம். ஏனெனில் நீ சுவாசிக்காத போது நீ இந்த உலகில் இல்லை. புரிந்துகொள் இதை : நீ சுவாசிக்காதபோது நீ இறந்துவிட்டாய்; நீ இன்னும் இருக்கிறாய், ஆனால் இறந்துபோனவனாக. ஆனால் இந்தக் கணம் நீ அதை ஒருபோதும் கவனிக்க முடியாத அளவு மிகச் சிறியதாக இருக்கிறது.

தந்த்ராவிற்கு, ஒவ்வொரு வெளிச்செல்லும் மூச்சும் இறப்பு, ஒவ்வொரு புது உள் வரும் மூச்சும் மறுபிறப்பு. உள்ளே வரும் மூச்சு மறுபிறப்பு; வெளியே செல்லும் மூச்சு இறப்பு. வெளியே செல்லும் மூச்சு இறப்பை ஒத்தது. உள்ளே வரும் மூச்சு வாழ்வை ஒத்தது. ஆகவே ஒவ்வொரு மூச்சோடும் நீ இறக்கிறாய், மீண்டும் பிறக்கிறாய். இந்த இரண்டுக்கும் இடையிலுள்ள இடைவெளி மிகவும் குறைவானது. ஆனால் உன்னிப்பான, கவனமான, ஆழ்ந்த பார்வை மூலம் நீ அந்த இடைவெளியை உணர முடியும். அப்படி நீ அந்த இடை வெளியை உணர்ந்துவிட்டால், சிவா சொல்கிறார், 'கிடைக்கப் பெற்றவராகலாம்'. பின் வேறு எதுவும் தேவையில்லை. நீ ஆசிர்வதிக்கப்பட்டவன், நீ அறிந்து கொண்டாய், அது நிகழ்ந்துவிட்டது.

நீ மூச்சுக்குப் பயிற்சி கொடுக்க வேண்டியதில்லை. அதை அப்படியே விட்டுவிடு. ஏன் இவ்வளவு சுலபமான யுக்தி? இது மிகவும் எளிதாகத் தெரிகிறது. சத்தியத்தை அறிய இவ்வளவு எளிமையான வழியா? சத்தியத்தை அறிவது என்பதன் அர்த்தம், பிறப்பும் இறப்பும் இல்லாததை அறிவது, எப்பொழுதும் அழிவற்று இருப்பதை அறிவது. உனக்கு வெளியே போகும் மூச்சு தெரியும், உள்ளே வரும் மூச்சு தெரியும். ஆனால் நீ

இரண்டிற்கும் இடையே உள்ள இடைவெளியை ஒருபோதும் அறிந்ததில்லை.

முயற்சி செய். திடீரென்று நீ அந்தப் புள்ளியை உணர்வாய் – உன்னால் அடைய முடியக்கூடியதே அது; அது ஏற்கனவே அங்குள்ளது. உன்னிடத்தில் அல்லது உனது கட்டமைப்பில் சேர்க்க வேண்டியது எதுவுமில்லை, அது ஏற்கனவே அங்கிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட விழிப்புணர்வைத் தவிர எல்லாமே ஏற்கனவே அங்குள்ளது. இதை எப்படிச் செய்வது? முதலில், உள்ளே வரும் மூச்சைப் பற்றிய விழிப்புணர்வு கொள். அதைக் கவனி. எல்லாவற்றையும் மறந்துவிடு, மூச்சு உள்ளே வருவதை மட்டும் பார் – அதன் பாதையைப் பார்.

மூச்சு உன் மூக்கு நுனியைத் தொடும்போது, அதை அங்கே உணரு. பிறகு மூச்சு உள்ளே போகட்டும். முழு உணர்வோடு அந்த மூச்சோடு நீயும் நகரு. நீ மூச்சோடு கீழே போகும்போது, கீழே, கீழே போகும்போது, மூச்சைத் தவறவிட்டு விடாதே. அதற்கு முன்னால் போகாதே, அதைத் தொடர்ந்து போகாதே, அதோடு கூடவே போ. நினைவில் கொள் : அதை முந்திப் போகாதே, அதற்குப் பின்னால் அதன் நிழலைப் போலப் போகாதே; அதோடு ஒன்றாகப் போ.

மூச்சும் உன் உணர்வும் ஒன்றாக வேண்டும். மூச்சு உள்ளே போகிறது – நீ உள்ளே போகிறாய். அப்போது மட்டுமே இரண்டு மூச்சுகளுக்கு இடையிலுள்ள புள்ளியை அடையும் சாத்தியம் இருக்கிறது. இது சுலபமல்ல. மூச்சோடு உள்ளே நகரு, பிறகு மூச்சோடு வெளியே நகரு: உள்ளே – வெளியே, உள்ளே – வெளியே.

குறிப்பாக இந்த முறையை புத்தர் முயற்சி செய்தார்; ஆகவே இது புத்தமதத்தினரின் முறையாக ஆகிவிட்டது. புத்தமதச் சொற்களில் இது 'அனபனசதி யோகா' என்று அழைக்கப்படுகிறது. புத்தர் ஞானமடைந்தது இந்த யுக்தியின் அடிப்படையில்தான் – இதனால் மட்டுமே.

உலகத்திலுள்ள எல்லா மதங்களும், உலகத்திலுள்ள எல்லா சாதகர்களும், ஏதோ ஒரு யுக்தியின் மூலமாகவே அடைந்திருக்கிறார்கள், அந்த எல்லா யுக்திகளும் இந்த நூற்றிப் பன்னிரண்டு யுக்திகளில் உள்ளன. இந்த முதலாவது யுக்தி புத்த மதத்தினுடையது. உலகத்தில் இது புத்தமத யுக்தியாக அறியப்படுகிறது, ஏனெனில் கௌதம புத்தர் இந்த யுக்தியின் மூலம் ஞானமடைந்தார்.

புத்தர் சொன்னார், ''உன் மூச்சு இயல்பாக உள்ளே வருவதையும், வெளியே போவதையும் பற்றிய விழிப்புணர்வு கொள் - உள்ளே வருவது, வெளியே போவது.'' அவர் ஒருபோதும் இடைவெளியைக் குறிப்பிடவில்லை. ஏனெனில் அதற்குத் தேவையில்லை. நீ இடைவெளியின் மேல், இரண்டு மூச்சுகளுக்கு இடையே இருக்கும் இடைவெளியின் மேல் அக்கறை கொண்டால், அந்த அக்கறை உன் விழிப்புணர்வைப் பாதிக்கும் என்று புத்தர் உணர்ந்து கொண்டார். ஆகவே அவர், ''விழிப்புணர்வு கொள். மூச்சு உள்ளே புகும் பொழுது அதோடு நகரு, மூச்சு வெளியே போகும்போது அதோடு நகரு. இதை மட்டும் செய் : உள்ளே நுழைவது, வெளியே போவது, மூச்சோடு.'' அவர் யுக்தியின் அடுத்த பகுதியைப் பற்றி ஒருபோதும் எதுவும் சொல்லவில்லை.

அதன் காரணம், புத்தர் மிகவும் சாதாரண மனிதர்களிடம் பேசிக் கொண்டிருந்தார். ஆகவே இதுவே கூட அந்த இடைவெளியை அடைய வேண்டும் என்ற ஆசையை உருவாக்கி விடலாம். பின் அந்த இடைவெளியை அடைய வேண்டும் என்ற ஆசையே விழிப்புணர்வுக்குத் தடையாக மாறலாம். ஏனெனில் இடைவெளியை அடைய வேண்டும் என்று ஆசைப்பட்டு விட்டால் நீ மூச்சை முந்திக் கொண்டு போவாய். மூச்சு உள்ளே புகுந்து கொண்டிருக்கும். ஆனால் நீ அதற்கு முன்னால் நகருவாய். ஏனெனில் நீ வரப்போகிற இடைவெளியின் மீதே ஆர்வம் கொண்டிருக்கிறாய். ஆனால் அது எதிர்காலத்திலேயே

வரப் போகிறது. புத்தர் ஒருபோதும் இதைக் குறிப்பிடவில்லை. ஆகவே புத்தரின் யுக்தி இதில் பாதிதான்.

ஆனால் மறுபாதி தானாகவே பின் தொடரும். நீ தொடர்ந்து மூச்சை முழு உணர்வுக்கு, விழிப்புணர்வுக்கு, கொண்டுவரும் பயிற்சியைச் செய்து வந்தால், திடீரென்று ஒருநாள், உன்னை அறியாமல், நீ அந்த இடைவெளியை அடைவாய். ஏனெனில் உனது விழிப்புணர்வு துல்லியமானதாக, ஆழமானதாக, வலிவுள்ளதாக ஆகும்பொழுது, உனது விழிப் புணர்வு ஒரு குறிப்பிட்ட அடைப்பிற்குள் மட்டுமாக ஆகும் பொழுது – இந்த முழு உலகமும் அடைப்பிற்கு வெளியே என்றாகிவிடுகிறது; உன் மூச்சு உள்ளே வருவது அல்லது வெளியே போவது மட்டுமே உன் உலகம், உன் முழு உணர்விலும் இதுவே நிறைந்திருக்கிறது – திடீரென்று நீ அந்த இடைவெளியை, மூச்சு இல்லாத அந்த இடைவெளியை, கண்டிப்பாக உணருவாய்.

நீ உன் மூச்சோடு நுட்பமாக நகர்ந்து கொண்டிருக்கையில், மூச்சு இல்லாத இடத்தை எப்படி நீ உணராமல் போக முடியும்? நீ திடீரென்று மூச்சைக் காணவில்லை என்பதை உணருவாய். மூச்சு வெளியே போகவுமில்லை, உள்ளே வரவுமில்லை என்பதை நீ உணரும் ஒரு கணம் வரும். மூச்சு சுத்தமாக நின்று விட்டது. அந்த நின்றுவிட்ட நிலையில் – 'கிடைக்கப் பெற்றவர் ஆகலாம்!'

இந்த ஒரு யுக்தியே லட்சக்கணக்கானவர்களுக்குப் போதும். முழு ஆசியாக் கண்டமும் பலபல நூற்றாண்டுகளாக இந்த யுக்தியின் முயற்சியில் வாழ்ந்து கொண்டிருக்கிறது. திபெத், சைனா, ஜப்பான், பர்மா, தாய்லாந்து, இலங்கை – இந்தியாவைத் தவிர்த்து மற்ற முழு ஆசியாவும் இந்த யுக்தியை முயற்சித்தன. இந்த ஒரே ஒரு யுக்தியின் மூலம், ஆயிரம் ஆயிரம் பேர் ஞானமடைந்தார்கள். இது வெறும் முதல் யுக்தியே.

ஆனால் துரதிஷ்டவசமாக, இந்த யுக்தி புத்தரின் பெயருடன் சம்பந்தப்பட்டு விட்டதால், இந்துக்கள் இதை ஒதுக்கவே முயற்சித்து வந்துள்ளனர். இது மேன்மேலும் புத்தரினுடைய முறையாக அறியப்பட்டதால், இந்துக்கள் இதைச் சுத்தமாக மறந்துவிட்டனர். அது மட்டுமல்ல, மற்றொரு காரணத்திற்காகவும் அவர்கள் இதை ஒதுக்க முயற்சித்தனர். அது என்னவென்றால், இந்த யுக்தியே சிவா குறிப்பிடும் முதல் யுக்தியாக இருப்பதால், பல புத்த மதத்தினர் இந்த 'விஞ்ஞான் பைரவ் தந்த்ரா' என்ற இந்தப் புத்தகமே ஒரு புத்த மதப் புத்தகம்தான், இந்துப் புத்தகம் அல்ல என்று உரிமை கொண்டாடினர்.

இது புத்தமதத்தையோ இந்துவையோ சேர்ந்ததல்ல – ஒரு யுக்தி வெறும் யுக்தி மட்டுமே. புத்தர் பயன்படுத்தினார், ஆனால் அது பயன்படுத்த ஏற்கனவே இருக்கிறது. கௌதம புத்தர் புத்தரானார், இந்த யுக்தியால் ஞானமடைந்தார். ஆனால் இந்த யுக்தி புத்தருக்கு முந்தையது; யுக்தி ஏற்கனவே இருந்தது. முயற்சி செய். இது ஒரு மிகவும் எளிய யுக்தி – உனக்கு எளியது என்று நான் சொல்ல வரவில்லை, மற்ற யுக்திகளோடு ஒப்பிட்டுப் பார்த்துச் சொல்கிறேன். மற்ற யுக்திகள் இதைவிடக் கடினமாயிருக்கும். அதனால்தான் இது முதல் யுக்தியாக, டெக்னிக்காகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

*2. இரண்டு மூச்சுகளுக்கு இடையிலுள்ள வளையும் புள்ளியைக் கவனி.*

---

❖ *இரண்டாவது யுக்தி – இந்த ஒன்பது யுக்திகளும் மூச்சுத் தொடர்பானதே. "மூச்சு விடுவதிலிருந்து போவதற்குத் திரும்புகையில், மறுபடியும் மூச்சு போவதிலிருந்து வருவதற்கு வளைகையில் – இந்த இரண்டு வளைவுகளிலும், அதை உணர்வாயாக!"*

---

இது அதுபோலவேதான். ஆனால் கொஞ்சம் வித்தியாசம். இப்போது வற்புறுத்தல் இடைவெளியின் மேல் இல்லை,

மாறாக வளைவின் மேல். வெளியே போகும், உள்ளே வரும் மூச்சு ஒரு வட்டத்தை உருவாக்குகிறது. நினைவில் வை, இவை இரண்டும் இணை கோடுகள் அல்ல. நாம் எப்போதும் அவைகளை இரண்டு இணை கோடுகளாகவே நினைக்கிறோம் – மூச்சு உள்ளே வருவதையும், மூச்சு வெளியே போவதையும். நீ அவைகள் இரண்டும் இணை கோடுகள் என்று கருதுகிறாயா? அவை அப்படியல்ல. மூச்சு உள்ளே வருவது ஒரு பாதி வட்டம்; மூச்சு வெளியே போவது அந்த வட்டத்தின் மறுபாதி.

ஆகவே இதைப் புரிந்துகொள் : முதலில், மூச்சு உள்ளே வருவதும், வெளியே போவதும் ஒரு வட்டத்தை உருவாக்கு கிறது. அவை இணை கோடுகள் அல்ல. ஏனெனில் இணை கோடுகள் ஒருபோதும் எந்த இடத்திலும் ஒன்றையொன்று சந்திப்பதில்லை. இரண்டாவது, உள்ளே வரும் மூச்சும், வெளியே போகும் மூச்சும், இரண்டு மூச்சுக்கள் அல்ல, அவை ஒரே மூச்சு. உள்ளே வரும் அதே மூச்சே வெளியே போகிறது. ஆகவே அது உள்ளே திரும்புமிடம் ஒன்று இருக்க வேண்டும். அது ஏதாவது ஒரு இடத்தில் திரும்ப வேண்டும். உள்ளே வரும் மூச்சு வெளியே போகும் மூச்சாக மாறும் ஏதாவது ஒரு புள்ளி கண்டிப்பாக இருக்க வேண்டும்.

ஏன் திரும்புவதின் மேல் இவ்வளவு வலியுறுத்தல்? ஏனெனில், சிவா சொல்கிறார், ''மூச்சு வருவதிலிருந்து போவதற்குத் திரும்புகையில், மறுபடியும் மூச்சு போவதிலிருந்து வருவதற்கு வளைகையில் – இந்த இரண்டு வளைவுகளிலும், அதை உணர்வாயாக.'' மிகவும் எளிது, ஆனால் அவர் சொல்கிறார் : வளைவுகளை உணர், அப்போது நீ சுயத்தை உணர்வாய்.

ஏன் வளைவு? உனக்கு வாகனம் ஓட்டத் தெரிந்தால் நீ கியர்களைப் பற்றி அறிவாய். ஒவ்வொரு முறை நீ கியரை மாற்றும்போதும், நீ நியூட்ரல் கியரைத் தாண்டித்தான் செல்ல வேண்டும். ஆனால் அது ஒரு கியரே அல்ல. முதல் கியரிலிருந்து

நீ இரண்டாம் கியருக்குச் சென்றாலும், இரண்டிலிருந்து மூன்றாம் கியருக்குச் சென்றாலும், எப்படியானாலும் நீ எப்பொழுதும் நியூட்ரல் கியரைக் கடந்தே செல்ல வேண்டும். அந்த நியூட்ரல் கியர் தான் திரும்பும் புள்ளி. அந்தத் திரும்பும் புள்ளியில், முதல் கியர் இரண்டாவதாக, இரண்டாவது மூன்றாவதாக என்று மாறுகிறது. உன் மூச்சு உள்ளே சென்று திரும்புகிறது, அது நியூட்ரல் கியரைக் கடக்கிறது; இல்லாவிட்டால் அது திரும்ப முடியாது. அது நியூட்ரல் இடத்தை, எதுவுமற்ற இடத்தைத் தாண்டி வருகிறது.

அந்த எதுவுமற்ற இடத்தில், நியூட்ரல் இடத்தில், நீ உடம்புமல்ல ஆன்மாவுமல்ல, பொருளுமல்ல, அறிவுமல்ல. ஏனென்னில் உடம்பு உன் ஜீவிதத்தின் ஒரு கியர், ஆன்மா, அறிவு, உன் ஜீவிதத்தின் மற்றொரு கியர்கள். நீ ஒரு கியரிலிருந்து மற்றொரு கியருக்கு மாறிக்கொண்டே இருக்கிறாய். ஆனால் உனக்கு ஒரு நியூட்ரல் கியர் இருந்தாக வேண்டும். அங்கு நீ உடம்புமல்ல, மனமுமல்ல. அந்த நியூட்ரல் கியரில், எதுவுமற்ற இடத்தில் நீ வெறும் இருப்பு, வெறும் ஒரு பிரபஞ்ச இருப்பு – தூய்மையான, எளிமையான, எந்த உருவுமெடுக்காத, மனமற்ற ஒரு இருப்பு.

அதனால்தான் அந்த வளைவில் அவ்வளவு வற்புறுத்தல். மனிதன் ஒரு இயந்திரம் – ஒரு பெரிய, மிகவும் சிக்கலான இயந்திரம். உனக்கு உன் உடம்பில் பல கியர்கள் உள்ளன, உன் மனத்தில் பல கியர்கள் உள்ளன. உனக்கு நீயாய் இருக்கும் மாபெரும் இயந்திரத்தைப் பற்றிய விழிப்புணர்வு இல்லை. ஆனால் நீ ஒரு மாபெரும் இயந்திரம். அதைப் பற்றி உனக்கு விழிப்புணர்வு இல்லாமலிருப்பதே நல்லது; அப்படியிருந்தால் நீ பயித்தியமாகி விடுவாய். விஞ்ஞானிகள் சொல்கிறார்கள், நாம் மனித உடலுக்கு இணையான ஒரு தொழிற்சாலையை உருவாக்க வேண்டிவந்தால், அதற்கு நான்கு சதுர மைல் இடம் தேவைப் படும். மேலும் அதிலிருந்து உண்டாகும் சப்தத்தினால் நூறு சதுர

மைல் பரப்பளவு இடம் பாதிக்கப்படும். இப்படிப்பட்ட மாபெரும் இயந்திரம் உடல்.

இந்த உடம்பு மாபெரும் இயந்திர சாதனம் – இதற்கு ஈடு இணையே இல்லை. உன்னில் கோடி கோடியான செல்கள் உள்ளன. ஒவ்வொரு செல்லும் உயிர்த்துடிப்போடு இருக்கிறது. நீ கிட்டத்தட்ட ஆறு லட்சம் கோடி செல்கள் வசிக்கும் ஒரு நகரம், கிட்டத்தட்ட ஆறு லட்சம் கோடிப் பேர் உன்னில் வசிக்கின்றனர், இந்த முழு நகரமும் மிகவும் அமைதியாக, எந்தப் பிரச்சனையும் இல்லாமல் ஓடிக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு கணமும் இந்த இயந்திரம் வேலை செய்து கொண்டிருக்கிறது. இது மிகவும் சிக்கலானது. இந்த யுக்திகள் உனது உடம்பின் இயக்கத்திலும், உனது மனதின் இயக்கத்திலும் இருக்கும் பல புள்ளிகளோடு தொடர்புள்ளதாக இருக்கும். ஆனால் நீ திடீரென்று இந்த இயந்திர இயக்கத்தின் ஒரு பாகமல்லாமல் போகக் கூடிய புள்ளிகளின் மேலேயே இந்த யுக்திகளின் வலியுறுத்தல் இருக்கும் – இதை நினைவில் கொள். திடீரென்று நீ இந்த இயக்கத்தின் பாகமல்ல. நீ கியர்களை மாற்றும்போது வரும் கணங்கள்.

உதாரணமாக, இரவில் நீ தூக்கத்தில் விழுகையில் நீ கியரை மாற்றுகிறாய். ஏனெனில் பகலில் விழித்திருக்கும் உணர்வு நிலையில் உனக்கு ஒரு வேறுபட்ட இயக்கம் தேவை – மனதின் வேறொரு பாகம் வேலை செய்கிறது. நீ தூக்கத்தில் விழுந்தவுடன், இந்தப் பகுதி வேலை செய்வதை நிறுத்தி விடுகிறது. மனதின் மற்றொரு பகுதி வேலை செய்ய ஆரம்பிக்கிறது. அப்போது அங்கு ஒரு இடைவெளி, ஒரு எதுவுமற்ற இடம், ஒரு வளைவு வருகிறது. ஒரு கியர் மாற்றப்பட்டது. காலையில் நீ எழுந்திருக்கும்பொழுது, மறுபடியும் கியர் மாறுகிறது. நீ அமைதியாக உட்கார்ந்திருக்கிறாய், திடீரென்று யாரோ ஏதோ சொல்கிறார்கள், உடனே உனக்குக் கோபம் வருகிறது – நீ வேறொரு கியருக்கு மாறுகிறாய். அதனால்தான் எல்லாமே மாறிவிடுகிறது.

நீ கோபப்பட்டால், உன் மூச்சு திடீரென்று மாறும். உன் மூச்சு தாறுமாறாக, கொந்தளிப்பாக மாறும். உனது மூச்சில் ஒரு நடுக்கம் வந்துவிடும்; உனக்கு மூச்சுத் திணறுவது போல இருக்கும். உன் முழு உடம்பும் எதையாவது செய்யத் துடிக்கும், எதையாவது உடைக்க வேண்டும், அதன்பின் தான் அந்தத் திணறல் மறையும். உனது மூச்சு மாறும், உன் இரத்தம் வேறு தாளத்திற்கு மாறும், வேறு வித ஓட்டத்திற்கு. வெவ்வேறு விதமான கெமிக்கல்கள், இரசாயனப் பொருட்கள், உடம்பில் வெளிப்படுத்தப்பட வேண்டும். உன் முழு சுரப்பிகளின் வேலை முறையும் மாற வேண்டும். நீ கோபப்படும் பொழுது நீ வேறு ஆளாக மாறிவிடுகிறாய்.

ஒரு கார் நின்றுகொண்டிருக்கிறது..... நீ அதை ஸ்டார்ட் செய்து விட்டாய். எந்தக் கியரும் போடவில்லை, நியூட்ரலி லேயே விட்டு விட்டாய். அது துடித்துக் கொண்டு, நடுங்கிக் கொண்டு, சக்தியை உற்பத்தி செய்துகொண்டு இருக்கும், ஆனால் அது நகர முடியாது; அது சூடாகி விடும். அதனால்தான், கோபம் வரும்போது நீ எதையும் செய்ய முடியாதபோது, நீ சூடாகி விடுகிறாய். இயந்திர இயக்கம் எதையாவது செய்யத் தயாரா யிருக்கிறது. ஆனால் நீ எதுவும் செய்யவில்லை – அப்போது நீ சூடாகி விடுவாய். நீ ஒரு இயந்திர இயக்கம், ஆனால், மேலும், வெறும் இயந்திர இயக்கம் மட்டுமல்ல. நீ அதைவிட அதிகம். ஆனால் அந்த ''அதிகம்'' கண்டுபிடிக்கப்பட வேண்டும். நீ ஒரு கியருக்கு மாறும்பொழுது, உள்ளே எல்லாமும் மாறுகிறது. நீ கியரை மாற்றும்பொழுது, அங்கு ஒரு திருப்பம், ஒரு வளைவு இருக்கிறது.

சிவா சொல்கிறார், ''மூச்சு வருவதிலிருந்து போவதற்குத் திரும்புகையில், மறுபடியும் மூச்சு போவதிலிருந்து வருவதற்கு வளைகையில் – இந்த இரண்டு வளைவுகளிலும், அதை உணர்வாயாக.''

திருப்பத்தில் விழிப்புணர்வோடிரு. ஆனால் இது மிகச் சிறிய வளைவு; மிகக் கூர்மையாகப் பார்த்தல் தேவை. ஆனால்

நமக்கு எந்த ஆழ்ந்து பார்க்கும் திறமையும் இல்லை; நம்மால் எதையும் ஆழ்ந்து பார்க்க முடியாது. நான் உன்னிடம், ''இந்தப் பூவை ஆழ்ந்து பார்; நான் உன்னிடம் கொடுக்கும் இந்தப் பூவை ஆழமாகப் பார்'' என்றால், உன்னால் அதை ஆழ்ந்து பார்க்க முடியாது. ஒரு கண நேரம் நீ அந்தப் பூவைப் பார்ப்பாய், பின் நீ எதைப்பற்றியாவது யோசனை செய்ய ஆரம்பித்து விடுவாய். அது அந்தப் பூவைப் பற்றியதாகக் கூட இருக்கலாம். ஆனால் அது 'அந்தப் பூவாக' இருக்காது. நீ அந்தப் பூவைப் பற்றி இணைக்கலாம், எவ்வளவு அழகாக இருக்கிறது அது என்று அதைப்பற்றி – அப்போதே நீ நகர்ந்து விட்டாய். இப்போது அந்தப் பூ உனது ஆழ்ந்த பார்வையின் முன் இல்லை. நீ எங்கேயோ போய்விட்டாய். நீ, இது சிவப்பாயிருக்கிறது, இது நீலநிறம், இது வெண்மைநிறம் என்று சொல்ல ஆரம்பிக்க லாம்..... அப்போதே நீ நகர்ந்து விட்டாய். ஆழ்ந்து பார்த்தல், நோக்குதல் என்பதன் அர்த்தம், எந்த வார்த்தையையும் கொண்டு வராமல், எந்த வார்த்தைப் படுத்தலும் இல்லாமல், உள்ளே எதுவும் தோன்றாமல் – அதனுடன் இருப்பது மட்டும். உன்னால் ஒரு மலருடன் மூன்று நிமிடத்திற்கு இருக்க முடிந்தால், முழுதாக, மனதின் செயல்பாடில்லாமல் இருக்க முடிந்தால், அது நிகழும் – கிடைக்கப் பெற்றவராகலாம். அதை உணர்வாய்.

ஆனால் நாம் ஆழ்ந்து நோக்குபவர்களே அல்ல. நாம் விழிப்புணர்வுடன் இல்லை, நாம் கவனத்துடன் இல்லை, நம்மால் எதற்கும் கவனிப்பைக் கொடுக்க முடியாது. நாம் சும்மா குதித்துக் கொண்டேயிருக்கிறோம். இது நமது கலாச்சாரத்தின் ஒரு பகுதி, நமது குரங்குக் கலாச்சாரத்தின் பகுதி. நமது மனம் குரங்கு மனத்தின் வளர்ச்சியே. ஆகவே அந்தக் குரங்கு தொடர்ந்து கொண்டிருக்கிறது. அது இங்கிருந்து அங்குத் தாவிக் கொண்டே இருக்கிறது. குரங்கு அசையாமல் உட்கார முடியாது. அதனால் தான் புத்தர் எந்த அசைவும் இல்லாமல் சும்மா உட்காருவதை மிகவும் வற்புறுத்தினார். ஏனெனில் அப்போது குரங்கு மனம் அது போகிற போக்கில் அனுமதிக்கப்படுவ தில்லை.

ஜப்பானில் அவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட வகையான தியானம் இருக்கிறது. அதை அவர்கள் 'ஸாஸென்' என்று அழைக்கிறார்கள். 'ஸாஸென்' என்ற ஜப்பான் வார்த்தைக்கு சும்மா உட்கார்ந்திருப்பது, எதுவும் செய்யாமல் என்று அர்த்தம். எந்த வித அசைவுக்கும் அனுமதி கிடையாது. ஒருவன் சிலை போல உட்கார்ந்திருக்க வேண்டும் – எந்த வித அசைவுமின்றி, சவம் போல. ஆனால் வருடக் கணக்கில் சிலை போல உட்கார வேண்டிய அவசியமில்லை. உன்னால் உனது மூச்சின் திருப்பத்தை எந்தவித மனத்தின் அசைவும் இன்றி ஆழ்ந்து நோக்க முடிந்தால், நீ நுழைந்துவிட்டாய். நீ உனக்குள் நுழைந்து விடுவாய் அல்லது உள்ளிருக்கும் கடந்ததற்குள் நுழைந்து விடுவாய்.

ஏன் இந்தத் திருப்பங்கள் அவ்வளவு முக்கியம்? அவை முக்கியமானவை. ஏனெனில் திருப்பத்தில், மூச்சு நீ வேறு திசையில் செல்வதற்கு விட்டு விடுகிறது. அது உன்னோடு இருக்கிறது அது உள்ளே வரும்போது; அது உன்னோடு இருக்கும் அது வெளியே போகும் போதும். ஆனால் திருப்பத்தில் அது உன்னோடு இல்லை, நீயும் அதனோடு இல்லை. அந்தக் கணத்தில் மூச்சு உன்னிலிருந்து வேறுபட்டது, நீ மூச்சிலிருந்து வேறுபட்டவன் : அந்தக் கணத்தில், மூச்சுதான் வாழ்க்கை என்றால், நீ இறந்தவன்; மூச்சுதான் உன் உடம் பென்றால், நீ உடம்பில்லாதவன்; மூச்சுதான் உன் மனமென்றால் நீ மனமற்றவன்.

நீ கவனித்திருக்கிறாயா இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை, நீ மூச்சை நிறுத்தினால், திடீரென்று மனமும் நிற்கும். உன் மூச்சை இப்போது இந்தக் கணம் நீ நிறுத்தினால், உன் மனம் திடீரென்று நிற்கும்; மனம் வேலை செய்ய முடியாது. திடீரென்று மூச்சு நின்றவுடன் மனம் நிற்கிறது. ஏன்? ஏனெனில் அவை பிரிந்துவிடுகின்றன. நகரும் மூச்சே மனத்துடன், உடம்புடன் சேர்ந்துள்ளது; நகராத மூச்சு பிரிந்தே இருக்கிறது. அப்போது நீ நியூட்ரல் கியரில் இருக்கிறாய். கார் இஞ்சின் ஓடிக்

கொண்டிருக்கிறது, சக்தியோடு இருக்கிறது, கார் சப்தமிட்டுக் கொண்டிருக்கிறது – அது முன்னே போகத் தயாராக இருக்கிறது – ஆனால் அது கியரில் இல்லை, அதாவது காரின் உடம்பும், காரின் இயக்கமும் சேரவில்லை. கார் இரண்டாக இருக்கிறது இப்போது. அது ஓடத் தயாராக இருக்கிறது. ஆனால் ஓடும் இயக்கம் அதோடு இப்போது சேர்ந்ததில்லை.

இதுவேதான் நிகழ்கிறது, மூச்சு ஒரு வளைவு எடுக்கும்போது. நீ அதோடு சேர்ந்து இல்லை. அந்தக் கணத்தில் நீ 'நான் யார்' என்பதைப் பற்றி சுலபமாக விழிப்புணர்வு கொள்ளலாம். இந்த ஜீவிதத்தின் அர்த்தமென்ன? இருப்பது என்பதன் அர்த்தமென்ன? இந்த உடம்பாகிய வீட்டின் உள்ளே இருப்பது யார்? யார் வீட்டிலுள்ள எஜமானன்? நான் வெறும் வீடு மட்டுமா அல்லது அங்கு எஜமானன் யாரேனும் உண்டா? நான் வெறும் இயந்திர இயக்கமா அல்லது இந்த இயக்கத்தை ஊடுருவியுள்ளே ஏதோ வேறொன்று இருக்கிறதா? அந்தத் திரும்பும் இடைவெளியில், ''அதை உணர்வாயாக'' என்று சிவா சொல்கிறார். அவர் சொல்கிறார், திரும்புவதைக் குறித்து விழிப்புணர்வு கொள், அப்போது நீ உணர்ந்த ஆன்மாவாக மாறிவிடுவாய்.

3. இரண்டு மூச்சுகளும் கலக்கும் புள்ளியைக் கவனி.

❖ *மூன்றாவது மூச்சு யுக்தி: ''அல்லது, எப்பொழுதெல்லாம் உள் மூச்சும் வெளி மூச்சும் கலக்கிறதோ, அந்தச் சமயத்தில் சக்தி அற்றதும் சக்தி நிறைந்ததும் ஆன மையத்தைத் தொடுவாயாக.''*

நாம் மையமாகவும், மேல்புறமாகவும் பிரிந்திருக்கிறோம். உடம்பே மேல்புறம்; நமக்கு உடம்பைத் தெரியும், நமக்கு மேல்புறத்தைத் தெரியும். நமக்கு வெளி வட்டம் தெரியும், ஆனால் மையம் எங்கே இருக்கிறதென்று நமக்குத் தெரியாது. வெளி மூச்சு உள் மூச்சோடு கலக்கையில், அவை இரண்டும் ஒன்றாகையில், அது வெளி மூச்சா அல்லது உள் மூச்சா என்று

உன்னால் சொல்ல முடியாதபோது....... மூச்சு வெளியே போகிறதா உள்ளே வருகிறதா என்று பிரித்துச் சொல்வதும், வரையறுத்துச் சொல்வதும் கடினமாயிருக்கும் சமயத்தில், மூச்சு உள்ளே ஊடுருவியுள்ள வெளியே வர ஆரம்பிக்கின்ற நிலையில், அங்கு ஒரு கலக்கும் கணம் உள்ளது. அது வெளியே போவது மல்ல, உள்ளே வருவதும் அல்ல. மூச்சு நின்றுவிட்டது. அது வெளியே போகும்போது அது நகரும் சக்தி, அது உள்ளே வரும்போது அது நகரும் சக்தி. அது இரண்டுமற்ற தருணத்தில், அது அமைதியாயிருக்கையில், நகராமலிருக்கையில், நீ மையத்திற்கு அருகிலிருக்கிறாய். உள்ளே வெளியே போகும் மூச்சுக்கள் கலக்கும் புள்ளிதான் உன் மையம்.

இந்த வழியில் இதைப் பார்: மூச்சு உள்ளே போகும் பொழுது, அது எங்குப் போகும்? அது உன் மையத்திற்குப் போகும், அது உன் மையத்தைத் தொடும். அது வெளியே போகும்போது, அது எங்கிருந்து வெளியே போகும்? அது உனது மையத்திலிருந்தே நகர்கிறது. உனது மையம் தொடப்பட வேண்டும். அதனால்தான்தானோ ஞானிகளும், ஜென் ஞானி களும் தலை உனது மையமல்ல, தொப்புள்தான் உனது மையம் என்று சொல்கிறார்கள். மூச்சு தொப்புளுக்குப் போகிறது, பின் அங்கிருந்து வெளியே வருகிறது. அது மையத்திற்கே போகிறது, மையத்திலிருந்தே வருகிறது.

நாம் சொன்னதுபோல, மூச்சு உனக்கும் உன் உடம்புக்கும் ஒரு பாலம். உனக்கு உடம்பு தெரியும், ஆனால் உன் மையம் எங்கேயிருக்கிறது என்று உனக்குத் தெரியாது. மூச்சு எப்போதும் மையத்திற்குப் போகிறது, பிறகு அங்கிருந்து வெளியேறுகிறது. ஆனால் நாம் போதுமான அளவு மூச்சை இழுப்பதில்லை. ஆகவே, சாதாரணமாக அது மையத்திற்கு உண்மையில் போவ தில்லை – தற்சமயம், இப்போதெல்லாம், அது மையத்திற்குச் செல்வதில்லை. ஆகவேதான் எல்லோரும் ''மையமிழந்து'' தடுமாற்றமாக உணர்கின்றனர். இன்றைய நாகரிக உலகத்தில், தங்களை நினைத்துப் பார்க்கக் கூடியவர்கள் எல்லோரும்

அவரவர்களுடைய மையத்தை இழந்திருப்பதாகவே உணர் கின்றனர்.

தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தையைப் பார், அதனுடைய மூச்சைக் கவனி. மூச்சு உள்ளே போகிறது; வயிறு மேலே வருகிறது. மார்பு எந்தவித மாறுதலும் இல்லாமல் அப்படியே இருக்கிறது. அதனால்தான் குழந்தைகளுக்கு விரிந்த மார்பு கிடையாது, வெறும் வயிறுதான் – மிகவும் சக்தியோடு இயங்கும் வயிறு. மூச்சு உள்ளே வருகிறது, உடனே வயிறு மேலே வருகிறது; மூச்சு வெளியே போகிறது, உடனே வயிறு கீழே போகிறது; வயிறு அசைகிறது. குழந்தைகள் அவர்களுடைய மையத்தில் இருக்கின்றனர். அதனால்தான் அவர்கள் அவ்வளவு ஆனந்தமாய், அவ்வளவு சுகமாய், அவ்வளவு சக்தி நிறைந்தவர் களாய், ஒருபோதும் சோர்வடையாமல் – பொங்கி வழிபவர் களாய், எப்பொழுதும் நிகழ்காலத்தில் எந்தவித இறந்தகாலமும், எதிர்காலமும் இல்லாதவர்களாய் இருக்கின்றனர்.

ஒரு குழந்தை கோபம் கொள்ள முடியும். அப்படி அவன் கோபம் கொள்ளும்போது, அவன் முழுமையாகக் கோபம் கொள்கிறான்; அவன் கோபமாய் மாறிப் போகிறான். அப்போது அவனது கோபமும் ஒரு அழகாக இருக்கிறது. ஒருவன் முழுமை யாகக் கோபம் கொள்கையில், கோபத்திற்கு அதற்கென்று ஒரு அழகு வருகிறது. ஏனெனில் முழுமைக்கு எப்பொழுதும் ஒரு அழகு உண்டு.

நீ கோபம் கொண்டவனாய் அதே சமயம் அழகாக இருக்க முடியாது, நீ அசிங்கமாகி விடுவாய், ஏனெனில் அரைகுறை எப்பொழுதும் அசிங்கம்தான். கோபத்தோடு மட்டுமல்ல இது. அன்பு செய்யும் பொழுதும் நீ அசிங்கமாயிருக்கிறாய், ஏனெனில் நீ அரைகுறையாயிருக்கிறாய், பாகமாக; நீ முழுமையாய் இல்லை. யாரையாவது நீ அன்பு செய்கையில், கலவியில் ஈடுபட்டிருக்கையில் உன் முகத்தைப் பார். ஒரு நிலைக் கண்ணாடியின் முன்னால் அன்பு செய், கலவியில் ஈடுபடு,

அப்போது உன் முகத்தைப் பார் – அது அசிங்கமாய், மிருகத்தைப் போல இருக்கும். அன்பில் கூட உன் முகம் அசிங்கமாய் மாறுகிறது. ஏன்? அன்பு செய்வதிலும் ஒரு தகராறு, நீ எதையோ பிடித்துவைத்துக் கொள்கிறாய். நீ மிகவும் கஞ்சத்தனத்தோடுதான் கொடுக்கிறாய். உனது அன்பில் கூட நீ முழுமையாக இல்லை. நீ மொத்தத்தையும், அனைத்தையும் கொடுப்பதில்லை.

ஒரு குழந்தை கோபத்திலும், வன்முறையிலும் கூட முழுமையாக இருக்கிறது. அவனது முகம் அழகாகவும், ஒளிவீசவும் ஆக மாறுகிறது; அவன் இங்கு இக்கணத்தில் இருக்கிறான். அவனது கோபம் இறந்த காலத்தின் ஏதோ வொன்றின் சம்பந்தம் கொண்டதோ, எதிர்காலத்தின் ஏதோ வொன்றுடன் சம்பந்தப்பட்டதோ அல்ல, அவன் கணக்குப் போடுவதில்லை, அவன் வெறும் கோபமாய் இருக்கிறான். குழந்தை அதன் மையத்தில் இருக்கிறது. நீ உன் மையத்தில் இருக்கும்பொழுது நீ எப்பொழுதும் முழுமையாகவே இருப்பாய். நீ எது செய்தாலும் அது முழுமையான செயலா யிருக்கும்; நல்லதோ, கெட்டதோ, அது முழுதாயிருக்கும். நீ ஒரு பாகமாக, துண்டாக இருக்கும்பொழுது, நீ மையமற்று இருக்கும்பொழுது, உனது ஒவ்வொரு செயலும் கண்டிப்பாக உன் துண்டுகளாகவே இருக்கும். உனது முழுமை நேர் கொள்வதில்லை, வெறும் ஒரு துண்டு, அந்தத் துண்டு, பாகம், முழுமைக்கு எதிராகச் செயல்படுகிறது – அது அசிங்கமான நிலையை உண்டு பண்ணுகிறது.

நாமெல்லோரும் குழந்தைகளாய் இருந்தவர்களே. நமது மூச்சு ஏன் நாம் வளருகையில் மேம்போக்கானதாக ஆகிவிட்டது? அது ஒருபோதும் வயிற்றுக்குப் போவதில்லை, அது ஒருபோதும் தொப்புளைத் தொடுவதில்லை. அது மேலும் மேலும் அதிகமாக ஆனால் அது மார்பை மட்டும் தொட்டுவிட்டு வெளியேறி விடுகிறது. அது ஒருபோதும் மையத்திற்குச் செல்வதில்லை. நீ மையத்தைப்பற்றிப் பயப்படுகிறாய். ஏனெனில் நீ மையத்திற்குச் சென்றால் நீ முழுமையாகி விடுவாய். நீ ஒரு பகுதியாக,

துண்டாக இருக்க விரும்பினால், இதுதான் துண்டாக இருக்க இயங்க வேண்டிய நிலை.

நீ அன்பு செய்கிறாய் – நீ மையத்திலிருந்து மூச்சு விட்டால், நீ அதில் முழுமையாக இறங்குவாய். நீ பயப்படுகிறாய். நீ அவ்வளவு பாதுகாப்பற்று, அவ்வளவு திறந்து யாரிடமும், எந்த ஒருவரிடமும் இருக்கப் பயப்படுகிறாய். நீ அவனை உன்னை நேசிப்பவன் என்றோ, நீ அவளை நீ நேசிப்பவள் என்றோ அழைக்கலாம். ஆனாலும் நீ பயப்படுகிறாய். மற்றொருவர் அங்கு இருக்கிறார். நீ முழுதாக அரணில்லாமல், திறந்து இருந்தால் என்ன நடக்கும் என்று உனக்குத் தெரியாது. அப்படி முழுதும் திறந்து இருப்பது என்பது வெறோரு புதிய உணர்வு. யாரோ ஒருவரிடம் அவ்வளவு முழுமையாகக் கொடுக்க நீ பயப்படுகிறாய். நீ மூச்சுவிட முடியாது; உன்னால் ஆழமாக மூச்சுவிட முடியாது. நீ மூச்சைத் தளர்வாக, அது மையத்திற்குச் செல்லும் அளவுக்குத் தளர்வாக விட முடியாது – ஏனெனில் மூச்சு மையத்திற்குச் செல்லும் கணமே உனது செயல் முழுமை யானதாக ஆகிவிடுகிறது.

ஆனால் நீ முழுமையாய் இருக்கப் பயப்படுகிறாய். ஆகவே நீ மேம்போக்காக மூச்சு விடுகிறாய். நீ தேவைப்படும் அளவுக்கு மட்டும், குறைவாக மூச்சுவிடுகிறாய், எவ்வளவு அதிகம் முடியுமோ அந்த அளவில் அல்ல. அதனால்தான் வாழ்க்கை வாழ்க்கையாக இல்லை. நீ குறைந்த தேவை யளவுக்கே மூச்சு விடும்பொழுது, வாழ்க்கை வாழ்க்கையாக இல்லாமல் போகிறது; நீ குறைந்தபட்ச வாழ்க்கையை வாழ்கிறாய், அதிக பட்சமாக அல்ல. நீ அதிகபட்ச வாழ்க்கையை வாழலாம் – அப்போது வாழ்வு பொங்கிப் பெருகும். ஆனால் அப்போது அங்குக் கஷ்டங்கள் தோன்றும். நீ ஒரு கணவனாக இருக்க முடியாது, ஒரு மனைவியாக இருக்க முடியாது, வாழ்க்கை பொங்கிப் பெருகும்போது. எல்லாமே சிரமமாகப் போகும்.

வாழ்க்கை பொங்கிப் பெருகினால், அன்பும் பொங்கிப் பெருகும். அப்போது நீ ஒருவரோடு ஒட்டிக்கொண்டிருக்க

முடியாது. அப்போது நீ எல்லாப் பக்கமும் ஓடுவாய்; எல்லாப் பரிமாணங்களிலும் நீ நிறைவாய். அப்போது ஆபத்தை மனம் உணருகிறது. ஆகவே துடிப்போடு வாழாமல் இருப்பதே நல்லதாகப்படுகிறது. எந்த அளவு அதிகம் இறந்தவனாக இருக்கிறாயோ அந்த அளவு நீ பாதுகாப்பாய் இருப்பாய். எந்த அளவு அதிகம் நீ இறந்தவனாக இருக்கிறாயோ அந்த அளவு எல்லாமும் கட்டுப்பாட்டில் இருக்கும். நீ கட்டுப்படுத்த முடியும்; அப்போது நீ எஜமானனாகத் தொடர்ந்து இருக்கலாம். நீ உன்னை ஒரு எஜமானனாக உணருகிறாய், ஏனெனில் உன்னால் கட்டுப் படுத்த முடியும். உன்னால் உன் கோபத்தைக் கட்டுப்படுத்த முடியும். உன்னால் உன் அன்பைக் கட்டுப்படுத்த முடியும். உன்னால் எல்லாவற்றையும் கட்டுப்படுத்த முடியும். ஆனால் உன் குறைந்தபட்ச சக்தி மட்டத்தில் மட்டுமே இப்படிக் கட்டுப் படுத்துவது சாத்தியம்.

எல்லோரும் ஏதோ ஒரு சமயத்தில் கண்டிப்பாக உணர்ந் திருக்க வேண்டும் : அதாவது, ஏதாவது ஒரு கணத்தில் அவர் குறைந்தபட்சத்திலிருந்து அதிகபட்ச நிலைக்குத் திடீரென்று மாறியிருப்பார். நீ ஒரு மலை வாசஸ்தலத்திற்குப் போயிருக் கிறாய். திடீரென்று நீ நகரத்திலிருந்து, அதன் சிறையிலிருந்து வெளியே இருக்கிறாய். நீ சுதந்திரமாக உணர்கிறாய். பரந்து கிடக்கும் வானம், பச்சைப் பசேலென்றிருக்கும் காடு, மேகத்தை முட்டி நிற்கும் உயரம். திடீரென்று நீ ஒரு ஆழமான மூச்செடுக்கிறாய். நீ அதைக் கவனிக்காமல் இருந்திருக்கலாம்.

இப்போது நீ மலை வாசஸ்தலத்திற்குப் போனால், கவனி. உண்மையில் அந்த மலை வாசஸ்தலமல்ல மாற்றத்தைக் கொண்டு வருவது. அது உன் மூச்சுதான். நீ ஒரு ஆழமான மூச்செடுக்கிறாய். நீ சொல்கிறாய், ''ஆஹா! ஆஹா! நீ மையத்தைத் தொடுகிறாய், நீ ஒரு கண நேரம் முழுமை ஆகிறாய், அப்போது எல்லாமே ஆனந்தமாகிறது. இந்த ஆனந்தம் மலை வாசஸ்தலத்திலிருந்து வந்ததல்ல, இந்த ஆனந்தம் உனது

மையத்திலிருந்து வந்தது – நீ திடீரென்று அதைத் தொட்டு விட்டாய்.

நீ நகரத்தில் பயத்தோடு இருக்கிறாய். எல்லா இடத்திலும் மற்றவர்கள் இருக்கிறார்கள். ஆகவே நீ கட்டுப்படுத்திக் கொள் கிறாய். நீ கத்த முடியாது, நீ சிரிக்க முடியாது. என்ன ஒரு துரதிர்ஷ்டம்! நீ வீதியில் ஆடவும் பாடவும் முடியாது. நீ பயத்தோடு இருக்கிறாய் – ஒரு போலீஸ்காரன் ஏதாவது ஒரு மூலையில் இருக்கலாம் அல்லது ஒரு மதபோதகர் அல்லது ஒரு நீதிபதி அல்லது ஒரு அரசியல்வாதி அல்லது ஒரு ஒழுக்க மானவன். யாரோ ஒருவன் ஏதோ ஒரு மூலையில் இருப்பான். ஆகவே நீ வீதியில் ஆடக்கூட முடியாது.

பெர்னான்ட் ரஸ்ஸல் ஏதோ ஒரு இடத்தில் கூறியுள்ளார், ''நான் நாகரிகமடைந்ததை விரும்புகிறேன், ஆனால் நாம் நாகரிகத்தை மிகப் பெரிய விலை கொடுத்து அடைந்துள்ளோம்.'' நீ வீதிகளில் ஆட முடியாது, ஆனால் நீ ஒரு மலை வாசஸ் தலத்திற்குப் போகிறாய். அங்குத் திடீரென்று நீ ஆட முடியும். நீ வானத்துடன் தனியாக இருக்கிறாய், மேலும் வானம் சிறைப் படுத்துவதல்ல. அது வெறும் திறப்பு, திறப்பு, மேலும் திறப்பு – பரந்தது, எல்லையற்றது. திடீரென்று நீ ஒரு ஆழமான மூச்செடுக்கிறாய், அது உன் மையத்தைத் தொடுகிறது, உடனே ஆனந்தம். ஆனால் நீண்ட நேரம் அப்படி இருப்பதில்லை. ஒன்று அல்லது இரண்டு மணி நேரத்தில், மலை வாசஸ்தலம் மறைந்து விடும். நீ அங்கு இருக்கலாம், ஆனால் அந்த மலை வாசஸ்தலம் மறைந்துவிடும்.

உனது கவலைகள் திரும்ப வந்துவிடுகின்றன. நகரத்திற்குத் தொலைபேசியில் பேச வேண்டும், உன் மனைவிக்கு ஒரு கடிதம் எழுத வேண்டும் என்றெல்லாம் யோசிக்க ஆரம்பிப்பாய், அல்லது இன்னும் மூன்று நாளில் நான் ஊர் திரும்ப வேண்டும் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று எண்ண ஆரம்பிப்பாய். நீ இப்போதுதான் வந்து சேர்ந்தாய்.

அதற்குள் போவதற்கான ஏற்பாடுகளைச் செய்கிறாய். நீ திரும்பி விட்டாய்.

அந்த ஆழமான மூச்சு உண்மையில் உன்னிடமிருந்ததல்ல; அது திடீரென நிகழ்ந்தது. சூழ்நிலையின் மாற்றத்தால் கியர் மாறிவிட்டது. நீ ஒரு புதுச் சூழலில் இருந்தாய், பழையபடி உன்னால் சுவாசிக்க முடியவில்லை, ஆகவே ஒரு கண நேரம் புது மூச்சு உள்ளே வந்தது. அது மையத்தைத் தொட்டது, அதனால் நீ ஆனந்தத்தை உணர்ந்தாய்.

சிவா சொல்கிறார், நீ ஒவ்வொரு கணமும் மையத்தைத் தொடுகிறாய், அல்லது அப்படி நீ தொடவில்லையென்றால் உன்னால் தொட முடியும். ஆழமாக, மெதுவாக மூச்செடுங்கள். மையத்தைத் தொடுங்கள்; மார்பிலிருந்து மூச்சு விடாதே – அது ஒரு தந்திரம். நாகரிகம், படிப்பு, ஒழுக்கம், இவை உருவாக்கியது இந்த மேம்போக்கான மூச்சு. மையத்தினுள் ஆழமாகச் செல்வது நல்லது. ஏனெனில் அப்படி இல்லையென்றால் நீ ஆழமாக மூச்செடுக்க முடியாது.

பாலுணர்வு அமுக்கத்திலிருந்து விடுபட்டால் ஒழிய, மனிதகுலம், மனிதன் உண்மையாக மூச்சுவிட முடியாது. மூச்சு ஆழமாக அடி வயிற்றுக்குள் போகும்பொழுது, அது பாலுணர்வு மையத்திற்கு சக்தி கொடுக்கிறது. அது பாலுணர்வு மையத்தைத் தொடுகிறது; அது பாலுணர்வு மையத்தை உட்புறத்திலிருந்து அழுத்திக் கொடுக்கிறது, மசாஜ் செய்கிறது. பாலுணர்வு மையம் அதிகம் செயல்படுவதாக, அதிகத் துடிப்புள்ளதாக மாறுகிறது. நாகரிகம் பாலுணர்வைக் கண்டு பயப்படுகிறது. நாம் நமது குழந்தைகள், பாலுணர்வு மையத்தை, பாலுணர்வு உறுப்பைத் தொடுவதற்கு அனுமதிப்பதில்லை. நாம் சொல்கிறோம், ''நிறுத்து! தொடாதே!''

குழந்தை ஒன்று முதலில் அதனுடைய பாலுணர்வு மையத்தைத் தொடட்டும், பின் ''நிறுத்து!'' என்று சொல்லிவிட்டு அந்தக் குழந்தையைப் பார். நீ, ''நிறுத்து! உன் பாலுணர்வு

மையத்தைத் தொடாதே!'' என்று சொல்லும்பொழுது மூச்சு உடனடியாக மேம்போக்கானதாக மாறுகிறது – ஏனெனில் வெறும் கை மட்டும் பாலுணர்வு மையத்தைத் தொடுவதில்லை, அடி ஆழத்தில் மூச்சும் அதைத் தொடுகிறது. மூச்சு தொடர்ந்து அதைத் தொட்டுக் கொண்டிருக்கையில், கையைத் தொடாமல் நிறுத்துவது கடினம். ஆகவே கையை நிறுத்தினால், அப்போது மூச்சையும் தொடாமல் நிறுத்துவது, ஆழமாகப் போகாமல் தடுப்பது, அடிப்படையாகிறது, தேவைப்படுகிறது. அது மேம்போக்காகவே இருக்க வேண்டும்.

நாம் பாலுணர்வுக்குப் பயப்படுகிறோம். உடம்பின் கீழ்ப் பகுதி உடம்பிலே மட்டும் கீழே இல்லை, அது நமது மதிப்பிலும் கீழாகவே மாறிவிட்டது. அது ''மட்டமானது'' என்று பழிக்கப்படுகிறது. ஆகவே ஆழமாகப் போகாதே, வெறும் மேம்போக்காக இரு, நாம் கீழ்நோக்கி மட்டுமே சுவாசிக்க முடியும் என்பது துரதிர்ஷ்டவசமானது என்றெல்லாம் நினைக் கிறோம். மதபோதகர்களை அனுமதித்தால், அவர்கள் முழு இயக்கத்தையுமே மாற்றிவிடக் கூடும். அவர்கள் உன்னை மேலே தலைக்குள் மட்டுமே மூச்சை இழுக்க அனுமதிப்பார்கள். ஏனெனில் அப்போது நீ கொஞ்சம் கூடப் பாலுணர்வை உணர மாட்டாய்.

நாம் பாலுணர்வு அற்ற மனித குலத்தை உருவாக்க வேண்டுமானால், அப்போது நாம் மூச்சுவிடும் முறையை மாற்ற வேண்டும். மூச்சு தலைக்குள் மட்டுமே போக வேண்டும், ''சகஸ்ரஹார்''க்கு மட்டும் – தலையிலுள்ள ஏழாவது மையத்திற் குள் மட்டும் – திரும்ப வாய்க்கு வந்துவிட வேண்டும். இதுதான் மூச்சுப் பாதையாக இருக்க வேண்டும். வாயிலிருந்து ஏழாவது மையத்திற்கு. அது அடி ஆழத்திற்குப் போகக் கூடாது. ஏனெனில் கீழே ஆபத்து. ஆழத்திற்குப் போகப் போக, உடற்கூற்றின் ஆழமான தட்டுகளுக்கு அருகாமையில் செல்வாய். நீ மையத்தை அடைகிறாய், அப்படியெனில் அந்த மையம் பாலுணர்வு மையத்திற்கு மிக அருகாமையில் இருக்கிறது – மிக அருகில்.

அது அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனெனில் பாலுணர்வே வாழ்வு.

இதை இந்த வழியாகப் பார் : மூச்சு என்பது வாழ்க்கை மேலிருந்து கீழ்நோக்கி வருவது; பாலுணர்வு என்பது வாழ்க்கை யின் மறுபுறம் – கீழிருந்து மேலே வருவது. பாலுணர்வு சக்தி பாய்கிறது, மூச்சு சக்தி பாய்கிறது. மூச்சின் பாதை உடம்பின் மேல் பாகம், பாலுணர்வின் பாதை உடம்பின் கீழ்பாகம். அவை சந்திக்கும்போது வாழ்வை அவை உருவாக்குகின்றன; அவை சந்திக்கும் பொழுது அவை உடலை, உடற்சக்தியை உண்டாக்கு கின்றன. ஆகவே உனக்குப் பாலுணர்வு கண்டு பயமென்றால், அவை இரண்டுக்கும் இடையே அதிக தூரத்தை உண்டாக்கு, அவை சந்திக்க அனுமதியளிக்காதே. ஆகவே உண்மையில், நாகரிகமடைந்த மனிதன் ஒரு காயடிக்கப்பட்ட மனிதன்; ஆகவே தான் நமக்கு மூச்சைப் பற்றி எதுவும் தெரியவில்லை, அதனால் இந்தச் சூத்திரத்தைப் புரிந்துகொள்வதும் மிகவும் கடினமாக இருக்கிறது.

சிவா சொல்கிறார், ''எப்பொழுதெல்லாம் உள்மூச்சும், வெளிமூச்சும் கலக்கிறதோ, அந்தச் சமயத்தில், சக்தி அற்றதும், சக்தி நிறைந்ததும் ஆன மையத்தைத் தொடுவாயாக.'' அவர் மிகவும் எதிர்மறையான வார்த்தைகளைப் பயன்படுத்துகிறார்: ''சக்தி அற்றதும், சக்தி நிறைந்ததும்.'' அது சக்தி அற்றது. ஏனெனில் உங்கள் உடல்களோ, உங்கள் மனங்களோ, அதற்குச் சக்தி தர முடியாது. உங்கள் உடம்பின் சக்தி அங்கில்லை, உங்கள் மனதின் சக்தி அங்கில்லை. ஆகவே நீ அறிந்த உன் அடையாளத்தைப் பொருத்தவரை அது சக்தி அற்றது. ஆனால் அது சக்தி நிறைந்தது. ஏனெனில் அது பேரண்ட இயக்கத்தின் சக்தியைக் கொண்டுள்ளது, உன் உடலின் சக்தியைக் கொண்டு அது இல்லை.

உன் உடலின் சக்தி வெறும் எரிபொருள் சக்தி. அது பெட்ரோலைத் தவிர வேறல்ல. நீ எதையாவது சாப்பிடுகிறாய்,

நீ எதையாவது குடிக்கிறாய் – அது சக்தியை உண்டாக்குகிறது. அது உடம்புக்கு எரிபொருளைக் கொடுக்கிறது. சாப்பிடுவதை யும், குடிப்பதையும் நிறுத்து, உன் உடம்பு செத்து விழுந்துவிடும். உடனேயல்ல, குறைந்தது மூன்று மாதம் ஆகும் அதற்கு. ஏனெனில் உன்னிடம் பெட்ரோல் சேமிப்புகள் உள்ளன. நீ நிறைய சக்தியைச் சேகரித்து வைத்துள்ளாய்; எந்தப் பெட்ரோல் நிலையத்திற்கும் போகாமல் அது குறைந்தது மூன்று மாதம் ஓட முடியும். அது ஓட முடியும்; அதனிடம் சேமிப்புகள் உள்ளன. ஏதாவது அவசரத்திற்கு, எந்த அவசர நிலைக்கும், உனக்கு இந்தச் சேமிப்புகள் தேவைப்படலாம்.

இது ''எரிபொருள்'' சக்தி. மையம் எந்த எரிபொருள் சக்தியையும் பெறுவதில்லை. ஆகவேதான் சிவா அதை சக்தி அற்றது என்று சொல்கிறார். அது நீ சாப்பிடுவதையும், குடிப்பதையும் சார்ந்தது அல்ல. அது பேரண்ட இயக்கத்தின் மூலத்துடன் தொடர்பு கொண்டது; அது பேரண்ட இயக்கத்தின் சக்தி. அதனால்தான் அவர் ''சக்தி அற்றதும், சக்தி நிறைந்ததும்'' என்று சொல்கிறார். மூச்சு வெளியே போகும் அல்லது உள்ளே வரும் மையத்தை நீ உணரும் அந்தக் கணத்தில், மூச்சுகள் கலக்கும் அந்தப் புள்ளியை, அந்த மையத்தை, நீ அதைக் குறித்து விழிப்புணர்வு அடைகையில், அப்போது ஞானமடைகிறாய்.

4. மூச்சு நிற்கையில் விழிப்புணர்வு கொள்.

---

❖ **நான்காவது மூச்சு யுக்தி: ''அல்லது, மூச்சு முழுவதுமாக வெளியேறிப் பின் அது நின்றுவிடும் போது, அல்லது முழுவதும் உள்ளே வந்து பின் அது நின்றுவிடும் போது – இதுபோன்ற பேரண்ட சிறு நிறுத்தத்தில், ஒருவனுடைய சிறிய சுயம் காணாமல் போகிறது. இது தூய்மையற்ற ஒருவனுக்கே கடினமானது.''**

---

அப்படியானால் இது எல்லோருக்குமே கடினம்தான். ஏனெனில் அவர் சொல்கிறார் ''இது தூய்மையற்ற ஒருவனுக்கே கடினமானது.''

ஆனால் தூய்மையான ஒருவன் யார்? இது உனக்குக் கடினமானது; நீ இதைப் பயிற்சி செய்ய முடியாது. ஆனால் நீ இதை சிலசமயம் திடீரென்று உணர முடியும். நீ ஒரு காரை ஓட்டிக் கொண்டிருக்கிறாய். அப்போது திடீரென்று ஒரு விபத்து நடக்கப் போவதை உணருகிறாய். மூச்சு நின்றுவிடும். அது வெளியேறியிருந்தால், அது வெளியே அப்படியே இருக்கும். அது உள்ளே வந்திருந்தால், அது உள்ளே அப்படியே இருக்கும். இவ்வளவு அவசரத்தில் நீ சுவாசிக்க முடியாது. நீ அதையெல்லாம் செய்து கொண்டிருக்க முடியாது. எல்லாமும் நின்று விடுகிறது, விட்டு விலகி விடுகிறது.

அல்லது, மூச்சு முழுவதுமாக வெளியேறிப் பின் அது நின்று விடும்போது, அல்லது முழுவதும் உள்ளே வந்து பின் அது நின்றுவிடும்போது - இதுபோன்ற பேரண்ட சிறு நிறுத்தத்தில், ஒருவனுடைய சிறிய சுயம் காணாமல் போகிறது உனது சிறிய சுயம் தினசரித் தேவைகளுக்கானது மட்டுமே. .அவசர காலங்களில் உன்னால் அதை நினைவில் கொள்ள முடியாது. நீ யாராக இருக்கிறாயோ - உன் பெயர், உன் வங்கிக் கணக்கு, உன் கௌரவம், எல்லாம் - ஆவியாகி விடுகிறது. உனது கார் இன்னொரு காருடன் மோதப் போய்க் கொண்டிருக்கிறது; அடுத்த கணம் அங்கு சாவுதான். இந்தக் கணத்தில் ஒரு சிறு நிறுத்தம் ஏற்படுகிறது. திடீரென்று மூச்சு நிற்கிறது. நீ அந்தக் கணத்தை விழிப்புணர்வு கொள்ள முடிந்தால், நீ இலக்கை அடையலாம்.

ஜென் துறவிகள் இந்த முறையை ஜப்பானில் பெரிதும் முயற்சி செய்துள்ளனர். அதனால்தான் அவர்களின் முறைகள் மிகவும் ஏறுமாறாகவும், அறிவுக்குப் புறம்பாகவும், மிகவும் புதுமையாகவும் இருக்கின்றன. அவர் சிறிதும் நினைத்துப் பார்க்க முடியாத செயல்களைச் செய்துள்ளார். ஒரு குரு யாரோ ஒருவனை வீட்டை விட்டு வெளியே வீசுவார்; தூக்கி எறிவார். திடீரென்று ஒரு குரு சிஷ்யனை எந்தவிதக் காரணமுமில்லாமல், எந்தவித முகாந்திரமுமில்லாமல், தாறுமாறாக அறைய ஆரம்பிப்பார்.

நீ உனது குருவுடன் உட்கார்ந்திருக்கிறாய். மேலும் எல்லாமும் சரியாயுள்ளது. நீ சும்மா பேசிக் கொண்டிருக்கிறாய், அப்போது அவர் உன்னை அடிக்க ஆரம்பிப்பார். அந்தச் சிறு நிறுத்தத்தை உருவாக்குவதற்காக. அங்கு ஏதாவது ஒரு காரணமிருந்தால் அந்தச் சிறு நிறுத்தம் உருவாக்கப்பட முடியாது. நீ உன் குருவைத் தூற்றியிருந்து அப்போது அவர் உன்னை அடிக்க ஆரம்பித்தால் அங்கு ஒரு காரணமிருக்கிறது, உனது மனம் புரிந்து கொள்ளும், ''நான் அவரைத் தூற்றினேன், அதற்காக அவர் என்னை அடிக்கிறார்.''

உண்மையில், உன் மனம் அதை ஏற்கனவே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. ஆகவே அங்கு எந்த இடைவெளியும் இல்லை. ஆனால் நினைவில் கொள், ஒரு ஜென் குரு நீ அவரைத் தூற்றியதற்காக உன்னை அடிக்க மாட்டார், அவர் சிரிப்பார். ஏனெனில் அப்போது சிரிப்புதான் அந்தச் சிறு நிறுத்தத்தைக் கொண்டுவர முடியும். நீ அவரைத் தூற்றுகிறாய், அவரிடம் மடத்தனமாகப் பேசுகிறாய். ஆகவே நீ கோபத்தை எதிர்பார்ப்பாய். ஆனால் அவர் உரக்கச் சிரிக்கவோ அல்லது ஆடவோ ஆரம்பிப்பார். இது எதிர்பாராதது; இது சிறு நிறுத்தத்தை ஏற்படுத்த முடியும். நீ இதைப் புரிந்து கொள்ள முடியாது. உன்னால் புரிந்து கொள்ள முடியாதபோது மனம் நிற்கிறது, அப்படி மனம் நிற்கும்போது மூச்சு நிற்கிறது. இரண்டு வழிகளிலும் நடக்கும் - மூச்சு நின்றுவிட்டால் மனம் நிற்கிறது; மனம் நின்றுவிட்டால் மூச்சு நிற்கிறது.

நீ குருவைப் புகழ்ந்து கொண்டிருக்கிறாய். அதனால் நீ நல்ல விதமாக உணருகிறாய். மேலும் நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய், ''இப்போது குரு கண்டிப்பாக சந்தோஷப் பட்டிருப் பார்.'' ஆனால் திடீரென்று அவர் தனது கைத்தடியை எடுத்து உன்னை அடிக்கஆரம்பிக்கிறார் - அதுவும் ஈவிரக்கமில்லாமல். ஏனெனில்

ஜென் குருக்கள் இரக்கமற்றவர்கள். அவர் உன்னை அடிக்க ஆரம்பிக்கிறார்; என்ன நடக்கிறது என்றே உன்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. மனம் நிற்கிறது. அங்கு ஒரு சிறு நிறுத்தம். உனக்கு யுக்தி தெரிந்திருந்தால் அப்போது நீ உன் சுயத்தை அடையலாம்.

யாரோ ஒருவர் புத்தத்தன்மையை, அவரது குரு அவரைத் திடீரென்று அடிக்க ஆரம்பித்ததால் அடைந்தார் என்று பல கதைகள் உள்ளன. நீ அதைப் புரிந்துகொள்ள முடியாது – என்ன மடத்தனம்! எப்படி ஒருவன் யாரோ ஒருவரால் அடிக்கப் படுவதால் அல்லது யாரோ ஒருவரால் ஜன்னல் வழியாக வெளியே வீசப்படுவதால் புத்தத்தன்மையை அடைய முடியும்? உன்னை யாராவது கொன்றால் கூட, உன்னால் புத்தத்தன்மையை அடைய முடியாது. ஆனால் நீ இந்த யுக்தியைப் புரிந்து கொண்டால், பின் அவைகளைப் புரிந்து கொள்வது சுலபம்.

குறிப்பாக மேற்கத்திய நாடுகளில், கடந்த முப்பது அல்லது நாற்பது வருடங்களில் ஜென் மிகவும் பிரபலமடைந்துள்ளது – ஒரு பேஷனாகியுள்ளது. ஆனால் அவர்கள் இந்த யுக்தியை அறியாத வரை, அவர்களால் ஜென்னைப் புரிந்து கொள்ள முடியாது. அவர்கள் அதைக் காப்பியடிக்கலாம். ஆனால் காப்பி யடிப்பதில் எந்தப் பயனும் இல்லை. மாறாக, அது ஆபத்தானது. இந்த விஷயங்களெல்லாம் காப்பியடிக்கக் கூடியவை அல்ல.

முழு ஜென் யுக்திகளும் சிவாவின் நாலாவது யுக்தியையே அடிப்படையாகக் கொண்டவை. ஆனால் இது துரதிர்ஷ்ட வசமானது. இப்போது நாம் ஜென்னை ஜப்பானிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது. ஏனெனில், நாம் முழுப் பாரம்பரியத்தையும் இழந்து விட்டோம்; நமக்கு அதைத் தெரியாது. இந்த முறையில் சிவாவே மிகச்சிறந்த விற்பன்னர். அவர் தேவியைத் திருமணம் செய்துகொள்ளத் தனது பரிவாரங் களுடன் வந்தபோது, அந்த முழு நகரமும் இந்தச் சிறு நிறுத்தத்தை உணர்ந்திருக்கும், ஸ்தம்பித்திருக்கும்..... முழு நகரமும்!

தேவியின் தந்தை தனது பெண்ணை இந்த ''ஹிப்பி''க்கு மணமுடிக்க விரும்பவில்லை – சிவாவே உண்மையான ஹிப்பி. தேவியின் தந்தை இவருக்கு முற்றிலும் எதிர்ப்பு. எந்தத் தந்தையும் இந்தத் திருமணத்தை ஆதரிக்க மாட்டார். ஆகவே தேவியின் தந்தையைப் பற்றி எதுவும் நாம் தவறாகச் சொல்ல முடியாது. எந்தத் தந்தையும் தனது மகளை சிவாவுக்கு மணம் முடித்துக் கொடுக்க மாட்டார். ஆனால் தேவியின் வற்புறுத்த லால் அவர் ஒத்துக்கொள்ள வேண்டி வந்தது – விருப்ப மில்லாமல், மகிழ்ச்சியில்லாமல் அவர் ஒத்துக் கொண்டார்.

இதன் பிறகு வருகிறது கல்யாண ஊர்வலம். சிவாவையும் அவரது ஊர்வலத்தையும் பார்த்து மக்கள் ஓட ஆரம்பித்தார் களாம். அந்த முழுப் பரிவாரமும் போதை மருந்துகள், கஞ்சா அடித்திருக்க வேண்டும். அவர்கள் ''பறந்து'' கொண்டிருந் தார்கள். உண்மையில் இப்போதுள்ள எல்எஸ்டி போதைப் பொருட்கள், கஞ்சா ஆகியவை ஒன்றுமே இல்லை. சிவாவும் அவரது சிஷ்யர்களும், நண்பர்களும் வண்ணமய மணக்காட்சி கொடுக்கும் முடிவானதை அறிவார்கள் – அது ''சோம ரசா.'' ஆல்டுவஸ் ஹெக்ஸ்லே முடிவான வண்ணமய மணக்காட்சி களைக் கொடுப்பதற்கு ''சோமா'' என்று பெயரிட்டது சிவாவினால் தான். அவர்கள் மிதந்து கொண்டிருந்தார்கள், ஆடிக் கொண்டும், சிரித்துக் கொண்டும், கூச்சலிட்டுக் கொண்டும் இருந்தார்கள். முழு நகரமும் ஓட்டம் பிடித்தது. முழு நகரமும் அந்தச் சிறு நிறுத்தத்தை உணர்ந்திருக்க வேண்டும், ஸ்தம்பித்துப் போயிருக்க வேண்டும்.

எந்த எதிர்பாராததும், நினைத்துப் பார்க்காததும், திடீரென்று நடப்பதும் தூய்மையற்றவர்களிடம் அந்தச் சிறு நிறுத்தத்தை உருவாக்க முடியும். ஆனால் தூய்மையானவனுக்கு அது போன்றவைகளின் தேவை இல்லை. தூய்மையானவனுக்கு அந்தச் சிறு நிறுத்தம் எப்போதும் அங்கே இருக்கிறது. பல தடவைகள், தூய்மையான மனங்களுக்கு, மூச்சு நின்று விடுகிறது. உன் மனம் தூய்மையாக இருந்தால் – தூய்மையானது

என்பதன் அர்த்தம் நீ ஆசைப்படாமல், ஏங்காமல், எதையும் தேடாமல் இருப்பது – தூய்மையான அமைதியாக, தூய்மையான வெருளியாக இருந்தால் நீ உட்கார்ந்திருப்பாய். திடீரென்று உன் மூச்சு நிற்கும்.

நினைவில் கொள் இதை : மனம் நகர்வதற்கு மூச்சு நகர வேண்டும். மனம் வேகமாக நகர மூச்சும் வேகமாக நகர வேண்டும். அதனால்தான் நீ கோபப்படும் பொழுது, மூச்சு வேகமாகப் போய் வருகிறது. கலவியின் போது மூச்சு வெகு வேகமாகப் போய் வருகிறது. அதனால்தான் ஆயுர்வேதத்தில் – இந்தியாவின் மூலிகை வைத்திய முறைகளில் ஒன்று – அதிக கலவியில் ஈடுபட்டால் ஆயுள் குறையும் என்று சொல்கிறது. ஆயுர்வேதாவின்படி உன் ஆயுள் குறையும். ஏனெனில் ஆயுர் வேதா வாழ்க்கையை இத்தனை மூச்சு என்றே அளவிடுகிறது. உனது மூச்சு வேகமானால், உனது ஆயுள் குறையும்.

தற்போதைய மருத்துவம் சொல்கிறது, பாலுணர்வு உனது இரத்த ஓட்டத்திற்கு உதவுகிறது, பாலுணர்வு தளர்வடைய உதவுகிறது. பாலுணர்வை அமுக்கி வைப்பவர்கள் வேண்டு மானால் சிரமப்படலாம் – முக்கியமாக இதய நோயால். இதுவும் சரிதான், ஆயுர்வேதாவும் சரிதான், ஆனால் இரண்டும் எதிர்மறை போலத் தோன்றுகின்றன. ஆனால் ஆயுர்வேதா ஐயாயிரம் வருடங்களுக்கு முன் கண்டுபிடிக்கப்பட்டது. அப்போது ஒவ்வொரு மனிதனும் நிறைய உழைத்தான்; வாழ்க்கையே உழைப்புதான். ஆகவே தளர்த்திக்கொள்ள எந்தத் தேவையும் இல்லை, இரத்த ஓட்டத்திற்குச் செயற்கையாகக் கருவிகள் உருவாக்க வேண்டிய தேவையில்லை.

ஆனால் இன்று, உடலுழைப்பு அதிகம் செய்யாதவர் களுக்கு, பாலுணர்வில் ஈடுபடுதலே அவர்கள் செய்யும் ஒரே வேலை. அதனால் இன்றைய மருத்துவம் சொல்வது இன்றைய மனிதனுக்குச் சரிதான். அவன் எந்த உடலை வருத்தும் செயலும் செய்வதில்லை. ஆகவே பாலுணர்வில் ஈடுபடுவது அதைக் கொடுக்கிறது. அதனால் இதயம் அதிகம் துடிக்கிறது, இரத்த

ஓட்டம் அதிக வேகமடைகிறது, மூச்சு ஆழமாகி மையம் வரை சென்று தொடுகிறது. ஆகவே பாலுணர்வில் ஈடுபட்ட பிறகு நீ தளர்வாக உணருகிறாய். மேலும் நீ தூக்கத்தில் சுலபமாக விழ முடிகிறது. பிராய்ட் சொல்கிறார், பாலுணர்வு தான் சிறந்த தூக்கத்தைக் கொண்டு வருவது என்று. அது அப்படித்தான் இன்றைய மனிதனைப் பொருத்தவரை.

பாலுணர்வில் மூச்சு வேகமாக மாறுகிறது; கோபத்தில் மூச்சு வேகமாக மாறுகிறது. பாலுணர்வில் மனம் ஆசை, காமம், தூய்மையற்றது இவற்றால் நிரம்புகிறது. மனம் தூய்மையாக இருக்கும்போது – மனதில் எந்த ஆசையும், எந்தத் தேடலும், எந்த நோக்கமும் இல்லாதபோது, நீ எங்கேயும் போகாமல், இங்கே இப்பொழுது ஒரு நிர்மலமான குளமாக அப்படியே இருக்கையில்….. ஒரு அலைகூட இல்லாமலிருக்கையில் – அப்போது மூச்சு தானாகவே நிற்கிறது. அதற்கு அங்கு எந்தத் தேவையுமில்லை.

இந்தப் பாதையில், சிறிய சுயம் காணாமல் போகிறது, நீ உயர்ந்த சுயத்தை, மேன்மையான சுயத்தை அடைகிறாய்.

இன்று இதுபோதுமென்று நினைக்கிறேன்.

## கேள்விகள்

- ❖ எப்படி மூச்சின் இடைவெளியைப் பற்றிய விழிப்புணர்வு ஞானத்தைக் கொண்டுவரும்?
- ❖ எப்படி வேலை செய்து கொண்டே அதே சமயம் மூச்சைப் பற்றிய விழிப்புணர்வையும் பயிற்சி செய்வது?

★★★

**கேள்வி :**

---

❖ **மூச்சின் செயல்பாட்டில் உள்ள ஒரு குறிப்பிட்ட புள்ளியைக் குறித்து விழிப்புணர்வு கொண்டவுடன் எப்படி ஒருவன் ஞானமடைந்து விடுவது சாத்தியம்? மூச்சில் அவ்வளவு சிறிய மற்றும் கண நேரமே இருக்கும் இடைவெளியைப் பற்றி விழிப்புணர்வது கொள்வது மட்டுமே எப்படி உணர்வற்ற நிலையிலிருந்து விடுதலையைக் கொடுப்பது சாத்தியம்?**

---

இந்தக் கேள்வி முக்கியமானது, மேலும் இந்தக் கேள்வி பலரின் மனங்களிலும் எழுந்திருக்கக் கூடும். ஆகவே பல விஷயங்களைப் புரிந்து கொள்ள வேண்டும். முதலாவது, ஆன்மிகம் என்பது மிகவும் சிரமப்பட்டு அடைவது என்ற எண்ணம் உள்ளது. அது இரண்டுமல்ல : அதாவது அது சிரமமும் அல்ல, அது அடைவதுமல்ல. நீ எதுவாக இருக்கிறாயோ, அப்படியே. நீ ஏற்கனவே ஆன்மிகமானவன்தான். உனது ஜீவிதத் தில் மேலும் சேர்க்க வேண்டியது எதுவுமில்லை, உனது ஜீவிதத்தில் இருந்து நீக்கப்பட வேண்டியது எதுவுமில்லை. நீ எவ்வளவு சரியாக இருப்பது சாத்தியமோ அப்படியே இருக்கிறாய். இது எதிர்காலத்தில் ஏதோ ஒரு சமயத்தில் நீ மிகச் சரியாக ஆகி விடுவாய் என்பதல்ல, நீ நீயாக இருக்க மிகச் சிரமமான ஏதோ ஒன்றைச் செய்ய வேண்டும் என்பதல்ல. இது வேறு ஏதோவொரு இடத்தில் உள்ள ஏதோவொரு புள்ளிக்குச் செல்ல வேண்டிய பயணம் அல்ல; நீ வேறு ஏதோவொரு இடத்திற்குச் செல்ல வேண்டியதில்லை. நீ ஏற்கனவே அங்கு இருக்கிறாய். அடைய வேண்டியது எதுவோ அதை நீ ஏற்கனவே அடைந்து விட்டாய். இந்தக் கருத்து ஆழமாகப் போக வேண்டும். அப்போது மட்டுமே எப்படி இப்படிப்பட்ட எளிமை யான யுக்திகள் கூட உதவ முடியும் என்பதை உன்னால் புரிந்து கொள்ள முடியும்.

ஆன்மிகம் என்பது ஏதோ ஒன்றை அடைவது என்றால், அப்போது அது சிரமமாகத்தான் இருக்கும் – சிரமமாக மட்டு

மல்ல, உண்மையில் சாத்தியமில்லாததாகவும் இருக்கும். நீ ஏற்கனவே ஆன்மிகமானவன் இல்லையென்றால், உன்னால் அது முடியாது, உன்னால் அது ஒருபோதும் முடியாது, ஏனெனில் ஆன்மிகமில்லாத ஒருவன் ஆன்மிகமுள்ளவனாக எப்படி மாற முடியும்? நீ ஏற்கனவே தெய்விகமில்லையென்றால் அப்போது எந்தச் சாத்தியமும் இல்லை, எந்த வழியும் இல்லை. நீ எந்த அளவு முயற்சி செய்கிறாய் என்பது முக்கியமல்ல. ஏற்கனவே தெய்விகமல்லாத ஒருவன் செய்யும் முயற்சி தெய்விகத்தை உருவாக்க முடியாது. நீ தெய்விகமில்லையென்றால், உன் முயற்சியால் தெய்விகத்தை உருவாக்க முடியாது. அது கொஞ்சமும் சாத்தியமில்லை.

ஆனால் முழு சூழ்நிலையும் முற்றிலும் எதிரானது; நீ எதை அடைய விரும்புகிறாயோ அதுவாக ஏற்கனவே நீ இருக்கிறாய். உனது தாகத்தின் முடிவு ஏற்கனவே அங்கே இருக்கிறது. உன்னிடம் இப்பொழுதே இருக்கிறது. இப்போது இங்கேயே, இந்தக் கணமே, நீ தெய்விகம் என்று அறியப்படுவது எதுவோ அதுவாக இருக்கிறாய். முடிவாக அடைய வேண்டியது இங்கேயே உள்ளது; அது ஏற்கனவே உள்ளதுதான். அதனால்தான் எளிமையான யுக்திகள் கூட உதவ முடிகிறது. அது ஒரு அடையக்கூடியது அல்ல, ஆனால் ஒரு கண்டுபிடிப்பு. அது மறைந்துள்ளது, அது மிக மிகச் சிறிய விஷயங்களில் மறைந் திருக்கிறது.

சமூக முகம் என்பது ஆடையைப் போன்றது. உனது உடம்பு இங்கு இருக்கிறது, ஆடைகளின் பின்னால் மறைந் திருக்கிறது, அது போலவே உன் ஆன்மிகமும் இங்கே இருக்கிறது, குறிப்பிட்ட ஆடைகளின் மறைவில், இந்த ஆடை களே உன் சமூக முகம். நீ இங்கு இப்பொழுதே அம்மணமாக ஆக முடியும். அது போலவே நீ உன் ஆன்மிகத்திலும் அம்மண மாக ஆக முடியும். ஆனால் உனக்கு அதை மறைத்திருக்கும் ஆடைகளைத் தெரியாது. உனக்கு நீ எப்படி அவைகளில் மறைந் திருக்கிறாய் என்று தெரியாது; எப்படி அம்மணமாய் ஆவது

என்று உனக்குத் தெரியாது. நீ மிக நீண்ட காலமாக இந்த ஆடைகளில் இருந்து வருகிறாய் - பல பிறவிகளாக, பிறவி பிறவியாக நீ ஆடைகளில் இருந்து வருகிறாய் - ஆடைகளோடு உன் அடையாளம் மிகவும் ஒன்றிப் போய் விட்டது. இப்போது நீ அவைகளை வெறும் ஆடைகள் என்று நினைக்க முடியாது. இந்த ஆடைகளே நான் என்று நீ நினைக்கிறாய். இதுதான் ஒரே தடை.

உதாரணமாக, உன்னிடம் ஏதோவொரு பொக்கிஷம் உள்ளது. ஆனால் நீ அதை மறந்துவிட்டாய் அல்லது அது ஒரு பொக்கிஷம் என்பதை நீ இன்னும் உணர்ந்து கொள்ளவில்லை. ஆகவே நீ தொடர்ந்து வீதிகளில் பிச்சை எடுத்துக் கொண்டே இருக்கிறாய்..... நீ ஒரு பிச்சைக்காரன். யாராவது ஒருவர், ''உன் வீட்டிற்குள் போய்ப் பார். நீ பிச்சைக்காரனாக இருக்க வேண்டிய அவசியமில்லை, நீ இந்தக் கணமே ஒரு பேரரசனாக இருக்க முடியும்'' என்று சொன்னால், அந்தப் பிச்சைக்காரனின் பதில் இப்படித்தான் இருக்கும், ''என்ன மடத்தனமாக நீ பேசுகிறாய். இந்தக் கணமே எப்படி நான் பேரரசனாக முடியும்? நான் பல வருடமாகப் பிச்சை எடுத்துக் கொண்டிருக்கிறேன். அப்படியும் இன்னும் நான் பிச்சைக்காரனாகவே இருக்கிறேன். அப்படி யிருக்க நான் பல பிறவிகளாகப் பிச்சை எடுத்தாலும் நான் ஒரு பேரரசனாக ஆக முடியாது. ஆகவே நீ சொல்லும், ''நீ இந்தக் கணமே பேரரசனாக ஆக முடியும்'' என்பது மிகவும் முட்டாள் தனமான, அறிவுக்குப் பொருந்தாத பேச்சு.''

அது சாத்தியமல்ல. பிச்சைக்காரனால் அதை நம்ப முடியாது. ஏன்? ஏனெனில் பிச்சை எடுக்கும் மனம் என்பது நீண்ட நாள் பழக்கம். ஆனால் பொக்கிஷம் வீட்டிலேயே புதைந்திருக்கும் பொழுது, கொஞ்சம் தோண்டினால், கொஞ்சம் மண்ணை எடுத்தால், அந்தப் பொக்கிஷம் அங்கிருக்கும். உடனே அவன் பிச்சைக்காரனில்லாமல் ஆகிவிடுவான், அவன் ஒரு பேரரசனாவான்.

இதுவே தான் ஆன்மிகத்திலும்; அது புதைந்துள்ள ஒரு பொக்கிஷம். எங்கோ எதிர்காலத்தில் சாதிக்க வேண்டியது எதுவு மில்லை. நீ அதை இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. ஆனால் அது ஏற்கனவே உன்னிடம் உள்ளது. உன்னிடம் பொக்கிஷம் உள்ளது. ஆனால் நீ தொடர்ந்து பிச்சை எடுத்துக் கொண்டிருக் கிறாய்.

ஆகவே எளிமையான யுக்திகள் உதவ முடியும். மண்ணைக் கொஞ்சம் தோண்டுவது, சிறிது அப்புறப்படுத்துவது, ஒரு மிகப்பெரிய வேலையல்ல. ஆனால் உடனே நீ பேரரசனாக ஆக முடியும். நீ கொஞ்சம் தோண்ட வேண்டும், அதன் மேலுள்ள மண்ணை அப்புறப்படுத்த. நான் மண்ணை அப்புறப்படுத்த வேண்டும் என்று சொல்லும் போது, நான் அதை வெறும் குறியீடாக மட்டும் சொல்லவில்லை. உண்மையாகவே உனது உடம்பு இந்த மண்ணின் ஒரு பாகமே. மேலும் நீ அந்த உடம்பு டன் உன்னை அடையாளம் கொண்டவனாக மாறிவிட்டாய். இந்த மண்ணைக் கொஞ்சம் அப்புறப்படுத்து, ஒரு துளையை அதில் ஏற்படுத்து, அப்போது நீ பொக்கிஷத்தைக் கண்டு கொள்வாய்.

இதனால்தான் பலருக்கு இந்தக் கேள்வி எழக்கூடும். உண்மையில், ஒவ்வொருவருக்கும் இந்தக் கேள்வி எழும் : ''இவ்வளவு சிறிய இது போன்ற யுக்தி – உன் மூச்சைப் பற்றிய விழிப்புணர்வு கொள்வது, உள்ளே வரும் மூச்சு வெளியே போகும் மூச்சு இவைகளைப் பற்றிய விழிப்புணர்வு கொள்வது, இரண்டு மூச்சுகளுக்கு இடையேயுள்ள இடைவெளியை உணர்ந்து கொள்வது – இது போதுமா?'' இவ்வளவு சிறிய விஷயமா? ஞானமடைய இது போதுமா? இது மட்டும்தான் உனக்கும் புத்தருக்கும் இடையிலான வித்தியாசமா, அதாவது நீ இரண்டு மூச்சுகளுக்கு இடையேயுள்ள இடைவெளியை உணர வில்லை, புத்தர் அதை உணர்ந்துவிட்டார் – இது மட்டும்தானா? இது அறிவுக்குப் பொருந்தாமல் தெரிகிறது. உனக்கும் புத்தருக்கும் இடையிலான தூரம் மிகவும் பெரியது. அந்தத் தூரம்

எல்லையில்லாததாகத் தெரிகிறது. பிச்சைக்காரனுக்கும் பேரரச னுக்கும் இடையிலான தூரம் கணக்கிலடங்காததுதான். ஆனால் பொக்கிஷம் ஏற்கனவே அவனிடம் புதைந்திருந்தால் ஒரு பிச்சைக்காரன் உடனே பேரரசனாக முடியும்.

புத்தரும் உன்னைப் போன்ற ஒரு பிச்சைக்காரனாக இருந்தவர்தான். முதலிலிருந்தே அவர் புத்தராக இருக்கவில்லை. ஒரு குறிப்பிட்ட புள்ளியில் பிச்சைக்காரன் இறந்தான், அவர் எஜமானனாக மாறினார். உண்மையில் இது படிப்படியாக நிகழ்ந்தது அல்ல; புத்தர் தொடர்ந்து சேர்த்து வைத்துக் கொண்டே வந்தார். பின் ஒரு நாள் அவர் பிச்சைக்காரனில்லாமல் ஆகிவிட்டார். பிறகு அவர் பேரரசனானார் என்பது கிடையாது. அப்படியல்ல, ஒரு பிச்சைக்காரன் சேர்த்து வைத்துக்கொண்டே வருவதால் அவன் ஒரு பேரரசனாக மாற முடியாது, அவன் தொடர்ந்து பிச்சைக்காரனாகவே இருப்பான். அவன் ஒரு பணக்காரப் பிச்சைக்காரனாக மாறக் கூடும். ஆனால் அவன் ஒரு பிச்சைக்காரனாகவே தொடர்ந்து இருப்பான். பணக்காரப் பிச்சைக்காரன் என்பவன் ஏழைப் பிச்சைக்காரனைக் காட்டிலும் பெரிய பிச்சைக்காரன், அவ்வளவுதான்.

திடீரென்று ஒருநாள் புத்தர் உள்ளிருக்கும் பொக்கிஷத்தை உணர்ந்தார். அதன்பின் இனி அவர் பிச்சைக்காரனில்லை, அவர் ஒரு எஜமானனானார். கௌதம சித்தார்த்தாவுக்கும் கௌதம புத்தருக்கும் இடையிலுள்ள தூரம் எல்லையற்றது. அது உனக்கும் புத்தருக்கும் இடையிலுள்ள அதேயளவு தூரம்தான். ஆனால் பொக்கிஷம் எப்படிப் புத்தருக்குள் புதைந்திருந்ததோ அதே அளவு அது உன்னிடமும் புதைந்துள்ளது.

மற்றொரு உதாரணத்தை எடுத்துக் கொள்..... ஒரு மனிதன் கண்கள் குருடாக, நோய்வாய்ப்பட்ட கண்களுடன் பிறந்திருக் கிறான். குருடான மனிதனுக்கு, இந்த உலகம் வேறு விதமாக இருக்கும். ஒரு சிறிய ஆபரேஷன் இந்த முழு விஷயத்தையும் மாற்றிவிடும். ஏனெனில் கண்களை மட்டும் சரி செய்தால்

போதும். கண்கள் காணத் தயாராகும் கணத்திலேயே, பின்னால் மறைந்திருக்கும் பார்ப்பவன் கண்களின் மூலம் பார்க்க ஆரம்பிக்கிறான். பார்ப்பவன் ஏற்கனவே அங்கு இருக்கிறான், வெறும் ஜன்னலே இல்லாமல் இருக்கிறது. நீ ஜன்னல்களே இல்லாத வீட்டில் இருக்கிறாய். நீ சுவரில் ஒரு ஓட்டை போடலாம், அதன் மூலம் திடீரென்று நீ வெளியே பார்ப்பாய்.

நாம் ஏற்கனவே நாம் எதுவாக இருப்போமோ, நாம் எதுவாக இருக்க வேண்டுமோ, நாம் எதுவாக இருக்கப் போகிறோமோ, அதுவாகவே இருக்கிறோம். எதிர்காலம் ஏற்கனவே நிகழ்காலத்தில் மறைந்திருக்கிறது; முழுச் சாத்தியக் கூறும் இங்கே இந்த விதையிலேயே இருக்கிறது. ஒரு ஜன்னல் மட்டும் உடைக்கப்பட வேண்டும், ஒரு சிறிய ஆபரேஷன் மட்டும் செய்யப்பட வேண்டும். உன்னால் இதைப் புரிந்து கொள்ள முடிந்தால், அதாவது ஆன்மிகம் ஏற்கனவே அங்கிருக்கிறது, அது ஏற்கனவே அப்படித்தான், இதைப் புரிந்து கொண்டால் அப்போது எப்படி இவ்வளவு சிறிய முயற்சி உதவ முடியும் என்ற பிரச்சனை உனக்கு இருக்காது.

உண்மையில், பெரிய முயற்சி எதுவும் தேவையில்லை. சிறிய முயற்சிகள் மட்டுமே தேவை. அதோடு அது எவ்வளவு சிறியதோ அந்த அளவு நல்லது. மேலும் நீ முயற்சியே இல்லாமல் வேலையைச் செய்தால் அது இன்னும் நல்லது. அதனால்தான் அப்படி நிகழ்கிறது, பலமுறை அப்படி நிகழ்கிறது, அதாவது நீ அதிகம் முயற்சி செய்கையில், அதை அடைவது மிகவும் கடினமாகிறது. உனது முயற்சியே, உனது இறுக்கமே, உனது ஆக்கிரமிப்பே, உனது தாகமே, உனது எதிர்பார்ப்பே, தடையாக மாறுகிறது. ஆனால் மிகச் சிறிய முயற்சியில், ஜென்னில் அழைக்கும் முயற்சியற்ற முயற்சியில் – செய்யாதது போன்ற செய்கையில் – அது சுலபமாக நிகழ்கிறது. எந்த அளவு நீ அதன்பின்னால் பயித்தியமாயிருக்கிறாயோ, அந்த அளவு சாத்தியம் குறைகிறது. ஏனெனில் எங்கு ஊசி தேவைப்படுகிறதோ அங்கு நீ கத்தியைப் பயன்படுத்துகிறாய்.

கத்தி பயனளிக்காது. அது பெரியதாயிருக்கலாம், ஆனால் எங்கு ஊசி தேவைப்படுகிறதோ அங்குக் கத்தி பயன்படாது.

கசாப்பு வெட்டுபவனிடம் போ – அவனிடம் மிகப் பெரிய கருவிகள் இருக்கும். மூளை அறுவை சிகிச்சை செய்பவரிடம் போ : நீ அதுபோன்ற பெரிய கருவிகளை மூளை அறுவை சிகிச்சை நிபுணரிடம் பார்க்க முடியாது. அப்படி நீ பார்த்தால், உடனே தப்பித்துவிடு! மூளை அறுவை சிகிச்சை நிபுணர் ஒரு கசாப்புக்காரனல்ல. அவருக்கு மிகச் சிறிய கருவிகளே தேவை – எவ்வளவு சிறியதோ அவ்வளவு நல்லது.

ஆன்மிக யுக்திகள் மிகவும் நுட்பமானவை; அவை மேம்போக்கானவை அல்ல. அவை அப்படி இருக்க முடியாது. ஏனெனில் இந்த அறுவை சிகிச்சை மேலும் அதிகம் நுட்ப மானது. மூளையில் அந்த அறுவை சிகிச்சை நிபுணர் செய்வது இன்னும் கூட மேம்போக்கான பருப்பொருளுடன்தான். ஆனால் ஆன்மிகத் தளத்தில் நீ வேலை செய்யும்போது அந்த அறுவை சிகிச்சை மேலும் மேலும் அதிகம் அழகுள்ளதாக மாறுகிறது. எந்தப் பருப்பொருளும் அங்கில்லை. அது நுட்பமானதாக மாறுகிறது – இது ஒரு விஷயம்.

இரண்டாவது கேள்வியாளர் கேட்கிறார், ''சிறியதான ஏதோ ஒன்றால், எப்படிப் பெரிய நிலை சாத்தியமாக முடியும்?'' இந்தக் கோட்பாடு அறிவுக்குப் புறம்பாக, விஞ்ஞானத்திற்கு மாறாக இருக்கிறது. ஆனால் இப்போது விஞ்ஞானத்திற்குத் தெரியும், அதாவது துகள் எவ்வளவு சிறியதோ, எவ்வளவு சிறிய அணுவாக இருக்கிறதோ, அந்த அளவு அதிகம் வெடிக்கக் கூடியது – உண்மையில் மிகப் பெரிதாக. சிறியதாக இருக்கு மளவு, விளைவு பெரியது. நீ கடந்த 1945ம் ஆண்டிற்கு முன்பு நினைத்துப் பார்த்திருப்பாயா, எந்தக் கவிஞனாவது கற்பனையோ, கனவோ கண்டிருக்க முடியுமா, அதாவது இரண்டு அணுகுண்டுகள் இரண்டு பெரிய நகரங்களை – ஜப்பானின் ஹிரோஷிமா, நாகசாகி – மொத்தமாகத் துடைத்து எடுத்து

விட்டதை? இரண்டு லட்சம் மக்கள் சில வினாடிகளில் பிரபஞ்ச இருப்பிலிருந்து துடைத்து எறியப்பட்டனர். அதற்குப் பயன்படுத்தப்பட்ட வெடிபொருள் சக்தி எது? ஒரு அணு! அந்த மிகச் சிறிய துகள் இரண்டு நகரங்களை ஊதித் தள்ளி விட்டது. உன்னால் அணுவைப் பார்க்க முடியாது. உனது வெறும் கண்களால் அதை நீ பார்க்க முடியாது என்பது மட்டுமல்ல, நீ வேறு எந்த விதத்திலும் அதைப் பார்க்க முடியாது. அணுவை எந்தக் கருவி கொண்டும் பார்க்க முடியாது. நாம் வெறும் விளைவுகளையே பார்க்க முடியும்.

ஆகவே இமயமலை பெரியது என்று எண்ணிக் கொள்ளாதே, அவை பெரிய உடம்பைக் கொண்டிருக்கும் காரணத்தால். ஒரு அணு வெடிப்புக்கு முன் இமயமலை எதுவும் செய்ய முடியாது. ஒரு சிறிய அணு முழு இமயமலையையும் உடைத்து எறிந்துவிடக் கூடியது. பருப்பொருளின் அளவு அதன் சக்தியை எடுத்துக் காட்ட வேண்டுமென்பதில்லை. அதற்கு மாறாக, ஒன்று எவ்வளவு சிறியதோ, அந்த அளவு ஊடுருவு கிறது. ஒன்று சிறியதாக இருக்குமளவு, அது அதிகம் சக்தி நிறைந்து குவிந்ததாக உள்ளது.

இந்தச் சிறிய யுக்திகள் அணு போன்றவை. பெரிய செயல்கள் செய்பவர்களுக்கு அணு விஞ்ஞானம் தெரியாது. அணுக்களோடு வேலை செய்பவர் சிறிய ஆள், அவர் சிறிய விஷயங்களுடன் வேலை செய்யும் சிறிய ஆள் என்றும், இமயமலையுடன் வேலை செய்பவர் பெரிய ஆள் என்றும் நீ நினைக்கலாம். ஹிட்லர் மிகப்பெரும் மக்கள் கூட்டத்துடன் வேலை செய்தவர், மாவோ மிகப்பெரும் மக்கள் கூட்டத்திடம் வேலை செய்தவர். ஆனால் ஐன்ஸ்டீனும் பிளேனக்கும், அவர்கள் தங்கள் பரிசோதனைக் கூடத்தில் பொருளின் மிகச் சிறிய கூறுடன் – சக்தி துகள்கள் – வேலை செய்தவர்கள். ஆனால் முடிவாக, ஐன்ஸ்டீனுடைய ஆராய்ச்சிகளுக்கு முன்னால் அரசியல்வாதிகள் வெறும் கையாலாகாதவர்கள். அவர்கள்

பெரிய அளவில் வேலை செய்தார்கள், ஆனால் அவர்களுக்குச் சிறிய கூறின் இரகசியம் தெரியாது.

ஒழுக்கவாதிகள் எப்போதும் பெரிய மட்டத்தில் வேலை செய்வார்கள், ஆனால் அவை மேம்போக்கானவை. அது மிகப் பெரியதாகத் தோன்றும். அவர்கள் தங்களது முழு வாழ்க்கையையும் ஒழுக்கமூட்டுவதற்காக, அதையும் இதையும் பயிற்சி செய்வதற்காக, கட்டுப்படுத்துவதற்காக அர்ப்பணிப்பார்கள். அவர்கள் கட்டுப்படுத்திக் கொண்டே போவார்கள்; அந்த முழு பாழாய் போன முயற்சியும் மிகப் பெரிதாகத் தெரியும்.

தந்த்ரா இதைப் பற்றி அக்கறை கொண்டதல்ல. தந்த்ரா மனித ஜீவிதத்தின், மனித மனத்தின், மனித உணர்வின், அணுவான ரகசியங்களில் அக்கறை கொண்டது. தந்த்ரா அந்த அணுவான ரகசியங்களைக் கண்டுபிடித்துள்ளது. இந்த முறைகள் அணு முறைகள். நீ அவைகளை அடைய முடிந்தால், அவற்றின் விளைவு பெருவெடிப்பாக, பேரண்டமாக இருக்கும்.

மற்றொரு விஷயத்தையும் குறிப்பிட வேண்டும். நீ, ''எப்படி இவ்வளவு சிறிய, எளிமையான பயிற்சிகளின் மூலம் ஒருவன் ஞானமடைய முடியும்?'' என்று கேட்கும்போது, நீ இந்தப் பயிற்சிகளைச் செய்து பார்க்காமலே கேட்கிறாய். நீ இவைகளைச் செய்து பார்த்தால், அப்போது நீ இவைகளை சிறிய, எளிய பயிற்சிகள் என்று கூற மாட்டாய். இவை அப்படித் தெரிகின்றன. ஏனெனில் இரண்டு அல்லது மூன்று வாக்கியங்களில் முழுப் பயிற்சியும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

உனக்கு அணுவின் சூத்திரம் தெரியுமா? இரண்டு அல்லது மூன்று சொற்களில் முழுச் சூத்திரமும் கொடுக்கப்பட்டுள்ளது. அந்த இரண்டு அல்லது மூன்று வார்த்தைகளைக் கொண்டு, புரிந்து கொள்ள முடிந்தார்கள், அந்த வார்த்தைகளைப் பயன் படுத்த முடிந்தவர்கள், முழுப் பூமியையும் அழித்து விடலாம். சூத்திரம் மிகச் சிறியது.

இவைகளும் சூத்திரங்கள்தான். ஆகவே அவைகளை சும்மா பார்க்கும் பொழுது அவை மிக மிகச் சிறிய, எளிமையான விஷயங்களாகத் தோன்றும். அவை அப்படியல்ல! அவைகளை முயற்சி செய். அவைகளை நீ செய்யும்போது, அப்போது அவைகள் சுலபமானவை அல்ல என்பதை அறிந்து கொள்வாய். அவை பார்ப்பதற்கு எளியவை, ஆனால் அவை மிக ஆழமான விஷயங்களில் ஒன்றாயிருப்பவை. நாம் படிப்படியாக அலசு வோம்; அப்போது நீ புரிந்து கொள்வாய்.

நீ மூச்சை உள்வாங்கும்போது, நீ ஒருபோதும் மூச்சை உணர்வதில்லை. நீ உடனே இதை மறுப்பாய், ''இது சரியல்ல. நாம் தொடர்ந்து அதைப்பற்றிய உணர்வோடு இல்லாமலிருக்க லாம். ஆனால் நாம் மூச்சை உணர்கிறோம்.'' கிடையாது, நீ மூச்சை உணர்வதில்லை, நீ பாதையையே உணர்கிறாய்.

கடலைப் பார். அலைகள் அங்கே உள்ளன; நீ அலை களைப் பார்க்கிறாய். ஆனால் அந்த அலைகள் வீசும் காற்றினால் உருவாக்கப்படுபவை. நீ காற்றைப் பார்ப்பதில்லை, நீ அது நீரில் ஏற்படுத்திய விளைவையே பார்க்கிறாய். நீ மூச்சை உள்வாங்கும் போது அது உன் மூக்கு நுனியைத் தொடுகின்றது. நீ மூக்கு நுனியை உணர்கிறாய், ஆனால் நீ ஒருபோதும் மூச்சை அறிவ தில்லை. அது உள்ளே போகிறது – நீ பாதையை உணர்கிறாய். அது திரும்பி வருகிறது – மறுபடியும் நீ பாதையை உணர்கிறாய். நீ ஒருபோதும் மூச்சை உணர்வதில்லை. நீ தொடுதலையும், பாதையையுமே உணர்கிறாய்.

சிவா ''விழிப்புணர்வு கொள்'' என்று சொல்லும்போது இதுவல்ல அவர் சொல்வது. முதலில் நீ பாதையைக் குறித்து விழிப்புணர்வு கொள்வாய், பின் நீ பாதையைக் குறித்து முழுதுமாக விழிப்புணர்வு அடைந்தபின், அதன்பின் மட்டுமே நீ ஆரம்பிக்க முடியும். மெதுமெதுவாக, மூச்சைப் பற்றியே விழிப்புணர்வு அடைவதை. அப்படி நீ மூச்சைப் பற்றி விழிப்புணர்வு அடைந்தவுடன், அதன் பின் நீ இடைவெளியைப்

பற்றிய விழிப்புணர்வு அடையும் தகுதி உள்ளவனாவாய். ஆகவே இது பார்வைக்குத் தெரிவது போல சுலபமானது அல்ல.

தந்த்ராவிற்கு, எல்லாத் தேடுதல்களுக்கும், விழிப்புணர்வுத் தளங்கள் பல உள்ளன. நான் உன்னைத் தழுவிக் கொண்டால், முதலில் நீ உனது உடம்பை நான் தொடுவதைப் பற்றிய விழிப்புணர்வு கொள்வாய். எனது அன்பை அல்ல, என் அன்பு அவ்வளவு பருப்பொருளானதல்ல. மேலும் சாதாரணமாக நாம் ஒருபோதும் அன்பை உணர்வதில்லை. நாம் உடலின் அசைவைக் குறித்து மட்டுமே உணர்வுள்ளவர்களாய் இருக்கிறோம். நமக்கு அன்பின் அசைவுகள் தெரியும், அன்பற்ற அசைவுகள் தெரியும் – ஆனால் நாம் அன்பை அன்பாகவே ஒருபோதும் அறிந்ததில்லை. நான் உன்னை முத்தமிட்டால், நீ அந்தத் தொடுதலைப் பற்றிய விழிப்புணர்வு அடைகிறாய், எனது அன்பை அல்ல; அந்த அன்பு மிகவும் நுட்பமானது. ஆனால் நீ எனது அன்பைப் பற்றிய விழிப்புணர்வு அடையாதபோது அந்த முத்தம் வெறும் சடங்கு, உயிரில்லாதது, அதற்கு அர்த்தமே இல்லை. நீ எனது அன்பைப் பற்றிய விழிப்புணர்வு அடைந்தால் அப்போது மட்டுமே நீ என்னைப் பற்றிய விழிப்புணர்வு அடைய முடியும். ஏனெனில் அது மறுபடியும் ஒரு ஆழமான தளம்.

மூச்சு நடந்து கொண்டேயிருக்கிறது. நீ தொடுதலை உணர்கிறாய், மூச்சை அல்ல. ஆனால் நீ அந்தத் தொடுதலைப் பற்றிய விழிப்புணர்வு கொண்டவனாகக் கூட இல்லை. ஏதாவது அசம்பாவிதம் நடந்தால் மட்டுமே அப்போது நீ அதை உணர்கிறாய். உனக்கு மூச்சு விடுவதில் ஏதாவது சிரமம் ஏற்படும் போது தான் நீ அதை உணர்கிறாய்; இல்லாவிட்டால் நீ உணர்வ தில்லை. முதல் படி, மூச்சு தொடுவதாக உணரும் பாதையைக் குறித்து விழிப்புணர்வு அடைவது; அப்போது உன் புலனுட்பம் வளரும். மூச்சு தொடுவதைத் தாண்டி அதனுடைய அசைவைத் தெரிந்து கொள்ளுமளவு புலனின் நுட்பம் ஆவதற்குப் பல வருடங்கள் ஆகும். அப்போது, தந்த்ரா சொல்கிறது, நீ 'பிராணா,' உயிர்ச்சத்தை, அறிந்து கொண்டவனாவாய். அதன் பிறகு

மட்டுமே, மூச்சு நின்றுவிடும். இடைவெளி, மூச்சு அசையாத அந்த இடம் இருக்கிறது அல்லது மூச்சு தொடுகின்ற அந்த மையம் இருக்கிறது அல்லது கலக்கும் புள்ளி இருக்கிறது அல்லது மூச்சு திரும்பும் இடம், உள்ளே வரும் மூச்சு வெளியே போவதாக மாறுமிடம் இருக்கிறது. இது மிகவும் சிரமமானதாக இருக்கும். அப்போது இது அவ்வளவு எளியதாகத் தெரியாது.

நீ ஏதாவது செய்தால், நீ இந்த மையத்திற்குள் நுழைந்தால், அப்போது மட்டுமே இது எவ்வளவு கடினம் என்பது உனக்குத் தெரியும். புத்தர் இந்த மூச்சைத் தாண்டியுள்ள மையத்திற்கு வருவதற்கு ஆறு ஆண்டுகள் ஆயின. இந்தத் திருப்பத்திற்கு வருவதற்கு, அவருக்கு நீண்ட, கடினமான ஆறு வருடப் பயணம் தேவைப்பட்டது; பின் அது நடந்தது. மகாவீரர் இதன் மேல் பன்னிரண்டு வருடங்கள் வேலை செய்தார்; பின் அது நடந்தது. ஆனால் சூத்திரம் எளிமையானதுதான். கருத்துக் கணக்குப்படி இது இந்தக் கணநேரத்திலேயே நடக்க முடியும் – நினைவில் கொள், கருத்துக் கணக்குப்படி தான். கருத்துக் கணக்கின்படி எந்தத் தடையும் இல்லை, பின் ஏன் அது இந்தக் கணத்திலேயே நடக்க முடியாது? நீ தான் தடை. உன்னைத் தவிர்த்து விட்டால் இது இந்தக் கணத்திலேயே நடக்க முடியும். பொக்கிஷம் அங்கே இருக்கிறது; முறை உனக்குத் தெரியும். நீ தோண்டி விடலாம். ஆனால் நீ தோண்ட மாட்டாய்.

இந்தக் கேள்வியே கூட தோண்டாமலிருக்க ஒரு தந்திரம் தான். ஏனெனில் உன் மனம் சொல்கிறது, ''இவ்வளவு எளிமை யான விஷயமா? மடையனாய் இருக்காதே. எப்படி நீ இவ்வளவு எளிமையான விஷயம் மூலமாக ஒரு புத்தராக முடியும்? அது நடக்காது.'' இதன் பின் நீ எதையும் செய்யப் போவதில்லை. ஏனெனில் எப்படி இது நடக்கும்? மனம் தந்திரமானது. நான் இது மிகவும் கடினம் என்று சொன்னால், மனம் சொல்லும், ''அது மிகவும் கடினம், அது உன் சக்திக்கு அப்பாற்பட்டது.'' நான் இது மிகவும் எளியது என்று சொன்னால், மனம் சொல்லும், ''இது மிகவும் எளியது, வெறும் முட்டாள்தான் இதை

நம்புவான்.'' மனம் எல்லாவற்றையும் ஆய்வு செய்துகொண்டே போகும். ஆனால் எப்பொழுதும் செய்வதிலிருந்து தப்பித்துக் கொள்ளும்.

மனம் தடைகளை உருவாக்குகிறது. நீ மிகவும் எளியது என்று நினைக்கும்போதும், அல்லது நீ மிகவும் கடினம் என்று நினைக்கும்போதும், அதுவே உனக்குத் தடையாகிறது – பிறகு நீ என்னதான் செய்யப் போகிறாய்? நீ எளிமையானதையும் செய்ய முடியாது, நீ கடினமானதையும் செய்ய முடியாது. நீ என்ன செய்யப் போகிறாய்? எனக்குச் சொல்! நீ கடினமானதைச் செய்ய விரும்பினால், நான் அதைக் கடினமாக்குகிறேன். நீ எளிமையானதைச் செய்ய விரும்பினால், நான் அதை எளிமை யாக்குகிறேன். அது இரண்டும்தான் – அதற்கு எப்படி வியாக்கியானம் செய்கிறோம் என்பதைச் சார்ந்ததே. ஆனால் ஒன்று தேவைப்படுகிறது. அது நீ அதைச் செய்யப் போகிறாய் என்பதே. நீ அதைச் செய்யப் போவதில்லை என்றால் பின் மனம் எப்பொழுதும் அதற்குத் தகுந்தாற்போல விளக்கங்களைக் கொடுத்துவிடும்.

கருத்துக் கணக்கின்படி, இங்கு இப்போது என்பது சாத்தியமே, நிஜத்தில் எந்தத் தடையும் இல்லை அதற்கு. ஆனால் அதற்குத் தடைகள் உள்ளன. அவை நிஜமான தடைகளாக இல்லாமலிருக்கலாம். அவை வெறும் உளவியல் தடைகளாக இருக்கலாம் – அவை வெறும் பொய்த் தோற்றங்களாயிருக்கலாம் – ஆனால் அவை இருக்கின்றன. நான் உன்னிடம், ''பயப்படாதே – முன்னால் போ! நீ பாம்பு என்று நினைத்துக் கொண்டிருப்பது பாம்பல்ல வெறும் கயிறு'' என்று சொன்னாலும் உன்னிடம் அந்தப் பயம் இன்னும் இருக்கிறது. உனக்கு அது பாம்பாகவே தெரிகிறது.

ஆகவே நான் என்ன சொன்னாலும் அது உனக்கு உதவப் போவதில்லை. நீ நடுங்கிக் கொண்டிருக்கிறாய்; நீ தப்பித்து ஓடிவிட விரும்புகிறாய். நான் அது ஒரு கயிறு என்று சொல் கிறேன். ஆனால் உன் மனம், ''இந்த மனிதன் பாம்புக்குச்

கூட்டாளியாக இருக்கலாம். இதில் ஏதோ தவறு இருக்கிறது. இந்த மனிதன் என்னைப் பாம்பை நோக்கி ஏன் தள்ளுகிறான்? இவனுக்கு நான் சாவதில் ஏதோ அக்கறை இருக்கலாம் அல்லது வேறு ஏதாவது விஷயமாயிருக்கலாம்'' என்று சொல்லும். நான் மேலும் மேலும் அதிகமாக அது கயிறுதான் என்று உன்னை நம்பச் செய்ய முயற்சித்தால், அது உன்னைப் பாம்பை நோக்கித் தள்ளுவதில் எனக்கு ஆர்வம் ஏனோ அதிகமிருக்கிறது என்பதைக் காட்டுவதாகவே இருக்கும். நான் உன்னிடம் கருத்துக்கணிப்பின் படி ஒரு கயிறைக் கயிறாக இந்த இக்கணத்திலேயே பார்க்க முடியும் என்று சொன்னால், உனது மனம் பலபல பிரச்சனை களை உருவாக்கும்.

நிஜத்தில் எந்தக் குழப்பமும் இல்லை, நிஜத்தில் எந்தப் பிரச்சனையும் இல்லை. ஒருபோதும் இருந்ததில்லை, ஒரு போதும் இருக்காது. மனத்தில் பிரச்சனைகள் உன்னை, நீ நிஜத்தை மனத்தின் மூலமாகப் பார்க்கிறாய்; ஆகவே, நிஜமும் பிரச்சனையாகத் தெரிகிறது. உன் மனம் ஒரு சிறையைப் போலச் செயல்படுகிறது. அது பிரிக்கிறது, பிரச்சனையை உண்டாக்கு கிறது. அது மட்டுமல்ல, அது தீர்வை உருவாக்கி அதன் மூலம் ஆழமான பிரச்சனைகளை உருவாக்குகிறது. ஏனெனில் உண்மையில் தீர்க்கப்படுவதற்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. நிஜம் கொஞ்சம் கூடப் பிரச்சனையில்லாதது; அங்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. ஆனால் உன்னால் எதையும் பிரச்சனை யின்றிப் பார்க்க முடியாது. நீ பார்க்கும் பொழுதெல்லாம், நீ பிரச்சனையை உருவாக்குகிறாய். உனது ''பார்வை'' பிரச்சனை யுள்ளது. நான் உன்னிடம் இந்த மூச்சு யுக்தியைக் கூறினேன்; இப்போது மனம் சொல்கிறது, ''இது மிகவும் எளியது.'' ஏன்? ஏன் மனம் இதை மிகவும் எளியது என்று சொல்ல வேண்டும்?

முதல் தடவை நீராவி எஞ்சின் கண்டுபிடிக்கப்பட்ட பொழுது அதை யாரும் நம்பவில்லை. அது மிகவும் எளிதாகத் தெரிந்தது – நம்ப முடியாத அளவுக்கு. உனக்கு உன் சமையலறை யில், உன் கெட்டிலில் தெரிந்த அதே நீராவி, அந்த நீராவி ஒரு

எஞ்சினை ஓட்டுகிறதா, நூற்றுக்கணக்கான பயணிகளுடன் அவ்வளவு அதிக சுமையுடன் ஓடுகிறதா? நீ நன்கு அறிந்த அதே நீராவியாலா? இது நம்ப முடியாததாக இருக்கிறது.

இங்கிலாந்தில் என்ன நடந்தது என்று உனக்குத் தெரியுமா? முதல் ரயில் புறப்பட்ட போது, ஒருவர் கூட அதில் ஏறி உட்காரத் தயாரில்லை – ஒருவர் கூட! பலரும் ஊக்கம் கொடுக்கப்பட்டனர், லஞ்சம் கொடுக்கப்பட்டது, ரயிலில் உட்காருவதற்குப் பணம் கொடுக்கப்பட்டது, ஆனாலும் கடைசி நேரத்தில் அவர்கள் தப்பி ஓடிவிட்டனர். அவர்கள் சொன்னார்கள், ''முதலாவதாக, நீராவி யால் இது போன்ற அற்புதங்களைச் செய்ய முடியாது. நீராவி போன்ற இவ்வளவு எளியதால் இது போன்ற அற்புதத்தைச் செய்ய முடியாது. ஆகவே எஞ்சின் இயங்கினால், அதன் அர்த்தம் சாத்தான் எங்கேயோ வேலை செய்கிறது என்பது தான். சாத்தான் தான் இதை ஓட்டுகிறது, நீராவியல்ல. மேலும் இது ஒருமுறை புறப்பட்டுவிட்டால் இதை நிறுத்த உன்னால் முடியும் என்பதற்கு என்ன சான்று இருக்கிறது?''

எந்த விதச் சான்றும் தரமுடியாது. ஏனெனில் இது தான் முதல் ரயில். அது இதுவரை நிறுத்தப்பட்டதில்லை, அது ஒரு சாத்தியமே. எந்த அனுபவமும் கிடையாது, விஞ்ஞானம். அதனால், ''ஆம், அது நிற்கும்'' என்று சொல்ல முடியாது. கருத்துக் கணிப்பின்படி அது நிற்கும்..... ஆனால் மக்களுக்குக் கருத்துக்களின் மேல் நாட்டமில்லை. இரயிலை நிறுத்திய உண்மையான அனுபவம் ஏதாவது உண்டா என்பதிலேயே அவர்களுக்கு அக்கறை: ''அது நிற்காமலேயே போய்விட்டால் பிறகு அதில் உட்கார்ந்திருக்கும் எங்களுக்கு என்ன நடக்கும், எங்கள் கதி என்ன?''

ஆகவே பன்னிரண்டு தூக்குத்தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளிகள் ஜெயிலிலிருந்து பயணம் செய்யக் கொண்டு வரப்பட்டனர். எப்படியும் அவர்கள் இறக்கப் போகிறார்கள், எப்படியிருந்தாலும் அவர்கள் தூக்குத்தண்டனை விதிக்கப்பட்ட வர்கள். ஆகவே இரயில் நிற்காமல் போய்விட்டால் அதனால்

எந்தப் பிரச்சனையும் இல்லை. இரயில் நிற்கும் என்று நினைத்துக் கொண்டிருக்கும் அந்தப் பயித்தியக்கார ஓட்டுனர், இதைக் கண்டுபிடித்த விஞ்ஞானி, பின் இந்த எப்படியும் சாகப் போகிற பன்னிரண்டு பயணிகள், ஆக இவர்கள் மட்டும்தான் சாவார்கள். ''மிகச் சாதாரணமான இந்த எளிய நீராவி,'' என்று அந்தக் காலத்தில் அவர்கள் சொன்னார்கள். ஆனால் இப்போது யாரும் இப்படிச் சொல்வதில்லை. ஏனெனில் இப்போது அது வேலை செய்கிறது. அதை நீ அறிவாய்.

எல்லாம் எளிமையே – நிஜம் எளிமைதான். அது சிக்கலாகத் தெரிவது அறியாமையினால்தான். இல்லாவிட்டால் எல்லாமே எளிமைதான். உனக்கு ஒருமுறை தெரிந்துவிட்டால், அது சுலபமாகி விடுகிறது. ஆனால் தெரிந்து கொள்வது கடினமாகவே இருக்கப் போகிறது. அதற்குக் காரணம் அதன் நிஜம் அல்ல, நினைவில்கொள். மாறாக அதற்குக் காரணம் உன் மனம் யுக்தி எளிமையானது. ஆனால் அது உனக்கு எளிமையாக இருக்கப் போவதில்லை. உனது மனம் சிரமத்தை உண்டு பண்ணும். அதோடு முயற்சி செய்.

மற்றொரு நண்பர் சொல்கிறார்:

❖ ''எனது மூச்சைக் குறித்து விழிப்புணர்வுடன் இருக்கும் இந்த யுக்தியை நான் முயற்சித்தால், எனது மூச்சை நான் கவனித்தால், அப்போது நான் வேறெதுவும் செய்ய முடிவதில்லை, முழுக் கவனமும் அதற்கே போய்விடுகிறது. நான் வேறு ஏதாவது செய்ய வேண்டி வந்தால் அப்போது எனது மூச்சைக் குறித்து நான் விழிப்புணர்வுடன் இருக்க முடியவில்லை.''

இது நடக்கும். ஆகவே ஆரம்பத்தில் ஒரு குறிப்பிட்ட நேரத்தைக் காலையிலோ அல்லது மாலையிலோ அல்லது ஏதாவது ஒரு நேரத்திலோ தேர்வு செய்துகொள். ஒரு மணி நேரம் இந்தப் பயிற்சியைச் செய்; வேறு எதுவும் செய்யாதே. வெறும் இந்தப் பயிற்சியை மட்டும் செய். நீ ஒருமுறை இதோடு

ஒத்திசைவு அடைந்துவிட்டால், அதன்பின் இது ஒரு பிரச்சனையாக இருக்காது. நீ வீதியில் நடந்துகொண்டே நீ விழிப்புணர்வுடன் இருக்கலாம்.

விழிப்புணர்வுக்கும், கவனித்தலுக்கும் இடையே ஒரு வித்தியாசம் உள்ளது. நீ ஒன்றுக்கு உன் கவனத்தைக் கொடுக்கும் போது அது தனிப்பட்டு இருக்கும்; நீ உன் கவனத்தை மற்ற எல்லாவற்றிலிருந்தும் எடுத்துவிட வேண்டும். ஆகவே உண்மையில் அது ஒரு இறுக்கம். அதனால்தான் அது கவனித்து இருத்தல் என்று அழைக்கப்படுகிறது. நீ ஒன்றில் கவனமாய் இருக்கிறாய், மற்ற எல்லாவற்றிலிருந்தும் கவனத்தை எடுத்து விட்டு. நீ உனது மூச்சுக்கு உன் கவனத்தைக் கொடுத்தால், நீ உன் நடத்தலுக்கோ, உன் ஓட்டுதலுக்கோ கவனத்தைக் கொடுக்க முடியாது. நீ ஓட்டிக் கொண்டிருக்கும்போது இதை முயற்சி செய்யாதே. ஏனெனில் இரண்டுக்கும் உன் கவனத்தை உன்னால் கொடுக்க முடியாது.

கவனித்தல் என்பதன் அர்த்தம் ஒரே ஒரு விஷயத்திற்குத் தனிப்பட்டுக் கவனம் கொடுப்பது. விழிப்புணர்வு என்பது மிகவும் மாறுபட்டது; அது தனிப்பட்டது அல்ல. அது கவனம் கொடுப்பது அல்ல, அது கவனமாய் இருப்பது; அது உணர்வோடு இருப்பது மட்டுமே. நீ எல்லாவற்றைப் பற்றியும் உணர்வோடிருக்கையில் நீ உணர்வாக இருக்கிறாய். உனது மூச்சு உன் உணர்வு நிலையில் இருக்கிறது. நீ நடந்து கொண்டிருக்கிறாய், யாரோ ஒருவர் கடந்து போகிறார், நீ அவரைப் பற்றியும் உணர்வோடு இருக்கிறாய். யாரோ ஒருவர் வீதியில் சப்தம் ஏற்படுத்துகிறார், ஏதோ ஒரு இரயில் கடந்து செல்கிறது, ஏதோ விமானம் மேலே பறக்கிறது – எல்லாமும் சேர்ந்துள்ளது – விழிப்புணர்வு என்பது சேர்ந்தது, கவனித்தல் என்பது தனிப்பட்டது. ஆனால் முதலில் அது கவனித்தலாகத் தான் இருக்கும்.

ஆகவே முதலில் குறிப்பிட்ட நேரங்களில் முயற்சி செய். ஒரு மணி நேரத்திற்கு உன் மூச்சைக் கவனித்துக் கொண்டிரு.

மெது மெதுவாக உன் கவனித்தலை விழிப்புணர்வாக நீ மாற்றிக் கொள்ள முடியும். பிறகு சிறிய செயல்களைச் செய்ய ஆரம்பி – உதாரணமாக, நடத்தல் : கவனமாக நடந்து கொண்டே நடப்பது, மூச்சுவிடுவது இரண்டையும் குறித்து விழிப்புணர்வு கொள். நடப்பதற்கும் மூச்சு விடுவதற்கும் இடையில் எந்த எதிர்ப்பையும் உருவாக்காதே. இரண்டையும் பார்த்துக் கொண்டிரு. இது கடினமல்ல.

பார்! உதாரணமாக, இங்குள்ள ஒரு முகத்திற்கு நான் என் கவனத்தைக் கொடுக்க முடியும். ஆனால் ஒரு முகத்திற்கு நான் கவனம் கொடுத்தால், மற்ற எல்லா முகங்களும் என்னைப் பொருத்தவரை இங்கு இருக்காது. நான் ஒரு முகத்திற்குக் கவனம் கொடுத்தால், பின் மற்ற எல்லா முகங்களும் அடைப்புக்கு வெளியே போய்விடுகிறது. நான் வெறும் மூக்குக்கு மட்டும் ஒரு முகத்தில் கவனம் செலுத்தினால், பிறகு அந்த மொத்த முகமும், மூக்கைத் தவிர உள்ள முகம் முழுவதும், அடைப்புக்கு வெளியே போய்விடும். நான் எனது கவனத்தை ஒரே ஒரு புள்ளிவரை சுருக்கிக்கொண்டே போகலாம்.

இதன் தலைகீழானதும் சாத்தியமே. நான் முழு முகத்திற்கும் என் கவனத்தைக் கொடுக்கிறேன்; அப்போது கண்கள், மூக்கு, மற்ற எல்லாமும் அங்கே உள்ளது. இப்போது என் பார்வையை மேலும் விரிவாக்குகிறேன். நான் உங்களைத் தனித்தனியாகப் பார்க்காமல், ஒரு கூட்டமாகப் பார்க்கிறேன். அப்போது முழுக் கூட்டமும் என் கவனத்தில் வருகிறது. நான் உங்களை வீதியில் ஏற்படும் சப்தத்திலிருந்து வித்தியாசப் படுத்திப் பார்த்தால், அப்போது நான் வீதியை அடைப்பிற்கு வெளியே தள்ளி விடுகிறேன். ஆனால் நான் உங்களையும் வீதியையும் சேர்த்து ஒன்றாகப் பார்க்க முடியும். நான் முழுப் பேரண்ட இயக்கத்தைப் பற்றியும் விழிப்புணர்வு கொள்ள முடியும். அது உனது பார்வை குறி வைப்பதைப் பொருத்தது – உனது பார்வையின் குறி மேலும் மேலும் பெரியதாக மாறலாம். முதலில் கவனித்தலிலிருந்து ஆரம்பி, ஆனால் நீ விழிப்புணர்வு

கொள்வதற்கு வளர வேண்டும் என்பதை நினைவில் வைத்துக் கொள். ஆகவே சிறிய நேரத்தைத் தேர்வு செய்து கொள். காலை நேரம் நல்லது. ஏனெனில் நீ புத்துணர்ச்சியுடன் இருப்பாய், சக்தி ஓங்கி இருக்கும், எல்லாம் எழும்வேளை; நீ காலையில் அதிக துடிப்புடன் இருக்கிறாய்.

உளவியலாளர்கள் சொல்கிறார்கள், நீ அதிக துடிப்புடன் இருப்பது மட்டுமல்ல, காலையில் உன் உயரமும் மாலை நேரத்தை விடச் சிறிது அதிகமாக இருக்கிறது. நீ ஆறு அடி உயரம் என்றால், காலை நேரத்தில் நீ ஆறு அடி அரை அங்குலம் இருப்பாய், மாலை நேரத்தில் மறுபடியும் ஆறு அடி ஆகி விடுவாய். அரை அங்குலத்தை இழந்து விடுகிறாய். ஏனெனில் சோர்வடைகையில் உனது முதுகுத் தண்டு தளர்ந்து கீழே படிகிறது. ஆகவே காலையில் நீ புத்துணர்வுடன், இளமையாக, துடிப்போடு, சக்தியோடு இருக்கிறாய்.

இதைச் செய் : உன்னுடைய தினசரி நடவடிக்கையில் தியானத்தைக் கடைசி விஷயமாக வைத்துக் கொள்ளாதே. அதை முதலில் வை. அதன்பின் எப்போது, அது ஒரு முயற்சியல்ல இப்போது என்று உணர்கிறாயோ, எப்போது நீ ஒரு மணி நேரம் முழுமையாக மூச்சில் அமிழ்ந்து இருக்க முடிகிறதோ – விழிப் புணர்வோடு, கவனமாக – இப்படி இருக்க முடியும்போது, மூச்சின் மேல் கவனம் கொள்வதை எந்த முயற்சியும் செய்யாமல் உன்னால் அடைய முடியும்போது, எந்தவிதத் தனிச்சக்தியும் கொடுக்காமல் உன்னால் மூச்சைத் தளர்வாக சந்தோஷமாக அனுபவிக்க முடியும்போது, அப்போது நீ அதை, விழிப் புணர்வை அடைந்து விட்டாய்.

இப்போது எதையாவது சேர்த்து – உதாரணமாக, நடத்தலை. இரண்டையும் நினைவில் வை, பின் ஒவ்வொன் றாகச் சேர்த்துக் கொண்டே போ. ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு நீ மூச்சைக் குறித்துத் தொடர்ச்சியாக விழிப்புணர்வு கொண்டிருக்கும் அளவுக்கு வளர்ந்து விடுவாய், தூக்கத்தில் கூட. தூக்கத்திலும் கூட விழிப்புணர்வோடு உன்னால் இருக்க

முடிந்தால்தான் நீ ஆழத்தை அறிய முடியும். ஆனால் இது வரும், மெது மெதுவாக இது வரும்.

ஒருவன் பொறுமையாக இருக்க வேண்டும். மேலும் ஒருவன் சரியானபடி ஆரம்பிக்க வேண்டும். இதைத் தெரிந்து கொள், ஏனெனில் தந்திரமான மனம் எப்பொழுதும் தவறான ஆரம்பத்தைக் கொடுக்க முயற்சி செய்யும். பின் இரண்டு அல்லது மூன்று நாட்களில் நீ அதை விட்டுவிட்டு, ''இது பயனற்றது'' என்று சொல்லுவாய். மனம் உனக்குத் தவறான ஆரம்பத்தைக் கொடுக்கும். ஆகவே எப்பொழுதும் சரியாக ஆரம்பிக்க வேண்டும் என்பதை நினைவில் கொள். ஏனெனில் சரியாக ஆரம்பித்துவிட்டால் பாதி முடிந்தது – ஆனால் நாம் தவறாகவே ஆரம்பிக்கிறோம்.

கவனம் வைப்பது என்பது கடினமானது என்பது உனக்கு நன்றாகத் தெரியும். இது எதனால் என்றால் நீ முழுத் தூக்கத்தி லிருக்கிறாய். ஆகவே நீ ஏதாவது ஒன்றைச் செய்து கொண் டிருக்கும்போது, நீ மூச்சின் மீது கவனம் வைக்க ஆரம்பித்தால், உன்னால் அது முடியாது. மேலும் நீ செய்து கொண்டிருந்த வேலையை விட மாட்டாய். நீ மூச்சின் மீது கவனம் வைக்கும் முயற்சியை விட்டு விடுவாய்.

ஆகவே தேவையில்லாத பிரச்சனைகளை உனக்கு நீயே ஏற்படுத்திக் கொள்ளாதே. இருக்கும் இருபத்திநாலு மணி நேரத்தில் நீ ஏதாவது ஒரு மூலையைக் கண்டுபிடி, நாற்பது நிமிடம் போதும், அங்கு அந்த யுக்தியைச் செய். ஆனால் மனம் பல காரணங்களை நீ செய்யாமலிருக்கக் கண்டுபிடிக்கும். மனம் சொல்லும், ''நேரம் எங்கிருக்கிறது? ஏற்கனவே ஏகப்பட்ட வேலை செய்ய வேண்டி உள்ளது. இதில் நேரம் எங்கிருக்கிறது?'' அல்லது மனம் சொல்லும், ''இப்போது இதைச் செய்வதற்குச் சாத்தியமே இல்லை. ஆகவே இதைத் தள்ளிப் போடு. எதிர்காலத்தில் எப்போதாவது எல்லாம் நன்றாய் இருக்கும்போது, அப்போது நீ செய்யலாம்.'' உன் மனம்

உன்னிடம் சொல்வதைக் குறித்து ஜாக்கிரதையாக இரு. மனம் சொல்வதை அப்படியே நம்பிவிடாதே. ஆனால் நாம் ஒருபோதும் சந்தேகப்படுவதில்லை. நம்மால் எல்லோரையும் சந்தேகப்பட முடியும். ஆனால் நாம் ஒருபோதும் நமது மனதைச் சந்தேகப்படுவதில்லை.

எப்போதும் குதர்க்கம் பேசுபவர்களால் கூட, சந்தேகப் படும், பகுத்தறிவோடிருக்கும், இவர்களால் கூட அவரவர் களுடைய மனதைச் சந்தேகப்பட முடிவதில்லை. நீ இருக்கும் நிலைக்கு உன்னைக் கொண்டுவந்ததே உன் மனம்தான். நீ இன்று நரகத்தில் இருக்கிறாய் என்றால், உன் மனமே உன்னை இந்த நரகத்திற்குக் கொண்டு வந்தது. ஆனாலும் நீ இந்த வழிகாட்டுப் பலனை ஒருபோதும் சந்தேகிப்பதில்லை. உன்னால் எந்த ஆசானையும், எந்தக் குருவையும் சந்தேகப்பட முடியும். ஆனால் நீ ஒருபோதும் உன் மனத்தை சந்தேகப்படுவதில்லை. சிறிதும் அசையாத பிடிப்புடன் நீ உன் மனத்தைக் குருவாக ஏற்றுக் கொண்டு அதோடு போகிறாய். ஆனால் உன் மனதுதான் உன்னை இந்தச் சிக்கலுக்குக் கொண்டு வந்தது, நீ இருக்கும் துன்பத்திற்கு அழைத்து வந்தது. நீ எதையாவது சந்தேகப்படப் போகிறாய் என்றால் முதலில் உன்னுடைய சொந்த மனத்தை சந்தேகப்படு. மேலும் உன் மனம் எதையாவது சொல்லும் போதெல்லாம், இரண்டுமுறை யோசி.

உனக்கு நேரமே இல்லை என்பது உண்மையா? உண்மை யாகவா? உனக்குத் தியானிக்க எந்த நேரமும் இல்லை - தியானத்திற்குக் கொடுக்க ஒரு மணிநேரம் கிடையாது? இரண்டு முறை யோசி. திரும்பத் திரும்ப மனதிடம் கேள், ''இதுதான் உண்மை நிலையா, எனக்கு எந்த நேரமும் இல்லையா?''

நான் அப்படிப் பார்த்ததில்லை. நான் தேவைக்கதிகமாய் நேரம் இல்லாமலிருப்பவர்களைப் பார்த்ததில்லை. நான் மக்களைப் பார்த்துக் கொண்டே இருக்கிறேன். அவர்கள் சீட்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள், அவர்கள் சொல்கிறார்கள்,

''நாங்கள் நேரத்தைக் கொன்று கொண்டிருக்கிறோம்.'' அவர்கள் நேரத்தைக் கொன்றுகொண்டு, அரட்டை அடித்துக் கொண்டு, திரும்பத் திரும்ப அதே செய்தித்தாளைப் படித்துக் கொண்டு, வாழ்நாள் முழுவதும் ஒரே விஷயத்தையே திரும்பத் திரும்பப் பேசிக் கொண்டு இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் சொல் கிறார்கள், ''எங்களுக்கு நேரம் இல்லை.'' தேவையற்ற விஷயங் களுக்கு அவர்களுக்குப் போதுமான நேரம் இருக்கிறது. ஏன்?

தேவையற்ற விஷயங்களுடன் மனதிற்கு எந்தவித ஆபத்தும் இல்லை. நீ தியானத்தைப் பற்றி யோசிக்கும் கணமே, மனம் ஜாக்கிரதை ஆகிவிடுகிறது. இப்போது நீ ஆபத்தான பக்கத்தில் நகருகிறாய். ஏனெனில் தியானம் என்றால் மனத்தின் மரணம். நீ தியானத்திற்கு நகர்ந்தால், விரைவிலேயோ, சிறிது காலத்திலோ உன் மனம் அது இல்லாமல் கரைந்துபோய்விட வேண்டும், முழுதுமாக விலகிப் போய்விட வேண்டும். மனம் ஜாக்கிரதை அடைந்து உன்னிடம் பல விஷயங்களைச் சொல்ல ஆரம்பிக்கிறது: நேரம் எங்கே இருக்கிறது? அப்படியே நேர மிருந்தாலும், அதைவிட முக்கியமான விஷயங்கள் செய்ய வேண்டியுள்ளது. முதலில் அதைத் தள்ளிப்போடு, அப்புறம் பார்க்கலாம். தியானம் செய்வது நீ எப்போது வேண்டுமானாலும் செய்யலாம். பணம் மிகவும் முக்கியம். முதலில் பணத்தைச் சேர்த்து, பின் நீ ஓய்வாயிருக்கும்போது தியானம் செய். எப்படி நீ பணமில்லாமல் தியானம் செய்ய முடியும்? ஆகவே பணத்திற்கு உன் கவனத்தைக் கொடு, தியானம் பின்னால் செய்து கொள்.

தியானத்தை சுலபமாகத் தள்ளிப் போடலாம் என்று நீ நினைக்கிறாய். ஏனெனில் அது உன் உடனடியான வாழ்வோடு சம்பந்தப்பட்டதல்ல. உணவைத் தள்ளிப்போட முடியாது – நீ இறந்து விடுவாய். பணத்தைத் தள்ளிப்போட முடியாது – அது உனது அடிப்படைத் தேவைகளுக்கு வேண்டும். தியானத்தைத் தள்ளிப் போடலாம், நீ அது இல்லாமல் உயிர் வாழலாம். உண்மையில், நீ அது இல்லாமல் சுலபமாக உயிர் வாழலாம்.

நீ தியானத்தில் ஆழமாகப் போன கணத்திலேயே, நீ இந்தப் பூமியைப் பொருத்தவரையிலாவது இல்லாமல் போவாய் – நீ மறைந்து போவாய். இந்த வாழ்வின் வட்டத்திலிருந்து, இந்தச் சக்கரத்திலிருந்து, நீ மறைந்து விடுவாய். தியானம் இறப்பைப் போன்றது, ஆகவே மனம் பயப்படுகிறது. தியானம் அன்பைப் போன்றது, ஆகவே மனம் பயப்படுகிறது. ''தள்ளிப் போடு,'' அது சொல்கிறது, நீ முடிவேயில்லாமல் தள்ளிப் போட்டுக் கொண்டே போகிறாய். உன் மனம் எப்போதும் இது போன்ற விஷயங்களையே சொல்லும். நான் அடுத்தவர்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதாக நினைக்காதே, நான் குறிப்பாக உன்னைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறேன்.

நான், பல புத்திசாலித்தனமான மக்கள் தியானத்தைக் குறித்து மிகவும் புத்திசாலித்தனமற்ற விஷயங்களைப் பேசிக் கொண்டே இருப்பதைப் பார்த்து வந்திருக்கிறேன். டெல்லியிலிருந்து ஒருவன் வந்தான், அவன் ஒரு பெரிய அரசாங்க அதிகாரி. அவன் இங்கு வந்தது வெறும் தியானம் கற்பதற்காக மட்டுமே. அவன் இங்கு ஏழு நாட்கள் தங்கினான். நான், அவனிடம் பம்பாயில் சௌகாத்தி கடற்கரையில் தினமும் காலையில் நடக்கும் தியான வகுப்புக்குப் போய் வா என்றேன். ஆனால் அவன் சொன்னான், ''அது மிகவும் கடினம். நான் அவ்வளவு சீக்கிரம் எழுந்திருக்க முடியாது.'' அவனால் ஒருபோதும் அவன் மனம் அவனிடம் என்ன சொல்கிறது என்று யோசிக்க முடியாது. அது அவ்வளவு கடினமா? இப்போது உங்களுக்குத் தெரியும்: பயிற்சி மிக எளிதாய் இருக்கலாம், ஆனால் உன் மனம் அவ்வளவு எளியதன்று. மனம் சொல்கிறது, ''எப்படி நான் காலை ஆறு மணிக்கு எழ முடியும்?''

நான் ஒரு பெரிய நகரத்தில் இருந்தேன். அந்த நகரத்தின் கலெக்டர் இரவு பதினொரு மணிக்கு என்னைப் பார்க்க வந்தார். நான் அப்போதுதான் படுக்கப் போகிறேன். அப்போது அவர் வந்து சொன்னார், ''இல்லை! இது மிக அவசரம். நான் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளேன் – இது வாழ்வா சாவா என்ற கேள்வி,''

மேலும் சொன்னார், ''ஆகவே தயவுசெய்து எனக்கு ஒரு அரை மணி நேரம் ஒதுக்குங்கள். தியானத்தைச் சொல்லிக் கொடுங்கள், இல்லாவிட்டால் நான் தற்கொலை செய்து கொண்டு விடுவேன், நான் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளேன்; நான் மிகவும் மன முடைந்து போயிருக்கிறேன். ஆகவே இப்போது என் உள் உலகத்தில் ஏதாவது நிகழ்ந்தாக வேண்டும். என் வெளி உலகம் மொத்தத்தையும் நான் இழந்துவிட்டேன்.'' நான் அவரிடம் கூறினேன், ''காலை ஐந்து மணிக்கு வாருங்கள்.''

அவர் சொன்னார், ''அது சாத்தியமில்லை.'' இது வாழ்வா சாவா என்ற கேள்வி. ஆனால் அவரால் காலை ஐந்து மணிக்கு எழ முடியாது. அவர் சொன்னார், ''அது சாத்தியமில்லை. நான் ஒருபோதும் சீக்கிரம் எழுந்ததில்லை.'' ''சரி'' நான் அவரிடம் சொன்னேன். ''அப்படியென்றால் பத்து மணிக்கு வாருங்கள்.''

அவர் சொன்னார், ''அதுவும் சிரமம். ஏனெனில் நான் பத்தரை மணிக்கு என் ஆபீஸில் இருக்க வேண்டும்.'' அவரால் ஒருநாள் விடுப்பு கூடப் போட முடியாது, ஆனால் இது வாழ்வா சாவா என்ற கேள்வி. நான் அவரிடம் சொன்னேன், ''இந்த வாழ்வா சாவா என்ற கேள்வி உங்களுக்கா அல்லது எனக்கு இது வாழ்வா சாவா என்ற கேள்வியா? யாருடையது?'' அவர் ஒன்றும் புத்திசாலித்தனமில்லாத ஆள் அல்ல. அவர் புத்திசாலித்தனம் போதுமான அளவு உள்ளவர்தான். இந்தத் தந்திரங்கள் மிகவும் புத்திசாலித்தனமானவை.

ஆகவே, உன் மனம் அது போன்ற தந்திரங்களைக் காட்டுவ தில்லை என்று எண்ணாதே. அது மிகவும் புத்திசாலித்தனமானது, ஆனால் நீ, இது உன் மனம் என்று நினைப்பதால் அதைச் சந்தேகப்படுவதில்லை. அது உன்னுடையது அல்ல, அது ஒரு சமுதாய உற்பத்தி. அது உன்னுடையதல்ல! அது உனக்கு கொடுக்கப்பட்டது, அது உன்னிடம் திணிக்கப்பட்டது. நீ ஒரு குறிப்பிட்ட விதமாகச் சொல்லித் தரப்பட்டு, கட்டுப்படுத்தப் பட்டுள்ளாய். மிகவும் குழந்தைப் பருவத்தில் இருந்தே உன் மனம் மற்றவர் களால் – பெற்றோர்கள், சமூகம், ஆசிரியர்கள் –

உருவாக்கப்பட்டு வருகிறது. இறந்த காலமே உன் மனத்தை உருவாக்குகிறது, உன் மனத்தை ஆட்சி செய்கிறது. இறந்து போன கடந்தவைகள் அவைகளைத் தொடர்ந்து உயிரோ டிருப்பவற்றின் மீது திணித்து வருகிறது. ஆசிரியர்கள் வெறும் ஏஜெண்டுகள் – உயிரோடிருப் பவைகளுக்கு எதிரான இறந்தவை களின் ஏஜெண்டுகள். அவர்கள் உன் மனத்தின் மீது இடை விடாமல் விஷயங்களைத் திணித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் மனம் உனக்கு மிகவும் நெருக்கமானது, இடைவெளி மிகவும் சிறியது. ஆகவே நீ அதோடு உன்னை அடையாளப் படுத்திக் கொண்டு விடுகிறாய்.

நீ சொல்கிறாய், ''நான் ஒரு இந்து.'' மறுபடியும் யோசித்துப்பார், திரும்பப் பரிசீலனை செய். நீ ஒரு இந்து அல்ல. உனக்கு ஒரு இந்து மனம் கொடுக்கப்பட்டுள்ளது. நீ வெறும் எளிமையான, வெகுளியான ஜீவனாகவே பிறந்தாய் – ஒரு இந்துவாக அல்ல, ஒரு முகமதியனாக அல்ல. உனக்கு ஒரு முகமதிய மனம் அல்லது இந்து மனம் கொடுக்கப்பட்டது. நீ தள்ளப்பட்டாய், சிறையிலடைக்கப்பட்டாய், கூண்டுக்குள், ஒரு குறிப்பிட்ட கட்டுப்பாட்டிற்குள் வைக்கப்பட்டாய். அதன்பின் வாழ்க்கை இந்த மனத்தோடு சேர்த்துக் கொண்டே வந்தது. அப்படியாக இந்த மனம் மிகவும் கனமானதாக ஆகிவிட்டது – உன் மேலுள்ள கனமாக. நீ எதையும் செய்ய முடியாது; மனம் அதனுடைய போக்கிலேயே உன்னைத் தள்ளிக் கொண்டு போகிறது. உனது அனுபவங்கள் மனத்தோடு சேர்ந்து கொள் கின்றன. தொடர்ந்து எப்போதும், உன்னுடைய இறந்த காலம் உன் ஒவ்வொரு நிகழ்கால கணத்தையும் கட்டுப்படுத்துகிறது, நீ அதைப்பற்றிப் புதுவிதமாகச் சிந்திக்கப் போவதில்லை, திறந்த நிலையில் அணுகப் போவதில்லை. உன் பழைய மனம், உனது இறந்த காலம் இடையில் வரும், அது வந்து ஆதரவாகவோ எதிராகவோ பேச ஆரம்பிக்கும்.

நினைவில் கொள், உன் மனம் உன்னுடையதல்ல, உன் உடம்பு உன்னுடையதல்ல. நீ நினைக்கிறாய் நீ இளைஞன்

என்று, நீ நினைக்கிறாய் நீ கிழவன் என்று, நீ நினைக்கிறாய் நீ இந்து என்று, நீ நினைக்கிறாய் நீ ஒரு ஜைனன் என்று, நீ ஒரு பார்ஸி என்று. நீ அப்படியல்ல! நீ தூய்மையான உணர்வாகப் பிறந்தாய். இவை எல்லாம் சிறைகள். உனக்கு மிக எளிமையாகத் தோன்றும் இந்த யுக்திகள் அவ்வளவு எளிதாக இருக்காது. ஏனெனில் இந்த மனம் இடைவிடாது பலபல சிக்கல்களை, பிரச்சனைகளை உருவாக்கும்.

ஒரு சில தினங்களுக்கு முன், ஒருவன் என்னிடம் வந்து கேட்டான், ''நான் உங்களது தியான முறையை முயற்சித்து வருகிறேன், ஆனால் அது எந்தப் புனித நூலில் உள்ளது என்பதை நீங்கள் சொல்லுங்கள். அது என்னுடைய மதத்தைச் சேர்ந்த புனித நூலில் உள்ளதுதான் என்று நீங்கள் எனக்குக் காட்டினால், பிறகு அதைச் செய்வது எனக்குச் சுலபமாக இருக்கும்.'' ஆனால் ஒரு புனித நூலில் எழுதப்பட்டிருப்பது ஏன் அவனுக்கு அதைச் சுலபமாக்குகிறது? ஏனெனில் அதன்பின் மனம் பிரச்சனையை உண்டு பண்ணாது. மனம் சொல்லும், ''சரி! இது நம்மைச் சேர்ந்தது, ஆகவே இதைச் செய்யலாம்.'' அது எந்தப் புனித நூலிலும் எழுதப்படவில்லையென்றால் மனம் சொல்லும், ''நீ என்ன செய்கிறாய்?'' மனம் அதற்கு எதிராகத் திரும்பி விடுகிறது.

நான் அந்த மனிதனிடம் சொன்னேன், ''நீ இந்த முறையை மூன்று மாதமாகச் செய்து வருகிறாய். நீ எப்படி உணருகிறாய்?''

அவன் சொன்னான், ''ஆச்சரியப்படும் விதமாக உள்ளது. நான் மிகவும் ஆச்சரியமாக உணர்கிறேன். ஆனால் நீங்கள் சொல்லுங்கள்..... புனித நூலிலிருந்து ஏதாவது சான்று கொடுங்கள்.'' அவனுடைய சொந்த உணர்வு ஒரு சான்றாகச் சிறிது கூட ஆகவில்லை. அவன் சொன்னான், ''நான் ஆச்சரியமாக உணருகிறேன். நான் அதிக அமைதியும், அதிக மௌனமும், அதிக அன்பும் கொண்டவனாக மாறியுள்ளேன். நான் மிகவும் ஆச்சரியமாக உணருகிறேன்.'' ஆனால் அவனுடைய சொந்த அனுபவம் ஒரு சான்றாகவில்லை. மனம் இறந்தகாலத்திலிருந்து ஒரு சான்று கேட்கிறது. நான்

சொன்னேன், ''இது உனது புனித நூல்கள் எதிலும் எங்கும் எழுதப்படவில்லை. பதிலாக, இந்த யுக்திக்கு எதிராகப் பல விஷயங்கள் எழுதப்பட்டுள்ளன.''

அவன் முகம் சோகமடைந்தது. அவன் சொன்னான், ''அப்படியானால் இதைச் செய்வது எனக்கு மிகவும் கடினம், இதைத் தொடர்வதும் கடினம்.''

ஏன் அவனது சொந்த அனுபவத்திற்கு எந்த மதிப்பும் இல்லை?

இறந்தகாலம் – அந்தக் கட்டுக்கோப்பு, அந்த மனம் – இடைவிடாமல் உனக்கு உருக்கொடுத்துக்கொண்டு இருக்கிறது. நிகழ்காலத்தை அழித்துக் கொண்டிருக்கிறது. ஆகவே நினைவில் கொள், விழிப்புணர்வோடிரு. உன் மனத்தைப் பற்றி சந்தேகமும், குதர்க்கமும் கொண்டவனாக இரு. அதனிடம் விசுவாசமாக இருக்காதே. நீ உனது மனத்தின் மேல் நம்பகத்தன்மை கொள்ளாத அளவிற்குப் பக்குவமடையும் பொழுதே, அப்போது மட்டுமே இந்த யுக்திகள் எளியவை, உதவுபவை, செயல் படுபவை. அவைகள் அற்புதங்களைச் செய்யலாம் – அவைகள் அற்புதங்களைச் செய்ய முடியும்.

இந்த யுக்திகள், இந்த முறைகள் அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்ளக் கூடியவை அல்ல. நான் சாத்தியமில்லாததை முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் பின் ஏன் நான் முயற்சித்துக் கொண்டிருக்கிறேன்? அவைகளை அறிவுபூர்வ மாகப் புரிந்துகொள்ள முடியாது என்கிறபோது, நான் ஏன் உன்னிடம் பேசிக் கொண்டிருக்கிறேன்? அவைகளை அறிவு பூர்வமாகப் புரிந்துகொள்ள முடியாது. ஆனால் உனது வாழ்க்கை யையே மாற்றக்கூடிய சில யுக்திகள் இருக்கின்றன என்பதை உன் விழிப்புணர்வுக்குக் கொண்டு வருவதற்கு வேறு எந்த வழியும் இல்லை. உன்னால் அறிவுபூர்வமாக மட்டுமே புரிந்துகொள்ள முடியும், இது தான் பிரச்சனை. உன்னால் வேறு எதையும் புரிந்துகொள்ள முடியாது, நீ அறிவுபூர்வமாக மட்டுமே புரிந்து

கொள்ள முடியும். ஆனால் இந்த யுக்திகளை அறிவுபூர்வமாகப் புரிந்துகொள்ள முடியாது, பின் எப்படிச் சொல்வது?

ஒன்று நீ உன் அறிவுபூர்வமான அணுகுமுறையை உள்ளே கொண்டு வராமல் புரிந்துகொள்ளக் கூடிய திறமை உள்ளவராக வேண்டும் அல்லது இந்த யுக்திகளை அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்ளும் ஒரு வழியைக் கண்டுபிடிக்க வேண்டும். இதில் இரண்டாவதானது சாத்தியமில்லை. ஆனால் முதலாவது சாத்தியம்.

நீ அறிவுபூர்வமாகவே ஆரம்பிக்க வேண்டும். ஆனால் அதையே பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்காதே. நான், ''செய்'' என்று சொல்லும்போது அதைச் செய்ய முயற்சி செய். உனக்குள் ஏதாவது நிகழ ஆரம்பித்தால், அப்போது உன்னுடைய அறிவைத் தூக்கி எறிந்துவிட்டு, என்னை அறிவுபூர்வமாக அல்லாமல் நேரடியாக அணுகும் திறன் உனக்கு வரும். எந்த முயற்சியும் இல்லாமல், எந்த இடைத்தரகரும் இல்லாமல் அணுக முடியும். முதலில் ஏதாவது செய்யத் துவங்கு. நாம் வருடம் வருடமாகப் பேசிக் கொண்டே இருக்கலாம், உன் மனத்தில் மேலும் மேலும் பல விஷயங்களை அடைத்துக் கொண்டே போகலாம். ஆனால் அது உதவப் போவதில்லை. பதிலாக, அது உனக்குக் கெடுதல் செய்யலாம். ஏனெனில் நீ நிறைய விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஆரம்பிக்கிறாய். அப்படி நிறைய விஷயங்கள் தெரியும் போது நீ குழப்பமடைவாய். நிறைய விஷயங்கள் தெரிவது நல்லதல்ல. சிறிதளவே தெரிந்துகொண்டு அதைக் கடை பிடிப்பதே நல்லது. ஒரே ஒரு யுக்தி உதவி செய்ய முடியும்; எதையாவது செய்வது எப்பொழுதுமே உதவும். அதைச் செய்வதில் என்ன சிரமம்?

அடி ஆழத்தில் எங்கோ பயமாயிருக்கிறது. நீ அதைச் செய்தால், நீ இப்போது இருப்பதுபோல் இருக்க முடியாமல் போய் விடலாம் – அதுதான் பயம். இது பார்ப்பதற்கு எதிர்மறை யானதாகத் தெரியலாம். ஆனால் நான் பலபல இப்படிப்பட்ட மனிதர்களை – தாங்கள் மாற விரும்புவதாய் நினைப்பவர்களை

– சந்தித்துக் கொண்டே இருக்கிறேன். அவர்கள் தியானம் தங்களுக்குத் தேவை என்று சொல்வார்கள், அவர்கள் ஆழமான மாற்றத்தைக் கேட்பார்கள், ஆனால் அடி ஆழத்தில் அவர்கள் பயந்து கொண்டிருப்பார்கள். அவர்கள் இரண்டாய் இருக் கிறார்கள், அவர்களுக்கு இரண்டு மனங்கள் இருக்கின்றன. அவர்கள், செய்ய வேண்டியது என்ன என்று கேட்டுக்கொண்டே இருப்பார்கள், ஆனால் அதை ஒருபோதும் செய்யமாட்டார்கள். பிறகு ஏன் அவர்கள் கேட்டுக்கொண்டே இருக்கிறார்கள்? அவர்களுக்கு அவர்களை மாற்றிக்கொள்வதில் உண்மையாகவே ஆர்வமிருக்கிறது என்று தங்களையே ஏமாற்றிக் கொள்வதற்கே கேட்கிறார்கள். இதுதான் அவர்கள் கேட்கும் காரணம்.

இது ஒரு பொய்த் தோற்றத்தை, அவர்கள் உண்மையாக, நேர்மையாகத் தங்களை மாற்றிக்கொள்ள ஆர்வத்தோடு இருக் கிறார்கள் என்பது போன்ற தோற்றத்தைக் கொடுக்கிறது. அதனால்தான் அவர்கள் கேட்கிறார்கள், இந்தக் குருவிடம், அவரிடம் போய்க் கொண்டிருக்கிறார்கள், தேடிக்கொண்டு, முயற்சித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஒருபோதும் எதையும் செய்வதில்லை. அடி ஆழத்தில் அவர்கள் பயப்படுகிறார்கள்.

'எரிச் ப்ராம்' என்பவர் 'சுதந்திரத்தைப் பற்றிய பயம்' என்று ஒரு புத்தகம் எழுதியுள்ளார். அதன் தலைப்பு முரண்பட் டிருப்பதாகத் தெரிகிறது. ஒவ்வொருவரும் தாங்கள் சுதந்திரத்தை விரும்புவதாக நினைக்கிறார்கள், ஒவ்வொருவரும் தாங்கள் சுதந்திரத்திற்கு முயற்சித்துக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் – இந்த உலகத்திலும், அடுத்த உலகத்திலும் கூட. ''எங்களுக்கு மோட்சம், விடுதலை வேண்டும், நாங்கள் எல்லா எல்லைக்குட்பட்டதிலிருந்தும் விடுபட விரும்புகிறோம், எல்லா அடிமைத்தனத்திலிருந்தும் நாங்கள் முழுமையான சுதந்திரத்தை விரும்புகிறோம்'' என்று அவர்கள் சொல்வார்கள். ஆனால் எரிச் ப்ராம் சொல்கிறார், மனிதன் சுதந்திரத்தைக் கண்டு பயப்படுகிறான். நமக்கு அது

வேண்டும், நாம் சொல்லிக் கொண்டே இருக்கிறோம் அது எங்களுக்கு வேண்டும், நாம் நம்மையே நம்பச்செய்து கொள் கிறோம் அதை நாம் விரும்புகிறோம் என்று. ஆனால் அடி ஆழத்தில் நாம் சுதந்திரத்திற்குப் பயப்படுகிறோம். நாம் அதை விரும்புவதில்லை! ஏன்? ஏன் இந்த இரட்டைத்தனம்?

சுதந்திரம் பயத்தை உண்டாக்குகிறது. மேலும் தியானமே சாத்தியமான அளவு ஆழமான சுதந்திரத்தைக் கொடுப்பது. நீ வெளிப்புற எல்லைகளிலிருந்து மட்டும் சுதந்திரமடைவதில்லை, நீ உன் அடிமைத்தனத்திலிருந்தும் – அதாவது மனம், அடிமைத் தனத்தின் அடிப்படை – விடுதலையடைகிறாய். நீ முழு இறந்த காலத்திலிருந்தும் விடுதலையடைகிறாய். நீ மனமற்ற நிலையை அடையும் கணத்திலேயே, இறந்தகாலம் மறைந்து போகிறது. நீ சரித்திரத்தைக் கடந்து விட்டாய்; இப்போது எந்தச் சமூகமும் இல்லை, எந்த மதமும், எந்தப் புனிதநூலும், எந்த மரபும் இல்லை. ஏனெனில் இவை எல்லாவற்றின் வசிப்பிடமும் மனமே. இப்போது இறந்தகாலமோ, எதிர்காலமோ கிடையாது. ஏனெனில் இறந்தகாலமும் எதிர்காலமும் மனதின் பாகங்களே, ஞாபகமும், கற்பனையும்.

அப்போது நீ இங்கே இப்போது நிகழ்காலத்தில் இருக் கிறாய். இப்போது எந்த எதிர்காலத்திற்கும் அங்கு இடமில்லை. அங்கு இப்போது, இப்போது, இப்போதுதான் – நிலைபெற்ற இப்போது. அப்போது நீ முழுதுமாக விடுதலையடைந்தவன்; நீ எல்லா மரபுகளையும், எல்லா சரித்திரத்தையும், உடல், மனம், மற்ற எல்லாவற்றையும் கடந்து சென்றவனாகிறாய். ஒருவன் பயப்படக் கூடியவைகளிலிருந்து சுதந்திரம் பெறுகிறான். அப்படிப்பட்ட சுதந்திரத்தில் – அப்போது நீ எங்கே இருப்பாய்? அப்படிப்பட்ட சுதந்திரத்தில், நீ நீயாக இருக்க முடியுமா? அப்படிப்பட்ட சுதந்திரத்தில், அப்படிப்பட்ட பரந்த வெளியில், நீ உன் சிறிய ''நான்'' என்கிற ஆணவத்தைக் கொண்டிருக்க முடியுமா? உன்னால் ''நானிருக்கிறேன்'' என்று சொல்ல முடியுமா?

உன்னால் ''நான் பந்தத்திலிருக்கிறேன்'' என்று சொல்ல முடியும். ஏனெனில் உனக்கு உன் எல்லை தெரியும். எந்தப் பந்தமும், பிடிப்பும், இல்லாதபோது, எந்த எல்லையும் இல்லை. நீ ஒரு நிலை என்று மட்டுமே ஆகிவிடுகிறாய், வேறெதுவும் இல்லை..... முழு எதுவுமற்ற நிலை, வெற்றிடம். இது பயத்தை உண்டாக்குகிறது. ஆகவே ஒருவன் தியானத்தைப் பற்றிப் பேசிக் கொண்டே இருக்கிறான், எப்படி அதைச் செய்வதென்று. அதே சமயம் அவன் அதைச் செய்யாமலே போய்க் கொண்டிருக்கிறான்.

இந்தப் பயத்திலிருந்தே எல்லாக் கேள்விகளும் எழுகின்றன. இந்தப் பயத்தை உணரு. நீ அதைத் தெரிந்து கொண்டால், அது மறைந்து விடும். நீ அதை அறிந்து கொள்ளாவிட்டால், அது தொடர்ந்து இருக்கும். ஆன்மிகப் பார்வையின்படி நீ இறக்கத் தயாரா? நீ இல்லாமல் போகத் தயாரா?

புத்தரிடம் யார் எப்போது வந்தாலும் அவர் சொல்லுவார், ''இதுதான் அடிப்படை உண்மை, சத்தியம் – அதாவது நீ கிடையாது.'' நீ கிடையாது என்ற காரணத்தால் நீ இறக்க முடியாது; நீ பிறக்கவும் முடியாது; மேலும் நீ கிடையாது என்பதால் நீ துன்பப்பட முடியாது, நீ எந்தப் பிடிப்பிலும் இருக்க முடியாது. நீ இதை ஏற்றுக்கொள்ளத் தயாரா?'' புத்தர் கேட்பார், ''நீ இதை ஏற்றுக்கொள்ளத் தயாரா? நீ இதை ஏற்றுக்கொள்ளத் தயாரில்லை என்றால், அப்படியெனில் தியானத்தை இப்பொழுது முயற்சிக்காதே. முதலில் நீ உண்மையிலேயே இருக்கிறாயா அல்லது நீ இல்லையா என்பதைக் கண்டுபிடிக்க முயற்சி செய். முதலில் இதன்மேல் தியானம் செய்: சுயம் என்ற ஏதாவது உள்ளதா? உள்ளே ஏதாவது பொருள் உள்ளதா அல்லது நீ வெறும் சேர்க்கைதானா?

உன்னால் கண்டுபிடிக்க முடிந்துவிட்டால், உனது உடம்பு வெறும் சேர்க்கையே என்பதை நீ கண்டுபிடிப்பாய். ஏதோவொன்று உன் தாயிடமிருந்து வந்தது, ஏதோவொன்று உன்

தந்தையிடம் இருந்து வந்தது, மற்ற எல்லாம் உணவிலிருந்து வந்தது. இதுதான் உன் உடம்பு. இந்த உடம்பில் நீ கிடையாது, சுயம் என்பது கிடையாது. மனதைப் பற்றிச் சிந்தித்துப் பார். இங்கிருந்து ஏதோவொன்று வந்தது, அங்கிருந்து ஏதோவொன்று வந்தது. தானாக உருவான எதுவும் மனத்தில் இல்லை. அது ஒரு தொகுப்பு.

மனத்தில் ஏதாவது சுயம் இருக்கிறதா என்று கண்டுபிடி. நீ ஆழமாகச் சென்றால், உனது அடையாளம் ஒரு வெங்காயத்தைப் போல என்பதைக் காண்பாய். நீ ஒரு தோலை உரித்தால், மற்றொரு தோல் வரும்; நீ அதை உரித்தால் மறுபடியும் ஒரு தோல் வரும். நீ தொடர்ந்து தோல்களை உரித்துக் கொண்டே போனால், முடிவில் ஒன்றுமில்லாததையே நீ வந்து சேர்வாய். எல்லாத் தோல்களும் உரித்தெறியப்பட்டபின், உள்ளே ஒன்றும் இல்லை. உடலும், மனமும் வெங்காயம் போன்றவைகளே. நீ உனது உடலையும் மனதையும் உரித்து எறிந்த பின், அப்போது நீ எதுவுமற்றதை, ஒரு அடியில்லாத பள்ளத்தை, ஒரு அடிமுடி யில்லாத வெறுமையைச் சந்திப்பாய். புத்தர் இதை சூன்யம் என்றழைத்தார்.

இந்த சூன்யத்தைச் சந்திக்க வேண்டுமென்பதே, இந்த வெறுமையைச் சந்திக்க வேண்டியிருப்பதே, பயத்தை உண்டாக்குகிறது. அந்தப் பயம் அங்குள்ளது. அதனால்தான் நாம் ஒருபோதும் தியானம் செய்வதில்லை. நாம் அதைப்பற்றிப் பேசுகிறோம், ஆனால் நாம் ஒருபோதும் அதைப்பற்றி எதுவும் செய்வதில்லை. அந்தப் பயம் அங்குள்ளது. உனக்குத் தெரியும், அடி ஆழத்தில் அங்கு வெறுமையே இருக்கிறது, ஆனால் நீ இந்தப் பயத்திலிருந்து தப்ப முடியாது. நீ என்ன செய்தாலும், நீ அதைச் சந்திக்கும் வரை பயம் அங்கேயேதான் இருக்கும். சந்திப்பது ஒன்றுதான் வழி. நீ ஒருமுறை உன் எதுவுமற்ற தன்மையைச் சந்தித்துவிட்டால், நீ ஒருமுறை உனக்குள் இருப்பது வெறும் வெட்டவெளி போன்றதே, சூன்யமே, என்பதை அறிந்துவிட்டால், பிறகு அங்குப் பயம் இருக்காது. பின் அங்குப் பயம் எதுவும் இருக்க முடியாது, ஏனெனில் இந்த சூன்யம், இந்த வெறுமையை அழிக்க முடியாது. இந்த

வெறுமை இறக்கப் போவதில்லை. எது இறக்கக் கூடியதோ அது இப்போது அங்கில்லை; அவை வெங்காயத்தின் தோல்களைப் போன்றவையே அன்றி வேறல்ல.

ஆகவேதான் பலமுறை ஆழமான தியானத்தின்போது, ஒருவன் எதுவுமற்ற தன்மைக்கு அருகாமையில் வரும்போது, ஒருவன் மிகவும் பயந்து நடுங்கத் தொடங்குகிறான். ஒருவன் அவன் இறக்கப் போவது போல உணர்கிறான், ஒருவன் இந்த எதுவுமற்ற தன்மையிலிருந்து தப்பித்து உலகத்திற்குத் திரும்பிவர விரும்புகிறான். பலர் திரும்பி விடுகின்றனர், பிறகு அவர்கள் ஒருபோதும் மறுபடியும் உள்ளே திரும்புவதில்லை. நான் பார்க்கின்ற வரை, நீங்கள் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு பிறவியில் ஏதோ ஒரு தியான யுக்தியை முயற்சி செய்தே இருக்கிறீர்கள். நீங்கள் எதுவுமற்ற தன்மைக்கு அருகில் சென்றுள்ளீர்கள், அப்போது பயம் பிடித்துக்கொள்ள நீங்கள் தப்பி வந்து விட்டீர்கள். உங்களது ஆழமான இறந்தகால நினைவுகளில், அந்த ஞாபகம் உள்ளது; அதுவே தடையாக இருக்கின்றது. எப்பொழுதெல்லாம் நீங்கள் மறுபடியும் தியானத்தை முயற்சிக்க யோசிக்கிறீர்களோ, அப்போதெல்லாம் உங்கள் உணர்வற்ற மனத்தின் அடி ஆழத்தில் இருக்கும் அந்த நினைவு உங்களைப் பாதிக்கிறது. அது சொல்கிறது, ''யோசித்துக் கொண்டே இரு; ஆனால் அதைச் செய்யாதே. நீ அதை ஒருமுறை செய்துள்ளாய்.''

நான் பலரின் உள்ளேயும் பார்த்திருக்கிறேன். ஆனால் ஏதாவது ஒரு பிறவியில் ஒன்று அல்லது இரண்டு முறை கூடத் தியானத்தை முயற்சிக்காத ஒரு மனிதனைக் காண்பது மிகக் கடினமாகவே உள்ளது. அந்த நினைவு அங்குள்ளது, ஆனால் உனக்கு அதைப்பற்றிய உணர்வு கிடையாது. எங்கு அந்த நினைவு உள்ளது என்பதைக் குறித்த விழிப்புணர்வு உனக்குக் கிடையாது. அது உள்ளது. நீ எந்தத் தியானமாவது செய்ய ஆரம்பித்தால் அது உடனே தடையாக மாறும், இதுவாக அதுவாக என்று பல வழிகளிலும் உன்னை நிறுத்த முயற்சி செய்யும். ஆகவே நீ உண்மையிலேயே தியானத்தில் ஆர்வம் கொண்டிருந்தால், அதைப்பற்றிய உன் பயத்தைக் கண்டுபிடி. அதில் நேர்மையாயிரு; நீ பயப்படுகிறாயா? நீ பயப்படுகிறாய்

என்றால், அப்போது முதலில் உனது பயத்தைக் குறித்து ஏதாவது செய்ய வேண்டும், தியானத்தைக் குறித்து அல்ல.

புத்தர் பல வழிகளைப் பயன்படுத்தி முயற்சிப்பதுண்டு. சில சமயம் சிலர் அவரிடம் சொல்வர், ''தியானத்தை முயற்சிக்க எனக்குப் பயமாக இருக்கிறது.'' இது மிக முக்கியம், நீ பயப்படுவதை உன் குருவிடம் கண்டிப்பாகத் தெரிவிக்க வேண்டும். நீ குருவை ஏமாற்ற முடியாது..... அதற்கு அவசியமுமில்லை – ஏனெனில் அது உன்னையே ஏமாற்றிக்கொள்வது. ஆகவே எப்பொழுதெல்லாம் யாராவது ஒருவர், ''நான் தியானிக்க பயப்படுகிறேன்'' என்று சொல்கிறாரோ அப்பொழுது புத்தர் சொல்வார், ''நீ முதல் தேவையைப் பூர்த்தி செய்து விட்டாய்.'' நான் தியானத்தைப் பற்றிப் பயப்படுகிறேன் என்று உன்னிடம் நீயே சொல்ல முடிந்தால், அப்போது ஏதோவொன்று செய்வது சாத்தியம். அப்போது ஏதோவொன்றைச் செய்ய முடியும். ஏனெனில் நீ ஒரு ஆழமான விஷயத்தைத் திறந்து விட்டாய். என்ன பயம்? அதன் மேல் தியானி. அது எங்கிருந்து வருகிறது, அதன் பிறப்பிடம் எது என்று போய்த் தோண்டி எடு.

எல்லாப் பயமும் அடிப்படையில் இறப்பு சம்பந்தப் பட்டது தான். அதன் உரு, வழி எதுவாயிருந்தாலும், அதன் வடிவம், பெயர் எப்படியிருந்தாலும், எல்லாப் பயமும் சாவிலிருந்து எழுபவைதான். நீ ஆழமாக உள்ளே போனால், நீ சாவிற்குப் பயப்படுவதை நீ காண்பாய்.

யாராவது ஒருவர் புத்தரிடம் வந்து, ''எனக்கு சாவைக் கண்டு பயமாயிருக்கிறது, நான் இதைக் கண்டுபிடித்துள்ளேன்'' என்று சொன்னால் புத்தர் சொல்வார், ''அப்படியானால் சுடுகாட்டிற்குப் போ, பிணம் எரிக்குமிடத்திற்குப் போ, அங்கு உடலை எரிக்கும் நெருப்பின் மேல் தியானம் செய். தினமும் மக்கள் இறக்கிறார்கள் – அவர்கள் எரிக்கப்படுவார்கள். சுடுகாட்டிலேயே இரு – பிணத்தின் நெருப்பின் மேல் தியானம் செய். குடும்ப அங்கத்தினர்கள் அங்கிருந்து சென்றபின், நீ அங்கேயே இரு. நெருப்பின் ஊடே பார், அந்த எரியும் உடலைப் பார். எல்லாம் வெறும் புகையாய் ஆன பின்பு, நீ அதை

ஆழமாகப் பார். யோசிக்காதே, அதன் மேல் மூன்று மாதங்கள், ஆறு மாதங்கள், ஒன்பது மாதங்கள் தியானம் செய்.

இறப்பிலிருந்து தப்பிக்க முடியாது என்பது உனக்கு உறுதியாகும் பொழுது, இறப்பு வாழ்வின் வழி, இறப்பு வாழ்வோடு சேர்ந்தது என்பது முழு உறுதியாகும் பொழுது, இறப்பு கண்டிப்பாக வந்தே தீரும். அதிலிருந்து தப்பிக்க எந்த வழியும் இல்லை. மேலும் நீ ஏற்கனவே அதில் இருக்கிறாய் என்பது உறுதியாகும் பொழுது, அப்போது மட்டும் நீ என்னிடம் வா.''

இறப்பின் மேல் தியானம் செய்ததற்குப் பின்னால், தினந் தோறும், இரவும் பகலும் பார்த்த பின்னால், பிணங்கள் எரிவதை, சாம்பலாகிப் போவதை – வெறும் புகையே மிச்சம் இருக்கிறது பின் அதுவும் மறைந்து போகிறது – பல மாதங்கள் தொடர்ந்து தியானம் செய்த பின், ஒன்று உறுதியாகத் தெரிகிறது: இறப்பு தவிர்க்க முடியாதது என்பது உறுதியாகிறது. உண்மையில் இது ஒன்று மட்டும்தான் உறுதியாக நடக்கப் போவது. வாழ்வில் ஒரே உறுதியான விஷயம் சாவு மட்டுமே. மற்ற எல்லாமே உறுதியற்றவை: அது நடந்தாலும் நடக்கலாம், நடக்காமலும் போகலாம். ஆனால் இறப்பைப் பொருத்தவரை நீ அது நடந்தாலும் நடக்கலாம், நடக்காமலும் போகலாம் என்று சொல்ல முடியாது. அது நடக்கும்; அது நடக்கப் போகிறது. அது ஏற்கனவே வந்துவிட்டது. நீ வாழ்வில் புகுந்த கணத்திலேயே, நீ சாவிலும் புகுந்துவிட்டாய். இப்போது அதைக் குறித்துச் செய்வதற்கு ஒன்றுமில்லை.

இறப்பு நிச்சயம் என்ற பிறகு அங்குப் பயமிருக்காது. மாற்றக் கூடிய விஷயங்களுடன்தான் எப்பொழுதும் பயம் இருக்கும். இறப்பு நிச்சயம் என்றால், பயம் மறைந்து விடுகிறது. நீ ஏதாவது மாற்ற முடியும், நீ இறப்பைக் குறித்து ஏதாவது செய்ய முடியும் என்றால், அப்போது பயம் அங்குக் குடி கொண்டிருக்கும். எதுவும் செய்ய முடியாது என்றால், நீ ஏற்கனவே அதற்குள் இருக்கிறாய் என்றால், அப்போது பயம் மறைந்துவிடும் என்பது உறுதி. இறப்பைப் பற்றிய பயம் மறைந்தவுடன், புத்தர் உன்னைத் தியானம் செய்ய அனுமதிப் பார். அவர் சொல்வார், ''இப்போது நீ தியானம் செய்யலாம்.''

ஆகவே நீயும் உன் மனதிற்குள் ஆழமாகப் போ. உனது உள்ளே இருக்கும் தடைகள் உடைந்தால்தான், உள்ளே இருக்கும் பயம் மறைந்து நீ இறப்பு என்பது மாற்றமுடியாத நிஜம் என்று நிச்சயமடைந்தால் மட்டுமே, இந்த யுக்திகளைக் கேட்பது உனக்கு உதவிபுரிய முடியும். நீ தியானத்தில் இறப்பதாய் இருந்தால் கூட அங்கு ஒரு பயமுமில்லை - ஏனெனில் சாவு நிச்சயம். தியானத்தில் இறப்பு நடந்துவிட்டாலும்கூட, அங்கு ஒரு பயமுமில்லை. அப்போது மட்டுமே நீ நகர முடியும் - அப்போது நீ ராக்கெட் வேகத்தில் நகர முடியும். ஏனெனில் தடைகள் எதுவும் அங்கில்லை.

இருக்கும் தூரத்தினால் காலதாமதம் ஆவதில்லை, இருக்கும் தடைகளே காரணம். நீ இந்தக் கணத்திலேயே போய்ச் சேர்ந்து விடலாம் தடைகள் எதுவும் அங்கில்லையென்றால். நீ ஏற்கனவே அங்கிருக்கிறாய். ஆனால் அந்தத் தடைகளால் நீ அங்கில்லை. இது ஒரு தடை தாண்டும் ஓட்டம், இதில் நீ மேலும் மேலும் அதிக தடைகளை ஏற்படுத்திக் கொண்டே போகிறாய். ஒரு தடையைத் தாண்டியதும் நீ நன்றாக உணர் கிறாய்; நான் இப்போது ஒரு தடையைக் கடந்துவிட்டேன் என்று நன்றாக உணர்கிறாய். அதன் மடத்தனம், அதன் முட்டாள்தனம் என்னவென்றால் அந்தத் தடையை அங்கே வைத்ததே நீ தான். அது ஒருபோதும் அங்கே கிடையாது. நீ தடைகளை வைத்துக் கொண்டே போகிறாய், பிறகு அவைகளைத் தாண்டிக் குதிக் கிறாய், பின் நன்றாக உணர்கிறாய், பிறகு மேலும் அதிகத் தடைகளை வைக்கிறாய், பிறகு தாண்டுகிறாய். நீ ஒரு வட்டத்தி லேயே சுற்றுகிறாய், ஒருபோதும், எப்போதும் மையத்தை நீ அடைவதில்லை.

மனம் தடைகளை உண்டாக்குகிறது. ஏனெனில் மனம் பயப்படுகிறது. அது உனக்குப் பல விளக்கங்களைக் கொடுக்கும், நீ ஏன் தியானம் செய்வதில்லை என்பதற்கு. அவைகளை நம்பாதே. ஆழமாகப் போ, அடிப்படைக் காரணத்தைக் கண்டு பிடி. ஏன் ஒரு மனிதன் உணவைப் பற்றிப் பேசிக் கொண்டே இருக்கிறான். ஆனால் ஒருபோதும் சாப்பிடுவதில்லை? என்ன பிரச்சனை? அந்த மனிதன் பயித்தியக்காரனைப் போல் அல்லவா தெரிகிறான்.

மற்றொரு மனிதன் அன்பைப் பற்றியே பேசிக் கொண் டிருக்கிறான். ஆனால் ஒருபோதும் அன்பாயிருப்பதில்லை. மற்றொரு மனிதன் வேறொன்றைப் பற்றிப் பேசிக் கொண்டே யிருக்கிறான். ஆனால் ஒருபோதும் அதைக் குறித்து எதுவும் செய்வதில்லை. இந்தப் பேச்சு ஒரு பிடிப்பாக மாறிவிட்டது, அது ஒரு கட்டாயமாக மாறிவிட்டது. ஒருவன் போய்க்கொண்டே இருக்கிறான், அவன் பேசுவதே அவனுக்குச் செய்வதாகத் தோன்றுகிறது. பேசிக்கொண்டிருப்பதை ஏதோ செய்வது போல நீ உணருவதால், நீ சுலபமாக உணருகிறாய். நீ ஏதோவொன்று செய்து கொண்டிருக்கிறாய் – குறைந்த பட்சம் பேசிக்கொண்டிருக் கிறாய், குறைந்த பட்சம் படித்துக் கொண்டிருக்கிறாய், குறைந்த பட்சம் கேட்டுக் கொண்டிருக்கிறாய். ஆனால் இது செய்வதல்ல. இது ஏமாற்று வேலை; இந்தப் பொய்த் தோற்றத்தில் விழுந்து விடாதே.

நான் இந்த நூற்றுப் பன்னிரண்டு முறைகளைப் பற்றிப் பேசப் போவது உனது மனத்திற்குத் தீனி போடுவதற்காக அல்ல, உன்னை மேலும் விவரம் தெரிந்தவனாக ஆக்குவதற்காக அல்ல, உன்னை மேலும் அறிவுள்ளவனாக ஆக்குவதற்கு அல்ல. நான் உன்னை ஒரு பண்டிதனாக்க முயற்சி செய்யவில்லை. நான், உனது வாழ்வையே மாற்றக்கூடிய ஒரு குறிப்பிட்ட யுக்தியை உனக்குக் கொடுப்பதற்காகப் பேசிக் கொண்டிருக்கிறேன். ஆகவே எந்த முறை உன்னைக் கவருகிறதோ அதைப் பற்றிப் பேச ஆரம்பிக்காமல், செய்! அதைப் பற்றி மௌனமாக இருந்து செய். உன் மனம் பல கேள்விகளை எழுப்பும். என்னிடம் கேட்பதற்குமுன் ஆழமாக உள்ளே பார். இந்தக் கேள்விகள் உண்மையிலேயே முக்கியத்துவம் உள்ளவையா அல்லது உன் மனம் உன்னை ஏமாற்றுகிறதா என்று ஆழமாக உள்ளே பார்.

செய், பிறகு கேள். அப்போது உனது கேள்வி நடை முறையாக இருக்கும். எனக்குத் தெரியும் எந்தக் கேள்வி செய்து பார்த்தல் மூலமாக வந்தது, எந்தக் கேள்வி அறிந்து கொள்ளத் துடிப்பதில் இருந்து, அறிவிலிருந்து வந்தது. ஆகவே மெது மெதுவாக உன் அறிவுபூர்வமான கேள்விகளுக்கு நான் பதில் சொல்ல மாட்டேன். ஏதாவதொன்றைச் செய் – பின் உனது

கேள்வியில் முக்கியத்துவம் இருக்கும். இவை போன்ற கேள்விகள், ''இந்தப் பயிற்சி மிகவும் எளிய ஒன்று'' என்று சொல்பவை. செய்து பார்த்தபின் கேட்கப்படுபவை அல்ல. அது அவ்வளவு எளியதல்ல. கடைசியாக நான் மறுபடியும் கண்டிப்பாகச் சொல்ல வேண்டும்: நீ ஏற்கனவே சத்தியம், உண்மை.

ஒரு குறிப்பிட்ட விழிப்புணர்வு மட்டுமே தேவை.

நீ வேறு எங்கோ போக வேண்டியது இல்லை. நீ உனக்குள் தான் செல்ல வேண்டும். மேலும் அப்படிச் செல்வது இந்தக் கணத்திலேயே சாத்தியம். நீ உன் மனதை ஓரமாக ஒதுக்கி வைக்க முடிந்தால், நீ இப்பொழுதே இந்தக் கணத்திலேயே நுழைவாய்.

இந்த யுக்திகள் உன் மனதை ஓரமாக ஒதுக்கி வைப்பதற் காகவே. இந்த யுக்திகள் உண்மையில் தியானத்திற்கானவை அல்ல; இவை மனதை ஓரமாக ஒதுக்கி வைப்பதற்கே. மனம் அங்கு இல்லாமல் போனால், நீ இருப்பாய்!

இன்று இது போதும் அல்லது தேவைக்கதிகமாகவே போதும் என்று நினைக்கிறேன்.




# கவனிக்கும் தன்மையில் ஐந்து யுக்திகள்

## சூத்திரங்கள்

5. ''புருவங்களுக்கு மத்தியில் கவனம் வை, எண்ணங் களுக்கு முன்னால் மனம் இருக்கட்டும். உருவம் தலைவரை மூச்சின் சத்தால் நிறையட்டும், அங்கு ஒளியாகக் கொட்டட்டும்.''

6. ''உலகச் செயல்களில் இருக்கும்போது இரண்டு மூச்சுக்களின் இடையே கவனத்தை வை, அப்படிப் பயிற்சி செய்கையில், சில தினங்களில், புதிதாகப் பிறப்பாயாக.''

7. ''எவ்விதத்திலும் பார்க்க முடியாத மூச்சு நெற்றியின் மையத்திலிருந்து, அது இதயத்தை அடைகையில், உறங்கும் கணத்தில், கனவுகளின் மேலும் அதோடு மரணத்தின் மேலும் கூட, அவைகளைச் செலுத்தும் திறனடைவாயாக.''

8. ''அதிகபட்சப் பக்தியோடு, மூச்சின் இரண்டு சந்திப்புகளின் மேலும் மையம் கொண்டு அறிபவனை அறிவாயாக.''

9. ''இறந்தவனைப் போலப் படு. ஆத்திரம் நிறைந்து அப்படியே இரு. அல்லது இமையை அசைக்காமல் பார் அல்லது எதையாவது உறிஞ்சு, பின்பு உறிஞ்சுதலாகவே மாறிவிடு.''

★★★

மாபெரும் கிரேக்கத் தத்துவஞானி பித்தகோரஸ், எகிப்து நாட்டின் ஒரு பள்ளியில் சேரச் சென்றபோது – மனம் தாண்டிய புதிர்களைப் பற்றிய இரகசியப் பள்ளி – அவன் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. இதுவரை உருவாக்கப்பட்டவைகளி லேயே மிகச் சிறந்த ஒரு மனம் பித்தகோரஸ். அவரால் ஏன் அவரைச் சேர்க்க மறுக்கிறார்கள் என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் மறுபடியும் மறுபடியும் விண்ணப்பித்தார்; ஆனால் அவர் ஒரு குறிப்பிட்ட உணவு உட்கொள்ளாமல் இருப்பது மற்றும் மூச்சுப் பயிற்சியை மேற்கொண்டாலொழிய அவரைப் பள்ளியில் சேர்த்துக்கொள்ள முடியாது என்று கூறி விட்டனர்.

பித்தகோரஸ் இதற்குச் சொன்னதாகக் குறிக்கப்பட்டுள்ளது, ''நான் அறிவிற்காக வந்தேன், எந்தவித ஒழுக்கப் பயிற்சிக் காகவும் அல்ல.'' ஆனால் பள்ளியின் நிர்வாகிகள் சொன்னார்கள், ''நீ மாறுபாடு அடையவில்லை என்றால் எங்களால் உனக்கு அறிவைக் கொடுக்க முடியாது. உண்மையில் நாங்கள் அறிவின் மேல் ஆர்வமுடையவர்களே அல்ல, நாங்கள் நிஜமான அனுபவத்தில் ஆர்வம் கொண்டவர்கள். வாழாத, அனுபவப் படாத வரையில் எந்த அறிவும் அறிவல்ல. ஆகவே நீ நாற்பது நாட்கள் சாப்பிடாமல் இருக்க வேண்டும், அப்போது தொடர்ந்து ஒரு குறிப்பிட்ட முறைப்படி மூச்சு விட வேண்டும், அதோடு சில குறிப்பிட்ட புள்ளிகளைப் பற்றிய குறிப்பிட்ட விழிப் புணர்வோடும் இருக்க வேண்டும்.''

வேறு எந்த வழியும் இல்லை, ஆகவே பித்தகோரஸ் இந்தப் பயிற்சியை மேற்கொண்டு தேர்ச்சி பெற வேண்டி யிருந்தது. நாற்பது நாட்கள் உண்ணாமல், மூச்சு விட்டுக் கொண்டு, விழிப்போடு, கவனமாக இருந்த பின் அவர் பள்ளியில் சேர அனுமதிக்கப்பட்டார். பித்தகோரஸ் சொன்ன தாகச் சொல்லப்படுவது இது, ''நீங்கள் பித்தகோரஸை உள்ளே அனுமதிக்கவில்லை. நான் வேறு மனிதன், நான் மறுபிறப்பு எடுத்துள்ளேன். நீங்கள் சரி, நான் தவறு, ஏனெனில் அப்போது

என் முழு அணுகுமுறையும் அறிவுபூர்வமானது. இந்தத் தூய்மைப்படுத்தலின் பயனாக, எனது ஜீவனின் மையம் மாறிவிட்டது. அறிவுபூர்வமானதிலிருந்து அது கீழே இறங்கி இதயத்திற்கு வந்துவிட்டது. இப்போது விஷயங்களை என்னால் உணர முடியும். இந்தப் பயிற்சிக்கு முன்பாக என்னால் அறிவுபூர்வமாக மட்டுமே, தலை மூலமாக மட்டுமே புரிந்து கொள்ள முடியும். இப்போது என்னால் உணர முடியும். இப்போது சத்தியம், உண்மை என்பது எனக்கு ஒரு கோட்பாடு அல்ல, மாறாக வாழ்க்கை. அது ஒரு தத்துவமாக இருக்கப் போவதில்லை, அதற்குப் பதிலாக, ஒரு அனுபவமாக – பிரபஞ்ச இருப்பாக இருக்கும்.''

அவர் மேற்கொண்ட அந்தப் பயிற்சி எது? இந்த ஐந்தாவது யுக்தியே பித்தகோரஸுக்குக் கொடுக்கப்பட்ட யுக்தி ஆகும். இது கொடுக்கப்பட்டது எகிப்தில், ஆனால் யுக்தி இந்தியாவினு டையது.

## 5. உனது கவனத்தை மூன்றாவது கண் மேல் வை.

ஐந்தாவது மூச்சு யுக்தி: ''புருவங்களுக்கு மத்தியில் கவனம் வை, எண்ணங்களுக்கு முன்னால் மனம் இருக்கட்டும். உருவம் தலைவரை மூச்சின் சத்தால் நிறையட்டும், அங்கு ஒளியாகக் கொட்டட்டும்.''

இந்த யுக்திதான் பித்தகோரஸுக்குக் கொடுக்கப்பட்டது. பித்தகோரஸ் இந்த யுக்தியுடன்தான் கிரேக்க நாட்டிற்குத் திரும்பினார். உண்மையில் அவர்தான் ஊற்றுக்கண்ணாக, மேற்கத்திய ஞானத்தேடலின் பிறப்பிடமாக மாறினார். மேற் கத்திய ஞானமார்க்கத்தின் தந்தை அவரே.

இந்த யுக்தி வெகு ஆழமான முறைகளில் ஒன்று. இதைப் புரிந்துகொள்ள முயற்சி செய்: ''புருவங்களுக்கு மத்தியில் கவனம் வை.....'' தற்போதைய உடலியல், விஞ்ஞான ஆராய்ச்சி சொல்கிறது, இரண்டு புருவங்களுக்கும் இடையில் உள்ள சுரப்பி

தான் உடலிலேயே மிகவும் புதிரான பாகமாக உள்ளது. இந்த சுரப்பி, பீனியல் சுரப்பி என்றழைக்கப்படுவது, திபெத்தியர்களின் மூன்றாவது கண்ணாகக் கருதப்படுவது – ''சிவநேத்ரா'': அதாவது சிவனின் கண், தந்த்ராவின் கண். இரண்டு கண்களுக்கு இடையில் மூன்றாவது கண் ஒன்று உள்ளது, ஆனால் அது வேலை செய்வதில்லை. அது அங்கு உள்ளது, அது எந்தக் கணத்திலும் வேலை செய்ய முடியும், ஆனால் இயற்கையாக அது வேலை செய்வதில்லை. அதைத் திறப்பதற்கு நீ அதைக் குறித்து ஏதோவொன்றைச் செய்ய வேண்டும். அது குருடல்ல, அது மூடியுள்ளது அவ்வளவுதான். இந்த யுக்தி மூன்றாவது கண்ணைத் திறப்பதற்காக.

''புருவங்களுக்கு மத்தியில் கவனம் வை.....'' உன் கண்களை மூடு, பிறகு உனது இரு கண்களையும் இரண்டு புருவங்களுக்கும் மத்தியில் குவி. மத்தியில் குவி, கண்களை மூடிக்கொண்டு, ஆனால் இரண்டு கண்களாலும் நீ பார்ப்பதைப் போல. அதில் முழுக் கவனத்தையும் கொடு.

கவனத்தோடு இருப்பதற்கு உரிய மிக எளிமையான ஒரு முறை இது. நீ இவ்வளவு சுலபமாக உடலின் வேறு எந்தப் பாகத்தைக் குறித்தும் கவனத்தோடு இருக்க முடியாது. இந்த சுரப்பி கவனத்தை எதையும்விட அதிகம் ஈர்த்துக் கொள்கிறது. நீ இதற்குக் கவனத்தைக் கொடுத்தால், உன் இரண்டு கண்களும் இந்த மூன்றாவது கண்ணால் வசியம் செய்யப்படுகிறது. அவை அசைவில்லாமல் ஆகிவிடும், அவை நகர முடியாது. நீ உடலின் வேறு எந்தப் பாகத்தின் மேல் கவனம் வைக்க முயற்சி செய்தாலும், அது கடினமாயிருக்கும். இந்த மூன்றாவது கண் கவனத்தைப் பிடித்துக் கொள்கிறது, கவனத்தை இழுக்கிறது, இது கவனத்தைக் காந்தம் போலக் கவர்கிறது. ஆகவே உலகத்திலுள்ள எல்லா வழிகளும் இதைப் பயன்படுத்தி உள்ளன. உனக்குக் கவனம் வைக்கப் பயிற்சி கொடுப்பதற்கு இதுவே மிகவும் எளிமையானது. ஏனெனில் கவனத்தோடு இருக்க நீ மட்டும் முயற்சிப்பதில்லை, அந்தச் சுரப்பியும் உனக்கு உதவுகிறது; அது

காந்தமாய்க் கவர்கிறது. அதை நோக்கி உனது கவனத்தை அது இழுத்துக் கொள்கிறது. அது விழுங்கிவிடுகிறது.

பழைய தந்த்ரா நூல்களில் மூன்றாவது கண்ணிற்கு உணவு கவனம்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அது பசியோ டிருக்கிறது; அது பிறவி, பிறவியாகப் பசியோடு இருக்கிறது. அதற்கு நீ கவனம் கொடுத்தால், அது துடிப்புக்கு வரும். அது உயிர்த்துடிப்படைகிறது! அதற்கு உணவு கிடைத்துவிட்டது. நீ ஒருமுறை கவனம் உணவாக இருப்பதை அறிந்துகொண்டு விட்டால், நீ ஒருமுறை உன் கவனம் காந்தம் போல் கவரப் படுவதை, ஈர்க்கப்படுவதை, அந்தச் சுரப்பினாலேயே இழுக்கப் படுவதை உணர்ந்துவிட்டால், அதன்பின் கவனத்தோடு இருப்பது ஒன்றும் சிரமமானது அல்ல. ஒருவன் சரியான புள்ளியை மட்டும் தெரிந்துகொள்ள வேண்டும். ஆகவே உன் கண்களை மூடு, உனது கண்கள் நடு மத்திக்கு நகரட்டும், இப்போது அந்தப் புள்ளியை உணரு. நீ அந்தப் புள்ளிக்கு அருகே வரும்போது, உனது கண்கள் திடீரென்று அசையாமல் நிற்கும். அவைகளை அசைப்பது கடினமாயிருக்கும்போது, நீ சரியான புள்ளியைப் பிடித்துவிட்டாய் என்பதைத் தெரிந்துகொள்.

''புருவங்களுக்கு மத்தியில் கவனம் வை, எண்ணங்களுக்கு முன்னால் மனம் இருக்கட்டும்.....'' இந்தக் கவனம் அங்கிருந் தால், அப்போது முதல் தடவையாக ஒரு புதிய விஷயத்தை நீ அனுபவிப்பாய். முதல் தடவையாக எண்ணங்கள் உனக்கு முன்னால் ஓடுவதைப் பார்ப்பாய்; நீ பார்வையாளனாக மாறி விடுவாய். அது ஒரு சினிமாத் திரை போல: எண்ணங்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன, நீ பார்வையாளனாக இருக்கிறாய். உனது கவனம் மூன்றாவது கண் மையத்தில் குவிந்துவிட்டால், உடனே நீ எண்ணங்களின் பார்வையாளனாக மாறிவிடுவாய்.

சாதாரணமாக நீ பார்வையாளனல்ல, நீ எண்ணங்களோடு உன்னை அடையாளம் கொள்கிறாய். அங்குக் கோபமிருந்தால், நீ கோபமடைகிறாய். ஒரு எண்ணம் நகர்ந்தால், நீ அதற்குப் பார்வையாளனாய் இருப்பதில்லை, நீ அந்த எண்ணத்துடன்

ஒன்றிப் போகிறாய், அடையாளம் கொண்டு விடுகிறாய், பின் அதோடு சேர்ந்து நீயும் நகர்கிறாய். நீ அந்த எண்ணமாக மாறிவிடுகிறாய், அந்த எண்ணத்தின் உருவை எடுக்கிறாய். பாலுணர்வு அங்கு இருக்கும்போது நீ பாலுணர்வாக மாறிவிடுகிறாய், கோபம் அங்கு இருக்கும்போது நீ கோபமாக மாறிவிடுகிறாய், பேராசை அங்கு இருக்கும்போது நீ பேராசையாக மாறிவிடுகிறாய். நகருகின்ற எந்த எண்ணமும் உன்னோடு அடையாளம் கொண்டு விடுகிறது. உனக்கும் எண்ணத்திற்கும் இடையில் எந்த இடைவெளியும் இருப்பதில்லை.

ஆனால் மூன்றாவது கண்ணை நோக்கும்போது, திடீரென்று நீ ஒரு பார்வையாளனாக, சாட்சிபாவம் கொண்டவனாக மாறுகிறாய். மூன்றாவது கண்ணின் மூலம் நீ ஒரு சாட்சி பாவமாக மாறுகிறாய். மூன்றாவது கண்ணின் மூலம் நீ எண்ணங்களை வானத்தில் ஓடும் மேகங்களைப் போல அல்லது வீதியில் போகும் மக்களைப் போலப் பார்க்க முடியும்.

நீ உனது வீட்டின் ஜன்னலருகே உட்கார்ந்து கொண்டு வானத்தைப் பார்க்கிறாய் அல்லது வீதியிலுள்ள மக்களைப் பார்க்கிறாய்; நீ அவற்றில் அடையாளம் கொள்வதில்லை. நீ விலகி இருக்கிறாய், மலை மேலிருந்து பார்ப்பதைப் போல. நீ வேறு. இப்போது கோபம் அங்கு இருந்தால் அதை ஒரு பொருளைப் போல உன்னால் பார்க்க முடியும். இப்போது நீ கோபமாயிருப்பதாக நீ உணரமாட்டாய். நீ உன்னைக் கோபம் சூழ்ந்திருப்பதாக, உன்னை நோக்கிக் கோபம் என்ற மேகம் வந்து சூழ்ந்திருப்பதாக உணருவாய். ஆனால் நீ அந்தக் கோபமல்ல. இவ்வாறு நீ கோபமல்ல என்றாகிவிட்டால், கோபம் வலிமை யற்றதாகி விடுகிறது, அது உன்னைப் பாதிக்க முடியாது; நீ அதனால் தொடப்படாமல் இருக்கிறாய். கோபம் வரும் போகும். ஆனால் நீ உன்னில் மையம் கொண்டவனாயிருப்பாய்.

இந்த ஐந்தாவது யுக்தி சாட்சிபாவத்தைக் கண்டுபிடிக்கும் யுக்தி. "புருவங்களுக்கு மத்தியில் கவனம் வை, எண்ணங்களுக்கு

முன்னால் மனம் இருக்கட்டும்.'' இப்போது உனது எண்ணங் களைப் பார்; இப்போது உன் எண்ணங்களைச் சந்தி. ''உருவம் தலை வரை மூச்சின் சத்தால் நிறையட்டும், அங்கு ஒளியாகக் கொட்டட்டும்.'' கவனம் மூன்றாவது கண்ணில், இரண்டு புருவங்களுக்கு மத்தியில் குவிக்கப்படும்போது, இரண்டு விஷயங்கள் நடக்கின்றன. ஒன்று, திடீரென நீ சாட்சிபாவமாக மாறுகிறாய்.

இது இரண்டு விதமாக நிகழலாம். நீ சாட்சிபாவமாக மாறுவதன் மூலம் நீ மூன்றாவது கண்ணில் மையம் கொள்ள லாம். சாட்சிபாவமாக இருக்க முயலு. எது நடந்தாலும், சாட்சிபாவத்திலேயே இருக்க முயற்சி செய். நீ உடல்நல மில்லாமல் இருக்கிறாய், உடம்பு வலியாக, வேதனையாக இருக்கிறது, உனக்குத் துன்பமும் துயரமும் வந்துள்ளது, எதுவாக இருந்தாலும் – அதற்கு சாட்சிபாவத்தோடு இரு. எது நடந் தாலும், நீ அதோடு அடையாளம் கொள்ளாதே. சாட்சிபாவமாக இரு, ஒரு பார்வையாளனாக இரு. அதன்பின் சாட்சிபாவத்தில் இருந்துகொண்டே இருப்பது சாத்தியமானதாகி விட்டால், நீ மூன்றாவது கண்ணில் குவிந்து விடுவாய்.

இதற்குத் தலைகீழானதும் ஆகலாம். நீ மூன்றாவது கண்ணில் குவிந்திருந்தால், நீ சாட்சிபாவத்திற்கு மாறிவிடுவாய். இவை இரண்டும் ஒன்று நடக்கும் இரு வழிகள். ஆகவே ஒன்று: மூன்றாவது கண்ணில் மையம் கொண்டிருக்கையில் சாட்சி பாவமான சுயம் அங்கே எழும். இப்போது நீ உனது எண்ணங்களைச் சந்திக்கலாம். இது தான் முதலாவது. இரண் டாவது, இப்போது நீ மூச்சின் நுட்பமான, மென்மையான அதிர்வுகளை உணர முடியும். இப்போது நீ மூச்சின் உருவத்தை, மூச்சின் முக்கிய சத்தாக உள்ளதை உணர முடியும்.

முதலில் ''உருவம்'', ''மூச்சின் சத்து'' என்று சொல்லப் படுவதின் அர்த்தமென்ன என்று புரிந்துகொள்ள முயற்சி செய். நீ மூச்சு விடும்போது, நீ வெறும் காற்றை மட்டும் சுவாசிப்ப தில்லை. நீ வெறும் காற்றையே – ஆக்ஸிஜன், ஹைட்ரஜன்

மற்றும் பல வாயுக்கள் சேர்ந்த காற்று – சுவாசிப்பதாக விஞ்ஞானம் கூறுகிறது. அவர்கள், நீ காற்றையே சுவாசிப்பதாகக் கூறுகின்றனர்! ஆனால் தந்த்ரா சொல்கிறது, காற்று வெறும் வாகனம்தான், உண்மையான விஷயம் அதுவல்ல. நீ 'பிராணா'வை சுவாசிக்கிறாய் – அதாவது உயிர்ச் சக்தியை. காற்று வெறும் சாதனம்; பிராணாவே நிறைந்திருப்பது. நீ பிராணாவை சுவாசிக்கிறாய், வெறும் காற்றை அல்ல.

தற்கால விஞ்ஞானத்தால் பிராணா என்பது போன்ற ஏதோவொன்று இருக்கிறதா என்பதை இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் சில ஆராய்ச்சியாளர்கள் ஏதோவொரு புதிரானதை உணர்ந்திருக்கிறார்கள். மூச்சு வெறும் காற்று அல்ல. இது பல தற்கால ஆராய்ச்சியாளர்களாலும் உணரப்பட்டுள்ளது. குறிப்பாக, ஒரு பெயரைச் சொல்ல வேண்டும்: வில்லியம் ரிச், ஒரு ஜெர்மானிய உளவியலாளர், இவர் இதை ''ஆர்கான் எனர்ஜி'' என்று அழைத்தார். இது பிராணா என்பதைப் போன்றதே. அவர் சொன்னார், நீ சுவாசிக்கும்போது, காற்று ஒரு வெறும் சாதனம்தான், அதில் ஒரு புதிரான பொருள் உள்ளது, அதை ஆர்கான் அல்லது பிராணா அல்லது உயிர்ச்சக்தி என்று அழைக்கலாம். ஆனால் இது மிகவும் நுட்பமானது. உண்மையில் இது ஒரு பொருளல்ல. காற்று ஒரு பொருள் – கொண்டு செல்லும் பொருள் – ஆனால் ஏதோ நுட்பமானது, பொருளற்ற ஒன்று, அதன் மூலம் போகிறது.

அதனுடைய விளைவுகளை உணர முடியும். நீ ஒரு மிகவும் உயிர்ச்சக்தியுள்ள ஒருவரோடு இருக்கும்போது, குறிப்பிட்ட உயிர்ச்சக்தி ஒன்று உன்னுள் எழுவதை நீ உணர முடியும். நீ மிகவும் நோய்வாய்ப்பட்ட ஒருவரோடு இருக்கும்போது, உறிஞ்சப்பட்டதாக, உன்னிடமிருந்து ஏதோவொன்று பிடுங்கப் பட்டதாக நீ உணர்வாய். நீ ஆஸ்பத்திரிக்குச் செல்லும்போது, ஏன் நீ மிகவும் சோர்வாக உணர்கிறாய்? நீ எல்லாப் பக்கங் களிலிருந்தும் உறிஞ்சப்படுகிறாய். முழு ஆஸ்பத்திரி சூழ்நிலை யும் ஆரோக்கியமற்று உள்ளது, அங்குள்ள ஒவ்வொருவருக்கும்

உயிர்ச்சக்தி, அதிக பிராணா தேவை. ஆகவே நீ அங்கிருந்தால், திடீரென்று உன்னுடைய பிராணா உன்னிடமிருந்து வெளியே ஓட ஆரம்பிக்கிறது. சில சமயம் நீ கூட்டத்தின் நடுவிலிருக் கையில், ஏன் நீ மூச்சடைப்பது போல உணருகிறாய்? ஏனெனில் உனது பிராணா உறிஞ்சப்படுகிறது. காலையில் தனியாக நீ வானத்தின் அடியில், மரங்களின் அடியில் இருக்கும்போது திடீரென்று நீ உனக்குள் ஒரு உயிர்ச்சக்தியை, பிராணாவை உணர்கிறாய். ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு குறிப்பிட்ட இடம் தேவை. அந்த இடம் கொடுக்கப்படாவிட்டால், உன் பிராணா உறிஞ்சப்படும்.

வில்லியம் ரிச் பல பரிசோதனைகள் செய்தார். ஆனால் அவரொரு பயித்தியக்காரனாகக் கருதப்பட்டார். விஞ்ஞானம் அதற்கே உரிய மூட நம்பிக்கைகளைக் கொண்டுள்ளது. மேலும் விஞ்ஞானம் மிகவும் பழமைத்தனம் வாய்ந்தது. விஞ்ஞானம், காற்றை விட அதிகமாக வேறு ஏதோவொன்று உள்ளது என்பதை இன்னும் உணர முடியவில்லை. ஆனால் இந்தியா அதோடு பல நூற்றாண்டுகளாகப் பரிசோதனை செய்து வருகிறது.

நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம் அல்லது நீங்கள் ஒருவேளை பார்த்துக்கூட இருக்கலாம், அதாவது ஒருவர் 'சமாதி'க்குள் போவதை, பேரண்ட இயக்கத்தின் உணர்வு நிலைக்கு, நிலத்தினடியில் சமாதிக்குள் பல நாட்களுக்கு, காற்று புகமுடியாத இடத்திற்குப் போவதைப் பற்றித் தெரிந்திருக்கலாம். ஒரு மனிதன் 1880ம் வருடம் எகிப்திய நாட்டில் அத்தகைய நிலத்தினடியில் சமாதிக்கு நாற்பது வருடம் அங்கேயே இருப் பதற்காகச் சென்றான். அவனைப் புதைத்த அத்தனை பேரும் இறந்துவிட்டார்கள். ஏனெனில் அவன் நாற்பது வருடம் கழித்து 1920ம் ஆண்டுதான் அவனது சமாதியிலிருந்து வெளியே வர வேண்டும். 1920ல் அவனை உயிருடன் பார்ப்போம் என்று ஒருவருமே நினைக்கவில்லை. ஆனால் அவன் உயிருடன் இருந்தான். அவன் அதன்பின்பு பத்து வருடங்கள் உயிரோடிருந் தான். அவன் முழுவதும் வெளிறிப் போயிருந்தான். ஆனால்

அவன் உயிரோடிருந்தான். அங்கு அவனைக் காற்று சென்றடைய எந்தச் சாத்தியமும் இல்லை.

அவன் மருத்துவ டாக்டர்கள் மற்றும் ஏனையோரால் கேட்கப்பட்டான், ''இதன் ரகசியம் என்ன?''

அவன் சொன்னான், ''எங்களுக்குத் தெரியாது. எங்களுக்கு ஒன்று மட்டும் தெரியும், அதாவது பிராணா எங்கு வேண்டுமானாலும் நுழையும், பாயும்.'' காற்று நுழைய முடியாது, ஆனால் பிராணா நுழைய முடியும். ஒருமுறை உனக்குப் பிராணாவை நேரடியாக, அதன் கொள்கலம் இல்லாமல், உறிஞ்ச முடியும் என்பது தெரிந்துவிட்டால், அதன்பின் நீ பல நூற்றாண்டுகளுக்குக் கூட சமாதிக்குள் போய்விட முடியும்.

மூன்றாவது கண்ணில் குவிந்திருக்கும் பொழுது, திடீரென்று நீ மூச்சின் முக்கியச் சத்தை நோக்க முடியும் – மூச்சையல்ல, மாறாக மூச்சின் முக்கியச் சத்தை, பிராணாவை. அப்படி நீ சுவாசத்தின் முக்கியச் சத்தை, பிராணாவை நோக்க முடிந்தால், அப்போது நீ குதிக்கக்கூடிய, மிகப்பெரிய மாற்றம் நிகழக்கூடிய இடத்தில், அந்தப் புள்ளியில் இருக்கிறாய்.

சூத்திரம் சொல்கிறது, ''உருவம் தலை வரை மூச்சின் சத்தால் நிறையட்டும்.....'' நீ மூச்சின் சத்தை, பிராணாவை உணரும் அந்தத் தருணத்தில், உனது தலை அதனால் நிறைவதாகக் கற்பனை செய்து கொள் – வெறும் கற்பனை செய்து கொள். எந்த முயற்சியும் தேவையில்லை. எப்படிக் கற்பனை வேலை செய்கிறது என்று நான் உனக்கு விளக்குகிறேன். மூன்றாவது கண் மையத்தில் நீ குவிந்திருக்கும் பொழுது, கற்பனை செய், அது நடக்கும் – அப்பொழுதே அங்கேயே.

இப்பொழுது உனது கற்பனை எதையும் உருவாக்க முடியாது; நீ கற்பனை செய்துகொண்டே போகிறாய். ஆனால் எதுவும் நடப்பதில்லை. ஆனால் சில சமயங்களில், எதுவும் தெரியாமலே, சாதாரண வாழ்க்கையிலும் பலதும் நடக்கின்றன. நீ உனது நண்பனைப் பற்றிக் கற்பனை செய்து கொண்டிருக்

கிறாய். அப்போது திடீரென்று கதவைத் தட்டும் சப்தம் கேட்கிறது. உனது நண்பன் வந்திருக்கிறான், நீ இதைத் தற்செயலானது என்று சொல்கிறாய். சில சமயம் உனது கற்பனை தற்செயலானது போல வேலை செய்கிறது. ஆனால் இனிமேல் எப்பொழுது இப்படி நடந்தாலும், முழு விஷயத்தையும் ஞாபகப்படுத்தி, பகுத்தறிய முயற்சி செய். எப்பொழுதெல்லாம் உன் கற்பனை நடைமுறையாக மாறியுள்ளதாக நீ உணர்வது நிகழ்கிறதோ, அப்போது உனக்குள் சென்று ஆழமாகப் பார். உனது கவனம் எங்கோ மூன்றாவது கண்ணுக்கு அருகிலேயே கண்டிப்பாக இருக்கும். எப்பொழுதெல்லாம் தற்செயலாக இப்படி நிகழ்கிறதோ, அப்பொழுதெல்லாம் அது தற்செயலானதன்று. நீ இரகசிய விஞ்ஞானத்தை அறியாததால் உனக்கு அது அப்படித் தெரிகிறது. உனது மனம் தெரியாமலேயே மூன்றாவது கண் மையத்திற்கு அருகில் நகர்ந்திருக்க வேண்டும். உனது கவனம் மூன்றாவது கண்ணில் இருக்கையில், வெறும் கற்பனையே போதும் அந்த விஷயத்தை உருவாக்க.

இந்தச் சூத்திரம் சொல்கிறது, புருவங்களுக்கு மத்தியில் நீ குவிந்திருக்கையில், மூச்சின் முக்கிய சத்தை அப்போது நீ உணர முடிகையில், ''உருவம் நிறையட்டும்.'' இப்போது அந்தச் சத்து உன் முழு தலையிலும், முக்கியமாகத் தலையின் உச்சியில், சகஸ்ரகாரத்தில் – அதாவது உளப்பூர்வமான மிக உயர்ந்த மையம் – நிறைவதாகக் கற்பனை செய்துகொள். நீ கற்பனை செய்யும் கணத்திலேயே, அது நிறைந்துவிடும். ''அங்கு'' – தலையின் உச்சியில் – ''ஒளியாய் கொட்டட்டும்.'' இந்தப் பிராணா சத்து தலையின் உச்சியிலிருந்து ஒளியாகக் கொட்டுகிறது. இப்படி அது கொட்ட ஆரம்பிக்கும், இப்படிக் கொட்டும் ஒளியின் அடியில் நீ புத்துணர்வடைவாய், மறுபிறவியெடுப்பாய், முற்றிலும் புதிதாய் ஆவாய். இதுதான் உள்ளே மறுபிறப்பு எடுப்பது என்பதன் அர்த்தம்.

ஆகவே இரண்டு விஷயங்கள் : முதலாவது, மூன்றாவது கண்ணில் குவிவதால் உன் கற்பனை சக்தியுள்ளதாகிறது,

உருவாகக் கூடியதாகிறது. அதனால்தான் தூய்மைக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. இந்தப் பயிற்சிகளைச் செய்வதற்கு முன், தூய்மையடை. தூய்மையாயிருப்பது என்பது தந்த்ராவிற்கு ஒரு ஒழுக்கக் கோட்பாடல்ல, தூய்மை முக்கிய மானது – ஏனெனில் நீ மூன்றாவது கண்ணில் குவிந்திருக்கையில் உன் மனம் தூய்மையற்று இருந்தால், உனது கற்பனை ஆபத்தாக முடியக்கூடும்: உனக்கு ஆபத்தாக, அடுத்தவர்களுக்கு ஆபத்தாக. நீ யாரையாவது கொலை செய்ய எண்ணிக் கொண்டிருந்தால், இந்த யோசனை மனத்தில் இருந்தால், வெறும் கற்பனையே அந்த மனிதனைக் கொன்றுவிடும். அதனால்தான் முதலில் தூய்மையாக இருக்க வேண்டும் என்பது மிகவும் வலியுறுத்தப் படுகிறது.

பித்தகோரஸ் உண்ணா நோன்பு இருக்க வேண்டும், குறிப்பிட்ட மூச்சுப் பயிற்சியை – இந்த மூச்சுப் பயிற்சியை – மேற்கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டது, ஏனெனில் இங்கு ஒருவன் மிகவும் ஆபத்தான வழியில் பயணம் செய்கிறான். ஏனெனில் எங்கெல்லாம் சக்தி இருக்கிறதோ அங்கெல்லாம் ஆபத்தும் இருக்கிறது, மேலும் மனம் தூய்மையற்று இருந்தால், எப்பொழுதெல்லாம் உனக்கு சக்தி கிடைக்கிறதோ அப் பொழுதே, உடனே உனது தூய்மையற்ற எண்ணங்கள் அதைக் கைப்பற்றிக் கொள்ளும்.

நீ பலமுறை கொல்வதாக கற்பனை செய்துள்ளாய். ஆனால் அதிர்ஷ்டவசமாக அந்தக் கற்பனை வேலை செய்ய முடிய வில்லை. அப்படி அது வேலை செய்தால், அது உடனே நடைமுறையானால், அப்போது அது ஆபத்தாகிவிடும் – மற்றவர்களுக்கு மட்டுமல்ல, உனக்கும் சேர்த்து. ஏனெனில் நீ பலமுறை தற்கொலை செய்து கொள்ள எண்ணியிருக்கிறாய். மனம் மூன்றாவது கண்ணில் குவிந்திருந்தால், தற்கொலையைப் பற்றிய வெறும் எண்ணம் தற்கொலையாக மாறிவிடும். உனக்கு மாற்றுவதற்கு ஏதும் நேரமிருக்காது, உடனே அது நடந்துவிடும்.

யாராவது ஒருவர் வசியத்திற்கு உள்ளாவதை நீ பார்த்திருக்கக் கூடும். ஒருவர் வசியப்பட்டு விட்டால், வசியப் படுத்தியவர் என்ன வேண்டுமானாலும் சொல்லலாம், அதை உடனே வசியப்பட்டவர் கடைபிடிப்பார். எவ்வளவு மடத்தன மான கட்டளையாயிருந்தாலும், எவ்வளவு அறிவுக்குப் புறம் பானதாய் இருந்தாலும் அல்லது சாத்தியமற்றதாக இருந்தாலும், வசியப்பட்டவர் அதைக் கடைபிடிப்பார். என்ன நடக்கிறது? எல்லா வசியத்திற்கும் அடிப்படையாய் இந்த ஐந்தாவது யுக்தி உள்ளது. எந்த ஒருவர் வசியம் செய்யப்படும் போதும், ஒரு குறிப்பிட்ட புள்ளியின்மேல், ஏதோ ஒரு வெளிச்சப்புள்ளியின் மீது, சுவற்றிலுள்ள ஏதோ ஒரு புள்ளியின் மேல் அல்லது இதுபோல வேறு ஏதாவது அல்லது வசியம் செய்பவரின் கண்களின் மேல், அவர்களின் கண்களைக் குவிக்கும்படி சொல்லப்படுகிறது.

உனது கண்களை ஒரு குறிப்பிட்ட புள்ளியின் மேல் நீ குவித்தால், மூன்று நிமிடங்களுக்குள் உனது உள்கவனம் மூன்றாவது கண்ணை நோக்கிப் பாய ஆரம்பித்துவிடும். உனது உள்கவனம் மூன்றாவது கண்ணை நோக்கிப் பாய ஆரம்பிக்கும் அந்தக் கணத்தில், உனது முகம் மாற ஆரம்பிக்கும். வசியம் செய்பவருக்கு உன் முகம் மாற ஆரம்பிப்பது தெரியும். திடீரென்று உன் முகத்தில் உயிர்ச்சக்தி போய்விடும். அது இறந்ததைப்போல, ஆழமான உறக்கத்திலிருப்பதைப் போல மாறும். உனது முகம் துடிப்பை, உயிர்ச்சக்தியை இழப்பதை, உடனே அந்த வசியம் செய்பவர் அறிந்து கொள்வார். இதன் அர்த்தம் இப்போது உனது கவனம் முழுவதும் மூன்றாவது கண் மையத்தால் உறிஞ்சப்படுகிறது. உனது முகம் இறந்ததாக மாறி விட்டது; முழு சக்தியும் மூன்றாவது கண் மையத்தை நோக்கி ஓடிக்கொண்டிருக்கிறது.

இப்போது வசியம் செய்பவர் உடனே அறிவார், அவர் சொல்வது எதுவாயிருந்தாலும் அது நடக்கும். அவர் சொல்வார், ''இப்போது நீ ஆழமான தூக்கத்திற்குப் போகிறாய்''– உடனே நீ

அங்குப் போய்விடுகிறாய். அவர் சொல்கிறார், ''இப்போது நீ உணர்வற்ற நிலைக்குப் போகிறாய்''– நீ உடனே உணர்வற்றுப் போய்விடுவாய். அவர், ''இப்போது நீ நெப்போலியனாகி விட்டாய்'' என்று சொன்னால், நீ அப்படியே மாறிவிடுவாய். நீ நெப்போலியனைப் போலச் செயல்பட ஆரம்பிப்பாய், நீ நெப்போலியனைப் போலப் பேச ஆரம்பிப்பாய். உனது சைகைகள் மாறிப் போகும். உனது உணர்வற்ற மனம் கட்டளை யைப் பெற்றுக் கொண்டு அதை நிஜத்தில் உருவாக்கும். நீ ஒரு வியாதியால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தால், இப்போது அந்த வியாதி மறைந்துவிட்டதாகக் கட்டளை கொடுக்க முடியும், அதனால் அது மறைந்து போகும். அல்லது எந்தப் புது வியாதியையாவது உருவாக்கவும் முடியும்.

ஒரு சாதாரண கல்லை வீதியிலிருந்து எடுத்து உன் கையில் வைத்துவிட்டு, அந்த வசியப்படுத்தியவர், ''உன் கையில் உள்ளது நெருப்பு'' என்று சொல்லலாம், உடனே நீ தகிக்கும் சூட்டை உணர்வாய்; உனது உள்ளங்கை எரிந்து போகும் – மனத்தில் மட்டுமல்ல இது, மாறாக நிஜத்திலும் எரிந்து போகும். உண்மையாகவே உனது தோல் எரிந்து போகும். உனக்கு எரியும் உணர்ச்சி ஏற்படும். என்ன நடக்கிறது? நெருப்பு எதுவுமில்லை, வெறும் சாதாரண கல்லே அங்குள்ளது, குளிர்ந்தது அது. எப்படி? எப்படி இந்த எரிதல் நடக்கிறது? நீ உனது மூன்றாவது கண் மையத்தில் குவிந்திருக்கிறாய், வசியப்படுத்தியவர் உனது கற்பனைக்குத் தனது யோசனைகளைக் கொடுக்கிறார், அவை நிஜமாக்கப்படுகின்றன. வசியப்படுத்தியவர், ''இப்போது நீ இறந்துவிட்டாய்'' என்று சொன்னால், நீ உடனடியாக இறந்து விடுவாய். உனது இதயம் நின்றுவிடும். அது நின்றுதான் ஆக வேண்டும்.

மூன்றாவது கண்ணினால்தான் இது நடக்கிறது. மூன்றாவது கண்ணில், கற்பனையும் நிஜமும் இரண்டு வெவ்வேறு விஷயங்கள் அல்ல. கற்பனையே நிஜம். கற்பனை செய், அப்போது அது அப்படித்தான். கனவிற்கும் உண்மைக்கும் எந்த

இடைவெளியும் அங்கு இல்லை. கனவுகாண், அது உண்மையாக மாறும். அதனால்தான் ஆதிசங்கரர் இந்த முழு உலகமும் தெய்விகத்தினுடைய கனவு அல்லாமல் வேறொன்றுமில்லை என்று சொன்னார்..... தெய்விகத்தின் கனவு! இது ஏனெனில் தெய்விகம் மூன்றாவது கண்ணிலேயே மையம் கொண்டுள்ளது – எப்பொழுதும், நிலையாக – ஆகவே தெய்விகம் காணும் கனவு எதுவாயிருந்தாலும் அது உண்மையாக மாறிவிடுகிறது. நீயும் மூன்றாவது கண்ணில் மையம் கொண்டால், உனது கனவு எதுவாயிருந்தாலும் அது உண்மை ஆகிவிடும்.

சாரிபுட்டா கௌதமபுத்தரிடம் வந்தார். அவர் ஆழமாகத் தியானித்தார், பின் பல விஷயங்கள், பல தோற்றங்கள் வர ஆரம்பித்தன. இது தியானத்தில் ஆழமாகச் செல்லும் எவருக்கும் நிகழ்வதே. அவர் சொர்க்கங்களைப் பார்க்க ஆரம்பித்தார், அவர் நரகங்களைப் பார்க்க ஆரம்பித்தார், அவர் தேவதைகளை, கடவுள்களை, தேவ கணங்களைப் பார்க்க ஆரம்பித்தார். அவை நிஜமானவை, அவர் புத்தரிடம் ஓடிவந்து இப்படி இப்படியெல்லாம் தோற்றங்கள் எனக்கு வந்தது என்று விவரிக்குமளவு நிஜமாகத் தோன்றியவை. ஆனால் புத்தர் சொன்னார், ''அவை ஒன்றுமில்லை – வெறும் கனவுதான், வெறும் கனவுகள்!''

ஆனால் சாரிபுட்டா சொன்னார், ''அவை மிக உண்மையாக இருந்தன. நான் எப்படி அவைகளை கனவுகள் என்று சொல்வது? எனது தோற்றத்தில் நான் ஒரு பூவைப் பார்க்கும்போது அது உலகத்திலுள்ள எந்தப் பூவையும் விட அதிக உண்மையானதாகத் தெரிகிறது. மணம் அங்குள்ளது, நான் அதைத் தொட முடியும்.'' மேலும் அவர் புத்தரிடம் சொன்னார், ''நான் உங்களைப் பார்க்கும்போது, நான் உங்களை அவ்வளவு உண்மையாகப் பார்ப்பதில்லை. அந்தப் பூ நீங்கள் இப்போது எனக்கு முன்னால் இருப்பதை விட அதிக உண்மையாக இருக்கிறது. ஆகவே நான் எப்படி எது உண்மை, எது கனவு என்று வித்தியாசப்படுத்திக் கொள்ள முடியும்?''

புத்தர் சொன்னார், ''நீ இப்போது மூன்றாவது கண்ணில் மையம் கொண்டிருப்பதால், கனவும் நிஜமும் ஒன்றே. நீ காணும் கனவுகளெல்லாம் அது எதுவாயிருந்தாலும் நிஜமே, அதோடு இதன் தலைகீழும் அப்படியே.''

மூன்றாவது கண்ணில் மையம் கொண்டிருப்பவருக்குக் கனவுகள் எல்லாம் நிஜமாகிவிடும். அதோடு நிஜமானவைகள் அனைத்தும் வெறும் கனவு போல ஆகிவிடும். ஏனெனில் உன் கனவுகள் நிஜமாக மாறுகின்றபொழுது நீ அறிந்து கொள்ளுவாய். அதாவது கனவிற்கும் நிஜத்திற்கும் அடிப்படையில் எந்த வித்தியாசமும் இல்லை. ஆகவே ஆதிசங்கரர் இந்த முழு உலகமும் வெறும் மாயை, தெய்விகத்தின் ஒரு கனவு என்று சொல்லுகிறபோது, அது ஒரு கருத்தாய்வுக் கணிப்பல்ல, அது ஒரு தத்துவக் கூற்று அல்ல. மாறாக, அது, மூன்றாவது கண்ணில் குவிந்துள்ள ஒருவருடைய உள் அனுபவமாகும்.

நீ மூன்றாவது கண்ணில் குவிந்திருக்கும் பொழுது, உனது தலையின் உச்சியிலிருந்து பிராணா என்கிற சத்து கொட்டுவதாகக் கற்பனை செய்து கொள், நீ ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந் திருக்கிறாய். அப்போது பூக்கள் கொட்ட ஆரம்பிக்கின்றன என்பது போல, அல்லது நீ வானத்தின் அடியில் உட்கார்ந் திருக்கிறாய். அப்போது திடீரென்று ஒரு மேகம் மழை கொட்ட ஆரம்பிக்கிறது, அல்லது நீ அதிகாலையில் உட்கார்ந்திருக்கிறாய். அப்போது சூரியன் எழுகிறது. அதன் கதிர்கள் உன்மேல் கொட்ட ஆரம்பிக்கின்றன. கற்பனை செய், உடனே அங்குக் கொட்டும் – உன் தலையின் உச்சியிலிருந்து ஒளி பொழிதலாய் கீழே விழத் துவங்கும். இந்தக் கொட்டுதலில் நீ மீண்டும் உருவாகிறாய், இது உனக்குப் புதிய பிறப்பைக் கொடுக்கிறது. நீ மறு பிறப்படைகிறாய்.

**6. உனது தினசரிச் செயல்களின்போது இடைவெளியின் மீது கவனம் கொள்.**

ஆறாவது மூச்சு யுக்தி: ''உலகச் செயல்களில் இருக்கும் போது, இரண்டு மூச்சுக்களின் இடையே கவனத்தை வை,

அப்படிப் பயிற்சி செய்கையில், சில தினங்களில், புதிதாகப் பிறப்பாயாக.''

''உலகச் செயல்களில் இருக்கும்போது இரண்டு மூச்சுக்களின் இடையே கவனத்தை வை.....'' மூச்சுகளை மறந்துவிடு – அவைகளுக்கு இடையே கவனத்தோடு இரு. ஒரு மூச்சு உள்ளே வந்துள்ளது; அது திரும்புவதற்கு முன்பு, அது வெளியிடப் படுவதற்கு முன்பு, அங்கு ஒரு இடைவெளி உள்ளது. ஒரு மூச்சு வெளியே போய்விட்டது; மறுபடியும் ஒரு மூச்சு எடுக்குமுன், அங்கு ஒரு இடைவெளி. ''உலகச் செயல்களில் இருக்கும்போது இரண்டு மூச்சுக்களின் இடையே கவனத்தை வை. அப்படிப் பயிற்சி செய்கையில், சில தினங்களில், புதிதாகப் பிறப்பாயாக.'' ஆனால் இது இடைவிடாமல் செய்யப்பட வேண்டும். இந்த ஆறாவது யுக்தி இடைவிடாமல் தொடர்ந்து செய்யப்பட வேண்டும். அதனால்தான் ''உலகச் செயல்களில் இருக்கும் போது.....'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நீ என்ன செய்து கொண்டிருந்தாலும், உன் கவனத்தை இரண்டு மூச்சுக்களின் இடையே உள்ள இடைவெளியில் வைத்திருக்க வேண்டும். அதே சமயம் இது செயல்புரிகையில் பயிற்சி செய்யப்பட வேண்டும்.

நாம் இதே போன்ற ஒரு யுக்தியை ஏற்கனவே ஆலோசித்துள்ளோம். இப்போது இந்த ஒரு வித்தியாசம் மட்டுமே இங்குள்ளது. அதாவது இது உலகச் செயல்களில் இருக்கும்போது பயிற்சி செய்யப்பட வேண்டும். தனியாக இதைப் பயிற்சி செய்யாதே. நீ வேறு ஏதாவதொன்றைச் செய்துகொண்டிருக்கும் போது தான் இந்தப் பயிற்சி செய்யப்பட வேண்டும். நீ சாப்பிட்டுக் கொண்டிருக்கிறாய் – சாப்பிட்டுக் கொண்டே அந்த இடைவெளியைக் கவனித்துக் கொண்டிரு. நீ நடந்து கொண் டிருக்கிறாய் – நடந்து கொண்டே அந்த இடைவெளியைக் கவனித்துக் கொண்டிரு. நீ தூங்கப் போகிறாய் – கீழே படு, தூக்கம் வரட்டும், ஆனால் நீ தொடர்ந்து அந்த இடைவெளியைக் கவனித்துக் கொண்டிரு. ஏன் செயல்படும்போது? ஏனெனில்

செயல் மனதைத் தவற வைக்கும், செயல் திரும்பத் திரும்ப உன் கவனத்தைக் கேட்கும். தவற விடாதே, நிலையாக இடை வெளியைக் கவனித்துக் கொண்டே இரு. செயலை நிறுத்தாதே, செயல் தொடர்ந்து நடக்கட்டும். நீ இரண்டு தளங்களில் இருப்பாய் - செய்வது, இருப்பது.

நமக்கு இருப்பு இரண்டு தளங்களில் உள்ளது : செயல் புரியும் உலகம், இருக்கும் உலகம்; சுற்றுவட்டமும் மையமும். மேல் புறத்தில், சுற்று வட்டத்தில் தொடர்ந்து வேலை செய்து கொண்டிரு; அதை நிறுத்தாதே. ஆனால் மையத்திலும் தொடர்ந்து கவனம் வைப்பதைச் செய். என்ன நடக்கும்? உனது செயல்கள் நடிக்கும் செயல்களாக மாறும், நீ ஏதோ ஒரு வேடத்தில் நடிப்பது போல.

நீ ஒரு வேடத்தில் நடிக்கிறாய் - உதாரணமாக, ஒரு நாடகத்தில். நீ இராமனாக மாறுகிறாய் அல்லது நீ கிறிஸ்துவாக மாறுகிறாய். நீ தொடர்ந்து கிறிஸ்துவாகவோ, இராமனாகவோ நடித்துக் கொண்டிருக்கிறாய், ஆனால் அதே சமயம் நீ நீயாகவும் தொடர்ந்து இருக்கிறாய். மையத்தில், உனக்குத் தெரியும் நீ யாரென்று; மேல் புறத்தில் நீ தொடர்ந்து இராமனாக, கிறிஸ்துவாக அல்லது யாரோ ஒருவராக நடித்துக் கொண்டிருக் கிறாய். உனக்குத் தெரியும் நீ இராமனில்லை என்று - நீ நடிக்கிறாய். நீ யாரென்று உனக்குத் தெரியும். உனது கவனம் உன்னிடத்தில் மையம் கொண்டுள்ளது; உனது செயல் சுற்று வட்டத்தில் தொடர்கிறது.

இந்த முறை கடைபிடிக்கப்பட்டால், உன் முழு வாழ்க்கை யும் நீண்ட நாடகமாக மாறிவிடும். நீ கதாபாத்திரங்களை நடிக்கும் நடிகனாகி விடுவாய். ஆனால் அதே சமயம் எப்பொழுதும் இடைவெளியில் மையம் கொண்டிருப்பாய். நீ இடைவெளியை மறந்துவிட்டால் அப்போது நீ கதாபாத்திரங் களை நடிப்பதில்லை, நீ அந்தப் பாத்திரமாகவே ஆகிவிடுகிறாய். அப்போது அது நாடகமில்லை; நீ அதை வாழ்க்கையென்று தவறாக எடுத்துக் கொண்டு விட்டாய். இதுதான் நாம் செய்

திருப்பது. ஒவ்வொருவரும் நான் வாழ்க்கையை வாழ்கிறேன் என்று நினைக்கிறார்கள். ஆனால் அது வாழ்க்கையல்ல, அது வெறும் கதாபாத்திரம் – உனக்குச் சமூகத்தால், சூழ்நிலையால், பண்பாட்டால், மரபால், நாட்டால், காலத்தால் கொடுக்கப் பட்டுள்ள ஒரு கதாபாத்திரம். உனக்கு ஒரு கதாபாத்திரம் தரப் பட்டுள்ளது, அதை நீ நடிக்கிறாய்; நீ அதனுடன் உன்னை அடையாளப்படுத்திக் கொண்டுவிட்டாய். அந்த அடையாளத்தை உடைப்பதற்காகவே இந்த யுக்தி.

கிருஷ்ணருக்குப் பல பெயர்கள் உண்டு. கிருஷ்ணா ஒரு மிகச் சிறந்த மாபெரும் நடிகன். அவர் எப்பொழுதும் தனக்குள் மையம் கொண்டவராய் நடித்தார் – பல கதாபாத்திரங்களை, பல விளையாட்டுகளை நடித்தார். ஆனால் கொஞ்சம்கூட இறுக்க மில்லாமல், சீரியஸாக இல்லாமல். இறுக்கம், கடினத்தன்மை அடையாளம் கண்டுகொள்வதிலிருந்து வருகிறது. நீ உண்மை யான இராமனாகவே நாடகத்தில் மாறிவிட்டால், அப்போது அங்குக் கண்டிப்பாகப் பிரச்சனைகள் வரும். அந்தப் பிரச்சனை கள் உனது இறுக்கத்திலிருந்து வரும். சீதா திருடப்பட்டவுடன் உனக்கு ஹார்ட் அட்டாக், இதய அடைப்பு ஏற்படலாம். அதனால் முழு நாடகத்தையும் நிறுத்த வேண்டி வரலாம். நீ உண்மையான இராமனாக மாறினால் கண்டிப்பாக இதய அடைப்பு வரும்..... இதயம் நின்றே கூடப் போய்விடலாம்.

ஆனால் நீ ஒரு வெறும் நடிகன். சீதா திருடப் பட்டுவிட்டாள். ஆனால் எதுவும் உண்மையில் திருடப்பட வில்லை. நீ உனது வீட்டிற்குத் திரும்பிச் சென்று நிம்மதியாகத் தூங்குவாய். கனவில் கூட நீ சீதா திருடப்பட்டு விட்டாள் என்று நினைக்க மாட்டாய். உண்மையில் சீதா திருடப்பட்டபோது, இராமன் அழுதுகொண்டு, அரற்றிக்கொண்டு மரங்களிடம் கேட்கிறான், ''என்னுடைய சீதா எங்குப் போனாள்? யார் அவளைத் தூக்கிப் போனது?'' ஆனால் இந்த இடத்தைத்தான் புரிந்துகொள்ள வேண்டும். உண்மையிலேயே இராமன் அழுது கொண்டு, அரற்றிக்கொண்டு, மரங்களிடம் கேட்டான் என்றால்,

அவன் தன்னை அடையாளப்படுத்திக் கொண்டு விட்டான். அவன் இனிமேல் இராமனல்ல; அவன் இனிமேல் தெய்விகப் புருஷன் அல்ல.

நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது இதுதான், அதாவது இராமனுக்கு அவனது நிஜ வாழ்க்கையும் ஒரு கதாபாத்திரமே. நீ மற்ற நடிகர்கள் இராமனாக நடிப்பதைப் பார்த்திருப்பாய். ஆனால் இராமன் அவனே ஒரு கதாபாத்திரத்தையே நடித்தான் - ஆனால் பெரிய மேடையில்.

இந்தியாவில் இதைப்பற்றி மிக அழகான கதை ஒன்று உள்ளது. அந்தக் கதை மிகவும் தனிச்சிறப்பு வாய்ந்ததென்று நான் நினைக்கிறேன்; வேறு எங்கும், உலகத்தின் வேறெந்தப் பகுதியிலும் அப்படிப்பட்ட ஒன்று இல்லை. சொல்லப்படும் கதை என்னவென்றால், வால்மீகி இராமாயணத்தை இராமன் பிறப்பதற்கு முன்பே எழுதிவிட்டார். பின் இராமன் அதைப் பின்பற்றினார். ஆகவே உண்மையில், முதல் தடவை இராமன் செய்ததே வெறும் நடிப்புதான். இராமனுடைய கதை இராமன் பிறப்பதற்கு முன்பே எழுதப்பட்டு விட்டது. பிறகு இராமன் வந்தான். ஆகவே அவன் என்ன செய்ய முடியும்? வால்மீகி போன்ற மனிதன் கதை எழுதும் போது, இராமன் பின்பற்ற வேண்டியதுதான். ஆக எல்லாமே ஏதோ ஒரு விதத்தில் முதலிலேயே நிர்ணயிக்கப்பட்டதுதான். சீதா திருடப்பட வேண்டும், யுத்தம் செய்துதான் ஆக வேண்டும்.

இதை நீ புரிந்துகொள்ள முடிந்தால், இப்போது நீ தலைவிதி என்ற கருத்தை, பாக்கியம், விதி என்பதைப் புரிந்து கொள்ள முடியும். அதற்கு மிக ஆழமான அர்த்தம் உள்ளது. அந்த அர்த்தம் எதுவென்றால், எல்லாமே நிர்ணயிக்கப்பட்டது தான் என்று நீ எடுத்துக் கொள்ளும்போது, உனது வாழ்க்கை ஒரு நாடகமாக மாறி விடுகிறது. நீ இராமனது பாத்திரத்தை ஒரு நாடகத்தில் நடிப்பதாக எடுத்துக் கொண்டால், நீ அதை மாற்ற முடியாது, எல்லாமே

நிச்சயிக்கப்பட்டதுதான், உனது வசனம் கூட. நீ சீதாவிடம் ஏதாவது கூறினால் அதுவும் ஏற்கனவே நிச்சயிக்கப்பட்டதை நீ திருப்பிச் சொல்வதே. வாழ்க்கை நிச்சயிக்கப்பட்டது என்று எடுத்துக் கொண்டால் அதில் நீ எதையும் மாற்ற முடியாது.

உதாரணமாக, நீ ஒரு குறிப்பிட்ட நாளில் இறக்கப் போகிறாய் - அது நிச்சயமான ஒன்று. நீ இறக்கும் பொழுது நீ அழுவாய். ஆனால் அது நிர்ணயிக்கப்பட்ட ஒன்று. அப்போது இந்த மனிதர்கள் உன்னைச் சுற்றி இருப்பார்கள் - அதுவும் நிர்ணயம் ஆனதே. எல்லாம் நிர்ணயிக்கப்பட்டதாகும் போது, எல்லாமே ஒரு நாடகமாக ஆகிவிடுகிறது. எல்லாமே நிர்ணயிக்கப்பட்டது என்கிறபோது, அதன் அர்த்தம் நீ அதை நடிக்க வேண்டியது மட்டுமே என்றாகிவிடுகிறது. நீ அதை வாழச் சொல்லிக் கேட்கப்படவில்லை, நீ அதை நடிக்கச் சொல்லி மட்டுமே கேட்டுக் கொள்ளப்படுகிறாய்.

இந்த யுக்தி, இந்த ஆறாவது யுக்தி, உன்னை ஒரு உளரீதியான நாடகப் பாத்திரமாக, ஒரு நடிகனாக மட்டும் மாற்றுவதற்குத்தான். நீ இரண்டு மூச்சுகளுக்கு இடையிலுள்ள இடைவெளியின் மேல் கவனம் கொண்டுள்ளாய். வாழ்க்கை மேல்புறத்தில் ஓடிக்கொண்டே இருக்கிறது. உனது கவனம் மையத்தில் இருந்தால், அப்போது மேல்புறத்தில் உனது கவனம் உண்மையாக இருக்காது - அது வெறும் குறைந்த கவனமாகவே இருக்கும்; அது கவனத்திற்கு அருகில் ஏதோ ஒரு இடத்தில் நடக்கும் ஒன்றாகவே இருக்கும். நீ அதை உணர முடியும், நீ அதை அறிய முடியும், ஆனால் அது முக்கியமானதல்ல. அது எப்படியென்றால், அது உனக்கு நடப்பது போல இருக்காது. நான் இதைத் திரும்பவும் சொல்கிறேன்: இந்த ஆறாவது யுக்தியைக் கடைபிடித்தால், இந்த முழு வாழ்க்கையும் அது ஏதோ உனக்கு நடக்காதது போல ஆகிவிடும், அது ஏதோ வேறொருவருக்கு நடப்பது போல ஆகிவிடும்.

## 7. கனவில் விழிப்புணர்வு அடைய ஒரு யுக்தி.

ஏழாவது மூச்சு யுக்தி: ''எவ்விதத்திலும் பார்க்க முடியாத மூச்சு நெற்றியின் மையத்திலிருந்து, அது இதயத்தை அடைகையில், உறங்கும் கணத்தில், கனவுகளின் மேலும் அதோடு மரணத்தின் மேலும் கூட அவைகளைச் செலுத்தும் திறனடைவாயாக.''

மேலும் மேலும் அதிக ஆழமான தளங்களில் நீ நுழைகிறாய். எவ்விதத்திலும் பார்க்க முடியாத மூச்சு நெற்றியின் மையத்திலிருந்து..... ''நீ மூன்றாவது கண்ணை அறிந்திருந்தால், அப்போது நீ எவ்விதத்திலும் பார்க்க முடியாத மூச்சை அறிவாய், நெற்றியின் மையத்திலிருக்கும் அந்தப் பார்க்கமுடியாத பிராணாவை அறிவாய், அப்போது கூடவே நீ கொட்டும் அந்த சக்தியை அறிவாய், கொட்டும் அந்த ஒளியை அறிவாய். அது இதயத்தை அடைகையில்.....'' அப்படிக் கொட்டுவது இதயத்தை அடையும்போது..... ''உறங்கும் கணத்தில், கனவுகளின் மேலும் அதோடு மரணத்தின் மேலும் கூட அவைகளைச் செலுத்தும் திறனடைவாயா .''

இந்த யுக்தியை மூன்று பாகங்களாக எடுத்துக் கொள். ஒன்று, உன்னால் மூச்சில் பிராணாவை எவ்விதத்திலும் பார்க்க முடியாத மூச்சின் பாகத்தை, பொருளல்லாத மூச்சின் பாகத்தை, உணர முடிய வேண்டும். நீ இரண்டு புருவங்களுக்கு மத்தியில் கவனத்தோடு இருந்தால் இது வந்துவிடும், அப்போது இது சுலபமாக வந்துவிடும். நீ இடைவெளியின் மீது கவனத்தோடு இருந்தால், அப்போதும் இது வந்துவிடும், ஆனால் அவ்வளவு சுலபமாக இருக்காது. நீ மூச்சு உள்ளே வந்து தொட்டுச் செல்லும் தொப்புளில் உள்ள மையத்தைப் பற்றி விழிப்புணர்வு அடைந்தாலும், இது வந்துவிடும். ஆனால் அந்த அளவு சுலபமாக இருக்காது. மூச்சின் பார்க்கமுடியாத பாகத்தை அறிந்துகொள்ள மிகச் சுலபமான வழி மூன்றாவது கண்ணில் மையம் கொள்வதே. எப்பொழுதெல்லாம் நீ மையம் கொண்டிருக்

கிறாயோ, அப்போதெல்லாம் அது வரும். நீ பிராணா உள்ளே பாய்வதை உணர முடியும்.

உன்னால் பிராணா உனக்குள் பாய்வதை உணர முடிந்தால், நீ எப்போது இறக்கப் போகிறாய் என்பதை உன்னால் அறிய முடியும். உன்னால் பார்க்கமுடியாத மூச்சின் பாகத்தை உணர முடியுமென்றால், நீ இறக்கும் தினத்திற்கு ஆறு மாதங்களுக்கு முன்பு நீ அறிய ஆரம்பிப்பாய். ஏன் பல தவசிகள் தாங்கள் இறக்கப்போகும் தினத்தை அறிவிக்கிறார்கள்? இது சுலபம். ஏனெனில் உன்னால் மூச்சு கொண்டு வருவதை, உனக்குள் பிராணா பாய்வதைப் பார்க்க முடிந்தால், அந்த நடைமுறை எதிர்மறையாய் திரும்பும் கணத்திலேயே நீ அதை உணர முடியும். நீ இறப்பதற்கு முன்பு, நீ இறப்பதற்கு ஆறு மாதத்திற்கு முன்பு, நடைமுறை எதிராகத் திரும்புகிறது; பிராணா உன்னிலிருந்து வெளியே பாய ஆரம்பிக்கிறது. அப்போது மூச்சு அதை உள்ளே எடுத்துச் செல்வதில்லை. மாறாக, எதிர்மறையாக, மூச்சு அதை வெளியே எடுத்துச் செல்கிறது – அதே மூச்சு.

நீ இதை உணர முடியாது. ஏனெனில் நீ பார்க்க முடியாத பாகத்தை அறிய மாட்டாய் – நீ கண்ணுக்குத் தெரிவதை மட்டுமே அறிவாய், நீ வெறும் வாகனத்தையே அறிவாய். வாகனத்தில் எந்த மாறுதலும் இருக்காது. இப்போது மூச்சு பிராணாவை உள்ளே கொண்டு செல்கிறது, அங்கே அதை விட்டுவிடுகிறது. பிறகு வாகனம் காலியாகத் திரும்பிப் போகிறது. பின் திரும்ப வும் அது பிராணாவால் நிறைகிறது, அது உள்ளே வருகிறது. ஆகவே உள்ளே வரும் மூச்சும் வெளியே போகும் மூச்சும் ஒன்றல்ல, இதை நினைவில் கொள். உள்ளே வரும் மூச்சும் வெளியே போகும் மூச்சும் வாகனங்கள் என்ற அளவில் ஒன்றே. ஆனால் உள்ளே வரும் மூச்சு பிராணாவால் நிறைந்துள்ளது. வெளியே போகும் மூச்சு காலியாகவுள்ளது. நீ பிராணாவை எடுத்துக் கொண்டு விட்டாய், மூச்சு காலியாகிவிட்டது.

இதற்குத் தலைகீழானது நடக்கிறது, நீ மரணத்தை நெருங்கும்போது, உள்ளே வரும் மூச்சு பிராணா இல்லாமல்,

காலியாக வருகிறது. ஏனெனில் உனது உடம்பு பேரண்ட இயக்கத்திலிருந்து வரும் பிராணாவை உறிஞ்ச முடியாது. நீ இறக்கப் போகிறாய்; பிராணாவிற்கு அங்குத் தேவையில்லை. ஆகவே முழு நடைமுறையும் தலைகீழாகிறது. மூச்சு வெளியே போகும்போது, அது பிராணாவை வெளியே எடுத்துச் செல்கிறது. மூச்சின் பார்க்க முடியாததைப் பார்க்கக்கூடிய ஒருவன் அவனுடைய இறக்கும் தினத்தை உடனே அறிந்து கொள்வான். ஆறு மாதங்களுக்கு முன், நடைமுறை தலை கீழாகும்.

இந்தச் சூத்திரம் மிக மிக முக்கியமானது: ''எவ்விதத்திலும் பார்க்க முடியாத மூச்சு நெற்றியின் மையத்திலிருந்து, அது இதயத்தை அடைகையில், உறங்கும் கணத்தில், கனவுகளின் மேலும் மரணத்தின் மேலும் கூட அவைகளைச் செலுத்தும் திறனடைவாயாக.'' நீ உறக்கத்தில் விழும்போது இந்த யுக்தி பயிற்சி செய்யப்பட வேண்டும் – அப்போது மட்டும், வேறு எந்த நேரத்திலும் அல்ல. நீ உறக்கத்தில் விழும் சமயம், அப்போது மட்டும்; அதுவே இந்த யுக்தியைக் கடைபிடிக்க சரியான தருணம். நீ தூங்கி விழுகிறாய். மெது மெதுவாக, மெது மெதுவாக, உறக்கம் உன்னை ஆட்கொள்கிறது. ஒருசில கணங் களில், உன்னுடைய உணர்வு இல்லாமல் போய்விடும், உனக்கு விழிப்புணர்வு இருக்காது. அந்தக் கணம் வருவதற்கு முன், விழிப்புணர்வு அடை – மூச்சையும் அதன் பார்க்க முடியாத பாகமான பிராணாவைப் பற்றியும் விழிப்புணர்வு கொள், அதோடு அது இதயத்திற்கு வருவதை உணர்.

அது இதயத்திற்கு வருவதைத் தொடர்ந்து உணர்ந்து கொண்டேயிரு. பிராணா உனது இதயத்திலிருந்து உடம்புக்குள் நுழையும். பிராணா இதயத்திற்குள் வருவதைத் தொடர்ந்து உணர்ந்து கொண்டிரு. அதோடு நீ தொடர்ந்து இதை உணர்ந்து கொண்டிருக்கும் பொழுதே உறக்கம் வரட்டும். நீ தொடர்ந்து உணர்ந்து கொண்டேயிரு, அப்படியே உறக்கம் வந்து உன்னை மூழ்கடிக்கட்டும்.

இது நிகழ்ந்தால், – அதாவது பார்க்க முடியாத மூச்சு இதயத்திற்குள் வருவதை நீ உணர்ந்து கொண்டே இருக்கையில் உறக்கம் உன்னை ஆட்கொண்டு விட்டால் – நீ கனவுகளில் விழிப்புணர்வோடு இருப்பாய். நீ கனவு கண்டுகொண்டிருக் கிறாய் என்பது உனக்குத் தெரியும். சாதாரணமாக நாம் கனவு கண்டுகொண்டு இருக்கிறோம் என்பது நமக்குத் தெரியாது. நீ கனவு காண்கையில் அதுதான் உண்மை என்று நீ நினைக்கிறாய். இதுவும் மூன்றாவது கண்ணால்தான் நடக்கிறது. நீ யாராவது உறக்கத்திலிருக்கையில் பார்த்திருக்கிறாயா? அவனது கண்கள் மேல்நோக்கி நகர்ந்து மூன்றாவது கண்ணில் குவிந்திருக்கும். நீ பார்த்ததில்லை என்றால், இப்போது பார்.

உன் குழந்தை தூங்கிக் கொண்டிருக்கிறது..... அதன் கண்களைத் திறந்து அதன் கண்கள் எங்கே உள்ளன என்று பார். அதன் கருவிழி மேலே போயிருக்கும். அதோடு அவை மூன்றாவது கண்ணில் குவிந்திருக்கும். நான் குழந்தைகளைப் பார் என்று சொல்கிறேன், வளர்ந்தவர்களைப் பார்க்காதே – அவர்கள் நம்பத் தகுந்தவர்கள் அல்ல. ஏனெனில் அவர்கள் உறக்கம் ஆழமானதல்ல. அவர்கள் தங்கள் உறக்கத்திலிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கலாம். குழந்தைகளைப் பார், அவர் களின் கண்கள் மேலேறி இருக்கும். அவர்கள் மூன்றாவது கண்ணில் குவிந்திருப்பர். இப்படி மூன்றாவது கண்ணில் குவிந் திருப்பதால் நீ உன்னுடைய கனவுகளை உண்மையென எடுத்துக் கொள்கிறாய். உன்னால் அவைகளைக் கனவுகள் என்று உணர முடியாது – அவை உண்மை. காலையில் எழுந்தவுடன் உனக்குத் தெரியும். அப்போது உனக்குத் தெரியும், ''நான் கனவு கண்டிருக் கிறேன்'' என்று. ஆனால் இது பின்னால், நடந்துமுடிந்த பின்பு உணர்வது. நீ கனவு கண்டுகொண்டு இருக்கும்போது நீ கனவு காண்பதை உன்னால் உணர முடியாது. அதை நீ உணர்ந்தால், அப்போது அங்கு இரண்டு தளங்கள் இருக்கும்: கனவு அங்கே இருக்கிறது. ஆனால் நீ விழித்துக் கொண்டிருக்கிறாய், நீ விழிப்புணர்வோடிருக்கிறாய். கனவில் விழிப்புணர்வடைந்த

ஒருவருக்கு, இந்தச் சூத்திரம் மிகவும் அருமையானது. இது சொல்கிறது, ''கனவுகளின் மீதும் மரணத்தின் மீதும் கூட அவைகளைச் செலுத்தும் திறனடைவாயாக.''

நீ கனவுகளைப் பற்றிய விழிப்புணர்வு அடைய முடிந்தால், உன்னால் இரண்டு காரியங்கள் செய்ய முடியும். ஒன்று – நீ கனவுகளை உருவாக்க முடியும். சாதாரணமாக நீ கனவுகளை உருவாக்க முடியாது. மனிதன் எவ்வளவு சக்தியற்றவனாய் இருக்கிறான்! உன்னால் கனவுகளைக் கூட உருவாக்க முடியாது. நீ ஒரு குறிப்பிட்ட விஷயத்தைக் கனவு காண விரும்பினால் உன்னால் அதைக் கனவு காண முடியாது; அது உன் கைகளில் இல்லை. மனிதன் இந்தத் தகுதி கூட இல்லாமல் இருக்கிறான்! கனவுகளைக் கூட உருவாக்க முடியாது. நீ கனவுகளின் கைகளில் இருப்பவன், அதை உருவாக்குபவனல்ல. ஒரு கனவு உனக்கு நிகழ்கிறது, நீ எதுவும் செய்ய முடியாது. நீ அதை நிறுத்தவும் முடியாது, நீ அதை உருவாக்கவும் முடியாது.

ஆனால் நீ உன் இதயம் பிராணாவால் நிறையும் நினைவுடன், ஒவ்வொரு மூச்சோடும் பிராணா தொடர்ந்து தொட்டுக் கொண்டிருக்கும் பொழுது நீ உறக்கத்தினுள் சென்றால், நீ உனது கனவுகளின் எஜமானன் ஆகிவிடுவாய் – இது மிகவும் அரிதான சிறப்பு. இதன்பின் நீ எந்தக் கனவு காண விரும்பினாலும் அந்தக் கனவை நீ காண முடியும். நீ உறக்கத்தினுள் விழுகையில், ''நான் இந்தக் கனவைக் கனவு காண விரும்புகிறேன்'' என்று குறித்துக் கொண்டால் போதும், அந்தக் கனவு உனக்கு வரும். நீ உறக்கத்தினுள் விழுகையில், ''நான் இந்தக் கனவைக் கனவுகாண விரும்பவில்லை'' என்று சொல், அப்போது அந்தக் கனவு உன் மனத்தினுள் நுழைய முடியாது.

ஆனால் உனது கனவுகாணுதலுக்கு நீ எஜமானன் ஆகிவிடுவதால் என்ன பயன்? அது பயனற்றதல்லவா? இல்லை, அது பயனற்றது அல்ல. ஒருமுறை நீ உன்னுடைய கனவுகளுக்கு எஜமானன் ஆகிவிட்டால் நீ ஒருபோதும் கனவு காண மாட்டாய்

– அது மடத்தனம். உனது கனவுகளுக்கு நீ எஜமானன் ஆகும் போது, கனவு காண்பது நின்று விடுகிறது; அதற்கு எந்தத் தேவையும் இல்லை. அப்படிக் கனவு காணுதல் நின்றுவிடும் போது, உனது தூக்கத்தின் முழுத் தன்மையும் மாறிவிடுகிறது. அப்போது அதன் தன்மை மரணத்தை ஒத்ததாக ஆகிவிடுகிறது.

மரணம் என்பது ஆழ்ந்த உறக்கம். உனது உறக்கம் மரணத்தைப் போல ஆழமாக மாற முடிந்தால், இதன் பொருள் அங்குக் கனவு காணுதல் இருக்காது. கனவு காணுதல் உறக்கத்தில் மேலோட்டமான தன்மையை ஏற்படுத்துகிறது. கனவுகளால் நீ மேல் மட்டத்தில் நகர்கிறாய்; கனவுகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பதால் நீ மேல் மட்டத்தில் நகர்கிறாய். கனவு காணுதல் அங்கு இல்லாதபோது நீ கடலுக்குள் விழுகிறாய், அதன் ஆழத்தை அடைகிறாய்.

மரணம் இதுவேதான். அதனால்தான் இந்தியாவில் உள்ள மக்கள் எப்பொழுதும் உறக்கத்தைச் சிறிய மரணமென்றும், மரணத்தை நீண்ட உறக்கமென்றும் சொல்கிறார்கள் – தன்மை யில் அவை இரண்டும் ஒன்றே. உறக்கம் என்பது தினசரி மரணம். மரணம் என்பது வாழ்க்கைக்கு வாழ்க்கை நடக்கும் விஷயம், வாழ்க்கைக்கு வாழ்க்கை வரும் உறக்கம். தினந்தோறும் நீ சோர்வடைகிறாய். நீ உறக்கத்தில் விழுகிறாய், அதில் நீ உன் உயிர்ச்சத்தைத் திரும்பப் பெறுகிறாய், காலையில் நீ உயிர்த்துடிப் போடு இருக்கிறாய்; நீ மீண்டும் பிறக்கிறாய். எழுபது அல்லது எண்பது வருட வாழ்க்கைக்குப் பின் நீ முற்றிலுமாகச் சோர்வடை கிறாய். இப்போது அவ்வளவு சிறிய நேரத்திற்கு மரணமடைவது போதாது; உனக்குப் பெரிய மரணம் தேவைப்படுகிறது. அப்படி அந்தப் பெரிய மரணம் அல்லது பெரிய தூக்கத்திற்குப் பிறகு, நீ முற்றிலும் புதிய உடம்புடன் மீண்டும் பிறக்கிறாய். ஒருமுறை கனவுகளற்ற தூக்கத்தை நீ அறிய முடிந்தால், அதில் விழிப் புணர்வு அடைய முடிந்தால், அப்போது மரணத்தைப் பற்றிய பயமே அங்கு இருக்காது. ஒருவரும் ஒருபோதும் இறந்ததில்லை,

ஒருவரும் இறக்க முடியாது – இதுதான் சாத்தியமற்ற ஒன்றே ஒன்று.

ஒரு நாள் முன்புதான் நான் உங்களிடம் சொல்லிக்கொண்டு இருந்தேன், அதாவது மரணம் ஒன்றுதான் உறுதியாக நடக்கக் கூடியது, இப்போது நான் உங்களிடம் சொல்கிறேன், அதாவது மரணம் சாத்தியமற்றது. ஒருவரும் ஒருபோதும் இறந்ததில்லை. ஒருவரும் இறக்க முடியாது – இதுதான் சாத்தியமற்ற ஒன்றே ஒன்று – ஏனெனில் இந்தப் பேரண்டமே வாழ்க்கை. நீ திரும்பத் திரும்ப மீண்டும் பிறக்கிறாய், ஆனால் உறக்கம் ஆழமாக இருக்கிறது. ஆகவே நீ உன் பழைய அடையாளத்தை மறந்து விடுகிறாய். உனது மனத்தின் நினைவுகள் சுத்தமாக அகற்றப் பட்டு விடுகின்றன.

இதை இந்த விதத்தில் யோசித்துப் பார். இன்று நீ உறங்கப் போகிறாய்: ஏதோவொரு சாதனம் அப்படி இருப்பதாக வைத்துக் கொள்வோம் – விரைவில் இது போன்றது நம்மிடம் இருக்கும் – டேப் ரிக்கார்டரில் அழிப்பதற்கு உள்ளதைப் போல, அதாவது டேப்பில் பதிவு செய்யப்பட்டவை எல்லாவற்றையும் இனி அங்கில்லாமல் சுத்தமாக அழித்துவிடக் கூடியது.

இது போலவே நினைவுக்கும் சாத்தியம். ஏனெனில் நினைவு உண்மையில் ஒரு ஆழமாகப் பதிவு செய்து வைப்பதே. விரைவில் அல்லது சிறிது காலத்தில் நம்மிடம் ஒரு சாதனம் இருக்கும், அதைத் தலையில் வைத்து விட்டால் அது உனது மனதை முழுவதுமாகச் சுத்தம் செய்துவிடும். காலையில் நீ தொடர்ந்து அதே ஆளாக இருக்க மாட்டாய். ஏனெனில் உறங்கப் போனது யார் என்பதையே உன்னால் நினைவுபடுத்திக் கொள்ள முடியாது. அப்போது உன் உறக்கம் மரணத்தைப் போலத் தோன்றும். அங்கு ஒரு தொடர்பு அறுந்த நிலை வரும்; உறங்கப் போனது யார் என்பதை நீ நினைவுபடுத்திக் கொள்ள முடியாது. இது இயற்கையாக நடக்கிறது. நீ மரணமடைந்து, பிறகு நீ மீண்டும் பிறக்கையில், மரணமடைந்தது யார் என்பதை

உன்னால் நினைவுப்படுத்திக் கொள்ள முடியாது. நீ மறுபடியும் ஆரம்பிக்கிறாய்.

இந்த யுக்தியின் மூலம், முதலில் நீ உனது கனவுகளுக்கு எஜமானன் ஆகிறாய் – அதாவது கனவு காண்பது நின்று போகும். அல்லது நீ கனவு காண விரும்பினால் உன்னால் கனவு காண முடியும். ஆனால் கனவு காணுதல் நீயே விரும்பிச் செய்வதாக ஆகிவிடுகிறது. அது தன்னிச்சையானதல்ல, அது உன்மேல் திணிக்கப்பட முடியாது; நீ அதன் பிடியில் இருக்க மாட்டாய். அதன்பின் உனது உறக்கத்தின் தன்மை மரணத்தைப் போன்றது போலவே ஆகிவிடும். அப்போது நீ மரணம் என்பது உறக்கமே என்பதை அறிவாய்.

அதனால்தான் இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''கனவுகளின் மேலும், மரணத்தின் மேலும் கூட அவைகளைச் செலுத்தும் திறனடைவாயாக.'' நீ அறிந்து கொள்வாய், அதாவது மரணம் என்பது நீண்ட உறக்கமே – உதவுவதும், அழகானதும். ஏனெனில் அது உனக்குப் புதிய வாழ்வைத் தருகிறது; அது உனக்கு எல்லா வற்றையும் புதிதாகக் கொடுக்கிறது. மரணம் இல்லாமல் போகிறது.... கனவு காண்பது இல்லாமல் போனவுடன், மரணம் இல்லாமல் போகிறது.

மரணத்தின் மேல் சக்தி பெறுவதற்கு, மரணத்தின் மேலும் அதைச் செலுத்தும் திறனடைவதற்கு மற்றொரு அர்த்தம் உள்ளது. மரணம் வெறும் உறக்கமே என்பதை நீ உணர்ந்து கொள்ளும் போது, நீ அதைச் செலுத்த முடியும். நீ உன் கனவு களைச் செலுத்த முடியுமென்றால், நீ உன் மரணத்தையும் செலுத்த முடியும். நீ மறுபடியும் எங்குப் பிறப்பது, யாருக்கு, எப்போது, எந்த உருவத்தில் என்பதையெல்லாம் நீ தேர்ந்தெடுக்க முடியும்; நீ உனது பிறப்பின் எஜமானனாகவும் மாறிவிடுவாய்.

புத்தர் இறந்தார்.... நான் குறிப்பிடுவது அவருடைய கடைசிப் பிறவியை அல்ல, கடைசிக்கு முந்தைய பிறவியை, புத்தராவதற்கு முந்தைய பிறவியை. அப்போது இறப்பதற்கு முன்

அவர் சொன்னார், ''நான் இந்த இந்தப் பெற்றோர்களுக்குப் பிறப்பேன்; எனது தந்தை இப்படியிருப்பார், எனது தாய் இப்படியிருப்பார். ஆனால் எனது தாய் உடனே இறந்து விடுவாள்.... நான் பிறந்தவுடன் எனது தாய் உடனே மரண மடைவார். நான் பிறப்பதற்கு முன்பு எனது தாய் சில குறிப்பிட்ட கனவுகளைக் காண்பாள்.'' நீ உனது கனவுகளின் மேல் சக்தி பெற்றவனாக மட்டும் இருப்பதில்லை. நீ அடுத்தவரின் கனவுகளின் மேல் கூட சக்தி பெறுகிறாய். ஆகவே புத்தா, ஒரு உதாரணத்திற்காகச் சொன்னார், ''குறிப்பிட்ட கனவுகள் அங்குத் தோன்றும். நான் கருவிலிருக்கும் போது, எனது தாய் குறிப்பிட்ட கனவுகளைக் காண்பாள். ஆகவே எப்பொழுது எந்தப் பெண்ணுக்கு இந்தக் கனவுகள் இந்த வரிசைப்படி வருகின்றதோ, அப்போது நான் அவளுக்குப் பிறக்கப் போகிறேன் என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.''

இது நடந்தது. புத்தரின் தாய் அதே வரிசைப்படி கனவு களைக் கண்டாள். இந்த வரிசை இந்தியா முழுவதற்கும் தெரியும். ஏனெனில் இது சாதாரண கூற்று அல்ல. இது எல்லோருக்கும் தெரியும், குறிப்பாக மதத்தில், வாழ்வின் ஆழமான விஷயங்களில், வாழ்வின் அறிவுக்கெட்டாத வழிகளில் ஆர்வம் கொண்டவர்களுக்குத் தெரியும். அவை அறியப் பட்டவை. ஆகவே அந்தக் கனவுகள் விளக்கமளிக்கப்பட்டன. 'ப்ராய்ட்' முதலில் கனவுகளுக்கு விளக்கமளித்தவர் அல்ல – மேலும், அதோடு, ஆழமாகச் சொன்னவருமல்ல. மேற்கத்திய நாடுகளிலேயே அவர் முதலானவர்.

ஆகவே புத்தரின் தந்தை உடனடியாகக் கனவுகளுக்கு விளக்கமளிப்பவர்களை, அந்தக் கால இந்தியாவின் ப்ராய்ட், ஜங் போன்றவர்களை அழைத்துக் கேட்டார், ''இந்த வரிசையின் அர்த்தம் என்ன? எனக்குப் பயமாக உள்ளது. இவை அரிதான கனவுகள், மேலும் இவை திரும்பத்திரும்ப அதே வரிசையில் வருகின்றன. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு கனவுகள் தொடர்ந்து மீண்டும் மீண்டும் வருகின்றன. அவை

ஒரே கனவுகள்தான், ஒருவன் திரும்பத்திரும்ப அதே படத்தைப் பார்ப்பது போல இருக்கிறது. என்ன நடந்து கொண்டிருக்கிறது?''

ஆகவே அவர்கள் அவரிடம் சொன்னார்கள், ''நீங்கள் ஒரு மாபெரும் ஆன்மாவின் தந்தையாகப் போகிறீர்கள் – புத்தராகப் போகும் ஒருவரின். ஆனால் உங்களது மனைவிக்கு ஆபத்து உண்டாகப் போகிறது. ஏனெனில் எப்பொழுது இந்தப் புத்தர் பிறந்தாலும் அவருடைய தாய் உயிர் பிழைப்பது கடினம்.''

தந்தை கேட்டார், ''ஏன்?'' விளக்கமளித்தவர்கள் சொன்னார்கள், ''நாங்கள் ஏன் என்று சொல்ல முடியாது. ஆனால் இப்போது பிறக்கப்போகும் அந்த ஆன்மா சொல்லியிருக்கிறது, அதாவது அவர் மீண்டும் பிறக்கும்பொழுது, அவருடைய தாய் உடனே மரணமடைவாள்.''

பின்னால் புத்தர் கேட்கப்பட்டார், ''ஏன் உங்கள் தாய் உடனே மரணமடைய வேண்டும்?'' அவர் சொன்னார், ''ஒரு புத்தருக்குப் பிறப்புக் கொடுப்பதென்பது ஒரு மாபெரும் நிகழ்வு. ஆகவே அதன்பின் மற்ற எல்லாமும் அவசியமற்றதாக மாறி விடுகிறது. ஆகவே தாய் இருக்க முடியாது. அவள் புதிதாக ஆரம்பிக்க மறுபடியும் பிறக்க வேண்டும். ஒரு புத்தருக்குப் பிறப்பைக் கொடுப்பது என்பது அப்படிப்பட்ட ஒரு உச்சநிலை, அப்படிப்பட்ட ஒரு சிகரம், அதைக் கடந்து ஒரு தாய் இனிமேலும் இருக்க முடியாது.

ஆகவே தாய் இறந்துவிட்டார். மேலும் புத்தர் அவரது முற்பிறவியில் சொல்லியிருந்தார். அதாவது அவருடைய தாய் ஒரு பனைமரத்திற்கு அடியில் நின்றுகொண்டிருக்கும் போது அவர் பிறப்பார் – அது அப்படியே நடந்தது. அவருடைய தாய் ஒரு பனை மரத்திற்கு அடியில் நின்று கொண்டிருந்தார் – புத்தர் பிறக்கும் பொழுது நின்று கொண்டிருந்தார். மேலும் அவர் சொல்லியிருந்தார், ''நான் எனது தாய் பனை மரத்திற்கு அடியில் நின்றுகொண்டிருக்கும் போது பிறப்பேன், மேலும் நான் ஏழு

அடி எடுத்து வைப்பேன். உடனடியாக, நான் நடப்பேன். இவைகளே நான் உங்களுக்குத் தரும் அடையாளங்கள்.'' அவர் சொன்னார், ''இதன் மூலம் ஒரு புத்தர் பிறந்துள்ளதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்.'' இப்படிக் கூறிய எல்லாவற்றையும் அவர் செயல்படுத்தினார்.

இது புத்தரைப் பொருத்தவரை மட்டுமே இப்படியல்ல. ஜீஸஸைப் பொருத்தவரையிலும், மகாவீரரைப் பொருத்த வரையிலும், மற்றும் பலரைப் பொருத்தவரையிலும் இது இப்படித்தான். ஒவ்வொரு ஜைனா தீர்த்தங்கரரும் தனது அடுத்த பிறவியில் அவர் எப்படிப் பிறக்கப் போகிறார் என்பதை முன்கூட்டியே சொல்லியிருந்தனர். அவர்கள் குறிப்பிட்ட கனவு வரிசையினைக் கொடுத்திருந்தனர் - அதாவது இப்படி இப்படி அந்தக் குறியீடுகள் இருக்கும் - மேலும் அது எப்படி நிகழும் என்றும் சொல்லியிருந்தனர்.

நீ செலுத்த முடியும். ஒருமுறை உன்னால் உனது கனவுகளைச் செலுத்த முடிந்தால் நீ எல்லாவற்றையும் செலுத்த முடியும். ஏனெனில் இந்த உலகம் செய்யப்பட்டுள்ளது கனவு என்ற பொருளில்தான். இந்த வாழ்க்கை கனவு என்ற பொருளாலேயே செய்யப்பட்டுள்ளது. ஒருமுறை உன்னால் உனது கனவுகளைச் செலுத்த முடிந்தால் நீ எல்லாவற்றையும் செலுத்த முடியும். இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''மரணத்தின் மேலும் கூட.'' அப்போது ஒருவன் ஒரு குறிப்பிட்ட பிறப்பை, தனக்கே ஒரு குறிப்பிட்ட வாழ்வைக் கொடுத்துக் கொள்ள முடியும்.

நாம் தன்னிச்சையற்றவர்கள். நமக்குத் தெரியாது, ஏன் நாம் பிறந்தோம், ஏன் நாம் இறக்கிறோம். யார் நம்மைச் செலுத்துவது - எதற்காக? எந்தக் காரணமும் அதற்கு இருப்பதாகத் தெரியவில்லை. இவை எல்லாமே வெறும் குளறுபடிகளாக, வெறும் தற்செயலானவைகளாகத் தெரிகிறது. இதற்குக் காரணம் நாம் எஜமானர்களில்லை. ஒருமுறை நாம் எஜமானர்கள் ஆகிவிட்டால் இது இப்படி இருக்காது.

## *8. திரும்பும் புள்ளியைப் பக்தியோடு கவனி.*

எட்டாவது மூச்சு யுக்தி: ''அதிகபட்ச பக்தியோடு, மூச்சின் இரண்டு சந்திப்புகளின் மேலும் மையம் கொண்டு அறிபவனை அறிவாயாக.''

யுக்திகளில் சிறிய வித்தியாசம் உள்ளது - சிறிய மாற்றங்கள். ஆனால் யுக்திகளின் வித்தியாசங்கள் சிறியதாய் இருந்தாலும், உனக்கு அவை பெரிதாக இருக்கலாம். ஒரு சிறிய வார்த்தை ஒரு மிகப்பெரிய வித்தியாசத்தை உண்டாக்கும். ''அதிகபட்ச பக்தியோடு, மூச்சின் இரண்டு சந்திப்புகளின் மேலும் மையம் கொண்டு....'' உள்ளே வரும் மூச்சு திரும்பும் போது அங்கு ஒரு சந்திப்பு, வெளியே போகும் மூச்சு திரும்பும்போது அங்கு ஒரு சந்திப்பு. இந்த இரண்டு திருப்பங்களிலும் - நாம் இந்தத் திருப்பங்களை அலசியிருக்கிறோம் - ஒரு சிறிய வித்தியாசம் உண்டாக்கப்பட்டுள்ளது: அதாவது யுக்தியில் ஒரு சிறிய வித்தியாசம். ஆனால் சாதகனுக்கு இது மிகப் பெரிதாக இருக்கலாம். ஒரே ஒரு நிபந்தனை மட்டும் சேர்க்கப்பட்டுள்ளது: ''அதிகபட்ச பக்தியோடு'' - இதனால் முழு யுக்தியும் மாறி விடுகிறது.

முதல் விதமாகக் கூறப்பட்டதில் பக்தி பற்றி எந்த கேள்வியும் இல்லை, வெறும் விஞ்ஞானபூர்வமான யுக்தி. நீ செய், அது வேலை செய்யும். ஆனால் அப்படிப்பட்ட வறண்ட, விஞ்ஞானபூர்வமான யுக்திகளைச் செய்ய முடியாத மனிதர்கள் இருக்கிறார்கள். இதயத்தை அடிப்படையாகக் கொண்டவர்கள், பக்தி உலகத்தைச் சேர்ந்தவர்கள், இவர்களுக்காக ஒரு சிறிய வித்தியாசம் ஏற்படுத்தப்பட்டுள்ளது: ''அதிகபட்ச பக்தியோடு, மூச்சின் இரண்டு சந்திப்புகளின் மேலும் மையம் கொண்டு, அறிபவனை அறிவாயாக.''

நீ விஞ்ஞானத்தின் பக்கம் திரும்பாதவனாக, விஞ்ஞான பூர்வமான அணுகுமுறை இல்லாதவனாக, நீ விஞ்ஞான பூர்வமான மனம் இல்லாதவனாக இருந்தால், அப்போது இதை

முயற்சி செய் : ''அதிகபட்ச பக்தியோடு – முழு நம்பிக்கை யோடு, அன்போடு, விசுவாசத்தோடு – ''மூச்சின் இரண்டு சந்திப்புகளின் மேலும் மையம் கொண்டு அறிபவனை அறிவாயாக.'' இதை எப்படிச் செய்வது? எப்படி? நீ யாரிட மாவது பக்தி கொள்ள முடியும் : கிருஷ்ணரின் மேல், கிறிஸ்து வின் மேல் நீ பக்தி கொள்ள முடியும். ஆனால் எப்படி உன்மேலேயே, இந்த மூச்சின் சந்திப்புகளின் மேலும், நீ பக்தி கொள்வது? இந்த விஷயம் முற்றிலும் பக்திக்குச் சம்பந்த மில்லாததாகத் தெரிகிறது. ஆனால் அது சார்ந்தது....

தந்த்ரா சொல்கிறது, உடலே கோயில் என்று. உனது உடம்பு தெய்விகத்தின் கோயில், தெய்விகம் வசிக்குமிடம், ஆகவே உனது உடம்பை ஒரு பொருளைப் போல நடத்தாதே. அது தெய்விகமானது, புனிதமானது. நீ ஒரு மூச்சை உள்ளே இழுக்கும் போது, இது நீ உள்ளிழுக்கும் மூச்சு மட்டுமல்ல, இது உனக்குள்ளிருக்கும் தெய்விகம் செய்வது. நீ சாப்பிடுகிறாய், நீ நகருகிறாய் அல்லது நடக்கிறாய்.... இவைகளை இந்த வழியில் பார் : இவை நீயல்ல, மாறாக உனக்குள்ளிருக்கும் தெய்விகம் செய்கிறது. அப்போது முழு விஷயமும் சுத்தமான பக்தியாக மாறிவிடுகிறது.

பல ஆன்மசாதகர்களும் தங்கள் உடலை நேசித்தார்கள் என்று சொல்லப்படுகிறது. அவர்கள் தங்களது உடலைத் தாங்கள் அன்பு கொண்டவர்களுக்குச் சொந்தமான உடல்களைப் போலப் பராமரித்தார்கள். நீ உனது உடலை இந்த வழியில் பராமரிக்க லாம் அல்லது நீ அதை ஒரு வெறும் இயந்திர சாதனமாகவும் பராமரிக்கலாம் – இது மறுபடியும் ஒருவித அணுகுமுறைதான். நீ அதைக் குற்றவுணர்வாக, பாவமாகப் பராமரிக்கலாம், நீ அதை ஏதோ ஒரு அகத்தத்தைப் போலப் பராமரிக்கலாம், நீ அதை ஏதோவொரு அற்புதம் வாய்ந்ததாக, ஒரு அற்புதமாகப் பராமரிக்கலாம்; நீ அதைத் தெய்விகம் வசிக்கும் இடமாக நினைத்துப் பராமரிக்கலாம். அது உன்னைச் சார்ந்தது. நீ உனது

உடலை ஒரு கோவிலாகப் பராமரிக்க முடியுமானால், அப்போது இந்த யுக்தி உதவியாக இருக்கும். ''அதிகபட்ச பக்தியோடு....''

முயற்சி செய் இதை. நீ சாப்பிடும் போது, இதை முயற்சி செய். நீ சாப்பிடுவதாக நினைக்காதே. உனக்குள் இருக்கும் தெய்விகம் சாப்பிடுவதாக நினை, அப்போது ஏற்படும் மாற்றத்தைப் பார். நீ அதையே தான் சாப்பிடுகிறாய், நீ அதே தான், ஆனால் உடனே எல்லாம் வித்தியாசமாக மாறுகிறது. நீ தெய்விகத்திற்கு உணவு கொடுக்கிறாய். நீ குளிக்கிறாய் – ஒரு மிகவும் சாதாரணமான, ஒன்றுமில்லாத விஷயம் – ஆனால் பார்வையை மாற்று; உனக்குள் இருக்கும் தெய்விகத்தை நீ குளிப்பாட்டுவதாக உணரு. அப்போது இந்த யுக்தி சுலபமாக இருக்கும் : ''அதிகபட்ச பக்தியோடு, மூச்சின் இரண்டு சந்திப்புகளின் மேலும் மையம் கொண்டு அறிபவனை அறிவாயாக.''

---

9. a. இறந்தவனைப் போலப் படு.

   b. இமைக்காமல் விழித்துப் பார்.

   c. எதையாவது உறிஞ்சு, பின் உறிஞ்சுதலாகவே மாறிவிடு.

---

ஒன்பதாவது யுக்தி : ''இறந்தவனைப் போலப் படு. ஆத்திரத்தில் நிறைந்து, அப்படியே இரு. அல்லது இமையை அசைக்காமல் விழித்துப் பார். அல்லது எதையாவது உறிஞ்சு பின் உறிஞ்சுதலாகவே மாறிவிடு.'' ''இறந்தவனைப் போலப் படு.'' முயற்சி செய் இதை: திடீரென்று நீ இறந்து போய்விட்டாய். உடம்பை விட்டுவிடு! அதை அசைக்காதே, ஏனெனில் நீ இறந்து விட்டாய். நீ இறந்து விட்டதாகக் கற்பனை செய்து கொள். நீ உடலை அசைக்க முடியாது, நீ கண்களை அசைக்க முடியாது, நீ அழ முடியாது, நீ கத்த முடியாது, நீ எதுவும் செய்ய முடியாது, நீ இறந்து விட்டாய். இதன் பின் இது எப்படி இருக்கிறதென்று உணரு. ஆனால் ஏமாற்றாதே. நீ ஏமாற்றலாம், நீ கொஞ்சம் உடலை அசைத்துக் கொள்ள முடியும். அப்படி அசைக்காதே.

அங்கு ஏதாவது கொசு இருந்தால், உடம்பை இறந்து போனது போலவே நடத்து. இது ஒரு மிகவும் பயன்படுத்தப்பட்ட யுக்தி.

இரமண மகரிஷி இந்த யுக்தியின் மூலமாகத்தான் தனது ஞானத்தை அடைந்தார். ஆனால் அவருடைய வாழ்வில் அவரால் பயன்படுத்தப்பட்ட யுக்தி அல்ல இது. அவருடைய வாழ்வில் இது திடீரென்று நடந்தது, இயற்கையாக. ஆனால் அவர் தனது முந்தைய பிறவிகளில் கண்டிப்பாக இந்த யுக்தியைக் கடைபிடித் திருக்க வேண்டும், ஏனெனில் எதுவும் இயற்கையாக நிகழ்வ தில்லை. எல்லாவற்றிற்கும் ஒரு காரணம் இருக்கிறது, ஒரு காரணத் தொடர்புள்ளது. திடீரென்று ஒருநாள் இரமணர் உணர்ந்தார் – அவர் அப்போது இளைஞர், பதினான்கு அல்லது பதினைந்து வயது – அதாவது அவர் இறக்கப் போகிறார். அவருடைய மனத்தில் அது அவ்வளவு உறுதியாகப்பட்டது, அதாவது இறப்பு ஆட்கொண்டு விட்டது. அவரால் அவருடைய உடம்பை அசைக்க முடியவில்லை. அவரைப் பாரிசவாயு தாக்கி விட்டதுபோல அவர் உணர்ந்தார். பின் திடீரென்று மூச்சுத் திணறுவதை அவர் உணர்ந்தார். இப்போது இதயம் நின்றுவிடப் போகிறது என்பது அவருக்குத் தெரிந்துவிட்டது. அவரால் அழக்கூட முடியவில்லை, வேறு யாரிடமாவது, ''நான் இறக்கப் போகிறேன்'' என்று சொல்லக்கூட முடியவில்லை.

சில சமயங்களில் பயங்கரக்கனவில் இது நடக்கும். நீ கத்த முடியாது, நீ நகர முடியாது. நீ விழித்த பின்பு கூட சில கணங்களுக்கு நீ எதையும் செய்ய முடியாது. அது நடந்தது. இரமணருக்கு அவருடைய உணர்வுநிலையின் மேல் முழுமை யான கட்டுப்பாடு இருந்தது. ஆனால் அவரது உடம்பின் மேல் எந்த ஆளுமையும் இல்லை. அவருக்குத் தெரியும் அவர் அங்கு இருக்கிறார், அவர் அங்கு உள்ளார், உணர்வோடு, கவனத்தோடு உள்ளார், ஆனால் அவர் இறக்கப் போவதாக அவர் உணர்ந்தார். அது மிக உறுதியாகத் தெரிந்து விட்டது. மேலும் அதைத் தடுக்க எந்த வழியும் அங்கு இல்லை. ஆகவே அவர் கைவிட்டு விட்டார். அவர் கண்களை மூடிக்கொண்டு அங்கு அப்படியே

தொடர்ந்து இருந்தார், இறப்பதற்காகக் காத்திருந்தார்; அவர் இறப்பதற்காக மட்டும் அங்குக் காத்திருந்தார்.

மெது மெதுவாக உடம்பு விறைக்க ஆரம்பித்தது. உடம்பு இறந்து விட்டது, ஆனால் ஒரு பிரச்சனையை உண்டு பண்ணி விட்டது. அவருக்குத் தெரிகிறது. இந்த உடம்பு இறந்துவிட்டது, ஆனால் அவர் அங்கு இருக்கிறார், அதோடு அதுவும் அவருக்குத் தெரியும். அவருக்குத் தெரிகிறது அவர் உயிரோடு இருக்கிறார். அதே சமயம் இந்த உடம்பு இறந்துவிட்டது. பின் அவர் திரும்ப வந்தார். காலையில் உடம்பு சரியாகிவிட்டது. ஆனால் திரும்பி வந்த மனிதர் ஒருபோதும் பழைய அதே ஆளல்ல – ஏனெனில் அவர் இறப்பை அறிந்து கொண்டு விட்டார். அவர் மாறுபட்ட ஒரு உண்மையை, ஒரு மாறுபட்ட உணர்வுநிலையின் பரிமாணத்தை, அறிந்து கொண்டு விட்டார்.

அவர் வீட்டிலிருந்து தப்பிவிட்டார். அந்த மரண அனுபவம் அவரை முற்றிலுமாக மாற்றிவிட்டது. அவர் இந்தக் காலத்தின் மிகச் சில ஞானமடைந்தவர்களில் ஒருவராக மாறினார்.

இதுதான் யுக்தி. இது இரமணருக்கு இயற்கையாக நடந்தது, ஆனால் உனக்கு இது இயற்கையாக நடக்கப் போவதில்லை. ஆனால் முயற்சி செய் இதை. ஏதாவது ஒரு பிறவியில் இது இயற்கையாக நடக்கலாம். நீ இதை முயற்சி செய்யும் போதே இது நடக்கலாம். அப்படி அது நடக்காவிட்டால் கூட, முயற்சி ஒருபோதும் வீணாவதில்லை. அது உனக்குள் இருக்கிறது; அது உனக்குள் ஒரு விதையாகத் தொடர்ந்து இருக்கிறது. ஏதாவதொரு சமயத்தில், காலம் கனியும் போது, மழை பொழிகையில், அது முளைவிடும்.

எல்லா இயற்கை நிகழ்வுகளும் இப்படித்தான். சிறிது காலத்திற்கு முன் விதை விதைக்கப்பட்டது, ஆனால் காலம் கனிந்திருக்கவில்லை; மழை பெய்யவில்லை. மற்றொரு பிறவியில் காலம் கனிகிறது. நீ அதிக பக்குவமடைந்திருக்கிறாய்,

அதிக அனுபவப்பட்டிருக்கிறாய், அதிகம் இந்த உலகத்துடன் மனமுடைந்து போயிருக்கிறாய் – அப்போது திடீரென்று, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில், மழை பெய்கிறது, அந்த விதை வெடிக்கிறது.

''இறந்தவனைப் போலப் படு. ஆத்திரத்தில் நிறைந்து அப்படியே இரு.'' அது சரிதான், நீ இறந்து கொண்டிருக்கும் போது, கண்டிப்பாக அது மகிழ்ச்சியான தருணமாக இருக்காது. நீ இறந்து விட்டாய் என்று நீ உணர்ந்து கொண்டிருக்கையில், அது மிகவும் ஆனந்தமானதாக இருக்கப் போவதில்லை. பயம் உன்னை ஆட்கொள்ளும், மனத்தில் கோபம் பொங்கலாம் அல்லது மனமுடைந்து போகலாம், சோகம், வருத்தம், துன்பம்.... எது வேண்டுமானாலும் வரலாம். இது ஒவ்வொரு வருக்கும் வேறு வேறாக இருக்கும்.

சூத்திரம் சொல்கிறது : ''ஆத்திரத்தில் நிறைந்து, அப்படியே இரு.'' நீ ஆத்திரத்தை உணர்ந்தால், அப்படியே இரு. நீ சோகத்தை உணர்ந்தால், அப்படியே இரு. நீ பதட்டத்தை, பயத்தை உணர்ந்தால், அப்படியே இரு. நீ இறந்துவிட்டாய், நீ எதுவும் செய்ய முடியாது, ஆகவே அப்படியே இரு. மனத்தில் இருப்பது எதுவாக இருந்தாலும், உடல் இறந்துவிட்டது. ஆகவே நீ எதுவும் செய்ய முடியாது, எனவே அப்படியே இரு.

அந்த இருத்தல் மிகவும் அழகானது. சில நிமிடங்களுக்கு நீ அப்படி இருக்க முடிந்தால், திடீரென்று எல்லாம் மாறி விட்டதை நீ உணர்ந்து கொள்வாய். ஆனால் நாம் அசைய ஆரம்பித்து விடுகிறோம். மனத்தில் ஏதாவது உணர்ச்சி இருந்தால், உடம்பு அசைய ஆரம்பித்து விடுகிறது. ஆங்கிலத் தில் உணர்ச்சிக்குப் பெயரான இமோஷன் (Emotion) என்பது மோஷன் (Motion), அதாவது அசைவுக்குத் தொடர்புடைய தாகவே உள்ளது. நீ கோபமடைந்தால் உடனே உனது உடம்பு அசைய ஆரம்பிக்கிறது. நீ சோகமடைந்தால் உனது உடம்பு அசைய ஆரம்பிக்கிறது. இறப்பை உணரு. அதோடு உணர்ச்சிகள்

உனது உடம்பை அசைக்க இடம் கொடுக்காதே. அவை அங்கே இருக்கட்டும், ஆனால் நீ அப்படியே இரு – நிலையாக, இறந்து போனதாக. அங்கு என்ன இருந்தாலும் .... அசையாதே. இரு! அசையாதே.

''அல்லது இமையை அசைக்காமல் விழித்துப் பார்.'' இந்த ''இமையை அசைக்காமல் விழித்துப் பார்'' என்ற முறைதான் மெகர்பாபாவினுடையது. வருடக் கணக்கில் அவர் அவருடைய அறையின் விட்டத்தை விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். வருடக் கணக்கில் அவர் தரையில் இறந்தவனைப் போலப் படுத்துக் கொண்டு, விட்டத்தை இமை கொட்டாமல் விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தார், கண்களை அசைக்காமல். அவர் மணிக்கணக்கில் படுத்துக் கிடப்பார், சும்மா விழித்துப் பார்த்துக் கொண்டு, எதுவும் செய்யாமல். கண்களால் விழித்துப் பார்த்துக் கொண்டு இருப்பது நல்லது, ஏனெனில் நீ மறுபடியும் மூன்றாவது கண்ணில் நிலைப்பாய். அப்படி நீ மூன்றாவது கண்ணில் ஒருமுறை பொருந்தி விட்டால், நீ உனது இமைகளை அசைக்க விரும்பினாலும் அது முடியாது, அவை நிலைகுத்தியதாக மாறிவிடும்.

மெகர் பாபா இப்படி விழித்துப் பார்ப்பதனால் தான் அடைந்தார். நீ கேட்கிறாய், ''எப்படி இந்தச் சிறிய பயிற்சிகளின் மூலம்....?'' ஆனால் மூன்று வருடம் அவர் விட்டத்தை விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தார், வேறெதுவும் செய்யாமல். மூன்று வருடம் என்பது நீண்ட காலம். மூன்று நிமிடங்களுக்கு இதைச் செய், அப்போதே நீ ஏதோ மூன்று வருடங்களாக அங்கேயே படுத்திருப்பதைப் போல நீ உணர்வாய். மூன்று நிமிடங்கள் மிக, மிக நீண்டதாக மாறிவிடும். நேரம் போகவே மாட்டேன் என்பது போல, கடிகாரம் நின்றுவிட்டது போல அது தோன்றும்.

மெகர் பாபா விழித்துப் பார்த்தார், விழித்துப் பார்த்தார், விழித்துப் பார்த்தார். மெது மெதுவாக எண்ணங்கள் நின்றன,

அசைவுகள் நின்றன, அவர் வெறும் உணர்வுநிலையாக மாறி னார், அவர் வெறும் விழித்துப் பார்ப்பதாக மாறினார். அதன்பின் அவரது வாழ்நாள் முழுவதும் மௌனமாகவே தொடர்ந்து இருந்தார். இந்த விழித்துப் பார்ப்பதன் மூலம் அவர் உள்ளே மிகவும் மௌனமாக மாறினார், அதாவது அதன்பின் சொற் களைக் கோர்ப்பதே சாத்தியமில்லாமல் ஆகிவிட்டது அவருக்கு.

மெகர் பாபா ஒருமுறை அமெரிக்காவில் இருந்தார். அப்போது மற்றவர்களின் எண்ணத்தைப் படிக்கக் கூடிய, மனத்தைப் படிக்கக் கூடிய ஒருவர் அங்கிருந்தார். மேலும் அவர் மனதைப் படிக்கக் கூடியவர்களில் உண்மையிலேயே மிகவும் அபூர்வமானவர். அவர் தனது கண்களை மூடிக் கொள்வார், உன் முன்னால் உட்காருவார், பின் சில நிமிடங்களில் அவர் உன்னோடு ஒத்திசைவு கொண்டு விடுவார். பிறகு அவர் நீ யோசித்துக் கொண்டிருப்பதை எல்லாம் எழுத ஆரம்பித்து விடுவார். ஆயிரம் ஆயிரம் தடவைகள் அவர் பரிசோதிக்கப் பட்டுள்ளார், அவருடையது எப்பொழுதும் சரியாக, எப்பொழுதும் துல்லியமாகவே இருக்கும். ஆக யாரோ ஒருவர் அவரை மெகர் பாபாவிடம் அழைத்து வந்திருந்தார். அவர் அங்கு அமர்ந்தார். ஆனால் இதுதான் அவர் வாழ்க்கையிலேயே அவர் அடைந்த ஒரே தோல்வி – ஒரே ஒரு தோல்வி. ஆனால் மறுபடியும் இதை நாம் ஒரு தோல்வி என்று சொல்ல முடியாது. அவர் மறுபடியும் மறுபடியும் முயன்றார். அவருக்கு வேர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. ஆனால் அவரால் ஒரே ஒரு வார்த்தை யைக் கூடக் கண்டுபிடிக்க முடியவில்லை.

கையில் பேனாவுடன் அவர் அங்கே உட்கார்ந்திருந்தார், பிறகு சொன்னார், ''என்ன விதமான மனிதர் இவர்? என்னால் படிக்க முடியவில்லை. ஏனெனில் அங்குப் படிப்பதற்கு எதுவும் இல்லை. இந்த மனிதன் சுத்தமாக காலியாய் இருக்கிறான். இந்த மனிதன் இங்கு உட்கார்ந்திருப்பதையே நான் மறந்துவிட்டேன். என் கண்களை மூடியபிறகு, நான் மறுபடியும் கண்களைத் திறந்து பார்க்க வேண்டி வந்தது. ஏனெனில் இந்த மனிதன் எனக்குமுன்

இருக்கிறானா அல்லது தப்பித்து ஓடிவிட்டானா என்ற சந்தேகம் வந்துவிட்டது. ஆகவே என்னைக் குவிப்பதே, ஒன்று சேர்ப்பதே கடினமாக உள்ளது. ஏனெனில் நான் கண்களை மூடும் கணத்திலேயே நான் ஏமாற்றப்படுவதாக நான் உணர்கிறேன் – அந்த மனிதன் தப்பித்துப் போய் விட்டான். ஆகவே எதிரில் அங்கு யாரும் இல்லை என்பதைப் போல. நான் கண்களை மறுபடியும் திறந்து பார்க்க வேண்டியுள்ளது, அப்படிப் பார்க்கும் போது இந்த மனிதன் இங்குதான் இருக்கிறான். எனவே அவர் கொஞ்சம்கூட யோசித்துக் கொண்டிருப்பதில்லை.'' அந்த விழித்துப் பார்த்தல், அந்த இடைவிடாத விழித்துப் பார்த்தல் அவர் மனத்தை முழுவதுமாக நிறுத்திவிட்டது.

''அல்லது இமைக்காமல் விழித்துப் பார். அல்லது எதை யாவது உறிஞ்சு, பின் உறிஞ்சுதலாகவே மாறிவிடு.'' இவை சிறிய மாற்றங்கள். எதுவாயிருந்தாலும் போதும்..... நீ இறந்து விடுகிறாய் – அது போதும்.

''ஆத்திரத்தில் நிறைந்து, அப்படியே இரு.'' இந்தப் பகுதி மட்டுமே ஒரு யுக்தியாக முடியும். நீ கோபமாயிருக்கிறாய்: கீழே படு, கோபத்திலேயே இரு. அதிலிருந்து நகராதே, வேறெதையும் செய்யாதே, தொடர்ந்து அசைவற்று இரு.

கிருஷ்ணமூர்த்தி தொடர்ந்து இதைப் பற்றிப் பேசிக் கொண்டே இருக்கிறார். அவருடைய முழு யுக்தியும் இந்த ஒரே விஷயத்தைச் சார்ந்ததே: ''ஆத்திரத்தில் நிறைந்து, அப்படியே இரு.'' நீ கோபமாயிருந்தால் அப்போது கோபமாகவே இரு, அதோடு தொடர்ந்து கோபமாகவே இரு. நகராதே. நீ அப்படியே இருக்க முடிந்தால், கோபம் போய்விடும். பிறகு நீ வேறு ஒரு மனிதனாக வெளியே வருவாய். நீ பதட்டத்திலிருந்தால், எதையும் செய்யாதே. அங்கேயே இரு, அங்கேயே தங்கியிரு. பதட்டம் போய்விடும், நீ வேறு மனிதனாக வெளியே வருவாய். ஒருமுறை நீ பதட்டத்தை, அது உன்னை அசைக்காமல் இருந்து, அதைப் பார்த்து விட்டாயானால், நீ எஜமானன் ஆகிவிடுவாய்.

''அல்லது இமைகளை அசைக்காமல் விழித்துப் பார். அல்லது எதையாவது உறிஞ்சு, பின் உறிஞ்சுதலாகவே மாறி விடு.'' இந்தக் கடைசி ஒன்று உடலைச் சேர்ந்தது, செய்வதற்கு சுலபமானது. ஏனெனில் ஒரு குழந்தை செய்ய வேண்டிய முதல் காரியமாக இருப்பது உறிஞ்சுவது தான். உறிஞ்சுவதுதான் வாழ்வின் முதல் செயல். குழந்தை பிறக்கும்பொழுது, அது அழ ஆரம்பிக்கிறது. இந்த அழுகை எதற்காக என்று நீ ஆழ்ந்து பார்க்க முயற்சிக்காமல் இருந்திருக்கலாம். குழந்தை உண்மையில் அழுவதில்லை – அது அழுவதுபோல நமக்குத் தெரிகிறது – ஆனால் குழந்தை காற்றை உறிஞ்சுகிறது. மேலும் ஒரு குழந்தை அழ முடியவில்லை என்றால், சில நிமிடங்களில் அது இறந்து விடும். ஏனெனில் அழுகையே காற்றை உறிஞ்சுவதற்குச் செய்யும் முதல் முயற்சியாகும். குழந்தை கருப்பையில் இருக்கும் வேளையில் அது சுவாசிப்பதில்லை. அது சுவாசிக்காமலே உயிரோடு இருக்கிறது. அது, நிலத்துக்கு அடியில் யோகிகள் என்ன செய்கிறார்களோ அதையே செய்கிறது. அதாவது குழந்தை சுவாசிக்காமலேயே வெறும் பிராணாவைப் பெற்றுக்கொண் டிருக்கிறது – தூய்மையான பிராணா தாயிடமிருந்து கிடைக்கிறது.

அதனால்தான் தாய்க்கும் குழந்தைக்கும் இடையேயான அன்பு மற்ற அன்புகளை விட முற்றிலும் மாறுபட்டு இருக்கிறது. ஏனெனில் தூய்மையான பிராணா – சக்தி – இருவரையும் இணைக்கிறது. இப்போது இது ஒருபோதும் மறுபடியும் நடக்க முடியாது. அங்கு ஒரு நுட்பமான பிராணாவின் உறவு இருக் கிறது. தாய் தனது பிராணாவைக் குழந்தைக்குக் கொடுக்கிறாள், குழந்தை சுவாசிப்பதே கிடையாது. ஆகவே குழந்தை பிறக்கும் பொழுது, அது தாயிடமிருந்து முன்பின் அறியாத உலகத்திற்குள் வீசப்படுகிறது. இப்போது பிராணா, சக்தி, அவ்வளவு சுலபமாக அதற்குக் கிடைக்காது. அது தானேதான் சுவாசிக்க வேண்டும்.

முதல் அழுகை என்பது காற்றை உறிஞ்சும் முயற்சி. அதன் பின் குழந்தை தாயின் மார்பிலிருந்து பாலை உறிஞ்சுகிறது. இவைகளே நீ முதலில் செய்த அடிப்படைச் செயல்கள். நீ செய்த

வேறு எதுவாயிருந்தாலும் அவை பின்னால் வருபவையே – இவைதான் வாழ்வின் முதல் செயல்கள். இவைகளைப் பயிற்சி செய்யவும் முடியும். இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''எதையாவது உறிஞ்சு, பின் உறிஞ்சுதலாகவே ஆகிவிடு.'' எதையாவது உறிஞ்சு – வெறும் காற்றை உறிஞ்சு, ஆனால் காற்றை மறந்துவிட்டு வெறும் உறிஞ்சுதலாக ஆகிவிடு. இதன் அர்த்தம் என்ன? நீ எதையாவது உறிஞ்சிக் கொண்டிருக்கிறாய், அப்போது நீ உறிஞ்சுபவனாக இருக்கிறாய், உறிஞ்சுதலாக அல்ல. நீ பின்னால் நின்றுகொண்டு உறிஞ்சிக் கொண்டிருக்கிறாய்.

இந்தச் சூத்திரம் சொல்கிறது, பின்னால் நிற்காதே, செயலில் இறங்கு, பின் உறிஞ்சுதலாக மாறு. எது வேலை செய்யுமோ அது எதுவாயிருந்தாலும் முயற்சி செய். நீ ஓடிக் கொண்டிருக்கிறாய் – ஓடுதலாக ஆகிவிடு, ஓடுபவனாக இருக்காதே. ஓடுதலாக மாறு, அதோடு ஓடுபவனை மற. உள்ளே ஓடுபவன் ஒருவரும் இல்லாததை உணரு, வெறும் ஓடுதல் என்ற இயக்கமே. நீ ஒரு இயக்கம், ஒரு ஆற்றோட்டம் போன்ற ஓட்டம். உள்ளே யாரும் இல்லை. உள்ளே அமைதிதான், வெறும் இயக்கமே அங்குள்ளது.

உறிஞ்சுவது நல்லது, ஆனால் நீ இதை மிகவும் சிரம மானதாக உணர்வாய். ஏனெனில் நாம் அதை முழுதாக மறந்து விட்டோம் – ஆனால் உண்மையில் சுத்தமாக மறந்துவிட வில்லை. ஏனெனில் நாம் அதற்கு மாற்றுச் செய்து கொண்டே தான் இருக்கிறோம். தாயின் மார்பகங்களுக்கு சிகரெட்டை மாற்றாக வைத்துக் கொண்டுள்ளோம்; நீ அதை உறிஞ்சிக் கொண்டே இருக்கிறாய். அது முலைக் காம்பைத் தவிர வேறொன்றும் அல்ல, தாயின் மார்பகமும் அதன் முலைக் காம்பும் தான். அதோடு வெதுவெதுப்பான புகை உள்ளே பாயும் பொழுது, அது வெதுவெதுப்பான பாலைப் போல இருக்கிறது.

ஆகவே தாயின் மார்பகங்களை அவர்கள் விரும்பிய அளவு உறிஞ்ச அனுமதிக்கப்படாதவர்கள் எல்லாம் பின்னால் புகை

பிடிப்பார்கள். இது ஒரு மாற்று, ஆனால் மாற்றே போதும். நீ சிகெரெட்டை உறிஞ்சும்போது உறிஞ்சுதலாக மாறு. சிகெரெட்டை மற, புகை பிடிப்பவனை மற, புகைப்பதாகவே மாறிவிடு.

நீ உறிஞ்சும் பொருள் ஒன்று உள்ளது, உறிஞ்சுகிறவன் ஒருவன் அங்கிருக்கிறான், இவை இரண்டுக்கும் இடையேயுள்ள இயக்கம் உறிஞ்சுதல். உறிஞ்சுதலாக மாறு, இயக்கமாக மாறு. இதை முயற்சி செய், அப்போது நீ உனக்குச் சரியானதைக் கண்டு கொள்வாய்.

நீ தண்ணீர் குடிக்கிறாய், குளிர்ந்த தண்ணீர் உள்ளே போகிறது - குடித்தலாக மாறு. தண்ணீரைக் குடிக்காதே. தண்ணீரை மறந்துவிடு, உன்னையும் உன் தாகத்தையும் மறந்து விடு, வெறும் குடித்தலாக மாறு - அந்த இயக்கமாக மட்டும். அந்தக் குளிர்ச்சி, அந்தத் தொடுதல், அந்த நுழைதல், மேலும் அந்த இயக்கத்திற்குக் கொடுக்க வேண்டிய உறிஞ்சல், இவை களாக மாறிவிடு.

ஏன் கூடாது? என்ன நடக்கும்? நீ உறிஞ்சுதலாக மாறி னால், என்ன நடக்கும்? நீ உறிஞ்சுதலாக மாறிவிட முடிந்தால், உடனடியாக நீ வெகுளியாக மாறுவாய், முதல் நாள், புதிதாகப் பிறந்த குழந்தையைப் போல - ஏனெனில் அதுதான் முதல் இயக்கம். ஒரு வழியில் நீ பின்னே செல்வாய். ஆனால் அந்த ஏக்கம் உன்னிடம் இருக்கிறது. மனிதனின் ஜீவன் உறிஞ்சுவதற் காக ஏங்குகிறது. அவன் பல விதங்களில் முயற்சிக்கிறான். ஆனால் எதுவும் உதவுவதில்லை. ஏனெனில் முக்கியமானது விட்டுப் போகிறது. நீ வெறும் உறிஞ்சுதலாக மாறாமல், எதுவும் உதவ முடியாது. ஆகவே இதை முயற்சி செய்.

நான் இந்த முறையை ஒருவனுக்குக் கொடுத்தேன். அவன் பலவற்றையும் முயன்று பார்த்தவன்; அவன் பலபல முறை களை முயற்சித்துப் பார்த்திருக்கிறான். பிறகு அவன் என்னிடம் வந்தான், நான் அவனைக் கேட்டேன், ''இந்த மொத்த உலகத்தி லிருந்தும் ஒன்றே ஒன்றை மட்டும் தேர்ந்தெடுக்கச் சொல்லி நான்

சொன்னால், நீ எதைத் தேர்ந்தெடுப்பாய்?'' அதோடு நான் உடனடியாக அவனுடைய கண்களை மூடிக் கொள்ளச் சொல்லி, உடனே என்னிடம் சொல்லு, அதைப் பற்றி யோசிக்காதே என்றேன். அவன் பயந்தான், தயங்கினான். ஆகவே நான் அவனிடம் சொன்னேன், ''பயப்படாதே, தயங்காதே. வெளிப் படையாக என்னிடம் சொல்.''

அவன் சொன்னான், ''இது மடத்தனம், ஆனால் என் முன்னால் மார்பகங்கள் தோன்றின.''

பிறகு அவன் குற்றவுணர்ச்சி அடைய ஆரம்பித்தான், ஆகவே நான் சொன்னேன், ''குற்றவுணர்ச்சி அடையாதே. மார்பகத்தால் எதுவும் தவறில்லை; அவை மிகவும் அழகானவை களில் ஒன்று, ஆகவே எதற்குக் குற்றவுணர்ச்சி?''

ஆனால் அவன் சொன்னான், ''இது எப்போதும் என் மனதில் நிறைந்திருக்கிறது.'' மேலும் அவன் என்னிடம் சொன்னான், ''முதலில் தயவுசெய்து சொல்லுங்கள், அதன்பின் நீங்கள் உங்கள் முறையைப் பற்றி, உங்கள் யுக்தியைப் பற்றிச் சொல்லலாம்: முதலில் சொல்லுங்கள், நான் ஏன் பெண்களின் மார்பகங்களின் மேல் இவ்வளவு ஈடுபாடு கொண்டுள்ளேன்? எப்பொழுது நான் ஒரு பெண்ணைப் பார்த்தாலும் முதலில் நான் பார்ப்பது மார்பகங்களைத்தான். முழு உடம்பும் இரண்டாவது தான்.''

இது அவனைப் பொருத்தவரை மட்டுமல்ல, ஒவ்வொரு வரும் இப்படித்தான் – கிட்டத்தட்ட ஒவ்வொருவரும். மேலும் இது இயற்கையானது. ஏனெனில் தாயின் மார்பகம்தான் இந்தப் பேரண்டத்தில் முதல் தொடர்பு. இது அடிப்படையானது. பேரண்டத்துடன் ஏற்பட்ட முதல் தொடர்பு தாயின் மார்பகம் தான். அதனால்தான் மார்பகங்கள் அவ்வளவு வசீகரிக்கின்றன. அவை அழகாகத் தெரிகின்றன; அவை ஈர்க்கின்றன. அவை களுக்குக் காந்த சக்தி இருக்கிறது. அந்தக் காந்த சக்தி உன் உணர்வற்ற நிலையிலிருந்து வருகிறது. அதுதான் நீ தொடர்பு

கொண்ட முதலாவது, அதோடு அந்தத் தொடர்பு அன்புமிக்க தாயிருந்தது, அது அழகாக இருந்தது. அது உனக்கு உணவு, உடனடி சக்தி, அன்பு, இப்படி எல்லாவற்றையும் கொடுத்தது. அந்தத் தொடர்பு மிருதுவானது, வரவேற்பது, உபசரிப்பது. இது மனிதனின் மனதில் அப்படியே தங்கிவிட்டது.

ஆகவே நான் அந்த மனிதனிடம் சொன்னேன், ''இப்போது நான் உனக்கு ஒரு முறையைத் தருகிறேன்.'' நான் அவனுக்குக் கொடுத்த முறை இதுதான், எதையாவது உறிஞ்சு, பின் உறிஞ்சுதலாகவே ஆகிவிடு. நான் சொன்னேன், ''உன் கண்களை மூடிக்கொள். உன் தாயின் மார்பகங்களை அல்லது உனக்குப் பிடித்த யாரோ ஒருவரின் மார்பகங்களைக் கற்பனை செய்து கொள். கற்பனை செய்த பின் உண்மையான மார்பகங்கள் அங்கு இருப்பது போல் உறிஞ்ச ஆரம்பி. உறிஞ்சத் தொடங்கு.'' அவன் உறிஞ்சத் தொடங்கினான். மூன்று நாட்களில் அவன் மிக வேகமாக மிகப் பயித்தியக்காரத்தனமாக உறிஞ்சிக் கொண்டிருந்தான், அவன் அதனால் மிகவும் பூரிப்பு அடைந்தான். அவன் என்னிடம் சொன்னான், ''இது ஒரு பிரச்சனை ஆகி விட்டது – நான் நாள் முழுதும் உறிஞ்ச விரும்புகிறேன். அதோடு இது மிக அழகாக இருக்கிறது. இதனால் மிக ஆழமான மௌனம் உருவாகியுள்ளது.''

மூன்று மாதத்திற்குள் உறிஞ்சுதல் மிக மிக அமைதியான செயலாக மாறிவிட்டது. உதடுகள் நின்றுவிட்டன, அவன் எதையோ செய்துகொண்டிருக்கிறான் என்பதை உன்னால் யூகிக்கக்கூட முடியாது. ஆனால் உள்ளே உறிஞ்சுதல் ஆரம்பமாகி விட்டது. அவன் நாள் முழுவதும் உறிஞ்சிக் கொண்டிருந்தான். அது ஒரு மந்திரமாக, ஒரு ஜபமாக மாறிவிட்டது – ஒரு மந்திரத்தைச் சொல்லிக்கொண்டே இருப்பது.

மூன்று மாதங்களுக்குப் பிறகு அவன் என்னிடம் வந்து சொன்னான், ''ஏதோ புதிதாக எனக்கு நடக்கிறது. ஏதோ இனிப்பானது எனது தலையிலிருந்து நாக்கின் மீது இடைவிடாமல்

விழுந்து கொண்டிருக்கிறது. அது மிகவும் இனிப்பாகவும், மிகவும் சக்தியைக் கொடுப்பதாகவும் உள்ளது. அதனால் எனக்கு உணவே தேவைப்படுவதில்லை. பசி கொஞ்சம் கூட இல்லை. சாப்பிடுவது என்பது வெறும் சடங்காகிவிட்டது. நான் குடும்பத்தில் ஏதும் பிரச்சனை உண்டாகிவிடக் கூடாது என்பதற்காகவே ஏதோ சாப்பிடுகிறேன். ஆனால் என்னிடம் ஏதோவொன்று தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது. அது மிகவும் இனியது, வாழ்வு கொடுப்பது.''

நான் அவனைத் தொடரச் சொன்னேன். மறுபடியும் மூன்று மாதம் கழித்து ஒரு நாள் அவன் பித்தனைப் போல, என்னிடம் ஆடிக்கொண்டே வந்தான். அவன் சொன்னான், ''உறிஞ்சுதல் மறைந்துவிட்டது, ஆனால் நான் இப்போது வேறு மனிதன். நான் உங்களிடம் வந்த அதே மனிதன் அல்ல. எனக்குள் ஏதோ ஒரு கதவு திறந்துவிட்டது. ஏதோ உடைந்துவிட்டது. அதோடு எந்த ஆசையும் அங்கில்லை. இப்போது எனக்கு எதுவும் வேண்டாம் – கடவுள் கூட வேண்டாம், மோட்சம் கூட, விடுதலை கூட வேண்டாம். எனக்கு எதுவும் வேண்டாம். இப்போது எல்லாமே அது அது இருக்கும்படியே சரிதான். நான் அதை ஏற்கிறேன். நான் பரமானந்தமாய் இருக்கிறேன்.''

இதை முயற்சி செய். எதையாவது உறிஞ்சு, பின் உறிஞ்சுதலாக மாறு. இது பலருக்கு உதவலாம். ஏனெனில் இது மிகவும் அடிப்படையானது.

இன்று இது போதும்.



# கனவு காண்பதைக் கடந்துசெல்ல சாதனங்கள்

## கேள்விகள்

- ❖ கனவு காணும்பொழுது எப்படி உணர்வோடு இருப்பது?
- ❖ ஏற்கனவே அமைக்கப்பட்ட மேடையில் நடிகர்கள் தான் நாம் என்றால் எதற்காக முயற்சி செய்ய வேண்டும்?

★★★

ஒரு நண்பர் கேட்டிருக்கிறார்:

❖ "ஒருவனைக் கனவு காணும் பொழுது உணர்வோடு இருக்கச் செய்யும் வேறு சில உண்மைகளையும் நீங்கள் எங்களுக்கு விளக்க முடியுமா?

இது தியானத்தில் ஈடுபாடு கொண்ட எல்லோருக்குமே முக்கியமான ஒரு கேள்வி. ஏனெனில் தியானம் என்பதே உண்மையில் கனவு காணும் இயக்கத்தைக் கடந்து செல்வதே. நீ இடைவிடாது கனவு கண்டு கொண்டிருக்கிறாய் – இரவில் மட்டும் அல்ல, நீ உறங்கும்போது மட்டுமல்ல, நீ நாள் முழுவதும் கனவு கண்டுகொண்டு இருக்கிறாய். முதலில் இதைப் புரிந்துகொள்ள வேண்டும். நீ விழித்த பின்னும் நீ இன்னும் கனவு கண்டுகொண்டுதான் இருக்கிறாய். நாளின் எந்தச் சமயத்திலாவது உன் கண்களை மூடு. உடலைத் தளர்த்திக் கொள், அப்போது அங்குக் கனவு ஓடிக்கொண்டிருப்பதை நீ உணர்வாய். அது ஒருபோதும் மறைவதில்லை, நமது தினசரி நடவடிக்கைகளால் அது அமுக்க மட்டுமே படுகிறது. அது பகலில் உள்ள நட்சத்திரங்களைப் போன்றது. இரவில் உன்னால் நட்சத்திரங்களைப் பார்க்க முடியும். பகலில் உன்னால் அவைகளைப் பார்க்க முடியாது. ஆனால் அவை எப்பொழுதும் அங்கே இருக்கின்றன. அவை சூரிய ஒளியால் அமுக்கப்பட்டு விடுகின்றன, அவ்வளவே.

நீ ஒரு ஆழமான கிணற்றுக்குள் சென்றால், அப்போது பகலில் கூட வானத்தில் இருக்கும் நட்சத்திரங்களைப் பார்க்க முடியும். நட்சத்திரங்களைப் பார்க்க (ஒரு குறிப்பிட்ட அளவு இருள்) வேண்டும். ஆகவே ஒரு ஆழமான கிணற்றின் உள்ளே போய் அதன் அடியிலிருந்து மேலே பார். அப்போது பகலிலும் கூட உன்னால் நட்சத்திரங்களைப் பார்க்க முடியும். நட்சத்திரங்கள் அங்கே உள்ளன. இரவில் அவை அங்கே இருக்கின்றன. பகலில் அவை அங்கே இல்லை என்பதல்ல. அவை எப்பொழுதும் அங்கே இருக்கின்றன. இரவில் அவைகளைச்

சுலபமாக உன்னால் பார்க்க முடியும். பகலில் உன்னால் பார்க்க முடியாது. ஏனெனில் சூரிய ஒளி அதற்கு ஒரு தடையாக ஆகிவிடுகிறது.

கனவு காண்பதற்கும் இதுவே பொருந்தும். நீ உறங்கும் போது மட்டும் கனவு காண்கிறாய் என்பது உண்மையல்ல. உறங்குகையில் நீ கனவுகளைச் சுலபமாகப் பார்க்கலாம். ஏனெனில் பகலின் வேலைகள் எதுவும் அப்போது அங்கில்லை; ஆகவே உள்ளே நடக்கும் வேலைகளைப் பார்க்கவும் உணரவும் முடியும். நீ காலையில் எழும்பொழுது, கனவுகாணுதல் தொடர்ந்து உள்ளே நடந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால் அதே சமயம் நீ வெளி வேலைகள் செய்ய ஆரம்பித்து விடுகிறாய்.

இப்படி வேலை செய்ய ஆரம்பிப்பது, தினசரி வேலைகள், கனவு காண்பதை அமுக்கி வைக்கின்றன. கனவு காணுதல் அங்கிருக்கிறது. உன் கண்களை மூடு, ஒரு சாய்வு நாற்காலியில் உன்னைத் தளர்த்திக் கொள். அப்போது திடீரென்று நீ உணர முடியும்: அந்த நட்சத்திரங்கள் அங்கேதான் உள்ளன. அவை எங்கும் போய்விடவில்லை. கனவுகள் எப்பொழுதும் அங்கே தான் உள்ளன. அங்குத் தொடர்ந்து இடைவிடாமல் அது செயல் படுகிறது.

இரண்டாவது விஷயம்..... கனவு காண்பது தொடர்ந்து கொண்டிருக்கையில், நீ உண்மையிலேயே விழித்துவிட்டாய் என்று சொல்ல முடியாது. இரவில் நீ அதிக உறக்கத்தில் இருக்கிறாய், பகலில் நீ குறைந்த உறக்கத்தில் இருக்கிறாய். ஆகவே வித்தியாசம் இரண்டின் அளவைப் பொருத்ததே. ஏனெனில் கனவு காணுதல் இருக்கும்போது நீ விழித்து விட்டவனாகக் கூறுவது முடியாது. கனவு காணுதல் உணர்வு நிலையின் மீது ஒரு படலத்தை உருவாக்குகிறது. அந்தப் படலம் புகையைப் போல ஆகிவிடுகிறது – நீ அதனால் சூழப்படுகிறாய். நீ உண்மையாக விழிப்படைய முடியாது, நீ கனவு கண்டு கொண்டிருக்கும்போது, அது இரவானாலும் சரி பகலானாலும்

சரி. ஆகவே இரண்டாவது விஷயம்: எப்பொழுது அங்குக் கனவு காணுதல் இல்லையோ அப்பொழுதுதான் நீ விழிப்படைந்தவன் என்று சொல்ல முடியும்.

நாம் புத்தரை விழிப்புணர்வு பெற்ற ஒருவர் என்று அழைக்கிறோம். இது என்ன விழிப்புணர்வு பெறுதல்? இந்த விழிப்புணர்வு பெறுதல் என்பது உண்மையில் உள்ளே கனவு காண்பது நிற்பதுதான். உள்ளே எந்தக் கனவும் இல்லை. நீ அங்குப் போகிறாய், ஆனால் அங்கு எந்தக் கனவும் இல்லை. இது வானத்தில் நட்சத்திரங்களே இல்லாமல் போவது போல; அது சுத்தமான வெட்டவெளி ஆகிவிட்டது. கனவு காணுதல் இல்லாமல் போகும்போது, நீ தூய்மையான வெட்டவெளி ஆகிவிடுகிறாய்.

இந்தத் தூய்மை, இந்த அப்பாவித்தனம், இந்தக் கனவு காணுதல் இல்லாத உணர்வுநிலை, இதுதான் ஞானமடைதல், விழிப்புணர்வடைதல் என்று அறியப்படுகிறது.

உலகத்திலுள்ள எல்லா ஆன்மிக மார்க்கங்களும் பல நூற்றாண்டுகளாக, கிழக்கத்திய மற்றும் மேற்கத்திய நாடுகளைச் சேர்ந்தவை, மனிதன் தூக்கத்தில் இருக்கிறான் என்று சொல்லிக் கொண்டு இருக்கின்றன. ஜீஸஸ் இதைச் சொன்னார், புத்தர் இதைச் சொன்னார், உபநிஷத்துகள் இதைப்பற்றிப் பேசுகின்றன: மனிதன் உறக்கத்திலிருக்கிறான். ஆகவே இரவில் நீ உறங்கிக் கொண்டிருக்கும் போது நீ ஒப்பீடாக அதிக உறக்கத்திலிருக் கிறாய், பகலில் நீ குறைந்த உறக்கத்திலிருக்கிறாய் அவ்வளவு தான். ஆகவே ஆன்மிகம் சொல்கிறது, மனிதன் உறங்கிக் கொண்டிருக்கிறான். இதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இதன் அர்த்தம் என்ன? இந்த நூற்றாண்டில் வாழ்ந்த குருட்ஜீப், மனிதன் உறக்கத்திலிருக்கிறான் என்ற உண்மையை அதிகம் வலியுறுத்தினார். அவர் சொன்னார் ''உண்மையைச் சொல்வதென்றால், மனிதன் என்பதே ஒருவகைத் தூக்கம்தான். எல்லோரும் ஆழமான தூக்கத்திலிருக்கிறார்கள்.''

இப்படிச் சொல்வதற்கு என்ன காரணம்? உன்னால் அறிய முடியாது, நீ யார் என்பதை உன்னால் நினைவுபடுத்திக் கொள்ள முடியாது. நீ யார் என்று உனக்குத் தெரியுமா? நீ ஒரு ஆளை வீதியில் சந்தித்து அவனிடம் நீ அவன் யார் என்று கேட்கிறாய், அப்போது அவனால் பதில் சொல்ல முடியவில்லை என்றால் நீ என்ன எண்ணுவாய்? நீ அவனை ஒரு பயித்தியமென்றோ, குடிகாரன் என்றோ அல்லது தூங்கிக் கொண்டிருப்பவன் என்றோ தான் எண்ணுவாய். அவனால் அவன் யார் என்பதற்குப் பதில் சொல்ல முடியாவிட்டால், நீ அவனைப் பற்றி வேறென்ன நினைக்க முடியும்? ஆன்மிகப் பாதையில் எல்லோரும் அப்படித் தான். நீ யார் என்று உன்னால் பதில் சொல்ல முடியாது.

குருட்ஜீப் அல்லது ஜீஸஸ் அல்லது யாரோ ஒருவர் மனிதன் உறங்கிக் கொண்டிருக்கிறான் என்று சொல்லும்போது அதன் முதல் அர்த்தம் இதுதான். அதாவது உனக்கு உன்னைப் பற்றிய உணர்வு இல்லை. உனக்கு உன்னைத் தெரியாது; நீ உன்னை ஒருபோதும் சந்தித்ததில்லை. புற உலகத்தில் உனக்குப் பல விஷயங்கள் தெரியும், ஆனால் நீ அகத்தை அறியமாட்டாய். உனது மனதின் நிலை, நீ ஒரு சினிமா பார்க்கப் போயிருக்கும் போது உள்ள நிலைமைதான். திரையில் சினிமாப்படம் ஓடிக் கொண்டிருக்கிறது, நீ அதிலேயே மூழ்கிவிட்டாய். ஆகவே அந்த சினிமா, அந்தக் கதை, அந்தத் திரையில் தெரிவது, அவை மட்டுமே உனக்குத் தெரிந்த விஷயங்கள். அப்போது யாராவது உன்னை நீ யார் என்று கேட்டால், உன்னால் எந்தப் பதிலும் சொல்ல முடியாது.

கனவு காணுதல் என்பது வெறும் சினிமா – வெறும் சினிமாவே! இது மனம் உலகத்தைப் பிரதிபலிப்பதுதான். மனம் என்ற கண்ணாடியில் உலகம் பிரதிபலிக்கிறது; அது தான் கனவு காணுதல் என்பது. நீ அதில் மிகவும் ஆழமாக சம்பந்தப்படுத்திக் கொண்டுவிட்டாய், அதனுடன் மிகவும் அடையாளம் கொண்டு விட்டாய். ஆகவே நீ முற்றிலுமாக நீ யார் என்பதை மறந்து விட்டாய். இதுதான் உறக்கத்தில் இருக்கிறாய் என்பதன் அர்த்தம்:

கனவு காண்பவன் கனவு காண்பதில் தன்னை இழந்துவிடுவது. நீ உன்னைத் தவிர எல்லாவற்றையும் பார்க்கிறாய், நீ உன்னைத் தவிர எல்லாவற்றையும் உணர்கிறாய், நீ உன்னைத் தவிர எல்லா வற்றையும் அறிந்திருக்கிறாய். இந்தத் தன்னை அறியாமையே உறக்கம். கனவு காணுதல் முற்றிலுமாக நிற்காதவரை, நீ உன்னில் விழிப்புணர்வு அடைய முடியாது.

நீ சில நேரங்களில் உணர்ந்திருப்பாய், ஒரு படத்தை மூன்று மணி நேரம் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, திடீரென்று அந்தப் படம் முடிகையில் நீ மீண்டும் உனக்குள் வருவாய். நீ மூன்று நேரம் போய்விட்டதை நினைப்பாய், நீ இது ஒரு வெறும் சினிமா படம் மட்டுமே என்று நினைப்பாய். நீ அழுததை நினைத்துக் கொள்வாய்..... அந்த சினிமா உனக்குச் சோகமாக இருந்ததால் நீ அழுது கொண்டிருந்தாய் அல்லது நீ சிரித்துக் கொண்டு இருந்திருப்பாய் அல்லது வேறு ஏதாவது செய்து கொண்டு இருந்திருப்பாய். இப்போது நீ உன்னைப் பார்த்துச் சிரித்துக் கொள்கிறாய். நீ என்ன மடத்தனத்தைச் செய்திருக் கிறாய்! அது ஒரு வெறும் சினிமா, வெறும் கதை. திரையில் எதுவும் கிடையாது - வெறும் ஒளியும் நிழலும் செய்த விளையாட்டு, வெறும் மின்சார விளையாட்டு. இப்போது நீ சிரிக்கிறாய்: நீ உன்னிடம் திரும்ப வந்துவிட்டாய். ஆனால் அந்த மூன்று மணி நேரம் நீ எங்கே இருந்தாய்?

நீ உனது மையத்தில் இல்லை. நீ முற்றிலுமாக மேல்புறத்திற்குச் சென்று விட்டாய். சினிமா ஓடிக்கொண் டிருக்கும் இடத்திற்கு, அங்கு நீ போய் விட்டாய். நீ உன்னுடைய மையத்தில் இல்லை, நீ உன்னுடன் இல்லை. நீ வேறு எங்கோ இருந்தாய்.

இது கனவுகாண்கையில் நிகழ்கிறது; இதுவே வாழ்க்கை என்று நாம் சொல்வது. சினிமா மூன்று மணி நேரம் மட்டுமே ஓடுகிறது. ஆனால் இந்தக் கனவு காணுதல் பலபல, பலபல பிறவிகளாக ஓடிக்கொண்டிருக்கிறது. திடீரென்று இந்தக் கனவு காணுதல் நின்றால்கூட உன்னால் நீ யார் என்று அடையாளம்

தெரிந்து கொள்ள முடியாது. திடீரென்று நீ மிகவும் மயக்கம் வருவது போல், பயமாகக் கூட உணருவாய். நீ மறுபடியும் சினிமாவிற்கே நகர முயற்சி செய்வாய். ஏனெனில் அது தெரிந்தது. உனக்கு அதோடு பழக்கமிருக்கிறது, நீ அதோடு நன்றாகப் பொருந்திப் போயிருக்கிறாய்.

கனவு காணுதல் திடீரென்று நிற்பது நிகழ்வதற்கான வழிகள் உள்ளன. குறிப்பாக ஜென், இந்த ஜென் திடீரென ஞானமடையும் வழியாக அறியப்படுகிறது. இந்த நூற்றிப் பன்னிரண்டு யுக்திகளிலேயே அது போன்றவை உள்ளன. திடீர் விழிப்புணர்வை உனக்குக் கொடுக்கக்கூடிய பல யுக்திகள் உள்ளன. ஆனால் அது மிகவும் அதிகமாய் இருக்கலாம். அதோடு அதைத் தாங்கும் சக்தி உனக்கு இல்லாமல் போகலாம். நீ வெடித்து விடலாம். நீ இறந்தும் கூடப் போகலாம். ஏனெனில் நீ கனவு காணுதலோடு மிக நீண்ட காலம் வாழ்ந்து வருகிறாய். ஆகவே கனவு காணுதல் அங்கு இல்லையென்றால் உனக்கு நீ யார் என்ற நினைவும் உடனே வருவதில்லை.

இந்த முழு உலகமும் திடீரென்று மறைந்து, நீ மட்டும் தனியாக விடப்பட்டால், அது ஒரு மிகப்பெரிய அதிர்ச்சியாக இருக்கும். அதைத் தாங்க முடியாமல் நீ இறந்து போவாய். உணர்வுநிலையிலிருந்து கனவு காண்பது திடீரென்று மறைந்தால், அப்போதும் இதுவே தான் நடக்கும். உனது உலகம் மறைந்து போகும். ஏனெனில் உன்னுடைய உலகம் உன்னுடைய கனவுகாணுதலே.

நாம் உண்மையில் இந்த உலகத்தில் இல்லை. மாறாக, ''நமது உலகத்தில்'' நமக்கு வெளியே உள்ள எந்தப் பொருட்களும் இல்லை, நமது கனவுகள் மட்டுமே உள்ளது. ஆகவே ஒவ்வொருவரும் அவரவரது சொந்தக் கனவுலகத்தில் வாழ்கின்றனர்.

நினைவில் கொள், நாம் பேசிக் கொண்டிருப்பதைப் போல இது ஒரே உலகமல்ல. புவியியலின்படி இது ஒன்றுதான். ஆனால்

உளவியலின்படி எவ்வளவு மனங்கள் இருக்கின்றனவோ, அந்த அளவு உலகங்களும் இருக்கின்றன. ஒவ்வொரு மனமும் தானே ஒரு உலகமாக இருக்கிறது. இப்போது நீ கனவு கண்டுகொண் டிருப்பது மறைந்தால், உன்னுடைய உலகமும் மறைந்து போகும். கனவுகள் இல்லாமல் வாழ்வது உனக்கு மிகவும் கடினமாய் இருக்கும். அதனால்தான் திடீர் முறைகள் பொது வாகப் பயன்படுத்தப்படுவதில்லை, படிப்படியான முறைகளே பயன்படுத்தப்படுகின்றன.

இதைக் குறித்துக் கொள்வது நல்லது; படிப்படியான முறைகள் பயன்படுத்தப்படுவதற்குக் காரணம் படிப்படியாக வளர்வதே சாத்தியம் என்பதால் அல்ல. நீ இந்தக் கணத்திலேயே திடீரென்று முழு உணர்தலுக்கு குதிக்க முடியும். எந்தத் தடையும் கிடையாது; எந்தத் தடையும் ஒருபோதும் இருந்ததில்லை. நீ ஏற்கனவே அந்த உணர்வு நிலைதான், நீ இந்தக் கணத்திலேயே குதிக்க முடியும். ஆனால் அது ஆபத்தாக, விபத்தாக மாறி விடலாம். நீ அதைத் தாங்க முடியாமல் போகலாம். உனக்கு அது மிகவும் அதிகமாக ஆகிவிடலாம்.

நீ பொய்யான கனவுகளுடன் மட்டுமே ஒத்திசைவு கொண்டுள்ளாய். நிஜத்தை நீ பார்க்க முடியாது, நீ நேர் கொள்ள முடியாது. நீ ஒரு வீட்டிற்குள் வளரும் செடி – நீ உனது கனவுகளில் வாழ்கிறாய். அவை உனக்குப் பல வழிகளில் உதவுகின்றன. அவை வெறும் கனவுகளல்ல, உன்னைப் பொருத்தவரை அவை நிஜமானவை.

படிப்படியான முறைகள் பயன்படுத்தப்படுகின்றன. ஏனெனில் உணர்வதற்கு நேரம் தேவை என்பதால் அல்ல. உணர்ந்துகொள்ள நேரமே தேவையில்லை! உணர்ந்து கொள்ள கண்டிப்பாக நேரம் தேவையில்லை. உணர்ந்து கொள்வது ஏதோ எதிர்காலத்தில் அடையும் ஒன்றல்ல. ஆனால் படிப்படியான முறைகளின் மூலம் அதை நீ எதிர்காலத்தில் அடைவாய். ஆகவே படிப்படியான முறைகள் என்ன செய்கின்றன? அவை ''உணர்ந்து

கொள்வதை உணர்வதற்கு'' உனக்கு உண்மையில் உதவுவது இல்லை. அவை அதை நீ தாங்கிக் கொள்ளவே உதவி செய் கின்றன. அவை உன்னைத் திறனுள்ளவனாக வலிமையானவ னாக மாற்றுகின்றன. அதனால் அந்த நிகழ்வு நிகழும்போது நீ அதைத் தாங்கிக் கொள்ள முடியும்.

ஞானத்திற்குள் உன்னைக் கொண்டு செல்லும் பாதையில் உன்னை வலிந்து, கட்டாயமாகச் செலுத்தும் உடனடியான முறைகள் ஏழு உள்ளன. ஆனால் உன்னால் அவைகளைத் தாங்கிக் கொள்ள முடியாது. நீ குருடனாகிவிடலாம் – மிக அதிக ஒளி. அல்லது நீ திடீரென இறந்துவிடலாம் – மிக அதிக ஆனந்தம்.

இந்தக் கனவு காணுதலை, நம் உள்ளே இந்த ஆழமான கனவை, எப்படி இதைக் கடந்து செல்வது? இந்தக் கேள்வி, இதைக் கடந்து செல்வதற்கு மிகவும் அர்த்தம் உள்ளது: ''ஒருவன் கனவு காணும் பொழுது உணர்வோடு இருக்கச் செய்யும் வேறு சில உண்மைகளையும் நீங்கள் எங்களுக்கு விளக்க முடியுமா?''

நான் மேலும் இரண்டு முறைகளைப் பற்றிப் பேசுகிறேன். ஒன்று நேற்று நாம் விவாதித்தது. இன்று மேலும் இரண்டு அதை விடச் சுலபமானவை பற்றிப் பேசுவோம். முதலாவது நடிக்க ஆரம்பித்தல், இந்த முழு உலகமும் வெறும் ஒரு கனவு என்பது போல நடந்து கொள்ளல். நீ எதைச் செய்தாலும், அது ஒரு கனவென்பதை நினைவில் கொள், சாப்பிடும் பொழுது, அது ஒரு கனவென்று நினைவில்கொள், நடக்கும்போது அது ஒரு கனவென்று நினைவில் கொள், நீ விழித்திருக்கும் வேளையில் உனது மனம் இடைவிடாது நினைவில் கொள்ளட்டும், அதாவது எல்லாமே கனவுதான். இந்த உலகத்தை மாயை, கற்பனை, கனவு என்று சொல்லும் காரணம் இதுதான்.

இது ஒரு தத்துவபூர்வமான விவாதமல்ல. துரதிர்ஷ்ட வசமாக சங்கரா ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு, ஏனைய மேற்கத்திய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்ட போது, அவர்

ஒரு வெறும் தத்துவவாதியாகப் புரிந்துகொள்ளப்பட்டார். இது மிகவும் தவறாகப் புரிந்து கொள்வதற்குக் காரணமானது. மேற்கத்திய நாட்டில் தத்துவவாதிகள் உண்டு – உதாரணமாக பெர்க்லே – அவர் சொல்கிறார் உலகம் வெறும் கனவு, மனதின் கற்பனை. ஆனால் இது ஒரு தத்துவரீதியான கருத்து. பெர்க்லே இதை ஒரு கோட்பாடாகவே முன்மொழிந்தார்.

ஆனால் சங்கரா இந்த உலகத்தைக் கனவு என்று சொல்லும் போது அது தத்துவரீதியானது அல்ல, ஒரு கோட்பாடு அல்ல. சங்கரா இதை ஒரு உதவியாக முன்மொழிகிறார், ஒரு குறிப்பிட்ட தியானத்திற்கு உதவியாக இதைச் சொல்கிறார். அந்தத் தியானம் இதுதான்: நீ கனவு காணும் பொழுது அது கனவு என்று நினைவு கொள்ள விரும்பினால் நீ விழித்திருக்கும் பொழுதே ஆரம்பிக்க வேண்டும். சாதாரணமாக, நீ கனவு காணும்பொழுது அது ஒரு கனவு என்று உன்னால் நினைவு கொள்ள முடியாது, நீ அதை ஒரு நிஜமாகத்தான் நினைப்பாய்.

நீ அதை ஏன் நிஜம் என்று நினைக்க வேண்டும்? ஏனெனில் முழுப் பகலிலும் நீ எல்லாவற்றையும் நிஜமென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். அது உனது அணுகுமுறையாக, நிலையான அணுகுமுறையாக மாறிவிட்டது. நீ விழித்திருக்கும் பொழுது குளிக்கிறாய் – அது நிஜமானது. நீ விழித்திருக்கும் பொழுது சாப்பிடுகிறாய் – அது நிஜமானது. நீ விழித்திருக்கும் பொழுது ஒரு நண்பனுடன் பேசுகிறாய் – அது நிஜமானது. முழுப் பகலிலும், முழு வாழ்விலும் நீ நினைப்பது எதுவாக இருந்த போதிலும், உனது அணுகுமுறை அது நிஜமானது என்பதாகவே இருக்கிறது. இது நிலையானதாகி விடுகிறது. இது மனதின் நிலையான அணுகுமுறையாக மாறிவிடுகிறது.

ஆகவே இரவில் நீ கனவு காணும்போது, அதே அணுகுமுறை தொடர்ந்து வேலை செய்கிறது. அதாவது இது நிஜம் என்பது. ஆகவே நாம் முதலில் அலசுவோம்: கனவு காண்பதற்கும் நிஜத்திற்கும் இடையே கண்டிப்பாக ஏதாவது

ஒற்றுமை இருக்க வேண்டும்; இல்லாவிட்டால் இந்த அணுகு முறை ஏதோ ஒரு விதத்தில் கடினமாகவே இருக்கும்.

நான் உன்னைப் பார்க்கிறேன். பின் நான் எனது கண்ணை மூடிக் கொண்டு ஒரு கனவிற்குள் போகிறேன். அப்போது நான் உன்னை என்னுடைய கனவில் பார்க்கிறேன். இந்த இரண்டு பார்த்தலிலும் எந்த வித்தியாசமும் இல்லை. நான் உன்னை நிஜமாகப் பார்க்கும்போது, நான் என்ன செய்கிறேன்? உனது படம் எனது கண்ணில் பிரதிபலிக்கிறது. நான் உன்னைப் பார்ப்ப தில்லை. உனது படம் எனது கண்ணில் பிம்பமாக விழுகிறது. பிறகு அந்தப் படம் ஒரு புதிரான இயக்கத்தின் மூலமாக எடுத்துச் செல்லப்படுகிறது – இது எப்படி என்று சொல்லக்கூடிய நிலைமைக்கு இன்னும் விஞ்ஞானம் வளரவில்லை. அந்தப் படம் ரசாயனத்தின் மூலமாக எடுத்துச் செல்லப்பட்டு தலையின் உள்ளே எங்கேயோ கொண்டு வரப்படுகிறது. ஆனால் விஞ்ஞானத்தால் இன்னும் எங்கே என்பதைச் சொல்ல முடியவில்லை – மிகச் சரியாக எங்கே இது நடக்கிறது என்பதை. இது கண்களில் நடப்பதில்லை; கண்கள் வெறும் ஜன்னல்களே. நான் கண்களினால் உன்னைப் பார்ப்பதில்லை, நான் உன்னைக் கண்களின் மூலமாகப் பார்க்கிறேன்.

கண்களில் நீ பிரதிபலிக்கிறாய். நீ வெறும் படமாயிருக்க லாம்; நீ நிஜமாயிருக்கலாம், நீ கனவாயிருக்கலாம். நினைவில் கொள், கனவுகள் முப்பரிமாணம் கொண்டவை. நான் ஒரு படத்தை அடையாளம் காண முடியும். ஏனெனில் ஒரு படம் இரு பரிமாணமே உள்ளது. கனவுகள் முப்பரிமாணம் உள்ளவை. ஆகவே அவை மிகச் சரியாக உன்னைப் போலவே தெரிகின்றன. பார்ப்பது எதுவாயிருந்தாலும் அது நிஜமா அல்லது நிஜ மில்லையா என்பதைக் கண்களால் சொல்ல முடியாது. தீர்மானிக்க எந்த வழியும் கண்களில் இல்லை; கண்கள் தீர்மானிப்பவை அல்ல.

பிறகு அந்தப் படம் ரசாயனத் தகவல்களாக மாற்றப் படுகிறது. இந்த ரசாயனத் தகவல்கள் மின்சார அலைகள்

போன்றவை; அவை தலையினுள் எங்கோ போகின்றன. கண்கள் தொடர்பு கொள்ளும் அந்தப் பார்க்கும் பகுதியாக உள்ள புள்ளி எது என்பது இன்றுவரை தெரியவில்லை. அலைகள் மட்டுமே தரையை அடைகின்றன. பின் அவை புரிந்து கொள்ளப் படுகின்றன. பிறகு மறுபடியும் இதே முறையில் செயல்படுவதன் மூலம் நான் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்கிறேன்.

நான் எப்போதும் உள்ளே இருக்கிறேன், நீ எப்போதும் வெளியே இருக்கிறாய். எனவே சந்திப்பு நிகழ்வதேயில்லை. ஆகவே நீ நிஜமா வெறும் கனவா என்பது ஒரு பிரச்சனையே அல்ல. இந்தக் கணத்திலேயே கூட, நீ நிஜமாக இங்கு இருக் கிறாயா அல்லது நான் கனவு காண்கிறேனா என்பதைத் தீர்மானிக்க எந்த வழியும் இல்லை. என்னைக் கேட்டுக் கொண்டிருக்கும் போது, நீ நிஜமாகவே என்னைக் கேட்டு கொண்டிருக்கிறாய், நீ கனவு கண்டு கொண்டிருக்கவில்லை என்று எப்படி உன்னால் கூற முடியும்? ஒரு வழியும் இல்லை. அதனால்தான் நீ நாள் முழுவதும் கடைபிடிக்கும் அணுகுமுறை இரவிற்கும் எடுத்துச் செல்லப்பட்டு விடுகிறது. அப்போது நீ கனவு காணும் வேளையிலும் அதை நீ நிஜமென்று எடுத்துக் கொள்கிறாய்.

எதிரானதை முயற்சி செய்; இதுவே சங்கரா சொன்னதன் பொருள். அவர் இந்த உலகம் முழுவதும் மாயை என்று சொன்னார், அவர் இந்த முழு உலகமும் ஒரு கனவு காணுதலே என்று சொன்னார் – இதை நினைவில் கொள். ஆனால் நாம் மடத்தனமான மக்கள். சங்கரா, ''இது ஒரு கனவு'' என்று சொன்னால் உடனே நாம் சொல்கிறோம், ''எதைச் செய்வதற்கும் இனி என்ன தேவை? இது வெறும் ஒரு கனவு என்றால் பின் சாப்பிட தேவை இல்லை. ஏன் சாப்பிட்டுக் கொண்டே இதை ஒரு கனவு என்றும் நினைக்கிறோம்? சாப்பிடாதே!'' ஆனால் இப்போது நினைவில் கொள் – நீ பசியை உணரும்போது, அது ஒரு கனவு. அல்லது சாப்பிடு, பிறகு நீ அதிகமாக சாப்பிட்டு விட்டதாக உணரும்போது நீ நினைவில் கொள், இது ஒரு கனவு.

சங்கரா உன்னிடம் கனவை மாற்றும்படி சொல்வதில்லை, நினைவில் கொள், ஏனெனில் கனவை மாற்றும் முயற்சியும் மறுபடியும் அது உண்மை என்ற பொய்யான நம்பிக்கையின் அடிப்படையிலேயே விளைகிறது; இல்லாவிட்டால் எதையும் மாற்றுவதற்கு எந்தத் தேவையும் இல்லை. சங்கரா சொல்கிறார், அதாவது எது எப்படி இருந்தாலும் அது கனவே.

நினைவில் கொள்: அதை மாற்ற எதுவும் செய்யாதே, அதை இடைவிடாது நினைவில் கொள்வதை மட்டும் செய். நீ செய்வது எதுவாக இருந்தாலும் அது ஒரு கனவு மட்டுமே என்பதை மூன்று வாரங்களுக்கு இடைவிடாமல் நினைவில் வைத்துக் கொள்ள முயற்சி செய். ஆரம்பத்தில் இது மிகவும் கடினமாக இருக்கும். நீ மறுபடியும் மறுபடியும் மனதின் பழைய போக்கிலேயே விழுவாய். நீ இது நிஜம் என்று எண்ண ஆரம்பித்துவிடுவாய். நீ, ''இது ஒரு கனவு'' என்று உனக்கு நினைவுபடுத்திக் கொள்ளத் தொடர்ந்து உன்னை விழிப்புணர் வோடு வைத்துக்கொள்ள வேண்டும். மூன்று வாரங்களுக்குத் தொடர்ந்து நீ இந்த அணுகுமுறையைக் கடைபிடிக்க முடிந்தால், பிறகு நான்காவது ஐந்தாவது வாரங்களில், எந்த இரவில் நீ கனவு காணும்போது வேண்டுமானாலும் திடீரென்று உன் நினைவுக்கு வரலாம், ''இது ஒரு கனவு'' என்று.

உணர்வு நிலையோடு விழிப்பு நிலையோடு கனவுகளில் ஊடுருவ இது ஒரு வழி. நீ இரவில் கனவு காணும் வேளையில் அது ஒரு கனவு என்பதை நினைவு கொள்ள முடிந்தால், பிறகு பகலிலும் இது ஒரு கனவு என்பதை நினைவில் கொள்ள எந்த முயற்சியும் உனக்குத் தேவை இல்லை. நீ அதை அறிந்து கொள்வாய்.

ஆரம்பத்தில் நீ இதைப் பயிற்சி செய்யும்போது இது ஒரு பொய் – நம்பிக்கையை ஏற்படுத்துவதாக இருக்கும். நீ வெறும் நம்பிக்கையில் மட்டுமே துவங்க வேண்டும்.....'' ''இது ஒரு கனவு'' என்று. ஆனால் நீ இது ஒரு கனவு என்று நீ கனவு காணும்

போது நினைவு கொள்கையில், இது உண்மையானதாக ஆகிறது. பிறகு பகலில், நீ காலையில் எழும் பொழுது நீ தூக்கத்திலிருந்து எழுந்திருப்பதாக உணர மாட்டாய், நீ ஒரு கனவு காண்பதிலிருந்து மற்றொன்றுக்கு எழுந்திருப்பதாகவே நீ உணர்வாய். பிறகு இதுவும் உண்மையானதாக ஆகிவிடும். இப்படி இருபத்தி நான்கு மணி நேரமும் கனவு காண்பதாக மாறிவிட்டால், அதோடு நீ அதை நினைவு கொள்ளவும் உணரவும் முடிந்தால், நீ உனது மையத்தில் நின்று கொண்டிருப்பவன் ஆவாய். பின் உனது உணர்வு நிலை இருமுனை கொண்டதாக மாறியிருக்கும்.

நீ கனவுகளை உணர்கிறாய், மேலும் உன்னால் அவைகளைக் கனவுகள் என்று உணர முடிந்தால் நீ கனவுகாண்பவனையும் உணர ஆரம்பிப்பாய் – உள்புறத்தை, அகத்தை. நீ கனவுகளை நிஜம் என்று எடுத்துக் கொண்டால், உன்னால் அகத்தை உணர முடியாது. சினிமா உண்மையானதாக மாறிவிடும்போது, நீ உன்னை மறந்துவிடுகிறாய். சினிமாப் படம் முடியும்பொழுது, அது நிஜமல்ல என்பதை நீ உணரும்போது, உன்னுடைய நிஜ இயல்பு வெளிவருகிறது, உடைத்துக் கொண்டு வருகிறது; நீ உன்னை உணர முடிகிறது. இது ஒரு வழி.

இது இந்தியாவின் மிகப் பழமையான முறைகளில் ஒன்று. அதனால்தான் நாம் இந்த உலகம் நிஜமல்ல என்று வலியுறுத்தி வந்தோம். நாம் இதைத் தத்துவரீதியாகச் சொல்லவில்லை; நாம் இந்த வீடு மாயை, ஆகவே நீ இதன் சுவர்களுக்குள் புகுந்து வரலாம் என்று சொல்லவில்லை. நாம் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை! நாம் இந்த வீடு மாயை என்று சொல்லும் பொழுது, அது ஒரு சாதனம். இது அந்த வீட்டை எதிர்த்துச் செய்யும் விவாதம் அல்ல.

பர்க்லே இந்த உலகம் முழுவதும் வெறும் ஒரு கனவு என்று முன்மொழிந்தார். ஒருநாள் காலையில் அவர் டாக்டர் ஜான்சனுடன் நடந்து கொண்டிருந்தார். டாக்டர் ஜான்சன் ஒரு அசைக்க முடியாத யதார்த்தவாதி. ஆகவே பர்க்லே சொன்னார்,

"எனது கோட்பாட்டைப் பற்றிக் கேள்விப்பட்டீர்களா? நான் அதை உருவாக்கிக் கொண்டிருக்கிறேன். நான் இந்த முழு உலகமும் நிஜமல்ல என்று நினைக்கிறேன். அதோடு இது நிஜம் என்பதை நிரூபிக்கவும் முடியாது. மேலும் இது நிஜம்தான் என்று சொல்பவர்கள் தலையிலேயே அதை நிரூபிக்கும் சுமை இருக்கிறது. நான் இது நிஜமல்ல என்று சொல்கிறேன் – வெறும் கனவு போன்றது என்கிறேன்."

ஜான்சன் ஒரு தத்துவவாதி அல்ல. ஆனால் அவர் மிகவும் கூர்மையான தர்க்க மனம் கொண்டவர். அவர்கள் வீதியில் இருக்கிறார்கள், ஆளில்லாத வீதியில் காலை நேரத்தில் நடந்து கொண்டிருக்கிறார்கள். ஜான்சன் ஒரு கல்லைக் கையில் எடுத்து பெர்க்லேயின் காலைப் பார்த்து அதனால் அடித்தார். இரத்தம் வர ஆரம்பித்தது, பெர்க்லே அலறினார். ஜான்சன் சொன்னார், "இந்தக் கல் ஒரு வெறும் கனவு என்றால் நீங்கள் ஏன் அலறுகிறீர்கள்? நீங்கள் சொல்வது எதுவாயிருந்த போதிலும், நீங்கள் கல் உண்மையானது என்பதை நம்புகிறீர்கள். நீங்கள் சொல்வது ஒன்றாகவும், நீங்கள் நடந்து கொள்வது வேறு விதமாகவும், அதற்கு எதிராகவும் இருக்கிறது. உங்கள் வீடு வெறும் கனவு என்றால், பின் நீங்கள் எங்குத் திரும்பிப் போகிறீர்கள்? இந்தக் காலைநேர நடைக்குப்பின் நீங்கள் எங்கே திரும்பிப் போகிறீர்கள்? உங்கள் மனைவி வெறும் கனவு என்றால், நீங்கள் மறுபடியும் அவர்களைச் சந்திக்க முடியாது."

யதார்த்தவாதிகள் எப்பொழுதும் இந்த வழியிலேயே விவாதம் செய்து வருகின்றனர். ஆனால் அவர்கள் சங்கராவுடன் இந்த வழியில் விவாதம் செய்ய முடியாது. ஏனெனில் அவருடையது தத்துவரீதியான கோட்பாடு அல்ல. அது யதார்த்தத்தைப் பற்றி எதுவும் சொல்வதில்லை; அது பேரண்டத்தைப் பற்றிய எதையும் முன்மொழிவதில்லை. பதிலாக, அது உன் மனத்தை மாற்றும் ஒரு சாதனம், அடிப்படையில் நிலைத்துள்ள அணுகு முறையை மாற்றுவது. அதன் மூலம் இந்த உலகத்தை வேறு

விதமாக, முற்றிலும் வேறுவிதமாக உன்னைப் பார்க்கச் செய்வது.

இது தான் பிரச்சனை, இந்தியச் சிந்தனைக்குத் தொடர்ந்து வரும் பிரச்சனை – ஏனெனில் இந்தியச் சிந்தனைக்கு எல்லாமே தியானத்திற்கான சாதனங்கள் மட்டுமே. நமக்கு அது உண்மையா, பொய்யா என்பதில் அக்கறையில்லை. நாம், மனிதனை மாற்றுவதற்கு அது பயன்படுவதைப் பற்றியே அக்கறை கொண்டுள்ளோம்.

இது மேற்கத்திய மனத்திலிருந்து மிகவும் வேறுபட்டது. அவர்கள் ஒரு கோட்பாட்டை முன்மொழியும் போது அவர்களுடைய அக்கறை, அது உண்மையா, உண்மையில்லையா, அதைத் தர்க்கரீதியாக நிரூபிக்க முடியுமா, முடியாதா என்பதிலேயே இருக்கிறது. நாம் எதையாவது முன்மொழியும்போது நமது அக்கறை, அதன் உண்மையில் இருப்பதில்லை, மாறாக அதைப் பயன்படுத்தலைப் பற்றி, அதனுடைய திறனைப் பற்றி, அது மனித மனத்தை மாற்ற முடியக்கூடிய ஆற்றலைப் பற்றியே உள்ளது. அது உண்மையாய் இருக்கலாம், அது உண்மையில்லாததாய் இருக்கலாம். பார்க்கப் போனால், அது இரண்டுமல்ல – அது ஒரு வெறும் சாதனம்.

நீ சிறையிலிருக்கிறாய். நான் வெளியே மலர்களைப் பார்க்கிறேன். காலையில் சூரியன் எழுகின்றது. எல்லாம் மிகவும் அழகாக இருக்கின்றன. நீ ஒருபோதும் வெளியே வந்தது இல்லை, நீ ஒருபோதும் மலர்களைப் பார்த்ததில்லை. மேலும் நீ ஒருபோதும் காலைச் சூரியனைப் பார்த்ததில்லை. நீ ஒருபோதும் திறந்த வானத்தைப் பார்த்ததில்லை; உனக்கு அழகு என்றால் என்னவென்று தெரியாது. நீ மூடிய சிறைக்குள் வாழ்ந்து விட்டாய். நான் உன்னை வெளியே அழைத்துவர விரும்புகிறேன். நீ திறந்த வானத்தின் கீழே வந்து இந்த மலர்களைச் சந்திக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். நான் எப்படி இதைச் செய்வது?

உனக்கு மலர்களைத் தெரியாது. நான் மலர்களைப் பற்றிப் பேசினால், நீ நினைக்கிறாய், ''அவருக்குப் பயித்தியம் பிடித்து விட்டது. மலர்களே கிடையாது.'' நான் காலைச் சூரியனைப் பற்றிப் பேசினால், நீ நினைக்கிறாய், ''அவர் ஒரு தீர்க்கதரிசி. அவர் கனவுகளையும் தோற்றங்களையும் பார்க்கிறார். அவர் ஒரு கவிஞர்.'' நான் திறந்த வானத்தைப் பற்றிப் பேசினால், நீ சிரிப்பாய். நீ சிரிக்க ஆரம்பிப்பாய், ''எங்கே அந்தத் திறந்த வானம்? வெறும் சுவர்கள், சுவர்கள், சுவர்கள் தான் எங்கும் என்பாய்.''

ஆகவே நான் என்ன செய்வது? நீ புரிந்துகொள்ளும் படியான ஏதோவொரு சாதனத்தை நான் கண்டுபிடிக்க வேண்டும். மேலும் அது நீ வெளியேற உதவுவதாய் இருக்க வேண்டும். ஆகவே நான் வீடு தீப்பற்றிக் கொண்டதாகச் சொல்லிக் கொண்டு நானும் ஓட ஆரம்பிக்கிறேன். இது தொற்றிக்கொள்கிறது. நீயும் என்னோடு ஓட ஆரம்பித்து வெளியே வந்துவிடுகிறாய். அதன்பின் நீ அறிந்து கொள்வாய், அதாவது நான் கூறியது உண்மையோ, பொய்யோ அல்ல. அது ஒரு வெறும் சாதனம். பிறகு நீ மலர்களை அறிந்து கொள்வாய் அதன்பின் உன்னால் என்னை மன்னித்துவிட முடியும்.

புத்தர் இதைச் செய்தார், மகாவீரர் இதைச் செய்தார், சிவா இதைச் செய்தார், சங்கரா இதைச் செய்தார். நம்மால் அவர்களைப் பின்னால் மன்னித்துவிட முடியும். நாம் எப்பொழுதுமே அவர்களை மன்னித்துவிடுகிறோம். ஏனெனில் ஒருமுறை நாம் வெளியே வந்தவுடன் நமக்கு அவர்கள் ஏன் இப்படிச் செய்தார்கள் என்பது தெரிந்துவிடுகிறது. பிறகு நாம் புரிந்து கொள்கிறோம், அவர்களுடன் விவாதிப்பது பயனற்றது. ஏனெனில் அது விவாதத்திற்குரிய கேள்வியே அல்ல. நெருப்பு எங்குமில்லை. ஆனாலும் நாம் அந்த மொழியையே புரிந்து கொள்கிறோம். மலர்கள் இருக்கின்றன, ஆனால் நம்மால் மலர்களின் மொழியைப் புரிந்துகொள்ள முடியாது. இந்தக் குறியிடுகள் நம்மைப் பொருத்தவரை அர்த்தமற்றன.

இது ஒரு வழி. இதைத் தவிர இன்னொரு இரண்டாவது வழி இருக்கிறது, அது இதன் மறு துருவம். இந்த முறை ஒரு துருவம்; மற்றொரு முறை இதே விஷயத்தின் மறு துருவம். இந்த முறை எல்லாவற்றையும் ஒரு கனவாக உணருவதற்கு ஆரம்பிப்பது. மற்றொரு முறை இந்த உலகத்தைப் பற்றி எதுவுமே நினைக்காமல், மாறாகத் தொடர்ந்து இடைவிடாமல் 'நான் இருக்கிறேன்' என்பதை நினைவில் வைத்திருத்தல்.

குருட்ஜிப் இந்த இரண்டாவது முறையைப் பயன்படுத்தினார். இந்த இரண்டாவது முறை சூபி மரபிலிருந்து, இஸ்லாமிலிருந்து வந்தது. அவர்கள் இதன் மேல் மிக ஆழமாக வேலை செய்துள்ளனர்: நினைவில் கொள் ''நான் இருக்கிறேன்'' – நீ என்ன செய்து கொண்டிருந்தாலும். நீ தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கிறாய், நீ உணவு சாப்பிட்டுக் கொண்டிருக்கிறாய் – நினைவில் கொள், ''நான் இருக்கிறேன்.'' சாப்பிட்டுக் கொண்டே நினைவில் வைத்துக் கொண்டேயிரு, ''நான் இருக்கிறேன், நான் இருக்கிறேன்.'' இதை மறந்து விடாதே! இது கடினம், ஏனெனில் உனக்கு ஏற்கனவே நீ இருக்கிறாய் என்று தெரியும் என்று நீ நினைக்கிறாய். ஆகவே இதை நினைவில் வைத்துக் கொண்டேயிருக்க என்ன தேவை? நீ ஒருபோதும் இதை நினைவு வைத்துக்கொள்ள மாட்டாய். ஆனால் இது மிக மிக ஆற்றலுள்ள யுக்தி.

நடந்து கொண்டிருக்கும் பொழுது நினைவில் கொள், ''நான் இருக்கிறேன்.'' நடத்தல் அங்கு இருக்கட்டும், தொடர்ந்து நடந்து கொண்டிரு, ஆனால் இடைவிடாது இந்த சுய–நினைவு கொள்ளுதலாகிய ''நானிருக்கிறேன், நானிருக்கிறேன், நானிருக்கிறேன்'' என்பதில் நிலைகுத்தி இரு. இதை மறந்துவிடாதே. நீ என்னைக் கேட்டுக் கொண்டிருக்கிறாய் – இதை இங்கேயே செய். நீ என்னைக் கேட்டுக்கொண்டிருக்கிறாய். இதில் ஒரேயடியாக கலந்துவிடாதே, அடையாளம் கொள்ளாதே, சம்பந்தம் கொள்ளாதே. நான் சொல்வது எதுவாக இருந்தாலும், நினைவில் கொள், தொடர்ந்து உன்னை நினைவில் கொள். கேட்டல் அங்கு

இருக்கிறது. சொற்கள் அங்கு உள்ளன, யாரோ பேசிக் கொண்டிருக்கிறார்கள், நீ இருக்கிறாய் – ''நானிருக்கிறேன், நானிருக்கிறேன், நானிருக்கிறேன்.'' இந்த ''நானிருக்கிறேன்'' என்பதைப் பற்றிய விழிப்புணர்வு எப்போதும் இருக்கட்டும்.

இது மிகவும் கடினம். நீ ஒரே ஒரு நிமிடத்திற்குக் கூடத் தொடர்ந்து நினைவு வைத்துக்கொள்ள முடியாது. இதை முயற்சி செய். உனது கடிகாரத்தை உன் கண்களின் முன்னே வை, பிறகு வினாடி முள்ளைப் பார். ஒரு வினாடி, இரண்டு வினாடி, மூன்று வினாடி...... தொடர்ந்து அதைப் பார். இரண்டு காரியங்கள் செய்: வினாடி முள்ளின் அசைவைப் பார்த்துக் கொண்டேயிரு. அதே சமயம் தொடர்ந்து ''நானிருக்கிறேன், நானிருக்கிறேன்'' என்பதை நினைவில் வைத்திரு. ஐந்து அல்லது ஆறு வினாடிகளில் நீ மறந்து விட்டதை நீ உணர்வாய். திடீரென்று நீ நினைத்துக்கொள்வாய், ''பல வினாடிகள் சென்று விட்டன. ஆனால் நான் ''நானிருக்கிறேன்'' என்பதை நினைவு கொள்ளவில்லையே.''

ஒரு முழு நிமிடம் நினைவில் வைத்துக் கொள்வது கூட ஒரு அற்புதம்தான். மேலும் உன்னால் ஒரு நிமிடத்திற்கு நினைவில் வைத்துக்கொள்ள முடிந்தால், இந்த யுக்தி உனக்கானது. பின் அதைச் செய். இதன் மூலம் கனவுகளைக் கடந்து உன்னால் போக முடியும். மேலும் கனவுகளைக் கனவுகளென்று அறிந்து கொள்வதும் முடியும்.

இது எப்படி வேலை செய்கிறது? நீ பகல் முழுவதும் ''நானிருக்கிறேன்'' என்பதை நினைவுகொள்ள முடிந்தால், பின் இது உன் கனவிலும் புகுந்து விடும். அப்போது நீ கனவு கண்டு கொண்டிருக்கும் போது, தொடர்ந்து நீ ''நானிருக்கிறேன்'' என்பதை நினைவு கொள்வாய். நீ கனவில் ''நானிருக்கிறேன்'' என்பதை நினைவு கொள்ள முடிந்தால், திடீரென்று அந்தக் கனவு ஒரு வெறும் கனவாக ஆகி விடுகிறது. அதன்பின் கனவு உன்னை ஏமாற்ற முடியாது, அதன்பின் கனவை உண்மையென உணர முடியாது. இது தான் இது இயங்கும் முறை: கனவு உண்மை

யென உணரப்படுகிறது. ஏனெனில் நீ சுய-நினைவு கொண்டவனாய் இருப்பதில்லை, நீ ''நானிருக்கிறேன்'' என்பதில்லாமல் இருக்கிறாய். தன்னை நினைவு கொள்ளாமலிருக்கும் பொழுது, கனவு உண்மையாக மாறிவிடுகிறது. தன்னை நினைவு கொண்டிருந்தால், அப்போது உண்மை, நிஜமென்று அழைக்கப்படுவது, ஒரு கனவாக மாறிவிடுகிறது.

இதுதான் கனவு காணுதலுக்கும் நிஜத்திற்கும் உள்ள வேறுபாடு. தியானரீதியான மனத்திற்கு அல்லது தியான விஞ்ஞானத்தின்படி, இதுதான் ஒரே வித்தியாசம். நீ இருந்தால், அப்போது முழு நிஜமும் வெறும் ஒரு கனவு. நீ இல்லையென்றால், அப்போது கனவு காண்பதே நிஜமாக மாறிவிடுகிறது.

நாகார்ஜுனா சொல்கிறார், ''இப்போது நானிருக்கிறேன், அந்த உலகம் இல்லை. நான் இல்லாத பொழுது, அந்த உலகம் இருந்தது. ஏதோ ஒன்றுதான் இருக்க முடியும்.'' இதன் அர்த்தம் இந்த உலகம் மறைந்துவிட்டது என்பதல்ல. நாகார்ஜுனா இந்த உலகத்தைப் பற்றிப் பேசவில்லை, அவர் கனவு காணும் உலகத்தைப் பற்றிப் பேசுகிறார். ஒன்று நீயிருக்க முடியும் அல்லது கனவுகள் இருக்க முடியும் – இரண்டும் இருக்க முடியாது.

ஆகவே முதல் படி, தொடர்ந்து இடைவிடாமல் ''நான் இருக்கிறேன்'' என்பதை நினைவு வைத்துக் கொண்டே இருப்பது; வெறும் ''நானிருக்கிறேன்.'' ''ராமா'' என்று சொல்லாதே, ''ஷ்யாம்'' என்று சொல்லாதே. எந்தப் பெயரையும் பயன்படுத்தாதே, ஏனெனில் நீ அதுவல்ல. வெறும் ''நானிருக்கிறேன்'' என்பதையே பயன்படுத்து.

எந்தச் செயலிலாவது இதை முயற்சி செய், பிறகு அதை உணரு. நீ உள்ளே அதிகம் உண்மையாக மாறும் பொழுது, உன்னைச் சூழ்ந்துள்ள வெளி உலகம் அதிகம் பொய்யாக மாறும். உண்மை ''நான்'' ஆக மாறும், உலகம் உண்மை அல்லாததாக மாறும். இந்த உலகம் உண்மை அல்லது இந்த ''நான்'' உண்மை

– இரண்டும் உண்மையாக இருக்க முடியாது. இப்போது நீ ஒரு வெறும் கனவு என்று உணருகிறாய்; அப்போது உலகம் உண்மை யாய் இருக்கிறது. இதை மாற்று. நீ உண்மையாக மாறு, அப்போது உலகம் உண்மையற்றதாக மாறிவிடும்.

குருட்ஜிப் இந்த முறையின் மேல் தொடர்ந்து வேலை செய்தார். அவரது பிரதான சிஷ்யன், பி.டி. ஆஸ்பென்ஸ்கி, இதைச் சொல்கிறார், குருட்ஜிப் அவர் மேல் இந்த முறையில் வேலை செய்து கொண்டிருந்தார். இவர் மூன்று மாதங்கள் தொடர்ந்து இந்த ''நானிருக்கிறேன், நானிருக்கிறேன், நானிருக் கிறேன்'' என்பதை நினைவு வைத்துக் கொள்வதைப் பயிற்சி செய்தார். மூன்று மாதங்களுக்குப் பிறகு எல்லாம் நின்று விட்டது. எண்ணங்கள், கனவுகள், எல்லாம் நின்றுவிட்டது. ஒரே ஒரு சப்தம் மட்டும் உள்ளே அழிவற்ற இசையைப் போல ஒலித்துக் கொண்டிருந்தது: ''நானிருக்கிறேன், நானிருக்கிறேன், நானிருக்கிறேன், நானிருக்கிறேன்.'' ஆனால் இப்போது இது ஒரு முயற்சி அல்ல. இது ஒரு இயல்பான செயலாக நடந்து கொண்டிருக்கிறது: ''நானிருக்கிறேன்.'' பிறகு குருட்ஜிப் ஆஸ்பென்ஸ்கியை வீட்டை விட்டு வெளியே அழைத்தார். மூன்று மாதங்களாக அவர் வீட்டினுள்ளேயே வைக்கப்பட் டிருந்தார். அவர் வெளியே போவதற்கு அனுமதிக்கப்பட வில்லை.

குருட்ஜிப் சொன்னார், ''என்னுடன் வா.'' அவர்கள் 'டிப்பிளிஸ்' என்ற ரஷ்ய நகரத்தில் தங்கியிருந்தனர். குருட்ஜிப் அவரை வெளியே அழைத்தார். பிறகு அவர்கள் வீதிக்குச் சென்றனர். ஆஸ்பென்ஸ்கி தனது டைரியில் எழுதுகிறார், ''மனிதன் உறங்கிக் கொண்டிருக்கிறான் என்று ஜீஸஸ் சொன்னதன் அர்த்தம் என்ன என்பதை நான் முதல் தடவையாக புரிந்து கொண்டேன். அந்த முழு நகரமும் உறங்கிக் கொண் டிருப்பது போல எனக்குத் தோன்றியது. மக்கள் அவர்களின் உறக்கத்திலேயே போய்க் கொண்டிருக்கிறார்கள்; கடைகாரர்கள் அவர்களின் உறக்கத்திலேயே விற்றுக் கொண்டிருக்கிறார்கள்;

வாடிக்கையாளர்கள் அவர்களின் உறக்கத்திலேயே வாங்கிக் கொண்டிருக்கிறார்கள்; அந்த முழு நகரமும் உறங்கிக் கொண்டிருக்கிறது. நான் குருட்ஜிப்பைப் பார்த்தேன்: அவர் மட்டும் தான் விழித்துக் கொண்டிருக்கிறார் – முழு நகரமும் உறங்கிக் கொண்டிருக்கிறது. அவர்கள் கோபமாய் இருக்கிறார் கள், அவர்கள் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள், அவர்கள் அன்பு செய்து கொண்டும், விற்றுக் கொண்டும், வாங்கிக் கொண்டும், எல்லாவற்றையும் செய்தவாறு இருக்கிறார்கள்.''

ஆஸ்பென்ஸ்கி சொல்கிறார், ''இப்போது நான் அவர்களின் முகத்தை, அவர்களின் கண்களைப் பார்க்க முடிகிறது: அவர்கள் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அங்கு இல்லை. அந்த உள் மையம் இல்லாமல் இருக்கிறது. அது அங்கு இல்லை.'' ஆஸ்பென்ஸ்கி குருட்ஜிப்பிடம் சொன்னார், ''நான் இனிமேல் அங்குப் போக விரும்பவில்லை. இந்த நகரத்திற்கு என்ன நிகழ்ந்தது? எல்லோரும் உறங்கிக் கொண்டு போதை கொண் டவர்களாய் தெரிகிறார்கள்.''

குருட்ஜிப் சொன்னார், ''இந்த நகரத்திற்கு எதுவும் நிகழ வில்லை. உனக்கு ஏதோ ஒன்று நிகழ்ந்துவிட்டது. நீ போதை தெளிந்தவனாகி விட்டாய்; இந்த நகரம் அதேதான். இந்த இடம் நீ மூன்று மாதங்களுக்கு முன்னால் சுற்றித் திரிந்த அதே இடம் தான். ஆனால் அப்போது நீ மற்ற மக்கள் உறங்கிக் கொண் டிருக்கிறார்கள் என்பதைக் காண முடியவில்லை. ஏனெனில் நீயும் உறங்கிக் கொண்டிருந்தாய். இப்போது உன்னால் பார்க்க முடிகிறது. ஏனெனில் ஒரு குறிப்பிட்ட விழிப்புணர்வுத் தன்மை உனக்கு வந்துள்ளது. மூன்று மாதங்கள் தொடர்ந்து ''நானிருக் கிறேன்'' என்பதைப் பயிற்சி செய்தால், நீ மிகச் சிறிய அளவில் விழிப்புணர்வு அடைந்திருக்கிறாய். நீ விழிப்புணர்வு அடைந் திருக்கிறாய்! உனது உணர்வின் ஒரு பகுதி கனவு காண்பதைக் கடந்து சென்றிருக்கிறது. அதனால் தான் உன்னால் எல்லோரும் உறங்கிக் கொண்டிருப்பதை, சவக்களையோடு இருப்பதை,

போதையோடு இருப்பதை, வசியம் செய்யப்பட்டதைப் போலிருப்பதைக் காண முடிகிறது.''

ஆஸ்பென்ஸ்கி சொன்னார், ''நான் இந்த விஷயத்தைத் தாங்க முடியாது - எல்லோரும் உறங்குகிறார்கள்! அவர்கள் செய்வது எதுவாக இருந்தாலும், அதற்கு அவர்கள் பொறுப் பல்ல. அவர்கள் பொறுப்பல்ல! எப்படி அவர்கள் பொறுப்பேற்க முடியும்?'' அவர் திரும்பி வந்து குருட்ஜிப்பைக் கேட்டார், ''இது என்ன? ஏதாவது ஒரு விதத்தில் நான் ஏமாற்றப்படுகிறேனா? இந்த முழு நகரமும் உறங்குவது போலத் தெரியுமாறு நீங்கள் ஏதாவது எனக்குச் செய்து விட்டீர்களா? என்னால் என் கண்களை நம்பமுடியவில்லை.''

ஆனால் இது யாருக்காய் இருந்தாலும் நிகழும். நீ உன்னை நினைவு கொண்டிருந்தால், அப்போது ஒருவர் கூட அவரவரை நினைவு கொண்டவராக இல்லை என்பதை, இப்படியேதான் ஒவ்வொருவரும் நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை, நீ அறிந்து கொள்வாய். முழு உலகமும் உறங்கிக் கொண்டிருக் கிறது. நீ விழித்திருக்கும்போது ஆரம்பி. நீ நினைவு கொள்ளும் சமயத்தில் ஆரம்பி, ''நான் இருக்கிறேன்'' என்பதை.

நான் சொல்வதன் அர்த்தம், நீ ''நானிருக்கிறேன்'' என்ற வார்த்தையைத் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும் என்பதல்ல. மாறாக, அதை உணரு. குளித்துக் கொண்டிருக் கிறாய், ''நானிருக்கிறேன்'' என்பதை உணரு. குளிர்ந்த நீரின் தொடுதல் அங்கிருக்கட்டும், அதே சமயம் அதன் பின்னால் நீயும் இருப்பாயாக; அதை உணர்ந்து கொண்டு அதே சமயம் ''நானிருக் கிறேன்'' என்பதை நினைவு வைத்துக் கொண்டு நீ இருப்பாயாக. நினைவில் கொள், நான் உன்னை வாயில் ''நானிருக்கிறேன்'' என்று திரும்பத் திரும்பக் கூறுமாறு சொல்லவில்லை. நீ அப்படித் திரும்பத் திரும்பச் சொல்லலாம். ஆனால் அந்தச் செயல் உனக்கு விழிப்புணர்வைக் கொடுக்காது. திரும்பத் திரும்பச் சொல்வது அதிக தூக்கத்தை வேண்டுமானால் உண்டு பண்ணலாம். பல மக்கள் இப்படிப் பலவற்றைத் திரும்பத்

திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் திரும்பத் திரும்ப ''ராமா, ராமா, ராமா.....'' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள், இப்படி அவர்கள் விழிப்புணர்வு இல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தால், அப்போது இந்த ''ராமா, ராமா, ராமா.....'' என்பது ஒரு போதை மருந்தாக மாறிவிடும். அவர்கள் இதன் மூலம் நன்றாக உறங்க முடியும்.

அதனால்தான் மகேஷ் யோகிக்கு மேற்கத்திய நாடுகளில் மிகவும் வரவேற்பு இருக்கிறது. ஏனெனில் அவர் மக்களுக்குத் திரும்பத் திரும்பச் சொல்ல ஒரு மந்திரச் சொல்லைக் கொடுக் கிறார். மேற்கத்திய நாடுகளில் உறக்கம் ஒரு மிக மோசமான பிரச்சனையாக மாறியிருக்கிறது. உறக்கம் சுத்தமாகப் பாதிக்கப் பட்டுவிட்டது. இயற்கையான உறக்கம் மறைந்து விட்டது. தூக்கமாத்திரையும் மற்றும் போதை மருந்துகள் மூலமாகவே நீ உறங்க முடியும்; இல்லாவிட்டால் தூங்குவது சாத்தியமே யில்லை. மகேஷ் யோகியின் ஈர்ப்புக்கு இதுதான் காரணம். ஏனெனில் நீ எதையாவது இடைவிடாமல் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தால், அந்த ஒன்றையே சொல்வது உனக்கு ஆழமான தூக்கத்தைக் கொடுக்கிறது, அவ்வளவுதான்.

ஆகவே மகேஷ் யோகியின் கடந்தநிலை தியானம் என்று அழைக்கப்படுவது, வெறும் உளரீதியான தூக்கமாத்திரை தான். அதில் எதுவுமில்லை – வெறும் தூக்கமாத்திரையே. அது உதவுகிறது, அது தூக்கத்திற்கு நல்லது, ஆனால் தியானத்திற்கு நல்லதல்ல. நீ நன்றாகத் தூங்கலாம், அதிக அமைதியான தூக்கம் அதனால் கிடைக்கும். அது நல்லது, ஆனால் அது சிறிது கூடத் தியானமாகாது. நீ தொடர்ந்து ஒரு வார்த்தையையே கூறிக் கொண்டிருந்தால், அது ஒருவித சலிப்பை உண்டு பண்ணுகிறது, இந்த சலிப்பு தூங்குவதற்கு மிகவும் உதவும்.

ஆகவே எந்த ஒரே செயலும், திரும்பத் திரும்பச் செய்வதும், தூக்கத்திற்கு உதவக் கூடியதே. தாயின் கருப்பையில் இருக்கும் குழந்தை ஒன்பது மாதங்களுக்கு இடைவிடாமல் உறங்கிக் கொண்டேயிருக்கிறது, அதற்கு என்ன காரணம் என்று

உனக்குத் தெரியுமா? அதற்குக் காரணம் தாயின் இதயம் ''டிக்-டாக், டிக்-டாக்'' என்று துடித்துக் கொண்டே இருப்பதுதான். இடைவிடாமல் அந்தத் துடிப்பு, அந்த இதயத் துடிப்பு இருக்கிறது. உலகத்திலேயே மிகவும் ஒரே மாதிரியான செயல்களில் இதுவும் ஒன்று. ஒரே மாதிரியான துடிப்பு இடைவிடாமல் தொடர்ந்து திரும்பத் திரும்ப இருப்பதால், குழந்தை போதையடைகிறது. அது தூங்கிக் கொண்டே இருக்கிறது.

இதனால் தான், எப்பொழுதெல்லாம் குழந்தை அழு கிறதோ, கத்துகிறதோ, ஏதாவது பிரச்சனை பண்ணுகிறதோ, அப்பொழுதெல்லாம் தாய் அதன் தலையை தனது இதயத்தோடு அணைத்துக் கொள்கிறாள். அப்போது உடனே அது நன்றாக உணர்கிறது, தூக்கத்திற்குப் போய் விடுகிறது. மறுபடியும் இதற்குக் காரணமும் இதயத் துடிப்பு தான். குழந்தை மறுபடியும் கருப்பையின் பாகமாக மாறிவிடுகிறது. இதனால்தான், நீ குழந்தையில்லை என்றாலும் கூட, உன் மனைவியோ, உன் காதலியோ உனது தலையை அவளது இதயத்தில் சாய்த்து வைத்துக் கொண்டவுடன், நீ அந்த ஒரே மாதிரியான துடிப்பால் உறக்கத்தை உணருவாய்.

உளவியலாளர்கள் யோசனை சொல்கிறார்கள், அதாவது உன்னால் உறங்க முடியவில்லையென்றால், அப்போது கடிகாரத்தின் மேல் முழுக் கவனத்தையும் செலுத்து. கடிகாரத்தின் டிக்-டாக், டிக்-டாக் என்பதன் மேல் முழுக் கவனத்தையும் வை. அது இதயத் துடிப்பையே திரும்பத் திரும்பச் செய்கிறது. ஆகவே நீ உறக்கத்தில் ஆழ்ந்துவிட முடியும். திரும்பத் திரும்பச் செய்யும் எதுவும் உதவும்.

ஆகவே இந்த ''நானிருக்கிறேன்,'' இந்த ''நானிருக் கிறேன்'' என்ற நினைவு கொண்டிருத்தல், ஒரு வாயில் சொல்லும் மந்திரம் அல்ல. இது வாயினால் திரும்பத் திரும்பச் சொல்லப்படக் கூடாது - அதை உணரு! உனது இடுப்பைப் பற்றிய உணர்ச்சியோடு இரு. நீ யாரோ ஒருவரின் கையைத்

தொடும் பொழுது, அவருடைய கையை மட்டும் உணராதே, உன்னுடைய தொடுதலையும் உணரு, உன்னையும் உணரு - அதாவது இந்தத் தொடுதலில் நீ இருக்கிறாய், முழுதாக இருக்கிறாய். சாப்பிடும் பொழுது, சாப்பிடுவதை மட்டும் செய்யாதே, நீ சாப்பிட்டுக் கொண்டிருப்பதையும் சேர்த்து உணரு. இந்த உணர்வு, இந்த உணர்ச்சி, உன் மனத்தில் மேலும் மேலும் ஆழமாக ஊடுருவ வேண்டும்.

ஒருநாள், திடீரென்று, நீ உனது மையத்தில் விழிப்புணர்வு பெறுவாய். முதல் தடவையாக உனது மையம் வேலை செய்யத் தொடங்கும். அதன் பின் முழு உலகமும் ஒரு கனவாக மாறிவிடும். அப்போது உன்னுடைய கனவு காணுதலை ஒரு கனவு காணுதல் என்று நீ அறிய முடியும். மேலும் உனது கனவு காணுதல் ஒரு கனவு காணுதலே என்பதை நீ அறியும்போது, கனவு காணுதல் நின்றுவிடும். அதை நிஜம் என்று உணர்ந்து கொண்டிருந்தால் மட்டுமே அது தொடர முடியும். அதை நிஜமல்ல என்று உணரும்போது அது நின்றுவிடுகிறது.

உன்னில் கனவு காணுதல் நின்றுவிட்டால், நீ ஒரு மாறிவிட்ட மனிதன். பழைய மனிதன் இறந்துவிட்டான்; தூங்கும் மனிதன் இறந்துவிட்டான். நீ அப்போதிருந்த மனிதனாக இப்போது இருக்கமாட்டாய். முதல் முறையாக நீ விழிப்புணர்வு அடைந்திருக்கிறாய்; முதல் முறையாக இந்த உறங்கிக் கொண்டிருக்கும் உலகத்தில், நீ விழிப்புணர்வோடு இருக்கிறாய். நீ ஒரு புத்தராக, ஒரு விழிப்படைந்தவனாக ஆகிவிட்டாய்.

இந்த விழிப்படைதலுக்குப் பின் அங்கு துன்பம் இல்லை, இந்த விழிப்படைதலுக்குப் பின் அங்கு இறப்பு இல்லை, இந்த விழிப்படைதலின் மூலம் இனியங்குப் பயம் இல்லை. நீ முதல் தடவையாக எல்லாவற்றிலிருந்தும் விடுதலை அடைகிறாய். உறக்கத்திலிருந்து விடுதலை அடைவதும், கனவு காண்பதி லிருந்து விடுதலை அடைவதும், எல்லாவற்றிலிருந்தும் விடுதலையடைவ தாகும். நீ சுதந்திரம் பெற்றுவிட்டாய். வெறுப்பு, கோபம், பேராசை

மறைந்து போகும். நீ வெறும் அன்பாகி விடுவாய். அன்பு காட்டுபவனாக அல்ல, நீ வெறும் அன்பாக ஆகிவிடுவாய்.

மேலும் ஒரு கேள்வி - இதுவும் அதோடு தொடர்புடையது தான்: *''நாம் எல்லோரும் ஏற்கனவே எழுதப்பட்ட நாடகத்தில் நடிக்கும் நடிகர்கள் என்றால், அந்த நாடகத்தின் ஒரு அத்தியாயத்தில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் நமது நிலை மாற்றமும் இருக்க வேண்டும். அப்படி இல்லாத பட்சத்தில் எப்படி நாம் தியானத்தின் மூலமாக நிலைமாற்றம் அடைய முடியும்? மேலும் அப்படி ஒரு அத்தியாயம் அதன் குறிப்பிட்ட நேரத்தில் வரப்போவது நிச்சயமென்றால், ஏன் தியானம் செய்ய வேண்டும்? எதற்காக இந்த முயற்சிகளைச் செய்ய வேண்டும்?''*

இதுவும் அதேதான்; இதுவும் அதே தவறையே கொண்டுள்ளது. நான், எல்லாமே தீர்மானிக்கப்பட்டவை என்று சொல்லவில்லை. நான் இந்தப் பேரண்டத்தை விளக்க ஒரு கோட்பாட்டை முன்மொழியவில்லை. இது ஒரு சாதனம், யுக்தி.

இந்தியா எப்பொழுதும் விதி என்ற இந்தச் சாதனத்துடன் வேலை செய்து வந்துள்ளது. இதனுடைய அர்த்தம், எல்லாமே ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டவை என்பதல்ல. இது அதனுடைய அர்த்தமே அல்ல! இது இப்படி முன்மொழியப்பட்டதின் ஒரே காரணம் என்னவென்றால், எல்லாமும் தீர்மானிக்கப்பட்டவை என்று நீ எடுத்துக் கொண்டால், அப்போது எல்லாமும் ஒரு கனவாக மாறிவிடும். இந்த வகையில் நீ விஷயங்களை எடுத்துக் கொண்டால், இந்த வகையாக நீ நம்பிக்கை கொண்டால், - அதாவது எல்லாமே ஏற்கனவே முடிவு செய்யப்பட்டவை; அதாவது, உதாரணமாக, நீ ஒரு குறிப்பிட்ட நாளில் இறக் கப் போகிறாய் - அப்போது எல்லாமே ஒரு கனவாக மாறி விடுகிறது. ஆகவே இது உண்மையிலேயே தீர்மானிக்கப்பட்டதல்ல, முடிவு செய்யப்பட்டதல்ல! உன்னிடம் அவ்வளவு ஈடுபாடு கொண்டவர்கள் ஒருவரும் இல்லை. பேரண்டத்திற்குத் துளிகூட உன்னைப்பற்றிய உணர்வு கிடையாது. மேலும் நீ எப்போது

இறக்கப் போகிறாய் என்றும் தெரியாது, இது எந்த விதத்திலும் பயனற்ற ஒரு விஷயம். உன்னுடைய இறப்பு இந்தப் பேரண்டத்திற்கு எந்த முக்கியத்துவமும் இல்லாதது.

நீ அவ்வளவு முக்கியமானவன் என்று நினைத்துக் கொள்ளாதே, முழுப் பேரண்டமும் நீ இறக்கும் தினத்தைத் தீர்மானிப்பதாக – மணி, நிமிடம், வினாடி – நினைத்துக் கொள்ளாதே. நீ மையமல்ல. பேரண்டத்திற்கு நீ இருப்பதும், இல்லாமல் போவதும் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. ஆனால் இந்தத் தவறான கருத்து மனதில் வேலை செய்து கொண்டேயிருக்கிறது. இது குழந்தைப் பருவத்திலேயே ஏற்படுத்தப்பட்டு விட்டது. ஆகவே இது உணர்வற்ற நிலையின் ஒரு பாகமாக மாறிவிட்டது.

ஒரு குழந்தை பிறக்கிறது. அது இந்த உலகத்திற்கு எதுவும் கொடுக்க முடியாது. ஆனால் பல விஷயங்களை அது எடுத்துக் கொள்கிறது. அதனால் திருப்பித் தர முடியாது, அது எதையும் திருப்பிக் கொடுக்க முடியாது. அது மிகவும் சக்தியற்றது – நிராதர வானது. அதற்கு உணவு தேவை, அதற்கு அன்பு தேவை, அதற்கு இருப்பிடம் தேவை, அதற்குக் கதகதப்பு தேவை. இவை யெல்லாம் கொடுக்கப்பட வேண்டும்.

ஒரு குழந்தை சிறிதும் ஆதரவற்ற நிலையிலேயே பிறக்கிறது– குறிப்பாக மனிதக் குழந்தை. எந்த மிருகமும் இந்த அளவு ஆதரவற்றது அல்ல. அதனால்தான் எந்த மிருகமும் ஒரு குடும்பத்தை உருவாக்கவில்லை – அதற்குத் தேவையில்லை. ஆனால் மனிதக் குழந்தை சிறிதும் ஆதரவற்றது, மிகச் சிறிது கூட ஆதரவற்றது, அதைப் பாதுகாக்க ஒரு தாயில்லாமல் ஒரு தந்தையில்லாமல், ஒரு குடும்பமில்லாமல், ஒரு சமூகமில்லாமல் உயிர் வாழ முடியாது. அது தனியாக உயிர் வாழ முடியாது. அது உடனே இறந்து விடும்.

அது மிகவும் சார்ந்தே இருக்கிறது, அதற்கு அன்பு தேவை, அதற்கு உணவு தேவை, அதற்கு எல்லாம் தேவை, அது எல்லா

வற்றையும் கேட்கிறது. அதைத் தாய் கொடுப்பாள், தந்தை கொடுப்பார், குடும்பம் கொடுக்கும். குழந்தை, இந்த முழு உலகத்தின் மையமாகத் தன்னையே நினைத்துக்கொள்ள ஆரம்பிக்கிறது. அது கேட்டால் போதும்; எல்லாம் அதற்குக் கொடுக்கப்படும். கேட்பது மட்டுமே போதும், வேறு எந்த முயற்சியும் தேவையில்லை.

இதனால் குழந்தை, தன்னையே மையமாக நினைத்துக் கொள்ள ஆரம்பிக்கிறது. எல்லாம் அதைச் சுற்றியே, அதற் காகவே, நடப்பதாக நினைத்துக் கொள்கிறது. முழுப் பிரபஞ்ச இருப்பும் அதற்காகவே உருவாக்கப்பட்டதாகவே தெரிகிறது. முழுப் பிரபஞ்ச இருப்பும் அது வந்து கேட்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறது, அதோடு அவையெல்லாம் நிறைவேற்றவும் படும். அது கேட்பவையெல்லாம் கண்டிப்பாக நிறைவேற்றப் பட வேண்டும், அது ஒரு தேவை; இல்லாவிட்டால் அது இறந்து விடும். ஆனால் இந்தத் தேவை மிகவும் ஆபத்தானதாக மாறி விடுகிறது.

அது இந்த ''நானே மையம்'' என்ற அணுகுமுறையோடு வளர்கிறது. மெது மெதுவாக அதிகம் கேட்கும். ஒரு குழந்தை கேட்பது மிகவும் எளிமையானது, அவற்றைத் தர முடியும். ஆனால் அது வளர்கையில் அதனுடைய கோரிக்கைகள் மேலும் மேலும் சிக்கலானவையாக மாறுகின்றன. சில சமயங்களில் அவற்றைத் தருவது, அவற்றை நிறைவேற்றுவது சாத்திய மில்லாமல் போகலாம். சில சமயங்களில் அது கொஞ்சங்கூட சாத்தியமில்லாமல் போகலாம். அது சந்திரனைக் கேட்கலாம், அல்லது எதையும்.....

அது வளர்கிற அளவிற்கு, அதன் கோரிக்கைகள் மேலும் சிக்கலானவைகளாக, சாத்தியமற்றதாக மாறலாம். அப்போது மனமுறிவு ஏற்படலாம். அதனால் அந்தக் குழந்தை இப்போது தான் ஏமாற்றப்படுவதாக நினைக்க ஆரம்பிக்கலாம். அது தன்னையே இந்த உலகத்தின் மையமாக சந்தேகத்திற்கு

இடமின்றி எடுத்துக் கொண்டு விட்டது. இப்போது அங்குப் பிரச்சனைகள் வரும், அதனால் மெது மெதுவாக அது சிம்மாசனத்திலிருந்து இறக்கப்படும். அது இளைஞனாகும் பொழுது, அவன் முழுதாக சிம்மாசனத்திலிருந்து இறக்கப் படுவான். அப்போது நாம் மையமல்ல என்பதை அவன் அறிந்து கொள்வான். ஆனால் அடி ஆழத்தில் உணர்வற்ற மனம் தொடர்ந்து அவனே மையமாக இருப்பதாகவே நினைத்துக் கொண்டிருக்கும்.

மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள், அவர்களுடைய விதி தீர்மானிக்கப்பட்டது தானா? அவர்கள் கேட்கிறார்கள், அவர்களுடைய விதியை முன்பாகவே தீர்மானிக்க வேண்டிய அளவிற்கு அவர்கள் இந்தப் பேரண்டத்திற்கு அவ்வளவு முக்கிய மானவர்களா, அவ்வளவு முக்கியமா? அவர்கள் கேட்கிறார்கள், ''என்னுடைய பயன் என்ன? ஏன் நான் உருவாக்கப்பட்டேன்?'' நீயே மையம் என்ற குழந்தைப் பருவ மடத்தனமே இது போன்ற கேள்விகளை, –''என்ன பயனிற்காக நான் உருவாக்கப் பட்டேன்?''– உருவாக்குகிறது.

நீ எந்தப் பயனுக்காகவும் உருவாக்கப்படவில்லை. மேலும் நீ எந்தப் பயனுக்காகவும் உருவாக்கப் படாதது மிகவும் நல்லது; இல்லாவிட்டால் நீ ஒரு இயந்திரமாய் இருப்பாய். ஒரு இயந்திரம் ஏதோ ஒரு பயனிற்காக உருவாக்கப்படுகிறது. மனிதன் ஏதோ ஒரு பயனுக்காக, ஏதோ ஒன்றிற்காக உருவாக்கப் படுவதில்லை – கிடையாது! மனிதன் ஒரு வெளியே ஓடி வரும், பொங்கிப் பெருகி வரும் படைப்பு. எல்லாம் வெறும் இருப்பதே. மலர்கள் இருக்கின்றன, நட்சத்திரங்கள் இருக் கின்றன, நீ இருக்கிறாய். எல்லாமே பிரபஞ்ச இருப்பின் எந்தப் பயனுமற்ற ஒரு பொங்கிப் பெருகுதல், ஒரு ஆனந்தம், ஒரு கொண்டாட்டம் மட்டுமே.

ஆனால் இந்த விதி என்ற கோட்பாடு, இந்த முன்கூட்டியே தீர்மானிக்கப்படுவது, பிரச்சனைகளை உண்டு பண்ணுகிறது. ஏனெனில் நாம் இதை ஒரு கோட்பாடாக எடுத்துக் கொள்

கிறோம். நாம் எல்லாமே தீர்மானிக்கப்பட்டுவிட்டதாக நினைக் கிறோம். ஆனால் எதுவும் தீர்மானிக்கப்படவில்லை. எப்படி இருந்த போதிலும் இந்த யுக்தி இதை ஒரு சாதனமாகப் பயன் படுத்துகிறது. நாம் எல்லாம் தீர்மானிக்கப் பட்டவையே என்று சொல்லும்பொழுது, அது ஒரு கோட்பாடாக உனக்குச் சொல்லப் படுவதில்லை. அதன் நோக்கம் இதுதான்: அதாவது நீ வாழ்வை ஒரு நாடகமாக, முன்பே தீர்மானிக்கப்பட்டதாக எடுத்துக் கொண்டால், பிறகு அது ஒரு கனவாக மாறிவிடும். உதாரண மாக, நான் இந்த நாள், இந்த இரவு, நான் உங்களோடு பேசப் போகிறேன் என்பதை அறிந்திருந்தால், அதோடு இந்த நாளில் நான் பேச வேண்டிய சொற்களும் முன்பே தீர்மானிக்கப்பட்டது என்றால், இது எதையும் சிறிது கூட மாற்ற முடியாத அளவு நிச்சயிக்கப்பட்டதென்றால், – அதாவது நான் ஒரே ஒரு புதிய வார்த்தை கூடப் பேச முடியாது – அப்போது திடீரென இந்த முழு இயக்கத்திற்கும் நான் சம்பந்தமில்லாதவன் ஆகி விடுகிறேன். ஏனெனில் இந்தச் செயல்கள் என்னிடமிருந்து பிறப்பதில்லை.

எல்லாம் முடிவு செய்யப்பட்டு ஒவ்வொரு சொல்லும் பேரண்டத்திலிருந்தே வருகிறதென்றால் அல்லது தெய்விகத்தி லிருந்தே வருகிறதென்றால் அல்லது நீ தேர்ந்தெடுக்கும் எந்தப் பெயரிலிருந்து வருகிறதென்றாலும், அப்போது நான் அந்தச் சொற்களினுடைய பிறப்பிடம் அல்ல. அப்போது நான் ஒரு பார்வையாளனாக, ஒரு வெறும் பார்வையாளனாக மாற முடியும்.

நீ வாழ்க்கையை முன்பே முடிவு செய்யப்பட்டதாக எடுத்துக் கொண்டால் அப்போது நீ அதைக் கூர்ந்து கவனிக்க முடியும், அப்போது நீ அதில் சம்பந்தப்படுவதில்லை. நீ தோல்வி அடைந்தால் அது முன்பே முடிவு செய்யப்பட்டது; நீ வெற்றி பெற்றால் அது முன்பே முடிவு செய்யப்பட்டது. இரண்டும் முன்பே தீர்மானிக்கப்பட்டதென்றால், இரண்டும் சம மதிப்பையே, சம இடத்தையே பெறுகின்றன. ஒருவன்

இராவணன், ஒருவன் ராமன், எல்லாம் முன்பே தீர்மானிக்கப் பட்டது. இராவணன் குற்றவுணர்ச்சி கொள்ள வேண்டியதில்லை, இராமன் உயர்ந்தவனாக நினைத்துக்கொள்ள வேண்டியதில்லை. எல்லாம் முன்பே தீர்மானிக்கப்பட்டவை. ஆகவே நீங்கள் வெறும் நடிகர்கள், நீங்கள் ஒரு மேடையில் ஒரு கதாபாத்திரத்தை நடிக்கிறீர்கள், அவ்வளவே.

நீ ஒரு கதாபாத்திரமாக நடிக்கிறாய் என்ற உணர்வை உனக்குக் கொடுப்பதற்கு, நீ நிறைவேற்றிக் கொண்டிருப்பது முன்பே முடிவு செய்யப்பட்ட ஒரு வாழ்க்கை முறையே என்பதை நீ உணர்ந்து கொள்வதற்கு, இந்த உணர்வை உனக்குக் கொடுத்து அதன் மூலம் நீ அதைக் கடந்து வர செய்வதற்கு, இது ஒரு யுக்தி. இதைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். ஏனெனில் நாம் விதியை ஒரு கோட்பாடாக நினைத்து மிகவும் பழகிப் போயிருக்கிறோம் – வெறும் கோட்பாடாக மட்டுமல்ல, ஒரு சட்டமாகவும். நம்மால் இந்தக் கோட்பாடுகளையும் சட்டங் களையும் வெறும் சாதனங்களாக எடுத்துக் கொள்ளும் இந்த அணுகுமுறையைப் புரிந்துகொள்ள முடியாது.

நான் இதை உங்களுக்கு விளக்குகிறேன். ஒரு உதாரணம் உதவியாக இருக்கும். நான் ஒரு நகரத்தில் இருந்தேன். ஒரு மனிதன் வந்தான்; அவன் ஒரு முகம்மதியன், ஆனால் எனக்குத் தெரியாது, நான் உணர்ந்து கொள்ளவில்லை. அவனைப் பார்த்தால் ஒரு இந்துவாகத் தோன்றும்படி அவன் ஆடையணிந்திருந்தான். அவன் இந்துவைப் போலத் தோற்ற மளித்தது மட்டுமல்ல, அவன் பேசியதும் ஒரு இந்துவைப் போல இருந்தது. அவன் ஒரு முகமதியனைப் போல இல்லை.

அவன் என்னிடம் ஒரு கேள்வி கேட்டான். அவன் சொன்னான், ''முகம்மதியர்களும் கிறிஸ்துவர்களும் ஒரே ஒரு பிறவிதான் உண்டென்று சொல்கிறார்கள். இந்துகள், புத்த மற்றும் ஜைன மதத்தினர் பல பிறவிகள், நீண்ட வரிசையான பல பிறவிகள் இருக்கிறதென்று சொல்கிறார்கள். மேலும்

அவர்கள் ஒருவன் விடுதலை அடையாவிட்டால் மீண்டும் மீண்டும் தொடர்ந்து பிறவி எடுத்துக் கொண்டே இருப்பான் என்கிறார்கள். ஆகவே நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? ஜீஸஸ் ஞானமடைந்த மனிதன் என்றால் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். முகம்மது அல்லது மோஸஸ், இவர்களுக்கும் தெரிந்திருக்க வேண்டும், இவர்கள் ஞானமடைந்தவர்கள் என்றால், அதாவது பல பிறவிகள் உண்டு, அது ஒன்றல்ல என்பது. மேலும் நீங்கள் இவர்களை சரி என்று சொன்னால், பிறகு மாகவீரர், கிருஷ்ணர், புத்தர் மற்றும் சங்கரரைப் பற்றி என்ன சொல்வீர்கள்? ஒரு விஷயம் உறுதியானது. அதாவது அவர்கள் ஞானமடைந்தவர்களாக இருக்க முடியாது. கிறிஸ்துவ மதம் சரியென்றால் பிறகு புத்தர் தவறு, பிறகு கிருஷ்ணர் தவறு, பிறகு மகாவீரர் தவறு. மேலும் மகாவீரர், கிருஷ்ணர் மற்றும் புத்தர் சரியென்றால், பிறகு முகம்மது, ஜீஸஸ் மற்றும் மோஸஸ் தவறு. ஆகவே எனக்குச் சொல்லுங்கள். நான் மிகவும் குழப்பத்திலிருக்கிறேன்; எனக்கு மிகவும் புதிராய் இருக்கிறது. இரண்டும் சரியாக இருக்க முடியாது. எப்படி இரண்டும் சரியாக இருக்க முடியும்? பல பிறவிகள் இருக்க வேண்டும் அல்லது ஒன்றுதான் இருக்க வேண்டும். எப்படி இரண்டும் சரியாய் இருக்க முடியும்?'' அவன் மிகவும் புத்திசாலியான மனிதன், மேலும் அவன் பலவற்றையும் படித்திருக்கிறான். ஆகவே அவன் சொன்னான், ''நீங்கள் இரண்டும் சரி என்று சொல்லித் தப்பித்துவிட முடியாது. இரண்டும் சரியாக இருக்க முடியாது. அது தர்க்கப்படி சரியாகாது–இரண்டும் சரியாக இருக்க முடியாது.''

ஆனால் நான் சொன்னேன், ''இப்படி இருக்கத் தேவை யில்லை; உனது அணுகுமுறை முற்றிலும் தவறானது. இரண்டுமே சாதனங்கள். இரண்டுமே சரியுமல்ல, இரண்டுமே தவறுமல்ல–இரண்டுமே யுக்திகள்.'' நான் யுக்தி என்று சொல்வதன் அர்த்தத்தை அவனால் புரிந்துகொள்ளவே முடிய வில்லை.

முகம்மது, ஜீஸஸ் மற்றும் மோஸஸ், அவர்கள் ஒரு வகையான மனத்திடம் பேசிக் கொண்டிருந்தார்கள். புத்தர், மகாவீரர், கிருஷ்ணர் இவர்கள் முற்றிலும் வேறு வகையான மனத்திடம் பேசிக் கொண்டிருந்தார்கள். மதங்களின் பிறப்பிட மாக உள்ளவை இரண்டு–இந்து மற்றும் யூத மதம். இந்தியாவி லிருந்து பிறந்த எல்லா மதங்களும், இந்து மதத்திலிருந்து பிறந்த எல்லா மதங்களும், மறு பிறவியை, பல பிறவிகளை நம்பின. யூத மதச் சிந்தனையிலிருந்து பிறந்த எல்லா மதங்களும் – முகம்மதிய மதம், கிறிஸ்துவ மதம் – ஒரு பிறவியையே நம்பு கின்றன. இவையே இரண்டு யுக்திகள்.

இதைப் புரிந்துகொள்ள முயற்சி செய். நமது மனங்கள் மாறாதவையாய் இருப்பதால், நாம் விஷயங்களைக் கோட்பாடு களாக எடுத்துக் கொள்கிறோம், யுக்திகளாக எடுப்பதில்லை. பலமுறை மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள், ''ஒரு நாள் நீங்கள் இதை சரி என்று சொல்கிறீர்கள், மற்றொரு நாள் நீங்கள் அதை சரி என்கிறீர்கள், ஆனால் இரண்டும் சரியாக இருக்க முடியாது.'' உள்ளபடியே இரண்டும் சரியாக இருக்க முடியாது. ஆனால் இரண்டும் சரி என்று யாரும் சொல்லவில்லை. எது சரி எது தவறு என்பதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. எந்த யுக்தி வேலை செய்கிறது என்பதைப் பற்றி மட்டுமே எனக்கு அக்கறை.

இந்தியாவில் இந்தப் பல பிறவிகள் யுக்தியை அவர்கள் பயன்படுத்தினர். ஏன்? அதற்குப் பல காரணங்கள் உள்ளன. மேற்கத்திய நாட்டில் பிறந்த எல்லா மதங்களும், குறிப்பாக யூத சிந்தனையிலிருந்து பிறந்தவையெல்லாம், ஏழை மக்களுடைய மதங்கள். அவர்களுடைய கடவுளின் தூதுவர்கள் எல்லாம் படிப்பறிவு இல்லாதவர்கள். ஜீஸஸ் படித்தவரல்ல, முகமது படித்தவரல்ல, மோஸஸ் படித்தவரல்ல. இவர்கள் எல்லோரும் படிக்காதவர்கள், நாகரிகமடையாதவர்கள், எளிமையானவர்கள், மேலும் அவர்கள் சிறிதும் நாகரிகமடையாத, ஏழ்மையான,

செல்வம் பெறாத, மக்கள் கூட்டத்திடமே பேசிக் கொண் டிருந்தார்கள்.

ஒரு ஏழை மனிதனுக்கு, ஒரு பிறவியே போதும் போது மென்று இருக்கும்! அவன் பட்டினியில் இருக்கிறான், செத்துக் கொண்டு இருக்கிறான். நீ அவனிடம் போய், பல பிறவிகள் உண்டு, அவன் மறுபடியும் மறுபடியும் பிறவி எடுத்துக் கொண்டே இருப்பான், அவன் ஆயிரக்கணக்கான பிறவிகள் உள்ள சக்கரத்தில் உழலுவான் என்று சொன்னால், அந்த ஏழை மனிதன் இந்த முழு விஷயத்தையும் குறித்து மனமுடைந்தே போவான். ''நீ என்ன சொல்கிறாய்?'' என்று ஏழை மனிதன் கேட்பான். ''ஒரு பிறவியே மிகவும் அதிகம், ஆகவே ஆயிரக் கணக்கான, கோடிக்கணக்கான பிறவிகளைப்பற்றியெல்லாம் பேசாதே. இதைப் பேசாதே. இந்தப் பிறவி முடிந்தவுடன் உடனடியாக சொர்க்கத்தை எங்களுக்குக் கொடு'' என்று கேட்பான். இந்தப் பிறவி முடிந்தவுடன், உடனே, அடைய முடியும் என்றால் மட்டுமே கடவுள் அவனுக்கு, ஒரு உண்மை யாக மாறுவார்.

புத்தர், மகாவீரர் மற்றும் கிருஷ்ணர் மிகவும் செல்வச் செழிப்போடிருந்த சமூகத்திடம் பேசிக்கொண்டிருந்தனர். இன்று இதைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாகிவிட்டது. ஏனெனில் முழுச் சக்கரமும் திரும்பி விட்டது. இப்போது மேற்கத்திய நாடுகள் செல்வச் செழிப்போடும், கிழக்கத்திய நாடுகள் ஏழ்மையோடும் உள்ளன. அப்போது கிழக்கே செல்வச் செழிப்பும் மேற்கே ஏழ்மையும் இருந்தன. எல்லா இந்துமதத்தின் அவதாரங்களும், எல்லா ஜைன தீர்த்தங்கரர்களும், எல்லா புத்தர்களும், ஞானமடைந்தவர்களும், இவர்கள் அனைவரும் இளவரசர்கள். இவர்கள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் படித்தவர்கள், பண்பட்டவர்கள், நாகரிகமடைந்தவர் கள், எல்லா விதத்திலும் தேர்ச்சி பெற்றவர்கள். நீ புத்தரை மேலும் தேர்ச்சி பெறச் செய்ய முடியாது. அவர் முழுமையாகத் தேர்ச்சி பெற்றவர், பண்பட்டவர், படித்தவர்; மேலும் எதுவும்

சேர்க்க முடியாது. புத்தர் இன்று வந்தால் கூட, எதுவும் சேர்ப்பதற்கு இல்லை.

ஆகவே இவர்கள் செல்வச் செழிப்பான சமுதாயத்திடம் பேசிக் கொண்டிருந்தனர். நினைவில் கொள், செல்வச் செழிப் பான சமூகத்திற்கு வேறு மாதிரியான பிரச்சனைகள் இருக்கும். செல்வச் செழிப்போடுள்ள சமூகத்திற்கு, இன்பம் அர்த்தமற்றது, சொர்க்கம் அர்த்தமற்றது. ஒரு ஏழ்மையான சமூகத்திற்கு, சொர்க்கம் மிகவும் அர்த்தமுள்ளது. சொர்க்கத்தில் வாழும் ஒரு சமூகத்திற்கு, சொர்க்கம் அர்த்தமற்றதாகி விடுகிறது. ஆகவே நீ அதை முன்மொழிய முடியாது. சொர்க்கத்தை அடைவதற்காக ஏதாவது செய்யும் ஒரு தூண்டுதலை, நீ உருவாக்க முடியாது. அவர்கள் ஏற்கனவே அதில் இருக்கிறார்கள் – அதில் சலிப்படைந் திருக்கிறார்கள்.

ஆகவே புத்தர், மகாவீரர் மற்றும் கிருஷ்ணர், சொர்க்கத்தைப் பற்றிப் பேசவில்லை. அவர்கள் விடுதலையைப் பற்றிப் பேசினர். அவர்கள் இதைத் தாண்டி இருக்கும் ஒரு இன்பமான உலகைப் பற்றிப் பேசவில்லை, அவர்கள் இன்பமும் துன்பமும் அற்ற ஒரு நிலைமாற்றமடைந்த உலகைப் பற்றிப் பேசினார்கள். ஜீஸஸின் சொர்க்கம் இவர்களை வசீகரித்திருக்காது – இவர்கள் ஏற்கனவே அங்கு இருந்தனர்.

இரண்டாவதாக, செல்வச் செழிப்பான ஒருவனுக்கு உள்ள உண்மையான பிரச்சனை சலிப்புதான். ஏழ்மையான ஒருவனுக்கு, எதிர்காலத்தில் இன்பத்தைத் தரும் உறுதிமொழியே தேவை. ஏழ்மையான மனிதனுக்கு, கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதே பிரச்சனை. செல்வச் செழிப்பான மனிதனுக்கு, கஷ்டம் என்ற பிரச்சனை இல்லை, சலிப்புதான் பிரச்சனை. அவனுக்கு எல்லா இன்பங்களும் சலிப்பைத் தருகின்றன.

மகாவீரர், புத்தர் மற்றும் கிருஷ்ணர், இவர்கள் எல்லோரும் இந்த சலிப்பைப் பயன்படுத்தினர். அவர்கள் சொன்னார்கள், "நீ எதுவும் முயற்சி செய்யாவிட்டால், நீ திரும்பத் திரும்பப் பிறந்து

கொண்டே இருப்பாய். இந்தச் சக்கரம் சுற்றிக் கொண்டே இருக்கும். நினைவில் கொள், இதே வாழ்க்கை திரும்பவும் வரும். இதே பாலுணர்வு, இதே செல்வம், இதே உணவு, இதே அரண்மனைகள் திரும்பத் திரும்ப வரும்: ஆயிரக்கணக்கான தடவைகள் நீ இந்தச் சக்கரத்தில் சுழன்று கொண்டே இருப்பாய்.''

செல்வச் செழிப்பான மனிதனுக்கு, எல்லா இன்பங்களையும் அறிந்தவனுக்கு, இது ஒரு நல்ல வழியல்ல, இந்த ஒரே மாதிரியான வாழ்க்கை. ஒரே மாதிரியான வாழ்க்கையே பிரச்சனை. இதுதான் அவனுடைய கஷ்டம். அவனுக்குப் புதிதாக ஏதாவது வேண்டும். மகாவீரர், புத்தர், கிருஷ்ணர் சொன்னார்கள், ''புதிதாக எதுவுமில்லை. இந்த உலகம் பழமையானது. சொர்க்கத்தின் கீழ் புதியது எதுவுமில்லை, எல்லாம் அதே பழையவைதான். நீ இவை எல்லாவற்றையும் முன்பே சுவைத்திருக்கிறாய், அதையே தொடர்ந்து சுவைத்துக் கொண்டிருப்பாய். நீ ஒரு சக்கரத்தில், சுழலும் சக்கரத்தில் இருக்கிறாய். இதைக் கடந்து போ, இந்தச் சக்கரத்திலிருந்து வெளியே குதி.''

ஒரு செல்வச் செழிப்போடு இருப்பவனுக்கு, அவனுடைய சலிப்புணர்வை மேலும் அதிகப்படுத்தும் ஒரு யுக்தியை உருவாக்கிக் கொடுத்தால்தான், அவன் தியானத்தை நோக்கி நகர முடியும். ஒரு ஏழ்மையான மனிதனுக்கு, நீ சலிப்பைப் பற்றிப் பேசுவது அர்த்தமற்றதாக இருக்கும். ஒரு ஏழ்மையான மனிதன் ஒருபோதும் சலிப்படைவதில்லை – ஒருபோதும்! செல்வச் செழிப்பானவனே சலிப்படைகிறான். ஒரு ஏழ்மையான மனிதன் ஒருபோதும் சலிப்படைவதில்லை; அவன் எப்பொழுதும் எதிர்காலத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறான். ஏதோவொன்று நடக்கப்போகிறது, அதன்பின் எல்லாம் சரியாகிவிடும். ஏழ்மையான மனிதனுக்கு உறுதிமொழி தேவைப்படுகிறது. ஆனால் அந்த உறுதிமொழி மிக நீண்ட தூரத்தில் இருந்தால், அது அர்த்தமற்றதாகி விடுகிறது. அது உடனடியானதாய் இருக்க வேண்டும்.

ஜீஸஸ் சொன்னதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது, ''எனது வாழ்நாளிலேயே, உங்களது வாழ்நாளிலேயே, நீங்கள் கடவுளின் பேரரசைக் காண்பீர்கள்.'' இந்தக் கூற்று முழுக் கிறிஸ்துவ மதத்தையும் இருபது நூற்றாண்டுகளாகத் துரத்திக் கொண்டிருக் கிறது. ஏனெனில் ஜீஸஸ் சொல்லியது, ''உங்கள் வாழ்நாளி லேயே, உடனே, நீங்கள் கடவுளின் பேரரசைப் பார்க்கப் போகிறீர்கள்.'' ஆனால் கடவுளின் பேரரசு இன்னும் கூட வரவில்லை. ஆகவே அவர் சொன்னதன் அர்த்தம் என்ன? மேலும் அவர் சொன்னது, ''இந்த உலகம் விரைவில் முடியப் போகிறது, ஆகவே நேரத்தை வீணாக்காதீர்கள்! நேரம் குறைவாகவே உள்ளது.'' ஜீஸஸ் சொன்னார், ''நேரம் மிகவும் குறைவாகவே உள்ளது. அதை வீணடிப்பது முட்டாள்தனம். உடனடியாக உலகம் முடியப்போகிறது. அப்போது நீங்கள் உங்களுடைய நடத்தைக்குப் பதில் சொல்ல வேண்டும். ஆகவே பாவமன்னிப்புக் கேளுங்கள்.''

ஜீஸஸ் ஒரு பிறவிக் கோட்பாட்டின் மூலமாக ஒரு அவசர உணர்வை உண்டாக்கினார். அவருக்குத் தெரியும், புத்தர், மகா வீரருக்கும் தெரியும். அவர்களுக்குத் தெரிந்தது எல்லாம் சொல்லப்படவில்லை. அவர்கள் வடிவமைத்த யுக்திகளே அறியப்பட்டன. இது அவசரத்தை, சமீபத்தை உருவாக்கும் சாதனம், அப்போதுதான் நீ செயல்பட ஆரம்பிப்பாய் என்பதற்காக.

இந்தியா ஒரு பழமையான நாடு, செல்வச் செழிப்புள்ளது. எதிர்காலத்தைப் பற்றிய உறுதிமொழியால் ஒரு அவசரத்தை உருவாக்குவது என்ற கேள்விக்கே இடமில்லை. அவசரத்தை உருவாக்க ஒரே ஒரு வழி மட்டுமே இருந்தது. அது மேலும் அதிக சலிப்பை உருவாக்குவது. ஒரு மனிதன், அவன் திரும்பத் திரும்ப, திரும்பத் திரும்ப, எல்லையற்ற முறை, முடிவே யில்லாமல், பிறந்து கொண்டே இருக்கப்போகிறான் என்ற உணர்வடைகையில், உடனே அவன் வந்து கேட்கிறான், ''எப்படி இந்த சக்கரத்திலிருந்து வெளியே வருவது? இது மிகவும் அதிகம்.

இப்போது நான் இதை இனிமேலும் தொட முடியாது. அறிய முடியக் கூடியதை எல்லாம் நான் அறிந்துவிட்டேன். இதுவே திரும்பவும் நடந்தால் அது பயங்கரக் கனவு. நான் இதையே திரும்பத் திரும்பச் செய்ய விரும்பவில்லை, எனக்குப் புதிதாக ஏதாவது வேண்டும்.''

எனவே புத்தர், மகாவீரர் மற்றும் கிருஷ்ணர் சொன்னார்கள், ''இந்த ஆகாயத்தின் கீழே புதிதாக எதுவும் இல்லை. எல்லாமே பழையதும், ஒரே மாதிரியானதும் தான். மேலும் இதையெல்லாம் நீ பலபல பிறவிகளாகத் திரும்பத் திரும்பச் செய்து விட்டாய். அதோடு நீ பலபல பிறவிகளாக இதையே தான் செய்யப் போகிறாய். இப்படித் திரும்பத் திரும்பச் செய்வதைக் குறித்து எச்சரிக்கையுடன் இரு, உன்னுடைய சலிப்பைக் குறித்து எச்சரிக்கையுடன் இரு. ஒரு குதி குதித்துவிடு.''

இந்த யுக்தி மாறுபட்டது, ஆனால் நோக்கம் அதுவேதான். ஒரு தாண்டுதலைச் செய்! நகரு! உன்னை மாற்று! நீ எதுவாக இருந்தாலும், அதிலிருந்து உன்னை மாற்று.

நாம் மதத்தின் கூற்றுக்களை ஒரு சாதனமாக எடுத்துக் கொண்டால் அப்போது எந்த முரண்பாடும் இருக்காது. அப்போது ஜீஸஸும், கிருஷ்ணரும், முகமதுவும் மகாவீரரும் ஒன்றையே குறிப்பார்கள். அவர்கள் வித்தியாசமான மக்களுக்காக வித்தியாசமான பாதைகளை உருவாக்கினார்கள். வித்தியாசமான மனங்களுக்காக வித்தியாசமான யுக்திகளை, வித்தியாசமான அணுகுமுறையுள்ளவர்களுக்காக வித்தியாசமான கருத்துக்களை உருவாக்கினார்கள். ஆனால் அவைகளெல்லாம் விவாதம் செய்வதற்கான, சண்டை போட்டுக் கொள்வதற்கான கொள்கைகள் அல்ல. அவைகள் பயன்படுத்திக் கொண்டு பிறகு வீசிவிட வேண்டிய சாதனங்கள், யுக்திகள்.

இன்று இது போதும்.



# உன்னைத் தளர்த்தி அமைதியளிக்கும் சில யுக்திகள்

## சூத்திரங்கள்

10. "அன்பின் அணைப்பில் இருக்கும்போது, இனிமையான இளவரசியே, அணைப்பில், அந்த அழிவற்ற வாழ்வாயிருப்பதில், நுழைவாயாக."

11. "எறும்பு ஊர்வதை உணரும்போது, புலன்களின் கதவுகளை மூடு. அப்போது."

12. "ஒரு படுக்கையின் மேலோ, அல்லது ஒரு இருக்கையின் மேலோ இருக்கும்போது, நீ எடையற்றவனாக மாறுவாயாக, மனதைக் கடப்பாயாக."

★★★

மனிதனுக்கு ஒரு மையம் இருக்கிறது, ஆனால் அவன் அதில் இல்லாமலே வாழ்கிறான் – மையத்தில் இல்லாமல். அது உள்ளே ஒரு இறுக்கத்தை, ஒரு இடைவிடாத வேதனையை, அலைக்கழிப்பை உருவாக்குகிறது. நீ எங்கு இருக்க வேண்டுமோ அங்கு இல்லை; நீ உனது சரியான சமநிலையில் இல்லை. நீ சமநிலை இழந்து இருக்கிறாய், இந்தச் சமநிலை இழந்து இருப்பது, மையமில்லாமல் இருப்பது, இதுவே எல்லா மன இறுக்கங்களுக்கும் அடிப்படை. இது மிகவும் அதிகமாகப் போனால், நீ பயித்தியமாகி விடுவாய். ஒரு பயித்தியக்காரன் என்பவன் தன்னை விட்டு முற்றிலுமாக விலகிப் போய் விட்டவன்தான். ஞானமடைந்தவன் என்பவன் பயித்தியக் காரனுக்குத் தலைகீழானவன், அவ்வளவுதான். இவன் தன்னில் மையம் கொண்டிருப்பவன்.

நீ இரண்டிற்கும் இடையில் நீ முழுதாக உன்னை விட்டு விலகிப் போய்விடவில்லை. அதே சமயம் நீ உனது மையத்தி லும் இல்லை. நீ இரண்டின் இடைவெளியில் நகர்ந்து கொண் டிருக்கிறாய். சில சமயங்களில் நீ மிக மிக அதிக தூரம் விலகிப் போய்விடுவாய். ஆகவே அந்தத் தருணங்களில், குறிப்பிட்ட அந்த நேரத்தில் மட்டும் நீ பயித்தியமாகிறாய். கோபத்தில், பாலுணர்வில், இப்படி எதிலெல்லாம் நீ உன்னைவிட்டு வெகு தூரம் விலகிச் சென்றுவிடுகிறாயோ, அதிலெல்லாம் அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் பயித்தியமாகிறாய். அப்போது உனக்கும் பயித்தியக்காரனுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை. ஒரே வித்தியாசம், அவன் எப்பொழுதும் பயித்தியக்காரத்தனத்தில் இருக்கிறான், நீ குறிப்பிட்ட சமயம் மட்டும் அங்கு இருக்கிறாய். நீ திரும்ப வந்துவிடுவாய்.

நீ கோபத்தில் இருக்கையில் அது பயித்தியக்காரத்தனம் தான். ஆனால் அது நிரந்தரமானதல்ல. குணத்தைப் பொருத்த வரை எந்த வித்தியாசமும் அங்கில்லை; ஆனால் காலத்தைப் பொருத்தவரை அங்கு வித்தியாசமிருக்கிறது. குணம் அதுவே தான், சில சமயம் நீ பயித்தியக்காரத்தனத்தைத் தொடுகிறாய்,

மேலும் சில சமயங்களில், நீ தளர்வாக இருக்கையில், முழு அமைதியோடிருக்கையில், நீ உனது மையத்தையும் தொடு கிறாய். அவைதான் பேரானந்தமான கணங்கள். அவை நிகழ் கின்றன. அப்போது நீ ஒரு புத்தரை, ஒரு கிருஷ்ணரைப் போலத்தான். ஆனால் குறிப்பிட்ட தருணம் மட்டுமே, சிறிது நேரம் மட்டுமே. நீ அங்குத் தங்கமாட்டாய். உண்மையில், நாம் பேரானந்தத்தில் இருக்கிறோம் என்று நீ உணரும் கணத்திலேயே, நீ நகர்ந்து விடுகிறாய். நீ அதை அடையாளம் கண்டுகொள்ளும் போதே அது முடிந்துபோய் விடுகிறது, அந்த அளவு அது கணநேரமே இருக்கிறது.

நாம் இவை இரண்டிற்கும் இடையே தொடர்ந்து நகர்ந்து கொண்டிருக்கிறோம். ஆனால் இப்படி நகர்வது ஆபத்தானது. ஏனெனில் இப்படியிருக்கையில் நீ ஒரு சுய–உருவை, ஒரு நிலையான சுய–உருவை உருவாக்கிக் கொள்ள முடியாது. நீ யாரென்று உனக்குத் தெரியாது. நீ இடைவிடாமல் பயித்தியக் காரத்தனத்திற்கும், உன்னுள் மையம் கொண்டிருப்பதற்கும் இடையே நகர்ந்து கொண்டிருந்தால், இப்படி நகர்வது தொடர்ந்து இருந்தால், நீ உன்னைப் பற்றிய ஒரு உறுதியான உருவைக் கொள்ள முடியாது. உனக்கு ஒரு திரவமான உருவே இருக்கும். அப்போது உனக்கு நீ யார் என்று தெரியாது. ஒரு உறுதியான உருவை உருவாக்கிக் கொள்வது மிகவும் கடினமா யிருக்கிறது. அதனால்தான் நீ பேரானந்தத்தைத் தரக்கூடிய கணங்களைக் குறித்துக்கூடப் பயப்படுகிறாய், நீ இரண்டிற்கு மிடையே ஏதாவதொரு இடத்தில் உன்னைப் பொருத்திக் கொள்ளப் பார்க்கிறாய்.

நாம் சாதாரண மனிதன் என்று சொல்லும் ஒருவனின் அர்த்தம் இதுதான்: அவன் ஒருபோதும் தனது பயித்தியக்காரத் தனத்தைத் தொடுவதில்லை, அதே போல அவன் ஒருபோதும் முழு விடுதலையை, அந்தப் பரவசத்தையும் தொடுவதில்லை. அவன் ஒருபோதும் உறுதியான உருவை அடைவதில்லை. சாதாரண மனிதன் உண்மையில் ஒரு இறந்த மனிதன். இந்த இரண்டு புள்ளிகளுக்கு இடையில் வாழ்பவன். அதனால்தான்

தனிச்சிறப்பு பெற்ற எல்லோருமே – மாபெரும் ஓவியர்கள், கலை வல்லுனர்கள், கவிஞர்கள் – சாதாரணமானவர்களாய் இல்லை. இவர்கள் தண்ணீரைப் போன்றவர்கள். இவர்கள் சில சமயங்களில் மையத்தைத் தொடுகிறார்கள், சில சமயங்களில் பயித்தியமாகி விடுகிறார்கள். இவர்கள் இவை இரண்டிற்கும் இடையே வேகமாக நகர்கிறார்கள். ஆகையால், இவர்களின் வேதனை மிகப் பெரிது, இவர்களின் இறுக்கம் மிக அதிகம். இவர்கள் இரண்டு உள்ளங்களின் இடையில் வாழ வேண்டியிருக்கிறது. இவர்களை இடைவிடாது ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது. அதனால் தான் இவர்கள் தங்களுக்கு எந்த அடையாளமும் இல்லாதவர்களாக உணர்கின்றனர். 'காலின் வில்சன்' சொல்வதைப் போல், இவர்கள் வெளிமனிதர்களாகத் தங்களை உணர்கின்றனர். சாதாரண மக்களின் உலகத்தில், இவர்கள் வெளிமனிதர்கள் ஆகின்றனர்.

இந்த நான்கு வகைகளையும் வரையறுத்துக் கொள்வது மிகவும் உதவியாக இருக்கும். முதலாவது, சாதாரண மனிதன், தான் யாரென்று முடிவு செய்து விட்டவன், ஒரு உறுதியான, பொருந்திவிட்ட அடையாளத்தைக் கொண்டவன் – ஒரு டாக்டர், ஒரு என்ஜினியர், ஒரு புரொபஸர், ஒரு துறவி – அவன் யாரென்று அவன் முடிவு செய்து விட்டான். அங்கிருந்து ஒருபோதும் நகரமாட்டான். அவன் தொடர்ந்து அந்த அடையாளத்தை, அந்த உருவைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருப்பான்.

இரண்டாவது, திரவ உருக் கொண்டவர்கள் – கவிஞர்கள், கலைஞர்கள், ஓவியர்கள், இசைக் கலைஞர்கள், இவர்களுக்குத் தாங்கள் யாரென்று தெரியாது. சில சமயங்களில் இவர்கள் சாதாரணமானவர்களாய் மாறுகிறார்கள், சில சமயங்களில் இவர்கள் பயித்தியமாய் மாறுகிறார்கள், சில சமயங்களில் இவர்கள் ஒரு புத்தர் தொட்ட அதே பரவசத்தைத் தொடுகிறார்கள்.

மூன்றாவது, நிரந்தரமாகப் பயித்தியமாகிவிட்டவர்கள். அவர்கள் அவர்களைவிட்டு விலகிச் சென்று விட்டார்கள்; அவர்கள் ஒருபோதும் அவர்களுடைய வீட்டிற்குத் திரும்பப் போவதில்லை. அவர்கள் தங்களுக்கு ஒரு வீடு இருக்கிறது என்பதையே மறந்து விட்டவர்கள்.

நான்காவது, தங்களுடைய வீட்டை அடைந்தவர்கள்..... புத்தர், கிறிஸ்து, கிருஷ்ணர்.

இந்த நான்காவது ரகம் – தங்களது வீட்டை அடைந் தவர்கள் – இவர்கள் முழுமையாக ஓய்வு கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய உணர்வு நிலையில் எந்த இறுக்கமும், எந்த முயற்சியும், எந்த ஆசையும் இல்லை. ஒரே வார்த்தையில், அடைவதற்கு இனி எதுவுமில்லை. அவர்கள் இனி எதாகவும் மாற விரும்புவதில்லை. அவர்கள் இருக்கிறார்கள், இருந்து கொண்டிருக்கிறார்கள். மாறுவதில்லை! அவர்கள் அவர்களு டைய இருத்தலோடு அமைதி கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எதுவாக இருந்த போதிலும், அதோடு அவர்கள் அமைதி கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அதை மாற்ற விரும்புவ தில்லை. அவர்கள் வேறு எங்கும் போக விரும்பவில்லை. அவர்களுக்கு எதிர்காலம் கிடையாது. இந்தக் கணமே அவர்களுக்கு என்றுமிருப்பதாகி விடுகிறது..... எந்தத் தாகமும், எந்த ஆசையும் இல்லை. இதற்கு அர்த்தம் ஒரு புத்தர் சாப்பிடமாட்டார், ஒரு புத்தர் தூங்க மாட்டார் என்பதல்ல. அவர் சாப்பிடுவார், அவர் தூங்குவார். ஆனால் அவை அவருடைய ஆசைகளல்ல. ஒரு புத்தர் இவைகளை ஆசைகளாக முன்கூட்டியே நினைத்துக் கொள்வதில்லை; அவர் நாளைக்கு உண்பதில்லை, அவர் இன்று உண்பார்.

நினைவில் கொள்: நீ தொடர்ந்து நாளைக்குத்தான் சாப்பிடுகிறாய், நீ தொடர்ந்து எதிர்காலத்தில் சாப்பிடு பவனாகவே இருக்கிறாய்; நீ தொடர்ந்து இறந்த காலத்தில் சாப்பிடுபவனாக இருக்கிறாய், சாப்பிடுகிறாய். மிக அரிதாகவே நீ இன்று சாப்பிடுவது நடக்கிறது. நீ இன்று சாப்பிட்டுக் கொண்

டிருக்கும்போது, உன் மனம் வேறு எங்கோ போய்விடுகிறது. நீ உறங்குவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கையில், நீ நாளையில் சாப்பிட ஆரம்பிக்கிறாய் அல்லது பழைய நினைவு வருகிறது.

ஒரு புத்தர் இன்று சாப்பிடுகிறார். இந்தக் கணத்தில் அவர் வாழ்கிறார். அவர் அவருடைய வாழ்க்கையை எதிர்காலத்தில் நினைத்துப் பார்ப்பதில்லை; அவருக்கு எதிர்காலம் என்பதே இல்லை. எதிர்காலம் எப்போது வந்தாலும், அது நிகழ்கால மாகவே வருகிறது. அது எப்போதும் இன்று தான், அது எப்போதும் இப்போதுதான். ஆகவே ஒரு புத்தர் சாப்பிடுகிறார், ஆனால் அவர் ஒருபோதும் மனத்தால் சாப்பிடுவதில்லை – இதை நினைவில் கொள். தலைக்குள்ளே சாப்பிடுவது என்பது கிடையாது. நீ தொடர்ந்து மனத்தால் சாப்பிட்டுக் கொண்டிருக் கிறாய். இது மடத்தனம். ஏனெனில் சாப்பிடுவதற்காக உள்ளதல்ல மனம். உனது எல்லா மையங்களும் குழப்பமடை கின்றன; உனது முழு உடல்–மன ஏற்பாடுகளும் கலந்து கிடக்கின்றன, அது பயித்தியமாகவுள்ளது.

ஒரு புத்தர் உண்கிறார், ஆனால் அவர் ஒருபோதும் உண்பதைப் பற்றி யோசிப்பதில்லை. இது எல்லாவற்றிற்கும் பொருந்தும். ஆகவே சாப்பிடும் பொழுது ஒரு புத்தர் உன்னைப் போலவே சாதாரணமானவர்தான். ஒரு புத்தர் சாப்பிட மாட்டார், அல்லது தகிக்கும் வெயிலில் கூட அவருக்கு வேர்வை வராது, அல்லது குளிரடிக்கும் போது அவருக்குக் குளிராது என்றெல்லாம் நினைக்காதே. அவர் உணர்வார். ஆனால் அவர் எப்பொழுதும் நிகழ்காலத்திலேயே உணர்வார், ஒருபோதும் எதிர்காலத்தில் அல்ல. வேறொன்றாவது என்பதே அங்கில்லை. வேறொன் றாவது என்பது இல்லாவிட்டால், அங்கு இறுக்கம் இருக்காது. இதை மிகத் தெளிவாகப் புரிந்துகொள். வேறொன்றாக வேண்டும் என்பது இல்லாவிட்டால், அங்கு எப்படி இறுக்கம் வர முடியும்? இறுக்கம் என்பதன் அர்த்தம், நீ வேறு ஏதோ வொன்றாக, நீ அல்லாத மற்றொன்றாக விரும்புகிறாய் என்பதே.

நீ ஒரு ''அ'', நீ ''ஆ'' வாக விரும்புகிறாய்; நீ ஒரு ஏழை, நீ பணக்காரனாக விரும்புகிறாய்; நீ அசிங்கம், நீ அழகானவனாக விரும்புகிறாய்; நீ மடையன், நீ புத்திசாலியாக விரும்புகிறாய். விரும்புவது எதுவாக இருந்தாலும், ஆசைப்படுவது என்னவாக இருந்தாலும், அதன் வடிவம் எப்போதும் இதுதான்: 'அ' என்பது 'ஆ' ஆக விரும்புகிறது. நீ எதுவாக இருந்தாலும், நீ அதோடு நிறைவடைவது கிடையாது. நிறைவடைவதற்கு எப்பொழுதும் வேறு ஏதாவது தேவைப்பட்டுக் கொண்டேயிருக்கும் – ஆசைப் பட்டுக் கொண்டே இருக்கும் மனதின் செயல்பாடு இது. ஒன்றை நீ அடைந்தால், மறுபடியும் மனம் சொல்லும், ''இது போதாது. வேறு ஏதோவொன்று வேண்டும்.''

மனம் எப்பொழுதும் மேலும் மேலும் போய்க்கொண்டே இருக்கும். உனக்கு எது கிடைத்தாலும் அது பயனற்றதாகிவிடும். உனக்குக் கிடைத்த கணத்திலேயே, அது பயனற்றதாகிவிடும். இது தான் ஆசை. புத்தர் இதைத் 'திருஷ்னா' – வேறொன்றாவது – என்று அழைத்தார்.

நீ ஒரு பிறவியிலிருந்து மற்றொன்றுக்கு, ஒரு உலகத்தி லிருந்து மற்றொன்றுக்கு, நகர்ந்து கொண்டே இருக்கிறாய். அதோடு இது தொடர்ந்து கொண்டே இருக்கிறது. இது முடிவில்லாமல் தொடரக் கூடும். இதற்கு முடிவே கிடையாது, ஆசைக்கு முடிவேயில்லை, ஆசைப்பட்டுக் கொண்டிருப்பதற்கு முடிவேயில்லை. வேறொன்றாவது அங்கு இல்லையென்றால், நீ எப்படி இருக்கிறாயோ அதை அப்படியே ஏற்றுக்கொள்ள முடிந்தால் – அசிங்கமோ அழகோ, மடையனோ, புத்திசாலியோ, ஏழையோ பணக்காரனோ – நீ எதுவாக இருந்தபோதிலும், அதை முழுமையாக உன்னால் ஏற்றுக் கொள்ள முடிந்தால், மாறுவது நின்றுவிடுகிறது. அப்போது அங்கு இறுக்கமில்லை; அப்போது இறுக்கம் அங்கிருக்க முடியாது. அப்போது அங்கு வேதனை யில்லை. நீ அமைதியோடிருக்கிறாய், நீ கவலைப்படுவதில்லை. இது எதுவாகவும் ஆக வேண்டாத மனமே சுயத்தில் மையம் கொண்ட மனம் ஆகும்.

இதன் மறுதுருவத்தில் இருப்பவன்தான் பயித்தியக்காரன். அவனுக்கு இருத்தல் இல்லை, அவன் வெறும் மாறவேண்டி யதில் மட்டுமே இருக்கிறான். தான் என்ன என்பதை மறந்து விட்டவன் அவன். அதாவது 'அ' தன்னை முழுதாக மறந்துவிட்டான். அதோடு 'ஆ' ஆகவும் முயற்சிக்கிறான். தான் யார் என்பதை அவன் அறிவதில்லை, அவனுக்கு அவன் ஆசைப்படும் இலக்கு மட்டுமே தெரியும். அவன் இங்கு இப்பொழுது வாழ்வதில்லை, அவன் வேறு எங்கோ வாழ்கிறான். அதனால்தான் அவன் நமக்குக் கிறுக்கனாக, பயித்தியமாகத் தெரிகிறான். ஏனெனில் நீ இந்த உலகத்தில் வாழ்கிறாய், அவன் தன்னுடைய கனவுகளின் உலகத்தில் வாழ்கிறான். அவன் உன்னுடைய உலகத்தின் ஒரு பாகமல்ல. அவன் வேறு எங்கோ வாழ்கிறான். அவன் இங்கே, இப்பொழுதுள்ள அவனது உண்மைத்தன்மையை முழுதுமாக மறந்துவிட்டான். மேலும் அவனோடு சேர்த்து அவனைச் சுற்றியுள்ள இந்த உலகத்தையும் – உண்மையான இதையும் – அவன் மறந்துவிட்டான். அவன் ஒரு உண்மையல்லாத உலகத்தில் வாழ்கிறான். ஆனால் அவனுக்கு அது ஒன்றுதான் உண்மை.

ஒரு புத்தர் இந்தக் கணத்தில் தனது இருத்தலில் இருக்கிறார், பயித்தியக்காரன் இதன் எதிர்மறையாக இருக் கிறான். அவன் ஒருபோதும் இங்கு, இக்கணத்தில், அவனது இருத்தலில், வாழ்வதில்லை. மாறாக எப்போதும் மாற வேண்டியதில் – எங்கோ தொடுவானத்தில் – இருக்கிறான். இவை இரண்டும் இரு துருவங்கள்.

நினைவில் கொள், பயித்தியக்காரன் உன் எதிர்மறை அல்ல, அவன் ஒரு புத்தருக்கு எதிர்மறையானவன். மேலும் நினைவில் கொள், ஒரு புத்தர் உனக்கு எதிர்மறை ஆனவர் அல்ல, அவர் ஒரு பயித்தியக்காரனுக்கே எதிர்மறையானவர். நீ இடைப்பட்டவன். நீ இரண்டும் கலந்தவன்; உனக்குப் பயித்தியக் காரத்தனம் உண்டு, நீ ஞானமடைந்த கணங்களும் உண்டு.

ஆனால் இரண்டும் கலந்தவன் சில நேரங்களில், நீ ஓய்வாக இருந்தால், திடீரென மையத்தின் தரிசனம் கிடைப்பதுண்டு. நீ ஓய்வாக, தளர்வாக இருக்கும் கணங்கள் உண்டு. நீ நேசிக்கிறாய்; ஒரு சில கணங்கள், ஒரே ஒரு கணம், உனது அன்பிற்குரியவர், நீ நேசிப்பவர் உன்னுடன் இருக்கிறார். இது நீண்டகால ஆசை, நீண்டகால முயற்சி, இப்போது கடைசியில் நீ நேசிப்பவர் உன்னுடன் இருக்கிறார். ஒரு கணம் மனம் நின்று விடுகிறது. நீ நேசிப்பவருடன் இருக்க நீண்ட முயற்சி செய்து வந்தாய். மனம் ஏங்கிக்கொண்டிருந்தது, ஏங்கிக் கொண்டிருந்தது, நீண்ட நாளாக ஏங்கிக் கொண்டிருந்தது, மேலும் மனம் எப்பொழுதும் நேசிப்பவனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது, நினைத்துக் கொண்டே இருந்தது. இப்போது நேசிப்பவன் இங்கு இருக்கிறான். ஆனால் திடீரென்று மனதால் யோசிக்க முடியவில்லை. அந்தப் பழைய செயல்பாட்டைத் தொடர முடியாது. நீ நேசிப்பவரைக் கேட்டுக் கொண்டிருந்தாய். இப்போது நேசிப்பவர் இங்கிருக்கிறார், ஆகவே மனம் நின்று விடுகிறது.

நேசிப்பவர் இங்கு வந்த அந்தக் கணத்தில், எந்த ஆசையும் இல்லாமல் போய்விட்டது. நீ ஓய்வடைந்தாய், திடீரென நீ உன்னிடத்திலேயே திரும்ப வீசப்பட்டாய். நேசிப்பவர் அப்படி உன்னைத் திரும்ப உன்னிடமே வீசாவிட்டால் அது நேசமே அல்ல. நேசிப்பவரின் முன்னிலையில் நீ நீயாக மாறிவிட்டால் அது நேசமே அல்ல. நேசிப்பவரின் முன்னிலையில் மனம் வேலை செய்வது முழுதுமாக நின்று விடவில்லையென்றால், அது நேசமே அல்ல.

இதுபோலச் சில சமயங்களில் மனம் நின்றுவிடும். அப்போது கண நேரத்திற்கு எந்த ஆசையும் அங்கே இருக்காது. அன்பு ஆசையற்றது. இதைப் புரிந்துகொள்ள முயற்சி செய்: நீ அன்புக்காக ஆசைப்படலாம், ஆனால் அன்பு ஆசையற்றது. அன்பு, நேசம் நிகழும்போது, அங்கு ஆசை இருப்பதில்லை; மனம் நிசப்தமாக இருக்கிறது, அமைதியாக, ஓய்வாக இருக்கிறது. வேறொன்றாகும் எதுவுமில்லை, போகும் இடம் எதுவுமில்லை.

இது எப்போதாவது நடக்குமேயானால், அப்போதும் இது ஒரு சில கணங்களுக்கு மட்டுமே நடக்கும். நீ உண்மையாக யாரையாவது நேசித்திருந்தால், அப்போது சில கணங்களுக்கு இது நடக்கும். இது ஒரு அதிர்ச்சி. மனம் வேலை செய்ய முடியாது. ஏனெனில் அதன் ,முழு வேலையும் பயனற்று, மடத்தனமாக ஆகிவிட்டது. யாருக்காக நீ காத்திருந்தாயோ, அவர் இங்கு இருக்கிறார். ஆகவே இப்போது என்ன செய்வது என்று மனதால் யோசிக்க முடிவதில்லை.

ஒரு சில கணங்களுக்கு அந்த முழு இயந்திரத்தனமும் நின்று விடுகிறது. நீ உன்னில் ஒய்வு கொள்கிறாய். நீ உனது இருத்தலை, உனது மையத்தைத் தொட்டு விடுகிறாய். நீ நன்றாக இருத்தலின் ஊற்றுக் கண்ணில் இருப்பதாக உணருகிறாய். ஒரு பேரானந்தம் உன்னில் நிறைகிறது, ஒரு நறுமணம் உன்னைச் சூழ்கிறது. திடீரென நீ முன்பிருந்த அதே பழைய ஆள் அல்ல.

அதனால் தான் அன்பு அவ்வளவு தூரம் மாற்றி விடுகிறது. நீ அன்பு கொண்டிருந்தால் உன்னால் அதை மறைக்க முடியாது. அது சாத்தியமே அல்ல! நீ அன்பு கொண்டிருந்தால், அது வெளியே வந்துவிடும். உன் கண்கள், உன் முகம், நீ உட்காரும் விதம், நீ நடக்கும் விதம், எல்லாம் அதைக் காட்டிக் கொடுத்துவிடும். ஏனெனில் நீ அதே பழைய ஆள் அல்ல, ஆசைப்பட்டுக்கொண்டே இருக்கும் மனம் அங்கிருக்காது. ஒரு சில கணங்களுக்கு மட்டும் நீ ஒரு புத்தரைப் போல இருப்பாய். இதை நீண்ட நேரம் தொடர முடியாது. ஏனெனில் இது ஒரு அதிர்ச்சி. உடனே மனம் மறுபடியும் யோசிக்க, பல வழிகளையும், காரணங்களையும் கண்டுபிடிக்க ஆரம்பித்து விடும்.

உதாரணமாக நீ உனது இலக்கை எட்டிவிட்டாய், நீ உனது அன்பைப் பெற்று விட்டாய் என்று மனம் யோசிக்க ஆரம்பிக்கும். ஆகவே இப்போது என்ன? நீ என்ன செய்யப் போகிறாய்? என்று கேட்கும். பிறகு உபதேசம் செய்வது ஆரம்பிக்கும், விவாதங்கள் துவங்கும். நீ யோசிக்க

ஆரம்பிப்பாய், ''இன்று நான் நேசிப்பவரை அடைந்து விட்டேன், ஆனால் இதுவே நாளையும் நடக்குமா?'' மனம் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டது. மனம் வேலை செய்ய ஆரம்பித்த அந்தக் கணத்திலேயே, நீ மறுபடியும் வேறொன் றாவதற்கு, அடைவதற்கு நகர்ந்துவிட்டாய்.

சில சமயங்களில் அன்பில்லாமல், களைப்பு, அயர்ச்சி மூலமாகக் கூட ஆசை கொள்வது நிற்பதுண்டு. அப்போதும் ஒருவன் அவனிடமே வீசப்படுகிறான். நீ உன்னிடமிருந்து விலகி இல்லாதபோது, அது எதனால் ஏற்பட்டதாய் இருந்த போதிலும், நீ உன்னிடமே தான் வந்தாக வேண்டும். ஒருவன் முழுதாகக் களைத்து, அல்லது அயர்ச்சியில் நொந்து விடும்போது, ஒருவன் யோசிக்கவோ, ஆசை வைக்கவோ நினைத்துக் கூடப் பார்க்க முடியாத அளவு ஆகிவிடும்போது, ஒருவன் முழுதான மன முடைந்து, எந்த எதிர்கால நம்பிக்கையும் இல்லாமல் ஆகிவிடும் போது, அப்போது திடீரென ஒருவன் தனது வீட்டிலிருப்பதாக உணருவான். இப்போது அவனால் எங்கும் போக முடியாது. எல்லாக் கதவுகளும் மூடிவிட்டன, எல்லா எதிர்கால நம்பிக்கை களும் போய்விட்டன. இப்போது அதோடு ஆசைகளும், வேறொன்றாவதும் சேர்ந்து போய்விடுகிறது.

இது நீண்ட நேரத்திற்கு இருக்காது. ஏனெனில் உனது மனத்தில் ஒரு இயங்குமுறை உள்ளது. அது சில கணங்களுக்கு இல்லாமல் போகலாம். ஆனால் திடீரென அது மறுபடியும் உயிர்த்தெழுந்து விடும். ஏனெனில் நீ எதிர்கால நம்பிக்கை யில்லாமல் வாழ முடியாது. நீ ஏதாவது ஒரு எதிர்கால நம்பிக்கையைக் கண்டுபிடித்தாக வேண்டும். நீ ஆசையில்லாமல் வாழ முடியாது. ஏனெனில் உனக்கு ஆசையில்லாமல் வாழ்வது எப்படி என்று தெரியாது. ஆகவே நீ ஏதாவது ஆசையை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும்.

உன் மனம் செயல்படுவது நின்றுபோகும் படியாக நடக்கும் எந்தச் சூழ்நிலையிலும், நீ உனது மையத்தில் இருப்பாய். நீ விடுமுறையில் இருக்கிறாய், ஒரு காட்டிலோ, ஒரு

மலை வாசஸ்தலத்திலோ அல்லது ஒரு பீச்சிலோ இருக்கிறாய் : திடீரென உனது வழக்கமான மனம் வேலை செய்ய முடியாது. அலுவலகம் இங்கேயில்லை, மனைவி இங்கேயில்லை அல்லது கணவன் இங்கேயில்லை. திடீரென மிகவும் புதிய சூழ்நிலை. ஆகவே மனதிற்கு இதில் வேலையை ஆரம்பிக்க, இதில் தன்னைப் பொருத்திக் கொள்ள சிறிது நேரம் ஆகும். மனம் பொருந்தாமல் உணரும். இந்த மிகவும் புதிய சூழ்நிலையில் நீ தளர்வு அடைகிறாய், அப்போது நீ உனது மையத்தில் இருக்கிறாய்.

இந்தக் கணங்களில் நீ ஒரு புத்தராகிறாய். ஆனால் இவை வெறும் ஒரு சில கணங்களே. இதன்பின் இது உன்னைத் துரத்தும், நீ இதைத் திரும்பக் கொண்டுவர மீண்டும் மீண்டும் இதே வகையில் செய்து பார்ப்பாய். ஆனால் நினைவில் கொள், அது இயற்கையாக ஏற்பட்டது. ஆகவே நீ அதைத் திரும்பச் செய்ய முடியாது. நீ எந்த அளவு அதைத் திரும்பச் செய்ய முயற்சிக்கிறாயோ, அந்த அளவு அது உன்னிடம் வருவது சாத்தியமற்றுப் போகும்.

இது எல்லோருக்கும் நிகழ்கிறது. நீ யாரையாவது நேசிக்கிறாய், முதல் சந்திப்பில் உன் மனம் சில கணங்களுக்கு நின்று விடுகிறது. பின் நீங்கள் திருமணம் செய்து கொள்கிறீர்கள். ஏன் நீங்கள் திருமணம் செய்து கொண்டீர்கள்? அந்த அழகான கணங்களைத் திரும்பத் திரும்பக் கொண்டு வருவதற்காகவே. ஆனால் அவை நிகழ்ந்த போது உங்களுக்குத் திருமணம் ஆகவில்லை. திருமணத்திற்குப் பின் அவை நடக்க முடியாது. ஏனெனில் முழுச் சூழ்நிலையும் மாறிவிட்டது. இரண்டு பேர் முதன் முதலாகச் சந்திக்கும் பொழுது, அந்த முழுச் சூழ்நிலையும் புதியது. அவர்களுடைய மனம் அதில் வேலை செய்ய முடியாது. அவர்கள் அதில் மூழ்கடிக்கப்படுகின்றனர் – புது அனுபவத்தால், புது வாழ்வால், புது மலர்ச்சியால் அவர்கள் நிறைந்து விடுகின்றனர். பிறகு மனம் வேலை செய்ய ஆரம்பிக்கிறது. அப்போது அவர்கள் நினைக்கிறார்கள், "இது எவ்வளவு ஒரு

அருமையான கணம்! நான் இதைத் தினந்தோறும் திரும்பிச் செய்ய விரும்புகிறேன். ஆகவே நான் திருமணம் செய்துகொள்ள வேண்டும்.''

மனம் எல்லாவற்றையும் அழித்துவிடும். திருமணம் என்றால் மனம். அன்பு இயற்கையானது; திருமணம் கணக்குப் போடுவது. திருமணம் செய்து கொள்வது ஒரு கணக்குப் போட்டுச் செய்யும் செயல். பிறகு நீ அந்தக் கணங்களுக்காகக் காத்திருக்கிறாய், ஆனால் அவை ஒருபோதும் மறுபடியும் வருவதில்லை. அதனால் தான் ஒவ்வொரு திருமணமான ஆணும், பெண்ணும் மனமுடைந்து போயுள்ளனர் – ஏனெனில் அவர்கள் ஏற்கனவே நடந்த சிலவற்றிற்காகக் காத்திருக்கின்றனர். ஏன் அவைகள் திரும்ப நிகழ்வதில்லை? அவை நடக்க முடியாது. ஏனெனில் நீ முழுச் சூழ்நிலையையும் இழந்து விட்டாய். இப்போது நீ புதிது அல்ல; இப்போது இயற்கையான எதுவும் கிடையாது; இப்போது அன்பு செய்வது என்பது ஒரு வழக்கமான செயல். இப்போது எல்லாமே எதிர்பார்க்கப்படுவதும், உரிமை கோருவதுமாக ஆகிவிட்டது. இப்போது அன்பு செய்வது ஒரு கடமையாக மாறிவிட்டது, ஒரு வேடிக்கை அல்ல. முதலில் அது வேடிக்கையாக இருந்தது; இப்போது அது ஒரு கடமை. வேடிக்கை கொடுக்குமளவு பேரானந்தத்தைக் கடமையால் உனக்குக் கொடுக்க முடியாது. அது சாத்தியமேயில்லை! இது முழுவதும் உனது மனதால் உருவாக்கப்பட்டது. இப்போது நீ எதிர்பார்த்துக் கொண்டே போகிறாய். ஆனால் நீ எந்த அளவு எதிர்பார்க்கிறாயோ அந்த அளவு அது நடப்பதற்கான சாத்தியம் குறையவே செய்யும்.

இது எல்லா இடத்திலும் நிகழ்கிறது, வெறும் திருமணத்தில் மட்டுமல்ல. நீ ஒரு குருவிடம் போகிறாய், அந்த அனுபவம் புதியதாக இருக்கிறது. அவரது முன்னிலை, அவரது சொற்கள், அவரது வாழ்க்கை முறை எல்லாமே புதியதாக இருக்கிறது. திடீரென உனது மனம் வேலை செய்வது நிற்கிறது.

பிறகு நீ நினைக்கிறாய், ''இவர்தான் எனக்கான மனிதன், ஆகவே தினந்தோறும் நான் போக வேண்டும்.'' இப்படியாக நீ அவனைத் திருமணம் செய்து கொள்கிறாய். மெது மெதுவாக மனம் உடைந்து போகிறது. ஏனெனில் நீ அதைக் கடமையாக, வழக்கமாக மாற்றி விட்டாய். இப்போது அந்தப் பழையன போன்ற அனுபவங்கள் வருவதில்லை. பிறகு அந்த மனிதன் உன்னை ஏமாற்றிவிட்டதாக அல்லது ஏதோவொரு வகையில் நீ முட்டாளாக்கப்பட்டுவிட்டதாக நீ நினைக்கிறாய். பிறகு நீ நினைக்கிறாய், ''அந்த முதல் அனுபவம் வெறும் பிரமை. நான் வசியமோ அல்லது வேறு ஏதாவதோ ஆகியிருக்க வேண்டும். அது உண்மையல்ல.''

அது உண்மைதான். உனது வழக்கமான மனம் அதை உண்மையற்றதாக ஆக்குகிறது. பிறகு உன் மனம் எதிர்பார்க்க ஆரம்பித்தது. ஆனால் முதல் முறை அது நடந்தபோது நீ எதிர்பார்த்துக் கொண்டிருக்கவில்லை. நீ எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் வந்திருந்தாய், நீ எது நடந்தாலும் ஏற்றுக் கொள்ளும் திறந்த நிலையில் வந்திருந்தாய்.

இப்போது தினந்தோறும் நீ எதிர்பார்ப்புகளுடன் வருகிறாய், மூடிய மனத்தோடு வருகிறாய். அது நிகழ முடியாது. அது எப்பொழுதும் திறந்த மனத்தோடு இருக்கும் போதுதான் நிகழ்கிறது; அது எப்பொழுதும் புதிய சூழ்நிலையில் தான் நிகழ்கிறது. இதன் அர்த்தம் நீ தினமும் உனது சூழ்நிலையை மாற்றிக்கொண்டே இருக்க வேண்டும் என்பதல்ல. மாறாக, உனது மனத்தை ஒரு குறிப்பிட்ட வழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ள அனுமதிக்காதே என்பதே அர்த்தம். பிறகு தினந்தோறும் உன் மனைவி புதிதாக இருப்பாள், உன் கணவன் புதிதாக இருப்பான். ஆனால் ஒரே மாதிரியான எதிர்பார்ப்புகளை உருவாக்கிக்கொள்ள உன் மனத்தை அனுமதிக்காதே; மனதை எதிர்காலத்திற்குப் போக அனுமதிக்காதே. பிறகு உனது குரு தினந்தோறும் புதிதாயிருப்பார், உனது நண்பன் தினந்தோறும்

புதிதாயிருப்பான். இந்த உலகத்தில் மனதைத் தவிர மற்ற எல்லாம் புதியவையே. மனம் ஒன்று மட்டுமே பழையது. அது எப்பொழுதுமே பழையதுதான்.

சூரியன் தினந்தோறும் புதிதாக உதிக்கிறது. அது பழைய சூரியன் அல்ல. சந்திரன் புதிது; பகல், இரவு, மலர்கள், மரங்கள்..... எல்லாமே புதியது, உனது மனதைத் தவிர. உனது மனம் எப்பொழுதுமே பழையது - நினைவில் கொள், எப்பொழுதும் - ஏனெனில் மனதிற்கு இறந்த காலம் வேண்டும், அனுபவங்களின் சேர்க்கை, அனுபவங்களின் எதிர்பார்ப்பு வேண்டும். மனதிற்கு இறந்தகாலம் தேவை, வாழ்க்கைக்கு நிகழ்காலம் தேவை. வாழ்க்கை எப்பொழுதும் பேரானந்தமாய் இருக்கிறது - மனம் ஒருபோதும் அப்படியிருப்பதில்லை. எப்பொழுதெல்லாம் உன் மனத்தை நீ உள்ளே வர அனுமதிக்கிறாயோ, அப்பொழுதெல்லாம் துன்பம் உள்ளே வருகிறது.

இந்த இயற்கையான கணங்கள் மறுபடியும் திரும்பக் கொண்டுவர முடியாதவை. ஆகவே என்ன செய்வது? எப்படி ஒய்வான நிலையிலேயே தொடர்ந்து இருப்பது? இந்த மூன்று சூத்திரங்களும் இதற்கானவை. இந்த மூன்று சூத்திரங்களும், உன்னை நன்றாக உணர வைப்பது சம்பந்தப்பட்டவை, நரம்பு களைத் தளர்த்துவதற்கான யுக்திகள்.

எப்படி இருத்தலில் இருப்பது? எப்படி வேறொன்றா வதற்கு நகராமல் இருப்பது? இது சிரமமானது, கடினமானது. ஆனால் இந்த யுக்திகள் உதவ முடியும். இந்த யுக்திகள் உன்னை உன்னிடத்திலேயே வீசுபவை.

## 10. அணைப்பாக மாறு

முதல் தளர்வுபடுத்தும் யுக்தி: ''அன்பின் அணைப்பில் இருக்கும்போது, இனிமையான இளவரசியே, அணைப்பில், அந்த அழிவற்ற வாழ்வாயிருப்பதில், நுழைவாயாக.''

சிவா அன்பிலிருந்து துவங்குகிறார். முதல் யுக்தி அன்போடு சம்பந்தப்பட்டது. ஏனெனில் நீ தளர்வுறும் அனுபவங்களில், அன்பே மிகவும் நெருங்கிய விஷயமாயுள்ளது. உன்னால் அன்பு செலுத்த முடியவில்லையென்றால், நீ தளர்வுறுவதற்கு சாத்தியமே இல்லை. நீ தளர்வுபடுத்திக்கொள்ள முடிந்தால், உனது வாழ்க்கை ஒரு அன்பான வாழ்க்கையாக மாறும்.

ஒரு இறுக்கமான மனிதன் நேசிக்க முடியாது. ஏன்? ஒரு இறுக்கமான மனிதன் எப்பொழுதும் பயன்களுடன் வாழ்கிறான். அவன் பணம் சம்பாதிக்க முடியும், ஆனால் அவனால் அன்பு செலுத்த முடியாது. ஏனெனில் அன்பு பயனற்றது. அன்பு ஒரு பொருளல்ல. நீ அதைச் சேர்த்துவைக்க முடியாது, நீ அதன்மூலம் வங்கிச் சேமிப்பை அதிகரிக்க முடியாது, நீ அதன்மூலம் உனது ஆணவத்தைப் பெருக்கிக்கொள்ள முடியாது. உண்மையில், அன்பு மிகவும் மடத்தனமான செயல். அதற்கு அதைத் தாண்டி எந்த அர்த்தமும் இல்லை, அதைத் தாண்டி எந்தப் பயனும் இல்லை. அது அதிலேயேதான் வாழ்கிறது, வேறு எதற்காகவும் அல்ல.

நீ ஏதோ ஒன்றிற்காகப் பணம் சம்பாதிக்கிறாய் – இது ஒரு உபாயமாக இருக்கிறது. நீ யாரோ ஒருவர் குடியிருப்பதற்காக வீடு கட்டுகிறாய் – இது ஒரு உபாயமாக இருக்கிறது. அன்பு ஒரு உபாயம் அல்ல. நீ ஏன் நேசிக்கிறாய்? நீ எதற்காக நேசிக்கிறாய்? நேசம் அதனுடனேயே முடிந்துவிடுவது. அதனால்தான், ஒரு கணக்குப் போடும், தர்க்கரீதியான மனதால், பயனை எதிர் பார்க்கும் மனதால், நேசிக்க முடியாது. மேலும் பயனின் அடிப்படையிலேயே எப்பொழுதும் சிந்திக்கும் மனம் இறுக்கமாகவே இருக்கும். ஏனெனில் பயன் எப்போதும் எதிர்காலத்தில் பூர்த்தியடைவதாகவே இருக்க முடியும். ஒருபோதும் இங்கு, இப்போது நிறைவேற முடியாது.

நீ ஒரு வீடு கட்டிக்கொண்டிருக்கிறாய் – நீ இப்பொழுதே அதில் வாழ முடியாது. நீ முதலில் அதைக் கட்டி முடிக்க

வேண்டும். நீ எதிர்காலத்தில் அதில் வாழலாம். ஆனால் இப்பொழுது முடியாது. நீ பணம் சம்பாதித்துக் கொண்டிருக்கிறாய் – எதிர்காலத்தில் பெரும் வங்கி சேமிப்பை உருவாக்க முடியும். ஆனால் இப்பொழுது முடியாது. இப்பொழுது நீ உபாயங்களைப் பயன்படுத்த வேண்டும், அதன் முடிவுகள் எதிர்காலத்தில் கிடைக்கும்.

அன்பு எப்பொழுதும் இங்கேயிருக்கிறது; அதற்கு எந்த எதிர்காலமும் இல்லை. அதனால்தான் அன்பு தியானத்திற்கு அவ்வளவு அருகில் இருக்கிறது. அதனால்தான் இறப்பும் தியானத்திற்கு அவ்வளவு அருகில் இருக்கிறது – ஏனெனில் இறப்பும் எப்பொழுதும் இங்கு, இப்பொழுது இருப்பதே. அது ஒருபோதும் எதிர்காலத்தில் நிகழ முடியாது. நீ எதிர்காலத்தில் இறக்க முடியுமா? நீ நிகழ்காலத்தில் மட்டுமே இறக்க முடியும். எதிர்காலத்தில் இறந்தவர்கள் ஒருவரும் இல்லை. எப்படி நீ எதிர்காலத்தில் இறக்க முடியும்? அல்லது எப்படி நீ இறந்த காலத்தில் இறக்க முடியும்? இறந்த காலம் போய்விட்டது, அது இனிமேல் இல்லை. ஆகவே நீ அதில் இறக்க முடியாது. எதிர்காலம் இன்னும் வரவில்லை. ஆகவே நீ எப்படி அதில் இறக்க முடியும்?

இறப்பு எப்பொழுதும் நிகழ்காலத்திலேயே நடக்கிறது. இறப்பு, அன்பு, தியானம் – இவை எல்லாம் எப்பொழுதும் நிகழ்காலத்திலேயே நடக்கின்றன. ஆகவே உனக்கு இறப்பைப் பற்றிய பயம் இருந்தால், நீ நேசிக்க முடியாது. உனக்கு அன்பைப் பற்றிய பயம் இருந்தால், நீ தியானம் செய்ய முடியாது. உனக்குத் தியானத்தைக் குறித்துப் பயம் இருந்தால், உனது வாழ்க்கையே பயனற்றது. பயனற்றது என்று சொல்வதன் பொருள் பயன் குறித்தது அல்ல. மாறாக உனது வாழ்வில் நீ எந்தப் பேரானந்தத்தையும் உணர மாட்டாய் என்கிற விதத்தில் பயனற்றது. அது வீணானதாகவே இருக்கும்.

இந்த மூன்றையும் தொடர்பு படுத்துவது ஆச்சரியமாகத் தெரியலாம்: அன்பு, தியானம், இறப்பு. அப்படியல்ல அது!

அவை ஒரே மாதிரியான அனுபவங்கள். ஆகவே நீ ஒன்றில் நுழைய முடிந்தால், நீ மற்ற இரண்டிலும் நுழைய முடியும்.

சிவா அன்பிலிருந்து துவங்குகிறார். அவர் சொல்கிறார், ''அன்பின் அணைப்பில் இருக்கும்போது, இனிமையான இளவரசியே, அணைப்பில், அந்த அழிவற்ற வாழ்வா யிருப்பதில், நுழைவாயாக.'' இதன் அர்த்தம் என்ன? பல விஷயங்கள்! ஒன்று: நீ அன்பு செய்யப்படும்பொழுது இறந்தகாலம் நின்றுவிடுகிறது, எதிர்காலம் இல்லாமல் போகிறது. நீ நிகழ்காலத்தின் பரிமாணத்திற்கு வருகிறாய். நீ 'இப்பொழுதிற்கு' நகர்கிறாய். நீ யாரையாவது நேசித்ததுண்டா? நீ யாரையாவது நேசித்திருந்தால், அப்போது உனக்கு அங்கு மனம் இல்லாமல் போய்விடுகிறது என்பது தெரிந்திருக்கும்.

இதனால் தான் அறிவாளிகள் என்று அழைக்கப்படுபவர்கள் சொல்கிறார்கள், அன்பு குருடானது, மனமற்றது, பயித்தியக் காரத்தனமானது என்று. அவர்கள் சொல்வதன் சாரம் சரிதான். நேசிப்பவர்கள் குருடுதான். ஏனெனில் எதிர்காலத்தைப் பார்க்கும் கண்கள் அவர்களுக்கில்லை. அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்று கணக்குப் போடும் மனம் அவர்களுக் கில்லை. அவர்கள் குருடாக இருக்கிறார்கள்; அவர்களால் இறந்தகாலத்தைப் பார்க்கவும் முடியாது. நேசிப்பவர்களுக்கு என்ன நடக்கிறது? அவர்கள் இறந்த காலம் எதிர்காலம் பற்றிக் கருதாமல், விளைவுகளைப் பற்றிக் கவலைப்படாமல், அவர்கள் இங்கு, இப்பொழுதில் நகர்ந்து விடுகின்றனர். அதனால்தான் அவர்கள் குருடர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். அவர்கள் அப்படித்தான்! கணக்குப் போடுபவர்களுக்கு அவர்கள் குருடு தான், கணக்குப் போடாதவர்களுக்கு அவர்கள் உண்மையைத் தரிசிப்பவர்கள். கணக்குப் போடாதவர்கள் அன்பையே உண்மை யான கண்களாக, உண்மையான பார்வையாகக் காண்பார்கள்.

ஆகவே முதல் விஷயம்: அன்பிருக்கும் கணத்தில், இறந்த காலமும் எதிர்காலமும் இல்லாமல் போய்விடும். இப்போது,

ஒரு நுட்பமான விஷயத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். இறந்த காலமும் எதிர்காலமும் இல்லாதபொழுது, நீ இந்தக் கணத்தை நிகழ்காலம் என்று அழைக்க முடியுமா? இது நிகழ்காலமாவது அவை இரண்டிற்கும் இடையேதான் – இறந்த காலம் எதிர்காலம் இரண்டின் இடையேதான். இது அவைகளைச் சார்ந்து சொல்லப்படுவதே. இறந்தகாலமும் எதிர்காலமும் இல்லாத பொழுது, இதை நிகழ்காலம் என்று அழைப்பதில் என்ன அர்த்தம் இருக்கிறது? அது அர்த்தமற்றது. அதனால்தான் சிவா நிகழ்காலம் என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை. அவர் சொல்கிறார், ''அழிவற்ற வாழ்வாயிருப்பதில்.'' அவர் என்றும் இருப்பதை அர்த்தமாகச் சொல்கிறார்..... காலமற்றதில் நுழைவதைச் சொல்கிறார்.

நாம் காலத்தை இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்று மூன்றாகப் பிரித்திருக்கிறோம். இப்படிப் பிரித்துள்ளது தவறு, முற்றிலும் தவறு. காலம் உண்மையில் இறந்தகாலமும் எதிர்காலமும்தான். இப்போது நிகழ்வது காலத்தின் பாகமல்ல. இப்போது நிகழ்வது என்றும் இருப்பதன் ஒரு பாகம். நடந்து முடிந்தது காலத்தைச் சேர்ந்தது; நடக்கப் போவது காலத்தைச் சேர்ந்தது. நடந்து கொண்டிருப்பது, இது காலமல்ல. ஏனெனில் இது ஒருபோதும் முடிவதில்லை – இது எப்பொழுதும் இங்கு இருக்கிறது. இப்பொழுதும் எப்போதும் இங்கேயே இருக்கிறது. இது எப்பொழுது இங்கிருப்பது! இந்த இப்பொழுது என்பது சாசுவதமானது, என்றும் இருப்பது.

நீ இறந்தகாலத்திலிருந்து நகர்ந்து வந்தால், நீ ஒருபோதும் நிகழ்காலத்திற்கு வருவதில்லை. இறந்த காலத்திலிருந்து நீ எதிர்காலத்திற்கே எப்பொழுதும் நகர்கிறாய்; அங்கு நிகழ்காலம் என்ற ஒரு கணம் வருவதேயில்லை. இறந்த காலத்திலிருந்து நீ எதிர்காலத்திற்கே எப்பொழுதும் நகர்கிறாய். நிகழ்காலத்தி லிருந்து நீ ஒருபோதும் எதிர்காலத்திற்கு நகர முடியாது. நிகழ்காலத்திலிருந்து நீ மேலும் மேலும் ஆழமாக, மேலும்

மேலும் அதிகம் நிகழ்காலத்திற்குள் செல்கிறாய். இது என்றுமே அழியாத வாழ்வு.

இதை நாம் இந்த விதமாகச் சொல்லலாம்: இறந்தகாலத்தி லிருந்து எதிர்காலத்திற்கு உள்ளதே காலம். காலம் என்றால் நீ ஒரு தளத்தில் நகர்வது, ஒரு நேர்க் கோட்டில் நகர்வது. அல்லது நாம் அதைப் படுக்கைத்தளம் என்று அழைக்கலாம். ஆனால் நீ நிகழ்காலத்தில் இருக்கும் கணத்தில் பரிமாணம் மாறுகிறது : நீ செங்குத்துக் கோட்டில் நகர்கிறாய் – மேலே அல்லது கீழே, உயரத்தை நோக்கி அல்லது ஆழத்தை நோக்கி. பிறகு நீ ஒருபோதும் மேல் மட்டத்தில், படுக்கை வாக்கில் நகர்வ தில்லை. ஒரு புத்தர், ஒரு சிவா, என்றும் இருப்பதில் வாழ்கிறார்கள், காலத்தில் வாழ்வதில்லை.

ஜீஸஸைக் கேட்டார்கள், ''உங்களது கடவுளின் பேரரசில் என்ன நிகழும்?'' இதைக் கேட்ட மனிதன் காலத்தைப் பற்றிக் கேட்கவில்லை. அவனுடைய ஆசைகளுக்கு என்ன நிகழப் போகிறது, அவை எப்படி நிறைவேறப் போகின்றன என்பதைப் பற்றியே அவன் கேட்டான். வாழ்க்கை முடிந்து விடாமல் இருக்குமா, இறப்பு வராமல் இருக்குமா, துன்பம் எதுவு மில்லாமல் இருக்குமா, உயர்ந்த மனிதன், தாழ்ந்த மனிதன் எல்லாம் இருப்பார்களா என்று அவன் கேட்டான். அவன், ''உங்களது கடவுளின் பேரரசில் என்ன நிகழும்?'' என்று கேட்டது, இந்த உலக விஷயங்களைப் பற்றித்தான்.

இதற்கு ஜீஸஸ் பதிலளித்தார் – இந்தப் பதில் ஒரு ஜென் துறவியின் பதிலைப் போன்றது – ''அங்குக் காலம் என்பது இருக்காது.''

இந்த விதமான பதிலைப் பெற்ற அந்த மனிதன் இதைப் புரிந்து கொள்ளாமல் போயிருக்கலாம்: ''அங்குக் காலம் என்பது இருக்காது.'' ஒரே ஒரு விஷயம்தான் ஜீஸஸ் சொன்னார் – ''அங்குக் காலம் என்பது இருக்காது.'' ஏனெனில் காலம் என்பது

ஒரே மட்டத்திலிருப்பது, ஆனால் கடவுளின் பேரரசு செங்குத்தானது..... அது என்றும் இருப்பது. அது எப்போதும் இங்கிருக்கிறது. நீ அதில் நுழைய, காலத்திலிருந்து விலகிவர வேண்டியது ஒன்றே செய்ய வேண்டுவது.

ஆக அன்புதான் முதல் வாயில். அதன் மூலம், நீ காலத்திலிருந்து விலகிச் சென்றுவிட முடியும். அதனால்தான் எல்லோரும் நேசிக்கப்பட விரும்புகிறார்கள், எல்லோரும் நேசிக்க விரும்புகிறார்கள். ஆனால் ஒருவருக்கும் ஏன் அன்புக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது என்றோ, ஏன் அன்பின் மேல் இவ்வளவு ஆழமான நாட்டம் இருக்கிறது என்றோ தெரியாது. இதைச் சரியாக நீ தெரிந்துகொள்ளாவிட்டால், நீ நேசிக்கவும் முடியாது, நீ நேசிக்கப்படவும் முடியாது. ஏனெனில் இந்தப் பூமியின் மேலுள்ள விஷயங்களில் மிகவும் ஆழமானவைகளில் அன்பும் ஒன்றாகும்.

இருக்கும்படியே ஒவ்வொருவரும் அன்பு கொள்ளும் திறன் உள்ளவர்கள் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். அது அப்படிப்பட்டது அல்ல – அது அப்படியல்ல. இதனால்தான் நீ மனமுடைந்து போகிறாய். அன்பு என்பது வேறு ஒரு பரிமாணம். அதனால் நீ காலத்தில் ஒருவரை நேசிக்க முயற்சி செய்தால், நீ உனது செயலில் தோல்வியே அடைவாய். காலத்தினூடே, அன்பு சாத்தியமற்றது.

எனது ஒரு கதை நினைவிற்கு வருகிறது. மீரா கிருஷ்ணனிடம் அன்பு கொண்டிருக்கிறாள். அவள் ஒரு வீட்டுமனைவி – ஒரு இளவரசனின் மனைவி. அந்த இளவரசன் கிருஷ்ணனின் மீது பொறாமை கொண்டான். கிருஷ்ணன் அங்கு இல்லை, கிருஷ்ணன் முன்னிலையில் இல்லை, கிருஷ்ணன் தேக உடம்பில் இல்லை. கிருஷ்ணன் தேக உடம்பில் வாழ்ந்ததற்கும் மீரா தேக உடம்பில் வாழ்ந்ததற்கும் இடையே ஐயாயிரம் ஆண்டுகள் இருந்தன. எனவே உண்மையில் எப்படிக் கிருஷ்ணனை மீரா நேசிக்க முடியும்? கால இடைவெளி மிகவும் பெரியது.

ஒரு நாள் இளவரசன், அவளது கணவன், மீராவிடம் கேட்டான், ''நீ உனது நேசத்தைப் பற்றிப் பேசிக்கொண்டே இருக்கிறாய், நீ கிருஷ்ணனைச் சுற்றித் தொடர்ந்து ஆடிக் கொண்டும், பாடிக் கொண்டும் இருக்கிறாய். ஆனால் கிருஷ்ணன் எங்கே இருக்கிறான்? நீ யாருடன் இவ்வளவு நேசமாக இருக்கிறாய்? நீ யாருடன் தொடர்ந்து பேசிக் கொண்டே இருக்கிறாய்?'' மீரா கிருஷ்ணனுடன் பேசிக் கொண்டும், ஆடிக் கொண்டும், பாடிக் கொண்டும், சிரித்துக் கொண்டும், சண்டை யிட்டுக் கொண்டும் இருப்பாள். அவள் பயித்தியம் போலத் தெரிந்தாள் – அவள் அப்படித்தான், நம் கண்களுக்கு. இளவரசன் கேட்டான், ''உனக்குப் பயித்தியம் பிடித்துவிட்டதா? உன்னுடைய கிருஷ்ணன் எங்கே? நீ யாரை நேசிக்கிறாய்? நீ யாருடன் உரையாடிக் கொண்டிருக்கிறாய். நான் இங்கிருக்கிறேன், ஆனால் நீ என்னை முற்றிலுமாக மறந்து விட்டாய்.''

மீரா சொன்னாள், ''கிருஷ்ணன் இங்கு இருக்கிறான் – நீங்கள் இங்கு இல்லை – ஏனெனில் கிருஷ்ணன் என்றும் இருப்பவன்; நீங்கள் அப்படியல்ல. கிருஷ்ணன் எப்போதும் இங்கு இருப்பான், அவன் எப்போதும் இங்கு இருந்தான், அவன் இங்கு இருக்கிறான். நீங்கள் இங்கு இருக்கப் போவதில்லை, நீங்கள் இங்கு இருந்ததில்லை. நீங்கள் ஒருநாள் இங்கில்லை, நீங்கள் ஒருநாள் இங்கிருக்கப் போவதில்லை. ஆகவே இந்த இரண்டும் இல்லாமலிருப்பதன் இடையில் நீங்கள் இங்கு இருப்பதை எப்படி நான் நம்புவது? எப்படி இரண்டு வாழாமைக்கு நடுவில் ஒரு வாழ்வு இருக்க முடியும்?

இளவரசன் காலத்தில் இருக்கிறான், ஆனால் கிருஷ்ணன் சாசுவதத்தில், என்றுமிருப்பதில் இருக்கிறான். ஆகவே நீ இளவரசனின் அருகில் இருக்கலாம், ஆனால் தூரத்தை ஒழித்து விட முடியாது. நீ ஒரு தூரத்திலேயே இருப்பாய். நீ கிருஷ்ணனை விட்டுக் காலத்தில் மிக மிக அதிகமான தூரத்தில் இருக்கலாம். ஆனாலும் நீ அருகிலிருக்க முடியும். அதன் ஒரு மாறுபட்ட பரிமாணம்.

நான் என் முன்னே பார்க்கிறேன், அங்கு ஒரு சுவர் இருக்கிறது: நான் எனது கண்களை நகர்த்துகிறேன், அங்கு வானம் இருக்கிறது. நீ காலத்ினூடே பார்க்கும்போது அங்கு எப்பொழுதும் சுவரே இருக்கும். நீ காலத்தைக் கடந்து பார்க்கும் போது அங்குத் திறந்த வானம் இருக்கிறது..... எல்லையற்றது இருக்கிறது. அன்பு எல்லையற்றதை, பிரபஞ்ச இருப்பின் என்றும் இருப்பதைத் திறக்கிறது.

ஆகவே உண்மையில், நீ எப்போதாவது நேசித்திருந்தால், அன்பைத் தியானத்திற்கான ஒரு யுக்தியாகப் பயன்படுத்த முடியும். இதுதான் யுக்தி: ''அன்பில் இருக்கும்பொழுது, இனிமையான இளவரசியே, அன்பில், அந்த அழிவற்ற வாழ்வாயிருப்பதில், நுழைவாயாக.''

நேசிப்பவனாகத் தனித்து, வெளியே நிற்காதே. நேசித்தலாக மாறி, என்றும் இருப்பதற்கு நகரு. நீ யாரையாவது நேசிக்கும் பொழுது, நீ அங்கே நேசிப்பவனாக இருக்கிறாயா? நீ அப்படி யிருந்தால், அப்போது நீ காலத்தில் இருக்கிறாய், உன் அன்பு வெறும் பொய், போலித்தனம். இன்னும் நீ அங்கிருந்து கொண்டு, உன்னால் ''நானிருக்கிறேன்'' என்று சொல்ல முடிகிற தென்றால், அப்போது நீ உடலளவில் வேண்டுமானால் அருகிலிருக்கலாமே அன்றி, ஆன்மாவைப் பொருத்தவரை நீங்கள் எதிரெதிர்த் துருவங்களில் இருப்பவர்களே.

அன்பிலிருக்கும் பொழுது, நீ இருக்கக் கூடாது – அன்பு மட்டுமே, அன்பு செய்தல் மட்டுமே இருக்க வேண்டும். அன்பு செய்தலாக மாறிவிடு. உன்னுடைய அன்பிற்குரியவனை அணைக்கும்போது அந்த அணைப்பாகவே மாறிவிடு. முத்த மிடும்போது, முத்தமிடுபவனாகவோ, அல்லது முத்தமிடப் படுபவனாகவோ இருக்காதே – முத்தமாக இரு. ஆணவத்தை முற்றிலுமாக மறந்துவிடு, செயலில் அதைக் கரைத்து விடு. செய்பவன் மறைந்து விடும் அளவு ஆழமாக செயலில் இறங்கு. உன்னால் அன்பிலேயே மூழ்க முடியவில்லை என்றால், சாப்பிடுவதிலும், நடப்பதிலும் மூழ்குவது கடினம் – மிகவும்

கடினம். ஏனெனில் ஆணவத்தை இழக்க அன்புதான் மிகச் சுலபமான அணுகுமுறை. அதனால்தான் யாருக்கெல்லாம் ஆணவமிருக்கிறதோ அவர்களால் அன்பு செய்ய முடியாது. அவர்கள் அதைப் பற்றிப் பேசலாம், அவர்கள் அதைப்பற்றிப் பாடலாம், அவர்கள் அதைப்பற்றி எழுதலாம், ஆனால் அவர்களால் அன்பு செய்ய முடியாது. ஆணவத்தால் அன்பு செய்ய முடியாது!

சிவா சொல்கிறார், அன்பு செய்தலாக மாறு. நீ அணைப்பில் இருக்கும்பொழுது, அணைப்பாகவே மாறு, முத்தமாகவே மாறு. ''நான் இனி இல்லை, வெறும் அன்பே இருப்பது'' என்று நீ சொல்லும்படியாக, முழுமையாக உன்னை மற. பின் இதயம் துடிப்பதில்லை, அன்பே துடித்துக் கொண்டிருக்கிறது. பிறகு இரத்தம் ஓடிக்கொண்டிருக்கவில்லை, அன்பே ஓடிக் கொண்டிருக்கிறது. மேலும் கண்கள் பார்ப்ப தில்லை, அன்பே பார்த்துக் கொண்டிருக்கிறது. பிறகு தொடு வதற்குக் கைகள் நகர்வதில்லை, அன்பே தொடுவதற்காக நகர்கிறது.

அன்பாக மாறு, என்றும் இருக்கும் வாழ்க்கைக்குள் நுழை. அன்பு திடீரென உனது பரிமாணத்தை மாற்றுகிறது. நீ காலத்திலிருந்து வீசியெறியப்படுகிறாய், அதோடு நீ என்றும் இருப்பதைச் சந்திக்கிறாய். அன்பு ஒரு ஆழமான தியானமாக மாற முடியும் – எவ்வளவு ஆழம் சாத்தியமோ அந்த அளவு. சில நேரங்களில் தவசிகள் அறியாததைக் கூட நேசிப்பவர்கள் அறிவார்கள். பல யோகிகள் தொடாமல் விட்டுவிட்ட மையத்தை நேசிப்பவர்கள் தொடுகின்றனர். ஆனால் உன்னுடைய அன்பைத் தியானமாக மாற்றாவிட்டால், இது ஒரு வெறும் கண நேர தரிசனமாகவே இருக்கும். தந்த்ரா என்பதன் அர்த்தம் இதுதான்: அன்பைத் தியானமாக மாற்றுவது. இப்போது நீ புரிந்து கொள்ளலாம் ஏன் தந்த்ரா அன்பைப் பற்றியும் பாலுணர்வைப் பற்றியும் இவ்வளவு பேசுகிறது என்பதை. ஏன்? ஏனெனில் இந்த உலகத்தை, இந்த படுக்கைமட்ட பரிமாணத்தை,

நீ கடந்துசெல்ல அன்புதான் மிகச் சுலபமான இயற்கையான வழியாக இருக்கிறது.

சிவாவை அவருடைய ராணி, தேவியுடன் பார். அவர்களைப் பார். அவர்கள் இரண்டாகத் தெரியவில்லை – அவர்கள் ஒன்றே. இந்த ஒன்றிய நிலை குறிகளைக் குறிப்பதிலும் கூட என்ற அளவுக்கு ஆழமாகச் சென்றிருக்கிறது. நாம் எல்லோரும் சிவலிங்கத்தைப் பார்த்திருக்கிறோம். அது ஒரு ஆண்குறியின் குறியீடு – சிவாவின் பாலுணர்வு உறுப்பு – ஆனால் அது தனியாக இல்லை, அது தேவியின் பாலுணர்வு உறுப்பில் ஊன்றி நிற்கிறது. பழைய கால இந்துக்கள் மிகவும் வெளிப்படை யானவர்களாக இருந்திருக்கிறார்கள். இப்போது நீ சிவ லிங்கத்தைப் பார்க்கும் போது, நீ ஒருபோதும் அது ஒரு ஆண்குறியின் குறியீடு என்று நினைப்பதில்லை. நாம் மறந்து விட்டோம்; நாம் இதை முற்றிலும் மறந்துவிட முயற்சிக் கிறோம்.

'ஜங்' தனது சுயசரிதையில், தனது நினைவுக் குறிப்பில், ஒரு மிக அழகான, வேடிக்கையான சம்பவத்தை நினைவு கூர்கிறார். அவர் இந்தியாவிற்கு வந்து 'கொனாரக்' கோவிலைப் பார்க்கச் சென்றிருந்தார், அந்தக் கோவிலில் பலபல சிவ லிங்கங்கள், ஆண்குறி குறியீடுகள் உள்ளன. அவரைச் சுற்றிக் காட்ட அழைத்துச் சென்ற பண்டிதர் எல்லாவற்றையும் விளக்கிக் கூறினார், சிவலிங்கத்தைத் தவிர. ஆனால் அவைகள் அங்கே ஏராளமாக இருக்கின்றன, அதிலிருந்து தப்பிப்பது கடினம். 'ஜங்'க்கிற்கு மிக நன்றாகத் தெரியும், இருந்தபோதும் அந்தப் பண்டிதரைக் கேலி செய்வதற்காக அவர் கேட்டுக் கொண்டே இருந்தார், ''ஆனால் இவை என்ன?'' என்று.

கடைசியில் பண்டிதர் அவருடைய காதில், ஜங்க்கின் காதில், மெதுவாகக் கூறினார், ''இங்கு என்னைக் கேட்காதீர்கள், நான் பிறகு உங்களுக்குச் சொல்கிறேன். இது ஒரு தனிப்பட்ட விஷயம்.''

ஜங் கண்டிப்பாக உள்ளுக்குள் சிரித்திருப்பார் – இவர்கள் தான் இன்றைய இந்துக்கள். பிறகு கோயிலுக்கு வெளியே பண்டிதர் அருகில் வந்து சொன்னார், ''மற்றவர்களுக்கு முன்னால் நீங்கள் அதைக் கேட்டது அவ்வளவு சரியல்ல. இப்போது நான் உங்களிடம் சொல்கிறேன். அது ஒரு இரகசியம்.'' மறுபடியும் அவர் ஜங்க்கின் காதில் சொன்னார், ''அவை நமது பிறப்புறுப்புகள்.''

ஜங் திரும்பிச் சென்ற பிறகு, அவர் ஒரு பெரும் அறிஞரை – பழங்கால எண்ணங்கள், இதிகாசம், தத்துவம் இவற்றில் ஒரு அறிஞர் – 'ஹென்ரிச் சிம்மரை'ச் சந்தித்தார். இந்தச் சம்பவத்தை 'சிம்மரிடம்' விவரித்தார். இந்திய சிந்தனைகளை ஊடுருவிப் பார்க்க முனைந்தவர்களில் 'சிம்மர்' மிகவும் உயர்ந்த மனம் இயற்கையிலேயே வாய்க்கப் பெற்றவர். மேலும் அவர் இந்தியாவையும், இந்தியாவின் சிந்தனை வழிகளையும் – பழங்கால, தர்க்கரீதியானதல்லாத வாழ்வை ஒரு புதிராகப் பார்ப்பதை – மிகவும் நேசிப்பவர். அவர் ஜங்கிடமிருந்து இதைக் கேட்டபோது, அவர் சிரித்துவிட்டுச் சொன்னார், ''இது ஒரு மாறுதலானதாக இருக்கிறது. நான் எப்போதும் மிக உயர்ந்த இந்தியர்களைப் பற்றியே – புத்தர், கிருஷ்ணர், மகாவீரர் – கேள்விப்பட்டிருக்கிறேன். நீங்கள் சொன்ன இது அந்த உயர்ந்த இந்தியர்களைப் பற்றி எந்த விஷயத்தையும் சொல்லவில்லை. மாறாக இன்றைய இந்தியர்களைப் பற்றிச் சொல்கிறது.''

சிவாவிற்கு அன்பு ஒரு மாபெரும் வாயில். மேலும் அவருக்குப் பாலுணர்வு என்பது ஏதோ கண்டிக்க வேண்டிய விஷயம் அல்ல. அவருக்குப் பாலுணர்வு என்பது விதை, அன்பு என்பது அதன் மலர், மேலும் நீ விதையைக் கண்டித்தால் மலரையும் கண்டிக்கிறாய். பாலுணர்வு அன்பாக மாறமுடியும். அது ஒருபோதும் அன்பாக மாறவில்லை என்றால், அது முடமானது. முடமாக்கப்பட்ட நிலையைக் கண்டியுங்கள், பாலுணர்வை அல்ல. அன்பு மலர வேண்டும், பாலுணர்வு கண்டிப்பாக அன்பாக மாற வேண்டும். அது அப்படி

மாறவில்லையென்றால் அது பாலுணர்வின் தவறல்ல, அது உன் தவறு.

பாலுணர்வு அதாகவே நின்றுவிடக் கூடாது; இதுதான் தந்த்ரா சொல்லித் தருவது. அது அன்பாக மாற்றப்பட வேண்டும். அன்பும் அன்பாகவே நின்றுவிடக் கூடாது. அது ஒளியாக, தியான அனுபவமாக, முடிவானதாக, ஞானத்தின் அதி உச்சியாக, மாற்றப்பட வேண்டும். அன்பை எப்படி மாற்றுவது? செய்பவனை மறந்துவிட்டு, செயலாக இரு. அன்பு செய்யும் போது, அன்பாக இரு – வெறும் அன்பாக. அப்போது அது உன்னுடைய அன்போ, என்னுடைய அன்போ அல்லது வேறு யாருடைய அன்போ அல்ல – அது வெறும் அன்பு. நீ அங்கில்லாத பொழுது, நீ எல்லாவற்றிற்கும் ஊற்றுக் கண்ணாக அல்லது பிரவாகமாக, இருப்பதன் கைகளில் இருக்கும் பொழுது, நீ அன்பில் இருக்கும்பொழுது, அப்போது அன்பில் இருப்பது நீ அல்ல. அன்பு உன்னை விழுங்கிவிட்டபோது, நீ மறைந்து விடுகிறாய்; நீ ஒரு பொங்கிப் பெருகும் சக்தியாக மாறி விடுகிறாய்.

டி.எச். லாரன்ஸ், இந்தக் காலகட்டத்தின் மிக உயர்ந்த படைப்பாற்றல் கொண்ட மனங்களில் ஒருவர். அறிந்தோ அறியாமலோ ஒரு தந்த்ரா தேர்ச்சி பெற்றவர். மேற்கத்திய நாடுகளில் அவர் முற்றிலுமாகப் பழிக்கப்பட்டார், அவரது புத்தகங்கள் தடை செய்யப்பட்டன. அவர் சொன்னார், ''பாலுணர்வு சக்தியே ஒரே சக்தி, ஆகவே நீ அதைப் பழித்தால், அமுக்கினால், நீ இந்தப் பேரண்டத்திற்கே எதிரானவன். பின் நீ ஒருபோதும் இந்த சக்தியின் உயர்ந்த நிலையின் மலர்களைப் பற்றி அறிந்துகொள்ளவே முடியாது. மேலும் இதை நீ அமுக்கி வைக்கும்போது இது அசிங்கமாக மாறுகிறது, அசிங்கம் என்பதால் அமுக்குகிறாய் – இது ஒரு வட்டப்பாதை.'' இப்படிச் சொன்னதால் அவர்மேல் நீதிமன்றங்களில் பல வழக்குகள் போடப்பட்டன.

மத போதகர்கள், பூசாரிகள், ஒழுக்கவாதிகள், மதத்தைச் சேர்ந்தவர்களாகச் சொல்லிக் கொள்பவர்கள் – போப்புகள், சங்கராச்சாரியர்கள் மற்றும் இது போன்றோர் – இவர்கள் பாலுணர்வைக் கண்டித்துக் கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் இதை ஒரு அசிங்கமான விஷயமென்று சொல்கிறார்கள். ஆனால் நீ அதை அமுக்கும்போது, அது அசிங்கமாக மாறிவிடுகிறது. ஆகவே அவர்கள் சொல்கிறார்கள், ''பார்! நாங்கள் சொன்னது உண்மை. உன்னாலேயே இது நிரூபிக்கப்பட்டு விட்டது. பார்! நீ செய்வதெல்லாம் அசிங்கம், மேலும் அது அசிங்கமென்பதும் உனக்கே தெரிகிறது.''

ஆனால் அசிங்கமாயிருப்பது பாலுணர்வு அல்ல, இந்த மத போதகர்களே இதை அசிங்கப்படுத்தியவர்கள். அதை அசிங்கப் படுத்தி விடுவதன் மூலம் அவர்கள் தங்களைச் சரியென்று நிரூபிக்கின்றனர். அப்படி அவர்கள் தங்களைச் சரியென்று நிரூபிப்பதன் விளைவாக நீ அதை மேலும் மேலும் அசிங்கப் படுத்திக் கொள்கிறாய்.

பாலுணர்வு அப்பாவியான சக்தி – வாழ்க்கை உன்னிடம் பொங்குவது, பிரபஞ்ச இருப்பு உன்னில் வாழ்வது. அதை முடமாக்காதே! அதை உயரத்தை நோக்கிச் செல்ல அனுமதி. அதாவது, பாலுணர்வு அன்பாக மாற வேண்டும். என்ன வித்தியாசம் இருக்கிறது? உனது மனம் பாலுணர்வில் இருக்கும் போது நீ அடுத்தவரைப் பயன்படுத்திக் கொள்கிறாய்; அடுத்தவர் பயன்படுத்திவிட்டு வீசி எறியப்படும் சாதனம் ஆகிறார். ஆனால் பாலுணர்வு அன்பாக மாறும்பொழுது, அடுத்தவர் ஒரு சாதனமல்ல, அடுத்தவரைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது, அடுத்தவர் உண்மையில் அடுத்தவரல்ல. நீ அன்பு செலுத்தும் போது, அது தன்னை மையம் கொண்டது அல்ல. பதிலாக, அடுத்தவர் முக்கியமானவராக, சிறப்பானவராக ஆகிவிடுகிறார்.

நீ அவரைப் பயன்படுத்திக் கொள்கிறாய் என்பதே அங்கில்லை – கிடையாது! மாறாக, நீங்கள் இருவரும் இணைந்து

ஒரு ஆழமான அனுபவத்தை அடைகிறீர்கள். நீங்கள் ஒரு ஆழமான அனுபவத்தில் பங்கு பெறுபவர்கள், பயன்படுத்து பவனும், பயன்படுத்தப்படுபவரும் அங்கில்லை. நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் அந்த மாறுபட்ட அன்பு உலகத்திற்குச் செல்ல உதவிக் கொள்பவர்கள். பாலுணர்வு அடுத்தவரைப் பயன்படுத்திக் கொள்வது. அன்பு, இருவரும் சேர்ந்து ஒரு மாறுபட்ட உலகத்திற்குச் செல்வது.

இப்படிச் செல்வது கணநேரத்திற்கே என்றில்லாமல், இப்படிச் செல்வது தியானத் தன்மைக்கு மாறிவிட்டால் – அதாவது, நீ உன்னை முற்றிலுமாக மறந்துவிட முடிந்தால், அங்கு நேசிப்பவரும், நேசிக்கப்படுபவரும் மறைந்துவிட்டால், அங்கு வெறும் அன்பு மட்டுமே பொங்கிப் பெருகினால் – அப்போது, சிவா சொல்கிறார், என்றுமிருக்கும் வாழ்வு உன்னுடையது.

## 11. உனது புலன்களை மூடு, கல்லைப் போல மாறு.

இரண்டாவது தளர்த்தும் யுக்தி : ''எறும்பு ஊர்வதை உணரும்போது புலன்களின் கதவுகளை மூடு. அப்போது.''

இது மிகவும் எளியதாகத் தெரிகிறது, ஆனால் இது அவ்வளவு எளிமையானதல்ல. நான் மறுபடியும் படிக்கிறேன் : ''எறும்பு ஊர்வதை உணரும்போது புலன்களின் கதவுகளை மூடு. அப்போது, அது நடக்கும்.'' சிவா என்ன சொல்கிறார்?

உனது பாதத்தில் ஒரு முள் குத்தியுள்ளது – இது வேதனை தருகிறது, நீ சிரமப்படுகிறாய். அல்லது ஒரு எறும்பு உன் காலில் ஊர்ந்து கொண்டிருக்கிறது. நீ ஊர்வதை உணர்கிறாய், உடனே திடீரென்று நீ அதை எடுத்து வீச விரும்புகிறாய். எந்த அனுபவத்தை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்! உனக்குக் காயம் பட்டுள்ளது – அது வலிக்கிறது. உனது தலை வலிக்கிறது அல்லது உனது உடம்பின் எந்த வலியாயிருந்தாலும் சரி. புறத்தில் எதுவாயிருந்தாலும் போதும். ''எறும்பு ஊர்வது'' என்பது ஒரு

உதாரணம்தான். சிவா சொல்கிறார் : எறும்பு ஊர்வதை எதுவாக இருந்தபோதும், புலன்களின் எல்லாக் கதவுகளையும் மூடு.

என்ன செய்ய வேண்டும்? உனது கண்களை மூடிக் கொண்டு, உன்னால் பார்க்க முடியாது, நீ குருடன் என்பதாக நினைத்துக் கொள். கண்களை மூடிக்கொண்டு உன்னால் கேட்க முடியாது என்று நினைத்துக்கொள். ஐந்து புலன்களையும், நீ அவற்றை மூடிவிடு. எப்படி அவைகளை மூடுவது? இது சுலபம். ஒரு கண நேரம் மூச்சை நிறுத்து : உனது எல்லா புலன்களும் மூடிக் கொண்டு விடும். மூச்சு நின்றுவிட்ட நிலையில், எல்லாப் புலன்களும் மூடியிருக்கும் போது, இந்த ஊர்வது எங்கே? அந்த எறும்பு எங்கே? திடீரென நீ விலகி விட்டாய் – வெகு தூரம்.

எனது நண்பர் ஒருவர், ஒரு வயதான நண்பர், மிகவும் வயதானவர், மாடிப்படிகளில் விழுந்து விட்டார். டாக்டர்கள் அவர் மூன்று மாதத்திற்குப் படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாது என்று சொல்லி விட்டனர். அவரை மூன்று மாதம் ஓய்வு எடுக்கச் சொல்லி விட்டனர். அவர் எப்போதுமே ஓய்ந்திருக்காத மனிதன்; இது அவருக்கு மிகவும் கடினமாகப் போய் விட்டது. நான் அவரைப் பார்க்கப் போயிருந்தேன், அவர் சொன்னார், ''எனக்காகப் பிரார்த்தனை செய், என்னை ஆசிர்வாதம் செய் நான் இறக்க வேண்டும் என்று. ஏனெனில் இந்த மூன்று மாதங்களும் இறப்பைவிட மோசமானவை. என்னால் கல்லைப் போல இருக்க முடியாது. ஆனால் மற்றவர்கள் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள், 'நகராதே'.''

நான் அவரிடம் சொன்னேன், ''இது ஒரு நல்ல சந்தர்ப்பம். உங்கள் கண்களை மூடிக்கொண்டு, நீங்கள் ஒரு கல், உங்களால் நகர முடியாது என்று நினைத்துக் கொள்ளுங்கள். எப்படி நீங்கள் நகர முடியும்? நீங்கள் ஒரு கல் – வெறும் கல், ஒரு கற்சிலை. கண்களை மூடுங்கள். இப்போது நீங்கள் வெறும் ஒரு கல், ஒரு கற்சிலை என்று உணருங்கள்.''

அவர் என்னிடம் கேட்டார், இதனால் என்ன நிகழும்? நான் சொன்னேன், ''முயற்சி செய்யுங்கள். நான் இங்கே

உட்கார்ந்திருக்கிறேன், மேலும் எதுவும் செய்ய முடியாது. எதுவும் செய்ய முடியாது! நீங்கள் எப்படியும் மூன்று மாதத்திற்கு இங்கு இருந்துதான் ஆகவேண்டும், ஆகவே முயலுங்கள்.''

அவர் ஒருபோதும் முயற்சித்திருக்க மாட்டார். ஆனால் அந்தச் சூழ்நிலை அவருக்குத் தாங்க முடியாததாய் இருந்ததால், அவர் சொன்னார், ''சரி! நான் முயற்சிக்கிறேன். ஏனெனில் ஏதாவது ஒன்று நடக்கலாம். ஆனால் நான் இதை நம்பவில்லை.'' மேலும் சொன்னார், ''நான் கல்லைப் போல, கற்சிலையைப் போல உயிரற்றவன் என்று நினைப்பதால் மட்டுமே ஏதாவது நடந்து விடும் என்பதை நான் நம்பவில்லை. ஆனாலும் நான் முயற்சிக்கிறேன்.'' இப்படியாக அவர் முயற்சித்தார்.

நானும் ஏதாவது நடக்கப் போகிறது என்று நினைக்கவில்லை. ஏனெனில் அந்த மனிதன் அப்படிப்பட்டவன். ஆனால் சில நேரங்களில், நீ எந்தச் சாத்தியமும் அற்ற சூழ்நிலையில், எதிர்கால நம்பிக்கைகளை இழந்தவனாய் இருக்கும்போது, காரியங்கள் நிகழ ஆரம்பிக்கும். அவர் கண்களை மூடினார். நான் காத்திருந்தேன். ஏனெனில் நான் நினைத்துக் கொண்டிருந்தேன், எப்படியும் இரண்டு அல்லது மூன்று நிமிடங்களில் அவர் கண்களைத் திறந்து விடுவார், எதுவும் நிகழவில்லையே என்று சொல்வார் என்று. ஆனால் முப்பது நிமிடங்கள் போய்விட்டன, அவர் கண்களைத் திறக்கவில்லை. அவர் ஒரு கற்சிலையாக மாறிவிட்டதை என்னால் பார்க்கவும், உணரவும் முடிந்தது. அவரது நெற்றியில் இருந்த எல்லா இறுக்கங்களும் மறைந்து விட்டன. அவரது முகம் மாறிவிட்டது. நான் போக வேண்டும், ஆனால் அவர் கண்களைத் திறப்பதாக இல்லை. அவர் மிகவும் அமைதி அடைந்துவிட்டார், இறந்தவரைப் போல. அவரது மூச்சு மிகவும் அடங்கி நடக்கிறது. நான் போக வேண்டும், ஆகவே நான் அவரிடம் சொன்னேன், ''நான் இப்போது போக வேண்டும், ஆகவே தயவு செய்து கண்களைத் திறந்து என்ன நிகழ்ந்தது என்று என்னிடம் சொல்லுங்கள்.''

அவர் கண்களை முற்றிலும் மாறுபட்ட மனிதராகத் திறந்தார். அவர் சொன்னார், ''இது ஒரு அற்புதம். நீ எனக்கு என்ன செய்தாய்?''

நான் அவரிடம் கூறினேன், ''நான் எதுவுமே செய்ய வில்லை.'' அவர் சொன்னார், ''நீங்கள் ஏதாவது செய்திருக்க வேண்டும். ஏனெனில் இது ஒரு அற்புதம். நான் ஒரு வெறும் கல்லைப் போல, ஒரு கற்சிலையைப் போல என்று நினைக்க ஆரம்பித்தவுடன், திடீரென்று ஒரு உணர்வு எனக்கு வந்தது. அது என்னவென்றால், நான் எனது கைகளை அசைக்க விரும்பி னாலும் அதைச் செய்ய இயலாது. நான் எனது கண்களைத் திறக்க பல முறை விரும்பினேன். ஆனால் அவை கல்லைப் போல இருந்தன. ஆகவே என்னால் அவைகளைத் திறக்க முடிய வில்லை.''

அவர் சொன்னார், ''நீண்ட நேரம் ஆகிவிட்டது. ஆகவே நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருப்பீர்கள் என்று கூட நான் கவலைப்பட ஆரம்பித்தேன், ஆனால் நான் என்ன செய்வது? இந்த முப்பது நிமிடங்களாக என்னால் என்னை அசைக்க முடிய வில்லை. மேலும் எல்லா அசைவுகளும் நின்றுவிட்ட போது, திடீரென இந்த உலகம் மறைந்துவிட்டது, நான் தனியே இருந்தேன், எனது அடி ஆழத்தில் நானாக. அப்போது வலியும் மறைந்து விட்டது.''

அவருக்குக் கடுமையான வலி இருந்தது; அவரால் இரவில் தூக்க மாத்திரை இல்லாமல் தூங்க முடியாது. ஆனால் இப்போது வலி மறைந்துவிட்டது. அந்த வலி மறையும் பொழுது அவர் எப்படி உணர்ந்தார் என்று நான் அவரிடம் கேட்டேன்.

அவர் சொன்னார், ''முதலில் அது எங்கோ தூரத்தில் இருப்பதாக நான் உணர ஆரம்பித்தேன். வலி அங்கு இருந்தது. ஆனால் அது வேறு யாருக்கோ இருப்பது போல மிகவும் தூரத்தில் இருந்தது. பிறகு மெது மெதுவாக மெது மெதுவாக யாரோ ஒருவர் விலகி விலகிச் செல்வது போலவும் ஆகவே

அவரை நீ பார்க்க முடியாதது போலவும் அது மறைந்துவிட்டது. வலி மறைந்துவிட்டது! குறைந்தது பத்து நிமிடத்திற்கு வலி அங்கே இல்லை. எப்படிக் கல் உடம்பிற்கு வலி இருக்க முடியும்?''

இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''புலன்களின் கதவுகளை மூடிவிடு.'' கல்லைப் போல மாறு, இந்த உலகத்திற்கு மூடிக் கொண்டவனாக ஆகிவிடு. நீ இந்த உலகத்திற்கு மூடிக் கொண்டவனாக ஆகும்பொழுது உண்மையில் நீ உனது உடம்பிற்கும் மூடிக் கொண்டவன் ஆகிவிடுகிறாய், ஏனெனில் உனது உடம்பு உன்னுடைய பாகமல்ல; அது இந்த உலகத்தின் பாகம். நீ இந்த உலகத்திற்கு முற்றிலுமாக மூடிக் கொண்டவன் ஆகும் பொழுது நீ உனது உடம்பிற்கும் மூடிக் கொண்டவன் ஆகிறாய். அப்போது சிவா சொல்கிறார், ''அப்போது அது நிகழும்.''

ஆகவே உடம்போடு இதை முயற்சி செய். எதுவாயிருந் தாலும் போதும், ஏதோ ஒரு எறும்பு உன் மேல் ஊர்ந்து போக வேண்டும் என்ற அவசியம் இல்லை. இல்லாவிட்டால் நீ நினைத்துக் கொள்வாய், ''எறும்பு ஊரும்போது நான் தியானம் செய்வேன்.'' ஆனால் அப்படி உதவக் கூடிய எறும்புகளைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். ஆகவே எதுவாயிருந்தாலும் போதும். நீ படுக்கையில் படுத்திருக்கிறாய், நீ சில்லென்றிருக்கும் விரிப்பை உணருகிறாய் – உயிரற்றவனாக ஆகிவிடு. திடீரென்று அந்த விரிப்புகள் தூரமாகப் போய், போய், போய், அவை மறைந்துவிடும். உன்னுடைய படுக்கை மறைந்துவிடும்; உன்னுடைய படுக்கை அறை மறைந்துவிடும்; இந்த முழு உலகமும் மறைந்து விடும். நீ மூடப்பட்டு விட்டாய், இறந்து விட்டாய், ஒரு கல்லாகி விட்டாய்! உன்னால் நகர முடியாது!

இப்போது, நீ நகர முடியாத போது நீ உன்னிடமே திரும்ப வீசப்படுகிறாய், நீ உன்னிடத்திலே மையம் கொள்கிறாய். அப்போது முதன்முறையாக நீ உனது மையத்திலிருந்து பார்க்க

முடியும். அப்படி ஒரு முறை நீ உனது மையத்திலிருந்து பார்க்க முடிந்தால் நீ ஒருபோதும் அதே பழைய மனிதனாக இருக்க மாட்டாய்.

*12. நீ எடையற்றவனாக மாறுவாயாக.*

**மூன்றாவது தளர்வு படுத்தும் யுக்தி :**

❖ **"ஒரு படுக்கையின் மேலோ அல்லது ஒரு இருக்கையின் மேலோ நீ எடையற்றவனாக மாறுவாயாக, மனதைக் கடப்பாயாக."**

நீ இங்கு உட்கார்ந்திருக்கிறாய். நீ எடையற்றுப் போய் விட்டதாக உணரு. எந்தத் தடையும் இல்லை. நீ ஏதோ ஒரு இடத்தில் அல்லது வேறொரு இடத்தில் எடை இருப்பதாக உணர்வாய். ஆனால் தொடர்ந்து எடையற்று இருக்கும் நிலையை உணர்ந்து கொண்டே இரு. அது வரும். நீ எடையற்று இருப்பதாக உணரும் ஒரு கணம் வரும். அங்கு எந்தத் தடையும் இருக்காது. அப்படி அங்கு எந்தத் தடையும் இல்லாத பொழுது நீ இனி ஒரு உடம்பாக இருப்பது இல்லை. ஏனெனில் எடை என்பது உடலின் எடையே – உன்னுடையதல்ல. நீ எடையற்றவன்.

இதன் பொருட்டே பல பரிசோதனைகள் செய்யப்பட்டன. யாரோ ஒருவர் இறக்கிறார்..... உலகம் முழுவதையும சேர்ந்த பல விஞ்ஞானிகள் அந்த மனிதனை எடை போட்டனர். ஒரு மனிதன் உயிரோடு இருக்கும் போது எடை அதிகம் இருந்து அந்த மனிதன் இறந்தபின் எடை குறைந்தால், மிகச் சிறிதளவு வித்தியாசம் இருந்தாலும், அப்போது விஞ்ஞானிகள் அந்த உடலில் இருந்து ஏதோ ஒன்று வெளியே சென்றிருக்கிறதென்று சொல்ல முடியும். அதாவது ஒரு ஆன்மா அல்லது ஒரு சுயம் அல்லது ஏதோ ஒன்று. ஆனால் தற்போது அங்கு இல்லாமல் இருப்பது – வெளியேறியுள்ளதென்று சொல்ல முடியும் – ஏனெனில் விஞ்ஞானத்துக்கு எடையற்றதாக எதுவும் இருக்க முடியாது, எதுவும்!

எல்லாப் பொருள்களுக்கும் அடிப்படையானது எடை. சூரியக் கதிர்களுக்குக் கூட எடை உண்டு. அவை மிக மிக மெல்லியவை, நுட்பமானவை. அவைகளை எடை போடுவது கடினம். ஆனாலும் விஞ்ஞானிகள் அவைகளின் எடையைக் கண்டறிந்துள்ளனர். உன்னால் ஐந்து சதுர கிலோ மீட்டர் பரப்பளவு இடத்தில் உள்ள அனைத்து சூரிய கதிர்களையும் சேகரிக்க முடிந்தால் அவற்றின் எடை ஒரு தலைமுடியின் எடையை ஒத்ததாக இருக்கும். ஆனால் சூரியக் கதிர்களுக்கும் எடை இருக்கிறது; அவைகளும் எடை போடப்பட்டுள்ளன. விஞ்ஞானத்திற்கு எதுவும் எடையற்றதாக இருக்க முடியாது. அப்படி ஏதோ ஒன்று எடையற்றதாக இருக்க முடிந்தால் அப்போது அது பொருளல்லாதது, அது பொருளாக இருக்க முடியாது. மேலும் விஞ்ஞானம் கடந்த இருபது அல்லது இருபத்தைந்து வருடங்களாகப் பொருளைத் தவிர வேறு எதுவும் இல்லை என்று நம்பி வருகிறது.

ஆகவே ஒரு மனிதன் இறக்கும் போது அவனது உடலை விட்டு ஏதாவது வெளியேறுகின்றதென்றால் எடை கண்டிப்பாக வித்தியாசப்பட வேண்டும். ஆனால் அது ஒருபோதும் வித்தியாசப்படவில்லை; எடை அதே அளவே இருக்கிறது. சில நேரங்களில் அது அதிகமாகக் கூட ஆகிவிடுகிறது – இதுதான் பிரச்சனை. உயிரோடு இருக்கும் மனிதன் எடை குறைவாய் இருக்கிறான்; இறந்து போனவன் அதிக எடை உள்ளவனாக மாறுகிறான். இது புதிய பிரச்சனைகளை உருவாக்கியது. ஏனெனில் அவர்கள் ஏதாவது எடை குறைவதைக் கண்டு பிடிக்கவே முயற்சிக்கிறார்கள்; அப்போதுதான் அவர்கள் ஏதோ ஒன்று வெளியேறியதென்று சொல்ல முடியும். ஆனால் பார்க்கும் போது, அதற்கு மாறாக ஏதோ ஒன்று உள்ளே வருகிறது. என்ன நடந்தது? எடை பொருளைச் சார்ந்தது, ஆனால் நீ ஒரு எடையாக இருப்பவனல்ல. நீ பொருளாக இல்லாதவன்.

நீ இந்த எடை இல்லாத நிலை என்ற யுக்தியை முயற்சிப்பதானால், நீ உன்னை எடையற்றவனாக நினைத்துக்

கொள்ள வேண்டும். வெறும் நினைத்துக் கொள்வது மட்டுமல்ல. அதோடு உனது உடல் எடையற்றதாக மாறிவிட்டதை உணர வேண்டும். நீ தொடர்ந்து உணர்ந்து கொண்டேயிருந்தால், உணர்ந்து கொண்டேயிருந்தால், உணர்ந்து கொண்டேயிருந்தால் திடீரென நீ எடையற்றுப் போய் விடுவதை உணர்ந்து கொள்ளும் கணம் ஒன்று வரும். நீ ஏற்கனவே அப்படித்தான். ஆகவே இதை நீ எந்த நேரமும் உணரக்கூடும். நீ எடையற்றவன் என்று மறுபடியும் உணர்ந்து கொள்ளக் கூடிய ஒரு சூழ்நிலையை உருவாக்க மட்டுமே வேண்டும்.

நீ உன்னை வசியத்திலிருந்து மீட்க வேண்டும். ''நான் இந்த உடம்புதான். ஆகவே நான் எடையை உணர்கிறேன்.'' என்ற இந்த நம்பிக்கை தான் இந்த வசியம். நீ உன்னை வசியத்திலிருந்து மீட்டு, நீ ஒரு உடம்பல்ல என்று உணர முடிந்தால், நீ எடையை உணர மாட்டாய். மேலும் நீ எடையை உணராத பொழுது நீ மனதைக் கடந்து இருப்பாய். சிவா சொல்கிறார் : ''ஒரு படுக்கையின் மேலோ, அல்லது ஒரு இருக்கையின் மேலோ இருக்கும் பொழுது நீ எடையற்றவனாக மாறுவாயாக, மனதைக் கடப்பாயாக.'' அப்போது அது நிகழ முடியும். மனதிற்கும் எடை உண்டு; ஒவ்வொருவரின் மனமும் வெவ்வேறு எடை கொண்டது.

ஒரு சமயத்தில் மனம் அதிக எடையோடு இருந்தால் அதிக புத்திசாலித்தனத்தைக் காட்டுவதாக சில கருத்துக்கள் முன் வைக்கப்பட்டன. பொதுவாக இது உண்மையே. ஆனால் முற்றிலும் அல்ல. ஏனெனில் சில சமயங்களில் மாபெரும் அறிஞர்கள் மிகச் சிறிய மனத்தோடு இருந்திருக்கிறார்கள், சில சமயங்களில் சில மடத்தனமான முட்டாள்களின் மனம் அதிக எடையோடு இருந்திருக்கிறது. ஆனால் பொதுவாக இது உண்மையே. ஏனெனில் உனது மனதின் இயந்திர சாதனம் பெரிதாக இருக்கும் பொழுது அது அதிக எடை உள்ளதாக இருக்கிறது. மனதிற்கும் ஒரு எடை உள்ளது. ஆனால் உனது உணர்வு எடையற்றது. இந்த உணர்வை நீ அறிந்து கொள்ள நீ

எடையற்ற தன்மையை முதலில் உணர வேண்டும். ஆகவே இதை முயற்சி செய் : நடக்கும் போது, உட்கார்ந்திருக்கும் போது, தூங்கும் போது நீ இதை முயற்சி செய்யலாம்.

சில பார்வைகள்..... சில நேரங்களில் ஏன் இறந்த உடம்பிற்கு எடை கூடுகின்றது? ஏனெனில் உணரும் தன்மை உடம்பை விட்டு வெளியேறும் கணத்திலேயே உடம்பு பாதுகாப்பற்றதாக ஆகி விடுகிறது. உடனே அதில் பலதும் நுழைய முடியும். அவை நீ இருப்பதால் இப்போது நுழைவ தில்லை. பல அதிர்வுகள் இறந்த உடலிற்குள் புக முடியும் – அவை உனக்குள் புக முடியாது. நீ இங்கிருக்கிறாய், உடம்பு உயிரோடு இருக்கிறது. ஆகவே பலவற்றை எதிர்த்து நிற்கிறது. இதனால் தான் ஒரு முறை உடல் நலக்குறைவு உனக்கு ஏற்பட்டால் அது ஒரு நீண்ட வரிசையை ஆரம்பிக்கிறது; ஒரு நோய் பிறகு மற்றொன்று அதன் பிறகு மற்றொன்று – ஏனெனில் ஒரு முறை நீ உடல் நலம் இழந்தவுடன் நீ பாதுகாப்பற்றவனாய், எதிர்ப்பில்லாதவனாய், தடையற்றவனாய் ஆகிவிடுகிறாய். அப்போது எது வேண்டுமானாலும் உனக்குள் நுழைய முடியும். உனது இருப்பே உடம்பைப் பாதுகாக்கிறது. ஆகவே சில சமயங்களில் ஒரு இறந்த உடலின் எடை அதிகரிக்க முடியும். நீ அதை விட்டுவிட்ட கணத்திலேயே எதுவும் உடம்பினுள் நுழைய முடியும்.

இரண்டாவதாக நீ மகிழ்ச்சியாய் இருக்கும் பொழுது எப்பொழுதும் எடையற்றவனாக இருக்கிறாய்; நீ சோகமாய் இருக்கும் போது எப்போதும் அதிக எடையாக உணர்கிறாய். ஏதோ உன்னைக் கீழ்நோக்கி இழுப்பது போல. புவியீர்ப்பு மிகவும் அதிகமாகிறது. நீ சோகமாய் இருக்கும்போது நீ அதிக எடையுடன் இருக்கிறாய். நீ மகிழ்ச்சியாய் இருக்கும்போது நீ லேசாயிருக்கிறாய். இதை நீ உணர்கிறாய். ஏன்? ஏனெனில் நீ மகிழ்ச்சியாயிருக்கும் போது, பேரானந்தமான கணத்தை உணரும் போதெல்லாம், நீ உடலை முற்றிலுமாக மறந்து விடுகிறாய். நீ சோகமாய் துன்பத்திலிருக்கும் பொழுது உன்னால் உடலை

மறக்க முடியாது, நீ அதன் எடையை உணர்வாய். அது உன்னைக் கீழே இழுக்கும் – பூமிக்கு இழுக்கும், உனக்கு வேர்கள் உள்ளதைப் போல. பின் நீ நகர முடியாது; உனக்குப் பூமியில் வேர்கள் உள்ளன. மகிழ்ச்சியில் நீ எடையற்று இருக்கிறாய். சோகத்தில் கவலையில் நீ எடையுள்ளவனாக ஆகுகிறாய்.

ஆழமான தியானத்தில், நீ உனது உடலை முற்றிலும் மறந்துவிட்ட நிலையில் நீ மேலெழும்ப முடியும். உடலும் கூட உன்னுடன் மேலெழும்ப முடியும். இது பல முறை நடந்துள்ளது. விஞ்ஞானிகள் 'பெலிவியா' நாட்டில் உள்ள ஒரு பெண்ணை ஆராய்ந்து வருகின்றனர். தியானம் செய்யும் பொழுது அவள் நான்கு அடிகள் மேலெழும்புகிறாள். இப்போது இது விஞ்ஞான பூர்வமாகப் பரிசோதிக்கப் பட்டுள்ளது; பல படங்கள் (பல புகைப்படங்கள்) எடுக்கப் பட்டுள்ளது, ஆயிரமாயிரம் பார்வையாளர்களுக்கு முன்னால் அந்தப் பெண் மேலெழும்பு கிறாள், புவியீர்ப்பு விசை இல்லாமல் சமன் செய்யப்பட்டுள்ளது. என்ன நடக்கிறது என்பதற்கு இதுவரை எந்த விளக்கமும் கண்டு பிடிக்கப்படவில்லை. ஆனால் அந்த அதே பெண் தியானம் செய்யாத பொழுது மேலெழும்ப முடிவதில்லை. மேலும் அவளுடைய தியானம் பாதிப்புக்கு உள்ளானால் அவள் திடீரென்று கீழே விழுகிறாள்.

என்ன நடக்கிறது? ஆழமான தியானத்தில் நீ உனது உடலை முற்றிலுமாக மறந்து விடுகிறாய். அப்போது அந்த அடையாளம் உடைந்து போகிறது. உடல் மிகச் சிறிய விஷயம்; நீ மிகவும் பெரியது, உனக்கு எல்லையற்ற சக்தி இருக்கிறது. இந்த உடலுக்கு உன்னை ஒப்பிட்டுப் பார்க்கையில் எந்தச் சக்தியும் இல்லை.

இது எப்படி என்றால் ஒரு சக்கரவர்த்தி தனது அடிமை யோடு தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறான். ஆகவே அடிமை பிச்சையெடுக்கப் போகும் பொழுது சக்கரவர்த்தியும் பிச்சைக்குப் போகிறான்; அடிமை கண்ணீர் விடும்போது

சக்கரவர்த்தியும் கண்ணீர் விடுகிறான். அடிமை, ''நான் ஒன்றும் இல்லாதவன்'' என்று சொல்லும் பொழுது சக்கரவர்த்தியும் ''நான் ஒன்றும் இல்லாதவன்'' என்று சொல்கிறான். ஒரு முறை சக்கரவர்த்தி தனது சொந்த இருப்பைத் தெரிந்து கொண்டு விட்டால், ஒரு முறை அவர்தான் ஒரு சக்கரவர்த்தி என்பதையும், இந்த மனிதன் ஒரு அடிமை என்பதையும் தெரிந்து கொண்டு விட்டால், எல்லாமே திடீரென்று மாறிவிடும்.

நீ மிகவும் வரையறுக்கப்பட்ட உடம்போடு அடையாளம் வைத்துவிட்ட எல்லையற்ற சக்தி. ஒரு முறை நீ உன்னுடைய சுயத்தை உணர்ந்துவிட்டால் அப்போது எடையற்ற தன்மை அதிகமாகும், உடலின் எடை குறையும். அப்போது நீ மேலெழ முடியும், உடல் மேலே போக முடியும்.

இன்று வரை விஞ்ஞான பூர்வமாக நிரூபிக்கப்படாத பல பல கதைகள் உள்ளன. ஆனால் அவைகள் நிரூபணமாகும்..... ஏனெனில் ஒரு பெண்ணால் நான்கு அடிகள் மேலே எழ முடியுமென்றால் அப்போது அங்கே எந்தத் தடையும் இல்லை. மற்றொரு ஆயிரம் அடி போக முடியும், வேறொருவர் முற்றிலுமாக பேரண்ட இயக்கத்திற்குள்ளேயே போய்விட முடியும். கொள்கை அளவில் அங்கு எந்தப் பிரச்சனையும் இல்லை... நான்கு அடி அல்லது நானூறு அடி அல்லது நாலாயிரம் அடி, இது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது.

இராமரைப் பற்றியும் மற்றும் பலரைப் பற்றியும் அவர்கள் உடலோடு முழுதுமாக மறைந்து போனார்கள் என்று கதைகள் இருக்கின்றன. அவர்களின் உடல்கள் இந்தப் பூமியில் இறந்த பின்பு கண்டுபிடிக்கப்படவே இல்லை. முகமது முழுவதுமாக மறைந்து போனார் – அவருடைய உடலோடு மட்டுமல்ல; அவர் தனது குதிரையோடு மறைந்து போனதாகச் சொல்லப்படுகிறது. இந்தக் கதைகள் சாத்தியமற்றவையாகத் தெரிகின்றன, அவை புராணங்களாகத் தெரிகின்றன, ஆனால் அவை அப்படித்தான் இருக்க வேண்டும் என்பதில்லை.

ஒரு முறை உனக்கு எடையற்ற ஆற்றலைப் பற்றித் தெரிந்து விட்டால், நீ புவியீர்ப்பு சக்தியின் எஜமானனாக ஆகிவிடுகிறாய். நீ அதைப் பயன்படுத்த முடியும்; அது உன்னைச் சார்ந்தது. நீ உனது முழு உடலோடும் மறைந்து போகலாம்.

ஆனால் நமக்கு எடையற்ற தன்மை ஒரு பிரச்சனை. புத்தர் உட்கார்ந்திருக்கும் விதம், பத்மாசனம் என்ற யுக்தி, எடையற்ற நிலையை அடைய சிறந்த வழியாகும். நிலத்தில் உட்கார் – நாற்காலியிலோ அல்லது வேறு எதிலுமோ உட்காராதே, வெறும் தரையில் உட்கார். தரை சிமெண்ட்டோ அல்லது வேறு ஏதாவது சேர்க்கையானதோ இல்லாமல் இருந்தால் நல்லது. வெறும் பூமியில் உட்கார். இதனால் நீ இயற்கைக்கு மிகவும் நெருங்கி இருக்கிறாய். நீ அம்மணமாக உட்கார முடிந்தால் அது நல்லது. பூமியில் அம்மணமாக புத்தரின் வடிவத்தில், பத்மாசனத்தில் – ஏனெனில் எடையற்று இருப்பதற்குப் பத்மாசனமே சிறந்த ஆசனம் – உட்கார். ஏன்? ஏனெனில் உனது உடல் இப்படியோ அப்படியோ சாய்ந்தால் நீ அதிக எடையை உணர்வாய். அப்போது உனது உடம்பில் புவியீர்ப்பால் பாதிக்கப்படும் பகுதி அதிகமாக இருக்கும். நான் இந்த நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் பொழுது பத்மாசனத்தில் அமர்ந்திருப்பதை விட அதிகமாக எனது உடம்புப் பகுதி புவியீர்ப்பால் பாதிக்கப் படுகிறது.

நீ நின்று கொண்டிருக்கும் பொழுது குறைந்த பகுதியே பாதிக்கப்படுகிறது, ஆனால் நீ நீண்ட நேரம் நிற்க முடியாது. மகாவீரர் நின்று கொண்டே தியானம் செய்தார் – எப்பொழுதும். ஏனெனில் மிகக் குறைவான பகுதியே ஈர்க்கப்படுகிறது. உனது பாதங்கள் மட்டுமே தரையைத் தொட்டுக் கொண்டிருக்கின்றன. நீ உனது காலில், நேராக நிற்கும்போது, மிகக் குறைந்த அளவே புவியீர்ப்பு உன்னிடம் வேலை செய்கிறது – மேலும் புவியீர்ப்பே எடை.

புத்தருடைய வடிவத்தில், கோர்த்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருப்பது – உனது கால்கள் பூட்டப் பட்டுள்ளன, உனது

கைகள் பூட்டப்பட்டுள்ளன – இதுவும் உதவும். ஏனெனில் அப்போது உனது உள்ளிருக்கும் மின்சாரம் ஒரு முழுச் சுற்றாக மாறுகிறது. உனது முதுகுத் தண்டு நேராக இருக்கட்டும்.

இப்போது நீ புரிந்து கொள்ளலாம், ஏன் முதுகுத்தண்டு நேராக இருப்பதற்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப் பட்டது என்பதை. ஏனெனில் முதுகுத் தண்டு நேராக இருக்கு மளவு மேலும் மேலும் குறைவான பகுதியே ஈர்ப்புக்கு உள்ளா கிறது. ஆகவே புவியீர்ப்பு உன்னைக் குறைவாகவே பாதிக்கிறது. கண்களை மூடிக் கொண்டு, உன்னை முழுதுமாக சமன் செய்து கொள், உன்னை மையப்படுத்திக் கொள். வலது பக்கமாகச் சாய்ந்து புவியீர்ப்பை உணர்; இடது பக்கமாகச் சாய்ந்து புவியீர்ப்பை உணர்; முன்பக்கமாகச் சாய்ந்து புவியீர்ப்பை உணர்; பின்பக்கமாகச் சாய்ந்து புவியீர்ப்பை உணர். பிறகு புவியீர்ப்பை மிகக் குறைவாய் உணரும் மையத்தை, மிகவும் குறைவாக எடையை உணரும் இடத்தைக் கண்டுபிடித்து அங்கேயே இரு. பிறகு உடலை மறந்துவிட்டு உன்னை எடையற்று உணரு – நீ எடையற்றவன். பிறகு இந்த எடையற்ற தன்மையைத் தொடர்ந்து உணர்ந்து கொண்டே இரு. திடீரென நீ எடையற்றுப் போய் விடுவாய்; திடீரென நீ உடம்பில்லாமல் இருப்பாய்; திடீரென நீ உடம்பற்ற ஒரு மாறுபட்ட உலகத்தில் இருப்பாய்.

எடையற்ற தன்மையே உடம்பற்ற தன்மை. அப்போது நீ மனதையும் கடந்துவிடுகிறாய். மனமும் உடலின் பாகம்தான், பொருளின் பாகம்தான். பொருளுக்கு எடையுண்டு; உனக்கு எடையில்லை. இதுதான் இந்த யுக்தியின் அடிப்படை.

இந்த யுக்தியை முயற்சி செய், மேலும் இதையே சில நாட்களுக்குப் பிடித்துக் கொண்டிரு. அதன் மூலம் இது உனக்கு வேலை செய்கிறதா இல்லையா என்பதை உணர்ந்துகொள்ள முடியும்.

இன்று இது போதும்.



# முழுமையாக ஏற்றுக் கொள்ளலும் பிளவற்று இருத்தலும் : இதுவே தந்த்ராவின் தூய்மை

## கேள்வி

❖ தந்த்ரா தூய்மை என்பதன் பொருள் என்ன?

**கேட்கப்பட்டிருக்கும் விஷயங்களில் ஒன்று:**

❖ *''மனதைத் தூய்மைப்படுத்துதல், மனத்தின் தூய்மை, இதை மேலும் வளர்வதற்கு ஒரு அடிப்படை நிபந்தனையாக தந்த்ரா கூறுவதன் அர்த்தம் என்ன?''*

சாதாரணமாக எவையெல்லாம் தூய்மை என்பதற்கு அர்த்தமாக எடுத்துக் கொள்ளப்படுகிறதோ அவை தந்த்ராவின் தூய்மை என்பதற்கு அர்த்தமாகாது. சாதாரணமாக நாம் எல்லாவற்றையும் நல்லது கெட்டது என்று பிரிக்கிறோம். ஏதாவதொரு காரணத்தால் நாம் பிரிக்கிறோம். அது சுத்தத்தை, ஒழுக்கத்தை அல்லது வேறு ஏதாவது ஒன்றினால் இருக்கலாம். ஆனால் நாம் வாழ்வை இரண்டாகப் பிரிக்கிறோம் - நல்லது கெட்டது. மேலும் சாதாரணமாக, நாம் தூய்மை என்று சொல்லும் போதெல்லாம் நாம் நல்ல குணத்தையே அர்த்தமாகக் குறிக்கிறோம் - கெட்ட குணங்கள் அங்கே இருக்கக்கூடாது. நல்ல குணங்கள் மட்டுமே இருக்க வேண்டும். ஆனால் தந்த்ராவிற்கு இந்த நல்லவை, கெட்டவை என்ற பிரிவு அர்த்தமற்றது, தந்த்ரா வாழ்க்கையை எந்தவிதப் பகுதிகளாகவும், எந்தவிதப் பிரிவுகளாகவும், எந்தவித இரட்டைத்தன்மை கொண்டதாகவும் பார்ப்பதில்லை. அப்போது ''தந்த்ராவில் தூய்மை என்பதன் அர்த்தம் என்ன?'' என்ற கேள்வி மிகவும் சரியானதே.

நீ ஒரு தவசியிடம் கேட்டால், அவர் கோபம் கெட்டது, பாலுணர்வு கெட்டது, பேராசை கெட்டது என்பார். நீ குருட்ஜிப்பைக் கேட்டால் எதிர்ப்பானது தவறு. எந்த உணர்ச்சியாக இருந்தாலும் அது எதிர்ப்பானதாய் இருந்தால் தவறு. ஆதரவானதாய் இருந்தால் நல்லது என்பார். நீ ஜைனர்கள், புத்த மதத்தினர், இந்துக்கள், கிறிஸ்துவர்கள் அல்லது முகமதியர்கள், இவர்கள் எல்லோரும் நல்லது கெட்டது குறித்த தங்கள் வரையறையில் வித்தியாசப்படலாம். ஆனால் இவர்கள் எல்லோருக்கும் வரையறை உள்ளது. இவர்கள் சிலவற்றை

நல்லவை என்றும், சிலவற்றைக் கெட்டவை என்றும் சொல்கிறார்கள். ஆகவே தூய்மையை வரையறை செய்வதில் அவர்களுக்கு எந்தச் சிரமமும் இல்லை. எதையெல்லாம் அவர்கள் நல்லது என்று எடுத்துக் கொள்கிறார்களோ அது தூய்மையானது. எதையெல்லாம் அவர்கள் கெட்டது என்று எடுத்துக் கொள்கிறார்களோ அது தூய்மையற்றது.

ஆனால் தந்த்ராவிற்கு இது ஒரு பெரிய பிரச்சனை. தந்த்ரா மேலோட்டமாக நல்லது கெட்டது என்று எதையும் பிரிப்பதில்லை. அப்படியென்றால் தூய்மை என்பது என்ன? தந்த்ரா சொல்கிறது, பிரிப்பது தூய்மையற்றது, பிரித்துப் பார்க்காமல் வாழ்வது தூய்மையானது. ஆகவே தந்த்ராவிற்குத் தூய்மை என்பதன் அர்த்தம் குழந்தைத்தனம், வெகுளித்தனம் - பிரித்துப் பார்க்கத் தெரியாத அப்பாவித்தனம்.

ஒரு குழந்தை இருக்கிறது; நீ அதைத் தூய்மையானது என்று அழைக்கிறாய். அதற்குக் கோபம் வருகிறது, அதற்குப் பேராசை இருக்கிறது, பின் எப்படி நீ அதைத் தூய்மையானது என்று அழைக்கிறாய்? குழந்தையின் மனத்தில் பிரிவினை இல்லை. எது நல்லது எது கெட்டது என்ற எந்தப் பிரிவினை பற்றியும் குழந்தை உணர்ந்திருப்பதில்லை. இந்த உணர்வற்ற நிலைதான் வெகுளித்தனம். குழந்தை கோபம் கொண்டாலும், அதற்குக் கோபப்படுவதற்கான மனம் இல்லை. ஆகவே கோபம் ஒரு தூய்மையான, எளிய செயலாகிறது. அது நிகழ்கிறது, அது போகும்போது, அது போய்விடுகிறது. எதுவும் பின்னால் மிஞ்சி இருப்பதில்லை. குழந்தை மறுபடியும் பழையபடி ஆகிவிடுகிறது. கோபம் வந்த சுவடே அங்கில்லாமல் ஆகிவிடுகிறது. அதன் தூய்மை தொடப்படுவதில்லை; அதன் தூய்மை அப்படியே இருக்கிறது. ஆக ஒரு குழந்தை தூய்மையானது. ஏனெனில் அங்கு மனம் இல்லை.

மனம் அதிகமாக வளர்கின்ற பொழுது, குழந்தை அதிகமாகத் தூய்மையற்றுப் போகும். பிறகு கோபம் ஒரு யோசித்துச் செய்ததாக அங்கு இருக்கும், இயற்கையானதாக இருக்காது. பிறகு சில சமயம் குழந்தை கோபத்தை அமுக்கி

வைக்கும் – சூழ்நிலை அதை அனுமதிக்காததாக இருக்கும் போது. அதோடு கோபம் அமுக்கி வைக்கப்பட்டிருக்கையில், சில சமயம் அது வேறொரு சூழ்நிலையில் வெளிவரும். கோபப்படத் தேவையில்லாத ஒரு சமயத்தில் அதற்குக் கோபம் வரும். ஏனெனில் அமுக்கி வைக்கப்பட்டுள்ள கோபத்திற்கு ஏதாவதொரு திறப்பு வேண்டும். இப்போது எல்லாமும் தூய்மையற்றதாகி விடுகிறது. ஏனெனில் மனம் உள்ளே வந்துவிட்டது.

நமது கண்களுக்கு ஒரு குழந்தை திருடனாகத் தெரியலாம். ஆனால் ஒரு குழந்தை அதைப் பொருத்தவரை ஒருபோதும் ஒரு திருடனல்ல. ஏனெனில் பொருட்கள் தனிப்பட்டவர்களுக்குச் சொந்தம் என்ற அடிப்படைக் கருத்தே குழந்தையின் மனத்தில் கிடையாது. அது உனது கைக்கடிகாரத்தை, உனது பணத்தை அல்லது வேறு எதையாவது எடுத்துக் கொண்டாலும் அதற்கு அது ஒரு திருட்டு அல்ல. ஏனெனில் பொருட்கள் யாராவது ஒருவரைச் சேர்ந்தவை என்ற கருத்தே அதற்குக் கிடையாது. அதனுடைய திருட்டும் தூய்மையானதே. அதே சமயம் திருட்டற்ற உனது செயலும் தூய்மையானது அல்ல. ஏனெனில் மனம் அங்கே உள்ளது.

தந்த்ரா சொல்கிறது, ஒருவன் மறுபடியும் குழந்தையைப் போல மாறும்போது அவன் தூய்மையானவன் ஆகிறான். ஆனால் அவன் ஒரு குழந்தையல்ல – குழந்தையைப் போன்றவன் மட்டுமே. அங்கு வித்தியாசமும் இருக்கிறது, ஒற்றுமையும் இருக்கிறது. ஒற்றுமை வெகுளித்தனத்தைத் திரும்பப் பெற்றது. மறுபடியும் ஒருவன் குழந்தையைப் போல ஆகிவிட்டான். ஒரு குழந்தை அம்மணமாக நின்று கொண் டிருக்கிறது. ஒருவரும் அந்த அம்மணத்தை உணருவதில்லை. ஏனெனில் ஒரு குழந்தைக்கு இன்னும் தனது உடலைப் பற்றிய உணர்வு இல்லை. அதனுடைய அம்மணம் உன்னுடைய அம்மணத்திலிருந்து மாறுபட்ட குணத்தைக் கொண்டிருக்கிறது. உனக்கு உடலைப் பற்றிய உணர்வு இருக்கிறது.

தவசி இந்த வெகுளித் தன்மையைக் கண்டிப்பாக திரும்பப் பெற வேண்டும். மகாவீரர் மறுபடியும் அம்மணமாக நின்றார். அந்த அம்மணத்திற்கு மறுபடியும் அதே வெகுளித்தனமான குணாதிசியம் இருந்தது. அவர் அவரது உடலை மறந்து விட்டார்; அவர் மேற்கொண்டும் உடம்பாக இருக்கவில்லை. ஆனால் அங்கே ஒரு வித்தியாசம் இருந்தது. மேலும் அந்த வித்தியாசம் மிகப் பெரியது : குழந்தை வெறும் அறியாமையில் இருக்கிறது, ஆகவே வெகுளித் தன்மையில் இருக்கிறது. ஆனால் தவசி அறிந்தவனாய் இருக்கிறான். அதுவே அவனது வெகுளித் தன்மைக்குக் காரணமாய் இருக்கிறது.

குழந்தை ஒரு நாள் தனது உடலைப் பற்றி உணர்வு அடையும், அப்போது அம்மணத்தை உணரும். அது மறைத்துக் கொள்ளப் பார்க்கும், அது குற்றவுணர்ச்சி அடையும், மேலும் அது அவமானமாய் உணரும். அது உணர்வை அடையவே போகிறது. ஆகவே அதனுடைய வெகுளித்தன்மை என்பது அறியாமையினால் ஏற்படும் வெகுளித்தன்மையே ஆகும். அறிவு அதை அழித்துவிடும்.

பைபிளில் உள்ள ஆதாமும் ஏவாளும் ஏடன் தோட்டத்தி லிருந்து வெளியேற்றப்பட்ட கதையின் அர்த்தம் இதுதான். அவர்கள் குழந்தையைப் போல அம்மணமாய் இருந்தார்கள். அவர்களுக்கு உடலைப் பற்றிய உணர்வு இல்லை; அவர் களுக்குக் கோபம், பேராசை, காமம், பாலுணர்வு அல்லது எதைப் பற்றியும் விழிப்புணர்வு இல்லை. அவர்கள் விழிப்புணர்வு அற்று இருந்தார்கள். அவர்கள் குழந்தையைப் போல வெகுளித்தன்மையுடன் இருந்தார்கள்.

ஆனால் கடவுள் அவர்களை அறிவு மரத்தின் பழங்களை உண்பதற்குத் தடை விதித்திருந்தார். அறிவு மரத்திற்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது. ஆனால் அவர்கள் அதை உட்கொண் டார்கள். ஏனெனில் தடை விதிக்கப்படும் எதுவும் அழைப்பு விடுப்பதாக ஆகிவிடுகிறது. தடை விதிக்கப்படும் எதுவும்

கவர்ச்சிமிக்கதாக ஆகிவிடுகிறது! அவர்கள் எண்ணிக்கையில் அடங்காத மரங்கள் உள்ள மிகப் பெரிய தோட்டத்தில் வாழ்ந்து வந்தார்கள். ஆனால் அறிவு மரம் மட்டும் மிகவும் முக்கியத் துவமும் தனிச்சிறப்பும் கொண்டதாக ஆகிவிட்டது. ஏனென்னில் அதற்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது. உண்மையில் இந்தத் தடை விதிக்கப்பட்டிருந்ததே கவர்ச்சியாக, அழைப்பாக ஆகிவிட்டது. அவர்கள் அந்த மரத்தால் ஈர்க்கப்படுபவர்களைப் போல, வசியம் செய்யப்பட்டவர்களைப் போல ஆகிவிட்டார்கள். அவர்கள் அதனிடமிருந்து தப்பிக்க முடியாது, அவர்கள் உட்கொண்டே ஆகவேண்டும்.

இந்தக் கதை மிகவும் அழகானது, ஏனெனில் அந்த மரத்திற்கு அறிவு மரம் என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. அவர்கள் அறிவுப் பழத்தை உட்கொண்ட கணத்திலேயே வெகுளித்தன்மையை இழந்தவர்களாய் ஆகிவிட்டனர். அவர்கள் விழிப்புணர்வு அடைந்தனர்; அவர்கள் தாங்கள் அம்மணமாய் இருப்பதை உணர்ந்து கொண்டனர். உடனே ஏவாள் தனது உடம்பை மறைத்துக் கொள்ள முயற்சி செய்தாள். உடலைப் பற்றிய விழிப்புணர்வுடன் அவர்களுக்கு அனைத்தைப் பற்றியும் கோபம், காமம், பேராசை அனைத்தும் – விழிப்புணர்வு வந்து விட்டது. அவர்கள் பெரியவர்களாகி விட்டனர். ஆகவே அவர்கள் தோட்டத்திலிருந்து வெளியேற்றப்பட்டனர்.

ஆகவே பைபிளில் அறிவு பாவமாகக் கருதப்படுகிறது. அவர்கள் தோட்டத்திலிருந்து வெளியே வீசப்பட்டனர். அவர்கள் தண்டிக்கப்பட்டனர். ஏனெனில் அவர்களுக்கு அறிவு வந்து விட்டது. அவர்கள் மீண்டும் குழந்தையைப் போல, வெகுளித் தன்மை உள்ளவர்களாக, அறிவு அற்றவர்களாக மாறினால் மட்டுமே அவர்கள் தோட்டத்திற்குள் நுழைய முடியும். அவர்கள் மீண்டும் இந்த வெகுளித் தன்மையை அடைவது என்ற நிபந்தனையைப் பூர்த்தி செய்தால் மட்டுமே அவர்கள் கடவுளின் பேரரசில் நுழைய முடியும்.

இந்தக் கதை முழுவதும் மனித குலத்தின் கதை தான். ஒவ்வொரு குழந்தையும் தோட்டத்திலிருந்து வெளியேற்றப் படுகிறது – ஆதாம் ஏவாள் மட்டுமல்ல. ஒவ்வொரு குழந்தையும் தனது குழந்தைப் பருவத்தை எதையும் அறியாததாய், வெகுளித் தன்மையிலேயே வாழ்கிறது. அது தூய்மையானது, ஆனால் அந்தத் தூய்மை அறியாமையைச் சேர்ந்தது. அது தொடர முடியாது. அது அறிந்து கொண்டவனின் தூய்மையாக மாறும் வரை, நீ அதை நிலையானதாக நம்ப முடியாது. ஏனெனில் அது விரைவிலேயோ, அல்லது சிறிது காலத்திலோ போய்தான் ஆக வேண்டும், நீ அறிவின் கனியை உட்கொண்டு தான் ஆக வேண்டும்.

ஒவ்வொரு குழந்தையும் அறிவின் கனியை உட்கொண்டு தான் ஆக வேண்டும். இது ஏடன் தோட்டத்தில் சுலபமாக இருந்தது – அந்த மரம் அங்கு இருந்தது. அந்த மரத்திற்குப் பதிலாக நமக்குப் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு குழந்தையும் தேர்வில் வெற்றி பெற வேண்டும், வெகுளித்தன்மை அற்றதாக மாற வேண்டும், தனது வெகுளித்தன்மையை இழக்க வேண்டும். இந்த உலகத்திற்குக் கண்டிப்பாக அறிவு வேண்டும், இங்கு நீ வாழ்வதற்குக் கண்டிப் பாக அறிவு வேண்டும். நீ அறிவில்லாமல் இதற்குள் வாழ முடியாது. ஆனால் அறிவு வரும் கணத்திலேயே பிரிவினை நுழைந்து விடுகிறது. நீ எது நல்லது எது கெட்டது என்று பிரிக்க ஆரம்பித்து விடுகிறாய்.

ஆகவே தந்த்ராவிற்கு நல்லது கெட்டது என்ற பிரிவினை தான் தூய்மையற்றது. பிரிவினைக்கு முன்பு நீ தூய்மையாய் இருக்கிறாய், அதற்குப் பின்பு நீ தூய்மையாய் இருக்கிறாய், அதில் நீ தூய்மையற்று இருக்கிறாய். ஆனால் அறிவு ஒரு தவிர்க்க இயலாத ஒரு தீமை, நீ அதிலிருந்து தப்பிக்க முடியாது. ஒருவன் அதனூடே புகுந்தே சென்றாக வேண்டும்; அது வாழ்வின் ஒரு பாகம். ஆனால் ஒருவன் எப்பொழுதும் அதிலேயே இருக்க வேண்டிய அவசியம் இல்லை, ஒருவன் அதைக் கடந்து செல்ல

முடியும். அப்படிக் கடந்து செல்வது உன்னை மறுபடியும் தூய்மையாகவும் வெகுளித்தன்மை உடையவனாகவும் ஆக்கும். பிரித்துப் பார்த்தல் அதனுடைய அர்த்தத்தை இழக்கும்போது, நன்மை தீமை என்று வித்தியாசப்படுத்திப் பார்க்கும் அறிவு இல்லாமல் போகும் பொழுது, நீ மறுபடியும் உலகத்தை வெகுளித்தனமான அணுகுமுறையோடு பார்க்க முடியும்.

ஜீஸஸ் சொல்கிறார், ''நீ குழந்தை போல மாறாதவரை, நீ என்னுடைய கடவுளின் பேரரசில் நுழைய முடியாது.'' நீ குழந்தை போல மாறாதவரை.... இது தான் தந்த்ராவின் தூய்மை.

லா வோட்ஸூ சொல்கிறார், ''ஒரு இன்ச் பிரிவினை, அங்கே சொர்க்கமும் நரகமும் தனித்தனியாக உருவாக்கப்பட்டு விடுகிறது.'' எந்தப் பிரிவும் இல்லாத மனமே ஒரு தவசியின் மனம் – எந்தப் பிரிவும் இருக்கக் கூடாது! ஒரு தவசி எது நல்லது எது கெட்டது என்பதை அறிய மாட்டான். அவன் குழந்தையைப் போல, அதே சமயம் குழந்தையைப் போல அல்ல. ஏனெனில் இந்தப் பிரிவுகளை அவன் அறிவான். அவன் இந்தப் பிரிவுகளின் ஊடே புகுந்து சென்று அதைக் கடந்துள்ளவன்; அவன் அவைகளுக்கு அப்பால் போய்விட்டவன். அவனுக்கு இருளும் ஒளியும் தெரியும். ஆனால் இப்போது அவன் அவைகளுக்கு அப்பால் சென்று விட்டான். இப்போது ஒரு பாகமாகப் பார்க்கிறான், இப்போது அங்கு எந்தப் பிரிவுகளும் இல்லை. ஒளியும் இருளும் ஆகிய இரண்டும் ஒன்றாகிவிட்டன – ஒரே விளைவின் வெவ்வேறு டிகிரிகள் அல்லது கோணங்கள். இப்போது அவன் எல்லாவற்றையும் ஒன்றினுடைய பல்வேறு கோணங்களாகவே பார்க்கிறான்; அவை எந்த அளவு எதிரெதிர் துருவங்களாக இருப்பினும் அவை இரண்டல்ல. வாழ்வும் சாவும், அன்பும் வெறுப்பும், நல்லதும் கெட்டதும், எல்லாமே ஒரே விளைவின், ஒரே சக்தியின் பகுதிகளே. அவற்றின் வித்தியாசம் வெறும் கோணங்களில் மட்டுமே, மேலும் அவை ஒருபோதும் பிரிக்க முடியாதவை. ''இந்தப் புள்ளியிலிருந்து இது பிரிகிறது'' என்று அவற்றைக் குறிப்பிட முடியாது. அங்கு எந்தப் பிரிவும் இல்லை.

நல்லது எது? கெட்டது எது? எங்கிருந்து நீ அவற்றை வரையறுப்பாய், த்னியானதாகப் பிரித்துக் குறிப்பிடுவாய்? அவை எப்பொழுதும் ஒன்றே. அவை ஒன்றின் பல்வேறு கோண நிலைகளே. ஒரு முறை இது அறியப்பட்டால், உணரப்பட்டால், உன்னுடைய மனம் மறுபடியும் தூய்மை அடைகிறது. இதுதான் தூய்மை என்பதற்கு தந்த்ரா கொடுக்கும் அர்த்தம். ஆகவே நான் தந்த்ராவின் தூய்மையை வெகுளித்தன்மை என்றே வரை யறுப்பேன், நல்ல குணம் என்று அல்ல.

ஆனால் வெகுளித்தன்மை அறியாமை கொண்டதாக இருக்கலாம் – அப்போது அதனால் எந்தப் பயனும் இல்லை. அதை இழந்துதான் ஆகவேண்டும், நீ அதிலிருந்து வெளியே வீசப்பட்டே ஆகவேண்டும்; இல்லாவிட்டால் நீ பக்குவப்பட முடியாது. அறிவைக் கைவிடுதலும், அறிவைக் கடந்த நிலை யடைதலும் ஆகிய இரண்டுமே பக்குவமடைவதன் பகுதிகளே, வளர்ந்த மனிதனாவதன் பகுதிகளே. ஆகவே அதன் வழியாகப் போ, ஆனால் அங்கேயே தங்கிவிடாதே. நகரு! நகர்ந்து கொண்டே போ! அப்போது நீ அதற்கு அப்பால் சென்றுவிட்ட ஒருநாள் வரும்.

இதனால்தான் தந்த்ராவின் தூய்மையைப் புரிந்து கொள்வது கடினமாயிருக்கிறது. மேலும் தவறாகப் புரிந்து கொள்ளவும் முடியும். இது நுட்பமானது! ஆகவே தந்த்ரா முனிவரை அடையாளம் கண்டுகொள்வது சாத்தியமில்லாத ஒன்று. சாதாரண முனிவர்களையும், தவசிகளையும் அடையாளம் கண்டு விடலாம். ஏனெனில் அவர்கள் உன்னைப் பின்பற்றுகின்றனர் – உனது மதிப்பீடுகளை, உனது வரையறை களை, உனது ஒழுக்கத்தை. ஒரு தந்த்ரா முனிவரை அடையாளம் காண்பது கூடக் கடினம். ஏனெனில் அவர் எல்லா பிரிவினை களையும் கடந்த நிலையில் உள்ளார். ஆகவே உண்மையில், மனிதனின் வளர்ச்சி வரலாற்றில், நாம் தந்த்ரா முனிவர்களைப் பற்றி எதுவும் அறியவில்லை. அவர்களைப் பற்றிய குறிப்புக்

களோ, செய்திகளோ எதுவும் இல்லை. ஏனெனில் அவர்களை அடையாளம் காண்பது மிகவும் கடினம்.

'கன்ப்யூசியஸ்' 'லா வோட்ஸ"'விடம் சென்றார். லா வோட்ஸ"வின் மனம் தந்த்ராவால் விழிப்புணர்வு பெற்ற முனிவரின் மனம் போன்றது. அவர் ஒருபோதும் தந்த்ரா என்ற சொல்லைப் பற்றி அறிந்திருக்கவில்லை; அவருக்கு சொல் அர்த்தமற்றது. அவர் தந்த்ராவைப் பற்றி ஒருபோதும் அறிந்திருக்கவில்லை. ஆனால் அவர் கூறிய அனைத்தும் தந்த்ரா தான். கன்ப்யூசியஸ் நமது மனத்தின் பிரதிநிதி, அவர் நமது முதன்மைப் பிரதிநிதி. அவர் தொடர்ந்து எது நல்லது எது கெட்டது என்ற அடிப்படையிலேயே, எதைச் செய்ய வேண்டும் எதைச் செய்யக் கூடாது என்றே சிந்தித்தார். அவர் ஒரு சட்டவாதி – பிறந்தவர்களுக்குள்ளேயே மிகப் பெரிய சட்டவாதி அவர். அவர் லா வோட்ஸ"வைப் பார்க்கச் சென்றார், அவர் லா வோட்ஸ"விடம் கேட்டார், ''எது நல்லது? ஒருவன் செய்ய வேண்டியது என்ன? எது கெட்டது? தெளிவாக வரையறுத்துச் சொல்லுங்கள்.''

லா வோட்ஸ" சொன்னார், ''வரையறைகள் குளறுபடியையே உண்டாக்கும். ஏனெனில் வரையறைகள் என்பதன் பொருள் பிரித்தல்; இது இது, அது அது என்று பிரித்தல்.'' நீ பிரித்துச் சொல்கிறாய் அ என்பது அ, ஆ என்பது ஆ.... நீ பிரித்து விட்டாய். நீ அ என்பது ஆ ஆக முடியாது என்கிறாய்; அப்போது அங்கே ஒரு பிரிவை, ஒரு தனித்தனியானதை உருவாக்கி விட்டாய். ஆனால் பிரபஞ்ச இருப்பு ஒன்றே. அ என்பது எப்பொழுதும் ஆ என்று மாறிக் கொண்டே இருக்கிறது. அ என்பது எப்பொழுதும் ஆ வை நோக்கி நகர்ந்து கொண்டே இருக்கிறது. வாழ்வு எப்போதும் இறப்பாக மாறிக் கொண்டே இருக்கிறது, வாழ்வு எப்போதும் இறப்பிற்குள் நகர்ந்து கொண்டே இருக்கிறது. ஆகவே நீ எப்படி வரையறுப்பாய்? குழந்தைப் பருவம் வாலிபத்திற்குள் நகர்ந்து கொண்டிருக்கிறது,

வாலிபம் முதுமைக்குள் நகர்ந்து கொண்டிருக்கிறது; ஆரோக்கியம் நோயிடம் நகர்ந்து கொண்டிருக்கிறது. நோய் ஆரோக்கியத்திடம் நகர்ந்து கொண்டிருக்கிறது. ஆகவே அவற்றைத் தனியாகப் பிரிக்கும் எல்லைக் கோட்டை நீ எங்கே போட முடியும்?

வாழ்க்கை என்பது ஒரே அசைவு. ஆகவே நீ வரையறுக்கும் கணத்திலேயே ஒரு குளறுபடியை உருவாக்குகிறாய். ஏனெனில் வரையறைகள் எல்லாமே உயிரற்றவை. ஆனால் வாழ்வு ஒரு உயிரோடு கூடிய அசைவு. ஆகவே எப்பொழுதும் வரையறைகள் தவறாகவே இருக்கும். லா வோட்ஸு சொன்னார், ''வரையறை செய்வது உண்மையற்றதை உருவாக்கும். ஆகவே வரையறை செய்யாதே. எது நல்லது எது கெட்டது என்று சொல்லாதே.''

கன்ப்யூசியஸ் கேட்டார், ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? பிறகு எப்படி மக்களுக்கு வழிகாட்டவும், அவர்களை வழி நடத்தவும் முடியும்? பிறகு எப்படி அவர்களுக்குக் கற்றுத் தருவது? எப்படி அவர்களை ஒழுக்கமுள்ளவர்களாகவும் நல்லவர்களாகவும் ஆக்குவது?

லா வோட்ஸு சொன்னார், ''ஒருவன் மற்றொருவனை நல்லவனாக்க முயல்கிறான் என்றால், அது எனது கண்களுக்கு ஒரு பாவமாகவே தெரிகிறது. நீ யார் வழிநடத்த? நீ யார் வழிகாட்ட? வழிகாட்டுபவர்கள் அதிகம் இருக்கின்ற அளவு, அதிக குழப்பமே விளையும். எல்லோரையும் அவரவர்களிடமே விட்டுவிடுங்கள். நீ யார்?''

இந்த விதமான அணுகுமுறை ஆபத்தானதாகத் தெரிகிறது. அது அப்படித்தான்! இந்த விதமான அணுகுமுறைகளோடு சமுதாயத்தை அடிகோல முடியாது. கன்ப்யூசியஸ் தொடர்ந்து கேட்டுக் கொண்டே இருந்தார். ஆனால் லா வோட்ஸு கூறிய முழு விஷயமும் இதுதான், ''இயற்கையே போதுமானது, எந்த ஒழுக்கமும் தேவையில்லை. இயற்கை தங்கு தடையற்றது. இயற்கையே போதுமானது, எந்தத் திணிக்கப்படும் சட்டங்களும்

ஒழுக்கப் பயிற்சிகளும் தேவையில்லை. வெகுளித்தன்மை போதுமானது; எந்த ஒழுக்கமும் தேவையற்றது. இயற்கை அதன் போக்கிலானது, தங்குதடையற்றது, இயற்கையே போதுமானது. திணிக்கப்படும் எந்தச் சட்டங்களும் ஒழுக்கப் பயிற்சிகளும் தேவையில்லை. வெகுளித் தன்மையே போதுமானது. அறிவு தேவையில்லை.''

கன்ப்யூசியஸ் மிகவும் பாதிக்கப்பட்டவராகத் திரும்பி வந்தார். அவரால் பல இரவுகள் உறங்க முடியவில்லை. மேலும் அவரது சீடர்கள் கேட்டார்கள், ''அந்தச் சந்திப்பைப் பற்றி ஏதாவது சொல்லுங்கள். என்ன நடந்தது?'' கன்ப்யூசியஸ் பதில் சொன்னார். ''அவன் ஒரு மனிதனே இல்லை, அவன் அபாயகர மானவன், ஒரு டிராகன். அவன் ஒரு மனிதன் அல்ல. அவன் இருக்குமிடத்திற்கு ஒருபோதும் செல்லாதீர்கள். நீங்கள் லா வோட்ஸுவைப் பற்றி எங்காவது கேள்விப்பட்டால் அந்த இடத்திலிருந்து உடனே தப்பி விடுங்கள். அவர் உங்கள் மனதை முற்றிலும் பாதித்து விடுவார்.''

இது சரிதான், ஏனெனில் முழு தந்த்ராவும் மனதை எப்படிக் கடப்பது என்பதில் அக்கறை கொண்டதே. அது கண்டிப்பாக மனதை அழித்து விடும். மனம் வரையறைகளுடன் சட்டங்களுடன் ஒழுக்க விதிகளுடன் வாழ்வது; மனம் ஒரு ஒழுங்கு. ஆனால் நினைவில் கொள், தந்த்ரா ஒழுங்கற்றது அல்ல. இந்த நுட்பமான விஷயத்தைப் புரிந்துகொள்ள வேண்டும்.

லா வோட்ஸுவை கன்ப்யூசியஸ் புரிந்து கொள்ள முடிய வில்லை. கன்ப்யூசியஸ் சென்ற பிறகு லா வோட்ஸு சிரித்தார், மேலும் சிரித்தார். அப்போது அவரது சீடர்கள் கேட்டார்கள், ''ஏன் நீங்கள் இவ்வளவு சிரிக்கிறீர்கள்? என்ன நடந்தது?''

லா வோட்ஸு சொன்னதாகக் குறிப்பிடப்பட்டுள்ளதாவது, ''புரிந்து கொள்வதற்கு மனம் அவ்வளவு தடையாக இருக்கிறது. கன்ப்யூசியஸின் மனமே கூட ஒரு தடையாக இருக்கிறது. அவரால் என்னைச் சிறிது கூடப் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஆகவே அவர் என்னைப் பற்றிச் சொல்வது எதுவானாலும் அது தவறாகப் புரிந்து கொண்டதாகவே இருக்கும். அவர் இந்த உலகத்தில் ஒரு ஒழுங்கை உருவாக்கப் போவதாக நினைத்துக் கொண்டிருக்கிறார். நீ இந்த உலகத்தில் ஒழுங்கை உருவாக்க முடியாது. ஒழுங்கு அதன் இயல்பாகவே இங்கிருக்கிறது; அது எப்பொழுதும் இங்கிருக்கிறது. ஆகவே நீ ஒழுங்கை உருவாக்க முயற்சி செய்யும் போது நீ சீர்குலைவையே உருவாக்குகிறாய்.'' லா வோட்ஸு சொன்னார், ''நான் சீர்குலைவை உண்டாக்கிக் கொண்டிருப்பதாக அவர் நினைப்பார். ஆனால் உண்மையில் சீர்குலைவை உண்டாக்குவது அவர்தான். நான் திணிக்கப்படும் ஒழுங்குகள் எல்லாவற்றிற்கும் எதிரானவன். ஏனெனில் நான் இயல்பாய் உள்ள ஒழுக்கங்களை, வந்து தானாகவே வளர்பவை களை நம்புபவன். நீ அதைத் திணிக்க வேண்டிய தேவை இல்லை.''

தந்த்ரா எல்லாவற்றையும் இந்த வகையிலேயே பார்க்கிறது. தந்த்ராவிற்கு வெகுளித் தன்மை இயல்பானது, சகஜமானது – எதுவும் திணிக்கப்படாமல் அவனாகவே இருப்பது, ஒருவன் அவனாக மட்டுமே இருப்பது, மரத்தைப் போல வளர்வது. உனது தோட்டத்திலுள்ள மரத்தைப் போல அல்ல, மாறாக தன் இயல்புப்படி சுதந்திரமாக வளரும் காட்டி லுள்ள மரத்தைப் போல; வழிநடத்தப்பட்டு அல்ல, ஏனெனில் எல்லா வழிகாட்டுதலும் தவறான வழியைக் காட்டுவதேயாகும். தந்த்ராவிற்கு எல்லா வழி காட்டுதலும் தவறான வழிகாட்டுதலே யாகும். வழிகாட்டுதல் இல்லாமல், பாதுகாப்பவர் இல்லாமல், திசை குறிப்பிடப்படாமல், இலக்கு இல்லாமல், ஆனால் வளர்வது மட்டுமாக இருப்பதே தந்த்ரா.

உள்ளிருக்கும் விதி போதுமானது; வேறு எந்த விதியும் சட்டமும் தேவையில்லை. உனக்கு வேறு ஏதாவது சட்டம் தேவைப்படுவது எதைக் காட்டுகிறதென்றால், நீ உள்ளிருக்கும் விதியை அறியவில்லை, நீ அதோடு உள்ள தொடர்பை இழந்து விட்டாய். ஆகவே உண்மையான விஷயம் திணிக்கப்படும்

ஏதோ ஒன்று அல்ல. உண்மையான விஷயம் மறுபடியும் சமநிலை பெறுவது, மறுபடியும் மையத்தை நோக்கி நகர்வது, மறுபடியும் வீடு திரும்புவது. ஏனெனில் அப்போதுதான் நீ உண்மையான உள்ளிருக்கும் விதியை அடைகிறாய்.

ஆனால் ஒழுக்கத்திற்கு, மதங்களுக்கு – மதங்கள் என்று தங்களை அழைத்துக் கொள்பவைகளுக்கு – ஒழுங்கு என்பது எங்கிருந்தோ, மேலே இருந்தோ திணிக்கப்பட வேண்டும், நன்மை என்பது திணிக்கப்பட வேண்டும். மதங்கள், ஒழுக்க போதனைகள், மத போதகர்கள், போப்புகள் இவர்கள் எல்லோரும் உனது இயல்பை மோசம் என்றே எடுத்துக் கொள் கிறார்கள் – இதை நினைவில் கொள். அவர்களுக்கு மனிதனின் நல்லதனத்தின் மேல் நம்பிக்கை இல்லை; அவர்களுக்கு உள்ளிருக்கும் எந்த நல்லதனத்தின் மீதும் நம்பிக்கை இல்லை. அவர்கள் நீ ஒரு தீமை, உனக்கு நல்லதைச் சொல்லிக் கொடுக் காமல் நீ நல்லவனாயிருக்க முடியாது; எங்கோ வெளியிலிருந்து நல்லதைப் புகுத்தியாக வேண்டும், அது உள்ளிருந்து வருவதற்கு எந்தச் சாத்தியமும் இல்லை என்றே நம்புகிறார்கள்.

ஆகவே மதப் போதகர்களுக்கு, மதத்தைச் சேர்ந்தவர் களுக்கு, ஒழுக்கவாதிகளுக்கு, நீ இயற்கையாக மோசமானவன். நல்ல தன்மை என்பது எங்கோ வெளியிலிருந்து திணிக்கப்பட வேண்டிய ஒழுக்கப் பயிற்சியேயாகும். நீ கலைந்து கிடக்கிறாய்; எனவே ஒழுங்கு அவர்களால் கொண்டு வரப்பட வேண்டும்; அவர்கள் கொண்டு வருவார்கள். ஆனால் அவர்கள் இந்த முழு உலகத்தையும் ஒரு குளறுபடியாய், ஒரு குழப்பமாய், ஒரு பயித்தியக்கார விடுதியாய் ஆக்கிவிட்டனர். ஏனெனில் அவர்கள் நூற்றாண்டு நூற்றாண்டுகளாக ஒழுங்குபடுத்திக் கொண்டிருக் கின்றனர், நூற்றாண்டு நூற்றாண்டுகளாக ஒழுக்கப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். கற்றவர்கள் எல்லோரும் பைத்தியமாகப் போய்விடும் அளவு அவர்கள் அவ்வளவு அதிகம் கற்றுத்தந்து விட்டனர்.

தந்த்ரா உனது உள்ளிருக்கும் நல்லதன்மையையே நம்புகிறது; இந்த வித்தியாசத்தை நினைவில் கொள். தந்த்ரா சொல்கிறது, எல்லோரும் நல்லவராகவே பிறக்கிறார்கள், அந்த நல்லதன்மை உனது இயற்கை. இது இப்படியே இருக்கிறது! நீ ஏற்கனவே நல்லவனாகவே இருக்கிறாய்! உனக்கு இயற்கையான வளர்ச்சியே தேவை, உனக்குத் திணிக்கப்படும் எதுவும் தேவையில்லை; அதனால்தான் எதுவும் கெட்டதாக எடுத்துக் கொள்ளப்படவில்லை. கோபம் அங்கு இருந்தால், பாலுணர்வு அங்கு இருந்தால், பேராசை அங்கு இருந்தால் அவைகளும் நல்லவையே என்று தந்த்ரா சொல்கிறது. குறையும் ஒரே விஷயம் நீ உன்னில் மையம் கொள்ளாமல் இருப்பது தான்; அதனால்தான் நீ அவைகளைப் பயன்படுத்த முடியவில்லை.

கோபம் மோசமானது அல்ல. உண்மையில், நீ உனக்குள் இல்லாததே பிரச்சனை. அதனால்தான் கோபம் பேரழிவை ஏற்படுத்துகிறது. நீ அங்கு உனக்குள் இருந்தால், கோபம் ஒரு ஆரோக்கியமான சக்தியாக மாறுகிறது, கோபம் ஆரோக்கியமாகிறது. கோபம் சக்தியாக மாற்றமடைகிறது, அது நல்லதாக மாறுகிறது. அங்கு எது இருந்தாலும் அது நல்லதே. தந்த்ரா எல்லாவற்றிலும் உள்ள இயல்பான நல்லதன்மையை நம்புகிறது. எல்லாமே புனிதமானது, எதுவும் புனிதமற்றது அல்ல, எதுவும் தீமை அல்ல. தந்த்ராவிற்குச் சாத்தான் கிடையாது, தெய்விக இருப்பு மட்டுமே உள்ளது.

மதங்கள் சாத்தான் இல்லாமல் இருக்க முடியாது. அவைகளுக்கு ஒரு கடவுள் வேண்டும், ஒரு சாத்தானும் வேண்டும். ஆகவே அவர்களுடைய கோவில்களில் கடவுளை மட்டும் பார்த்துவிட்டுத் தவறான முடிவிற்கு வந்துவிடாதே. அந்தக் கடவுளுக்குப் பின்னால் சாத்தான் ஒளிந்து கொண்டிருக்கிறது. ஏனெனில் எந்த மதமும் சாத்தான் இல்லாமல் இருக்க முடியாது.

ஏதாவதொன்றைப் பழிக்க வேண்டும், ஏதாவதொன்றுடன் சண்டை போட வேண்டும், ஏதாவதொன்றை அழிக்க வேண்டும். முற்றிலுமாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை, வெறும் பாகமே

ஏற்கப்படுகிறது. இதுதான் மிகவும் அடிப்படை. நீ முழுதாக எந்த மதத்தினாலும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை, உன்னின் ஒரு பாகமே ஏற்கப்படுகிறது. அவை சொல்கின்றன, ''நாங்கள் உனது அன்பை ஏற்றுக்கொள்கிறோம், ஆனால் உனது வெறுப்பை ஏற்கமாட்டோம். வெறுப்பை அழி.'' இது மிகவும் ஆழமான பிரச்சனை. ஏனெனில் உன்னுடைய வெறுப்பை முற்றிலும் அழிக்கும்போது, அன்பும் சேர்ந்து அழிந்துவிடுகிறது - ஏனெனில் அவை இரண்டல்ல. அவை சொல்கின்றன, ''நாங்கள் உன் மௌனத்தை ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் உன் கோபத்தை ஏற்றுக்கொள்ள முடியாது.'' கோபத்தை அழித்தால் அப்போது உன் உயிர்த்துடிப்பும் அழிந்துபோகிறது. பிறகு நீ மௌனமாகிவிடுவாய், ஆனால் துடிப்புள்ள மனிதனாக அல்ல - இறந்த ஒருவனைப் போல. இப்படிப்பட்ட மௌனம் வாழ்க்கையல்ல, இது வெறும் மரணம்.

மதங்கள் எப்பொழுதும் உன்னை இரண்டாகப் பிரிக்கின்றன: தெய்விகமானதும் தீமையானதும் என்று. அவை தெய்விகமானதை ஏற்றுக்கொள்கின்றன, தீமைக்கு எதிராக இருக்கின்றன - தீமை அழிக்கப்பட வேண்டும். ஒருவன் உண்மையாகவே அவர்களைக் கடைபிடித்தால், சாத்தானை அழிக்கும் அதே கணத்திலேயே கடவுளும் அழிந்துவிடுவதை அவன் கண்டுகொள்வான். ஆனால் ஒருவரும் அவர்களைக் கடைபிடிப்பதில்லை - ஒருவரும் உண்மையில் அவர்களைக் கடைபிடிக்க முடியாது. ஏனெனில் அவர்களது போதனை மடத்தனமானது. எனவே எல்லோரும் என்ன செய்கிறார்கள்? எல்லோரும் ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள். இதனால்தான் இவ்வளவு போலித்தனம் இங்கிருக்கிறது. இந்தப் போலித்தனம் மதங்களால் உருவாக்கப்பட்டது. நீ செய்ய வேண்டும் என்று அவர்கள் சொல்லும் எதையும் உன்னால் செய்ய முடியாது. ஆகவே நீ வேஷம் போடுபவனாக மாறுகிறாய். நீ அவர்களைக் கடைபிடித்தால் இறந்து விடுவாய், நீ அவர்களைக் கடைபிடிக்கா விட்டால், நீ பாவியாக, நீ மதத்தன்மை இல்லாதவனாக

உணர்வாய். ஆகவே என்ன செய்வது, நீ போலி வேஷம் போடுகிறாய்.

தந்திரமான மனம் ஒரு சமரசத்தைச் செய்து கொள்கிறது. அது அவர்களிடம் வாய் வார்த்தையில் ''நான் உங்களைப் பின் பற்றுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே அதே சமயம் அது என்ன செய்ய விரும்புகிறதோ அதைச் செய்து கொண்டிருக்கிறது. நீ உனது கோபத்தைத் தொடர்கிறாய், நீ உனது பாலுணர்வைத் தொடர்கிறாய், நீ உனது பேராசையைத் தொடர்கிறாய், ஆனால் நீ தொடர்ந்து பேராசை தீமையானது, கோபம் கெட்டது, பாலுணர்வு கெட்டது – அது ஒரு பாவம் – என்று சொல்லிக் கொண்டே இருக்கிறாய். இது போலித்தனம். இந்த முழு உலகமும் போலிவேஷம் போடுவதாக மாறிவிட்டது. உண்மை யான மனிதனே இல்லை. இந்தப் பிரிவினையை உண்டாக்கும் மதங்கள் மறையாதவரை, எந்த மனிதனும் உண்மையாக இருக்க முடியாது. இது பார்ப்பதற்கு முரண்பட்டதாகத் தெரியலாம். ஏனெனில் எல்லா மதங்களும் உண்மையாக இருக்கவே போதிக் கின்றன. ஆனால் அவைகளே எல்லா நேர்மையற்ற செயல் களுக்கும் அஸ்திவாரக் கற்களாக இருக்கின்றன. அவை உன்னை நேர்மையற்றவன் ஆக்குகின்றன; ஏனெனில் அவை சாத்தியமற்ற வைகளைச் செய்யச் சொல்லி உன்னிடம் போதிக்கின்றன, உன்னால் அவைகளைச் செய்ய முடியாது, ஆகவே நீ போலித்தன மானவனாக மாறுகிறாய்.

தந்த்ரா உன்னை முழுமையாக ஏற்றுக்கொள்கிறது, உனது முழுமையை ஏற்றுக்கொள்கிறது, ஏனெனில் தந்த்ரா சொல்கிறது, முழுமையாக ஏற்றுக்கொள்ளல் அல்லது முழுமையாக நிராகரித்துவிடல்; இடையில் எதுவும் கிடையாது. மனிதன் ஒரு முழுமை, ஒரு உயிருள்ள முழுமை. நீ அதைப் பிரிக்க முடியாது. ''நாங்கள் இதை ஏற்றுக்கொள்ள முடியாது'' என்று நீ சொல்ல முடியாது. ஏனெனில் நீ நிராகரிப்பது நீ ஏற்றுக்கொள்வதோடு உயிரியக்கத்திலேயே இணைந்துள்ளது.

இது இதைப் போன்றது..... எனது உடம்பு இருக்கிறது. யாரோ ஒருவர் வந்து சொல்கிறார், ''நாங்கள் உனது இரத்த ஓட்டத்தை ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் நாங்கள் உனது இதயத்தின் சப்தத்தை ஏற்க முடியாது. உனது இதயம் இப்படித் தொடர்ந்து துடித்துக்கொண்டிருப்பதை எங்களால் ஏற்க முடியாது. நாங்கள் உனது இரத்த ஓட்டத்தை ஏற்றுக்கொள் கிறோம். அது சரி, அது மௌனமாக நடக்கிறது.'' ஆனால் எனது இரத்த ஓட்டம் எனது இதயத்தின் மூலமாகவே நடக்கிறது, மேலும் இதயத் துடிப்பு இரத்த ஓட்டத்துடன் அடிப்படையி லேயே தொடர்பு கொண்டது; இதனாலேயே அது நடக்கிறது. ஆகவே நான் என்ன செய்வது? எனது இதயத் துடிப்பும், எனது இரத்த ஓட்டமும் ஒரே உயிரியக்கத்தைச் சேர்ந்தது. அவை இரண்டு செயல்களல்ல, அவை ஒன்றே.

எனவே என்னை முற்றிலுமாக ஏற்றுக்கொள்ளுங்கள் அல்லது முற்றிலுமாக நிராகரியுங்கள். ஆனால் என்னைப் பிரிக்க முயற்சி செய்யாதீர்கள். ஏனெனில் நீங்கள் என்னிடம் ஒரு உண்மையற்றதை, ஒரு ஆழமான போலித்தனத்தை உருவாக்கி விடுவீர்கள். நீங்கள் எனது இதயத்துடிப்பை இடைவிடாமல் பழித்துக் கொண்டிருந்தால், பிறகு நானும் எனது இதயத் துடிப்பைப் பழிக்க ஆரம்பித்துவிடுவேன். அப்போது இரத்த ஓட்டம் நடக்க முடியாது, மேலும் அது இல்லாமல் நான் உயிர்வாழ முடியாது. ஆகவே என்ன செய்வது? நீ இருக்கும் படியே இரு. ஆனால் அதே சமயம் வேறு ஏதாவது, நீ எப்படியில்லையோ அதை, நீ எப்படியிருக்க முடியாதோ அதைச் சொல்லிக் கொண்டே இரு.

இதயமும் இரத்த ஓட்டமும் எப்படிச் சம்பந்தப்பட்டுள்ளன என்று பார்த்துத் தெரிந்து கொள்வது ஒரு கடினமான செயல் அல்ல. ஆனால் எப்படி அன்பும் வெறுப்பும் சம்பந்தப் பட்டுள்ளன என்று பார்ப்பது மிகவும் கடினம். அவை ஒன்றே. நீ யாரையாவது நேசிக்கும்பொழுது என்ன செய்கிறாய்? மூச்சு

வெளியே போவது போன்ற, ஒரு பாதிச் செயல் இது. நீ யாரை யாவது நேசிக்கும்பொழுது என்ன செய்கிறாய்? நீ அவர்களைச் சந்திக்க வெளியே செல்கிறாய், இது சுவாசம் வெளியே போவது போல. நீ யாரையாவது வெறுக்கும்போது, அது சுவாசம் திரும்ப உள்ளே வருவது போன்றதே.

நீ நேசிக்கும்பொழுது, நீ யாரிடமாவது கவரப்படுகிறாய். நீ வெறுக்கும்பொழுது, நீ நிராகரிக்கப்படுகிறாய். கவர்ச்சி நிராகரிப்பு இரண்டும் ஒரே அசைவின் இரண்டு அலைகளே. கவர்ச்சியும் நிராகரிப்பும் இரண்டு விஷயங்களல்ல, நீ அவற்றைப் பிரிக்க முடியாது. ''நீ மூச்சை உள்ளே இழுக்கலாம், ஆனால் நீ மூச்சை வெளியே விடக் கூடாது அல்லது நீ மூச்சை வெளியே விடலாம், ஆனால் நீ மூச்சை உள்ளே இழுக்கக் கூடாது. உனக்கு ஒன்றுக்கு மட்டும்தான் அனுமதி. ஒன்று, மூச்சை வெளியே விட்டுக்கொண்டே இரு அல்லது மூச்சை உள்ளிழுத்துக் கொண்டே இரு. ஆனால் இரண்டையும் செய்யாதே'' என்று சொல்ல முடியாது. நீ மூச்சை வெளியே விட அனுமதிக்கப்படவில்லை என்றால், எப்படி மூச்சை உள்ளிழுக்க முடியும்? ஆகவே நீ வெறுப்பதற்கு அனுமதிக்கப்படவில்லை என்றால், நீ நேசிக்கவும் முடியாது.

தந்த்ரா சொல்கிறது, ''நாங்கள் மனிதனை முற்றிலுமாக ஏற்றுக் கொள்கிறோம். ஏனெனில் மனிதன் ஒரு பிரிக்கமுடியாத உயிரியக்கம்.'' மனிதன் ஒரு ஆழமான ஒருமை; நீ எதையும் விடமுடியாது. மனிதன் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருப்பவன் – ஏனெனில் மனிதன் ஒரு உயிரியக்க ஒருமை இல்லையென்றால், பிறகு இந்தப் பேரண்டத்தில் எதுவுமே உயிரியக்க ஒருமை ஆகாது. உயிரியக்க முழுமையின் உச்சம் மனிதன். தெருவில் கிடக்கும் கல்லும் ஒரு உயிரியக்க ஒருமை தான். மரம் ஒரு ஒருமை. மலரும் பறவைகளும் ஒருமைகள்தான். எல்லாமே ஒரு ஒருமைதான். அப்படியிருக்க மனிதனுக்கு மட்டும் இல்லையா? மேலும் மனிதன் தான் உச்சம் – ஒரு மிகப்

பெரிய ஒருமை, ஒரு மிகவும் சிக்கலான உயிரியக்க முழுமை. ஆகவே உண்மையில், நீ எதையும் மறுக்க முடியாது.

தந்த்ரா சொல்கிறது, ''நாங்கள் உன்னை நீ இருக்கும்படியே ஏற்றுக்கொள்கிறோம். இதற்கு அர்த்தம் மாற வேண்டிய அவசியமில்லை என்பதல்ல; இதற்கு அர்த்தம் நீ வளர்வதை நிறுத்திவிட வேண்டும் என்பதல்ல. பதிலாக, மாறாக, அதன் அர்த்தம் வளர்ச்சியின் அடிப்படையை நாம் ஏற்றுக்கொள் கிறோம் என்பதே.'' இப்போது நீ வளர முடியும், ஆனால் அந்த வளர்ச்சி நீ தேர்ந்தெடுப்பது போல் இருக்கப் போவதில்லை; இந்த வளர்ச்சி தேர்ந்தெடுக்காமல், தானாக வரும் வளர்ச்சியாக இருக்கும்.

பார்! உதாரணமாக, ஒரு புத்தர் ஞானமடையும்போது நாம் கேட்கலாம், ''அவருடைய கோபம் எங்கே போயிற்று – எங்கே? அவருக்குக் கோபமிருந்தது, அவருக்குப் பாலுணர்வு இருந்தது, அவருடைய பாலுணர்வு எங்கே போயிற்று? அந்த அவருடைய கோபம் எங்கே போயிற்று? அவருடைய பேராசை எங்கே?'' இப்போது அவரிடம் எந்தக் கோபத்தையும் காணமுடியவில்லை. அவர் ஞானமடைந்தபின் எங்களால் அவரிடம் எந்தக் கோபத்தையும் காண முடியவில்லை.

தாமரையில் நீ சேற்றைக் கண்டுகொள்ள முடியுமா? தாமரை சேற்றிலிருந்து வந்ததுதான். நீ சேற்றிலிருந்து வளர்ந்து மலர்ந்திருக்கும் தாமரையை ஒருபோதும் பார்த்திராத போது, உன்னிடத்தில் ஒரு தாமரை மலர் கொண்டு வரப்பட்டால், இந்த அழகிய தாமரை மலர் ஒரு குளத்திலுள்ள சாதாரண சேற்றி லிருந்து வந்ததுதான் என்று உன்னால் நினைத்துப் பார்க்க முடியுமா? இந்த அழகிய தாமரை மலர் அசிங்கமான சேற்றி லிருந்து வந்ததே! இதில் எங்காவது நீ சேற்றை அடையாளம் காண முடியுமா? அது உள்ளது, ஆனால் மாற்றமடைந்து உள்ளது. இதன் மணம் அதே அசிங்கமான சேற்றிலிருந்து வருவதுதான். இதன் இதழ்களின் செந்நிறம் அதே அசிங்கமான

சேற்றிலிருந்து வருவதுதான். நீ இந்தத் தாமரையைச் சேற்றில் மறைத்து வைத்தால், சில நாட்களில் இது மறுபடியும் தாயினுள்ளேயே மறைந்து விடும். பிறகு மறுபடியும் உன்னால் இப்போது தாமரை எங்கே போயிற்று என்பதைக் கண்டுகொள்ள முடியாது. எங்கே? எங்கே அந்த மணம்? எங்கே அந்த அழகான இதழ்கள்?

நீ ஒரு புத்தருக்குள் உன்னை அடையாளம் காணமுடியாது, ஆனால் நீ அங்கு இருக்கிறாய் – ஆனால், ஒரு உயர்ந்த, ஒரு சிறப்புமிக்க தளத்தில், மாறுதலடைந்தவனாய் இருக்கிறாய். பாலுணர்வு அங்கே இருக்கிறது, கோபம் அங்கே இருக்கிறது, வெறுப்பு அங்கே இருக்கிறது. மனிதனைச் சேர்ந்த எல்லாமும் அங்கு இருக்கிறது. புத்தர் ஒரு மனிதன்தான். ஆனால் அவருடைய வளர்ச்சியின் முடிவை எட்டிவிட்டவர் அவர். அவர் ஒரு தாமரை மலராக மாறிவிட்டவர்; நீ சேற்றை அங்கே காண முடியாது. ஆனால் அதற்காகச் சேறு அங்கே இல்லை என்று அர்த்தமில்லை. அது அங்கே இருக்கிறது, ஆனால் சேறாக இல்லை. அது உயர்ந்த ஒருமையில் இருக்கிறது. அதனால்தான் ஒரு புத்தரில் நீ வெறுப்பையோ அன்பையோ இரண்டையும் உணர முடிவதில்லை. இதைப் புரிந்துகொள்வது இன்னும் மிகக் கடினம். ஏனெனில் ஒரு புத்தர் எப்போதும் அமைதியில், ஒருபோதும் கோபமில்லாமல், முற்றிலும் அன்பாய், வெறுப்பு ஒருபோதும் இல்லாதவராய் தெரிகிறார். ஆனால் அவரது அமைதி உன்னுடைய அமைதியிலிருந்து வேறுபட்டது. அது ஒன்றுபோல இருக்க முடியாது.

உனது அமைதி என்பது என்ன? ஐன்ஸ்டீன் ஏதோவொரு இடத்தில் சொல்கிறார், அதாவது நமது அமைதி என்பது சண்டை போடத் தயார்படுத்திக் கொள்வதே அல்லாமல் வேறன்று. இரண்டு போர்களுக்கு இடையே, நமக்கு ஒரு அமைதி இடைவெளி கிடைக்கிறது. ஆனால் இந்த அமைதி உண்மையான அமைதி அல்ல. இது இரண்டு போர்களுக்கு இடையேயான

இடைவெளி மட்டுமே. ஆகவே இது ஒரு பனிப்போராக மாறுகிறது. எனவே, இரண்டு விதமான போர்கள் உள்ளன – சூடானது மற்றும் பனியானது.

இரண்டாம் உலகப் போருக்குப் பின், உருஷ்யாவும் அமெரிக்காவும் பனிப்போரை ஆரம்பித்துள்ளன. அவை அமைதி யாக இல்லை – மற்றொரு போருக்கு ஆயத்தமாகிக் கொண் டுள்ளன. அவை தயாராகி வருகின்றன. ஒவ்வொரு போரும், யுத்தமும், அழிவை, பாதிப்பை உண்டுபண்ணுகிறது. ஆகவே மறுபடியும் தயாராக, உனக்கு ஒரு இடைவெளி, ஒரு இடைப் பொழுது தேவைப்படுகிறது. ஆனால் போர்கள் இந்த உலகத்தி லிருந்து உண்மையாகவே முற்றிலுமாக மறைந்துவிட்டால், அப்போது இந்த வகையான பனிப்போர் என்ற பொய்யான அமைதியும் மறைந்துவிடும், ஏனெனில் இது எப்பொழுதும் இரண்டு போர்களுக்கு இடையே ஏற்படுவதே. ஆகவே போர்கள் முற்றிலும் மறைந்துவிட்டால், நாம் அமைதி என்று அழைக்கும் இந்தப் பனிப்போரும் முடிந்துவிடும்.

உன்னுடைய அமைதி எது? இரண்டு கோபங்களுக்கு இடையில் செய்யப்படும் ஆயத்தம் மட்டுமே. நீ நன்றாக இருப்ப தாகத் தெரிவது என்ன? நீ உண்மையிலேயே தளர்வாக, உண்மையிலேயே நன்றாக இருக்கிறாயா அல்லது மற்றொரு ஆத்திரத்திற்கு, மற்றொரு வெடிப்பிற்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறாயா? கோபம் என்பது சக்தியை விரயம் செய்வது, ஆகவே உனக்கு நேரம் தேவை. நீ கோபப்படும் பொழுது, மறுபடியும் உடனே கோபப்பட முடியாது. நீ பாலுணர்வில் ஈடுபடும்போது மறுபடியும் உடனே நீ ஈடுபட முடியாது. உனக்கு நேரம் தேவைப்படும், நீ பிரம்மச்சரியம் கடைபிடிக்கும் காலம் ஒன்று இடையில் வேண்டும் – குறைந்தது இரண்டு அல்லது மூன்று நாட்கள். அது உனது வயதைப் பொறுத்தது. இந்தப் பிரம்மச்சரியம் உண்மையான பிரம்மச் சரியம் அல்ல, நீ மறுபடியும் தயாராகிறாய் அவ்வளவுதான்.

இரண்டு பாலுணர்வு ஈடுபாட்டுக்கு இடையில் எந்த பிரம்மச்சரியமும் இருக்க முடியாது. நீ இரண்டு உணவுகளுக்கு இடையில் உள்ள நேரத்தை உண்ணாவிரதம் என்று அழைத்துக் கொண்டிருக்கிறாய். அதனால்தான் ஆங்கிலத்தில் காலை உணவு 'பிரேக்பாஸ்ட்' – அதாவது உண்ணாவிரதத்தை முடிப்பது – என்று அழைக்கப்படுகிறது. ஆனால் உண்ணாவிரதம் எங்கே? நீ ஆயத்தம்தான் செய்கிறாய். நீ தொடர்ந்து உணவை உனக்குள் திணித்துக் கொண்டிருக்க முடியாது. உனக்குக் கண்டிப்பாக இடைவெளி தேவை. ஆனால் இந்த இடைவெளி உண்ணாவிரத மல்ல. உண்மையில் இது அடுத்த வேளை உணவிற்கான ஆயத்தம்தான், உண்ணாவிரதம் அல்ல.

ஆகவே நாம் அமைதியாக இருக்கும்போது, அது எப்பொழுதும் இரண்டு கோபங்களுக்கு இடையில் உள்ளதுதான். நாம் சுலபமாக இருக்கும்போது, அது எப்பொழுதும் இரண்டு சிகரமான இறுக்கங்களுக்கு இடையில் உள்ளதுதான். நாம் பிரம்மச்சரியத்தோடு இருக்கும்போது, அது இரண்டு கலவி களுக்கு இடையே உள்ளது மட்டுமே. நாம் அன்பாய் இருக்கும் போது, அது எப்போதும் இரண்டு வெறுப்புகளுக்கு இடையில் தான் – இதை நினைவில் கொள்.

எனவே ஒரு புத்தர் அமைதியாக இருக்கும்போது, அது உன்னுடைய அமைதியென்று நினைத்துவிடாதே. உனது கோபம் மறையும்பொழுது, உனது அமைதியும் சேர்ந்து மறைந்துவிடும். அவை இரண்டும் சேர்ந்தே இருக்கின்றன; அவைகளைப் பிரிக்கமுடியாது. ஒரு புத்தர் பிரம்மச்சாரியாய் இருக்கும்போது, அது உன்னுடைய பிரம்மச்சரியம் என்று நினைத்து விடாதே. உனது பாலுணர்வு மறையும்போது, பிரம்மச்சரியமும் சேர்ந்து மறைந்து விடும். அவை இரண்டும் ஒன்றின் பாகங்களே. ஆகவே அவை இரண்டும் மறைந்துவிடும். ஒரு புத்தரிடம், நீ நினைத்தே பார்க்க முடியாத, மிகவும் வேறுபட்ட ஒரு இருப்பு உள்ளது. நீ உனக்குத் தெரிந்த எதிரெதிரானவை கொண்டே நினைத்துப்

பார்க்க முடியும். எந்த வகையான மனிதன் அவன், அவனுக்கு நிகழ்ந்துள்ளது என்ன, என்பதையெல்லாம் உன்னால் நினைத்துப் பார்க்க முடியாது.

முழுச் சக்தியும் ஒரு மாறுபட்ட நிலைக்கு வந்துள்ளது. ஒரு மாறுபட்ட பிரபஞ்ச இருப்பின் தளத்திற்கு வந்துள்ளது. சேறு தாமரையாக மாறியுள்ளது, ஆனாலும் அது இன்னும் அங்கிருக்கிறது. சேறு தாமரையிலிருந்து ஒதுக்கப்படவில்லை; அது நிலை மாறியுள்ளது.

ஆகவே உனக்குள் இருக்கும் எல்லா சக்திகளும் தந்த்ரா வினால் ஏற்றுக்கொள்ளப் படுகின்றன. தந்த்ரா எதுவாக இருந்தாலும் அதை ஒதுக்குவது அல்ல, மாறாக அதை மாற்றுவது. மேலும் அதற்கு முதல்படி அதை ஏற்றுக் கொள்வதே என்று தந்த்ரா சொல்கிறது. முதல்படி, அதாவது ஏற்றுக்கொள்வது மிகவும் கடினமானது. நீ ஒரு நாளில் பலமுறை கோபப்படலாம். ஆனால் உனது கோபத்தை ஏற்றுக்கொள்வது மிகவும் கடினம். ஏன்? நீ கோபப்படுவதை மிகவும் கடினமானதாக உணர்வதில்லை. பின் ஏன் அதை ஏற்றுக்கொள்வது அவ்வளவு கடினமாக உள்ளது? கோபப்படுவதைவிட, அதை ஏற்றுக்கொள்வதே மிகவும் சங்கடமாக இருக்கிறது. ஒவ்வொருவரும், அவன் ஒரு நல்ல மனிதன், கோபம் ஒரு கணம்தான் இருக்கும், அது வரும் உடனே போய்விடும் என்றே நினைக்கிறான். அது உனது சுய-கற்பனையை அழிப்பதில்லை. நீ தொடர்ந்து நல்லவனாகவே இருக்கிறாய். நீ சொல்கிறாய், ''அது ஏதோ நிகழ்ந்துவிட்டது.'' அது உனது ஆணவத்தை அழிப்பதில்லை.

ஆகவே தந்திரமானவர்கள் உடனே அதற்காக வருந்துவர். அவர்கள் கோபப்படுவார்கள், அவர்கள் அதற்காக உடனே வருத்தப்படுவார்கள், அவர்கள் மன்னிப்புக் கோருவார்கள். இவர்கள் தந்திரசாலிகள். நான் ஏன் அவர்களைத் தந்திரக்காரர்கள் என்று அழைக்கிறேன்? ஏனெனில் இவர்களுடைய கோபம் இவர்களின் சுய-கற்பனைக்கு ஒரு நடுக்கத்தைக் கொடுக்கிறது. அவர்கள் சங்கடமாக உணர ஆரம்பிக்கிறார்கள். அவர்கள்,

''எனக்குக் கோபம் வந்துவிட்டதா? நான் கோபப்படும் அளவுக்கு மோசமானவனா?'' ஆகவே நல்ல மனிதனின் கற்பனை நடுங்குகிறது. அவன் முயற்சி செய்து அதை மறுபடியும் நிறுவ வேண்டும். உடனே அவன் சொல்கிறான், ''இது கெட்டது. நான் ஒருபோதும் இதை மறுபடியும் செய்ய மாட்டேன். மன்னித்துக் கொள்ளுங்கள்.'' இப்படி மன்னிப்புக் கேட்பதன் மூலம் திரும்பவும் அவனுடைய சுய-கற்பனை நிறுவப்படுகிறது. அவன் சரியாகிவிட்டான் – அவன் அவனுடைய முந்தைய நிலைக்கு, கோபம் இல்லாதபோது இருந்த நிலைக்குத் திரும்ப வந்து விட்டான். அவன் தனது கோபத்தை மன்னிப்புக் கேட்பதன் மூலம் சரிசெய்து விட்டான். அவன் நல்லவனாகத் தொடர்ந்து இருக்கும் பொருட்டு, தன்னையே மோசம் என்று அழைத்துக் கொண்டான்.

இதனால்தான் பல பிறவிகளாகக் கோபப்படுபவனாய், பாலுணர்வுள்ளவனாய், உரிமை கொண்டாடுபவனாய், இப்படியாய், அப்படியாய் தொடர்ந்து இருந்துகொண்டிருக்கிறாய். ஆனாலும் ஒருபோதும் ஏற்றுக்கொள்ளவில்லை. இது மனதின் ஒரு தந்திரம். நீ செய்வது எதுவாய் இருந்தபோதிலும் அது மேல் மட்டத்திலேயே இருக்கிறது. மையத்தில் நீ நல்லவனாகவே தொடர்ந்து இருக்கிறாய். நீ, ''எனக்குக் கோபம் இருக்கிறது'' என்று ஏற்றுக்கொண்டால், உனது மையத்தில் நீ கெட்டவனாகி விடுகிறாய். பிறகு இது வெறும் கோபம் கொள்ளும் கேள்வி அல்ல, பிறகு இது கண நேரமான விஷயம் அல்ல, மாறாகக் கோபம் உனது கட்டமைப்பின் ஒரு பகுதியாகி விடுகிறது. பிறகு இது யாரோ ஒருவர் உனக்குக் கோபம் வரும்படி மோசமாக நடந்து கொண்டதல்ல. நீ தனியாக இருந்தாலும் கூடக் கோபம் அங்கே இருக்கிறது. நீ கோபப்படாத பொழுதும்கூடக் கோபம் இன்னும் அங்கே இருக்கிறது, ஏனெனில் கோபம் உனது சக்தி, உனது பாகம்.

அது ஏதோ சில நேரங்களில் கொழுந்துவிட்டு எரிந்து விட்டு பிறகு காணாமல் போய்விடுவது அல்ல – அப்படி அல்ல!

அது எப்பொழுதும் அங்கு இல்லாமல் அது திடீரென கொழுந்து விட்டு எரிய முடியாது. நீ இந்த விளக்கை அணைக்கலாம், நீ இந்த விளக்கைப் போடலாம், ஆனால் மின்சாரம் எப்போதும் தொடர்ந்து அங்கே இருக்க வேண்டும். மின்சாரம் அங்கு இல்லையென்றால், உன்னால் அதைப் போடவும் அணைக்கவும் முடியாது. மின்சாரம், கோப மின்சாரம் எப்பொழுதும் அங்கே இருக்கிறது; பாலுணர்வு மின்சாரம் எப்போதும் அங்கிருக்கிறது, பேராசை மின்சாரம் எப்போதும் அங்கிருக்கிறது. நீ அதைப் போட முடியும், நீ அதை அணைக்க முடியும். சூழ்நிலையைப் பொருத்து நீ மாறுகிறாய், ஆனால் உள்முகமாக நீ எப்போதும் மாறாமலே இருக்கிறாய்.

ஏற்றுக் கொள்ளுதல் என்பதன் அர்த்தம் கோபம் ஒரு செயலல்ல. பதிலாக நீ கோபம். பாலுணர்வு வெறும் ஒரு செயலல்ல, நீ பாலுணர்வு. பேராசை வெறும் ஒரு செய்கை அல்ல, நீ பேராசை. இதை ஏற்றுக் கொள்வது என்பதன் அர்த்தம் உன் சுய-கற்பனையைத் தூக்கி எறிவது. நாம் எல்லோரும் அழகான சுய-கற்பனைகளை உருவாக்கி வைத்திருக்கிறோம். ஒவ்வொருவரும் ஒரு அழகான சுய-கற்பனையை உருவாக்கி வைத்துள்ளனர் – முற்றிலும் அழகான. நீ செய்வது எதுவாக இருந்தாலும் அது ஒருபோதும் சுய-கற்பனையைத் தொடுவதில்லை, நீ அதைத் தொடர்ந்து பாதுகாத்துக் கொண்டிருக்கிறாய். உனது உருவம் பாதுகாக்கப்படுகிறது. ஆகவே நீ நன்றாக உணர்கிறாய். அதனால்தான் நீ கோபமடையும்போது, நீ பாலுணர்வு அடையும்போது, நீ பாதிக்கப்படுவதில்லை. ஆனால் நீ, ''நான் பாலுணர்வு, நான் கோபம், நான் பேராசை'' என்று உன்னை ஏற்றுக்கொண்டால், அப்போது உன்னுடைய சுய-கற்பனை உடனடியாக விழுந்துவிடும்.

தந்த்ரா சொல்கிறது இதுதான் முதல்படி, அதோடு இது மிகவும் கடினமானது : நீ எதுவாக இருந்தாலும் அதை ஏற்றுக் கொள்வது. சில நேரங்களில் நாம் ஏற்றுக் கொள்ள முயற்சி செய்கிறோம், ஆனால் எப்பொழுதெல்லாம் நாம் ஏற்றுக் கொள்

கிறோமோ அப்பொழுதெல்லாம் நாம் மறுபடியும் அதை மிகவும் திட்டமிட்ட விதத்திலேயே செய்கிறோம். நமது குள்ள நரித்தனம் மிக ஆழமும் நுட்பமும் வாய்ந்தது. அதோடு மனம் ஏமாற்று வதற்கு மிக நுட்பமான வழிகளை வைத்திருக்கிறது. சில நேரங் களில் நீ ஏற்றுக்கொண்டு சொல்கிறாய், ''ஆமாம், நான் கோபமாய்தான் இருக்கிறேன்.'' ஆனால் நீ இதை ஏற்றுக் கொள்ளும் போது, நீ எப்பொழுது கோபத்தை எப்படிக் கடந்து போவது என்று சிந்திக்கிறாயோ அப்பொழுதுதான் ஏற்றுக் கொள் கிறாய். பிறகு நீ ஏற்றுக் கொண்டு கேட்கிறாய், ''சரி, என்னிடம் கோபமிருக்கிறது. இப்போது அதை எப்படிக் கடந்து போவது என்று சொல்.'' நீ பாலுணர்வை, அதைக் கடந்து போகும் பொருட்டு மட்டுமே ஏற்றுக் கொள்கிறாய். நீ எப்பொழு தெல்லாம் வேறு ஏதோ ஒன்றாக மாற முயற்சிக்கின்றாயோ அப்பொழுது மட்டுமே உன்னால் ஏற்றுக் கொள்ள முடிகிறது. ஏனெனில் மறுபடியும் உனது சுய-கற்பனை எதிர்காலத்தால் காப்பாற்றப்படுகிறது.

நீ வன்முறையாளனாய் இருக்கிறாய், ஆனால் நீ சாந்தமான வனாக மாற மிகவும் முயற்சிக்கிறாய். ஆகவே நீ உன்னை ஏற்றுக்கொண்டு, ''சரி, நான் வன்முறையாளன். இன்று நான் வன்முறையாளன், ஆனால் எப்படி இருந்தாலும் நாளை நான் சாந்தமானவன்.'' நீ எப்படி சாந்தமுள்ளவனாக மாறுவாய்? நீ இந்த சுய-கற்பனை உருவை எதிர்காலத்திற்குத் தள்ளி வைத்து விட்டாய். நீ உன்னை நிகழ்காலத்தில் யோசிப்பதில்லை. நீ எப்பொழுதும் திருப்தியளிக்கும் கற்பனை கருத்துக்களின் அடிப்படையிலேயே சிந்திக்கிறாய் – சாந்தம் அன்பு மற்றும் கருணை. அப்போது நீ எதிர்காலத்தில் இருக்கிறாய். இந்த நிகழ்காலம் வெறும் இறந்த காலமாக மாறுவது, உன்னுடைய உண்மையான சுயம் எதிர்காலத்தில் இருக்கிறது. ஆகவே நீ உன்னைத் திருப்திப்படுத்தும் கற்பனைக் கருத்துக்களோடு தொடர்ந்து அடையாளம் கண்டு கொள்கிறாய். இந்தக் கற்பனைக் கருத்துக்களும், நிஜத்தை ஏற்றுக் கொள்ளாமல் இருப்பதற்கான

வழிகளே. நீ வன்முறையாளன் – இதுதான் உண்மையான நிலை. மேலும் நிகழ்காலம் ஒன்று மட்டுமே இருக்கும் ஒரே விஷயம்; எதிர்காலம் இல்லாதது. உனது எதிர்காலக் கருத்துகள் வெறும் கனவுகளே. அவை மனதைத் தள்ளிப் போடும் தந்திரங்கள், மனதின் பார்வையைத் திசை திருப்புபவை.

நீ வன்முறையாளன்; இதுதான் உண்மை நிலை, எனவே அதை ஏற்றுக்கொள். மேலும், சாந்தமாக இருப்பதற்கு முயற்சி செய்யாதே. ஒரு வன்முறையான மனம் சாந்தமானதாக மாற முடியாது. எப்படி இது சாத்தியம்? இதை ஆழமாகப் பார். நீ வன்முறையாளன், ''பின் நீ எப்படி சாந்தமானவனாக மாற முடியும்? நீ எதைச் செய்தாலும் அது வன்முறை மனத்தாலேயே செய்யப்படும் – எதுவாய் இருந்தாலும்! சாந்தமாக இருப்பதற் காகக் கடும் முயற்சி செய்யும்போதுகூட அந்த முயற்சி வன்முறை மனத்தாலேயே செய்யப்படும். நீ வன்முறையாளன், எனவே சாந்தமாக இருக்கும் முயற்சியில் நீ வன்முறையோடு இருப்பாய். சாந்தமாக இருக்கும் அந்த முயற்சியிலேயே நீ எல்லா விதமான வன்முறையிலும் ஈடுபடுவாய்.

அதனால்தான் நீ சாந்தத்தை, அஹிம்சையை நிலைநாட்ட விரும்புபவர்களிடம் போகிறாய். அவர்கள் மற்றவர்களிடம் வன்முறை காட்டாதவர்களாய் இருக்கலாம், ஆனால் தங்களிடமே காட்டிக் கொள்பவர்கள். அவர்கள் தங்களிடமே மிகவும் வன்முறையுடன் நடந்து கொள்கிறார்கள் – தங்களையே கொன்று கொள்கிறார்கள். அவர்கள் தங்களுக்கு எதிராகவே எந்த அளவு பயித்தியம் கொள்கிறார்களோ அந்த அளவு அதிகமாக அவர்கள் கொண்டாடப்படுகிறார்கள். அவர்கள் முற்றிலும் பயித்தியமாக, தற்கொலையாளர்களாக மாறிவிடும் போது, சமூகம் சொல்கிறது. ''இவர்கள்தான் சிறந்த தவசிகள்.'' ஆனால் இவர்கள் வன்முறை குறிக்கும் பொருளைத்தான் மாற்றி யுள்ளனரே அன்றி வேறெதுவும் இல்லை. இவர்கள் வேறு யாரோ ஒருவர் மீது வன்முறையோடு இருந்தார்கள். இப்போது இவர்கள் தங்கள் மேலேயே வன்முறையோடு இருக்கிறார்கள் –

ஆனால் வன்முறை அங்கே இருக்கிறது. மேலும் நீ வேறு யாரோ ஒருவர் மீது வன்முறையோடு இருக்கும்போது சட்டம் அவனைப் பாதுகாக்க முடியும், நீதிமன்றங்கள் அவனைப் பாதுகாக்க முடியும், சமூகம் உன்னைப் பழிக்கும். ஆனால் நீ உனக்கெதிராகவே வன்முறையோடு இருக்கும்போது அங்கு எந்தச் சட்டமும் இல்லை. எந்தச் சட்டமும் உன்னை உன்னிடமிருந்து பாதுகாக்க முடியாது.

மனிதன் தனக்கெதிராக இருக்கும் பொழுது அங்கு எந்தப் பாதுகாப்பும் இல்லை, எதுவும் செய்ய முடியாது. மேலும் யாரும் அக்கறை கொள்வதில்லை, ஏனெனில் அது உன் பிரச்சனை. வேறு யாருக்கும் அதில் சம்பந்தம் இல்லை: அது உன் பிரச்சனை. துறவிகள் என்று அழைத்துக் கொள்வோர், முனிவர்கள் என்று அழைத்துக் கொள்வோர் தங்களுக்கே எதிரான வன்முறையோடு இருக்கிறார்கள். ஒருவருக்கும் அக்கறை இல்லை. அவர்கள் சொல்கிறார்கள், ''சரி! இதைத் தொடர்ந்து செய்து கொண்டிருங்கள். இது உங்கள் வியாபாரம்.''

உன்னுடைய மனம் பேராசை பிடித்த ஒன்றாயிருந்தால், நீ எப்படிப் பேராசையற்றவனாக ஆக முடியும்? பேராசைப்படும் மனம் தொடர்ந்து அப்படியேதான் இருக்கும். பேராசையைக் கடந்து போக அது எதைச் செய்தாலும் அவை உதவப் போவதில்லை. பார்க்கப்போனால், நாம் புதிய பேராசைகளை உருவாக்கிக் கொள்ள முடியும். பேராசைப்படும் மனதிடம் கேள், ''செல்வத்தை சேகரித்துக் கொண்டே போய் நீ என்ன செய்யப் போகிறாய்? நீ இறக்கும் பொழுது உனது செல்வத்தை உன்னுடன் நீ எடுத்துச் செல்ல முடியாது.'' மத போதகர்கள் என்று அழைத்துக் கொள்பவர்களின் முழு வாதமும் இதுதான் – உனது செல்வத்தை உன்னுடன் நீ எடுத்துச் செல்ல முடியாது. ஆனால் யாராவது ஒருவர் அதை எடுத்துச் செல்ல முடியுமென்றால், அப்போது முழு வாதமும் தோற்றுப் போய்விடும்.

பேராசை கொண்ட மனிதன் இந்த வாதத்தை உணருகிறான். அவன் கேட்கிறான், ''நான் எப்படிச் செல்வத்தை

என்னுடன் எடுத்துச் செல்ல முடியும்?'' ஆனால் அவன் உண்மையில் அதை எடுத்துச் செல்ல விரும்புகிறான். அதனால் தான் மத போதகர்கள் ஆதிக்கம் செலுத்த முடிகிறது. இவர்கள், இறப்புக்கு அப்பால் எடுத்துச் செல்ல முடியாதவைகளை - சேர்த்துக் கொண்டே போவது முட்டாள்தனமானது என்பதை அவனுக்குச் சுட்டிக் காட்டுகிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள், ''நாங்கள் உனக்கு எடுத்துச் செல்லக் கூடியவற்றைச் சேகரிப்பது எப்படி என்று சொல்லித் தருகிறோம். புண்ணியம் எடுத்துச் செல்லக் கூடியது. அதாவது நல்ல செயல்கள் - எடுத்துச் செல்லக் கூடியது, நற்குணம் தரும சிந்தனை எடுத்துச் செல்லக் கூடியது. ஆனால் செல்வத்தை எடுத்துச் செல்ல முடியாது. ஆகவே செல்வத்தை நன்கொடையளி, தருமம் செய்.''

ஆனால் இது அவனது பேராசையின் மேல் செய்யும் முறையீடு ஆகும். இது, ''இப்போது நாங்கள் இறப்பைக் கடந்து கொண்டு செல்லக் கூடிய, உன்னிடம் இருப்பதைவிடச் சிறந்தவற்றைக் கொடுக்கிறோம்'' என்று அவனிடம் சொல்வது. இந்த முறையீடு நன்கு பயனளிக்கிறது. பேராசையான மனிதன் உணர்கிறான், ''நீங்கள் சொல்வது சரி. இறப்பு அங்கே இருக்கிறது, மேலும் அதைக் குறித்து எதுவும் செய்ய முடியாது. ஆகவே நான் அதைக் கடந்து எடுத்துச் செல்லக் கூடிய ஏதொவொன்றைக் கண்டிப்பாகச் செய்தாக வேண்டும், நான் அடுத்த உலகத்திலும் ஏதாவது ஒரு விதமான வங்கி சேமிப்பை உருவாக்கிக் கொள்ள வேண்டும். இந்த உலகம், இந்த வங்கி இருப்பு என்னுடன் எப்பொழுதும் வராது.'' மதப் போதகர்கள் இந்த விதமான கருத்துக்களையே பேசிக்கொண்டு போகிறார்கள்.

புனித நூல்களைப் புரட்டிப் பாருங்கள்..... அவை உனது பேராசைக்குச் செய்யப்படும் முறையீடுகளாகவே இருக்கும். அவை சொல்லும், ''நீ கணநேர இன்பங்களில் உனது பொழுதை வீணாக்கிக் கொண்டிருக்கிறாய்.'' அவற்றின் வற்புறுத்தல் ''கணநேர'' என்பதில்தான். ஆகவே என்றும் இருக்கும்படியான இன்பங்களைக் கண்டுபிடி, அப்போது அது சரி. அவை இன்பங்

களுக்கு எதிரானவை அல்ல. அவை, கணநேரமே இருப்பவை களாக இருப்பதற்கே எதிரானவை. பார் இந்தப் பேராசையை!

சில நேரங்களில், கணநேர இன்பங்களைச் சுவைத்துக் கொண்டிருப்பவர் மத்தியில் நீ ஒரு பேராசையற்ற மனிதனைப் பார்க்கலாம். ஆனால் உன்னுடைய முனிவர்களின் மத்தியில், என்றும் இருக்கும்படியான இன்பத்தைக் கேட்காத, வேண்டாத வர்களை நீ பார்க்கவே முடியாது. அவர்களிடம் பேராசை இன்னும் அதிகமிருக்கிறது. நீ சாதாரண மனிதர்களின் இடையே ஒரு பேராசையற்ற மனிதனைப் பார்க்க முடியும். ஆனால் உனது முனிவர்கள் என்று அழைத்துக் கொள்பவர்களிடையே நீ பேராசையற்ற ஒருவரைக் கூடப் பார்க்க முடியாது. அவர் களுக்கும் இன்பங்கள் வேண்டும். ஆனால் அவர்கள் உன்னை விட அதிக பேராசைக்காரர்கள். நீ கணநேர இன்பங்களில் திருப்தி அடைந்துவிடுகிறாய். ஆனால் அவர்கள் அப்படியல்ல. அவர்களுடைய பேராசை பெரியது. அவருடைய பேராசை, என்றும் அழியாத இன்பங்களால் மட்டுமே திருப்தி அடையும்.

எல்லையற்ற பேராசை எல்லையற்ற இன்பத்தைக் கேட்கிறது – இதை நினைவில் கொள். ஒரு குறிப்பிட்ட அளவு பேராசை, குறிப்பிட்ட அளவு இன்பத்தில் திருப்தியடைகிறது. அவர்கள் உன்னைக் கேட்பார்கள், ''ஒரு பெண்ணை நேசித்துக் கொண்டு என்ன செய்து கொண்டிருக்கிறாய்? அவள் வெறும் எலும்பும், சதையும், இரத்தமும் தான். நீ நேசிக்கும் பெண்ணை ஆழமாகப் பார். அவள் என்ன?'' அவர்கள் பெண்களுக்கு எதிரானவர்கள், அவர்கள் எலும்புக்கு எதிரானவர்கள், இரத்தத்துக்கு எதிரானவர்கள், உடம்புக்கு எதிரானவர்கள். ஆனால் தங்கத்தால் செய்த பெண் என்றால், அப்போது அது சரி. அவர்கள் தங்கத்தால் செய்த பெண்ணைக் கேட்கிறார்கள்.

அப்படிப்பட்ட பெண்கள் இந்த உலகத்தில் இல்லை. ஆகவே அவர்கள் மற்றொரு உலகத்தை உருவாக்கினார்கள். அவர்கள் சொல்கிறார்கள், ''சொர்க்கத்தில் தங்கக் கன்னிகள் –

தேவலோக அப்ஸராக்கள் – இருக்கிறார்கள். அவர்கள் அழகான வர்கள், அவர்களுக்கு வயது ஆகவே ஆகாது.'' இந்து மத சொர்க்கத்தில் உள்ள தேவலோகக் கன்னிகள் எப்பொழுதும் பதினாறு வயதிலேயே தொடர்ந்து இருக்கின்றனர். அவர்கள் ஒருபோதும் வயதானவர்களாவதில்லை, அவர்கள் எப்பொழுதும் பதினாறு வயதே – ஒருபோதும் குறைவதோ, ஒருபோதும் அதிகமாவதோ இல்லை. ஆகவே இந்த சாதாரண பெண்ணுடன் நீ உன்னுடைய நேரத்தை வீணாக்கிக் கொண்டு என்ன செய்து கொண்டிருக்கிறாய்? சொர்க்கத்தை நினை. இவர்கள் இன்பத்திற்கு எதிரானவர்களல்ல. உண்மையில், இவர்கள் கணநேர இன்பத்திற்கு எதிரானவர்கள்.

கடவுள், திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டு, இந்த உலகத்திற்கு நிரந்தர இன்பம் வழங்கிவிட்டார் என்று வைத்துக் கொண்டால், உனது மதங்களின் முகத்திரை முழுவதும் உடனே கிழிந்துவிடும். அவற்றின் முழுக் கவர்ச்சியும் காணாமல் போய் விடும். இங்குள்ள வங்கி சேமிப்பை ஏதோவொரு விதத்தில் இறப்புக்குப் பிறகும் எடுத்துச் செல்லலாம் என்றால், அடுத்த உலகத்தில் வங்கிச் சேமிப்பை உருவாக்குவதில் ஒருவருக்கும் ஆர்வம் இருக்காது. ஆகவே மதப் போதகர்களுக்கு இறப்பு மிகவும் உதவியாக இருக்கிறது.

ஒரு பேராசை கொண்ட மனிதன் எப்பொழுதும் மற்றொரு பேராசையால் ஈர்க்கப்படுகிறான். அவனுடைய பேராசையே அவனது துன்பத்திற்குக் காரணம், அதை விட்டுவிட்டால் அவன் பரமசுகமான நிலையை எட்டுவான் என்று நீ அவனிடம் சொன்னால், அவன் முயற்சிக்கக் கூடும் – ஏனெனில் இப்போது நீ உண்மையில் அவனது பேராசைக்கு எதிரியல்ல. நீ அவனது பேராசை மேய்வதற்குப் புதிய இடம் காட்டி இருக்கிறாய். அவன் பேராசையின் புதிய பரிமாணங்களை எட்டலாம்.

தந்த்ரா சொல்கிறது, பேராசையான மனம் பேராசையற்ற மனமாக மாற முடியாது, ஒரு வன்முறையான மனம் வன்முறை

யற்ற மனமாக மாற முடியாது. இது மிகவும் நம்பிக்கை இழக்க வைப்பதாக இருக்கிறது. இதுதான் உண்மை நிலை என்றால், பிறகு செய்வதற்கு எதுவுமில்லை. பின் தந்த்ரா எதற்கு இருக்கிறது? ஒரு பேராசையான மனம் பேராசையற்றதாக மாற முடியாதென்றால், ஒரு வன்முறை மனம் வன்முறையற்றதாக, ஒரு பாலுணர்ச்சியிலேயே அமிழ்ந்து கிடக்கும் மனம் பாலுணர்வு கடந்ததாக மாற முடியாதென்றால், எதுவும் செய்ய முடியாதென்றால், பின் தந்த்ரா எதற்கு இருக்கிறது? தந்த்ரா எதுவும் செய்ய முடியாது என்று சொல்வதில்லை. ஏதாவது செய்ய முடியும், ஆனால் அதன் பரிமாணம் முற்றிலும் வேறுபட்டது.

ஒரு பேராசையான மனம் அது பேராசை கொண்டது என்பதைப் புரிந்துகொண்டு அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் – பேராசையற்ற நிலையை அடைய முயற்சி செய்யக் கூடாது. பேராசையான மனம் அதற்குள் ஆழமாகச் சென்று, அது கொண்டிருக்கும் பேராசையின் ஆழத்தை உணர வேண்டும். அதிலிருந்து விலகிப் போகக் கூடாது, அதோடு தொடர்ந்து இருந்து கொண்டிருக்க வேண்டும்; கற்பனைக் கருத்துக்களுக்குப் போகக் கூடாது – முரண்பட்ட கற்பனைக் கருத்துக்களுக்கு, எதிரான கற்பனைக் கருத்துக்கு – பதிலாக, நிகழ்காலத்தில் தொடர்ந்து இருக்க வேண்டும், பேராசையில் புக வேண்டும், பேராசையை அறிய வேண்டும், பேராசையைப் புரிந்து கொள்ள வேண்டும். மேலும் அதிலிருந்து தப்பித்துக்கொள்ள எந்த வழியாகவும் முயற்சிக்கக் கூடாது. நீ உனது பேராசையோடு இருக்க முடிந்தால், பல விஷயங்கள் நடக்கும். நீ உனது பேராசை யோடு, உனது பாலுணர்ச்சியோடு, உனது கோபத்தோடு, தொடர்ந்து இருக்க முடிந்தால், உன்னுடைய ஆணவம் கரைந்து போகும். இதுவே முதலில் நடப்பது – எப்படிப்பட்ட மாபெரும் அற்புதம் இது?

எப்படி ஆணவமற்று இருப்பது என்று என்னிடம் பல மக்கள் வந்து கேட்கிறார்கள். உனது ஆணவத்தின்

அஸ்திவாரத்தைக் கண்டுபிடித்துப் பார்க்காமல், நீ ஆணவமற்று இருக்க முடியாது. நீ பேராசைக்காரன், ஆனால் நீ பேராசை யற்றவன் என்று நினைத்துக்கொண்டிருக்கிறாய் – இதுதான் ஆணவம், நான். நீ பேராசைக்காரன் என்றால், அப்போது நீ அதை அறிந்தவனாய், நீ பேராசைக்காரன் என்பதை முழுமையாக ஏற்றுக்கொள்ளும் பொழுது, நீ உனது ஆணவம் நிற்பதற்கு எங்கு இடம் கொடுக்க முடியும்? நீ கோபமாயிருந்தால், அப்போது நான் கோபமாயிருக்கிறேன் என்று நீ சொல்கிறாய் – நீ இதை மற்றவர்களிடம் சொல்வதில்லை, ஆனால் உனக்குள் அடி ஆழத்தில் இதை உணருகிறாய், உனது நிராதரவான நிலையை உணருகிறாய் – அப்போது உனது கோபம் எங்கு நிற்க முடியும்? நீ பாலுணர்ச்சியில் இருந்தால், அதை ஏற்றுக்கொள். எது எங்கிருந்தாலும், அதை ஏற்றுக்கொள்.

இயற்கையை ஏற்றுக்கொள்ளாததால் உருவாகுவதே ஆணவம். உனது இப்படித்தான் என்பதை, உனது 'ததாதா'வை நீ எதுவோ அது – ஏற்றுக் கொள்ளாததால் உருவாவதே ஆணவம். நீ அதை ஏற்றுக்கொண்டால், ஆணவம் அங்கு இருக்காது. நீ அதை ஏற்காவிட்டால், நீ அதை நிராகரித்தால், நீ அதற்கு எதிராகக் கற்பனைக் கருத்துக்களை உருவாக்கினால், அப்போது ஆணவம் இருக்கும். திருப்தியளிக்கும் கற்பனைக் கருத்துக்களால் செய்யப் பட்டதே ஆணவம்.

உன்னை ஏற்றுக்கொள். ஆனால் பிறகு நீ ஒரு மிருகத்தைப் போலத் தெரிவாய். நீ மனிதனைப் போலத் தெரிய மாட்டாய். ஏனெனில் மனிதன் என்பதற்கு உனது கோட்பாடு உன்னுடைய கற்பனைக் கருத்துக்களால் ஆனது. அதனால்தான் நாம் மற்றவர் களுக்கு மிருகத்தைப் போல இருக்காதே என்று போதனை செய்கிறோம். ஆனால் எல்லோரும் மிருகங்களே. நீ என்ன செய்ய முடியும்? நீ ஒரு மிருகம். உனது மிருகத்தன்மையை ஏற்றுக்கொள். நீ உனது மிருகத்தன்மையை ஏற்றுக்கொண்ட கணத்திலேயே, நீ மிருகத்தைக் கடந்து செல்லும் முதல் செயலைச் செய்தவன் ஆகிறாய் – ஏனெனில் எந்த மிருகத்துக்கும்

தான் ஒரு மிருகம் என்று தெரியாது, மனிதன் மட்டுமே அறிந்து கொள்ள முடியும். இதுதான் கடந்து செல்வது. நீ மறுப்பதால் கடந்து செல்ல முடியாது.

ஏற்றுக்கொள்! எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு விட்ட பொழுது, திடீரென நீ கடந்த நிலையிலிருப்பதை நீ உணர்வாய். யார் ஏற்றுக்கொண்டது? யார் முழுவதையும் ஏற்றுக்கொண்டது? அந்த எது ஏற்றுக்கொண்டதோ அது கடந்து சென்றுவிட்டது. நீ நிராகரித்தால், நீ அதே தளத்திலேயே இருப்பாய். நீ ஏற்றுக் கொண்டால், நீ கடந்து செல்கிறாய். ஏற்றுக் கொள்வதே கடந்த நிலையை அடைவது. நீ உன்னை முற்றிலுமாக ஏற்கும்பொழுது, திடீரென நீ உனது மையத்திற்கு வீசப்படுகிறாய். பிறகு நீ எங்கும் போக முடியாது. உனது யதார்த்தத்திலிருந்து, உனது இயற்கையி லிருந்து நீ நகர முடியாது, நீ உனது மையத்திற்கு வீசப்பட்டு விட்டாய்.

நாம் ஆலோசித்துக் கொண்டிருக்கும், புரிந்துகொள்ள முயன்று கொண்டிருக்கும், இந்த எல்லா தந்த்ரா யுக்திகளுமே, உன்னை உனது மையத்திற்கு வீசி எறியும், உன்னை மேல் மட்டத்திலிருந்து வீசி எறியும் வெவ்வேறு வழிகளே. ஆனால் நீ மையத்திலிருந்து தப்ப பல வழிகளிலும் முயற்சிக்கிறாய். திருப்தியளிக்கும் கற்பனைக் கருத்துக்கள் ஒரு நல்ல தப்பும் வழி. கற்பனைக் கருத்துக்கள் கொண்டவர்களே மிகவும் நுட்பமான ஆணவக்காரர்கள்.

பலவும் நடக்கின்றன..... நீ வன்முறையாளன், ஆனால் நீ அஹிம்சைக் கருத்தை உருவாக்குகிறாய். பிறகு நீ உனக்குள் போக வேண்டியதில்லை, உனது வன்முறைக்குள் புகுந்து பார்க்க வேண்டியதில்லை, அதற்குத் தேவையில்லை. செய்ய வேண்டிய தெல்லாம் ஒன்றே ஒன்றுதான் – அஹிம்சையைப் பற்றி யோசித்துக் கொண்டேயிருப்பது, அஹிம்சையைப் பற்றிப் படித்துக் கொண்டே போவது, அதோடு அஹிம்சையைக் கடைபிடிக்க முயற்சி செய்து கொண்டே இருப்பது. நீ உன்னிடம் சொல்கிறாய், "வன்முறையைத் தொட்டு விடாதே." ஆனால் நீ

வன்முறையாளன். இப்படியாக நீ உன்னிடமிருந்து தப்பித்துக் கொள்ள முடியும், நீ மேல்மட்டத்திற்கு, புறவிளிம்பிற்கு, போய்விட முடியும். ஆனால் நீ ஒருபோதும் மையத்திற்கு வர முடியாது. இது ஒரு விஷயம்.

இரண்டாவது, நீ அஹிம்சையை உருவாக்கிய பிறகு, நீ மற்றவர்களைப் பழிக்கலாம். இப்போது அது மிகவும் எளியதாகி விடுகிறது. இப்போது உன்னிடம் ஒவ்வொருவரையும் எடை போட ஒரு கற்பனைக் கருத்து இருக்கிறது. ஆகவே நீ யாரிடமும், ''நீ வன்முறையோடு இருக்கிறாய்'' என்று சொல்ல லாம். இந்தியா பல கற்பனைக் கருத்துக்களை உருவாக்கியுள்ளது; அதனால்தான் இந்தியா முழு உலகத்தையும் தொடர்ந்து கண்டித்துக் கொண்டிருக்கிறது. இந்தியாவின் முழு மனமும் கண்டிக்கும் தன்மையுடையதே. அது முழு உலகத்தையும் கண்டித்துக் கொண்டிருக்கிறது: மற்ற எல்லோரும் வன்முறை யாளர்கள், இந்தியா மட்டுமே அஹிம்சையானது. இங்கு ஒருவர்கூட அஹிம்சையானவராகத் தெரியவில்லை. ஆனால் இந்தக் கற்பனைக் கருத்து அடுத்தவர்களைப் பழிப்பதற்கு மிகவும் சிறந்தது. இது ஒருபோதும் உன்னை மாற்றாது, ஆனால் நீ மற்றவர்களைக் கண்டிக்கலாம். ஏனெனில் உன்னிடம் கற்பனைக் கருத்து, ஒரு கற்பனை நிலைபாடு இருக்கிறது. அதோடு நீ வன்முறையோடு எப்பொழுதெல்லாம் இருக் கிறாயோ, அதையும் நீ விளக்கிவிட முடியும் – உன்னுடைய வன்முறை என்பது முற்றிலும் மாறுபட்ட விஷயம்.

கடந்த இருபத்தைந்து வருடங்களில் நாம் பலமுறை வன்முறையோடு இருந்திருக்கிறோம். ஆனால் ஒருபோதும் நமது வன்முறையை நாம் கண்டித்தது இல்லை. நாம் அவைகளை எப்பொழுதும் மூடி மறைத்து, அழகான முறையில் காரணங்கள் கூறி விடுகிறோம். நாம் பங்களாதேஷில் வன்முறையோடு இருந்தோமென்றால், அது அங்குள்ள மக்கள் சுதந்திரமடை வதற்கு உதவும் பொருட்டே என்று நாம் சொல்கிறோம். நாம் காஷ்மீரில் வன்முறையோடு இருந்தால், அது காஷ்மீரிகளுக்கு

உதவுவதற்காக. ஆனால் உனக்குத் தெரியும், எல்லாப் போர் வெறியர்களும் இதையேதான் சொன்னார்கள். அமெரிக்கா வியட்நாமில் வன்முறையோடு இருந்தால், அது ''அந்த ஏழை மக்களுக்காகச்'' செய்வது. ஒருவரும் தனக்காக வன்முறையோடு இருப்பதில்லை; ஒருவரும் தனக்காக இருந்ததுமில்லை. நாம் எப்பொழுதும் யாரோ ஒருவருக்கு உதவுவதற்காகவே வன்முறை கொள்கிறோம். நான் உன்னைக் கொன்றால் கூட, அது உனது நன்மைக்காகவே, அது உனக்கு உதவுவதற்காகவே. நீ கொலை செய்யப்பட்டால் கூட, நான் உன்னைக் கொலை செய்தாலும் கூட, எனது கருணையை மட்டும் பார். உனது நன்மைக்காக, நான் உன்னைக் கொலை கூடச் செய்கிறேன். இப்படி முழு உலகத்தையும் கண்டித்துக் கொண்டே போகிறோம்.

கோவாவை இந்தியா தாக்கியபொழுது, இந்தியா சைனா வுடன் போருக்குப் போனபொழுது, பெர்னாண்ட் ரஸ்ஸல் நேருவை விமர்சித்தார். அவர் சொன்னார், ''உங்களுடைய அஹிம்சை இப்போது எங்கே? நீங்கள் எல்லோரும் காந்திய வாதிகள். அப்படியானால் இப்போது உங்களின் அஹிம்சை எங்கே?'' நேரு அதற்குப் பதிலாக பெர்னாண்ட் ரஸ்ஸலின் புத்தகங்களுக்கு இந்தியாவில் தடை விதித்தார். ரஸ்ஸல் எழுதிய புத்தகத்திற்குத் தடைவிதிக்கப்பட்டது. இதுதான் நமது அஹிம்சை மனம்.

இது ஒரு நல்ல விவாதம். அந்தப் புத்தகம் இலவசமாக வினியோகிக்கப் பட்டிருக்க வேண்டும். ஏனெனில் ரஸ்ஸல் மிக அழகாக வாதிட்டிருந்தார். அவர் சொன்னார், ''நீங்கள் வன்முறை யான மக்கள். உங்கள் அஹிம்சை வெறும் அரசியல். உங்கள் காந்தி ஒரு முனிவரல்ல, அவர் ஒரு வெறும் சாதுர்யமான மனம். நீங்கள் எல்லோரும் அஹிம்சை பற்றிப் பேசுகிறீர்கள், ஆனால் அந்தக் கணம் வரும்பொழுது நீங்கள் வன்முறையாய் மாறிவிடுகிறீர்கள். மற்றவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டிருக்கும்போது, நீங்கள் உங்களுடைய உயர்ந்த பீடத்தில்

நின்றுகொண்டு முழு உலகத்தையும் வன்முறையானது என்று கண்டிக்கிறீர்கள்.''

தனி மனிதர்கள், சமுதாயங்கள், பண்பாடுகள், நாடுகள், இப்படி எல்லாவற்றோடும் இது நடக்கிறது. உனக்குக் கற்பனைக் கருத்துக்கள் இருந்தால், நீ உன்னை மாற்றிக்கொள்ள வேண்டிய தில்லை. நீ எதிர்காலத்தில் அந்தக் கற்பனைக் கருத்துக்களா லேயே மாற்றமடைவாய் என்று எப்பொழுதும் நம்பிக்கொண்டு இருக்கலாம். அதே சமயம் நீ மற்றவர்களை மிகச் சுலபமாகக் கண்டிக்க முடியும்.

தந்த்ரா, உன்னுடனேயே இரு என்று சொல்கிறது. நீ எதுவாக இருந்தாலும் அதை ஏற்றுக்கொள். உன்னைப் பழித்துக் கொள்ளாதே, மற்றவர்களைப் பழிக்காதே. கண்டிப்பது வீணானது, அதனால் சக்திகள் மாற்றமடைவதில்லை.

முதல்படி ஏற்றுக்கொள்வது. யதார்த்தத்துடன் இருப்பது – இது மிகவும் விஞ்ஞானபூர்வமானது – கோபம், பேராசை, பாலுணர்வு போன்ற யதார்த்தங்களுடன் இரு. மேலும் அதன் முழு யதார்த்தத்தில் யதார்த்தத்தை உணரு. அதை மேலேயிருந்து லேசாகத் தொட்டுப் பார்க்காதே, அதன் மேல் மட்டத்தை மட்டும் தொட்டுப் பார்க்காதே. அதன் முழுமையில், அதன் முழு இயல்பில், யதார்த்தத்தை அறிந்து கொள். அதன் வேர்கள் வரை அதனோடு போ. நினைவில் கொள், எப்பொழுதெல்லாம் நீ ஏதாவதொன்றின் வேர்வரை போக முடிகிறதோ, அப்பொழு தெல்லாம் அதைக் கடந்துவிடுகிறாய். நீ உனது பாலுணர்ச்சியின் அடி வேர் வரை அறிந்து கொண்டு விட்டால், நீ அதன் எஜமானன் ஆகிவிடுகிறாய். நீ உனது கோபத்தின் அடிவேர் வரை அறிந்து கொண்டுவிட்டால், நீ அதன் எஜமானன் ஆகி விடுகிறாய். பிறகு கோபம் ஒரு வெறும் கருவியாகி விடுகிறது – நீ அதைப் பயன்படுத்த முடியும்.

நான் குருட்ஜிப்பைப் பற்றிப் பல விஷயங்களை நினைவு கூறுகிறேன். குருட்ஜிப் அவருடைய சீடர்களுக்கு, சரியாகக்

கோபப்படுவதற்குச் சொல்லிக் கொடுத்தார். நாம் புத்தரின் வார்த்தைகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம்: சரியான தியானம், சரியான எண்ணம், சரியான சிந்தனை. நாம், சரியான பார்வை மற்றும் சரியான அறிவு என்ற மகாவீரரின் போதனைகளைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறோம். குருட்ஜிப் சரியான கோபம் மற்றும் சரியான பேராசை ஆகியவற்றைக் கற்றுத் தந்தார், பழைய தந்த்ரா மரபைப் பின்பற்றியே அவர் கற்றுத் தந்தார். மேற்கத்திய நாடுகளில் குருட்ஜிப் மிகவும் கண்டிக்கப் பட்டார். ஏனெனில் மேற்கத்திய நாடுகளில் அவர் தந்த்ரா வாழும் அடையாளமாக இருந்தார்.

அவர் சரியான கோபத்தைக் கற்றுத் தருவார்; அவர் உனக்கு எப்படி முழுமையான கோபத்தில் இருப்பது என்பதைக் கற்றுத் தருவார். நீ கோபமாக இருந்தால் அவர் உன்னிடம் சொல்லக் கூடும், ''போ. அதை அமுக்காதே, அது அதன் முழுவீச்சில் வெளியே வரட்டும். அதனுள் போ. கோபமாக மாறு. பிடித்து வைக்காதே, ஓரத்தில் நிற்காதே. அதில் ஆழமாகக் குதி. உனது முழு உடம்பும் பற்றிக் கொள்ளட்டும், எரியட்டும்.''

நீ ஒருபோதும் இவ்வளவு ஆழமாகப் போனதில்லை, மேலும் நீ ஒருபோதும் வேறு யாராவது இப்படிச் செய்வதையும் பார்த்ததில்லை. ஏனெனில் எல்லோரும் ஏறத்தாழ பண்பட்டவர்கள். ஒருவரும் நாகரிகமடையாதவர்கள் – அசலானவர்கள் அல்ல; எல்லோரும் ஏறத்தாழ காப்பியடிப்பவர்கள், போலித்தனமானவர்கள். ஒருவர் கூட அசலானவர்கள் அல்ல! நீ கோபத்தினுள் முழுவதாகப் போக முடிந்தால் நீ ஒரு நெருப்பாக ஒரு எரிதலாக மாறி விடுவாய். அந்த நெருப்பு மிக ஆழமாக இருக்கும், அந்த நெருப்பு இறந்த காலம் எதிர்காலம் இரண்டும் உடனே நின்றுவிடும்படியான அளவு ஆழமாய் இருக்கும். நீ ஒரு வெறும் நிகழ்கால தீப்பிழம்பாய் மாறி விடுவாய். உனது உடம்பிலுள்ள ஒவ்வொரு செல்லும் எரியும்போது, உனது உடம்பின் எல்லாப் பாகமும் அனல் கக்குவதாக மாறிவிடும் போது, இப்படி நீ கோபமாக மாறிவிடும் போது – கோபப்படுவது அல்ல –

அப்போது குருட்ஜிப் சொல்வார், ''இப்போது விழிப்புணர்வு கொள். அமுக்காதே. இப்போது விழிப்புணர்வு கொள். இப்போது நீ என்னவாக மாறி இருக்கிறாய் எது கோபம் என்று திடீரென விழிப்புணர்வு கொள்.''

முழு நிகழ்காலமாய் இருக்கும் இந்தக் கணத்தில் ஒருவன் திடீரென விழிப்புணர்வு அடையலாம், நீ இந்த முழு விஷயத்தின் மடத்தனத்தை, முட்டாள்தனத்தை, இந்த முழு விஷயத்தின் கேனத்தனத்தைப் பார்த்து நீ சிரிக்க ஆரம்பிக்கலாம். அப்போது இது அமுக்கி வைப்பதல்ல; இது சிரிப்பு. நீ உன்னைப் பார்த்துச் சிரிக்க முடியும், ஏனெனில் நீ உன்னைக் கடந்து வந்து விட்டாய். மறுபடியும் ஒருபோதும் கோபம் உன்னை அடக்கி ஆள முடியாது. நீ கோபத்தை முற்றிலுமாக அறிவாய், இருந்த போதிலும் நீ சிரிக்க முடியும், இருந்தபோதிலும் நீ அதைக் கடந்து செல்ல முடியும். நீ உனது கோபத்தை அதைக் கடந்த நிலையிலிருந்து பார்க்க முடியும். ஒருமுறை அதை முற்றிலு மாகப் பார்த்து விட்டால் உனக்குக் கோபம் என்றால் என்ன என்பது தெரியும். மேலும் முழுச் சக்தியும் கோபமாக மாறிவிட்ட போதும் கூட, இன்னும் கூட நீ ஒரு பார்வையாளனாக ஒரு சாட்சியாக இருக்க முடியும் எவ்பதை இப்போது நீ அறிவாய். ஆகவே எந்தப் பயமும் இல்லை. நினைவில் கொள்: தெரியாத ஒன்றே எப்பொழுதும் பயத்தை உண்டு பண்ணுகிறது. இருளாக உள்ள ஒன்றே எப்பொழுதும் பயத்தை உண்டு பண்ணுகிறது. நீ உனது சொந்தக் கோபத்தைப் பார்த்தே பயப்படுகிறாய்.

மக்கள் சொல்லிக் கொள்கிறார்கள், நாங்கள் கோபத்தை அமுக்குகிறோம். ஏனெனில் கோபப்படுவது நல்லதல்ல, அது மற்றவர்களைக் காயப்படுத்தலாம். ஆனால் இதுவல்ல உண்மை யான காரணம். உண்மையான காரணம் என்னவென்றால் அவர்கள் தங்களது கோபத்தைக் கண்டு தாங்களே பயப்படு கிறார்கள். உண்மையாக அவர்கள் கோபப்பட்டால் என்ன நடக்குமென்பது அவர்களுக்கே தெரியாது. அவர்கள் அவர் களிடமே பயப்படுகிறார்கள். அவர்கள் ஒருபோதும் கோபத்தை

அறிந்ததில்லை. அது உள்ளே ஒளிந்திருக்கும், மிகவும் பயமுறுத்தும் ஒன்று. எனவே அவர்கள் அதற்குப் பயப்படு கிறார்கள். எனவேதான் அவர்கள் சமூகத்தின், பண்பாட்டின், கல்வியின் பின்னால் நிற்கிறார்கள். மேலும் அவர்கள் சொல் கிறார்கள், ''நாம் கண்டிப்பாகக் கோபம் கொள்ளக் கூடாது. கோபம் மோசமானது. அது மற்றவர்களைக் காயப்படுத்துகிறது.''

நீ உனது கோபத்திற்குப் பயப்படுகிறாய், நீ உனது பாலுணர்ச்சிக்குப் பயப்படுகிறாய். நீ ஒருபோதும் உனது பாலுணர்ச்சியில் முழுமையாக இருந்தது கிடையாது. நீ உன்னையே மறந்து விடக்கூடிய அளவிற்கு ஒருபோதும் முழுமையாகப் பாலுணர்ச்சியில் இருந்தது கிடையாது. நீ எப்பொழுதும் அங்கு இருக்கிறாய்; உனது மனம் எப்பொழுதும் அங்கு இருக்கிறது. மேலும் கலவியின் போது, மனம் அங்கிருந் தால் அப்போது அந்தச் செயல் வெறும் போலியாக ஏமாற்றுத லாக ஆகிவிடுகிறது. மனம் முற்றிலும் கரைந்துவிட வேண்டும், நீ வெறும் உடலாக மட்டும் மாற வேண்டும். அங்கு எந்த யோசனையும் இருக்கக் கூடாது. அங்கு யோசனை இருந்தால் நீ பிளவுபட்டிருக்கிறாய். அப்போது பாலுணர்ச்சி செயல் வெறும் அதிகப்படியாக உள்ள சக்தியை வெளியேற்றுவதாக மட்டும் ஆகிவிடுகிறது. அது வெறும் விடுவித்தல் மட்டுமே வேறெதுவும் இல்லை. ஆனால் நீ முழுதாகப் பாலுணர்வில் இருக்க பயப்படுகிறாய். அதனால்தான் நீ கடைபிடிப்பவனாகிறாய். சமுதாயம் பாலுணர்வு மோசம் என்று சொல்லுவதைக் கடைபிடிப்பவனாகிறாய். நீ பயப்படுகிறாய்!

ஏன் நீ பயப்படுகிறாய்? ஏனெனில் நீ பாலுணர்வில் முழுமையாக ஈடுபட்டால் நீ என்ன செய்வாய் என்று உனக்குத் தெரியாது, அங்கு என்ன நடக்கும் என்று உனக்குத் தெரியாது, எப்படிப்பட்ட மிருக சக்தி வெளிப்படும் என்று உனக்குத் தெரியாது, உனது உணர்வற்ற நிலை உன்னை எங்கே எதற்குள் வீசும் என்று உனக்குத் தெரியாது. உனக்குத் தெரியாது! ஆகை யால் நீ எஜமானனாக இருக்க மாட்டாய்; நீ கட்டுப்படுத்தக்

கூடியவனாக இருக்க மாட்டாய். உனது சுய-கற்பனை அழிந்து போகலாம். ஆகவே தான் நீ பாலுணர்ச்சி செயலைக் கட்டுப் படுத்துகிறாய். அதைக் கட்டுப்படுத்த வழி என்னவென்றால் மனதிலேயே தொடர்ந்து இருப்பது. கலவி அங்கே நடக்கட்டும், ஆனால் அந்தக் குறிப்பிட்ட இடத்தில் மட்டுமே. இந்தக் 'குறிப்பிட்ட இடம்' மற்றும் 'பொதுவான' என்பதைப் புரிந்து கொள்ள முயற்சி செய். உன்னுடைய பாலுணர்வு மையம் மட்டுமே கலவியில் ஈடுபட்டிருந்தால், அது குறிப்பிட்ட இடத்தின் கலவி என்று தந்த்ரா சொல்கிறது. அது குறிப்பிட்ட இடத்தைச் சார்ந்தது; அது குறிப்பிட்ட இடம் வெளியேற்றுவது. பாலுணர்வு மையம் தொடர்ந்து சக்தியை சேகரித்துக் கொண்டே இருக்கிறது. அது நிறைந்து வழியும் போது நீ அதை வெளியேற்ற வேண்டும்; இல்லாவிட்டால் அது இறுக்கத்தை உண்டுபண்ணும். அது சுமையாக மாறும். நீ அதை வெளியேற்றுகிறாய், ஆனால் அது ஒரு குறிப்பிட்ட இடம் வெளியேற்றுவது. உன்னுடைய முழு உடம்பும், உன்னுடைய முழு சுயமும் இதில் ஈடுபடுவ தில்லை. குறிப்பிட்ட இடம் அல்லாதது முழுதான ஈடுபாடு என்பதன் அர்த்தம் என்னவென்றால், உடம்பின் ஒவ்வொரு நாடி நரம்பும், உடம்பின் ஒவ்வொரு செல்லும், நீ எதுவாக இருந் தாலும் முழுமையாக அதில் இருப்பது. உனது முழு இருப்பும் பாலுணர்வாக மாறி விடுகிறது. உன்னுடைய பாலுணர்வு மையம் மட்டுமல்ல, உன்னுடைய முழு இருப்பும் பாலுணர் வாக மாறி விடுகிறது.

ஆனால் இப்போது நீ பயப்படுகிறாய். ஏனெனில் அங்கு எது வேண்டுமானாலும் நடக்கலாம். என்ன நடக்கக் கூடும் என்பதை நீ அறிய மாட்டாய். ஏனெனில் நீ முழுமையாக ஒருபோதும் அறிந்ததில்லை. நீ நினைத்தே பார்க்க முடியாத சில காரியங்களை நீ செய்யலாம்.

உன்னுடைய உணர்வற்ற நிலை வெடிக்கும். நீ ஒரு மிருகமாக அல்ல, பல மிருகங்களாக மாறுவாய், ஏனெனில் நீ பல பிறவிகளைக் கடந்து வந்திருக்கிறாய், பல மிருக உடம்பு

களைக் கடந்து வந்திருக்கிறாய். நீ ஊளையிட ஆரம்பிக்கலாம், நீ அலற ஆரம்பிக்கலாம், நீ சிங்கத்தைப் போலக் கர்ஜிக்க ஆரம்பிக்கலாம். உனக்குத் தெரியாது.

எது வேண்டுமானாலும் நடக்கலாம் - இது பயத்தை உண்டு பண்ணுகிறது. நீ கட்டுப்பாட்டிலேயே இருக்க வேண்டும் அப்போதுதான் எதிலும் உன்னை நீ ஒருபோதும் இழந்துவிட மாட்டாய். அதனால் தான் நீ ஒருபோதும் எதையும் அறிந்து கொள்வதில்லை. மேலும் நீ அறிந்து கொள்ளாமல் நீ கடந்து செல்ல முடியாது.

ஏற்றுக் கொள், ஆழமாகச் செல், அடிவேர் வரை செல். இதுதான் தந்த்ரா. தந்த்ரா ஆழமான அனுபவங்கள் பெற உதவுவது. அனுபவப்பட்ட எதையும் கடந்து செல்ல முடியும்; அமுக்கப்பட்ட எதையும் ஒருபோதும் கடந்து செல்ல முடியாது.

இன்று இது போதும்.

## சூத்திரங்கள்

13. ''அல்லது, மயில் தோகையின் ஐந்து வண்ண மயமான வட்டங்களையும் எல்லையில்லாத வெளியில் இருக்கும் உனது ஐந்து புலன்களாகக் கற்பனை செய்து கொள். இப்போது அவற்றின் அழகு உள்ளுக்குள்ளேயே கரையட்டும். இது போலவே, வெளியிடத்தில் அல்லது சுவரில் உள்ள எந்த ஒரு புள்ளியிலும் – அந்தப் புள்ளி கரைந்து போகும் வரையிலும், அப்போது மற்றொன்றிற்கான உனது விருப்பம் உண்மை ஆகும்.''

14. ''உன்னுடைய முதுகுத் தண்டின் மையத்திலிருக்கும், தாமரை இழை போன்ற மென்மையான நரம்பின் மேல் உனது முழுக் கவனத்தையும் வை. இப்படி இருப்பதில் மாறுவாயாக.''

★★★

மனிதன் ஒரு மையத்துடன் தான் பிறக்கிறான். ஆனால் அவன் சிறிது கூட அதைப்பற்றி அறியாமலேயே தனது காலத்தைக் கழித்து விடுகிறான். மனிதன் தனது மையத்தைத் தெரிந்து கொள்ளாமல் வாழ முடியும். ஆனால் மனிதன் மைய மில்லாமல் இருக்க முடியாது. மையமே மனிதனுக்கும் பிரபஞ்ச இருப்புக்கும் இடையேயான இணைப்பு; அதுவே வேர். நீ அதை அறியாமலிருக்கலாம், மையம் இருப்பதற்கு அதைப் பற்றிய அறிவு முக்கியத் தேவையல்ல, ஆனால் அதை நீ அறியாத பொழுது, நீ வேரற்ற ஒரு வாழ்க்கையை நடத்துவாய் – வேர்களே இல்லாதது போல. நீ இருக்குமிடம் எதையும் உணரமாட்டாய். நீ உனது அடிப்படையை உணரமாட்டாய்; நீ இந்தப் பேரண் டத்தை உனது வீடாக உணரமாட்டாய். நீ வீடற்றவனாக இருப்பாய்.

எப்படி இருந்த போதிலும், மையம் அங்கே இருக்கிறது, ஆனால் அதை அறியாததால் உனது வாழ்க்கை திசை தெரியாத தாக, அர்த்தமற்றதாக, வெறுமையாக எதையும் அடையாததாக இருக்கும். நீ உயிரில்லாமல் வாழ்வது போல இழுத்துச் செல்லப் படுவது போல சாவுக்குக் காத்துக் கொண்டிருப்பது போல நீ உணர்வாய். நீ ஒரு கணத்திலிருந்து மற்றொரு கணத்திற்குத் தள்ளிப் போட்டுக் கொண்டே போகலாம். ஆனால் அப்படித் தள்ளிப் போடுவது உன்னை எங்கும் கொண்டு சேர்க்காது என்பது உனக்கு மிக நன்றாகத் தெரியும். நீ காலத்தைக் கடத்திக் கொண் டிருக்கிறாய் அவ்வளவே, மேலும் அந்த ஆழமான நொறுங்கிப் போன உணர்வு உன்னை ஒரு நிழல் போலத் தொடரும். மனிதன் ஒரு மையத்துடன் தான் பிறக்கிறான். ஆனால் மையத்தைப் பற்றிய அறிதலுடன் பிறப்பதில்லை. அந்த அறிவு அடைய வேண்டியது.

உனக்கு மையம் இருக்கிறது. மையம் அங்கு இருக்கிறது; நீ அது இல்லாமல் இருக்க முடியாது. எப்படி மையமில்லாமல் நீ உயிரோடு இருக்க முடியும்? எப்படி நீ உனக்கும் பிரபஞ்ச

இருப்புக்கும் இடையே ஒரு பாலமில்லாமல் உயிரோடு இருக்க முடியும்?.... அல்லது நீ 'கடவுள்' என்ற வார்த்தையை விரும்பினால் உனக்கும் கடவுளுக்கும் நீ ஒரு ஆழமான இணைப்பு இல்லாமல் உயிரோடு இருக்க முடியாது. உனது வேர்கள் தெய்விகத்தில் உள்ளன. ஒவ்வொரு கணமும் நீ அந்த வேர்களின் மூலமே வாழ்கிறாய், ஆனால் அந்த வேர்கள் புதைந்துள்ளன. எந்த ஒரு மரத்தைப் போலவும் வேர்கள் புதைந்துள்ளன; ஆனால் மரம் அதனுடைய சொந்த வேர்களைப் பற்றியே விழிப்புணர்வு இல்லாமல் இருக்கிறது. உனக்கும் வேர்கள் உள்ளன. அந்த வேர்விட்ட தன்மையே உனது மையம். நான், மனிதன் அதனுடனேயே பிறக்கிறான் என்று சொல்லும் போது, அதன் அர்த்தம், நீ உனது வேர்கொண்ட தன்மையைப் பற்றிய விழிப்புணர்வு அடைவதற்குச் சாத்தியக் கூறு உள்ளது என்பதே.

நீ விழிப்புணர்வு அடைந்தால், உன்னுடைய வாழ்க்கை நிஜமாகிறது; இல்லாவிட்டால் உனது வாழ்க்கை வெறும் ஆழமான தூக்கத்தைப் போல, ஒரு கனவாகவே இருக்கும். 'ஆப்ரகாம் மாஸ்லோ'வால் 'சுயத்தை நிஜமாக அடைவது' என்று அழைக்கப்பட்டது உண்மையில் உன்னுடைய மையத்தைப் பற்றிய விழிப்புணர்வு அடைவதே. அதாவது, நீ எங்கிருந்து இந்த முழுப் பேரண்டத்துடனும் தொடர்பு கொண்டுள்ளாயோ அந்த மையத்தை, உனது வேர்களைப் பற்றிய விழிப்புணர்வு அடைவது : நீ இங்குத் தனியாக இல்லை, நீ ஒரு சிறிய துகள் அல்ல, நீ இந்த முழுப் பேரண்ட இயக்கத்தின் பாகம். இந்தப் பேரண்டம் உனக்கு அந்நியமான உலகமல்ல. நீ ஒரு அந்நியன் அல்ல, இந்தப் பேரண்டமே உனது வீடு. ஆனால் உனது வேர்களை, உனது மையத்தை நீ கண்டுபிடிக்காவிட்டால், இந்தப் பேரண்டம் ஏதோ அந்நியமாக, ஏதோ வெளியிடமாகவே இருக்கும்.

'சாத்ரே' சொல்கிறார், மனிதன் ஏதோ இந்த உலகத்தில் அவன் வீசப்பட்டுவிட்டவனைப் போலவே வாழ்கிறான்.

அப்படித்தான், நீ உனது மையத்தை அறியவில்லை என்றால் தூக்கி வீசப்பட்டதைப் போலத்தான் நீ உணர்வாய், ஏதோ இந்த உலகத்திற்குள் நீ வீசப்பட்டதைப் போலவே உணர்வாய். நீ ஒரு வெளிமனிதன்; நீ இந்த உலகத்தைச் சேர்ந்தவனல்ல, இந்த உலகம் உன்னைச் சேர்ந்தது அல்ல. பிறகு இதன் விளைவாக, பயம், பதட்டம், வேதனை அனைத்தும் வந்தே தீரும்.

பேரண்டத்திற்கு அந்நியனான ஒரு மனிதன், ஆழமான வேதனை, பயம், திகில், பதட்டம் ஆகிய அனைத்தையும் கண்டிப்பாக உணருவான். அவனது முழு வாழ்க்கையும் ஒரு சண்டையாக, ஒரு போராட்டமாகவே, தோல்விதான் என்பது முடிவு கட்டப்பட்ட ஒரு போராட்டமாகவே இருக்கும். மனிதன் வெற்றியடைய முடியாது. ஏனெனில் ஒரு பாகம் அதன் முழுமைக்கு எதிராக ஒருபோதும் வெற்றி பெற முடியாது.

நீ பிரபஞ்ச இருப்புக்கு எதிராக வெற்றி பெற முடியாது. நீ அதனோடு இணைந்து வெற்றி பெற முடியும். ஆனால் ஒரு போதும் அதற்கு எதிராக முடியாது. மேலும் இதுதான் மதத்தன்மையுள்ள மனிதனுக்கும் மதத்தன்மையற்ற மனிதனுக்கும் இடையே உள்ள வித்தியாசம். ஒரு மதத்தன்மையற்ற மனிதன் பேரண்டத்திற்கு எதிராக இருக்கிறான். ஒரு மதத்தன்மையுள்ள மனிதன் பேரண்டத்தோடு இருக்கிறான். ஒரு மதத்தன்மையுள்ள மனிதன் வீட்டிலிருப்பதைப் போல உணர்கிறான். அவன் இந்த உலகத்தினுள் வீசப்பட்டவனாக உணர்வதில்லை. அவன் இந்த உலகத்தில் வாசம் செய்பவனாக, வளர்ந்தவனாக உணர்கிறான். வீசப்படுவதற்கும், வாசம் செய்வதற்கும் உள்ள வித்தியாசத்தை நினைவில்கொள்.

'சாத்ரே' மனிதன் இந்த உலகத்தினுள் வீசப்பட்டவன் என்று சொல்லும் பொழுது, அந்தச் சொற்களே, அந்த அமைப்பே, நீ இதைச் சேர்ந்தவனல்ல என்பதைக் காட்டுகிறது. 'வீசப்பட்ட' என்ற சொல், இந்தச் சொல்லைத் தேர்வு செய்ததே, நீ உனது

விருப்பமில்லாமல் இங்குத் தள்ளப்பட்டுள்ளாய் என்பதைக் காட்டுகிறது. ஆகவே இந்த உலகம் எதிரியாகத் தெரிகிறது. அப்போது வேதனைதான் அதன் விளைவாக இருக்க முடியும்.

நீ இந்த உலகத்தினுள் வீசப்பட்டவனாக இல்லாமல், அதன் ஒரு உயிரியக்க பாகமாக, அங்கேயே வளர்ந்த அதன் ஒரு பாகமாக இருந்தால் மட்டுமே நீ நன்றாக உணர முடியும். உண்மையில், பேரண்டம் ஒரு குறிப்பிட்ட பரிமாணத்தில், நாம் 'மனிதன்' என்று அழைக்கும் ஒரு குறிப்பிட்ட பரிமாணத்தில் வளர்ந்த வளர்ச்சியே நீ என்று சொல்வது இன்னும் சிறப்பானதாக இருக்கும். பேரண்டம் பல்வேறு பரிமாணங்களில் வளர்கிறது - மரங்களில், மலைகளில், நட்சத்திரங்களில், கிரகங்களில்... இப்படிப் பல்வேறு பரிமாணங்களில். மனிதனும் ஒரு பரிமாணத்தின் வளர்ச்சிதான். பேரண்டம் பலபல பரிமாணங்கள் மூலமாகத் தன்னையே உணர்ந்து கொள்கிறது. உயர்ந்த சிகரத்தைத் தொட்ட ஒரு பரிமாணமே மனிதன். எந்த மரமும் தனது வேரைப் பற்றிய விழிப்புணர்வை அடைய முடியாது; எந்த மிருகமும் தனது வேர்களைப் பற்றிய விழிப்புணர்வை அடைய முடியாது. அதனால்தான் அவைகளுக்கு எந்தப் பதட்டமும் இல்லை.

உனது வேர்களைப் பற்றிய, உனது மையத்தைப் பற்றிய, விழிப்புணர்வு உனக்கு இல்லையென்றால் உனது மரணத்தைப் பற்றிய விழிப்புணர்வு உனக்கு ஒருபோதும் வர முடியாது. மரணம் மனிதனுக்கு மட்டும்தான். இது மனிதனுக்கு மட்டுமே இருக்கிறது. ஏனெனில் மனிதன் மட்டுமே அவனது வேர்கள் பற்றிய விழிப்புணர்வை, அவனது மையம் பற்றிய விழிப்புணர்வை, அவனது முழுமை மற்றும் பேரண்டத்தில் வேர்கொண்டுள்ள தன்மை பற்றிய விப்புணர்வை அடைய முடியும்.

நீ மையமில்லாதவன் போல வாழ்ந்தால், நீ ஒரு அந்நியன் என்பதைப்போல நீ உணர்ந்தால், அப்போது வேதனையே அதன்

விளைவாக இருக்கும். நீ வீட்டிலிருப்பதுபோல உணர்ந்தால், நீ ஒரு வளர்ச்சியாக பிரபஞ்ச இருப்பிற்கு உள்ள ஆற்றலை அதுவே உணர்ந்து கொள்ளும் ஒரு வளர்ச்சியாக - பிரபஞ்ச இருப்பே உன்னில், விழிப்புணர்வு அடைவதுபோல அது உன்னில், விழிப்புணர்வு பெறுவது போல - நீ இந்த விதமாக உணர்ந்தால் நீ உண்மையாகவே இந்த விதமாக உணர்ந்தால் அதன் பயன் பேரானந்தமாக இருக்கும்.

பேரண்டத்தின் உயிரியக்க ஒருமையில் ஒன்றிவிடுவதன் விளைவு பேரானந்தம். அதோடு பகைமை கொள்வதன் விளைவு வேதனை. ஆனால் உனது மையத்தை அறியாத பொழுது நீ வீசப்பட்டவனாகவே, உன் மேல் வாழ்க்கை திணிக்கப் பட்டதாகவே உணர்வாய். மனிதன் மையத்தைக் குறித்து விழிப்புணர்வு அடையாவிட்டாலும் அங்கு தொடர்ந்து இருந்து கொண்டிருக்கும் மையத்தின் மேல் அக்கறை கொண்டவைகளே நாம் ஆலோசிக்கப் போகும் இந்த சூத்திரங்கள். மையத்தின்மேல் அக்கறை கொண்ட 'விஞ்ஞான் பைரவ் தந்த்ரா'வின் இந்த யுக்திகளில் நுழைவதற்கு முன் மேலும் இரண்டு மூன்று விஷயங்கள்.

ஒன்று: மனிதன் பிறக்கும் பொழுது அவன் குறிப்பிட்ட ஓர் இடத்தில் வேர் கொண்டு இருக்கிறான். ஒரு குறிப்பிட்ட சக்ராவில், - மையம் - வேர் கொண்டு இருக்கிறான். அதுதான் தொப்புள் நாபிக் கமலம். ஜப்பானியர்கள் இதை 'ஹரா' என்று அழைக்கிறார்கள்; ஆகவேதான் 'ஹரகிரி' என்ற சொல். ஹரகிரி என்பதன் அர்த்தம் தற்கொலை. இலக்கணரீதியாக அந்தச் சொல்லின் அர்த்தம் ஹராவை - மையத்தை அடித்தளத்தைக் கொன்றுவிடுவது. ஹராதான் மையம்; ஹரகிரி என்பதன் அர்த்தம் மையத்தை அழித்துவிடுவது. ஆனா, ஒரு விதத்தில் நாம் எல்லோருமே ஹரகிரி செய்து கொண்டவர்கள்தான். நாம் மையத்தைக் கொல்லவில்லை. ஆனா, நாம் அதை மறந்துவிட்டோம் அல்லது நாம் அதை

ஒருபோதும் நினைவு கூறவில்லை. அது அங்கே காத்துக் கொண்டிருக்கிறது. ஆனால், நாம் அதனிடமிருந்து மேலும் மேலும் விலகிச் சென்று கொண்டே இருக்கிறோம்.

ஒரு குழந்தை பிறக்கும்பொழுது அது நாபியில் ஹராவில் வேர் கொண்டிருக்கிறது; அது ஹராவின் மூலமே வாழ்கிறது. ஒரு குழந்தை மூச்சு விடுவதைப் பார் - அதனுடைய நாபி மேலும் கீழும் போய் வருகிறது. அது வயிற்றில் மூச்சு விடுகிறது -அது வயிற்றில் வாழ்கிறது - தலையில் அல்ல. இதயத்தில் அல்ல. ஆனால் மெதுமெதுவாக அது விலகிச் செல்லத்தான் வேண்டும்.

முதலில் மற்றொரு மையத்தை அது வளர்த்துக் கொள்கிறது. அந்த மையம் இதயம் உணர்ச்சிகளின் மையம். அது அன்பைக் கற்றுக் கொள்கிறது. அதனிடம் அன்பு காட்டப்படுகிறது இப்போது அந்த மற்றொரு மையம் வளருகிறது. இந்த மையம் ஒரு உண்மையான மையமல்ல; இது ஒரு பக்கவிளைவே. இதனால்தான் உளவியலாளர்கள் சொல்கிறார்கள்; ஒரு குழந்தை நேசிக்கப்படா விட்டால், அதனால் ஒரு போதும் நேசிக்க முடியாது. ஒரு குழந்தை அன்பில்லாத சூழ்நிலையில் வளர்க்கப்பட்டா, - ஒரு இறுகிய சூழ்நிலை அன்பையும் கதகதப்பையும் கொடுக்கும். ஒருவரு மில்லாத சூழ்நிலை - அது தனது வாழ்வில் ஒரு போதும் யாரையுமே நேசிக்க இயலாததாகிவிடும். ஏனெனில், அந்த மையமே வளராமல் போய் விடுகிறது. தாயின் அன்பு தந்தையின் அன்பு குடும்பம் சமுதாயம் - இவை இந்த மையம் வளர உதவுகின்றன. இந்த மையம் ஒரு பக்க விளைவே; நீ இதோடு பிறக்கவில்லை. ஆகவே இது வளர்வதற்கு உதவி கிடைக்காவிட்டால் இது வளராது. பல பல மனிதர்கள் அன்பு மையம் இல்லாமல் இருக்கிறார்கள். அவர்கள் அன்பைப் பற்றிப் பேசிக் கொண்டே இருப்பார்கள். அவர்கள் தாங்கள் அன்பு செய்வதாக நினைத்துக் கொண்டே இருப்பார்கள். ஆனால், அவர்களுக்கு அந்த மையம்

இல்லை. பின் எப்படி அவர்கள் அன்பு செய்ய முடியும்? ஒரு அன்பான தாய் கிடைப்பது மிகவும் கடினம், ஒரு அன்பான தந்தை கிடைப்பது மிகவும் அரிதும் கடினமும் ஆனது. ஒவ்வொரு தந்தையும் ஒவ்வொரு தாயும் அவர்கள் அன்பு செய்வதாகவே நினைக் கிறார்கள். ஆனால் இது சுலபமானதல்ல. அன்பு ஒரு கடினமான வளர்ச்சி, மிகவும் கடினமானது. ஆனால் ஒரு குழந்தைக்கு ஆரம்பத்தில் அன்பு கிடைக்கவில்லை யென்றால், அதனால் ஒருபோதும் அன்பு செய்ய இயலாது.

இதனால் தான் முழு மனித குலமும் அன்பில்லாமலேயே வாழ்கிறது. நீ குழந்தைகளை உற்பத்தி செய்து கொண்டே போகிறாய், ஆனால் அந்தக் குழந்தைகளுக்கு அன்பு மையத்தை எப்படிக் கொடுப்பதென்பது உனக்குத் தெரியாது. பதிலாக, அதற்கு மாறாக, சமூகம் எந்த அளவு அதிகம் நாகரிகமடைந் திருக்கிறதோ அந்த அளவு ஒரு மூன்றாவது மையத்தை, அதாவது அறிவுபூர்வமானதை, அதனுள் திணிக்கிறது. நாபிதான் அசலான மையம். ஒரு குழந்தை அதோடு பிறக்கிறது; அது ஒரு பக்க விளைவு அல்ல. அது இல்லாமல் வாழ்வு சாத்தியமில்லை, ஆகவே அது கொடுக்கப்பட்டுள்ளது. இரண்டாவது மையம் ஒரு பக்க விளைவு. ஒரு குழந்தைக்கு அன்பு கிடைத்தால் அது திருப்பிக் கொடுக்கிறது. இந்தத் திருப்பிக் கொடுத்தலில் ஒரு மையம் அதனிடம் வளர்கிறது. அதுதான் இதய மையம். மூன்றாவது மையமானது : காரணம், அறிவு, தலை, படிப்பு, தர்க்கம் மற்றும் பயிற்சிகள் மூன்றாவது மையத்தை உருவாக்கு கின்றன. இதுவும் ஒரு பக்க விளைவு தான்.

ஆனால் நாம் மூன்றாவது மையத்திலேயே வாழ்கிறோம். இரண்டாவது கிட்டத்தட்ட இல்லை – அல்லது அப்படியே அது இருந்தாலும் அது வேலை செய்வதில்லை; அல்லது அப்படியே அது சில நேரங்களில் வேலை செய்தாலும் அது சரியாக வேலை செய்வதில்லை. ஆனால் இந்த மூன்றாவது மையம், இந்த தலை வாழ்வின் அடிப்படை சக்தியாக மாறிவிட்டது. ஏனெனில் முழு

வாழ்க்கையும் இந்த மூன்றாவது மையத்தைச் சார்ந்தே உள்ளது. இது பயன்பாட்டுத் தன்மை உடையது. இது உனக்கு, காரணத் திற்கு, தர்க்கத்திற்கு, யோசிப்பதற்குத் தேவை. ஆகவே விரைவாகவோ அல்லது தாமதமாகவோ எல்லோரும் தலையை அடிப்படையாகக் கொண்டவர்களாக மாறிவிடுகின்றனர்; நீ தலையில் வாழ ஆரம்பித்து விடுகிறாய்.

தலை, இதயம், நாபி – இவையே மூன்று மையங்கள். நாபி கொடுக்கப்பட்ட மையம், அசலான ஒன்று. இதயம் வளர்த்துக் கொள்ளக் கூடியது, இதை வளர்த்துக் கொள்வது பல காரணங் களுக்காக மிகவும் நல்லது. காரணமும் வளர்த்துக் கொள்ள வேண்டியதே. ஆனால் இதயத்தை இழந்து அதற்குப் பதிலாக காரணத்தை வளர்த்துக்கொள்ளக் கூடாது. ஏனெனில் இதயத்தை இழந்து காரணத்தை வளர்த்துக் கொண்டால் அப்போது நீ இணைப்பை இழக்கிறாய். மேலும் நீ மறுபடியும் நாபிக்கு வரமுடியாது. வளர்ச்சி காரணத்திலிருந்து பிரபஞ்ச இருப்புக்கு, பிரபஞ்ச இருப்பிலிருந்து ஜீவனுக்கு, உயிரியக்கத்துக்கு. இதை இந்த விதமாகப் புரிந்துகொள்ள முயற்சிப்போம்.

நாபியின் மையம் உயிரியக்கத்தில் உள்ளது; இதயத்தின் மையம் உணர்வதில் உள்ளது; அறிவின் மையம் அறிதலில் உள்ளது. உயிரிலிருந்து அதிக தூரத்தில் உள்ளது அறிவு – உணர்தல் அருகில் உள்ளது. நீ உணர்வு மையத்தை இழந்து விட்டால், பிறகு காரணத்திற்கும் உயிருக்கும் இடையே ஒரு பாலத்தை உருவாக்குவது மிகவும் கடினம், உண்மையிலேயே மிகவும் கடினம். இதனால் தான், ஒரு அன்பு காட்டும் மனிதன் இந்த உலகத்தில் அவனது வீட்டிலிருப்பது போன்ற உணர்வை சுலபமாக உணர முடிகிறது. அதே சமயம் அறிவுபூர்வமாக வாழ்பவனுக்குக் கஷ்டமாக இருக்கிறது.

மேற்கத்தியக் கலாசாரம் தலையின் மையத்தை அடிப்படை யாக வலியுறுத்துகிறது. இதனால் தான் மேற்கில் மனிதனின்

மேல் ஆழமான அக்கறை உணர்வு வந்துள்ளது. இந்த ஆழமான அக்கறை அவனுடைய வீட்டை உணர முடியாத தன்மையால், அவனுடைய வெறுமையில், அவனுடைய வேரற்ற தன்மையால் ஏற்பட்டுள்ளது. 'சைமன் வெயில்' வேர்களின் தேவை என்று ஒரு புத்தகம் எழுதினார். மேற்கத்திய மனிதன் வேர் பிடுங்கப் பட்டவனாக, வேர்களே இல்லாதவனைப் போல உணர்கிறான். இதன் காரணம் என்னவென்றால் அங்கு வெறும் தலை மட்டுமே மையமாக மாறிவிட்டது. இதயம் பயிற்றுவிக்கப்படவில்லை, அது தவற விடப்பட்டு விட்டது.

இதயத்தின் துடிப்பு உனது இதயம் அல்ல. அது வெறும் ஒரு உடலியலைச் சார்ந்த செயல். ஆகவே நீ துடிப்பை உணர்வதால், உனக்கு இதயம் இருக்கிறதென்று தவறாகப் புரிந்து கொள்ளாதே. இதயம் என்பது வேறொன்று. இதயம்- என்பதன் அர்த்தம் உணரக்கூடிய திறன்; தலை என்பதன் அர்த்தம் அறியக் கூடிய திறன். இதயம் என்பதன் அர்த்தம் உணரும் திறன், உயிர் என்பதன் அர்த்தம் ஒன்றாக இருக்கும் திறன் – ஏதோ ஒன்றுடன் ஒன்றி இருப்பது.... ஏதோ ஒன்றுடன் ஒன்றி இருக்கும் திறன்.

மதம் உயிரினிடத்தில் ஈடுபாடு கொண்டது; கவிதை இதயத்தினிடத்தில் ஈடுபாடு கொண்டது; தத்துவமும் விஞ்ஞான மும் தலையினிடத்தில் ஈடுபாடு கொண்டது. இதயமும் தலையும் ஆகிய இரண்டு மையங்களும் மேல் மட்டத்தில் உள்ள மையங்கள், நிஜமான மையங்கள் அல்ல, வெறும் பொய்யான மையங்கள். உண்மையான மையம் நாபிதான், ஹராதான். அதை மறுபடியும் எப்படி அடைவது? அல்லது அதை எப்படி உணர்ந்து கொள்வது?

சாதாரணமாக ஒரு சில சமயங்களில் மட்டுமே, அபூர்வ மாக, எதிர்பாராத விதமாக நீ ஹராவிற்கு அருகில் வருவது நிகழ்கிறது. அந்தக் கணம் மிகவும் ஆழமான பேரானந்தமான கணமாக மாறிவிடும். உதாரணமாகப் பாலுணர்வில் சில சமயங்

களில் நீ ஹராவிற்கு அருகில் வருகிறாய். ஏனெனில் பாலுணர்வில் உனது மனம், உனது உணர்வு நிலை மறுபடியும் கீழ் நோக்கி நகர்கிறது. நீ உனது தலையை விட்டு வெளியேறிக் கீழே விழ வேண்டும். ஆழமான, கலவியின் உச்சத்தில், சில சமயங்களில் நீ உனது ஹராவிற்கு அருகில் இருப்பது நிகழ்கிறது. இதனாலேயே பாலுணர்வைப் பற்றி மிக அதிக கவர்ச்சியும் ஆர்வமும் இருக்கிறது. உண்மையில் பேரானந்த அனுபவத்தைக் கொடுப்பது பாலுணர்வு அல்ல; உண்மையில் அதைக் கொடுப்பது ஹரா.

பாலுணர்வை நோக்கிக் கீழே விழுகையில் நீ ஹரா மூலமாகக் கடந்து செல்கிறாய், நீ அதைத் தொடுகிறாய். ஆனால் இன்றைய நாகரிக மனிதனுக்கு இதுவும் கூடச் சாத்தியமற்றது ஆகிவிட்டது. ஏனெனில் இன்றைய மனிதனுக்குப் பாலுணர்வு கூட ஒரு மூளையில் நடக்கும் விஷயமாக, மனதில் நடக்கும் ஒரு விஷயமாக ஆகிவிட்டது. பாலுணர்வு கூடத் தலைக்கு ஏறி விட்டது; ஒருவன் இதைப்பற்றி யோசிக்கவே செய்கிறான். அதனால் தான் இங்குப் பல சினிமா படங்கள், பல நாவல்கள், இவ்வளவு புத்தகங்கள், ஆபாசப் படங்கள் இது போன்றவை இருக்கின்றன. மனிதன் பாலுணர்வைப் பற்றி யோசிக்கிறான், ஆனால் இது மடத்தனம். பாலுணர்வு ஒரு அனுபவம், நீ அதைப் பற்றி யோசிக்க முடியாது. மேலும் நீ அதைப்பற்றி யோசிக்க ஆரம்பிக்கும் பொழுது, அதை அனுபவிப்பது மேலும் மேலும் கடினமாகிறது. ஏனெனில் அது சிறிது கூட தலை சம்பந்தப் பட்டதல்ல. காரணம் அதற்குத் தேவையில்லை.

மேலும் தற்கால மனிதன் பாலுணர்வில் ஆழமாகச் செல்வதில் தனக்கு ஆற்றலில்லாததை எந்த அளவு அதிகம் உணர்கிறானோ, அந்த அளவு அதிகமாக அதைப் பற்றி யோசிக்கிறான். இது ஒரு வட்டமாகச் சுற்றிச் சுற்றி வருகிறது. மேலும் அவன் அதைப் பற்றி அதிகமாக யோசிக்குமளவு, அது அதிகம் தலையில் நிகழ்வதாக ஆகிவிடுகிறது. பிறகு பாலுணர்வு கூடப்

பயனற்றதாகி விடுகிறது. மேற்கத்திய நாடுகளில் இது பயனற்ற தாகி விட்டது, அதில் எதுவும் கிடைப்பதில்லை, நீ பழைய பழக்கத்தில் திரும்பத் திரும்பச் செய்து கொண்டே போகிறாய். கடைசியில் நீ மனமுடைந்தவனாக உணர்கிறாய் – நீ ஏமாற்றப் பட்டு விட்டதைப் போல உணர்கிறாய். ஏன்? ஏனெனில் உண்மையில், உணர்வு நிலை திரும்பக் கீழே மையத்தில் விழுவதில்லை.

நீ ஹராவின் மூலம் கடந்து செல்லும் பொழுது மட்டுமே பேரானந்தத்தை உணர்கிறாய். ஆகவே காரணம் எதுவாக இருந்த போதிலும், நீ ஹராவின் மூலமாகச் செல்லும் பொழுது நீ பேரானந்தத்தை உணர்கிறாய். போர்க்களத்தில் போரிடும் ஒரு போர்வீரன் சில நேரங்களில் ஹராவைக் கடந்து செல்வான். ஆனால் இன்றைய போர்வீரன் அப்படியல்ல. ஏனெனில் இவர்கள் போர்வீரர்களே அல்ல. உறங்கிக் கொண்டிருக்கும் ஒரு நகரத்தின் மேல் குண்டு வீசுபவன் இவன். இவன் ஒரு போர் வீரனல்ல; இவன் சண்டையிடுபவனல்ல; இவன் க்ஷத்திரியனல்ல – அர்ச்சுனன் சண்டை போடுவதல்ல.

சில சமயங்களில் ஒருவன் சாவின் விளிம்பில் இருக்கும் போது, அவன் ஹராவிற்குத் திரும்ப வீசப்படுகிறான். கத்திச் சண்டை போடும் ஒரு போர்வீரனுக்கு, எந்தக் கணமும் இறப்பு நிகழலாம், எந்தக் கணமும் அவன் இல்லாமல் போகலாம். கத்திச் சண்டை போடும்பொழுது நீ யோசிக்க முடியாது. நீ யோசித்தால், நீ உயிரோடு இருக்க மாட்டாய். நீ யோசிக்காமல் செயல்பட வேண்டும். ஏனெனில் யோசிப்பதற்கு நேரம் வேண்டும்; நீ கத்திச் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பொழுது நீ யோசிக்க முடியாது. நீ யோசித்தால் பிறகு அடுத்தவன் வென்று விடுவான், நீ உயிரோடு இருக்க மாட்டாய். யோசிப்பதற்கு நேரமில்லை, ஆனால் யோசிக்க மனதிற்கு நேரம் தேவை. யோசிக்க நேரமில்லாமல் போய்விடுவதால், யோசித்துக் கொண்டிருப்பது மரணத்திற்குச் சமமென்பதால், உணர்வு நிலை

தலையிலிருந்து கீழே விழுகிறது – அது ஹராவிற்குச் செல்கிறது. அப்போது ஒரு போர்வீரனுக்குப் பேரானந்தமான அனுபவம் கிடைக்கிறது. இதனால் தான் போரைப் பற்றி அவ்வளவு ஆர்வம் இருக்கிறது. பாலுணர்வும் போரும் ஆகிய இரண்டும் வசீகரிக் கின்றன. அதற்குக் காரணம் இதுதான் : நீ ஹரா மூலமாகச் செல்கிறாய். நீ எந்த ஒரு ஆபத்திலும் ஹராவைக் கடந்து செல்கிறாய்.

நீட்சே சொன்னார், ஆபத்தாக வாழு. ஏன்? ஏனெனில் நீ உனது ஆபத்தில் ஹராவிற்குத் திரும்ப வீசப்படுகிறாய். நீ யோசிக்க முடியாது, நீ மனத்தின் மூலம் யோசித்து வழி காண முடியாது. நீ உடனே செயல்பட வேண்டும்.

ஒரு பாம்பு போகிறது. திடீரென்று நீ பாம்பைப் பார்க் கிறாய், அங்கு ஒரு குதி குதிக்கிறாய். ''ஒரு பாம்பு'' என்ற யோசனை அங்கு உதிப்பதில்லை. அங்கு யோசித்து முடிவு எடுப்பதில்லை; நீ உனது மனதோடு, ''இப்போது அங்கு ஒரு பாம்பு இருக்கிறது, பாம்புகள் ஆபத்தானவை, ஆகவே நான் கண்டிப்பாகக் குதித்துவிட வேண்டும்'' என்று விவாதித்துக் கொண்டிருப்பதில்லை. இது போன்ற தர்க்கரீதியான காரணங்கள் எதுவும் அங்கு இருப்பதில்லை. நீ இப்படிக் காரணம் யோசித்துக் கொண்டிருந்தால், பிறகு நீ உயிரோடிருக்கவே மாட்டாய். நீ காரணப்படுத்திக் கொண்டிருக்க முடியாது. நீ தன்னிச்சையாக, உடனடியாகச் செயல்பட வேண்டும். முதலில் செயல் வருகிறது, அதன் பிறகு யோசித்தல் வருகிறது. நீ தாண்டிக் குதித்த பின்பு, நீ யோசிக்கிறாய்.

சாதாரண வாழ்க்கையில், எந்த ஆபத்தும் இல்லாத பொழுது, நீ முதலில் யோசிக்கிறாய், பிறகு செயல்படுகிறாய். ஆபத்தில், இந்த முழு இயக்கமும் தலைகீழாகி விடுகிறது; நீ முதலில் செயல்படுகிறாய், அதன் பிறகு நீ யோசிக்கிறாய். இப்படி நீ சிந்தனையில்லாமல் முதலில் செயல்படுவது, உன்னை

நிஜமான மையத்தை நோக்கி, ஹராவிற்கு வீசுகிறது. இதனால் தான் ஆபத்தில் ஒரு வசீகரம் இருக்கிறது.

நீ ஒரு காரை மேலும் மேலும், அதற்கு மேலும் என்று வேகமாக ஓட்டிக் கொண்டிருக்கும் பொழுது, திடீரென்று ஒவ்வொரு கணமும் ஆபத்தானதாக மாறும் ஒரு.கணம் வரும். எந்தக் கணத்திலும் அங்கு வாழ்க்கை பறிபோய் விடலாம். இந்த என்ன நடக்கும் என்பது தெரியாத கணத்தில், வாழ்வும் சாவும் ஒன்றோடொன்று எவ்வளவு நெருங்கியிருக்க முடியுமோ அப்படியிருக்கையில், இந்த இரண்டின் நெருக்கத்திற்கு இடையே நீ இருக்கையில், மனம் நின்றுவிடுகிறது : நீ ஹராவிற்கு வீசப்படுகிறாய். இதனால் தான் கார்களின் மேல், ஓட்டுவதன் மேல் – வேகமாக ஓட்டுவது, பயித்தியக்காரத்தனமாக ஓட்டுவது அவ்வளவு வசீகரம் உள்ளது. அல்லது நீ சூதாடுகிறாய், அதில் நீ உன்னிடம் இருக்கும் பந்தயம் கட்டக் கூடிய அனைத்தையும் கட்டி விடுகிறாய் – மனம் நின்று விடுகிறது, அங்கு ஆபத்து உள்ளது. அடுத்த கணம் நீ ஒரு பிச்சைக்காரன் ஆகிவிடலாம். மனம் வேலை செய்ய முடியாது; நீ ஹராவிற்கு வீசப்படுகிறாய்.

ஆபத்துகளில் கவர்ச்சி உள்ளது. ஏனெனில் ஆபத்தில் உன்னுடைய தினசரியுள்ள, சாதாரணமான உணர்வு நிலை வேலை செய்ய முடியாது. ஆபத்து ஆழமாகச் செல்கிறது. உனது மனம் தேவையில்லாமல் போகிறது; நீ மனமற்றவன் ஆகிறாய். நீ இருக்கிறாய்! நீ உணர்வோடு இருக்கிறாய், ஆனால் அங்கு எந்த யோசனையும் இல்லை. இந்தக் கணம் தியானமாக மாறுகிறது. உண்மையில், சூதாட்டத்தில், சூதாடிகள் ஒரு தியான நிலையிலிருக்கும் மனத்தையே நாடுகின்றனர். ஆபத்தில், சண்டையில், போட்டியில், போரில் – மனிதன் எப்பொழுதும் தியான நிலையையே தேடிக் கொண்டிருக்கிறான்.

ஒரு பேரானந்தம் திடீரென எழும்புகிறது, உன்னில் வெடிக்கிறது. அது உள்ளே மழையாகப் பொழிகிறது. ஆனால்

இவை திடீரென, விபத்தாக நிகழ்பவை. ஒன்று நிச்சயம் : எப்பொழுதெல்லாம் நீ பேரானந்தமாக உணர்கிறாயோ அப்பொழுதெல்லாம் நீ ஹராவிற்குப் பக்கத்தில் இருக்கிறாய். காரணம் முக்கியமில்லை. எப்பொழுதெல்லாம் நீ நிஜமான மையத்தை ஒட்டிச் செல்கிறாயோ, அப்பொழுதெல்லாம் நீ பேரானந்தத்தில் நிறைகிறாய்.

இந்தச் சூத்திரங்கள், ஹராவில், மையத்தில், வேர் கொண்டிருக்கும் தன்மையை உருவாக்குவதில், விஞ்ஞான பூர்வமாக, ஒரு திட்டமிட்ட வழியில் – விபத்தாக அல்ல, கணநேரத்திற்கு அல்ல, மாறாக நிரந்தரமாக உருவாக்குவதில் அக்கறை கொண்டவை. நீ இடைவிடாது தொடர்ந்து ஹராவில் இருக்க முடியும், அது நீ வேர் கொண்டிருக்கும் தன்மையாக மாற முடியும். இப்படி இதை இப்படிச் செய்வது, எப்படி இதை உருவாக்குவது என்பதே இந்தச் சூத்திரங்களின் அக்கறை.

இப்பொழுது நாம் முதல் சூத்திரத்தை எடுத்துக் கொள்வோம். அது மையத்தை, அந்தப் புள்ளியை அடையும் மற்ற வழிகளில் ஒன்று.

## 13. ஒரு பொருளின் மேல் முழுக் கவனத்தையும் குவி அல்லது வை.

முதலில் சூத்திரம் : "அல்லது, மயில் தோகையின் ஐந்து வண்ணமயமான வட்டங்களையும், எல்லையில்லாத வெளியில் இருக்கும் உனது ஐந்து புலன்களாகக் கற்பனை செய்துகொள். இப்போது, அவற்றின் அழகு உள்ளுக்குள்ளேயே கரையட்டும். இது போலவே, வெளியிடத்தில் அல்லது சுவரில் உள்ள எந்த ஒரு புள்ளியிலும் – அந்தப் புள்ளி கரைந்து போகும் வரையிலும். அப்போது மற்றொன்றிற்கான உனது விருப்பம் உண்மை ஆகும்."

இந்த எல்லா சூத்திரங்களும் எப்படி உள்ளிருக்கும் மையத்தை அடைவது என்பதிலேயே அக்கறை உள்ளவை. அடிப்படையில் பயன்படுத்தப்பட்டுள்ள இயங்குமுறை, அடிப்படையில் பயன்படுத்தப்பட்டுள்ள யுக்தி என்னவென்றால், உன்னால் ஒரு மையத்தை வெளியே உருவாக்கிக் கொள்ள முடியும் – எங்கு வேண்டுமானாலும் : மனத்தில், இதயத்தில், அல்லது வெளியிலுள்ள ஒரு சுவரிலும் கூட – பிறகு நீ அதன் மேல் முழுக் கவனத்தையும் குவித்தால், அதாவது முழு வேகத்தையும் அடைப்புக்கு வெளியே நீ கொண்டு வந்து விடுகிறாய், நீ முழு உலகத்தையும் மறந்து விடுகிறாய், அந்த ஒரே புள்ளி மட்டுமே உனது உணர்வு நிலையில் தொடர்ந்து இருக்கிறது. அப்போது நீ திடீரென உனது உள்ளிருக்கும் மையத்திற்கு வீசப்படுவாய்.

இது எப்படி வேலை செய்கிறது? முதலில் இதைப் புரிந்து கொள்..... உன்னுடைய மனம் அலைந்து கொண்டே இருக்கும், வெறும் ஒரு நாடோடி. அது ஒருபோதும் ஒரு குறிப்பிட்ட புள்ளியில் இருக்காது. அது எப்பொழுதும் போய்க்கொண்டும், நகர்ந்து கொண்டும், அடைந்து கொண்டும் தான் இருக்கும். ஆனால் எந்த ஒரே புள்ளியிலும் இருக்காது. அது ஒரு எண்ணத்தி லிருந்து மற்றொரு எண்ணத்திற்கு, 'அ'விலிருந்து 'ஆ'விற்குப் போய்க்கொண்டே இருக்கும். ஆனால் அது ஒருபோதும் அ–வில் இருக்காது, அது ஒருபோதும் ஆ–விலும் இருக்காது. அது எப்போதும் ஓட்டத்திலேயே இருக்கும். நினைவில் கொள் : மனம் எப்பொழுதும் ஓட்டத்திலேயே இருப்பது, ஏதோவொரு இடத்தை அடையும் எதிர்கால நம்பிக்கையில் ஓடிக்கொண் டிருப்பது. ஆனால் ஒருபோதும் அடையாதது. அது அடைய முடியாது! மனதின் அமைப்பு முறையே ஓட்டம்தான். அது ஓட மட்டுமே முடியும். இதுவே மனதின் இயற்கையான குணம். அதன் செயல்பாடே ஓட்டம்தான் – அ–விலிருந்து ஆ, ஆ– விலிருந்து இ.... அது இப்படியே போய்க் கொண்டிருக்கும்.

நீ 'அ' அல்லது 'ஆ' அல்லது ஏதோ ஒரு புள்ளியில் நின்றுவிட்டால், மனம் உன்னுடன் சண்டை போடும். மனம் சொல்லும், ''நகரு.'' ஏனெனில் நீ நின்றுவிட்டால் உடனே மனம் இறந்துவிடும். அது ஓட்டத்தில் மட்டுமே உயிரோடிருக்க முடியும். மனம் என்பதன் அர்த்தம் ஒரு செயல்பாடு. நீ நகராமல் நின்றுவிட்டால், மனம் திடீரென இறந்ததாகி விடுகிறது, அது அங்கு இல்லாமல் போகிறது; வெறும் உணர்வு நிலை மட்டுமே அங்கிருக்கிறது.

உணர்வுநிலை உனது இயற்கை; மனம் உனது செயல்பாடு – நடப்பதைப் போன்றது. இதைப் புரிந்து கொள்வது கடின மானது. ஏனெனில் நாம் மனதை ஏதோவொரு உருவம் படைத்த பொருள் என்று எண்ணிக் கொண்டிருக்கிறோம். நாம் மனதை ஒரு பொருள் என்று எண்ணுகிறோம் – ஆனால் அது அப்படி யல்ல, மனம் ஒரு வெறும் செயல்பாடு. ஆகவே இதை மனம் என்று அழைப்பதற்குப் பதிலாக 'மன ஓட்டம்' என்று அழைப்பது உண்மையில் சிறந்தது. இது ஒரு நடப்பதைப் போன்ற செயல்பாடு மட்டுமே. நடத்தல் ஒரு செயல்பாடு; நீ நின்றுவிட்டால், அங்கு நடத்தல் இருக்காது. உனக்குக் கால்கள் இருக்கும், ஆனால் நடத்தல் இருக்காது. கால்களால் நடக்க முடியும், ஆனால் நீ நின்றுவிட்டால் அப்போது கால்கள் அங்கு இருக்கும். ஆனால் நடத்தல் அங்கு இருக்காது.

தன்னுணர்வு என்பது கால்களைப் போன்றது – உனது இயற்கை. மனம் என்பது நடத்தலைப் போன்றது – ஒரு வெறும் செயல்பாடு. தன்னுணர்வு ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு நகரும் பொழுது, இந்தச் செயல்பாடு தான் மனம். தன்னுணர்வு அ–விலிருந்து ஆ–விற்கு நகரும்போது, ஆ–விலிருந்து இ–க்கு நகரும் போது, இந்த நகர்தல் தான் மனம். நீ நகருவதை நிறுத்தினால், அங்கு மனம் இல்லை. நீ தன்னுணர் வோடு இருக்கிறாய், ஆனால் அங்கு மனம் இல்லை. உனக்குக் கால்கள் இருக்கின்றன. ஆனால் நடத்தல் இல்லை. நடத்தல்

என்பது ஒரு வேலை, ஒரு செயல்பாடு; மனமும் ஒரு வேலை, ஒரு செயல்பாடுதான்.

நீ ஏதாவது ஓரிடத்தில் நின்றுவிட்டால், மனம் போராடும். மனம் சொல்லும் ''தொடர்ந்து போ!'' மனம் எல்லா விதங்களிலும் உன்னை முன்னாலோ அல்லது பின்னாலோ அல்லது எங்காவது உந்தித்தள்ள முயற்சிக்கும் – எப்படியாவது ''தொடர்ந்து போ!'' எந்த இடமாயிருந்தாலும் சரிதான், ஆனால் ஒரே புள்ளியில் மட்டும் நிற்காதே.

நீ வற்புறுத்தினால், நீ மனதிற்கு அடிபணிய மறுத்தால்.... இது மிகவும் கடினம். ஏனெனில் நீ எப்பொழுதும் கீழ்ப்படிந்தே நடந்திருக்கிறாய். நீ ஒருபோதும் மனதிற்குக் கட்டளையிட்டது இல்லை; நீ ஒருபோதும் எஜமானனாக இருந்ததில்லை. உன்னால் அது முடியாது. ஏனெனில், உண்மையில், நீ ஒரு போதும் உனது அடையாளம் கொள்ளாதவனாக இருந்ததில்லை. மனமே நீ என்று நீ நினைக்கிறாய். மனமே நீ என்ற இந்தத் தவறான நினைப்பு மனதிற்கு முழு சுதந்திரத்தைக் கொடுத்து விடுகிறது. ஏனெனில் அப்போது அதை அடக்கி ஆள, அதைக் கட்டுப்படுத்த ஒருவரும் அங்கு இல்லை. ஒருவரும் அங்கு இல்லை! மனம் அதுவே எஜமானனாகி விடுகிறது. அது ஆள்பவனாக மாறலாம், ஆனால் அந்த ஆளுமை பார்வைக்குத் தான் அப்படித் தெரிகிறது. நீ ஒரு முறை முயற்சி செய்தால் அந்த ஆளுமையை உடைத்து விடலாம், ஏனெனில் அது பொய்யானது.

மனம் எஜமானனாக வேஷம் போடும் வெறும் ஒரு அடிமை. ஆனால் அது நீண்ட காலமாக, பல பல பிறவிகளாக நடித்துக் கொண்டிருக்கிறது. அதனால் உண்மையான எஜமானன் கூட இந்த அடிமையே எஜமானன் என்று நம்புகிறான். இது ஒரு வெறும் நம்பிக்கை. நீ இதற்கு மாறாக முயற்சி செய். அப்போது

இந்த நம்பிக்கை முற்றிலும் பொய்யானது என்று கண்டு கொள்வாய்.

இந்தச் சூத்திரா சொல்கிறது, ''மயில் தோகையின் ஐந்து வண்ணமயமான வட்டங்களையும், எல்லையில்லாத வெளியில் இருக்கும் உனது ஐந்து புலன்களாகக் கற்பனை செய்து கொள். இப்போது அவற்றின் அழகு உள்ளுக்குள்ளேயே கரையட்டும்.'' உனது ஐந்து புலன்களையும் ஐந்து வண்ணங்களாக நினைத்துக் கொள், மேலும் இந்த ஐந்து வண்ணங்களும் வெளி முழுவதிலும் நிறையட்டும். உனது ஐந்து புலன்களையும் ஐந்து வண்ணங் களாகக் கற்பனை செய்து கொள் – அழகான உயிரோட்டமுள்ள வண்ணங்களாக, எல்லையில்லாத வெளியினுள் விரிந்து கிடப்பதாக. பிறகு இந்த வண்ணங்களுக்குள் செல். அவைகளுக் குள் சென்று அந்த ஐந்து வண்ணங்களும் உனக்குள் எந்த மையத்தில் சந்திக்கிறதோ அந்த மையத்தை உணர். இது வெறும் கற்பனைதான். ஆனால் இது உதவும். இந்த ஐந்து வண்ணங்களும் உனக்குள் ஊடுருவி ஒரு புள்ளியில் சந்திப்பதாகக் கற்பனை செய்து கொள்.

எப்படி இருந்தாலும் இந்த ஐந்து வண்ணங்களும் ஒரு புள்ளியில் சந்திக்கும் : இந்த முழு உலகமும் கரைந்து போகும். உனது கற்பனையில் வெறும் ஐந்து வண்ணங்களே உள்ளன – மயிலின் விரிந்த தோகையில் உள்ளதைப் போல – வெளி முழுவதும் பரந்து விரிந்து உனக்குள் ஆழமாகச் சென்று ஒரு புள்ளியில் சந்திக்கின்றன. எந்தப் புள்ளியானாலும் சரிதான். ஆனால் ஹரா மிகச் சிறந்தது. அவை உனது நாபியில் சந்திப்ப தாக நினைத்துக் கொள் – முழு உலகமும் வண்ணங்களாக மாறி விட்டது. மேலும் அந்த வண்ணங்கள் உனது நாபியில் சந்திக் கின்றன. அந்தப் புள்ளியைப் பார், அந்தப் புள்ளியில் கவனத்தைக் குவி, மேலும் அந்தப் புள்ளி கரைந்து போகும்வரை அதன்மேல் கவனத்தைக் குவித்து வை. நீ அந்தப் புள்ளியின் மேல் கவனத்தைக் குவித்தால் அது கரைந்து போகும். ஏனெனில்

அது வெறும் கற்பனை. நினைவில் கொள், நாம் செய்வது அனைத்தும் கற்பனைதான். நீ அதன் மேல் கவனத்தைக் குவித்தால் அது கரைந்து போகும். அப்படி அந்தப் புள்ளி கரைந்து விடும்போது நீ உனது மையத்திடம் வீசப்படுகிறாய்.

உலகம் கரைந்துவிட்டது. உனக்கு எந்த உலகமும் கிடையாது. இந்தத் தியானத்தில் வெறும் வண்ணங்கள் மட்டுமே உண்டு. நீ முழு உலகத்தையும் மறந்து விடுகிறாய்; நீ எல்லாப் பொருள்களையும் மறந்து விடுகிறாய். நீ ஐந்து வண்ணங்களை மட்டுமே தேர்ந்தெடுத்திருக்கிறாய். ஏதாவது ஐந்து வண்ணங் களைத் தேர்ந்தெடு. இது மிகவும் கூர்மையான கண்களையுடைய வண்ணங்களைப் பற்றிய மிகவும் ஆழமான உணர்வுடைய குறிப்பிட்ட சிலருக்கே ஆனது. இந்தத் தியானம் எல்லோருக்கும் உதவி புரியாது. உனக்கு ஒரு வண்ணம் தீட்டுபவனின் கண்கள், வண்ணங்களைப் பற்றிய உணர்வுத் தன்மை இல்லாவிடில், உன்னால் வண்ணங்களைக் கற்பனை செய்ய முடியாவிட்டால் இது மிகவும் கடினம்.

உனது கனவுகள் நிறமற்று இருப்பதை நீ எப்போதாவது கவனித்திருக்கிறாயா? நூற்றில் ஒருவர் மட்டுமே கனவில் நிறங் களைக் காணக்கூடிய திறனுள்ளவர். நீ வெறும் கருப்பு வெள்ளை யையே பார்க்கிறாய். ஏன்? இந்த முழு உலகமும் நிறமுள்ளதாய் இருக்கிறது. ஆனால் உன் கனவுகள் நிறமற்றதாய் இருக்கின்றன. உங்களில் யாருக்காவது தனது கனவுகள் நிறத்தோடு இருப்பது நினைவுக்கு வந்தால், இந்தத் தியானம் அவருக்கு உரியது. யாராவது ஒருவர் ஒரு சில நேரங்களிலாவது அவரது கனவு களில் நிறங்களைப் பார்க்க முடிந்தால் இந்தத் தியானம் அவர்களுக்கானது.

வண்ணங்களைப் பற்றிய உணர்வு இல்லாத ஒருவரிடம், ''முழு வெளியும் வண்ணங்களால் நிறைந்திருப்பதாகக் கற்பனை செய்து கொள்'' என்று நீ சொன்னால் அவரால் அப்படிக்

கற்பனை செய்துகொள்ள இயலாது. அவர் அப்படிக் கற்பனை செய்துகொள்ள முயற்சித்தாலும் கூட, அவர் சிவப்பு என்று நினைத்தால், அவர் சிவப்பு என்ற சொல்லையே பார்ப்பார். அவர் அந்த வண்ணத்தைப் பார்க்க மாட்டார். அவர் பச்சை என்று சொல்லும் போது பச்சை என்ற வார்த்தையே அங்கிருக்கும். பச்சை – தன்மை அங்கிருக்காது.

ஆகவே உனக்கு நிறத்தைப் பற்றிய ஆழமான உணர்வு இருந்தால், அப்போது இந்த முறையை முயற்சி செய். ஐந்து நிறங்கள் அங்குள்ளன. இந்த முழு உலகமும் வெறும் நிறங்களே. மேலும் இந்த ஐந்து நிறங்களும் உனக்குள் சந்திக்கின்றன. உனக்குள் எங்கோ மிக ஆழத்தில் இந்த ஐந்து நிறங்களும் சந்திக்கின்றன. அந்தப் புள்ளியில் கவனத்தைக் குவி, அதன் மேல் கவனத்தைக் குவித்துக்கொண்டே போ. அதிலிருந்து விலகாதே; அதிலேயே இரு. மனதை அனுமதிக்காதே. பச்சை சிவப்பு மஞ்சள் மற்றும் நிற ்களைப் பற்றி யோசிக்க முயற்சி செய்யாதே – யோசிக்காதே. உனக்குள் அவை சந்திப்பதை மட்டும் பார். அவைகளைப் பற்றி யோசிக்காதே! நீ யோசித்தால் மனம் நகர்ந்து விடுகிறது. உனக்குள் சந்திக்கும் நிறங்களால் நிறைந்து இரு, பிறகு சந்திக்கும் புள்ளியில் கவனத்தைக் குவி. யோசிக்காதே! கவனத்தைக் குவிப்பது யோசிப்பதல்ல; அது சிந்திப்பதல்ல.

நீ உண்மையாகவே வண்ணங்களால் நிறைந்து நீ ஒரு வானவில்லைப் போல மாறிவிட்டால் ஒரு மயிலைப் போல, மேலும் முழு வெளியும் வண்ணங்களால் நிறைந்ததாக மாறி விட்டால், அது உனக்கு ஆழமான அழகுணர்ச்சியைக் கொடுக்கும். ஆனால் இதைப் பற்றி யோசிக்காதே; இது அழகாயிருக்கிறது என்று சொல்லாதே. யோசனைக்கு நகராதே. இந்த வண்ணங்களெல்லாம் சந்திக்கும் புள்ளியின் மேல் கவனத்தைக் குவி, அதன் மேல் தொடர்ந்து கவனத்தைக் குவித்துக் கொண்டேயிரு. அது மறைந்து போகும், அது கரைந்து போகும். ஏனெனில் அது வெறும் கற்பனை. மேலும் நீ

கவனத்தைக் குவிப்பதில் அதிக சக்தி கொடுக்கும்போது, கற்பனை அங்கு இருக்க முடியாது, அது கரைந்து போகும்.

இந்த உலகம் ஏற்கனவே கரைந்துவிட்டது, வெறும் வண்ணங்களே அங்கு உள்ளன. இந்த வண்ணங்கள் உனது கற்பனை. இந்தக் கற்பனை வண்ணங்கள் ஒரு புள்ளியில் சந்திக் கின்றன. அந்தப் புள்ளி, அதுவும் ஒரு கற்பனைதான். அது இப்போது ஆழமாகக் கவனத்தைக் குவிப்பதால் கரைந்து விடுகிறது. இப்போது நீ எங்கே இருக்கிறாய்? இப்போது நீ எங்கே இருப்பாய்? நீ உனது மையத்திற்கு வீசப்படுவாய்.

கற்பனையின் மூலம் பொருட்கள் கரைந்து விட்டன. இப்போது கவனத்தைக் குவிப்பதன் மூலம் கற்பனை கரைந்து விட்டது. நீ மட்டுமே தனியாக, ஒரு அகமாக விடப்பட்டுள்ளாய். புற உலகம் கரைந்து விட்டது. மன உலகமும் கரைந்து விட்டது. நீ வெறும் தூய்மையான தன்னுணர்வாக அங்கு இருக்கிறாய்.

இதனால்தான் இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''வெளியிடத் தில் அல்லது சுவரில் உள்ள எந்த ஒரு புள்ளியிலும்....'' இது உதவும். உன்னால் நிறங்களைக் கற்பனை செய்ய முடியா விட்டால் சுவரின் மேல் உள்ள ஏதாவது ஒரு புள்ளி உதவ முடியும். கவனத்தைக் குவிப்பதற்காக மட்டும் ஏதாவது ஒரு பொருளை எடுத்துக் கொள். அது உள்ளே இருப்பதாக இருந்தால் மிகவும் நல்லது. ஆனால் மறுபடியும், இரண்டு விதமான குணாதிசயம் உள்ளவர்கள் இருக்கிறார்கள். உள்முகமானவர் களுக்கு, எல்லா நிறங்களும் உள்ளுக்குள் சந்திப்பதாக நினைத்துப் பார்ப்பது சுலபம். ஆனால் உள்ளே எதையும் நினைத்துப் பார்க்க முடியாத வெளிமுகமானவர்கள் உள்ளனர். அவர்கள் வெளியேதான் கற்பனை செய்ய முடியும். அவர்கள் மனம் வெளியே மட்டும் தான் நகரும்; அவர்களால் உள்ளே நகர முடியாது. அவர்களுக்கு உட்புறத் தன்மை என்பது போல எதுவும் கிடையாது.

ஆங்கிலத் தத்துவ அறிஞர் டேவிட் ஹியூம் சொன்னார், ''நான் எப்பொழுதும் உள்ளே போனாலும் நான் ஒருபோதும் எந்த சுயத்தையும் பார்ப்பதில்லை. நான் சந்திப்பதெல்லாம் வெளி உலகத்தின் பிரதிபலிப்புகளை மட்டுமே – ஒரு எண்ணம், ஏதோ ஒரு உணர்ச்சி, ஏதோ ஒரு உணர்வு. நான் ஒருபோதும் ஒரு உள் தன்மையைச் சந்திக்கவில்லை, நான் வெளி உலகம் உள்ளே பிரதிபலிப்பதையே பார்க்கிறேன்.'' இது வெளிமுகமான மனதிற்குச் சிறந்த உதாரணம், மேலும் டேவிட் ஹியகூம் மிகவும் வெளிமுகமான மனம் கொண்டவர்களில் ஒருவர்.

ஆகவே உனக்குள் எதையும் நீ உணர முடியவில்லையென்றால் உனது மனம், ''இந்த உள்தன்மை என்பதன் அர்த்தம் என்ன? எப்படி உள்ளே போவது?'' என்று கேட்டால், அப்போது நீ ஒரு வெளிமுகமானவன். ஆகவே கற்பனையைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக சுவரின் மேலுள்ள எந்தப் புள்ளியையாவது முயற்சி செய். என்னிடம் வந்து எப்படி உள்ளே போவது என்று கேட்பவர்கள் இருக்கிறார்கள். அது ஒரு பிரச்சனை, ஏனெனில் நீ வெளியே போகும் தன்மையை மட்டுமே அறிவாய் என்றால், நீ வெளிமுகமாக நகர்வுகளை மட்டுமே அறிவாய் என்றால், எப்படி உள்ளே போவது என்பதைக் கற்பனை செய்வது மிகவும் கடினமே.

நீ ஒரு வெளிமுகமானவன் என்றால் அப்போது இந்தப் புள்ளியை உள்ளே முயற்சிக்காதே. வெளியே முயற்சி செய். விளைவு ஒன்றாகத்தான் இருக்கும். சுவற்றின் மேல் ஒரு புள்ளி வை. அதன் மீது கவனத்தைக் குவி. இப்போது நீ அதன் மீது திறந்த கண்களோடு கவனத்தைக் குவிக்க வேண்டும். நீ உள்ளே ஒரு மையத்தை, உள்ளே ஒரு புள்ளியை உருவாக்கிக் கொண்டால் அப்போது நீ மூடிய கண்களுடன் கவனத்தைக் குவிக்க வேண்டும்.

சுவற்றின் மேல் ஒரு புள்ளி வை. அதன் மேல் கவனத்தைக் குவி. உண்மையான விஷயம் கவனத்தைக் குவிப்பதால்

நிகழ்கிறது, புள்ளியினால் அல்ல. அது உள்ளேயா, அல்லது வெளியேயா என்பது முக்கியமற்றது. நிகழ்வது உன்னைச் சார்ந்தே உள்ளது. நீ வெளியிலுள்ள சுவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தால் அதன் மேல் கவனத்தைக் குவித்திருந்தால் அப்போது அந்தப் புள்ளி கரைந்து போகும்வரை தொடர்ந்து கவனத்தை அதன்மேல் குவித்துக் கொண்டேயிரு. இதைக் குறித்துக்கொள்: அந்தப் புள்ளி கரையும்வரை! உனது கண்களை இமைக்காதே! ஏனெனில் இமைப்பது மனம். மறுபடியும் நகர்வதற்கு இடம் கொடுக்கிறது. இமைக்காதே, ஏனெனில் இமைக்கும் பொழுது மனம் யோசிக்கத் துவங்கும். இமைப்பது ஒரு இடைவெளியை ஏற்படுத்துகிறது, அப்போது கவனத்தின் குவிப்பு சிதறி விடுகிறது. ஆகவே இமைக்கக்கூடாது.

முழு மனித குல வரலாற்றிலேயே மிகப் பெரும் ஞானகுருகளில் ஒருவராக, போதி தர்மாவைப் பற்றி நீ கேள்விப் பட்டிருக்கக்கூடும். அவரைப் பற்றி ஒரு மிக அழகான கதை சொல்லப்படுகிறது.

அவர் ஏதோ ஒன்றின் மேல், வெளியிலுள்ள ஏதோ ஒன்றின்மேல் கவனத்தைக் குவித்துக் கொண்டிருந்தார். அப்போது கண்கள் இமைக்கும். கவனக்குவிப்பு சிதறிப் போகும். எனவே அவர் அவருடைய இமைகளைப் பிய்த்து எறிந்துவிட்டார். அழகான கதை இதுதான்: அவர் அவரது இமைகளைப் பிய்த்துவிட்டார். அவைகளைத் தூர எறிந்துவிட்டார், பிறகு கவனத்தைக் குவிப்பதில் ஈடுபட்டார். சில வாரங்களுக்குப் பிறகு, அவரது இமைகளை அவர் வீசிய இடத்தில் சில செடிகள் வளர்ந்து கொண்டிருப்பதை அவர் பார்த்தார். இது சைனாவின் ஒரு மலையின் மேல், 'டா' என்ற பெயர் கொண்ட மலையின் மேல் நடந்தது. அதனால்தான் 'டீ' என்ற பெயர் வந்தது. அங்கு வளர்ந்து கொண்டிருந்த அந்தச் செடிகளே டீ ஆகியது. மேலும் அதனால்தான் டீ, நீ விழித்திருப்பதற்கு உதவுகிறது.

உனது கண்கள் இமைக்கும்பொழுது, நீ தூக்கத்திற்குள் விழும்பொழுது, ஒரு கோப்பை டீ குடி. அவை போதிதர்மாவின் இமைகள். அதனால்தான் ஜென் துறவிகள் டீயை புனிதமானதாகக் கருதுகிறார்கள். டீ ஒரு சாதாரண விஷயம் அல்ல, அது புனிதமானது - போதி தர்மாவின் இமைகள் அவை. ஜப்பானில் அவர்களுக்கு டீ சம்பிரதாயம் உண்டு. ஒவ்வொரு வீட்டிலும் ஒரு டீ அறை இருக்கும். மேலும் அந்த டீ மதத்தன்மை கொண்ட சம்பிரதாயத்தோடு பரிமாறப்படும்; அது புனிதமானது. டீ மிகவும் தியானத் தன்மையோடு பருகப்பட வேண்டியது.

ஜப்பான் டீ குடிப்பதைச் சுற்றி அழகான சம்பிரதாயங்களை ஏற்படுத்தி உள்ளது. அவர்கள் டீ அறைக்குள் ஒரு கோவிலுக்குள் நுழைவதைப் போல நுழைவார்கள். பிறகு டீ தயாரிக்கப்படும். எல்லோரும் அமைதியாக அமர்ந்து கெட்டிலில் கொதிக்கும் சத்தத்தைக் கேட்டுக் கொண்டிருப்பார்கள். அங்கு நீராவி வருவதை, அந்தச் சத்தத்தை எல்லோரும் கேட்டுக் கொண்டிருப் பார்கள். அது சாதாரண விஷயம் அல்ல.... போதி தர்மாவின் இமைகள். போதி தர்மா திறந்த கண்களுடன் விழித்திருக்க முயற்சி செய்த காரணத்தால்தான், டீ பிறந்தது. மேலும் இந்தக் கதை டா மலையின் மேல் நிகழ்ந்த காரணத்தால் அது டீ என்று அழைக்கப்படுகிறது. உண்மையோ அல்லது உண்மையில்லையோ, இந்தச் சிறு கதை மிகவும் அழகானது.

நீ வெளிப்புறத்தில் கவனத்தைக் குவித்தால், அப்போது இமைக்காத கண்கள் வேண்டும், உனக்கு இமைகளே இல்லாமல் போனதுபோல. இதுதான் இமைகளைத் தூர வீசி எறிந்ததன் அர்த்தம். உனக்குக் கண்கள் மட்டுமே உள்ளன, அவைகளை மூடுவதற்கு இமைகள் இல்லை. அந்தப் புள்ளி கரைந்து போகும் வரை கவனத்தைக் குவித்துக் கொண்டே இருக்க வேண்டும். நீ விடாமல், நீ மனம் அசைவதை அனுமதிக்காமல் வற்புறுத்திக் கொண்டே இருந்தால் அந்தப் புள்ளி கரைந்து விடுகிறது. அப்படி

அந்தப் புள்ளி கரைகையில், நீ அந்தப் புள்ளியின் மீதே கவனத்தைக் குவித்து வைத்திருந்தால், அதோடு இந்த உலகத்தில் உனக்கு அந்த ஒரு புள்ளி மட்டுமே இருந்தது என்றால், முழு உலகமும் ஏற்கனவே கரைந்து போயிருந்தால், இந்த ஒரு புள்ளி மட்டுமே இருந்து அதுவும் இப்போது கரைந்து போயிருந்தால், இந்த நிலையில் தன்னுணர்வு எங்கும் நகர முடியாது. நகர்வதற்கு அங்கு எந்தப் பொருளும் இல்லை – எல்லாப் பரிமாணங்களும் மூடப்பட்டு விட்டன. மனம் அதனிடமே வீசப்பட்டு விட்டது, தன்னுணர்வு அதனிடமே வீசப்பட்டு விட்டது. இப்போது நீ மையத்தில் நுழைகிறாய்.

எனவே உள்ளேயோ அல்லது வெளியேயோ, உனக்குள் அல்லது உனக்கு வெளியே, எப்படியிருந்தாலும், அந்தப் புள்ளி மறையும் வரை கவனத்தைக் குவி. இந்தப் புள்ளி இரண்டு காரணங்களால் கரைந்து போகும். அது உனக்குள் இருந்தால், அது கற்பனையானது – அது கரைந்து போகும். அது வெளியே இருந்தால் அது கற்பனையல்ல, அது நிஜமானது. நீ சுவற்றின் மேல் ஒரு புள்ளியை வைக்கிறாய், பிறகு அதன் மேல் கவனத்தைக் குவிக்கிறாய். பின் இந்தப் புள்ளி ஏன் கரைய வேண்டும்? அது உள்ளே கரைந்து போவதை ஒருவன் புரிந்து கொள்ள முடியும் – அது அங்கு இல்லவே இல்லை; நீ செய்த வெறும் கற்பனை அது – ஆனால் சுவற்றின் மேல் அது இருக்கிறது, பின் ஏன் அது கரைய வேண்டும்?

அது ஒரு குறிப்பிட்ட காரணத்தினால் கரைகிறது. நீ ஒரு புள்ளியின் மேல் கவனத்தைக் குவித்தால், அந்தப் புள்ளி உண்மையில் கரைந்துவிடப் போவதில்லை, மனம் கரைந்து விடுகிறது. நீ வெளியே உள்ள ஒரு புள்ளியின் மேல் கவனத்தைக் குவித்தால், மனம் நகர முடியாது. நகராமல் அதனால் வாழ முடியாது, அது நின்று விடுகிறது, அது இறந்து விடுகிறது. மனம் நின்று விடும் பொழுது உன்னால் வெளியே உள்ள எதனோடும் தொடர்புபடுத்திக் கொள்ள முடியாது. திடீரென எல்லாப் பாலங்

களும் உடைந்து விட்டன. ஏனெனில் மனமே பாலமாக இருக்கிறது. நீ சுவற்றின் மேலுள்ள ஒரு புள்ளியில் கவனத்தைக் குவித்துக் கொண்டிருக்கும் போது, தொடர்ந்து உனது மனம் உன்னிடமிருந்து அந்தப் புள்ளிக்கு என்று தாவிக் கொண்டே இருக்கும். இடைவிடாத இந்தத் தாவல் இருந்து கொண்டே இருக்கும்; அங்கே ஒரு செயல்பாடு இருக்கிறது.

உனது மனம் கரைந்து விடும் போது உன்னால் அந்தப் புள்ளியைப் பார்க்க முடியாது. ஏனெனில் உண்மையில் நீ அந்தப் புள்ளியை உனது கண்களின் மூலமாக ஒருபோதும் பார்ப்ப தில்லை; நீ அந்தப் புள்ளியை மனதின் மூலமாக, கண்களைப் பயன்படுத்திப் பார்க்கிறாய். மனம் அங்கு இல்லையென்றால், கண்கள் செயல்பட முடியாது. நீ சுவற்றை விழித்துப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். ஆனால் அந்தப் புள்ளியைப் பார்க்க முடியாது. மனம் அங்கு இல்லை; பாலம் உடைக்கப்பட்டு விட்டது. அந்தப் புள்ளி நிஜமானது – அது அங்கே இருக்கிறது. மனம் திரும்பி வரும்போது நீ அதைத் திரும்பவும் பார்க்க முடியும்; அது அங்கே இருக்கிறது. ஆனால் இப்பொழுது உன்னால் அதைப் பார்க்க முடியாது. மேலும் நீ பார்க்க முடியாத போது, உன்னால் வெளியே நகர முடியாது. திடீரென நீ உனது மையத்தில் இருப்பாய்.

இந்த மையத்தில் இருப்பது உனது பிரபஞ்ச இருப்பின் வேர்களைப் பற்றிய விழிப்புணர்வை உன்னிடம் உண்டாக்கும். நீ எங்கிருந்து பிரபஞ்ச இருப்புடன் இணைந்துள்ளாய் என்பதை உன்னால் அறிய முடியும். உன்னில், முழுப் பிரபஞ்ச இருப்புடன் தொடர்பு கொண்ட ஒரு புள்ளி இருக்கிறது, அது பிரபஞ்ச இருப்புடன் ஒன்றியது. ஒரு முறை நீ இந்த மையத்தை அறிந்து விட்டால், நீ வீட்டிலிருக்கிறாய் என்பதை நீ அறிவாய். இந்த உலகம் அன்னியமானது அல்ல. நீ அன்னியமானவன் அல்ல. நீ இங்கிருப்பவன், நீ இந்த உலகத்தைச் சேர்ந்தவன். எந்தப் போராட்டத்திற்கும் அவசியம் இல்லை. எந்தச்

சண்டையும் அங்கு இல்லை. உனக்கும் பிரபஞ்ச இருப்புக்கும் இடையே பகையான உறவு எதுவும் கிடையாது. பிரபஞ்ச இருப்பு உனது அன்னையாக மாறிவிடுகிறது.

பிரபஞ்ச இருப்பு உன்னிடம் வந்துள்ளது. மேலும் அதுவே உன் மூலமாக விழிப்புணர்வு அடைகிறது. பிரபஞ்ச இருப்பே உன் மூலமாகப் பூத்துள்ளது. இந்த உணர்வு இந்த அறிதல் இந்த நிகழ்வு.... பிறகு அங்கு மறுபடியும் வேதனை என்பது இருக்கவே முடியாது.

பிறகு பேரானந்தம் என்பது ஒரு விஷயம் அல்ல; அது ஏதோ நிகழ்வதும் பிறகு போய்விடுவதும் அல்ல. பிறகு பேரானந்தத் தன்மை என்பது உனது இயற்கை ஆகிவிடுகிறது. ஒருவன் தனது மையத்தில் வேர் கொள்ளும் பொழுது பேரானந்தத் தன்மை இயற்கையானதாக ஆகிவிடுகிறது. ஒருவன் பேரானந்தனாக ஆகிவிடுகிறான். மேலும் மெதுமெதுவாக அவன் பேரானந்தமாக இருப்பதைப் பற்றிய விழிப்புணர்வு கூடப் போய் விடுகிறது, ஏனெனில் விழிப்புணர்வுக்கு முரண்பாடு தேவையில்லை. நீ துன்பத்தில் இருந்தால், அப்போது நீ பேரானந்தத்தில் இருப்பதை உன்னால் உணர முடியும். துன்பம் அங்கு இல்லாமல் போய் விடும்போது மெதுமெதுவாக நீ துன்பத்தை முற்றிலும் மறந்து விடுகிறாய். அப்போது நீ உனது பேரானந்தத்தையும் மறந்து விடுகிறாய். நீ எப்பொழுது பேரானந்தத்தையும் மறந்துவிட முடிகிறதோ அப்பொழுது மட்டுமே நீ உண்மையாகப் பேரானந்தத்தில் இருப்பவன் ஆகிறாய். அப்போது அது இயற்கையானது ஆகிறது. நட்சத்திரங்கள் ஒளி வீசுவது போல, நதிகள் ஓடுவது போல, நீ பேரானந்தமாய் இருக்கிறாய். உனது முழு இருப்பும் பேரானந்தமாய் இருக்கிறது. இது ஏதோ உனக்கு நடந்தது அல்ல, இப்போது இதுதான் நீ.

இரண்டாவது சூத்திரத்தில், இயங்கும் விதம் அதுவேதான், விஞ்ஞான அடிப்படை அதுவேதான், வேலை செய்யும் விதமும் அதுவேதான் :

**14. உனது விழிப்புணர்வை உன்னுடைய முதுகுத் தண்டின் மேல் வை.**

''உன்னுடைய முதுகுத் தண்டின் மையத்திலிருக்கும், தாமரை இழை போன்ற மென்மையான நரம்பின் மேல் உனது முழுக் கவனத்தையும் வை. – இப்படி இருப்பதில் மாறுவாயாக.''

இந்தச் சூத்திரத்திற்கு, இந்தத் தியான யுக்திக்கு, ஒருவர் தனது கண்களை மூடிக் கொண்டு தனது முதுகுத் தண்டை உருவகப்படுத்திக் கொள்ள வேண்டும். இதற்கு முன் உடலியல் புத்தகம் எதிலாவது உடம்பின் அமைப்பைப் பார்த்துக் கொள்வது நல்லது, அல்லது ஏதாவது மருத்துவக் கல்லூரிக்கோ அல்லது மருத்துவமனைக்கோ சென்று உடலின் அமைப்பைப் பார்த்துக் கொள்ளலாம். பிறகு உனது கண்களை மூடிக் கொண்டு உனது முதுகுத் தண்டை உருவகப்படுத்து. உனது முதுகுத் தண்டு நிமிர்ந்து நேராக இருக்கட்டும். அதை உருவகப்படுத்து, அதைப் பார், அதன் நடுவில் ஒரு நரம்பை உருவகப்படுத்திக் கொள், அது தாமரையின் இழை போல மென்மையாக இருக்கட்டும், அது உனது முதுகுத்தண்டின் மையத்தில் செல்வதாக இருக்கட்டும். ''இப்படி இருப்பதில் மாறுவாயாக.''

முதுகுத்தண்டின் மேல் கவனத்தைக் குவி, பின் அதோடு அதன் நடுவில் ஓடும் ஒரு இழையின் மேலும் – தாமரையின் இழை போன்ற மென்மையான நரம்பு ஒன்று அதில் ஓடுகிறது – கவனத்தைக் குவி. இதன் மேல் கவனத்தைக் குவி, இந்தக் கவனத்தைக் குவித்தலே உன்னை உனது மையத்திடம் வீசும். ஏன்?

உனது முழு உடலமைப்பின் அஸ்திவாரமாக இருப்பது முதுகுத்தண்டு. எல்லாமும் அதனுடன் இணைந்திருக்கிறது. உண்மையில் உனது மூளை என்பது உன்னுடைய முதுகுத் தண்டின் ஒரு முனையே அன்றி வேறொன்றுமில்லை.

உடலியலாளர்கள் சொல்கிறார்கள், மூளை என்பது முதுகுத் தண்டின் வளர்ச்சியே அன்றி வேறு ஒன்றுமில்லை; உண்மையில் உனது முதுகுத்தண்டின் வளர்ச்சியே உனது மூளை.

உனது முதுகுத்தண்டு உன்னுடைய முழு உடலோடும் இணைந்திருக்கிறது – எல்லாமும் அதோடு இணைந்திருக்கிறது. அதனால்தான் அது முதுகுத்தண்டு, அடிப்படையானது என்று அழைக்கப்படுகிறது. இந்த முதுகுத்தண்டில் உண்மையாக ஒரு இழை போன்ற ஒன்று இருக்கிறது, ஆனால் உடலியலாளர்கள் அதைப் பற்றி எதுவும் சொல்ல மாட்டார்கள். ஏனெனில் அது பருப்பொருள் அல்ல. இந்த முதுகுத்தண்டில், அதன் மையத்தில், ஒரு வெள்ளி நரம்பு இருக்கிறது – ஒரு மிகவும் மென்மையான நரம்பு. உடலியல் ரீதியாக உண்மையில் இது ஒரு நரம்பு அல்ல. நீ இதைப் பார்க்கவோ, அறுவை சிகிச்சை செய்யவோ முடியாது; அது பார்ப்பதற்கு அங்கு இருக்காது.

ஆனால் ஆழமான தியானத்தில் அதைப் பார்க்க முடிகிறது. அது அங்கு இருக்கிறது; அது பொருளால் ஆனது அல்ல. அது சக்தி, அது பொருளல்ல. மேலும் உண்மையில் அந்த உன்னுடைய முதுகுத்தண்டில் இருக்கும் சக்திக் கம்பியே உனது வாழ்வு. அதன் மூலமே நீ பார்க்க முடியாத பிரபஞ்ச இருப்போடு தொடர்பு கொண்டிருக்கிறாய், மேலும் அதன் மூலமே நீ பார்க்கக் கூடியவைகளோடு நீ தொடர்பு கொண்டிருக்கிறாய். அதுவே பார்க்க முடியாததற்கும் பார்ப்பதற்கும் இடையேயான பாலமாக இருக்கிறது. அந்த இழை மூலமாக நீ உடம்புடன் தொடர்பு கொண்டுள்ளாய், மேலும் அந்த இழை மூலமாகவே உனது ஆன்மாவுடன் நீ தொடர்பு கொண்டுள்ளாய்.

முதலில், முதுகுத்தண்டை உருவகப்படுத்து. முதலில் நீ மிகவும் சம்பந்தமில்லாமல் உணர்வாய், உன்னால் அதை உருவகப்படுத்திக் கொள்ள முடியும். ஆனால் ஒரு கற்பனையாக இருக்கும். மேலும் நீ அதைத் தொடர்ந்து செய்து கொண்டே

போனால், பிறகு அது வெறும் உனது கற்பனையாக இருக்காது. உன்னுடைய முதுகுத் தண்டைப் பார்க்கும் திறனை நீ பெற்று விட்டாய்.

இந்த யுக்தியைக் கொண்டு ஒரு சாதகரிடம் நான் வேலை செய்து வருகிறேன். நான் அவரிடம் உடலமைப்பின் ஒரு படத்தைக் கொடுத்து அதன்மேல் கவனத்தைக் குவிக்கச் சொன்னேன். இதன் மூலம் அவர் முதுகுத்தண்டை உள்ளே எப்படி உருவகப்படுத்திக் கொள்வது என்பதை உணர்ந்து கொள்ள ஆரம்பிக்கலாம். பிறகு அவர் ஆரம்பித்தார். ஒரு வாரத்திற்குள் அவர் வந்து சொன்னார், ''இது மிகவும் சம்பந்த மில்லாமல் இருக்கிறது. நான் நீங்கள் என்னிடம் கொடுத்த படத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முயன்றேன், ஆனால் பல தடவை அந்தப் படம் மறைந்து அதனிடத்தில் வேறொரு முதுகுத் தண்டை நான் பார்த்தேன். அது நீங்கள் என்னிடம் கொடுத்த படத்திலுள்ளதற்கு மிகச் சரியாகப் பொருந்துவதாக இல்லை.''

நான் அவரிடம் சொன்னேன், ''இப்போது நீ சரியான பாதையில் போகிறாய். அந்தப் படத்தை முற்றிலுமாக மறந்து விட்டு உனக்குத் தெரிகின்ற முதுகுத்தண்டைப் பார்த்துக் கொண்டே இரு.''

மனிதன் தனது உடம்பில் அமைப்பை உள்ளேயிருந்து பார்க்க முடியும். நாம் அதை முயற்சிப்பதில்லை. ஏனெனில் அது மிக மிக அச்சமூட்டுவதாக, விரும்பத் தகாததாக இருக்கிறது; ஏனெனில் உனது எலும்புகள், இரத்தம், நாடிகள் எல்லாவற்றை யும் பார்க்கும் பொழுது நீ பயந்து விடுகிறாய். ஆகவே உண்மையில், நாம் உள்ளிருந்து பார்ப்பதை நமது மனத்தில் முற்றிலுமாக அடைத்துவிட்டோம். நாம் உடலைப் பார்ப்பது போல. இது நீ இந்த அறையை விட்டு வெளியே போய், பிறகு இதைப் பார்ப்பது – அப்போது வெளிப்புறச் சுவர்களையே நீ அறிவாய். உள்ளே வந்து வீட்டைப் பார் – அப்போது நீ உட்புறச்

சுவர்களைப் பார்க்க முடியும். நீ உனது உடம்பை வெளியி லிருந்து பார்க்கிறாய், நீ உனது உடம்பை வேறு யாரோ பார்ப்பது போலப் பார்க்கிறாய். நீ உனது உடம்பை உள்ளேயிருந்து பார்த்ததில்லை. அதற்கு நமக்குத் திறனிருக்கிறது, ஆனால் இந்தப் பயத்தால் இது ஏதோவொரு புதிய விஷயமாக மாறிவிட்டது.

இந்திய யோகா புத்தகங்கள் உடலைப் பற்றிப் பல விஷயங்களைச் சொல்கின்றன. மேலும் இவை மிகச் சரியாக இருப்பதாக இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சியில் தெரிய வந்துள்ளது. இது எப்படி என்பதை விஞ்ஞானத்தால் விளக்க முடியவில்லை. எப்படி அவர்களுக்குத் தெரிய வந்தது? அறுவை சிகிச்சை முறையும், உடலின் உட்புறத்தைப் பற்றிய அறிவும் மிகச் சமீப காலத்திய வளர்ச்சிகள். எப்படி அவர்களால் எல்லா நரம்புகளையும், எல்லா மையங்களையும், எல்லா உன் உடலமைப்புகளையும் அறிய முடிந்தது? இவர்கள் பேசிக் கொண்டிருக்கும், இவர்கள் வேலை செய்து கொண்டிருக்கும் சமீபத்திய கண்டுபிடிப்புகள் பற்றிக் கூட அவர்களுக்குத் தெரிந்திருந்தது. யோகா எப்பொழுதுமே உடம்பின் எல்லா அடிப்படைகளையும், முக்கியமான விஷயங்களையும் உணர்ந் திருக்கிறது. ஆனால் அவர்கள் உடம்பைக் கூறுபோட்டுப் பார்க்கவில்லை, பின் எப்படி அவர்கள் அறிந்திருந்தார்கள்?

உண்மையில், உனது உடம்பைப் பார்ப்பதற்கு வேறொரு வழி இருக்கிறது – உள்ளேயிருந்து. நீ உனக்குள் கவனத்தைக் குவித்தால், திடீரென நீ உனது உடம்பை, உடம்பின் உட்புறக் கோட்டை, பார்க்க ஆரம்பிப்பாய். இது ஆழமாக உடலை அடிப்படை கொண்டவர்களுக்கு நல்லது. தன்னை ஒரு பொருளடிப்படையானவனாக உணர்பவர்களுக்கு, தான் உடம்பைத் தவிர வேறொன்றுமில்லை என்று உணர்பவர்களுக்கு, இந்த யுக்தி மிகவும் உதவும். நீ உன்னை உடம்பாக மட்டும் உணர்பவனாயிருந்தால், நீ 'சார்வாகா' அல்லது 'மார்க்ஸ்'ஐ நம்புபவனாக இருந்தால், நீ மனிதன் என்பவன் உடலைத் தவிர

வேறொன்றுமில்லை என்று நம்புபவனாக இருந்தால், இந்த யுக்தி உனக்கு மிகவும் உதவியாக இருக்கும். எனவே போய் மனிதனின் எலும்பு அமைப்பைப் பார்.

பழைய தந்த்ரா மற்றும் யோகா பள்ளிகளில் அவர்கள் பல எலும்புகளைப் பயன்படுத்தினர். இப்பொழுது கூட ஒரு தந்த்ரிக் எப்பொழுதும் சில எலும்புகளுடன், மனிதனின் மண்டை ஓட்டுடன் காணப்படுகிறான். உண்மையில் இது உள்ளேயிருந்து கவனத்தைக் குவிப்பதற்கு உதவுவதற்காகவே. முதலில் அவன் இந்த மண்டை ஓட்டின் மேல் கவனத்தைக் குவிக்கிறான், பிறகு தனது கண்களை மூடிக்கொண்டு உள்ளே அவனது மண்டை ஓட்டை உருவகப்படுத்த முயற்சி செய்கிறான். அவன் தொடர்ந்து வெளியுள்ள மண்டை ஓட்டை உள்ளே பார்க்க முயற்சி செய்கிறான். அப்போது மெதுமெதுவாக அவன் தன்னுடைய மண்டை ஓட்டை உணர ஆரம்பிக்கிறான். அவனது தன்னுணர்வு குவிய ஆரம்பிக்கிறது. இந்த வெளியிலுள்ள மண்டை ஓடு, அதன் மேல் செய்யும் கவனக்குவிப்பு, அதை உருவகப்படுத்திப் பார்ப்பது, இவை எல்லாமே உதவிகள்தான். ஒருமுறை நீ உனக்குள் கவனித்துவிட்டால், நீ உன்னுடைய கால் கட்டை விரலிலிருந்து தலை வரை நகர முடியும். நீ உள்ளுக்குள் நகர முடியும் – இது மிகப் பெரிய பேரண்டம். உன்னுடைய சிறிய உடம்பு மாபெரும் பேரண்டமாகும்.

இந்தச் சூத்திரம் முதுகுத் தண்டைப் பயன்படுத்துகிறது, ஏனெனில் முதுகுத் தண்டினுள் வாழ்வின் இழை இருக்கிறது. இதனால் தான் முதுகுத் தண்டு நேராக இருப்பது மிகவும் வலியுறுத்தப்படுகிறது. ஏனெனில் முதுகுத்தண்டு நேராக இல்லையென்றால், உன்னால் அந்த உள்ளேயிருக்கும் இழையைப் பார்க்க முடியாது. அது மிகவும் மென்மையானது, அது மிகவும் நுட்பமானது – அது மிகவும் சிறிதானது. அது ஒரு சக்தி ஓட்டம். ஆகவே முதுகுத் தண்டு நேராக, முற்றிலும் நேராக

இருந்தால் மட்டுமே நீ அந்த ஒருகண தரிசனத்தைப் பெற முடியும்.

ஆனால் நமது முதுகுத் தண்டுகள் நேராக இல்லை. இந்துக்கள் சிறு வயது முதற்கொண்டே எல்லோருடைய முதுகுத் தண்டையும் நேராக்க முயற்சி செய்தனர். அவர்கள் உட்காரும் முறை, தூங்கும் முறை, நடக்கும் முறை ஆகிய அனைத்துமே அடிப்படையில் முதுகுத் தண்டை நேராக வைத்திருப்பதற்கே ஆகும். முதுகுத் தண்டு நேராக இல்லையென்றால், பிறகு உன் ஆழத்தைக் காண்பது மிகவும் கடினம். அந்த ஆழத்திலுள்ள இழை மிகவும் மென்மையானது. மேலும் உண்மையில் அது ஒரு பருப்பொருளும் அல்ல. அது பொருள் அல்லாதது; அது ஒரு விசை. முதுகுத் தண்டு முற்றிலும் நேராக இருக்கும் பொழுது, அந்த இழை போன்ற சக்தியை சுலபமாகப் பார்க்க முடிகிறது.

''.....இப்படி இருப்பதில் மாறுவாயாக.'' ஒரு முறை நீ உணர முடிந்தால், கவனத்தைக் குவித்து அந்த இழையை உணர்ந்து விட்டால், நீ புதிய ஒளியால் நிரப்பப்படுவாய். அந்த ஒளி உன்னுடைய முதுகுத் தண்டிலிருந்து வரும். அது உனது உடல் முழுவதும் பரவும்; அது உனது உடலைத் தாண்டியும் போகக் கூடும். அது அப்படித் தாண்டிப் போகும்போது, 'அரா'வைப் பார்க்கலாம். ஒளி வட்டத்தைப் பார்க்கலாம்..

எல்லோருக்கும் அரா இருக்கிறது, ஆனால் சாதாரணமாக அவை நிழல்களாக, அவற்றில் எந்த வெளிச்சமும் இல்லாமல், உன்னைச் சூழ்ந்துள்ள வெறும் இருண்ட நிழல்களாக மட்டுமே உன்னுடைய அராக்கள் உள்ளன. அந்த அராக்கள் உன்னுடைய ஒவ்வொரு உணர்வு நிலையையும் பிரதிபலிக்கின்றன. நீ கோபமாய் இருந்தால், அப்போது உன்னுடைய அரா ரத்தத்தால் நிறைந்தது போல ஆகிறது; அவை சிவப்பால் நிறைந்து விடுகின்றன, கோபத்தின் வெளிப்பாடாய் இருக்கின்றன. நீ சோக மாக, சக்தியற்றவனாக, கிழானவனாக இருந்தால், அப்போது

உனது அரா இருண்ட இழைகளால் நிறைந்து இருக்கிறது, நீ சாவின் அருகில் இருப்பது போல – எல்லாம் இறந்து கனமாக.

இந்த முதுகுத்தண்டின் இழையை உணரும் பொழுது, உன்னுடைய அரா ஞான வெளிச்சம் பெறுகிறது. ஆகவே ஒரு புத்தர் ஒரு மகாவீரர் ஒரு கிருஷ்ணர் ஒரு கிறிஸ்து ஆகியோர் வெறும் அலங்காரத்திற்காக அராவோடு வரையப்படவில்லை, அந்த அராக்கள் இருக்கின்றன. உனது முதுகுத்தண்டு ஒளியை உமிழ ஆரம்பிக்கின்றது. உனக்குள் நீ ஞான ஒளியை அடைகிறாய் – உனது முழு உடம்பும் ஒளியால் ஆன உடம்பாக மாறுகிறது – அப்போது அது வெளியேயும் ஊடுருவுகிறது. ஆகவே உண்மையில் ஒரு புத்தருக்கு, ஞானமடைந்த எந்த ஒருவருக்கும் அவர் என்ன என்று யாரையும் கேட்க வேண்டிய அவசியம் இல்லை. அரா எல்லாவற்றையும் காட்டி விடுகிறது. எனவே யாராவது ஒருவர் ஞானமடையும்போது அது குருவிற்குத் தெரிந்து விடுகிறது. ஏனெனில் அரா எல்லாவற்றையும் வெளிப்படுத்தி விடுகிறது.

நான் உனக்கு ஒரு கதை சொல்கிறேன்.... ஈனோ, ஒரு சீன குரு, அவருடைய குருவின் கீழ் வேலை செய்து கொண் டிருந்தார். ஈனோ அவரது குருவிடம் போன பொழுது குரு சொன்னார், ''நீ எதற்காக இங்கு வந்தாய்? என்னிடம் வருவதற்கு உனக்கு எந்தத் தேவையும் இல்லை.'' ஈனோவால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஈனோ தான் இன்னும் ஏற்றுகொள்ளக் கூடிய அளவிற்குத் தயாராகவில்லை என்று நினைத்தார். ஆனால் குரு வேறு ஒன்றைப் பார்த்தார். குரு ஈனோவினுடைய வளர்ந்து கொண்டிருக்கும் அராவைப் பார்த்தார். அவர் இப்படிச் சொன்னார் : ''நீ என்னிடம் வராவிட்டாலும் கூட அது விரைவிலோ அல்லது தாமதமாகவோ, கண்டிப்பாக, எங்கிருந் தாலும் நிகழும். நீ ஏற்கனவே அதில் இருக்கிறாய், ஆகவே என்னிடம் வரவேண்டிய அவசியம் இல்லை.''

ஆனால் ஈனோ சொன்னார், ''என்னை நிராகரிக்காதீர்கள்.'' எனவே அந்தக் குரு அவரை ஏற்றுக் கொண்டு அவரிடம் அந்த மடத்தின் பின்புறமாகப் போகும்படி சொன்னார், அதாவது மடத்தின் சமையலறைக்குப் போகச் சொன்னார். அது ஐநூறு துறவிகள் உள்ள பெரிய மடாலயம். அந்தக் குரு ஈனோவிடம் சொன்னார், ''மடாலயத்தின் பின்புறமுள்ள சமையல் அறைக்குச் சென்று உதவி செய், மேலும் மறுபடியும் என்னிடம் வராதே. எப்பொழுது தேவைப்படுகிறதோ, அப்பொழுது நானே உன்னை அழைக்கிறேன்.''

ஈனோவிற்கு எந்தத் தியானமும் கொடுக்கப்படவில்லை. படிப்பதற்கு எந்தப் புனித நூலும், கற்றுக் கொள்ள அல்லது தியானிக்க எதுவும் கொடுக்கப்படவில்லை. அவருக்கு எதுவும் சொல்லித் தரப்படவில்லை, அவர் சமையல் அறைக்குத் தூக்கி அடிக்கப்பட்டார், அவ்வளவே. முழு மடாலயமும் வளர வேலை செய்து கொண்டிருக்கிறது. அங்குப் பண்டிதர்கள் மேதாவிகள் இருந்தார்கள், தியானம் செய்பவர்கள் இருந்தார்கள், யோகிகள் இருந்தார்கள், முழு மடாலயமும் பரபரப்பாக இருந்தது. எல்லோரும் தங்களுக்கான வேலை செய்து கொண் டிருந்தார்கள். ஆனால் இந்த ஈனோ மட்டும் அரிசியைச் சுத்தம் செய்து கொண்டு சமையல் அறையில் வேலை செய்து கொண் டிருந்தார்.

பன்னிரண்டு வருடங்கள் கழிந்தன. ஈனோ மறுபடியும் குருவின் முன் போகவில்லை. ஏனெனில் அது அனுமதிக்கப் படவில்லை. அவர் காத்திருந்தார், அவர் காத்திருந்தார், அவர் காத்திருந்தார்.... அவர் காத்துக் கொண்டே இருந்தார். அவர் ஒரு வெறும் வேலைக்காரனாகவே கருதப்பட்டார். படித்தவர்கள் வருவார்கள், தியானிப்பவர்கள் வருவார்கள். ஆனால் எவரும் இவரைச் சிறிது கூடக் கவனிக்க மாட்டார்கள். அந்த மடாலயத் தில் மிகப் பெரும் மேதைகள் இருந்தார்கள்.

பிறகு அந்தக் குரு தனது மரணம் நெருங்கி விட்டது என்று அறிவித்தார். ஆகவே இப்போது அவருடைய இடத்தில் செயல் படுவதற்கு யாராவது ஒருவரை நியமிக்க அவர் விரும்பினார். எனவே அவர் சொன்னார், ''தாங்கள் ஞானமடைந்தவர்கள் என்று தங்களை நினைப்பவர்கள் நான்கு வரிகள் உள்ள ஒரு சிறிய கவிதை புனைய வேண்டும். நீ அடைந்த அனைத்தையும் அந்த நான்கு வரிகளில் நீ சொல்ல வேண்டும். ஞானமடைந்ததை வெளிக்காட்டும் வரிகளாக எவை தெரிகிறதோ, எந்தக் கவிதையை நான் ஒத்துக் கொள்கிறேனோ, அதிலிருந்து நான் எனது வாரிசைத் தேர்ந்தெடுப்பேன்.''

மடாலயத்தில் ஒரு மாபெரும் மேதை இருந்தார், எல்லோருக்கும் அவரே வெற்றி பெறப் போகிறார் என்பது தெரியும். எனவே ஒருவரும் கவிதை எழுத முயற்சிக்கவில்லை. அவர் புனித நூல்களை மிகவும் அறிந்தவர், ஆகவே அவர் நான்கு வரிகளை இயற்றினார். அந்த நான்கு வரிகளும் கிட்டத்தட்ட இதைப் போல..... அதன் அர்த்தம் இதைப் போல..... ''மனம் ஒரு கண்ணாடியைப் போல, அதில் தூசு சேர்கிறது; தூசியைச் சுத்தம் செய், நீ ஞானம் பெற்றவன் ஆகிறாய்.''

ஆனால் அந்த மேதைக்கும் கூடப் பயமாக இருந்தது. ஏனெனில் குருவிற்குத் தெரியும். குருவிற்கு யார் ஞானமடைந் தவர்கள், யார் அடையாதவர்கள் என்பது ஏற்கனவே தெரியும். அவர் எழுதியது எல்லாம் மிகவும் அழகானது தான். அவை தான் எல்லாப் புனித நூல்களின் சாரமும் – மனம் ஒரு கண்ணாடியைப் போல அதில் தூசு சேர்கிறது; தூசியை அகற்று, நீ ஞானம் பெற்றவன் ஆகிறாய் – எல்லா வேதங்களின் முழுப் பொருளும் இதுதான் என்றபோதிலும், அதுவல்ல இதுவெல்லாம் என்பதை அவர் அறிவார். அவர் எதையும் அறியமாட்டார். ஆகவே அவருக்குப் பயமாக இருந்தது.

அவர் குருவினிடம் நேரடியாகச் செல்லவில்லை. பதிலாக இரவில் அவர் குடிசைக்குப் போனார், அவருடைய குருவின்

குடிசைக்கு. அங்குச் சுவரின் மேல் நான்கு வரிகளையும் எழுதினார், கையெழுத்து இடவில்லை – எந்தக் கையொப்பமும் இடாமல். இந்த விதத்தில் குரு இதை ஏற்றுக் கொண்டு, ''சரிதான், இது சரி'' என்று சொன்னால் பிறகு இவர் சொல்லி விடலாம். ''நான் தான் அவைகளை எழுதினேன்.'' குரு, ''கிடையாது! யார் இந்த வரிகளை எழுதியது?'' என்று கேட்டால், பிறகு இவர் மௌனமாக இருந்துவிடலாம் என்று அவர் நினைத்தார்.

ஆனால் குரு ஏற்றுக் கொண்டு விட்டார். காலையில் குரு சொன்னார், ''சரிதான்!'' குரு சிரித்துக் கொண்டே சொன்னார், ''சரிதான்! இதை எழுதிய மனிதன் ஞானமடைந்த ஒருவன் தான்.''

எனவே முழு மடாலயமும் இதைப் பற்றிப் பேச ஆரம்பித்தது. இதை எழுதியது யாரென்று எல்லோருக்கும் தெரியும். அவர்கள் விவாதித்தார்கள், பாராட்டினார்கள். அந்த வரிகள் அழகானவை, உண்மையிலேயே அழகானவை என்றார் கள். சில துறவிகள் சமையல் அறைக்கு வந்தார்கள், அவர்கள் டீ குடித்துக் கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள். ஈனோ அவர் களுக்குப் பரிமாறிக் கொண்டிருந்தார். ஈனோ என்ன நடந்தது என்பதைக் கேள்விப்பட்டார்.

அந்த நான்கு வரிகளை ஈனோ கேட்ட கணத்திலேயே அவர் சிரித்தார். எனவே யாரோ ஒருவன் கேட்டான், ''டேய் மடையா, ஏன் நீ சிரிக்கிறாய்? உனக்கு எதுவும் தெரியாது; பன்னிரண்டு வருடமாக நீ சமையல் அறையில் வேலை செய்து கொண்டிருக்கிறாய், நீ ஏன் சிரிக்கிறாய்?''

இதற்கு முன் அவர் சிரிப்பதைக் கூட யாரும் கேள்விப் பட்டதில்லை. அவர் இது நாள் வரை பேசக் கூடத் தெரியாத மடையனாகவே கருதப்பட்டு வந்தார். அவர் சொன்னார், ''எனக்கு எழுதத் தெரியாது, நான் ஞானமடைந்த ஒருவனும்

அல்ல. ஆனால் இந்த வரிகள் தவறானவை. ஆகவே என்னோடு யாராவது வந்தால் நான் நான்கு வரிகளைச் சொல்கிறேன். என்னோடு யாராவது வந்தால் அவர் சுவற்றின் மேல் அதை எழுதலாம். எனக்கு எழுதத் தெரியாது; ஆகவே என்னால் எழுத முடியாது.''

எனவே யாரோ ஒருவன் அவரைப் பின் தொடர்ந்தான் - ஒரு வேடிக்கையைப் போல. ஒரு கூட்டம் அங்கே வந்து விட்டது, ஈனோ சொன்னார், ''எழுது : மனம் என்பது இல்லை, அதனால் கண்ணாடியும் அங்கு இல்லை. எனவே தூசி எங்குச் சேர முடியும்? இதை யார் அறிந்தவரோ அவரே ஞானமடைந்தவர்.''

ஆனால் குரு வெளியே வந்து ஈனோவிடம் சொன்னார், ''நீ தவறு.'' ஈனோ அவரது பாதத்தைத் தொட்டு வணங்கிவிட்டு, அவரது சமையல் அறைக்குத் திரும்பினார்.

அன்று இரவு எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்கும் போது குரு ஈனோவிடம் வந்து சொன்னார், ''நீ தான் சரி, ஆனால் நான் இதை அந்த முட்டாள்கள் முன்னால் சொல்ல முடியாது - அவர்கள் படித்த முட்டாள்கள். எனது வாரிசாக நீயே நியமிக்கப் பட்டுள்ளாய் என்று நான் சொன்னால் அவர்கள் உன்னைக் கொன்று விடலாம். ஆகவே இங்கிருந்து தப்பிவிடு! நீதான் எனது வாரிசு, ஆனால் இதை யாரிடமும் சொல்லாதே. இதை நீ வந்த அந்த நாளே நான் அறிவேன். உன்னுடைய அரா வளர்ந்து கொண்டிருந்தது; அதனால் தான் உனக்கு எந்தத் தியானமும் நான் கொடுக்கவில்லை. அதற்குத் தேவையில்லை. நீ ஏற்கனவே தியானத்தில் இருந்தாய். மேலும் இந்தப் பன்னிரண்டு வருட மௌனம் - எதையும் செய்யாமலிருந்தது, தியானம் கூடச் செய்யாதது - உனது மனதை முற்றிலும் காலி செய்து விட்டது. மேலும் உனது அரா முழுமையாகி விட்டது. நீ பௌர்ணமி சந்திரனாகி விட்டாய். ஆனால் இங்கிருந்து தப்பிவிடு! இல்லா விட்டால் அவர்கள் உன்னைக் கொன்று விடுவார்கள்.

நீ இங்குப் பன்னிரண்டு வருடங்களாக இருந்து வருகிறாய். உன்னிடமிருந்து ஒளி தொடர்ந்து பரவிக் கொண்டிருக்கிறது. ஆனால் ஒருவரும் இதைக் கவனிக்கவில்லை. அவர்கள் சமையல் அறைக்கு வந்து போய்க் கொண்டே இருக்கிறார்கள். ஒவ்வொரு வரும் தினந்தோறும் சமையல் அறைக்கு வருகிறார்கள் - மூன்று, நான்கு முறை. ஒவ்வொருவரும் இங்கே கடந்து போகிறார்கள்; அதனால் தான் நான் உன்னை சமையல் அறையில் போட்டேன். ஆனால் உன்னுடைய அராவை ஒருவரும் உணர்ந்து கொள்ள வில்லை. ஆகவே நீ இங்கிருந்து தப்பி விடு.''

முதுகுத் தண்டின் இழை தொடப்பட்டவுடன், பார்க்கப் பட்டவுடன், உணரப்பட்டவுடன் உன்னைச் சுற்றி ஒரு அரா வளர ஆரம்பிக்கிறது.... ''இப்படி இருப்பதில் மாறுவாயாக.'' அந்த ஒளியில் நிறைந்து மாறுவாயாக. இதுவும் ஒரு மையமடைதல் தான் - முதுகுத் தண்டில் மையம் அடைதல் - நீ உடலை அடிப்படையாகக் கொண்டவன். ஆனால், இந்த யுக்தி உனக்கு உதவி புரியும். நீ உடலை அடிப்படையாகக் கொண்டவன் இல்லையென்றால், இது மிகவும் கடினம், உள்ளிருந்து உருவகப்படுத்துவது மிகவும் கடினம். உனது உடம்பை உள்ளிருந்து பார்ப்பது மிகவும் கடினம்.

இந்தச் சூத்திரம் ஆண்களைவிடப் பெண்களுக்கு அதிகம் உதவும். அவர்கள் அதிகம் உடல் அடிப்படையானவர்கள். அவர் கள் உடலில் அதிகம் வாழ்கிறார்கள்; அவர்கள் அதிகம் உணர் கிறார்கள். அவர்களால் அதிகம் உடலை உருவகப்படுத்திக் கொள்ள முடியும். ஆண்களை விடப் பெண்கள் அதிகம் உடல் அடிப்படையானவர்கள். ஆனால் உடலை உணரும் எந்த ஒருவருக்கும், உடலை உணர்பவர்களுக்கு, உருவகப்படுத்த முடிபவர்களுக்கு, தங்கள் கண்களை மூடி உள்ளிருந்து தங்கள் உடம்பை உணர முடிபவர்களுக்கு, இந்த யுக்தி மிகவும் உதவி யாக இருக்கும்.

இப்போது உன்னுடைய முதுகுத்தண்டை உருவகப் படுத்திக் கொள். மேலும் அதன் நடுவில் ஒரு வெள்ளிக் கம்பியும் ஓடிக் கொண்டிருக்கட்டும். முதலில் இது கற்பனை போலத் தோன்றும், பிறகு மெதுமெதுவாகக் கற்பனை மறைந்து போவதை நீ உணர்வாய். அதோடு உனது மனம் முதுகுத் தண்டின் மேல் குவிந்துவிடும். அப்போது நீ உன்னுடைய சொந்த முதுகுத் தண்டைப் பார்ப்பாய். நீ உள்மையப் பகுதியைப் பார்க்கும் கணத்தில், திடீரென உனக்குள் ஒளி வெடித்து வெளிப்படுவதை உணர்வாய்.

சில நேரங்களில் இது எந்தவித முயற்சியும் இல்லாம லேயே நடக்கலாம். சில நேரங்களில் இது நடக்கிறது, மறுபடியும் ஆழமான கலவியில் இது சில நேரங்களில் நடக்கிறது. தந்த்ராவிற்குத் தெரியும் : ஆழமான கலவியில் உனது முழுச் சக்தியும் முதுகுத்தண்டிற்கு அருகிலேயே குவிகிறது. உண்மையில், ஒரு ஆழமான கலவியில் முதுகுத்தண்டு மின்சாரத்தை வெளியேற்ற ஆரம்பிக்கிறது. மேலும் சில நேரங் களில் முதுகுத் தண்டைத் தொடுவதனால் கூட நீ ஒரு அதிர்ச்சி யைப் பெறுவாய். உண்மையிலேயே கலவியில் ஒருவருக் கொருவர் மிக ஆழமாக, மிக அன்பாக, நீண்ட நேரம் கலந் திருந்தால், இரண்டு நேசிப்பவர்கள் ஆழமான அணைப்பில், மௌனமாக, அசையாமல் ஒருவரில் ஒருவர் நிறைந்தவர்களாய், ஆழமான அணைப்பில் இருப்பவர்களாய் இருந்தால் அது நிகழ்கிறது. பல முறை அது நடந்திருக்கிறது. அப்படி நடக்கும் பொழுது ஒரு இருண்ட அறை திடீரென ஒளியால் நிறைந்ததாக மாறும், மேலும் இரண்டு உடல்களும் ஒரு நீலநிற அராவால் சூழப்படும்.

பலபல இது போன்ற நிகழ்வுகள் நடந்துள்ளன. உனது சில அனுபவங்களில் கூட இது நடந்திருக்கலாம். ஆனால் நீ கவனிக்காமல் போயிருக்கலாம். அதாவது ஒரு இருட்டு அறையில் ஆழமான அன்பில், திடீரென உங்கள் இரண்டு

உடலைச் சுற்றியும் ஒரு ஒளியை உணர்வாய், மேலும் அந்த ஒளி பரவி அறை முழுவதையும் நிறைக்கும். பல முறை இது நிகழ்ந்த துண்டு. அதாவது எந்தக் கண்ணில் தெரியும் காரணமும் இல்லாமல் அறையிலுள்ள டேபிளிலிருந்து திடீரெனப் பொருட்கள் விழும். தற்போது உளவியலாளர்கள் சொல்கிறார்கள், ஆழமான கலவியின் போது மின்சாரம் வெளிப்படுகிறது. அந்த மின்சாரத்திற்குப் பல விளைவுகளும் மோதல்களும் இருக்க முடியும். பொருட்கள் திடீரென விழலாம், நகரலாம், அல்லது உடையலாம். மேலும் புகைப் படங்கள் கூட எடுக்கப் பட்டுள்ளன. அவற்றில் ஒளி தெரிகிறது. ஆனால் அந்த ஒளி எப்பொழுதும் முதுகுத் தண்டைச் சுற்றியே குவிந்துள்ளது.

ஆகவே சில சமயங்களில் ஆழமான கலவியின் போது கூட நீ உனக்குள் பார்த்தால் முதுகுத் தண்டின் நடுவில் ஓடிக் கொண்டிருக்கும் இழையைப் பற்றிய விழிப்புணர்வு உனக்கு ஏற்படலாம். தந்த்ரா இதை நன்றாக அறிந்து இதன்மேல் வேலை செய்திருக்கிறது. மேலும் தந்த்ரா கலவியை இந்த உணர்தலுக்காகப் பயன்படுத்தி இருக்கிறது. ஆனால் அப்போது கலவி முற்றிலும் வேறுவிதமாக இருக்க வேண்டும், அதன் குணாதிசயம் வேறு விதமாக இருக்க வேண்டும். அது முடித்து விட வேண்டிய ஏதோ ஒன்று அல்ல; அது வெளியேற்று வதற்காகச் செய்யும் ஏதோ ஒன்று அல்ல; இது அவசரமாகச் செய்து முடிக்க வேண்டிய ஏதோ ஒன்று அல்ல; இது உடலளவிலான ஒன்று அல்ல. இப்போது இது ஆழமான ஆன்மிகப் பரிமாற்றம். உண்மையில் இரண்டு உடம்புகளின் மூலமாக நடைபெறும் இது ஒரு ஆழமான இரண்டு உள்தன்மைகளின், இரண்டு அகங்களின் சந்திப்பும், அவை ஒன்றில் ஒன்று ஊடுருவுவதும் ஆகும்.

ஆகவே இந்த யுக்தியை ஆழமான கலவியில் ஈடுபட் டிருக்கும் போது நீ முயற்சி செய், அப்போது இது சுலபமாக இருக்கும். பாலுணர்வைப் பற்றி மறந்து விடு. ஆழமான

அணைப்பில் இருக்கையில் உள்ளே இரு. அடுத்தவரையும் மறந்து விடு, உள்ளே சென்று உன்னுடைய முதுகுத்தண்டை உருவகப்படுத்து. இது சுலபமாக இருக்கும். ஏனெனில் இப்போது முதுகுத்தண்டிற்கு அருகில் அதிக சக்தி ஓடுகிறது. மேலும் அந்த இழை அதிகம் தெரியும், ஏனெனில் நீ மௌன மாக இருக்கிறாய், ஏனெனில் உனது உடல் ஓய்வில் இருக்கிறது. அன்பு தான் மிக ஆழமான தளர்வு நிலை. ஆனால் நாம் அன்பையும் மிகப் பெரிய இறுக்கமாக ஆக்கிவிட்டோம். நாம் அதை ஒரு பதட்டமாக ஒரு சுமையாக ஆக்கிவிட்டோம்.

அன்பின் கதகதப்பில் நிறைந்து தளர்வடைந்து உனது கண்களை மூடு. ஆனால் ஆண்கள் பொதுவாக அவர்களின் கண்களை மூடுவதில்லை. பொதுவாகப் பெண்கள் அவர்களின் கண்களை மூடிக் கொள்கிறார்கள். இதனால் தான் நான் பெண்கள் அதிக உடல் அடிப்படை உடையவர்கள் என்றும், ஆண்கள் அப்படி அல்ல என்றும் கூறினேன். பாலுணர்வுச் செயலின் போது ஆழமான அணைப்பில் பெண்கள் தங்கள் கண்களை மூடிக்கொண்டு விடுவார்கள். உண்மையில் அவர்கள் திறந்த கண்களுடன் அன்பு செய்ய முடியாது. மூடிய கண்களுடன் அவர்கள், உடலை உள்ளிருந்து அதிகம் உணர்கிறார்கள்.

உனது கண்களை மூடிக் கொண்டு, உனது உடலை உணர். தளர்வு கொள். முதுகுத் தண்டின் மேல் கவனத்தைக் குவி. அப்போது இந்தச் சூத்திரா மிக எளிதாகச் சொல்கிறது : ''இப்படி இருப்பதில் மாறுவாயாக'' அப்போது நீ அதன் மூலம் மாறுதலை அடைவாய்.

இன்று இது போதும்.



# சுய தரிசனம் :
# ஒரு அடிப்படைத் தேவை

## கேள்விகள்

- சுயத்தை அடைவது மனிதனின் ஒரு அடிப்படைத் தேவையா?
- தயவுகூர்ந்து, சிந்தனை, கவனத்தைக் குவிப்பது மற்றும் தியானம், இவைகளை விளக்குக.
  மனமற்ற நிலையை அடைவதற்கு மனதின் செயல்பாடுகள் எப்படி உதவ முடியும்?
- நாபி மையத்தை வளர்க்கும் பயிற்சியானது, தலை மற்றும் இதய மையங்களிலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது?
  எல்லா ஞானமடைந்தவர்களும் நாபியை மையம் கொண்டவர்கள் தானா?

★★★

***பல கேள்விகள் உள்ளன. முதலாவது:***

❖ ***"சுயத்தை அடைவது மனிதனின் அடிப்படைத் தேவையா?"***

முதலில் சுயத்தை அடைவது என்பதன் அர்த்தம் என்ன என்பதைப் புரிந்து கொள்ள முயற்சி செய். எ.எச். மாஸ்லோ இந்த 'சுயத்தை அடைவது' என்ற சொல்லைப் பயன்படுத்தினார். மனிதன் ஒரு ஆற்றலுடன் பிறக்கிறான். அவன் உண்மையில் அடைந்தவனல்ல - அதற்கு ஆற்றலுள்ளவன். மனிதன் ஒரு சாத்தியமாகப் பிறக்கிறான், அடைந்ததாக அல்ல. அவன் ஏதோவொன்றாக ஆகலாம்; அவன் தனது சாத்தியத்தை அடையக்கூடும் அல்லது அடையாமல் போய்விடக்கூடும். வாய்ப்பு பயன்படுத்திக் கொள்ளப்படலாம் அல்லது பயன்படுத்தப்படாமல் போகலாம். மேலும் இயற்கை உன்னை அடைய வேண்டும் என்று உந்துவதில்லை. நீ சுதந்திரமானவன். அடைய வேண்டும் என்பதைத் தேர்ந்தெடுக்கலாம்; நீ அதைப் பற்றி எதுவும் செய்வதில்லை என்பதைத் தேர்ந்தெடுக்கலாம். மனிதன் ஒரு விதையாகப் பிறக்கிறான். ஆகவே, எந்த மனிதனும் நிறைவடைந்தவனாகப் பிறப்பதில்லை - நிறைவடையக்கூடிய சாத்தியமுள்ளவனாகவே பிறக்கிறான்.

அது அப்படி என்னும் பட்சத்தில் - அது அப்படித்தான் - அப்போது சுயத்தை அடைவது அடிப்படைத் தேவையாக மாறுகிறது. ஏனெனில் நீ நிறைவடையாத வரை, நீ என்னவாக முடியுமோ அல்லது நீ என்னவாக வேண்டுமோ, அது ஆகாதபொழுது, உனது விதி முடிக்கப்படாதவரை, நீ அடையக் கூடியதை அடையாதவரை, உனது விதை மரமாகப் பூர்த்தியடையாத வரை, நீ ஏதோவொன்றை இழந்திருப்பதாகவே நீ உணர்வாய். ஒவ்வொருவரும், தான் ஏதோவொன்றை இழந்திருப்பதாகவே உணர்கிறார்கள். இந்த இழந்திருக்கிறோம் என்ற உணர்வுக்குக்

காரணம் இதுதான். அதாவது நீ இன்னும் அடையக் கூடியதை அடையவில்லை.

உண்மையில் இது செல்வத்தையோ, பதவியையோ, அதிகாரத்தையோ, கௌரவத்தையோ நீ இழந்திருப்பதல்ல. நீ கேட்பது எல்லாம் உனக்குக் கிடைத்துவிட்டால்கூட - செல்வம், அதிகாரம், கௌரவம், வேறு எதுவும் - நீ ஏதோவொன்றை இழந்திருப்பது போன்ற உணர்வை எப்பொழுதும் கொண்டிருப்பாய். ஏனெனில் இந்த இழந்துள்ள ஏதோவொன்று வெளியுள்ள எதனோடும் சம்பந்தப்பட்டதல்ல. இது உனது உள்வளர்ச்சியோடு சம்பந்தப்பட்டது. நீ நிறைவடையாதவரை, நீ ஒரு உணர்தலுக்கு வராதவரை, ஒரு மலர்தலை அடையாதவரை, நீ ஒரு உள்திருப்தி அடைந்து அதில், ''நான் இருக்க வேண்டியது இப்போதுள்ள இப்படித்தான்'' என்று உணராதவரை, ஏதோ ஒன்றை இழந்திருப்பதைப் போன்ற இந்த உணர்வு இருந்து கொண்டுதான் இருக்கும்.

மேலும் நீ ஏதோ ஒன்றை இழந்திருப்பது போன்ற இந்த உணர்வை வேறு எதனாலும் அழிக்க முடியாது.

எனவே சுயத்தை அடைவது என்பதன் அர்த்தம் ஒரு மனிதன் அவன் என்னவாக வேண்டுமோ அதுவாக ஆவதுதான். அவன் விதையாகப் பிறந்தான், இப்போது அவன் மலர்ந்து விட்டான். அவன் முழு வளர்ச்சிக்கு, ஒரு உள்வளர்ச்சிக்கு, உள்முடிவுக்கு வந்துவிட்டான். உனது அடங்கியுள்ள ஆற்றல்கள் எல்லாம் நிஜமாகிவிட்டது என்று நீ உணரும் கணத்தில், நீ வாழ்வின் உச்சத்தை, அன்பின் உச்சத்தை, பிரபஞ்ச இருப்பினுடைய உச்சத்தையே உணர்வாய்.

சுயத்தை அடைவது என்ற சொல்லைப் பயன்படுத்திய ஆபிரஹாம் மாஸ்லோ 'உச்ச அனுபவம்' என்ற மற்றொரு சொல்லையும் பயன்படுத்தி உள்ளார். ஒருவன் அவனது சுயத்தை அடையும்போது, அவன் ஒரு உச்சத்தை அடைகிறான் - ஒரு பேரானந்தத்தின் உச்சி. பிறகு எதன் பின்னும் ஏங்குவது

இருக்காது. அவன் அவனுடனேயே முழு நிறைவு கொள்வான். இப்போது எந்தக் குறைவும் இல்லை, அங்கு எந்த ஆசையும் இல்லை, எந்த வேட்கையும் இல்லை, எந்த ஓட்டமும் இல்லை. அவன் எதுவாக இருந்த போதும், அவன் அவனிடத்தில் முழு நிறைவு கொள்கிறான். சுயத்தை அடைவது ஒரு உச்ச அனுபவ மாக மாறுகிறது. மேலும் சுயத்தை அடைந்த ஒருவன் மட்டுமே உச்ச அனுபவங்களை அடைய முடியும். பிறகு அவன் எதைத் தொட்டாலும், அவன் எதைச் செய்தாலும் அல்லது செய்யா விட்டாலும் – இருத்தல் மட்டுமே கூட – அவனுக்கு ஒரு உச்ச அனுபவமாக இருக்கும்; இருப்பதே பேரானந்தமாக இருக்கும். பிறகு பேரானந்தம் என்பது வெளியே உள்ள ஏதோ ஒன்றைச் சார்ந்தது அல்ல, அது உள்வளர்ச்சியின் ஒரு துணை விளைவே.

ஒரு புத்தர் சுயத்தை அடைந்த ஒருவர். இதனால்தான் நாம் புத்தர், மகாவீரர் இன்னும் மற்றவர்களின் படங்களை, சிற்பங்களை, உருவங்களை நாம் முழு மலர்ச்சி அடைந்த தாமரையின் மேல் அமர்ந்திருப்பது போலச் செய்திருக்கிறோம். இந்த முழு மலர்ச்சி அடைந்த தாமரை என்பது உள்மலர்ச்சியின் உச்சத்தைக் குறிப்பது. உள்ளே அவர்கள் மலர்ந்து விட்டனர். அவர்கள் முழு மலர்ச்சி அடைந்து விட்டனர். அந்த உள்மலர்ச்சி ஒரு பிரகாசத்தைக் கொடுக்கிறது. ஒரு இடைவிடாத ஆனந்தம் அவர்களிடமிருந்து பொழிகிறது. அவர்களுடைய நிழலில் ஒதுங்குபவர்கள் கூட, அவர்களுக்கு அருகாமையில் வருபவர்கள் எல்லோரும் அவர்களைச் சுற்றி ஒரு அமைதிச் சூழலை உணர்கிறார்கள்.

மகாவீரரைப் பற்றி ஒரு சுவாரஸ்யமான கதை உள்ளது. இது ஒரு பழங்கதை, ஆனால் பழைய கதைகள் எல்லாம் அழகானவை. அவை வேறுவிதமாகச் சொல்ல முடியாதவை களையெல்லாம் இப்படிச் சொல்கின்றன. மகாவீரர் போகும் போது, அவரைச் சுற்றி எங்கும் இருபத்திநாலு மைல் சுற்றளவிற்கு எல்லா மலர்களும் பூத்துக் குலுங்கும் என்று சொல்லப் பட்டிருக்கிறது. அது மலரும் காலமாக இல்லாத

பொழுதிலும் கூட அவை மலரும். இது ஒரு கவிதைமயமான வெளிப்பாடுதான். ஆனால் சுயத்தை அடையாத ஒருவன், அவன் மகாவீரரின் அருகில் வரும்பொழுது அவருடைய மலர்ச்சி தொற்றிக் கொள்வதை உணர்வான். மேலும் அவன் அவனிடம் ஒரு உள்மலர்ச்சியை உணர்வான். மேலும் அது ஒருவனுக்குச் சரியான காலமாக இல்லாத பொழுதிலும் கூட, அவன் தயாராகாதவனாய் இருந்தாலும் கூட, அவன் பிரதிபலிப்பான், அவன் ஒரு எதிரொலியை உணர்வான். மகாவீரர் யாராவது ஒருவரின் அருகில் இருந்தால் அவன் அவனுள் ஒரு எதிரொலியை உணர்வான். அவன் எப்படி இருக்கக்கூடும் என்பதன் ஒரு கண தரிசனத்தை அவன் பெறுவான்.

சுயத்தை அடைவது என்பது ஒரு அடிப்படைத் தேவை. நான் அடிப்படை என்று சொல்லும் பொழுது நான் அர்த்தப் படுத்துவது என்னவென்றால் உனது தேவைகள் எல்லாம் பூர்த்தி யாகி விட்டால், சுயத்தை அடைவது, சுயத்தை உணர்வது தவிர மற்ற எல்லாம் பூர்த்தியாகி விட்டால், அப்போதும் நீ நிறைவடையாமல் உணர்வாய். உண்மையாகப் பார்க்கப் போனால், சுயத்தை அடைவது நிகழ்ந்து மற்ற எதுவும் பூர்த்தி அடையாவிட்டால், அப்போதும் நீ ஒரு ஆழமான முழு நிறைவை உணர்வாய். இதனால்தான் புத்தர் ஒரு பிச்சைக்காரன், ஆனால் அப்படியும் ஒரு பேரரசன்.

புத்தர் ஞானமடைந்த பிறகு காசிக்கு வந்தார். காசி அரசன் அவரைப் பார்க்க வந்தான். அவன் கேட்டான், ''நான் உன்னிடம் எதுவும் இருப்பதைப் பார்க்கவில்லை, நீ வெறும் ஒரு பிச்சைக் காரன், இருந்தபோதிலும் உன்னுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, நான் என்னை ஒரு பிச்சைக்காரனாக உணர்கிறேன். உன்னிடம் எதுவும் இல்லை. ஆனால் நீ நடக்கும் விதத்தை, நீ பார்க்கும் விதத்தை, நீ சிரிக்கும் விதத்தை, பார்க்கும் பொழுது இந்த முழு உலகமும் உன்னுடைய பேரரசாக இருப்பதைப் போலத் தெரிகிறது. மேலும் கண்களால் பார்க்கக்கூடிய எதுவும் உன்னிடம் இல்லை – எதுவும் இல்லை! எனவே உன்னுடைய சக்தியின் ரகசியம் எங்குள்ளது? நீ ஒரு பேரரசனைப் போலத்

தோன்றுகிறாய்.'' உண்மையில் எந்தப் பேரரசனும் இது போலத் தோற்றமளித்ததில்லை – முழு உலகமும் அவனைச் சேர்ந்தது என்பதைப் போல. ''நீ ஒரு பேரரசனைப் போலத் தோன்று கிறாய். உன்னுடைய சக்தி, அதன் பிறப்பிடம் எங்கே?'' என்று காசி அரசன் கேட்டார்.

அதற்குப் புத்தர் சொன்னார், ''அது என்னிடம் இருக்கிறது. எனது சக்தியின் பிறப்பிடம் என்னைச் சுற்றி நீங்கள் எதை யெல்லாம் உணர்கிறீர்களோ, அவையெல்லாம் உண்மையில் என்னுள் இருப்பவை. என்னைத் தவிர என்னிடம் வேறொன்றும் இல்லை. ஆனால் அது போதுமானது. நான் நிறைவடைந்து விட்டேன்; இப்போது நான் எதற்கும் ஆசைப்படவில்லை, நான் ஆசையற்றவன் ஆகிவிட்டேன்.''

உண்மையில் சுயத்தை அடைந்த ஒருவன் ஆசையற்றவன் ஆகிவிடுகிறான். இதை நினைவில் கொள். சாதாரணமாக நீ ஆசையற்றவன் ஆகிவிட்டால் நீ உன்னை அறிந்து கொள்வாய் என்று நாம் சொல்கிறோம். ஆனால் இதற்கு மாறானதே இதை விட உண்மை : நீ உன்னை அறிந்து கொண்டால் நீ ஆசையற்ற வன் ஆகிவிடுவாய். மேலும் ஆசையற்றவன் ஆவதை தந்த்ரா வலியுறுத்துவதில்லை, மாறாக சுயத்தை அடைவதையே வலியுறுத்துகிறது. பிறகு ஆசையற்ற தன்மை பின்தொடரும்.

ஆசை என்பதன் அர்த்தம் நீ உள்ளே நிறைவடையவில்லை. நீ ஏதோ ஒன்றை இழந்துவிட்டு அதற்காக ஏங்கிக் கொண்டிருக் கிறாய் என்பதே. நீ ஒரு ஆசையிலிருந்து மற்றொன்றிற்கு நிறைவைத் தேடிப் போய் கொண்டேயிருக்கிறாய். இந்தத் தேடல் ஒருபோதும் முடிவதில்லை. ஏனெனில் ஒரு ஆசை மற்றொரு ஆசையை உருவாக்குகிறது. உண்மையில் ஒரு ஆசை பத்து ஆசை களை உருவாக்குகிறது. நீ ஆசையற்ற பேரானந்த நிலையை ஆசைப்படுவதன் மூலம் தேடிச் சென்றால், நீ ஒருபோதும் அதை அடைய முடியாது. ஆனால் நீ வேறு ஏதாவது ஒன்றை முயற்சித் தால் – சுயத்தை அடையும் முறைகள், உனது உள்சாத்தியங்களை உணர்ந்து கொள்ளும் முறைகள், அவைகளை அடையும்

முறைகள் – பிறகு நீ எந்த அளவு அதிகம் சுயத்தை அடைகின் றாயோ, அந்த அளவு மிக மிகக் குறைவாக ஆசைகளை உணர் வாய். ஏனெனில் உண்மையில் நீ உள்ளே வெறுமையாக இருப்பதனாலேயே ஆசைகள் உணரப்படுகின்றன. நீ உள்ளே வெறுமையாக இல்லையென்றால், ஆசைப்படுவது நின்றுவிடும்.

சுயத்தை அடைவதற்கு என்ன செய்ய வேண்டும்? இரண்டு விஷயங்கள் புரிந்து கொள்ளப்பட வேண்டும். ஒன்று : சுயத்தை அடைவது என்பதன் அர்த்தம் நீ ஒரு பெரிய ஓவியனாவது அல்லது பெரிய இசைக் கலைஞனாவது அல்லது பெரிய கவிஞனாவது என்பதல்ல. இதில் உன்னுடைய ஒரு பாகம் நிஜமாகிறது, இதுவே மிக்க நிறைவுணர்வைக் கொடுக்கும். உனக்கு நல்ல இசைக் கலைஞனாகும் ஆற்றல் இருந்தால் அப்போது நீ அதை மலரச் செய்தால், நீ நல்ல இசைக் கலைஞனானால் உன்னில் ஒரு பாகம் நிறைவடையும், ஆனால் முற்றிலுமாக அல்ல. உனக்குள் மீதமுள்ள மனிதத் தன்மை தொடர்ந்து நிறைவடையாமலேயே இருக்கும். நீ ஒரு பக்கம் சாய்ந்தவனாக இருப்பாய். ஒரு பாகம் வளர்ந்து இருக்கும், மீதமுள்ளவை எல்லாம் உனது கழுத்தைச் சுற்றித் தொங்கிக் கொண்டிருக்கும் கற்களைப் போல இருக்கும்.

ஒரு கவிஞனைப் பார், அவனுடைய கவிதை உணர்வில் அவன் ஆழ்ந்திருக்கும் பொழுது அவன் புத்தரைப் போலத் தெரிகிறான். அவன் தன்னை முற்றிலும் மறந்து விடுகிறான். அதாவது கவிஞனிலிருக்கும் சாதாரண மனிதன் அங்கு இல்லா மல் போய் விடுகிறான். ஆகவே ஒரு கவிஞன் அவனுடைய கவிதை உணர்வில் ஆழ்ந்திருக்கும் போது, அவன் ஒரு உச்சத்தில் இருக்கிறான் – ஒரு பாகத்தின் உச்சத்தில் இருக்கிறான். சில நேரங்களில் கவிஞர்களுக்கு, ஞானமடைந்த புத்தரைப் போன்ற மனங்களுக்கு மட்டுமே சாத்தியமான தரிசனங்கள் கிடைக் கின்றன. ஒரு கவிஞன் ஒரு புத்தரைப் போலப் பேச முடியும். உதாரணமாக கலீல் கிப்ரான் புத்தரைப் போலப் பேசுகிறார், ஆனால் அவர் ஒரு புத்தர் அல்ல. அவர் ஒரு கவிஞர் – ஒரு மாபெரும் கவிஞர்.

நீ கலீல் கிப்ரானை அவரது கவிதைகள் மூலமாகப் பார்த்தால், அவர் ஒரு புத்தரைப் போல, ஒரு கிறிஸ்து அல்லது கிருஷ்ணாவைப் போலத் தெரிகிறார். ஆனால் நீ கலீல் கிப்ரான் என்ற மனிதனைச் சந்தித்தால், அவர் மிகவும் சாதாரணமானவராய் இருப்பார். அவர் அன்பைப் பற்றி அவ்வளவு அழகாகப் பேசுகிறார் – ஒரு புத்தர் கூட அவ்வளவு அழகாகப் பேச முடியாது. ஆனால் ஒரு புத்தர் அவரது முழு இருப்பிலும் அன்பை அறிந்தவர். கலீல் கிப்ரான் அவரது கவிதை உணர்வின் உயரத்தில் பறக்கும்போது மட்டுமே அன்பை அறிவார். அவர் அவருடைய கவிதை உணர்வின் உயரத்தில் பறக்கும்போது அவருக்கு அன்பின் தரிசனங்கள் கிடைக்கின்றன – அழகான தரிசனங்கள். அவர் அவற்றை அரிதான உள்நோக்குடன் வெளிப்படுத்துகிறார். ஆனால் நீ உண்மையான கலீல் கிப்ரான் என்ற மனிதனைச் சென்று பார்த்தால் நீ மிகவும் வித்தியாசமாக உணர்வாய். கவிஞனுக்கும் இந்த மனிதனுக்கும் இடையில் வெகு தூரமிருக்கும். சில நேரங்களில் இந்த மனிதனுக்கு நிகழும் ஏதோ ஒன்றுதான் அந்தக் கவிஞன் என்றே தெரியும். ஆனால் இந்த மனிதன் அந்தக் கவிஞனல்ல.

இதனால்தான் கவிஞர்கள் தாங்கள் கவிதையை உருவாக்கும் பொழுது வேறு யாரோ அதை உருவாக்குவது போல மாறுகிறார்கள்; அவர்கள் உருவாக்குவதில்லை. அவர்கள் வேறு ஏதோ சக்தியின், வேறு ஏதோ விசையின் கருவிகளாக அவர்கள் ஆகிவிட்டதைப் போல உணர்கிறார்கள். அவர்கள் அங்கே இருப்பதில்லை. இந்த உணர்வு வருவதற்குக் காரணம் உண்மையில் அவர்களுடைய முழுமையான சுயத்தை அவர்கள் அடையவில்லை – அதன் ஒரு பாகமே, பகுதியே அடைந்துள்ளது.

நீ வானத்தைத் தொடவில்லை. உன்னுடைய ஒரு விரல் மட்டுமே வானத்தைத் தொட்டுள்ளது. நீ இன்னும் பூமியில் வேர்விட்டவனாகவே இருக்கிறாய். சில நேரங்களில் நீ குதிக்கிறாய். அப்போது ஒரு கண நேரத்திற்கு நீ பூமியின் மேல் இருப்பதில்லை; நீ புவிஈர்ப்பு விசையை ஏமாற்றிவிட்டாய். ஆனால் அடுத்த கணமே நீ மறுபடியும் பூமியின் மேலே

இருக்கிறாய். ஒரு கவிஞன் நிறைவடைந்ததாக உணரும் பொழுது அவனுக்குத் தரிசனங்கள் கிடைக்கும் – முழுமையற்ற தரிசனங்கள். ஒரு இசைக் கலைஞன் நிறைவடைந்ததாக உணரும் பொழுது, அவனுக்கு முழுமையற்ற தரிசனங்கள் கிடைக்கும்.

பீத்தோவன் மேடையில் இருக்கும்பொழுது, ஒரு மாறுபட்ட, முற்றிலும் மாறுபட்ட ஒரு மனிதராக அவர் இருப்பார் என்று சொல்லப்படுகிறது. கோதே சொல்லியிருக்கிறார், அதாவது பீத்தோவன் மேடையின் மேல் அவரது குழுவை, அவரது ஆர்கெஸ்ட்ராவை இயக்கும் பொழுது, அவர் கடவுளைப் போலத் தோன்றுவார். அவரை ஒரு சாதாரண மனிதர் என்று சொல்ல முடியாது. அவர் ஒரு மனிதனாக இருக்க மாட்டார். அவர் ஒரு சூப்பர் மனிதனாக இருப்பார். அவர் பார்க்கும் விதம், அவர் கைகளை உயர்த்தும் விதம் எல்லாம் சூப்பர் மனிதனுடையதாக இருக்கும். ஆனால் அவர் மேடையிலிருந்து திரும்பி வந்தவுடன் அவர் சாதாரண மனிதனாகவே இருப்பார். மேடையில் இருக்கும் மனிதன் வேறு ஏதோ ஒன்றினால் ஆளப்படுபவனாகத் தோன்றுவான். பீத்தோவன் அங்கு இல்லாதது போலவும், வேறு ஏதோ ஒரு சக்தி அவரிடம் புகுந்து கொண்டது போலவும் இருக்கும். மேடையிலிருந்து கீழே இறங்கியவுடன் மறுபடியும் அவர் பீத்தோவன் ஆக ஒரு சாதாரண மனிதனாக ஆகி விடுவார்.

இந்தக் காரணத்தால் கவிஞர்கள், இசைக் கலைஞர்கள், மாபெரும் கலைஞர்கள், படைப்பாளிகள் இவர்கள் எல்லோரும் அதிக இறுக்கத்துடன் இருக்கிறார்கள் – ஏனெனில் அவர்களுக்கு இரண்டு வகையான இருப்பு நிலை இருக்கிறது. சாதாரண மனிதனுக்கு அவ்வளவு இறுக்கம் கிடையாது. ஏனெனில் அவன் எப்பொழுதும் ஒன்றில் தான் வாழ்கிறான்; அவன் பூமியில் தான் வாழ்கிறான். ஆனால் கவிஞர்கள், இசைக் கலைஞர்கள், மாபெரும் கலைஞர்கள் குதிக்கிறார்கள்; அவர்கள் புவிசர்ப்பைக் கடந்து செல்கிறார்கள். சில குறிப்பிட்ட கணங்களில் அவர்கள் பூமியில் இருப்பதில்லை, அவர்கள் மனித குலத்தைச் சேர்ந்தவர்

களாய் இருப்பது இல்லை. அவர்கள் புத்தர்களின் உலகத்தை, புத்தர்களின் இருப்பிடத்தைச் சேர்ந்தவர்களாய் ஆகிவிடு கிறார்கள். பிறகு மறுபடியும் அவர்கள் இங்குத் திரும்பி விடுகிறார்கள். அவர்களுக்கு இரண்டு இருப்பு நிலைகள் இருக்கின்றன; அவர்களுடைய தன்மை பிளவுபட்டிருக்கிறது.

எனவே ஒவ்வொரு படைக்கும் கலைஞனும் ஒவ்வொரு மாபெரும் கலைஞனும் ஒரு குறிப்பிட்ட விதத்தில் பயித்திய மாகவே இருப்பான். அந்த இறுக்கம் மிகவும் அதிகம்! அந்தப் பிளவு, அந்த இரண்டு வகை இருப்பு நிலைகளின் இடையே உள்ள இடைவெளி மிகப் பெரியது – இணைக்க முடியாத அளவு மிகப் பெரியது. சில நேரங்களில் அவன் வெறும் சாதாரண மனிதனாக இருக்கிறான்; சில நேரங்களில் அவன் புத்தரைப் போல ஆகிவிடுகிறான். இந்த இரண்டு நிலைகளுக்கு இடையே அவன் பிரிந்து கிடக்கிறான். ஆனால் அவனுக்குக் கணநேர அனுபவங்கள் இருக்கின்றன.

நான் சுயத்தை அடைவது என்று சொல்லும்போது, நீ ஒரு மாபெரும் கவிஞனாக மாற வேண்டும் அல்லது நீ ஒரு மாபெரும் இசைக் கலைஞனாக மாற வேண்டும் என்ற அர்த்தத் தில் நான் சொல்லவில்லை. நீ ஒரு முழு மனிதனாக மாற வேண்டும் என்ற அர்த்தத்திலேயே நான் சொல்கிறேன். நான் உன்னை ஒரு மாபெரும் மனிதனாகும்படி சொல்ல மாட்டேன். ஏனெனில் ஒரு மாபெரும் மனிதன் எப்பொழுதும் முழுமை யற்றவன். எதிலும் மாபெரும் தன்மை என்பது எப்பொழுதும் முழுமையற்றது. ஒருவன் ஒரே திசையில் போகிறான், போகிறான், போய்க் கொண்டே இருக்கிறான், இதனால் மற்ற எல்லாப் பரிமாணங்களிலும், மற்ற எல்லாத் திசைகளிலும் அந்த ஒருவன் அப்படியே மாறாமல் இருக்கிறான் – ஒருவன் ஒரு புறம் சாய்ந்தவனாக ஆகி விடுகிறான்.

நான் ஒரு முழு மனிதனாகு என்று சொல்லும் போது, ஒரு மாபெரும் மனிதனாகு என்ற அர்த்தத்தில் நான் சொல்வதில்லை. நான் சொல்வது ஒரு சமநிலையை உருவாக்கு, மையத்திலிரு,

ஒரு மனிதனாக நிறைவடைந்திரு – ஒரு இசைக் கலைஞனாக அல்ல, ஒரு கவிஞனாக அல்ல, ஒரு கலைஞனாக அல்ல, ஒரு நிறைவடைந்த மனிதனாக. ஒரு நிறைவடைந்த மனிதன் என்றால் அதற்கு என்ன அர்த்தம்? ஒரு மாபெரும் கவிஞன் ஒரு மாபெரும் கவிஞனாக இருப்பதற்குக் காரணம் மாபெரும் கவிதை. ஒரு மாபெரும் இசைக் கலைஞன் அப்படி ஆகக் காரணம் மாபெரும் இசை. ஒரு மாபெரும் மனிதன் ஒரு மாபெரும் மனிதனாக இருக்கக் காரணம் அவன் செய்த சில குறிப்பிட்ட விஷயங்கள். எந்த ஒரு திசையிலும் மாபெரும் மனிதனாக இருப்பவனும் முழுமையற்றவனே. மாபெரும் தன்மை முழுமையற்றது, துண்டானது. இதனால் தான் மாபெரும் மனிதர்கள் சாதாரண மனிதர்களை விட அதிக வேதனையைச் சந்திக்க வேண்டி உள்ளது.

முழு மனிதன் என்பவன் யார்? முழு மனிதன், நிறை வடைந்த மனிதன் என்று சொல்வதன் அர்த்தம் என்ன? அதன் அர்த்தம், முதலில் மையத்திலிருப்பவன்; மையம் இல்லாமல் இருப்பவன் அல்ல. நீ இந்தக் கணத்தில் ஏதோவொன்றாக இருக்கிறாய், அடுத்த கணத்தில் வேறொன்றாக இருக்கிறாய். மக்கள் என்னிடம் வருகிறார்கள், அப்போது அவர்களிடம் நான் பொதுவாகக் கேட்பேன், ''உன்னுடைய மையத்தை எங்கே உணர்கிறாய்? இதயத்திலா, மனத்திலா, நாபியிலா, எங்கே? உனது பாலுணர்வு மையத்திலா? எங்கே? எங்கே உனது மையத்தை உணர்கிறாய்?

பொதுவாக அவர்கள் சொல்வார்கள், ''சில நேரங்களில் நான் அதைத் தலையில் உணர்கிறேன், சில நேரங்களில் இதயத்தில் உணர்கிறேன், சில நேரங்களில் நான் அதை உணர்வதேயில்லை.'' எனவே நான் அவர்களிடம் எனக்கு முன்னால் கண்களை மூடச்சொல்லி, இப்போது அதை உணருங்கள் என்று சொல்வேன். பெரும்பாலான சமயங்களில் இப்படி நடக்கிறது : அவர்கள் சொல்கிறார்கள், ''இப்போது, இந்தக் கணத்தில், நான் எனது தலையில் மையம் கொண்டிருப்ப தாக உணர்கிறேன்.'' ஆனால் அடுத்த கணத்தில் அவர்கள் அங்கே

இருப்பதில்லை. அவர்கள் சொல்கிறார்கள், ''நான் இதயத்தில் இருக்கிறேன்.'' அடுத்த கணத்தில் இந்த மையம் தவறிவிடுகிறது, அது வேறு எங்கோ இருக்கிறது, பாலுணர்வு மையத்திலோ அல்லது வேறு ஏதாவது ஓரிடத்தில்.

உண்மையில், நீ மையத்திலிருப்பதில்லை; நீ கணநேரத் திற்கு மட்டுமே ஒரு மையத்திலிருக்கிறாய். ஒவ்வொரு கணமும் அதற்கான மையத்தைக் கொண்டிருக்கிறது. ஆகவே நீ மாறிக் கொண்டே போகிறாய். மனம் வேலை செய்யும் போது நீ தலையை மையமாக உணர்கிறாய். நீ அன்பாய் இருக்கும் பொழுது, மையம் இதயம் என்று உணர்கிறாய். நீ குறிப்பிட்டு எதையும் செய்யாத பொழுது, நீ குழப்பமடைகிறாய் – மையம் எங்கே இருக்கிறதென்று உன்னால் கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில் நீ வேலை செய்யும்போது, ஏதாவதொன்றைச் செய்யும்போது மட்டுமே உன்னால் மையத்தைக் காண முடியும். அப்போது உடம்பின் ஒரு குறிப்பிட்ட பகுதி மையமாகிறது. ஆனால் நீ மையமடைவதில்லை. நீ எதுவும் செய்யவில்லை யென்றால், உன்னுடைய மையம் எங்கிருக்கிறதென்று உன்னால் கண்டுபிடிக்க முடியாது.

முழு மனிதன் மையமானவன். அவன் செய்வது எதுவா யிருந்தாலும், அவன் மையத்திலிருக்கிறான். அவனது மனம் வேலை செய்து கொண்டிருந்தால், அவன் யோசித்துக் கொண் டிருந்தால், தலையில் யோசனை ஓடிக்கொண்டேயிருந்தாலும் அவன் நாபியில் தொடர்ந்து மையம் கொண்டிருக்கிறான். மையம் ஒருபோதும் தவறுவது இல்லை. அவன் தலையைப் பயன்படுத்துகிறான். ஆனால் ஒருபோதும் தலைக்கு நகர்வ தில்லை. அவன் இதயத்தைப் பயன்படுத்துகிறான். ஆனால் ஒருபோதும் இதயத்திற்கு நகர்வதில்லை. இவை எல்லாம் கருவிகளாக மாறிவிடுகின்றன. அவன் எப்போதும் மையம் கொண்டிருக்கிறான்.

இரண்டாவதாக, அவன் சமநிலை பெற்றவன். ஆமாம், ஒருவன் மையத்திலிருப்பவன் என்றாலே ஒருவன் சமநிலை

பெற்றவன்தான். அவனது வாழ்க்கை ஒரு ஆழமான சமநிலை யாகும். அவன் ஒருபோதும் எந்த எந்த விளிம்பிலும், முனை யிலும், உள்ளவனாக ஆவதில்லை, அவன் நடுவிலேயே இருக் கிறான். புத்தர் இதை நடுவழி என்று அழைத்தார். அவன் எப்பொழுதும் நடுவிலேயே இருக்கிறான்.

மையத்தை அடையாத ஒருவன் எப்பொழுதும் விளிம்பு களுக்கு, ஒரு முனையை நோக்கி நகருவான். அவன் சாப்பிட் டால் அதிகமாகச் சாப்பிடுவான், அவன் அதிகம் சாப்பிடுவான், அல்லது அவன் பட்டினி கிடப்பான், ஆனால் சரியாகச் சாப்பிடுவது அவனால் முடியாது. பட்டினி கிடப்பது சுலபம், அதிகம் சாப்பிடுவது பிரச்சனையில்லை. அவன் இந்த உலகத்தில் இருப்பான், ஈடுபட்டவனாக, ஆழ்ந்தவனாக இருப்பான் அல்லது இந்த உலகத்தைத் துறந்து விடுவான் - ஆனால் அவனால் ஒருபோதும் சமநிலை கொண்டவனாக இருக்க முடியாது. அவனால் நடுவில் இருக்க முடியாது. ஏனெனில் நீ மையத்தில் இல்லாதவனாக இருக்கும் பொழுது, நீ மத்தி, நடு என்பதன் அர்த்தத்தையே அறிய மாட்டாய்.

மையத்திலிருக்கும் ஒருவன் எப்பொழுதும் எல்லாவற்றி லும் நடுவிலிருப்பான், ஒருபோதும் எந்த முனையிலும் இருக்க மாட்டான். புத்தர் சொல்கிறார், அவர் உண்பது, சரியாக உண்பது; அது அதிகம் உண்பதுமல்ல, பட்டினி கிடப்பதுமல்ல. அவரது உழைப்பு சரியான உழைப்பு - ஒருபோதும் மிகவும் அதிகமோ, ஒருபோதும் மிகவும் குறைவோ அல்ல. அவர் எதுவாக இருந்தாலும், அவர் எப்பொழுதும் சமநிலையிலிருக்கிறார்.

**முதல் விஷயம் :**

சுயத்தை அடைந்த ஒருவன் மையத்தில் இருப்பவனாய் இருப்பான்.

**இரண்டாவது விஷயம் :**

அவன் சமநிலை பெற்றவனாய் இருப்பான்.

மூன்றாவது விஷயம் :

இந்த இரண்டு விஷயங்களும் நடந்தால் – மையம் கொள்ளுதல், சமநிலை – பல விஷயங்கள் தொடரும். அவன் எப்பொழுதும் கடினமற்று இருப்பான். எந்தச் சூழ்நிலையாக இருந்தாலும், அந்த இலகுவாக இருக்கும் தன்மை, கடினமற்று இருத்தலை இழக்கமாட்டான். எந்தச் சூழ்நிலையாக இருந் தாலும் என்று நான் சொல்கிறேன், எந்தவித நிபந்தனையும் இல்லை இதில். அந்த எதோடும் இலகுவாக இருக்கும் தன்மையை இழக்க மாட்டான். ஏனெனில் மையத்திலிருக்கும் ஒருவன் எப்பொழுதும் இலகுவாகவே இருக்கிறான். அவன் மரணத்தைக் கூட மற்ற எல்லா விருந்தினர்களையும் வரவேற்பது போல வரவேற்பான். துன்பம் வந்தால் அதையும் அவன் வரவேற்பான். எது நடந்தாலும் அவன் தனது மையத்திலிருந்து தன்னை விலக்கிக் கொள்ள மாட்டான். இந்த இலகுவான தன்மையும், மையம் கொண்டிருப்பதன் ஒரு துணை விளைவாகும்.

அப்படிப்பட்ட மனிதனுக்கு, கீழானது என்று எதுவும் கிடையாது, மிக உயர்ந்தது என்று எதுவும் கிடையாது; எல்லாமே அழகானது, புனிதமானது, தெய்விகமானது – எல்லாமும்! அவன் செய்வது எதுவாக இருந்த போதிலும், அதுவே அவனது முடிவான அக்கறையாக இருக்கும் – முடிவான அக்கறை கொள்ள வேண்டியது அதுவே என்பது போல. எதுவும் கீழானது என்பது கிடையாது. அவன், ''இது கீழானது, இது மிகவும் உயர்ந்தது'' என்று சொல்ல மாட்டான். உண்மையில், எதுவும் மிக உயர்ந்தது அல்ல, அதே போல எதுவும் சிறியதோ, கீழானதோ அல்ல. மனிதனுடைய தொடுதலே முக்கியமானது. ஒரு சுயத்தை அடைந்த ஒருவன், சமநிலையிலிருக்கும், மையம் கொண்ட ஒருவன், எல்லாவற்றையும் மாற்றுகிறான். அவனு டைய அந்தத் தொடுதல் ஒவ்வொன்றையும் மிக உயர்ந்ததாக ஆக்குகிறது.

நீ ஒரு புத்தரைக் கூர்ந்து கவனித்தால், நீ அவர் நடப்பதைப் பார்க்கலாம், மேலும் அவர் நடப்பதை நேசிக்கிறார். நீ புத்தர் ஞானமடைந்த இடமான புத்த கயாவிற்குச் சென்றால், அங்கு நிரஞ்சனா நதிக் கரையில், அவர் ஒரு அரச மரத்தினடியில் அமர்ந்திருந்த அந்த இடத்தில், அவர் நடந்த காலடிச் சுவடுகள் குறித்து வைக்கப்பட்டுள்ளதைப் பார்க்கலாம். அவர் ஒரு மணி நேரம் தியானம் செய்வார். பிறகு அவர் சுற்றி வரவும் நடப்பார். புத்தமத அகராதிப்படி இது 'சக்கரமானவன்' என்று அழைக்கப் படுகிறது. அவன் அரச மரத்தடியில் உட்கார்ந்திருப்பான், பிறகு அதைச் சுற்றி நடப்பான். ஆனால் அவன் ஒரு தூய்மையான நிலையிலிருந்தவாறு நடப்பான், தியானத்திலிருப்பது போலவே அதைச் செய்வான்.

புத்தரைச் சிலர் கேட்டனர், ''நீங்கள் இதை ஏன் செய்கிறீர்கள்? சில நேரங்களில் நீங்கள் கண்களை மூடி உட்கார்ந்து தியானம் செய்கிறீர்கள், பிறகு நீங்கள் நடக்கிறீர்களே, எதற்காக?''

புத்தர் சொன்னார், ''உட்கார்ந்திருக்கும் பொழுது அமைதியாக இருப்பது சுலபம். ஆகவே நான் நடக்கிறேன். ஆனால் அப்போதும் அதே அமைதியை நான் கொண்டிருக்கிறேன். நான் உட்கார்ந்திருக்கிறேன், உள்ளே நான் அமைதியாக இருக்கிறேன். நான் நடக்கிறேன், ஆனால் உள்ளே நான் அதே அமைதியோடு இருக்கிறேன்.''

உள்தன்மை எப்போதும் ஒன்றுதான்..... ஒரு பேரரசனைச் சந்திக்கும் போதும் சரி, ஒரு பிச்சைக்காரனைச் சந்திக்கும் போதும் சரி, ஒரு புத்தர் ஒன்று போலவே இருக்கிறார். அவருடைய உள்தன்மை ஒன்றாகவே இருக்கிறது. ஒரு பிச்சைக்காரனைச் சந்திக்கும் பொழுது அவர் மாறுவதில்லை. ஒரு பேரரசனைச் சந்திக்கும் பொழுதும் அவர் மாறுவதில்லை. அவர் ஒன்றாகவே இருக்கிறார். பிச்சைக்காரன் ஒன்றுமில்லாதவனும் அல்ல, பேரரசன் ஏதோ ஒன்று உள்ளவனும் அல்ல.

மேலும் உண்மையில் ஒரு புத்தரைச் சந்திக்கும் பொழுது பேரரசர்கள் பிச்சைக்காரர்களைப் போல உணர்ந்தார்கள், பிச்சைக்காரர்கள் பேரரசர்களைப்போல உணர்ந்தார்கள். அந்த மனிதன், அந்தத் தொடுதல், அந்தத் தன்மை ஒன்றாகவே இருக்கும்.

புத்தர் உயிரோடு இருக்கும் பொழுது தினந்தோறும் காலையில் அவருடைய சீடர்களிடம் அவர் சொல்வார், ''நீங்கள் ஏதாவது கேட்க வேண்டியிருந்தால் கேட்கலாம்.'' அவர் இறக்கும் நாளில் அன்று காலையிலும் அதே போல் நடந்தது. அவர் அவரது சீடர்களை அழைத்துச் சொன்னார், ''இப்போது நீங்கள் ஏதாவது கேட்க வேண்டுமானால் கேட்கலாம். மேலும் நினைவில் கொள்ளுங்கள்; இதுதான் கடைசிக் காலைப் பொழுது. இந்த நாள் முடியுமுன்பாக நான் இல்லாமல் போய் விடுவேன்.'' அவர் அதே போலவே இருந்தார். அவர் தினந்தோறும் கேட்கும் கேள்விதான் இது. அவர் அதே போலவே இருந்தார்! இன்று கடைசி நாள், ஆனாலும் அவர் அதே போலவே இருந்தார். மற்ற நாட்களைப் போலவே அவர் கேட்டார், ''சரி, நீங்கள் ஏதாவது கேட்க வேண்டுமென்றால் கேட்கலாம் - ஆனால் இதுதான் கடைசி நாள்.''

அவருடைய குரலில் எந்த மாற்றமும் இல்லை. ஆனால் சீடர்கள் அழத் தொடங்கிவிட்டனர். அவர்கள் எதைக் கேட்பதையும் மறந்துவிட்டனர்.

புத்தர் சொன்னார், ''ஏன் நீங்கள் அழுகிறீர்கள்? நீங்கள் வேறு ஏதாவது ஒரு நாள் அழுதிருந்தால் அப்போது அது சரியாய் இருந்திருக்கலாம். ஆனால் இன்று கடைசி தினம். நாளை வரும் பொழுது நான் இருக்க மாட்டேன். ஆகவே அழுவதில் நேரத்தை வீணாக்காதீர்கள். மற்றொரு நாளாய் இருந்தால் இது சரி, நீங்கள் நேரத்தை வீணாக்கலாம். நீங்கள் அழுவதில் நேரத்தை வீணாக்காதீர்கள். நீங்கள் ஏன் அழுகிறீர்கள்? நீங்கள் ஏதாவது கேட்க வேண்டியிருந்தால் கேளுங்கள்.'' அவர் வாழும் பொழுதும் இறக்கும் பொழுதும் ஒன்று போலவே இருந்தார்.

எனவே மூன்றாவதாக சுயத்தை அடைந்த மனிதன் எப்போதும் இலகுவாகவே இருப்பான். வாழ்வும் சாவும் ஒன்று போலவே இருக்கும்; பேரானந்தமும் துன்பமும் ஒன்று போலவே இருக்கும். எதுவும் அவனைப் பாதிப்பதில்லை. எதுவும் அவனை அவனது வீட்டிலிருந்து, அவனது மையம் கொண்ட தன்மையிலிருந்து, அசைப்பதில்லை. அப்படிப்பட்ட மனிதனிடம் நீ மேலும் கூட்டுவதற்கு எதுவும் இல்லை. நீ அவனிடமிருந்து எடுப்பதற்கு எதுவும் இல்லை. நீ அவனிடம் கூட்டுவதற்கு எதுவும் இல்லை. அவன் நிறைவடைந்தவன். அவனுடைய ஒவ்வொரு மூச்சும் நிறைவடைந்த அமைதியான பேரானந்தமான மூச்சாக இருக்கிறது. அவன் அடைந்து விட்டான். அவன் பிரபஞ்ச இருப்பை உயிர் இருப்பை அடைந்து விட்டான்; அவன் ஒரு முழு மனிதனாக மலர்ந்துவிட்டான்.

இது ஒரு முழுமையற்ற மலர்ச்சி அல்ல. புத்தர் ஒரு மாபெரும் கவிஞன் அல்ல, இருந்த போதிலும் அவர் சொல்வது எதுவாக இருந்தாலும் அது கவிதைதான். அவர் ஒரு கவிஞனே அல்ல. ஆனாலும் அவர் நடப்பதும் நகர்வதும் கூடக் கவிதைதான். அவர் ஒரு ஓவியன் அல்ல. ஆனாலும் அவர் பேசும் பொழுதெல்லாம் அவர் பேசுவது எல்லாம் ஒரு ஓவியமாக மாறுகிறது. அவர் ஒரு இசைக் கலைஞன் அல்ல, ஆனால் அவரது முழு இருப்பும் ஈடு இணை செய்ய முடியாத இசை. முழுதாக இருக்கும் மனிதன் அடைந்துவிட்டவன். எனவே இப்போது அவன் செய்வது எதுவாக இருந்தாலும் அல்லது செய்யாமலிருந்தாலும்.... அவன் அமைதியாக அமர்ந் திருக்கையில், எதுவும் செய்யாமலிருக்கையில், மௌனமாக இருக்கும்போதுகூட, அவன் இருப்பது மட்டுமே வேலை செய்யும், உருவாக்கும்; ஆகவே படைப்பாற்றல் மிக்கதாக இருக்கும்.

தந்தரா எந்த முழுமையற்ற வளர்ச்சியின் மேலும் அக்கறை கொண்டதல்ல. அது உன்னுடைய முழு இருப்பின் மேலும் அக்கறை கொண்டது. எனவே மூன்று விஷயங்கள்.

அடிப்படையானவை : நீ மையம் கொண்டவனாக, வேர் விட்டவனாக, சமநிலை உள்ளவனாக இருக்க வேண்டும். சமநிலை என்றால் எப்பொழுதும் நடுவில் இருப்பது - என்றாலும் எந்த முயற்சியும் இல்லாமல். ஏதாவது முயற்சி அங்கு இருந்தால் நீ சமநிலை பெற்றவன் அல்ல. மேலும் நீ இலகுவாக இருக்க வேண்டும். பேரண்டத்துடன் இலகுவாக, பிரபஞ்ச இருப்பே வீடாக, அப்போது பல விஷயங்கள் பின் தொடரும். இது ஒரு அடிப்படைத் தேவை. ஏனெனில் இந்தத் தேவை நிறைவடையாதவரை நீ பெயரளவில் மட்டுமே மனிதன். நீ ஒரு மனிதனாகும் சாத்தியமுள்ளவன் மட்டுமே, நீ நிஜமான மனிதன் அல்ல. நீ ஆக முடியும், உனக்கு அந்த ஆற்றல் இருக்கிறது. ஆனால் அந்த சாத்தியம் நிஜமாக்கப்பட வேண்டும்.

இரண்டாவது கேள்வி :

---

❖ தயவு கூர்ந்து சிந்தனை, கவனத்தைக் குவிப்பது மற்றும் தியானம் இவற்றை விளக்குக.

---

சிந்தனை என்பதன் அர்த்தம் திசை படுத்தப்பட்ட யோசனை. நாம் எல்லோரும் யோசிக்கிறோம்; அது சிந்தனை அல்ல. அந்த யோசனை திசையற்றது, தெளிவில்லாதது, எங்கும் கொண்டு சேர்க்காதது. உண்மையில் நம்முடைய யோசனைகள் சிந்தனை அல்ல. மாறாக இவை தொடர்பானவை என்று ப்ராய்டைச் சேர்ந்தவர்களால் அழைக்கப்படுகிறது. உன்னுடைய எந்த வழிகாட்டுதலும் இல்லாமலேயே ஒரு எண்ணம் மற்றொன்றிற்குப் போகிறது. எண்ணங்கள் அவைகளே ஒன்றி லிருந்து ஒன்றுக்குப் போய்க் கொள்கின்றன, ஏனெனில் அவை தொடர்பானவை.

நீ ஒரு நாய் வீதியைக் கடப்பதைப் பார்க்கிறாய். நீ அந்த நாயைப் பார்த்த கணத்திலேயே உனது மனம் நாய்களை பற்றிச் சிந்திக்க ஆரம்பிக்கும். அந்த நாய் உன்னை இந்த எண்ணத்திற்குக் கொண்டு போய் விட்டது. இப்போது மனதிற்குப் பல தொடர்பு கள் உள்ளன. நீ குழந்தையாய் இருந்த பொழுது ஒரு குறிப்பிட்ட

நாயைப் பார்த்து நீ பயந்திருப்பாய், இப்போது அந்த நாய் மனதில் தோன்றும், பிறகு குழந்தைப் பருவம் மனதில் வரும். பிறகு நாய்கள் மறக்கப்பட்டு விடும்; பிறகு தொடர்பினால் நீ குழந்தைப் பருவத்தைப் பற்றிப் பகல் கனவு காண ஆரம்பிப்பாய். பிறகு அந்தக் குழந்தைப் பருவம் மற்ற பலதுடன் தொடர்பை ஏற்படுத்தும், நீ அவற்றுடன் நகர்வாய்.

நீ இலகுவாக இருக்கும் பொழுது உனது எண்ணங்களின் பின்னோக்கிப் போக முயற்சி செய். அவை எங்கிருந்து வந்தன என்று பார், பின்னால் போ, வந்த வழியிலேயே நட. அப்போது வேறொரு எண்ணம் அங்கு இருப்பதை நீ பார்ப்பாய். அதிலிருந்து தான் இந்த எண்ணம் வந்திருக்கும். ஆனால் அவை தர்க்கரீதியாகத் தொடர்புள்ளவையாக இருக்காது. ஏனெனில் இப்போது வீதியைக் கடக்கும் ஒரு நாய் எப்படி உன்னுடைய குழந்தைப் பருவத்துடன் தொடர்புள்ளதாய் இருக்க முடியும்?

அங்குத் தர்க்கரீதியான தொடர்பு இருக்காது. வெறும் மனதின் தொடர்புகளே இருக்கும். நான் வீதியைக் கடந்தால் அதே நாய் என்னை என்னுடைய குழந்தைப் பருவத்திற்கு எடுத்துச் செல்லாது, அது வேறு எதற்காவது எடுத்துச் செல்லும். ஒரு மூன்றாவது மனிதனுக்கு இன்னும் வேறு எதற்காவது எடுத்துச் செல்லும். ஒவ்வொருவருடைய மனத்திலும் தொடர்பு சங்கிலிகள் உள்ளன. எந்த ஒரு மனிதனிடமும் ஏதோ ஒரு நிகழ்ச்சி, ஏதோ ஒரு விபத்து, அந்தச் சங்கிலித் தொடரைத் தூண்டுகிறது. பிறகு மனம் ஒரு கம்ப்யூட்டரைப் போல வேலை செய்ய ஆரம்பிக்கிறது, பிறகு ஒன்று மற்றொன்றிற்கு எடுத்துச் செல்கிறது, மற்றொன்று வேறொன்றிற்கு எடுத்துச் செல்கிறது, இப்படி நீ போய்க் கொண்டே இருக்கிறாய், நாள் முழுவதும் நீ இதைச் செய்து கொண்டே இருக்கிறாய்.

உனது மனதில் வருவது எதுவாயிருந்தாலும் அதை ஒரு பேப்பரில் எழுது, நேர்மையுடன். உனது மனதில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று நீ ஆச்சரியப்பட்டுப் போவாய்.

இரண்டு எண்ணங்களுக்கு இடையே எந்தச் சம்பந்தமும் இல்லை. மேலும் நீ இந்த விதமாக யோசித்துக் கொண்டே போய்க் கொண்டிருக்கிறாய். இதையா நீ யோசனை என்று அழைக்கிறாய்? இது ஒரு எண்ணத்திற்கு மற்றொன்றோடு உள்ள தொடர்பு மட்டுமே. மேலும் அவை தங்களைத் தாங்களே வழி நடத்திக் கொள்கின்றன.... நீ எடுத்துச் செல்லப்படுகிறாய்.

யோசனை சிந்தனையாக மாறுகிறது, அது தொடர்புகளின் மூலமாக நகராமல் செலுத்தப்படும்போது, நீ ஒரு குறிப்பிட்ட பிரச்சனையில் ஈடுபட்டிருக்கிறாய் - அப்போது நீ எல்லாத் தொடர்புகளையும் அடைப்புக்கு வெளியே விட்டு விடுகிறாய். நீ அந்தப் பிரச்சனையில் மட்டும் நகருகிறாய், நீ உனது மனத்தைச் செலுத்துகிறாய். மனம் ஏதாவது ஒரு கிளைப் பாதையில் ஏதாவது ஒரு துணை வழியில் ஏதாவது ஒரு தொடர்பில் தப்பிக்க முயற்சி செய்யும். நீ எல்லாத் துணை வழிகளையும் வெட்டி விடுகிறாய்; ஒரே ஒரு பாதையில் மட்டும் நீ உனது மனதைச் செலுத்துகிறாய்.

ஒரு பிரச்சனையில் வேலை செய்யும் ஒரு விஞ்ஞானி சிந்தனையிலிருப்பவர். ஒரு பிரச்சனையில் ஈடுபட்டிருக்கும் ஒரு தர்க்கவாதி, ஒரு பிரச்சனையில் ஈடுபட்டிருக்கும் ஒரு கணித மேதை சிந்தனையிலிருக்கிறார். ஒரு கவிஞன் ஒரு மலரைப் பற்றிச் சிந்திக்கிறான். அப்போது முழு உலகமும் அடைப்புக்கு வெளியே விடப்படுகிறது, வெறும் அந்தப் பூவும் அந்தக் கவிஞனும் மட்டுமே இருக்கிறார்கள், அவன் அந்தப் பூவினுள் புகுந்து விடுகிறான். கிளைப் பாதைகளிலிருந்து பலதும் அவனைக் கவரலாம். ஆனால் அவன் மனதை எங்கும் அலையவிடுவதில்லை. மனம் ஒரே நேர்கோட்டில் நகருகிறது, செலுத்தப்படுகிறது - இதுதான் சிந்தனை.

விஞ்ஞானம் சிந்தனையை அடிப்படையாகக் கொண்டது. சிந்தனை என்பது எந்தத் தர்க்கரீதியான யோசனையும், செலுத்தப் படுகின்ற எண்ண ஓட்டமும், வழி நடத்தப்படுகின்ற யோசனை யும் ஆகும். சாதாரண யோசனை மடத்தனமானது. சிந்தனை தர்க்க ரீதியானது பகுத்தறிவு கொண்டது.

பிறகு கவனத்தைக் குவிப்பது வருகிறது. கவனத்தைக் குவிப்பது என்பது ஒரே புள்ளியில் இருப்பது. அது யோசிப்ப தல்ல, சிந்திப்பதல்ல. அது உண்மையில் ஒரே புள்ளியில் இருப்பது. அது மனதைச் சிறிதும் அசைய அனுமதிக்காம லிருப்பது. சாதாரண யோசனையில் மனம் ஒரு பைத்தியக் காரனைப் போல அலைகிறது. சிந்தனையில் அந்தப் பயித்தியக் காரன் செலுத்தப்படுகிறான், வழி நடத்தப்படுகிறான்; அவன் எங்கும் தப்பிக்க முடியாது. கவனத்தைக் குவிப்பதில் மனம் அசைய அனுமதிக்கப்படுவதில்லை. சாதாரண யோசனையில் அது எங்கு வேண்டுமானாலும் அசைய அனுமதிக்கப்படுகிறது; சிந்தனையில் குறிப்பிட்ட இடத்திற்கு மட்டுமே செல்ல அனுமதிக்கப்படுகிறது; கவனத்தைக் குவிப்பதில் அது அசைவதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. அது ஒரே ஒரு புள்ளியில் இருக்க மட்டுமே அனுமதிக்கப்படுகிறது. முழு சக்தியும், முழு அசைவும் நின்று விடுகிறது, ஒரே புள்ளியைப் பிடித்துக் கொண்டிருக்கிறது.

யோகா கவனத்தைக் குவிப்பதில் ஈடுபாடு கொண்டது. சாதாரண மனம் இலக்கற்ற யோசனையில், விஞ்ஞான மனம் இலக்குள்ள சிந்தனையில் ஈடுபாடு கொண்டது. யோக மனத்தில் எண்ணம் ஒரே புள்ளியில் நிலைத்திருக்கிறது, குவிந்திருக்கிறது; எந்த அசைவும் அனுமதிக்கப்படுவதில்லை.

இதன் பிறகு தியானம் வருகிறது. சாதாரண யோசனையில் மனம் எங்கு வேண்டுமானாலும் போவதற்கு அனுமதிக்கப் படுகிறது. சிந்தனையில் அது ஒரே ஒரு திசையில் மட்டுமே அனுமதிக்கப்படுகிறது, மற்ற எல்லாத் திசைகளும் துண்டிக்கப் படுகின்றன. கவனத்தைக் குவிப்பதில் அது ஒரே திசையில் செல்வதற்குக் கூட அனுமதிக்கப்படுவதில்லை; அது ஒரே புள்ளியில் கவனத்தைக் குவிப்பதற்கு மட்டுமே அனுமதிக்கப் படுகிறது. தியானத்தில் மனம் என்பதே அனுமதிக்கப்படுவ தில்லை. தியானம் என்பது மனமற்ற நிலை.

இவைதான் நான்கு நிலைகள்; சாதாரண யோசனை, சிந்தனை, கவனத்தைக் குவித்தல், தியானம்.

தியானம் என்பதன் அர்த்தம் மனமற்ற நிலை – கவனத்தைக் குவித்திருப்பது கூட அனுமதிக்கப்படுவதில்லை. மனம் அங்கு இருப்பதற்கே அனுமதிக்கப்படுவதில்லை! அதனால்தான் தியானத்தை மனதால் புரிந்துகொள்ள முடிவதில்லை. கவனத்தைக் குவிப்பது வரை மனதிற்கு ஒரு வழி, ஒரு சாத்தியம் இருக்கிறது. மனம் கவனத்தைக் குவிப்பதைப் புரிந்துகொள்ள முடியும். ஆனால் தியானத்தைப் புரிந்து கொள்ள முடியாது. உண்மையில் மனம் என்பதே அங்கு அனுமதிக்கப்படுவதில்லை. கவனத்தைக் குவிப்பதில் மனம் ஒரு புள்ளியில் இருக்க அனுமதிக்கப்படுகிறது. தியானத்தில் அந்தப் புள்ளியும் நீக்கப் பட்டு விடுகிறது. சாதாரண யோசனையில் எல்லாத் திசைகளும் திறந்திருக்கின்றன. சிந்தனையில் ஒரே ஒரு திசை மட்டும் திறந்திருக்கின்றது. கவனத்தைக் குவிப்பதில் ஒரே ஒரு புள்ளி மட்டும் திறந்திருக்கிறது – எந்தத் திசையும் இல்லை. தியானத்தில் அந்தப் புள்ளி கூடத் திறந்திருப்பதில்லை; மனம் இருப்பதற்கே அனுமதிக்கப்படுவதில்லை.

சாதாரண யோசனை என்பது சாதாரணமான மனதின் நிலை, தியானம் என்பது உச்ச கட்ட சாத்தியக் கூறு. சாதாரண யோசனை, தொடர்புகள் என்பது மிகவும் கீழானது. தியானம் என்பது மிகவும் உயர்ந்தது, சிகரமானது – மனமற்றது.

இரண்டாவது கேள்வியோடு இதுவும் கேட்கப்பட்டுள்ளது, **''சிந்தனையும் கவனத்தைக் குவிப்பதும் மனதின் செயல்பாடுகள். மனமற்ற நிலையை அடைவதற்கு மனதின் செயல்பாடுகள் எப்படி உதவ முடியும்?''**

இந்தக் கேள்வி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. மனம் கேட்கிறது, மனம் அதுவே மனதைத் தாண்டி எப்படிப் போக முடியும்? மனம் அல்லாத ஒன்றை அடைவதற்கு மனசெயல் பாடுகள் எப்படி உதவ முடியும்? இது முரண்பாடாகத்

தெரிகிறது. மனம் அல்லாத ஒரு நிலையை உருவாக்கும் முயற்சியில் மனம் எப்படி ஈடுபட முடியும்?

புரிந்து கொள்ள முயற்சி செய். மனம் இருக்கும் பொழுது அங்கு என்ன இருக்கிறது? ஒரு யோசிக்கும் செயல்பாடு. மனம் இல்லாத பொழுது அங்கு என்ன இருக்கிறது? யோசிக்கும் செயல்பாடு இருப்பதில்லை. நீ யோசிக்கும் செயல்பாட்டைக் குறைத்துக் கொண்டே வந்தால், நீ உனது சிந்தனையைக் கரைத்துக் கொண்டே வந்தால், சிறிது சிறிதாக, மெதுவாக நீ மனமற்றதை அடைகிறாய். மனம் என்பதன் அர்த்தம் யோசித்துக் கொண்டிருத்தல்; மனம் இல்லை என்பதன் அர்த்தம் யோசனையே இல்லாமல் இருப்பது. இதற்கு மனம் உதவ முடியும். மனம் தற்கொலை செய்து கொள்வதற்கு மனமே உதவ முடியும். நீ தற்கொலை செய்து கொள்ள முடியும்; நீ ஒருபோதும், உயிரோடு இருக்கும் மனிதன், அவன் இறப்பதற்கு எப்படி உதவ முடியும் என்று கேட்பதில்லை. நீ உயிரோடு இருக்கிறாய், ஆனாலும் நீ இறந்து விடுவதற்கு நீயே உதவ முடியும். மனம் இல்லாமல் போவதற்கு மனமே உதவ முடியும். மனம் எப்படி உதவ முடியும்?

யோசித்துக் கொண்டிருக்கும் செயல்பாடு மேலும் மேலும் அதிகமாகும் பொழுது நீ மனதிலிருந்து அதிக மனதை நோக்கிப் போகிறாய். யோசித்துக் கொண்டிருக்கும் செயல்பாடு குறையும் பொழுது, மெதுவானதாக ஆகும் பொழுது, அடர்த்தி குறையும் பொழுது, நீ மனமில்லாதவனாக நீயே உதவி செய்து கொள்கிறாய். இது உன்னைப் பொருத்ததே. மேலும் மனம் உதவ முடியும். ஏனெனில் உண்மையில், மனம் என்பது நீ இந்த இப்பொழுதுள்ள கணத்தில் உனது தன்னுணர்வை வைத்துக் கொண்டு என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்பதே. நீ உனது தன்னுணர்வை அப்படியே தனியே விட்டு விட்டால், அதைக் கொண்டு எதையும் செய்யாமல் இருந்து விட்டால் அது தியான மாகிறது.

எனவே இரண்டு சாத்தியக் கூறுகள் உள்ளன; ஒன்று நீ மெதுவாக, சிறிது சிறிதாக, படிப்படியாக உனது மனதைக் குறைத்துக் கொண்டே வருகிறாய். ஒரு சதம் அது குறைந்தால், அப்போது நீ தொன்னூற்று ஒன்பது சதம் மனமும் ஒரு சதம் மனமற்றதும் உனக்குள் இருக்கும். இது நீ உன்னுடைய அறையிலிருந்து சில பொருட்களை அகற்றிவிட்டது போல – அப்போது அங்குச் சிறிது இடம் ஏற்படுகிறது. பிறகு நீ மேலும் பொருட்களை அகற்றுகிறாய், அப்போது மேலும் இடம் அங்கு உண்டாகிறது. நீ எல்லாப் பொருட்களையும் அகற்றிவிடும் பொழுது அந்த முழு அறையும் வெற்றிடமாக, வெற்று வெளியாக மாறிவிடுகிறது.

உண்மையில் பொருட்களையெல்லாம் அகற்றியதால் வெற்றிடம் உருவாக்கப்படவில்லை, அந்த வெற்றிடம் ஏற்கனவே அங்கே இருந்தது. ஆனால் அந்த வெற்றிடம் பொருட்களால் நிரப்பப்பட்டிருந்தது அவ்வளவே. நீ பொருட்களை அகற்றிய பொழுது, வெளியிலிருந்து எந்த வெற்றிடமும் உள்ளே வரவில்லை; அந்த வெற்றிடம் அங்கேயே இருந்தது, பொருட்களால் நிரப்பப்பட்டிருந்தது. நீ பொருட்களை அகற்றினாய், அந்த வெற்றிடம் திரும்பக் கிடைத்தது, திரும்பப் பெறப் பட்டது. அடி ஆழத்தில் மனம் என்பது நிரப்பப்பட்டுள்ள வெற்றிடம்தான், எண்ணங்களால் நிறைந்துள்ளது. நீ சில எண்ணங்களை அகற்றினால் வெற்றிடம் உண்டாகிறது அல்லது கண்டுபிடிக்கப்படுகிறது அல்லது திரும்பக் கிடைக்கிறது. நீ உனது எண்ணங்களை அகற்றிக் கொண்டே போகும் பொழுது சிறிது சிறிதாக உனது வெற்றிடத்தை நீ திரும்பப் பெற்றுக் கொண்டே போகிறாய். இந்த வெற்றிடம் தான் தியானம்.

மெதுவாக இதைச் செய்யலாம் – திடீரெனவும் செய்யலாம். பிறவி பிறவியாகப் பொருட்களை அகற்றிக் கொண்டிருக்கத் தேவை இல்லை. ஏனெனில் பிரச்சனைகள் அவைதான். நீ பொருட்களை அகற்றும் முதல் கட்டத்தில் ஒரு சதவீத வெற்றிடம் உண்டாகிறது. தொன்னூற்று ஒன்பது

சதவீத வெற்றிடம் நிரப்பபப்பட்டுள்ளது. அந்த நிரப்பப்பட்ட தொன்னூற்று ஒன்பது சதவீத இடம் இந்தக் காலியான வெற்றிடத்தைப் பற்றி நன்றாக உணர்வதில்லை; அது அதையும் நிரப்ப முயற்சி செய்கிறது. ஆகவே ஒருவன் மெதுவாக எண்ணங்களைக் குறைத்துக் கொண்டு போகிறான். பிறகு மறுபடியும் புது எண்ணங்களை உருவாக்கிக் கொள்கிறான்.

காலையில் சிறிது நேரம் நீ தியானத்தில் அமர்கிறாய்; நீ உனது எண்ணங்களின் செயல்பாட்டைக் குறைக்கிறாய். பிறகு நீ மார்க்கெட்டிற்குப் போகிறாய். அங்கு மறுபடியும் எண்ணங்கள் கூட்டமாக வந்து சேர்கின்றன. அந்த இடம் மறுபடியும் நிரப்பப் படுகிறது. மறுநாள் நீ மறுபடியும் இதைச் செய்கிறாய். நீ இதைச் செய்து கொண்டே இருக்கிறாய் – எண்ணங்களை வெளியே வீசுவது, எண்ணங்களைத் திரும்ப அழைத்துக் கொள்வது. நீ எல்லா பொருட்களையும் திடீரென வெளியில் வீசவும் முடியும். அது உன்னுடைய முடிவு. அது கடினம், ஏனெனில் நீ அந்தப் பொருட்களுக்குப் பழக்கப்பட்டு விட்டாய். நீ அவை இல்லாமல் சிரமமாய் உணரலாம். உனக்கு அந்த வெற்றிடத்தை என்ன செய்வது என்று தெரியாது. நீ அந்த வெற்றிடத்திற்குள் போவதற்குக் கூடப் பயப்படலாம். நீ ஒரு போதும் அது போன்ற சுதந்திரத்திற்குள் நுழைந்தது கிடையாது.

மனம் என்பது ஒரு கட்டமைப்பு. நாம் எண்ணங்களுக்குப் பழகிப் போய் இருக்கிறோம். நீ எப்போதாவது கவனித்தது உண்டா – அப்படிக் கவனித்தது இல்லையென்றால் இப்போது கவனி – அதாவது நீ தினந்தோறும் ஒரே எண்ணங்களிலேயே திரும்பத் திரும்ப உழல்கிறாய். நீ ஒரு கிராமபோன் இசைத்தட்டைப் போல, அதுவும் ஒரு புதியதான ஒரு புதுமையான ஒன்றல்ல – மிகவும் பழையது. நீ அதே விஷயங்களையே திரும்பத் திரும்பச் செய்து கொண்டே போகிறாய், ஏன்? இதனால் என்ன பயன்? ஒரே ஒரு பயன்தான். இது ஒரு வெறும் மிக நீண்ட கால பழக்கம்; இதன் மூலம் ஏதோ செய்து கொண்டு இருப்பதாக நீ உணர்கிறாய்.

நீ உனது படுக்கையில் படுத்துக் கொண்டு உறக்கம் வருவதற்காகக் காத்திருக்கிறாய், அப்போது தினந்தோறும் ஒரே விஷயங்கள் திரும்பத் திரும்ப நடக்கின்றன. நீ ஏன் இதைச் செய்ய வேண்டும்? இது ஒரு விதத்தில் உதவுகிறது. பழைய பழக்கங்கள், கட்டமைப்புகள் உதவுகின்றன. ஒரு குழந்தைக்கு ஒரு பொம்மை வேண்டும். அதனிடம் அந்தப் பொம்மையைக் கொடுத்தால் அது தூக்கத்தில் ஆழந்துவிடும். பிறகு அந்தப் பொம்மையை நீ எடுத்துவிடலாம். ஆனால் அந்தப் பொம்மை அங்கு இல்லையென்றால் அந்தக் குழந்தையால் உறங்க முடியாது. இது ஒரு கட்டமைப்பு. குழந்தையிடம் பொம்மை யைக் கொடுக்கும் கணத்திலேயே அது அதனுடைய மனதில் வேறொன்றைத் தட்டி விடுகிறது. இப்போது அது தூக்கத்தில் விழத் தயாராகி விடுகிறது.

இதுவே தான் உன்னிடமும் நடந்து கொண்டிருக் கிறது.பொம்மைகள் மாறியிருக்கலாம். ஒருவனுக்கு, ''ராமா, ராமா, ராமா, ராமா.....'' என்று ஜபிக்க ஆரம்பிக்கவில்லை யென்றால், தூக்கத்தில் விழ முடியாது. அவன் தூக்கத்தில் விழ முடியாது! இது ஒரு பொம்மை. அவன் ''ராமா ராமா ராமா....'' என்று ஜபிக்கும் பொழுது பொம்மை அவனிடம் கொடுக்கப்பட்டு விட்டது; அவன் தூக்கத்தில் விழ முடியும்.

நீ புதிய அறையில் தூக்கத்தில் விழுவதற்குச் சிரமமாக உணர்கிறாய். நீ குறிப்பிட்ட துணிகளோடு தூங்கிப் பழகியிருந் தால் அப்போது அந்தக் குறிப்பிட்ட துணிகள் தினந்தோறும் உனக்குத் தேவைப்படும். நீ இரவு ஆடையில் உறங்கிப் பழகியிருந்தால், அது உனக்குக் கொடுக்கப்படாவிட்டால் நீ தூக்கத்தில் விழுவதற்குச் சிரமப்படுவாய் என்று உளவியலாளர் கள் சொல்கிறார்கள். ஏன்? நீ ஒருபோதும் அம்மணமாக உறங்காதவனாய் இருந்து உன்னிடம் அம்மணமாக உறங்கச் சொன்னால், நீ இலகுவாக உணரமாட்டாய், ஏன்? அம்மணமாய் இருப்பதற்கும் உறக்கத்திற்கும் இடையே எந்தத் தொடர்பும் இல்லை. ஆனால் உன்னைப் பொருத்தவரை தொடர்பிருக்கிறது,

பழைய பழக்கம். பழைய பழக்கங்களுடன் ஒருவன் இலகுவாக, சௌகரியமாக உணர்கிறான்.

எண்ணங்களின் அமைப்பு முறைகளும் வெறும் பழக்கங் களே. தினந்தோறும் அதே எண்ணங்கள், அதே வழக்கமானவை என்பதில் நீ சௌகரியமாக உணர்கிறாய். நீ எல்லாமும் சரியாக இருப்பதாக உணர்கிறாய்.

உனது எண்ணங்களில் உன்னுடைய முதலீடுகள் உள்ளன. இதுதான் பிரச்சனை. உன்னுடைய பொருட்களெல்லாம் வீசி எறிந்துவிடக் கூடிய வெறும் குப்பைகளல்ல. நீ அவற்றில் பல பல விஷயங்களை முதலீடு செய்துள்ளாய். எல்லாப் பொருட் களையும் உடனே வீசி எறிந்துவிட முடியும், அது முடியக் கூடியதே! திடீர் முறைகள் இருக்கின்றன, அதைப் பற்றியும் நாம் பேசப் போகிறோம். உடனே, இந்தக் கணத்திலேயே, உனது மனதிலுள்ள எல்லாப் பொருட்களிலிருந்தும் நீ விடுபட முடியும். ஆனால் அப்போது திடீரென நீ வெற்றிடமாய், காலியாய் இருப்பாய், அப்போது நீ யாரென்பது உனக்குத் தெரியாது. அந்தச் சமயத்தில் என்ன செய்வதென்று உனக்குத் தெரியாது. ஏனெனில் முதல் தடவையாக உனது பழைய வழக்கமான எதுவும் அங்கு இல்லை. இந்த அதிர்ச்சி மிகவும் திடீரென உனக்குக் கிடைக்கிறது. இதனால் நீ இறந்து கூடப் போகலாம், அல்லது நீ பயித்தியம் ஆகிவிடலாம்.

இதனால் தான் திடீர் முறைகள் பயன்படுத்தப் படுவ தில்லை. ஒருவன் அதற்குத் தயாரானால் ஒழிய, திடீர் முறைகள் பயன்படுத்தப்படுவதில்லை. ஒருவன் திடீரெனப் பயித்தியம் ஆகிவிடலாம். ஏனெனில் ஒருவன் எல்லா நங்கூரங்களையும் இழந்து விடுகிறான். உடனடியாக இறந்த காலம் காணாமல் போய் விடுகிறது. இறந்த காலம் காணாமல் போய்விடும் போது, உடனடியாக உன்னால் எதிர்காலத்தையும் நினைத்துப் பார்க்க முடிவதில்லை. ஏனெனில் எப்பொழுதும் இறந்த காலத்தின் சுவடுகளில் தான் எதிர்காலம் உருவாக்கப்படுகிறது.

ஆனால் வெறும் நிகழ் காலமே இப்போது இருக்கிறது. மேலும் நீ ஒருபோதும் நிகழ்காலத்தில் இருந்ததில்லை. நீ இறந்த காலத்தில் இருந்திருக்கிறாய் அல்லது நீ எதிர்காலத்தில் இருந்திருக்கிறாய். எனவே முதல் முறையாக நீ வெறும் நிகழ் காலத்தில் இருக்கும் பொழுது, உனக்குப் பயித்தியம் பிடித்து விட்டதைப் போல, மூளை கலங்கி விட்டதைப் போல நீ உணர்வாய். நீ ஒரு ஞானப் பள்ளியின் பயில்வானாக இருந்தால் மட்டுமே, நீ ஒரு குருவிடம் பயிலும் ஒரு குழுவில் இருந்தால் மட்டுமே, நீ முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டிருந்தால் மட்டுமே, நீ உன்னுடைய வாழ்க்கை முழுவதையுமே தியானத்திற்காகக் கொடுத்திருந்தால் மட்டுமே, திடீர் முறைகளைப் பயன்படுத்த முடியும்.

எனவே படிப்படியான முறைகள் நல்லவை. அவை நீண்ட காலம் எடுத்துக் கொள்ளும். ஆனால் மெதுமெதுவாக நீ அந்த இடத்திற்குப் பழக்கப்பட்டு விடுவாய். நீ அந்த இடத்தை, அந்த இடத்தின் அழகை, அந்த இடத்தின் பேரானந்தத்தை உணர ஆரம்பிக்கிறாய், பிறகு உனது பொருட்கள் மெதுமெதுவாக நகற்றப்படுகின்றன.

சாதாரண யோசனையிலிருந்து சிந்தனைக்கு மாறுவது நல்லது – இதுதான் படிபடியான முறை. சிந்தனையிலிருந்து கவனத்தைக் குவிப்பதற்கு மாறுவது நல்லது – இது படிப்படி யான முறை. பிறகு கவனத்தைக் குவிப்பதிலிருந்து தியானத் திற்குக் குதிப்பது நல்லது. இதில் நீ மெதுவாக நகர்கிறாய், ஒவ்வொரு காலடியிலும் நிலத்தை உணர்ந்து கொண்டு நகர்கிறாய். நீ உண்மையில் ஒரு அடி எடுத்து வைத்து அதில் வேர்விட்ட பின்பே மற்றொரு அடி எடுத்து வைக்க ஆரம்பிக் கிறாய். இது எட்டிக் குதிப்பது அல்ல. படிப்படியான வளர்ச்சி இது. எனவே இந்த நான்கு விஷயங்களும் சாதாரண யோசனை, சிந்தனை, கவனக்குவிப்பு, தியானம் – நான்கு படிகளாகும்.

**மூன்றாவது கேள்வி :**

❖ **''நாபி மையத்தின் வளர்ச்சி, இதயம் மற்றும் தலை மையங்களின் வளர்ச்சியிலிருந்து முற்றிலும் தனியானதும் , சுதந்திரமானதுமா அல்லது நாபி மையம், இதயம் மற்றும் தலை மையங்களின் வளர்ச்சியோடு சேர்ந்தாற் போல நடப்பதா? மேலும், நாபி மையத்திற்கான பயிற்சியும், யுக்திகளும் வளர்ச்சிக்கான பயிற்சிகள் மற்றும் யுக்திகளி லிருந்து மாறுபடுகிறதா?''**

ஒரு அடிப்படை விஷயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் : இதயம் மற்றும் தலை மையங்கள் வளர்த்தப்பட வேண்டும், நாபி மையம் அப்படியல்ல. நாபி மையம் கண்டு பிடிக்கப்பட மட்டுமே வேண்டும், அது வளர்த்தப்பட வேண்டிய தில்லை. நாபி மையம் ஏற்கனவே அங்கிருக்கிறது. நீ அதைத் தோண்டிப் பார்க்க வேண்டும், கண்டுபிடிக்க வேண்டும், அவ்வளவே. அது முழுதாக வளர்ந்தே உள்ளது. நீ அதை வளர்த்த வேண்டியதில்லை. இதய மையமும், தலை மையமும் வளர்த்தப் படுபவை. அவை அங்கே கண்டு கொள்வதற்கு இருப்பதில்லை, அவை வளர்த்தப்பட வேண்டியவை. சமூகம், பண்பாடு, கல்வி, சமூகக் கட்டுப்பாடுகள் இவை வளர்வதற்கு உதவுகின்றன.

ஆனால் நீ நாபி மையத்துடன் பிறந்துள்ளாய். நாபி மையம் இல்லாமல் நீ இருக்க முடியாது. இதய மையம் இல்லாமல் நீ இருக்க முடியும், தலை மையம் இல்லாமல் நீ இருக்க முடியும். அவை தேவைகளல்ல; அவை இருப்பது நல்லது. அவை இல்லாமலும் நீ இருக்கலாம். அது மிகவும் சௌகரியமற்றதாக இருக்கும். ஆனாலும் அவைகள் இல்லாமல் நீ இருக்க முடியும், எப்படி இருந்தாலும் நாபி மையம் இல்லாமல் நீ இருக்க முடியாது. இது ஒரு தேவை, இது உனது வாழ்க்கை.

எனவே இதய மையத்தை எப்படி வளர்ப்பது என்பதற்குப் பல யுக்திகள் உள்ளன – அன்பில் எப்படி வளர்வது, நுட்பமான உணர்வை எப்படி வளர்த்துக் கொள்வது, நுட்பமான உணர்வுள்ள

மனதை எப்படிப் பெறுவது என்பதற்கு யுக்திகள் உள்ளன. அதிக பகுத்தறிவோடு அதிக தர்க்கத்தோடு ஆவதற்கான யுக்திகள், முறைகள் உள்ளன. காரண அறிவை வளர்த்துக்கொள்ள முடியும், உணர்ச்சிகளை வளர்த்துக்கொள்ள முடியும், ஆனால் இருத்தலை வளர்த்துக்கொள்ள முடியாது. அது ஏற்கனவே அங்கு இருக்கிறது; அது கண்டுபிடிக்கப்பட வேண்டியது மட்டுமே.

இதில் பல விஷயங்கள் அடங்கியுள்ளன. ஒன்று : உன்னால் ஐன்ஸ்டீனை போல ஒரு பகுத்துணரும் தன்மை உள்ள ஒரு மனதைப் பெற முடியாமல் போகலாம். ஆனால் நீ ஒரு புத்தராக முடியும். ஐன்ஸ்டீனில், தலை மையம் அதனுடைய மிக உயர்ந்த சரியான நிலையில் வேலை செய்வதாய் இருக்கிறது. அல்லது வேறு யாரோ ஒருவர்..... ஒரு நேசிப்பவன். ஒரு மஜ்னுவில் இதய மையம் அதனுடைய மிக உணர்ந்த சரியான நிலையில் வேலை செய்வதாய் இருக்கிறது. நீ ஒரு மஜ்னுவாக மாற முடியாமல் போகலாம். ஆனால் நீ ஒரு புத்தராக முடியும். ஏனெனில் புத்ததன்மையை நீ வளர்க்க வேண்டியதில்லை. அது ஏற்கனவே அங்கு இருக்கிறது. அது அடிப்படை மையத்தோடு அசலான மையத்தோடு, அதாவது நாபியோடு தொடர்புள்ளது. அது ஏற்கனவே அங்கு இருக்கிறது. நீ ஏற்கனவே ஒரு புத்தர், விழிப்புணர்வு மட்டுமே இல்லை.

நீ ஏற்கனவே ஒரு ஐன்ஸ்டீன் அல்ல. நீ முயற்சிக்க வேண்டும், அப்போது கூட நீ அது போல ஆவாய் என்பதற்கு எந்த வாக்குறுதியும் இல்லை. எந்த வாக்குறுதியும் இல்லை. ஏனெனில் உண்மையில் அது சாத்தியமற்றதாகத் தெரிகிறது. அது ஏன் சாத்தியமற்றதாகத் தெரிகிறது? ஏனெனில் ஐன்ஸ்டீனுடைய தலையை உருவாக்க அவருக்குக் கொடுக்கப்பட்ட அதே பயிற்சி கள் அதே விவரங்கள் அதே வளர்ச்சி தேவை. திரும்பவும் அப்படிச் செய்ய முடியாது. ஏனெனில் அது திரும்பச் செய்யக் கூடியது அல்ல. முதலில் நீ அதே பெற்றோர்களைக் கண்டுபிடிக்க

வேண்டும். ஏனெனில் பயிற்சி கருப்பையிலேயே துவங்குகிறது. அதே பெற்றோர்களைக் கண்டுபிடிப்பது மிகக் கடினம் - சாத்தியமேயில்லை. எப்படி நீ அதே பெற்றோர்களைக் கண்டு பிடிப்பாய், அதே பிறந்த தினத்தை, அதே வீட்டை, அதே தொடர்புகளை, அதே நண்பர்களை? நீ ஐன்ஸ்டீனின் வாழ்க்கையைச் சிறிது கூட மாறாமல் அப்படியே திரும்ப நிகழ்த்த வேண்டும் - அதே! ஒரு புள்ளி தப்பினால் கூட நீ ஒரு மாறுபட்ட மனிதனாக இருப்பாய்.

ஆகவே இது சாத்தியமற்றது. எந்த ஒரு தனிமனிதனும் இந்தப் பூமியில் ஒரு முறை தான் பிறக்கிறான். ஏனெனில் அதே சூழ்நிலையைத் திரும்பக் கொண்டு வர முடியாது. அதே சூழ்நிலை என்பது மிகப் பெரிய நிகழ்வு. இதன் அர்த்தம் அதே கணத்தில் அதே உலகம் கண்டிப்பாக வேண்டும்! இது சாத்தியமற்றது - இது எந்த விதத்திலும் சாத்தியமில்லை. மேலும் நீ ஏற்கனவே இங்கிருக்கிறாய். ஆகவே நீ எது செய்வதாக இருந்தாலும் உன்னுடைய இறந்த காலம் அதில் இருக்கும். நீ ஒரு ஐன்ஸ்டீன் ஆக மாற முடியாது. தனித்தன்மையை மீண்டும் உருவாக்க முடியாது.

புத்தர் ஒரு தனி மனிதரல்ல, புத்தர் ஒரு நிகழ்வு. எந்தத் தனிப்பட்ட விஷயங்களும் அர்த்தமுள்ளவை அல்ல; ஒரு புத்தரா வதற்கு நீ இருப்பது மட்டுமே போதும். மையம் ஏற்கனவே அங்குச் செயல்பட்டு கொண்டிருக்கிறது. நீ அதைக் கண்டுபிடிக்க மட்டுமே வேண்டும். எனவே இதயத்திற்கான யுக்திகள் ஏதோ ஒன்றை வளர்ப்பதற்கான யுக்திகள். ஆனால் நாபி மையம் சம்பந்தப்பட்ட யுக்திகள் கண்டுபிடிப்பதற்கான யுக்திகள். நீ தோண்டிப் பார்க்க வேண்டும். நீ ஏற்கனவே ஒரு புத்தர், நீ அந்த உண்மையை அறிந்துகொள்ள வேண்டும் அவ்வளவே.

இரண்டு வகையான மனிதர்கள் இருக்கிறார்கள் - தாங்கள் புத்தர்கள் என்பதை அறிந்து கொண்ட புத்தர்கள், தாங்கள்

புத்தர்கள் என்பதை அறிந்து கொள்ளாத புத்தர்கள். ஆனால் எல்லோரும் புத்தர்களே. பிரபஞ்ச இருப்பைப் பொருத்தவரை எல்லோரும் ஒன்றே. பிரபஞ்ச இருப்பில் மட்டுமே கம்யூனிஸம் இருக்கிறது. மற்ற எல்லாவற்றிலும் கம்யூனிஸம் என்பது மடத்தனமானது. ஒருவரும் சமம் அல்ல, வேறு எல்லாவற்றிலும் சமமற்ற தன்மை என்பது அடிப்படையானது. நான் மதம் மட்டுமே கம்யூனிஸத்திற்குக் கொண்டு செல்லும் என்று சொன்னால் அது பார்ப்பதற்கு முரண்பாடாகத் தோன்றலாம். ஆனால் நான் சொல்வது இந்தக் கம்யூனிஸத்தை : இந்தப் பிரபஞ்ச இருப்பின், இருத்தலின் ஆழமான சமமான தன்மையையே, இந்த வகையில் நீ ஒரு புத்தருக்கு, ஒரு கிறிஸ்துவுக்கு, ஒரு கிருஷ்ணருக்குச் சமமானவன். ஆனால் வேறு எந்த வகையிலும் இரண்டு தனி மனிதர்கள் சமமாக முடியாது. வெளி வாழ்க்கையைப் பொருத்தவரை சமமற்ற தன்மை என்பது அடிப்படையானது, உன் வாழ்க்கையைப் பொருத்தவரை சமம் என்பது அடிப்படையானது.

எனவே இந்த நூற்றிப் பன்னிரெண்டு முறைகளும் உண்மையில் நாபி மையத்தை வளர்ப்பதற்காக அல்ல; அவை அதைக் கண்டு பிடிப்பதற்கானவை. இதனால் தான் சில நேரங்களில் திடீரென்று ஒருவன் புத்தனாகிறான். ஏனெனில் ஏதோ ஒன்றை உருவாக்குவது என்ற கேள்வியே அங்கு இல்லை. நீ உனக்குள் பார்க்க முடிந்தால், நீ உனக்குள் அடி ஆழம் வரை போக முடிந்தால், உனக்குத் தேவையானது எல்லாம் ஏற்கனவே அங்கு இருக்கிறது. அது ஏற்கனவே அப்படித்தான், எனவே நீ ஏற்கனவே புத்தராக உள்ள அந்தப் புள்ளிக்கு உன்னை எப்படி வீசி எறிவது என்பதே இருக்கும் ஒரே கேள்வி. தியானம் நீ புத்தராவதற்கு உதவுவது இல்லை. அது உனது புத்தத் தன்மையைப் பற்றி நீ விழிப்புணர்வு அடைய மட்டுமே உதவுகிறது. இன்னும் ஒரு கேள்வி :

**"எல்லா ஞானமடைந்தவர்களும் நாபியை மையம் கொண்டவர்கள் தானா? உதாரணமாக கிருஷ்ணமூர்த்தி தலையை மையம் கொண்டவரா அல்லது நாபியை மையம் கொண்டவரா? ராமகிருஷ்ணர் இதயத்தை மையம் கொண்டவரா அல்லது நாபியை மையம் கொண்டவரா?"**

ஞானமடைந்த ஒவ்வொருவரும் நாபியை மையம் கொண்டவரே. ஆனால் ஒவ்வொரு ஞானமடைந்தவருக்கும் வெளிப்பாடு மற்ற மையங்கள் மூலமாக இருக்கலாம். இந்த வித்தியாசத்தைத் தெளிவாகப் புரிந்து கொள். எல்லா ஞான மடைந்தவர்களும் நாபியை மையம் கொண்டவர்களே; வேறு எந்தச் சாத்தியக் கூறும் இல்லை. ஆனால் வெளிப்படுத்துவது என்பது வேறு விஷயம். ராமகிருஷ்ணர் இதயத்தின் மூலம் அவரை வெளிப்படுத்தினார். அவர் தனது செய்தியைச் சொல்ல அவருடைய இதயத்தை வாகனமாகப் பயன்படுத்தினார். நாபியில் அவர் எதையெல்லாம் கண்டாரோ அவைகளை அவர் தனது இதயத்தின் மூலமாக வெளிப்படுத்தினார். அவர் பாடினார், அவர் ஆடினார் – இது அவருடைய பேரானந்தத்தை வெளிப்படுத்தும் அவருடைய வழி. பேரானந்தம் நாபியிலேயே காணப்படுகிறது, வேறு எங்கும் அல்ல. அவர் நாபியில் மையம் கொண்டிருந்தார். ஆனால் அவர் நாபியில் மையம் கொண்டிருக்கிறார் என்பதை எப்படி அடுத்தவர்களுக்குச் சொல்வது? அவர் தனது இதயத்தை வெளிப்படுத்துவதற்குப் பயன்படுத்தினார்.

கிருஷ்ணமூர்த்தி தனது தலையை வெளிப்படுத்துவதற்குப் பயன்படுத்தினார்; அதனால் தான் அவர்களுடைய வெளிப்பாடு கள் முரண்பட்டதாக இருக்கிறது. நீ ராமகிருஷ்ணரை நம்பினால் நீ கிருஷ்ணமூர்த்தியை நம்ப முடியாது. நீ கிருஷ்ணமூர்த்தியை நம்பினால் நீ ராமகிருஷ்ணரை நம்ப முடியாது. ஏனெனில் நம்பிக்கை என்பது எப்பொழுதும் வெளிப்பாட்டை மையமாகக் கொண்டது, அனுபவத்தை அல்ல. காரணங்களின் அடிப்படை

யில் யோசிக்கும் ஒருவருக்கு இராமகிருஷ்ணர் குழந்தைத் தனமாகத் தெரிவார் : ''என்ன அறிவுகெட்டதனம் இது – பாடுவதும், ஆடுவதும்? அவர் என்ன செய்கிறார்? புத்தர் ஒருபோதும் ஆடவில்லை. ஆனால் இந்த இராமகிருஷ்ணர் ஆடிக் கொண்டிருக்கிறார், பார்த்தால் குழந்தைத்தனமாகத் தெரிகிறது.''

பகுத்தறிவுக்கு இதயம் எப்பொழுதும் குழந்தைத்தன மாகவே தெரியும். ஆனால் இதயத்திற்குப் பகுத்தறிவு பயனற்ற தாக, மேம்போக்கானதாகத் தெரியும். கிருஷ்ணமூர்த்தி என்ன சொன்னாலும் அவரும், இராமகிருஷ்ணர் அல்லது சைதன்யா அல்லது மீராவின் அனுபவங்களும் ஒன்றுதான். ஆனால் தலையை மையமாகக் கொண்ட ஒருவருடைய விளக்கமும் வெளிப்பாடும் பகுத்தறிவோடு இருக்கும். இராமகிருஷ்ணர் கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்தால் அவர் சொல்வார், ''வாருங்கள், ஆடலாம், உங்கள் நேரத்தை ஏன் வீணடிக்கிறீர்கள்? ஆடுவதின் மூலமாக அதைச் சுலபமாக வெளிப்படுத்தலாம், மேலும் அது ஆழமாகவும் செல்லும்.'' கிருஷ்ணமூர்த்தி சொல்வார், ''ஆடுவதா? ஆடுவதில் ஒருவன் வசியமாகிப் போகிறான். ஆகவே ஆடக்கூடாது. ஆராய்ந்து பார்! பகுத்துப் பார்! பகுத்தறிவைப் பயன்படுத்து, ஆராய்ந்து பார், விழிப்புணர்வோடு இரு.''

இப்படி வெவ்வேறு மையங்கள் வெளிப்படுத்தப் பயன் படுத்தப்படுகின்றன. ஆனால் அனுபவம் ஒன்றுதான். ஒருவன் தனது அனுபவத்தை வரையலாம் – ஜென் குருமார்கள் தங்களது அனுபவத்தை வரைந்துள்ளார்கள். அவர்கள் ஞானமடைந்ததும், அவர்கள் அதை வரைவார்கள். அவர்கள் எதுவும் சொல்ல மாட்டார்கள், அவர்கள் அதை வரைந்து விடுவார்கள். உபநிஷத்துக்களை இயற்றிய ரிஷிகள், முனிவர்கள், அழகான கவிதைகளை உருவாக்கினர். இவர்கள் ஞானமடைந்ததும், இவர்கள் கவிதை புனைவார்கள். சைதன்யா நடனமாடுவதைப்

பயன்படுத்தினார்; இராமகிருஷ்ணர் பாடுவதைப் பயன்படுத்தி னார். புத்தரும், மகாவீரரும், தாங்கள் அடைந்த அனுபவத்தை யெல்லாம் விளக்கிச் சொல்வதற்கு, தலையை, காரணத்தை, பகுத்தறிவைப் பயன்படுத்தினர். இவர்கள் தங்கள் அனுபவத்தை வெளிப்படுத்த மாபெரும் சிந்தனை முறைகளை உருவாக்கினர்.

ஆனால் அந்த அனுபவம் பகுத்தறிவைச் சேர்ந்ததோ அல்லது உணர்ச்சியைச் சேர்ந்ததோ அல்ல. ஒரு சிலர் மட்டுமே, மிகச் சிலரே, இந்த இரண்டு மையங்களின் மூலமாகவும் வெளிப் படுத்தக் கூடியவர்கள். நீ பல கிருஷ்ணமூர்த்திகளைப் பார்க்க முடியும், பல இராமகிருஷ்ணர்களைப் பார்க்க முடியும், ஆனால் எப்போதாவது ஒரு சமயத்தில் மட்டுமே இரண்டு மையங்களின் மூலமாகவும் வெளிப்படுத்தக்கூடிய ஒருவர் வருகிறார். அப்படி வருகிற ஒருவர் குழப்பத்தை ஏற்படுத்துபவராக இருக்கிறார். அவருடன் நீ ஒருபோதும் இலகுவாக இருப்பதில்லை. ஏனெனில் உன்னால் இரண்டு மையங்களுக்கும் இடையில் எந்தவித உறவையும் நினைத்துப் பார்க்க முடியாது; அவை எதிரெதிரானவையாகவே உனக்குத் தோன்றுகின்றன.

நான் எதையாவது சொல்லும் பொழுது, அப்படிச் சொல்லு வதைப் பகுத்தறிவின் மூலமே சொல்ல முடியும். எனவே தலையை முதன்மையாகக் கொண்ட, பகுத்தறிவுச் சிந்தனை கொண்ட பலரை நான் வசீகரிக்கிறேன். பிறகு ஒரு நாள் நான் ஆடலையும், பாடலையும் அனுமதிப்பதைப் பார்த்துவிட்டு, அவர்கள் சங்கடப்படுகிறார்கள் : ''இது என்ன? எந்தச் சம்பந்தமும் இல்லாமலிருக்கிறதே...'' ஆனால் எனக்கு எந்த முரண்பாடும் இல்லை. ஆடுவதும் ஒரு வகைப் பேச்சே – மேலும் சில சமயங்களில் இதுவும் ஒரு ஆழமான விதத்தில் பேசுவதே. காரணப்படுத்துவதும் ஒரு வகையான பேச்சே – மேலும் சில சமயங்களில் இது மிகத் தெளிவாகப் பேசுவதாகும். ஆகவே இரண்டுமே வெளிப்படுத்தும் இரண்டு விதங்களே.

நீ புத்தர் ஆடுவதைப் பார்த்தால், நீ சங்கடத்தில் சிக்கிக் கொள்வாய். நீ மகாவீரர் புல்லாங்குழல் வாசிப்பதை, அம்மண மாக நின்று கொண்டு வாசித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தால், பிறகு உன்னால் உறங்க முடியாது. மகாவீரருக்கு என்ன நடந்தது? அவருக்குப் பயித்தியம் பிடித்து விட்டதா? கிருஷ்ணருடன் புல்லாங்குழல் சரி, ஆனால் மகாவீரருடன் அது சிறிது கூட நம்பமுடியாதது. மகாவீரரின் கையில் புல்லாங்குழலா? நினைத்துப் பார்க்கவே இயலாது! உன்னால் கற்பனை கூட செய்து பார்க்க முடியாது. ஆனால் இதற்குக் காரணம், புத்தருக்கும் சைதன்யாவுக்கும், மகாவீரருக்கும் கிருஷ்ணருக்கும் இடையே ஏதோ முரண்பாடு உள்ளது என்பதல்ல; இது வெளிப்படுத்துவதில் உள்ள வித்தியாசத்தின் காரணமாக மட்டுமே. புத்தர் ஒரு குறிப்பிட்ட விதமான மனத்தை – தலையை முதன்மையாகக் கொண்ட மனத்தைக் – கவர்வார். சைதன்யாவும் இராமகிருஷ்ணரும் அதற்கு எதிரிடையானதை – இதயத்தை முதன்மையாகக் கொண்ட மனத்தைக் – கவர்வார்கள்.

ஆனால் சிரமம் வந்துவிடுகிறது. என்னைப் போன்ற ஒருவன் சிரமங்களை உருவாக்குகிறான். நான் இரண்டு வகையானவரையும் கவர்கிறேன். அதனால் ஒருவரும் இலகு வாக இல்லை. நான் பேசும் பொழுதெல்லாம், தலையை முதன்மையாகக் கொண்டவன் இலகுவாக இருக்கிறான். ஆனால் எப்பொழுதெல்லாம் மற்றொரு விதமான வெளிப்பாட்டை அனுமதிக்கிறேனோ, அப்பொதெல்லாம் தலையை முதன்மை யாகக் கொண்ட ஒருவனால் இலகுவாக இருக்க முடிவதில்லை. இதுவே மற்றொரு வகையானவனுக்கும் நிகழ்கிறது – ஏதாவது உணர்ச்சிகரமான முறைகளைப் பயன்படுத்தும் பொழுது இதயத்தை முதன்மையாகக் கொண்டவன் இலகுவாக உணர் கிறான். ஆனால் நான் எதையாவது விவாதித்தால், எதையாவது காரணப்படுத்தி நான் பேசினால், அப்போது அவன் இருப்ப தில்லை, அவன் இங்கில்லாமல் போய்விடுகிறான். அவன் சொல்கிறான், ''இது எனக்கானது இல்லை.''

நேற்று முன்தினம் ஒரு பெண்மணி வந்தாள். அவள் சொன்னாள், ''நான் 'மௌண்ட் அபு' என்ற இடத்தில் உங்களுடன் இருந்தேன், ஆனால் அங்கு ஒரு சிரமம் வந்து விட்டது. முதல் நாள் நான் உங்கள் பேச்சைக் கேட்ட போது, அது அழகாயிருந்தது, அது எனக்கு மிகவும் பிடித்தது, நான் சிலிர்த்துப் போனேன். ஆனால் பிறகு நான் கீர்த்தனைகள் பாடப்படுவதைப் பார்த்தேன் – பக்தி பஜனைப் பாடல்களும், ஆடல்களும் – உடனே நான் அங்கிருந்து போய்விடத் தீர்மானித்தேன்; அது எனக்கானது அல்ல. நான் பேருந்து நிலையத்திற்குச் சென்றேன், ஆனால் அங்கு ஒரு பிரச்சனை வந்தது. என்ன வென்றால், நான் உங்களது பேச்சைக் கேட்க விரும்பினேன், ஆகவே நான் திரும்ப வந்தேன். நான், நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று கேட்பதை இழப்பதற்கு விரும்பவில்லை.'' அவள் கண்டிப்பாக சிரமத்திலேயே இருந்திருக்க வேண்டும். அவள் என்னிடம் சொன்னாள், ''இது மிகவும் முரண்பாடாக இருந்தது.''

இது அப்படித் தெரிந்ததற்குக் காரணம், இந்த மையங்கள் முரண்பட்டிருப்பதுதான். ஆனால் இந்த முரண்பாடு உன்னிடத்தில் இருப்பதுவே. உன்னுடைய தலை, உன்னுடைய இதயத்துடன் இலகுவாக இல்லை; அவை தகராறில் உள்ளன. இந்த உன்னுடைய உள் தகராறினால், இராமகிருஷ்ணரும் கிருஷ்ணமூர்த்தியும் சண்டையிடுபவர்களாக உனக்குத் தெரிகிறது. உன்னுடைய தலைக்கும் இதயத்துக்கும் இடையே ஒரு பாலத்தை உருவாக்கு. அப்போது இவை வெறும் வெளிப் படுத்தும் வழிகளே என்பது உனக்குத் தெரியும்.

இராமகிருஷ்ணர் சிறிதுகூடப் படிக்காதவர் – காரணப் படுத்தும் வளர்ச்சி கிடையாது. அவர் வெறும் இதயம். ஒரு மையம் மட்டுமே. இதயம் மட்டுமே வளர்ந்தவர். கிருஷ்ண மூர்த்தி தூய்மையான காரண அறிவு கொண்டவர். அவர் மிகவும் கடுமையான பகுத்தறிவாளர்கள் – அன்னி பெஸண்ட், லீட்

பீட்டர் மற்றும் இதர தியாசபிகல் இயக்கத்தவர்கள் – சிலரின் கைகளில் இருந்தவர். இந்த நூற்றாண்டின் மாபெரும் முறைப்படுத்தலை ஏற்படுத்தியவர்கள் இவர்கள். உண்மையில், இதுவரை உருவாக்கப்பட்ட முறைகளிலேயே மிக உயர்ந்த, முற்றிலும் பகுத்தறிவோடு கூடிய முறைகளில் இது ஒன்றாகும். அவர் பகுத்தறிவாளர்களால் வளர்க்கப்பட்டார்; எனவே அவர் தூய்மையான காரண அறிவு கொண்டவர். அவர் அன்பைப் பற்றியும், இதயத்தைப் பற்றியும் பேசினாலும் கூட, அந்த வெளிப்பாடும் பகுத்தறிவோடு கூடியதாகவே இருக்கும்.

இராமகிருஷ்ணர் வித்தியாசமானவர். அவர் காரணங்களைப் பற்றிப் பேசினால் கூட, அவை மடத்தனமாயிருக்கும். தோதாபுரி இராமகிருஷ்ணரிடம் வந்திருந்த பொழுது, இராமகிருஷ்ணர் அவரிடம் வேதாந்தம் கற்றுக்கொள்ள ஆரம்பித்தார். தோதாபுரி சொன்னார், ''இந்த அறிவு கெட்ட எல்லா பக்தியையும் விடு. இந்தக் காளியை, இந்தத் தாயை, சுத்தமாக ஒழித்துக்கட்டு. இவை எல்லாவற்றையும் விடாதவரை நான் உனக்குக் கற்றுத் தரப் போவதில்லை. ஏனெனில் வேதாந்தம் என்பது பக்தியல்ல, அது அறிவு.''

உடனே இராமகிருஷ்ணர் சொன்னார், ''சரி, ஆனால் ஒரு கணம் எனக்கு அனுமதி கொடுங்கள், நான் இந்த எல்லாவற்றையும், முழு மடத்தனங்களையும் விட்டுவிடலாமா என்று அந்தத் தாயிடம் கேட்டுவிட்டு வந்து விடுகிறேன். ஒரு கணம் எனது தாயிடம் கேட்டுக் கொள்ள அனுமதி கொடுங்கள்.''

இதுதான் இதயம் முதன்மை கொண்ட மனிதன். தாயை விடுவதற்குக் கூட அவளிடமே அனுமதி கேட்க வேண்டும். மேலும் அவர் சொன்னார், ''அவள் மிகவும் அன்பானவள், அவள் எனக்கு அனுமதி கொடுப்பாள், எனவே நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம்.''

தோதாபுரியால் அவர் சொன்ன எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை.

இராமகிருஷ்ணர் சொன்னார், ''அவள் அவ்வளவு அதிக அன்புள்ளவள், அவள் ஒருபோதும் நான் கேட்பதற்குத் தடை சொன்னதில்லை. நான், ''அம்மா, நான் உன்னை விட்டுப் போக வேண்டும். ஏனெனில் நான் வேதாந்தம் படிக்கிறேன், ஆகவே நான் இந்த அறிவுகெட்ட பக்தியைச் செய்து கொண்டிருக்க முடியாது. ஆகவே தயவுசெய்து எனக்கு அனுமதி கொடு'' என்று கேட்டால் அவள் அனுமதி கொடுப்பாள். அவள் எனக்கு அதை விட்டு விடுவதற்கு முழு சுதந்திரம் கொடுப்பாள்.''

உன்னுடைய தலைக்கும் இதயத்திற்கும் இடையே ஒரு பாலத்தை உருவாக்கு. அதன்பின் எவர் எப்போது ஞானமடைந்தவராயிருந்தாலும் அவர்கள் அனைவரும் ஒன்றையே பேசுவதை நீ பார்ப்பாய், அவர்களது மொழிகள் மட்டுமே வித்தியாசப்படும்.

## சூத்திரங்கள்

15. ''தலையினுடைய ஏழு திறப்புகளையும் உன்னுடைய கைகளால் மூடுகையில், உனது கண்களின் இடையே உள்ள ஒரு வெளி, எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக மாறுகிறது.''

16. ''ஆசிர்வதிக்கப் பட்டவனே, இதயத்தில் புலன்கள் எல்லாம் உள்வாங்கிக் கொள்ளப்படும்போது, தாமரையின் மையத்தை அடைவாயாக.''

17. ''மனம் வைக்காத மனத்தை, நடுவில் வைத்திரு – அதுவரை.''

★★★

மனிதன் ஒரு மையமில்லாத வட்டத்தைப் போல இருக்கிறான். அவனது வாழ்க்கை மேம்போக்கானதாக இருக்கிறது; அவனது வாழ்க்கை சுற்றுவட்டத்தின் மேல் மட்டுமே உள்ளது. நீ வெளியே வாழ்கிறாய், நீ ஒருபோதும் உள்ளே வாழ்வதில்லை. ஒரு மையத்தைக் கண்டு கொள்ளாமல் உள்ளே வாழ உன்னால் முடியாது. நீ உள்ளே வாழ முடியாது, உண்மையில் உனக்கு உள்முகமே கிடையாது. நீ மையமில்லாமல் இருக்கிறாய், இல்லாமல் இருப்பது மட்டுமே உன்னிடம் இருக்கிறது. இதனால்தான் நாம் உள்ளிருப்பது பற்றி, எப்படி உள்ளே போவது என்பது பற்றி, எப்படித் தன்னை அறிந்து கொள்வது, எப்படி உள்ளுக்குள் ஊடுருவுவது என்பதைப் பற்றியெல்லாம் பேசிக் கொண்டே இருக்கிறோம். ஆனால் இந்தச் சொற்களுக்கெல்லாம் எந்தவித ஆணித்தரமான அர்த்தங்களும் கிடையாது. நீ இந்தச் சொற்களின் அர்த்தத்தை அறிவாய். ஆனால் அவை சொல்லும் அர்த்தத்தை உன்னால் உணர முடியாது. ஏனெனில் நீ ஒருபோதும் உள்ளே இருப்பதில்லை. நீ ஒருபோதும் உள்ளே இருந்ததில்லை.

நீ தனியாக இருக்கும் பொழுது கூட, உன்னுடைய மனதில் நீ ஒரு கூட்டத்திலேயே இருக்கிறாய். வெளியே ஒருவரும் இல்லாத பொழுதிலும் கூட நீ உள்ளே இருப்பதில்லை. நீ மற்றவர்களைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறாய்; நீ வெளியில் தான் நகர்ந்து கொண்டிருக்கிறாய். நீ உறங்கும் பொழுது கூட மற்றவர்களைப் பற்றிக் கனவு கண்டுகொண்டிருக்கிறாய், நீ உனக்குள் இல்லை. மிக ஆழமான உறக்கத்தில் மட்டுமே, கனவுகளில்லாத அந்தச் சமயத்தில் மட்டுமே, நீ உள்ளே இருக்கிறாய். ஆனால் அப்போது நீ உணர்விழந்து விடுகிறாய். இந்த நடப்பை நினைவில் கொள் : நீ உணர்வோடிருக்கும் போது நீ ஒருபோதும் உள்ளே இருப்பதில்லை. ஆழமான உறக்கத்தில் நீ உள்ளே இருக்கும்போது நீ உணர்வோடு இருப்பதில்லை. ஆகவே உன்னுடைய முழு உணர்வும், உனக்குள்ளிருப்பதைக் கொண்டிராததாகவே இருக்கிறது. நாம் எப்போதெல்லாம் உள்ளே செல்வதைப் பற்றிப் பேசுகின்

றோமோ அப்போதெல்லாம் அந்தச் சொற்கள் புரிந்து கொள்ளப் படுகின்றன. ஆனால் அதன் அர்த்தம் புரிந்துகொள்ளப் படுவதில்லை. ஏனெனில் சொற்களில் அர்த்தம் அடங்கியிருப்ப தில்லை. அர்த்தம் அனுபவத்தின் மூலமாகவே வருகிறது.

சொற்கள் அர்த்தமற்றவை. நான் ''உள்ளுக்குள்'' என்று சொல்லும்போது, நீ அந்தச் சொல்லைப் புரிந்து கொள்கிறாய். ஆனால் வெறும் சொல்லை மட்டுமே புரிந்து கொள்கிறாய், அதன் அர்த்தத்தை அல்ல. 'உள்ளுக்குள்' என்பது என்ன என்று உனக்குத் தெரியாது. ஏனெனில் உணர்வோடு நீ ஒருபோதும் உள்ளுக்குள் இருந்ததில்லை. உன்னுடைய மனம் இடை விடாமல் வெளியே ஓடிக் கொண்டிருக்கிறது. உள்ளே என்பதன் அர்த்தம் பற்றியோ அல்லது அது என்ன என்பது பற்றியோ உனக்கு எந்த உணர்வும் கிடையாது.

நீ ஒரு மையமில்லாத வட்டம், வெறும் வெளிவட்டம் மட்டுமே என்று நான் சொல்வதன் அர்த்தம் இதுதான். மைய மிருக்கிறது ஆனால் நீ உணர்வில்லாதிருக்கும்போது மட்டுமே நீ அங்கே வருகிறாய். இல்லாவிட்டால், நீ உணர்வோடிருக் கையில், நீ வெளியே ஓடுகிறாய். இப்படி இருப்பதால்தான் உன்னுடைய வாழ்க்கை ஒருபோதும் கூர்மையானதாக இருப்ப தில்லை; அது அப்படி இருக்க முடியாது. அது எப்போதும் எதிலும் ஈடுபாடற்று நெளிந்து கொண்டிருப்பதாகவே இருக் கிறது. நீ இறந்து விட்டவனைப் போல வாழ்கிறாய், அல்லது இரண்டாகவும் இருக்கிறாய் என்று சொல்லலாம். நீ இறந்து விட்டவன் வாழ்க்கையை வாழ்கிறாய் – நீ இறந்தவனாய் வாழ்கிறாய். நீ குறைந்தபட்சமாக வாழ்கிறாய் – அதிகபட்ச சிகரத்தில் அல்ல, மாறாகக் குறைந்தபட்ச வாழ்வு. ''நானிருக் கிறேன்'' என்று நீ சொல்லிக் கொள்ளலாம், அவ்வளவுதான். நீ இன்னும் இறக்கவில்லை; இதுதான் நீ வாழ்வதாகச் சொல்லிக் கொள்வதன் அர்த்தம்.

ஆனால் வாழ்க்கையை ஒருபோதும் வெளிவட்டத்தி லிருந்து அறிந்துகொள்ள முடியாது. வாழ்க்கையை மையத்தில்

மட்டுமே அறிந்துகொள்ள முடியும். மேல்மட்டத்தில் வெறும் ஆர்வமற்ற, எதிலும் ஈடுபாடற்ற வாழ்க்கையே சாத்தியம். ஆகவே நீ உண்மையில் ஒரு நிர்ணயமில்லாத, என்னவென்று தெரியாத வாழ்க்கையை வாழ்கிறாய், அப்போது இறப்பும் நிர்ணயிக்க முடியாததாக, என்னவென்று தெரியாததாக ஆகி விடுகிறது. ஏனெனில் உண்மையாக வாழாத ஒருவனால் உண்மையாக இறக்கவும் முடியாது. ஆணித்தரமான, அழுத்த மான வாழ்வே அதே போன்ற இறப்பையும் கொடுக்க முடியும். அப்படிப்பட்ட இறப்பு அழகானது : ஆணித்தரமான, அழுத்த மான எதுவுமே அழகுதான். வாழ்வு கூட. அது இப்படித்தான் என்று இல்லாமல் குளறுபடியாக இருந்தால் அது அசிங்கமாகி விடுகிறது. உன்னுடைய வாழ்க்கை அசிங்கமானது, அழுகிப் போனது. அங்கு எதுவும் நடப்பதில்லை. நீ, வெறும் நம்பிக்கை யில், என்றாவது ஒரு நாள், எங்காவது, ஏதாவது நடக்கும் என்று காத்துக் கொண்டிருக்கிறாய்.

இந்தக் கணத்தில் ஒன்றுமில்லை. மேலும் இறந்த காலத்தின் எல்லாக் கணங்களும் இப்படி ஒன்றுமில்லாததாகவே போய்விட்டது. நீ எதிர்காலத்திற்காகக் காத்திருக்கிறாய். என்றாவது, ஏதாவது நடக்கும் என்ற நம்பிக்கையில், வெறும் நம்பிக்கையில் காத்திருக்கிறாய். இப்படியாக ஒவ்வொரு கணமும் வீணாகிக் கொண்டிருக்கிறது. இறந்த காலத்தில் நீ எதிர்பார்த்த எதுவும் நடக்கவில்லை. ஆகவே அது எதுவும் எதிர்காலத்திலும் நடக்கப் போவதில்லை. எதுவும் இந்தக் கணத்தில் மட்டுமே நடக்க முடியும். ஆனால் அதற்கு உன்னிடம் கூர்மை வேண்டும், ஊடுருவும் கூர்மை வேண்டும். நீ மையத்தில் வேர் கொள்ள வேண்டும், மேல் மட்டத்தில் இருப்பது உதவாது. மேலும் நீ உன்னுடைய கணநேரத்தைக் கண்டுகொள்ள வேண்டும்.

உண்மையில் நாம் ஒருபோதும் நாம் என்னவாக இருக் கிறோம் என்று சிந்திப்பதில்லை. அப்படி நாம் செய்யும் யோசனைகள் எல்லாம் வெறும் துண்டு துண்டான குறிப்புகள்

தான். ஒரு சமயம் நான் பல்கலைக்கழக வளாகம் ஒன்றில் ஒரு புரொபஸருடன் வசித்து வந்தேன். ஒரு நாள் அவர் மிகவும் மனமுடைந்து போனவராக வந்தார். ஆகவே நான் கேட்டேன், ''என்ன விஷயம்?''

அவர் சொன்னார், ''எனக்குக் காய்ச்சலடிக்கிறது.'' நான் ஏதோ படித்துக் கொண்டிருந்தேன், ஆகவே நான் சொன்னேன், ''போய் தூங்குங்கள். இந்தப் போர்வையை எடுத்துக் கொண்டு போய் போர்த்திக் கொண்டு படுங்கள்.''

அவர் படுக்கச் சென்றார். ஆனால் சில நிமிடங்களில் திரும்ப வந்து சொன்னார், ''எனக்குக் காய்ச்சல் இல்லை. உண்மையில் நான் கோபமாயிருக்கிறேன். என்னை ஒருவன் அவமானப்படுத்தி விட்டான், அதனால் அவன் மேல் ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது.''

நான் கேட்டேன், ''பின் எதற்கு எனக்குக் காய்ச்சலடிக்கிறது என்று சொன்னீர்கள்?''

அவர் சொன்னார், ''நான் கோபமாயிருக்கிறேன் என்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனால் உண்மையில் நான் கோபமாயிருக்கிறேன். காய்ச்சல் எதுவும் இல்லை.'' போர்வையைத் தூர வீசி எறிந்தார்.

நான் சொன்னேன், ''சரி, நீங்கள் கோபமாயிருக்கிறீர்களென்றால், இந்தத் தலையணையை எடுத்துக் கொள்ளுங்கள். இதை அடியுங்கள், இதன் மேல் ஆத்திரத்தை முழுவதும் காட்டுங்கள். உங்களுடைய ஆத்திரம் வெளிவரட்டும். இந்தத் தலையணை போதாதென்றால், இதோ நான் இருக்கிறேன். நீங்கள் என்னை அடியுங்கள், இந்தக் கோபம் முழுதும் வெளியே வந்து விடட்டும்.''

அவர் சிரித்தார், ஆனால் அந்தச் சிரிப்பு பொய்யானது – அவரது முகத்தின் மேல் மட்டும் பூசப்பட்டது. அது அவரது முகத்தில் வந்தது, பிறகு மறைந்துவிட்டது, அது துளியும் உள்ளே

ஊடுருவவில்லை. அது கொஞ்சம் கூட உள்ளிருந்து வந்ததில்லை, அது வெறும் பூச்சு. ஆனால் அந்தச் சிரிப்பு, பொய்யான சிரிப்பாயிருந்தாலும் கூட, ஒரு இடைவெளியை உண்டாக்கியது. அவர் சொன்னார், ''உண்மையில் அப்படியல்ல.... நான் உண்மையில் கோபப்படவில்லை. மற்றவர்கள் முன்னால் யாரோ எதையோ சொன்னார்கள், அது எனக்கு மிகவும் சங்கடமாகப் போய்விட்டது, அவ்வளவுதான். உண்மையில் இதுதான் விஷயம்.''

நான் அவரிடம் சொன்னேன், ''நீங்கள் உங்களுடைய உணர்வைப் பற்றிய உங்கள் பேச்சை இந்த அரைமணி நேரத்தில் மூன்று முறை மாற்றிவிட்டீர்கள். நீங்கள் காய்ச்சலடிக்கிறது என்றீர்கள், பிறகு கோபமாய் இருப்பதாகச் சொன்னீர்கள், இப்போது கோபமாய் இல்லை வெறும் சங்கடம்தான் என்று சொல்கிறீர்கள். இதில் எது உண்மை?''

அவர் சொன்னார், ''எனக்குச் சங்கடமாய் இருப்பதுதான் உண்மை''

நான் சொன்னேன், ''எது உண்மை? நீங்கள் காய்ச்சலடிக்கிறது என்று சொல்லும்போது அதையும் உறுதியாகத்தான் சொன்னீர்கள். நீங்கள் கோபமாய் இருக்கிறது என்று சொன்னபோது அதையும் உறுதியாகத்தான் சொன்னீர்கள். இப்போது இதையும் உறுதியாகச் சொல்கிறீர்கள். நீங்கள் ஒரு ஆளா அல்லது பல பேரா? இன்னும் எத்தனை நேரத்திற்கு இந்த உறுதி தொடரப் போகிறது?''

அவர் சொன்னார், ''உண்மையாக, நான் என்ன உணருகிறேன் என்று எனக்குத் தெரியவில்லை. நான் பாதிக்கப்பட்டிருக்கிறேன், அவ்வளவுதான். அதைக் கோபம் அல்லது சங்கடம் அல்லது வேறு எப்படி அழைப்பது என்று எனக்குத் தெரியவில்லை. அதைப்பற்றி விவாதம் செய்யும் நேரம் இதுவல்ல.'' அவர் சொன்னார், ''என்னைத் தனியாக விடுங்கள். நீங்கள் என்னுடைய நிலையைத் தத்துவார்த்தமாக்கி விட்டீர்கள். எது

உண்மை, எது அழுத்தமானது என்று நீங்கள் விவாதிக்கிறீர்கள். ஆனால் நான் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பதாக உணர்கிறேன்.''

இது யாரோ ஒரு மூன்றாம் மனிதரைப் பற்றியது அல்ல – இது உன்னைப் பற்றியது. நீ ஒருபோதும் உறுதியாக இருப்ப தில்லை. ஏனெனில் உறுதியாய் இருப்பது என்பது மையம் கொண்டிருப்பதிலிருந்து வருகிறது. உன்னைப் பற்றிய உறுதி கூட உனக்கு இல்லை. நீ உன்னைப் பற்றியே ஒருபோதும் உறுதியாய் இல்லாதபோது, அடுத்தவர்களைப் பற்றி உறுதி செய்வது என்பது சாத்தியமே இல்லாதது. வெறும் தெளிவற்ற நிலை, ஒரு மூட்டமான நிலை தான் அங்குள்ளது, எதுவும் உறுதியாய் இல்லை.

சில நாட்களுக்கு முன்பு இங்கு ஒருவர் இருந்தார். அவர் என்னிடம், ''நான் ஒருவரை நேசிக்கிறேன், அவரைத் திருமணம் செய்துகொள்ள விரும்புகிறேன்'' என்று சொன்னார். நான் ஒன்றும் சொல்லாமல் சில நிமிடங்களுக்கு அவரது கண்களுக் குள் ஆழமாகப் பார்த்தேன். அவர் தடுமாற ஆரம்பித்தார். பிறகு என்னிடம், ''நீங்கள் ஏன் என்னை உற்றுப் பார்க்கிறீர்கள்? எனக்கு சங்கடமாக இருக்கிறது'' என்று சொன்னார். நான் தொடர்ந்து பார்வையைச் செலுத்தினேன். அவர் சொன்னார், ''எனது நேசம் பொய் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?'' நான் ஒன்றும் பதில் சொல்லவில்லை, தொடர்ந்து பார்த்துக் கொண்டே மட்டும் இருந்தேன். அவர் ''ஏன் நீங்கள் இந்தத் திருமணம் நல்லதில்லை என்று நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டார். பிறகு அவர் தனக்குத் தானே சொல்லிக் கொண்டார், ''நான் இதைப் பற்றி உண்மையில் அதிகம் சிந்தித்துப் பார்க்கவில்லை, மேலும் அதனால்தான் நான் உங்களிடம் வந்தேன். உண்மையில் நான் நேசிக்கிறேனா, இல்லையா என்று எனக்குத் தெரியாது.''

நான் ஒரே ஒரு சொல் கூடச் சொல்லவில்லை. நான் அவரது கண்களை ஊடுருவிப் பார்ப்பதை மட்டுமே செய்தேன். ஆனால் அவர் அலைபாய ஆரம்பித்தார். அதோடு அவர் உள்ளே

இருந்தவைகள் மேலே வர, கொப்புளித்துக் கிளம்ப ஆரம்பித்து விட்டன.

நீ உறுதியோ, நிச்சயமோ கொண்டவனாக இல்லை. நீ எதைக் குறித்தும் நிச்சயமானவனாக இருக்க முடியாது; உனது நேசத்திலாகட்டும், உனது வெறுப்பிலாகட்டும், உனது நட்பிலாகட்டும், எதிலும் நிச்சயம் இருக்காது. நீ நிச்சயமா யிருக்கும் எதுவும் இருக்க முடியாது. ஏனெனில் உனக்கு மையம் இல்லை. ஒரு மையமில்லாமல் எந்த உறுதிப்பாடும் ஏற்பட முடியாது. உனது எல்லா உறுதிப்பாடுகளும் தவறானவை, கணநேரமே நிலைப்பவை. ஒரு கணத்தில், நீ நிச்சயமாய் உறுதிப்பாட்டோடு இருப்பதாய் நீ உணர்வாய். ஆனால் அடுத்த கணத்தில் அந்த நிச்சயமான தன்மை போய்விடும். ஏனெனில் ஒவ்வொரு கணமும் நீ வேறுவேறு மையங்களைக் கொண்டவனாய் இருக்கிறாய். நீ, ஒரு நிரந்தரமான மையத்தை, ஒரு இறுகிய மையத்தைப் பெறவில்லை. ஒவ்வொரு கணமும் ஒரு அணுவளவான மையத்தோடு இருக்கிறாய். ஆகவே ஒவ்வொரு கணமும் அதற்கே உரிய சுயம் இருக்கிறது.

மனிதன் ஒரு கூட்டம் என்று ஜார்ஜ் குருட்ஜிப் எப்பொழுதும் சொல்வார். ஒரு ஆளாகத் தன்னைக் காட்டிக் கொள்வது வெறும் ஏமாற்று வேலைதான். ஏனெனில் நீ ஒரு ஆள் அல்ல, நீ பல ஆட்களாக இருப்பவன். எனவே உன்னில் ஒரு ஆள் பேசும்போது, அது ஒரு கணநேரமே இருக்கும் மையம்தான். அடுத்த கணத்திலேயே வேறொருவர் இருப்பார். ஒவ்வொரு கணத்தோடும், ஒவ்வொரு அணுவளவு சூழலோடும், நீ உறுதியாய் உணர்கிறாய். ஆனால் நீ வெறும் ஓட்டம் - எந்த மையமும் இல்லாத சில அலைகள் மட்டுமே - என்பதைக் குறித்து நீ ஒருபோதும் விழிப்புணர்வு அடைவதில்லை. இதனால், கடைசியில், இந்த வாழ்க்கையே வீண் என்பதைப் போல நீ உணர்வாய். அப்படித்தான் ஆகும். வெறும் வீணாய்ப் போனதாக, வெட்டி அலைச்சலாக - காரியமில்லாத, அர்த்தமில்லாத வாழ்வாகப் போகும்.

தந்த்ரா, யோகா, மதம்.... போன்றவற்றின் அடிப்படை அக்கறையே, எப்படி முதலில் மையத்தைக் கண்டுபிடிப்பது, எப்படி முதலில் தனியொருவனாக, தனி மனிதனாக ஆவது. அவற்றின் அக்கறையே, எப்படி எல்லா சூழலிலும் மாறாமலிருக்கும் ஒரு மையத்தைக் காண்பது. அப்படிக் கண்டுவிட்ட பிறகு நிலையில்லாமல் வாழ்வு போய்க் கொண்டிருந்தாலும், வாழ்வின் ஓட்டம் ஓடிக் கொண்டேயிருந்தாலும், அலைகள் வந்து போய்க் கொண்டிருந்தாலும், உள்ளே தொடர்ந்து அந்த மையம் இருந்து கொண்டே இருக்கும். பிறகு நீ ஒருவனாக இருக்கிறாய் - வேர் கொண்ட, மையம் கொண்ட ஒருவனாக இருக்கிறாய்.

மையத்தைக் கண்டு கொள்வதற்கான யுக்திகளே இந்தச் சூத்திரங்கள். மையம் ஏற்கனவே அங்கு இருக்கிறது. ஏனெனில் மையம் இல்லாமல் ஒரு வட்டம் மட்டும் இருப்பது சாத்தியமில்லை. வட்டம் ஒரு மையத்துடன்தான் கண்டிப்பாக இருந்தாக வேண்டும். எனவே மையம் மறக்கப்பட்டிருக்கிறது, அவ்வளவுதான். அது அங்கேதான் இருக்கிறது. ஆனால் நமக்கு அதைக் குறித்த விழிப்புணர்வு இல்லை. அது அங்குதான் இருக்கிறது. ஆனால் அதை எப்படிப் பார்த்துத் தெரிந்து கொள்வது என்று நமக்குத் தெரியவில்லை. பிரக்ஞையை, சுய உணர்வை எப்படி அதன் பக்கம் திருப்புவது என்று நமக்குத் தெரியவில்லை.

## *15. தலையினுடைய எல்லாத் திறப்புகளையும் மூடு.*

மையம் கொள்வதைப் பற்றிய மூன்றாவது சூத்திரம்:

''தலையினுடைய ஏழு திறப்புகளையும் உன்னுடைய கைகளால் மூடுகையில், உனது கண்களின் இடையே உள்ள ஒரு வெளி, எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக மாறுகிறது.''

இது மிகவும் பழமையான யுக்திகளில் ஒன்று - மிகவும் பயன்படுத்தப்பட்டது, அதோடு மிகவும் எளிமையானவற்றினுள்

ஒன்று. தலையினுடைய எல்லாத் திறப்புகளையும் மூடிவிடு - கண்கள், காதுகள், மூக்கு, வாய். தலையினுடைய எல்லாத் திறப்புகளும் மூடப்பட்டுவிடும்போது, எப்போதும் தொடர்ந்து வெளியே ஓடிக் கொண்டிருக்கும் உன்னுடைய பிரக்ஞை, உன்னுடைய உணர்வு, திடீரென்று நிறுத்தப்படுகிறது; அது வெளியே நகர முடியாது.

நீ கவனிக்காமல் இருந்திருக்கலாம். ஆனால் நீ உன்னுடைய மூச்சை ஒரு கணம் நிறுத்தினால், திடீரென்று உன்னுடைய மனமும் நின்றுவிடும். ஏனெனில் மனம் மூச்சு விடுவதோடு இணைந்தே ஓடிக் கொண்டிருக்கிறது. இது மனதிற்கு ஏற்பட்டுவிட்ட ஒரு 'பயிற்சி' (Conditioning) நீ 'பயிற்சிக்குட்பட்ட செயல்' என்றால் என்ன என்பதன் அர்த்தத்தைக் கண்டிப்பாகப் புரிந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் இந்தச் சூத்திரத்தைப் புரிந்து கொள்வது சுலபமாக இருக்கும்.

'பாவ்லோவ்' இரஷ்யாவில் மிகவும் பிரபலமான மனோதத்துவ அறிஞர்களில் ஒருவரான இவரால் உருவாக்கப் பட்ட சொல் இது 'பயிற்சிக் குட்பட்ட மனம்' (Conditioned) - இது தினம்தினம் உலகம் முழுவதும் பயன்படுத்தப்படும் சொல். மனோதத்துவத்தோடு சிறிதளவே தொடர்பு கொண்டவர்களும் அறிந்திருக்கும் சொல் இது. இரண்டு எண்ண ஓட்டங்கள் - ஏதாவது இரண்டு எண்ண ஓட்டங்கள் - ஒன்றோடொன்று மிகவும் தொடர்பு கொண்டவையாகி விடலாம். அதனால் நீ ஒன்றை ஆரம்பித்தால் மற்றொன்று தானாகவே முடுக்கப்பட்டுவிடும்.

பாவ்லோவின் கருத்துக்கான மிகவும் பிரபலமான உதாரணம் ஒன்று. பாவ்லோவ் ஒரு நாயிடம் சோதனை செய்தார். ஒரு நாயின் முன்பு அதன் உணவை வைத்தால் அந்த நாயின் வாயில் உமிழ்நீர் சுரக்க ஆரம்பிப்பதை அவர் பார்த்தார். அந்த நாயின் நாக்கு வெளியே தொங்கி அது சாப்பிடுவதற்குத் தயாராகிறது. இது இயற்கையானது. நாய் அதன் உணவைப் பார்க்கையில், அல்லது

உணவைக் கற்பனை செய்கையில்கூட உமிழ்நீர் சொட்ட ஆரம்பிக்கிறது.

ஆனால் பாவ்லோப் இந்த இயக்கத்தை வேறொன்றால் கட்டுக்குட்படுத்தப்பட்ட செயல் முறையாக மாற்றினார். எப்பொழுதெல்லாம் நாயின் முன் உணவு வைக்கப்பட்டு அதன் உமிழ்நீர் வழிய ஆரம்பிக்கிறதோ, அப்பொழுதெல்லாம் அவர் வேறு ஏதாவது ஒன்றைச் செய்வார். உதாரணமாக, அவர் ஒரு மணியை அடிப்பார். அந்த நாய் அந்த மணி சப்தத்தைக் கேட்டாக வேண்டும். பதினைந்து நாட்களுக்கு, எப்பொழுதெல்லாம் உணவு வைக்கப்படுகிறதோ, அப்பொழுதெல்லாம் மணி அடிக்கும். பிறகு பதினாறாவது நாள், நாயின் முன் உணவு வைக்கப்படாமல் வெறும் மணி மட்டும் அடிக்கப்படும். அப்படியும் அந்த நாயின் உமிழ்நீர் வழிய ஆரம்பிக்கிறது, நாக்கு வெளியே தொங்குகிறது. அங்கு ஏதோ உணவு இருப்பதைப்போல.

ஆனால் அங்கு உணவு ஏதும் இல்லை, வெறும் மணி மட்டுமே அடிக்கிறது. மணி அடிப்பதற்கும் உமிழ்நீர் சுரப்பதற்கும் இடையே எந்தவித இயற்கையான தொடர்பும் இல்லை. இயற்கையான தொடர்பு உணவுடன்தான் உள்ளது. ஆனால் தொடர்ந்து மணி அடிக்கப்பட்டது ஒரு தொடர்பை ஏற்படுத்தி விட்டது. அதனால் வெறும் மணிச் சத்தமே அந்த இயக்கத்தை ஆரம்பித்து வைத்து விடுகிறது.

பால்லோவ்வின் கருத்துப்படி - அவர் கூறுவது சரிதான் - நமது முழு வாழ்க்கையும் ஒரு பயிற்சிக்குட்பட்ட செயல் முறை இயக்கமே. மனம் என்பதே ஒரு பயிற்றுவிக்கப்பட்டது. ஆகவே அந்தப் பயிற்றுவிக்கப்பட்ட செயல்முறையில் ஏதாவது ஒன்றை நிறுத்தினால், அதோடு தொடர்புடைய மற்ற எல்லாமும் நின்று விடுகிறது.

உதாரணமாக நீ மூச்சுவிடாமல் ஒருபோதும் யோசித்த தில்லை. யோசனை எப்போதும் சுவாசத்தோடுதான் நடக்கிறது. மூச்சு விடுவதைப் பற்றிய பிரக்ஞை உனக்கு இருப்பதில்லை.

ஆனால் சுவாசிப்பது எப்போதும் தொடர்ந்து இரவு பகலாக அங்கே இருந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு யோசனையும், ஒவ்வொரு சிந்தனை இயக்கமும் சுவாசிப்பதோடு தொடர்பு கொண்டிருக்கிறது. உன்னுடைய மூச்சை நீ திடீரென்று நிறுத்தினால், எண்ணங்களும் நின்று போகும். மேலும், இருக்கும் ஏழு ஓட்டைகளையும் - தலையினுடைய ஏழு திறப்புகள் - மூடிவிட்டால், உன்னுடைய பிரக்ஞை, உணர்வு, திடீரென்று வெளியே நகர முடியாது. அது உள்ளேயே தங்குகிறது. அப்படி அது உள்ளேயே தங்குவது, உன்னுடைய கண்களுக்கு இடையே ஒரு வெளியை உருவாக்குகிறது. அந்த வெளிதான் மூன்றாவது கண் என்று அறியப்படுகிறது.

தலையினுடைய எல்லாத் திறப்புகளையும் மூடிவிட்டால் நீ வெளியே போக முடியாது. ஏனெனில் நீ எப்பொழுதும் இந்தத் திறப்புகளின் மூலமே வெளியே போய்க் கொண்டு இருக்கிறாய். நீ உள்ளே தங்குகிறாய். அப்படி உன்னுடைய பிரக்ஞை உள்ளேயே தங்கியிருக்கும் பொழுது அது இரண்டு கண்களுக்கும் இடையே குவிகிறது. அது இரண்டு கண்களுக்கும் இடையே ஊடுருவி நிற்கிறது. அந்த இடம்தான் மூன்றாவது கண் என அறியப்படுகிறது.

அந்த இடம் 'எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக மாறுகிறது'. இந்த இடத்தினுள் எல்லாமும் அடங்கியுள்ளதாக, முழுப் பிரபஞ்ச இருப்பும் உள்ளடங்கியிருப்பதாக இந்தச் சூத்திரம் சொல்கிறது. உன்னால் இந்த இடத்தை உணர முடிந்தால், நீ எல்லாவற்றையும் உணர்ந்து விட்டவன். ஒரு முறை உனக்குள் இரண்டு கண்களுக்கு இடையே இருக்கும் இந்த வெளியை நீ உணர்ந்து விட்டால், பின் நீ பிரபஞ்ச இருப்பையே, அதன் மொத்தத்தையுமே அறிந்தவன். ஏனெனில் இந்த உள்வெளி எல்லாவற்றையும் உள்ளடக்கியது. அதிலிருந்து விடுபட்டுப் போனது எதுவுமில்லை.

உபநிஷத்துகள் சொல்கின்றன, ''அந்த ஒன்றை அறிபவன், எல்லாவற்றையும் அறிந்த ஒருவனாகிறான்.'' இந்த இரண்டு

கண்களாலும் அறுதியிடப்பட்டவைகளையே காண முடியும். மூன்றாவது கண் எல்லையற்றதைப் பார்க்கிறது. இந்த இரண்டு கண்களாலும் பொருள்களையே பார்க்க முடியும். மூன்றாவது கண் பொருளற்றதை, ஆன்ம சக்தியைப் பார்க்கிறது. இந்த இரண்டு கண்களாலும் ஒருபோதும் சக்தியை உணர முடியாது. நீ ஒருபோதும் சக்தியைப் பார்க்க முடியாது; நீ வெறும் பொருட்களை மட்டுமே பார்க்க முடியும். ஆனால் மூன்றாவது கண்ணால், சக்தி அதன் உண்மை சொரூபத்தில் காணக் கிடக்கிறது.

இந்தத் திறப்புகளையெல்லாம் மூடுவது என்பது மையம் கொள்வதற்கான ஒரு வழியாகும். ஏனெனில் பிரக்ஞை நிலையின் ஓட்டம் வெளியே செல்ல முடியாதபோது, அது அதனுடைய மூலஸ்தானத்திலேயே தங்குகிறது. அந்தப் பிரக்ஞை நிலையின் மூலஸ்தானமே மூன்றாவது கண். நீ மூன்றாவது கண்ணில் மையம் கொண்டால், பல விஷயங்கள் நிகழும். அதில் முதலாவது, உன்னுள்ளே முழு உலகத்தையும் கண்டு கொள்வாய்.

சுவாமி ராமதீர்த்தா சொல்லுவது வழக்கம், ''சூரியன் எனக்குள் நகர்கிறது, நட்சத்திரங்கள் எனக்குள் நகர்கின்றன, சந்திரன் எனக்குள் எழுகிறது. முழு அண்டமும் எனக்குள் இருக்கிறது.'' இதை முதல் முறை அவர் கூறிய போது அவரது சிடர்கள் அவருக்குக் கிறுக்குப் பிடித்துவிட்டது என்று நினைத் தார்கள். எப்படி நட்சத்திரங்கள் ராமதீர்த்தாவினுள் இருக்க முடியும்?

அவர் மூன்றாவது கண்ணைப் பற்றி உள்வெளியைப் பற்றி முதன் முறையாக உள் வெளி பிரகாசமடையும் போது இப்படிப் பட்ட உணர்வுதான் எழும். உனக்குள் எல்லாவற்றையும் நீ பார்க்கும் பொழுது, நீயே அண்டமாக ஆகிவிடுகிறாய்.

மூன்றாவது கண் உன்னுடைய தோலுடம்பின் ஒரு பாகம் அல்ல. நம்து இரண்டு கண்களின் இடையே உள்ள வெளி

உன்னுடைய உடம்பிற்குள் அடங்கியுள்ள ஒரு இடம் அல்ல. அது உன்னுள் ஊடுருவியிருக்கும் எல்லையற்ற வெளி ஆகும். ஒருமுறை இந்த வெளியை அறிந்துவிட்டால், நீ ஒருபோதும் மறுபடியும் பழைய ஆளாக ஆக முடியாது. நீ இந்த உள்வெளியை அறியும் கணத்திலேயே, நீ இறப்பற்ற தன்மையை அறிந்தவனாகி விடுவாய். பின் இறப்பு என்பதே இல்லை.

இந்த உள்வெளியை முதன் முறையாக நீ அறிகையில், உனது வாழ்க்கை அதிக ஆற்றலும், நிச்சயமும் கொண்டதாகும். முதன் முறையாக உண்மையிலேயே உயிர்த்துடிப்புள்ளதாகும். இப்போது எந்தப் பாதுகாப்பும் தேவையில்லை. இப்போது எவ்விதப் பயமும் சாத்தியமில்லை. இப்போது நீ அழிக்க முடியாதவன். இப்போது உன்னிடமிருந்து எதையும் எடுக்க முடியாது. இப்போது முழு அண்டமும் உன்னைச் சேர்ந்தது: நீ தான் அண்டம். இந்த உள்வெளியை அறிய நேர்ந்தவர்கள், அவர்கள் பரவசத்தில் கூவியுள்ளார்கள், ''அஹம் பிரம்மாஸ்மி!'' நானே அண்டம், நானே பிரபஞ்ச இருப்பு.

இந்த மூன்றாவது கண் அனுபவத்தின் காரணத்தால்தான் சூபி மறைஞானி மன்சூர் கொலை செய்யப்பட்டார். முதன் முறையாக இந்த உள்வெளி பற்றிய விழிப்புணர்வு பெற்றவுடன் மன்சூர் கூவ ஆரம்பித்தார், ''நானே கடவுள்!'' இந்தியாவாய் இருந்திருந்தால் அவர் வணங்கப்பட்டிருப்பார். ஏனெனில் இந்த மூன்றாவது கண்ணாகிய உள்வெளியை அடைந்த பலபல ஞானிகளை இந்தியாவிற்குத் தெரியும். ஆனால் ஒரு முகமதிய நாட்டில் அது கடினம். மேலும் மன்சூரின் ''நானே கடவுள் - அனல் ஹக்!'' என்ற கூற்று, மதத்திற்கே எதிரான ஒன்றாக எடுத்துக்கொள்ளப்பட்டது. ஏனெனில் முகமதிய மதத்தால் கடவுளும் மனிதனும் ஒன்றாக முடியும் என்பது நினைத்தே பார்க்க முடியாதது. மனிதன் உருவாக்கப் பட்டவன். உருவாக்குபவன் ஆக முடியும்? ஆகவே மன்சூரின் ''நானே கடவுள்'' என்ற கூற்று புரிந்து கொள்ள முடியாதது; அதனால் அவர் கொலை செய்யப்பட்டார்.

ஆனால் அப்படி அவர் கொலை செய்யப்படும்போது, அவர் சிரித்துக் கொண்டிருந்தார். எனவே யாரோ ஒருவர், ''ஏன் சிரிக்கிறாய் மன்சூர்?'' என்று கேட்டார்.

மன்சூர் கூறிய பதிலாகச் சொல்லப்படுவது, ''நான் ஏன் சிரிக்கிறேன் என்றால் நீங்கள் என்னைக் கொல்லவில்லை, நீங்கள் என்னைக் கொல்ல முடியாது. நீங்கள் இந்த உடம்பால் ஏமாந்து போகிறீர்கள். ஆனால் நான் இந்த உடம்பல்ல. நான் இந்த அண்டத்தைப் படைத்தவன். மேலும் இந்த முழு அண்டத்தையும் ஆரம்பத்தில் அசையவிட்ட விரல் என்னுடையதுதான்.''

இந்தியாவில் அவர் சுலபமாகப் புரிந்து கொள்ளப் பட்டிருப்பார். இந்த மொழி பலபல நூற்றாண்டுகளாக இங்கு அறியப்பட்டது. உள்வெளியை அறியக்கூடிய ஒரு கணம் வரும் என்று நமக்கு நன்றாகத் தெரியும். அப்போது ஒருவர் வெறும் பயித்தியம் போல ஆகிவிடுவார். மேலும் இந்தத் தரிசனம் சர்வ நிச்சயமானது. எனவே மன்சூரை நீ கொன்றால்கூட அவர் அவருடைய கூற்றை மாற்றிக் கொள்ளமாட்டார். ஏனெனில் உண்மையில், அவரைப் பொருத்தவரை அவரை நீ கொல்ல முடியாது. இப்போது அவர் முழுமையை அடைந்துவிட்டவர். ஆகவே அவரை அழிப்பதற்கான எந்தச் சாத்தியக்கூறும் இல்லை.

மன்சூருக்குப் பின் சூபிகள் மவுனமாய் இருப்பதே நல்லது என்பதைக் கற்றுக் கொண்டனர். ஆகவே சூபி மரபில், மன்சூருக்குப் பிறகு, சீடர்களுக்குத் தொடர்ந்து வலியுறுத்தப்பட்டு வருகிறது. ''நீங்கள் மூன்றாவது கண்ணிற்கு எப்பொழுது வந்தடைந்தாலும், மவுனமாக இருங்கள், எதையும் சொல்லாதீர்கள். எப்பொழுது இது நடந்தாலும், அமைதியாய் இருங்கள். எதுவும் பேசாதீர்கள், அல்லது சாதாரணமான மக்கள் நம்பும் விஷயங்களைத் தொடர்ந்து சொல்லிக் கொண்டிருங்கள்.''

ஆகவே தற்போது இஸ்லாம் இரண்டு மரபுகளைக் கொண்டிருக்கிறது. ஒன்று சாதாரணமானது, வெளிப்புறமானது.

வெளித்தாக்கம் கொண்டது; மற்றொன்று, உண்மையான இஸ்லாம், சூபியிஸம் – புலன் கடந்தது. ஆனால் சூபிகள் மவுனமாக இருக்கிறார்கள். ஏனெனில் (மன்சூருக்கு நடந்ததி லிருந்து அவர்கள் கற்றுக் கொண்டு விட்டார்கள்) மூன்றாவது கண் திறக்கும் பொழுது எழும் மொழியில் பேசுவது என்பது தேவையற்ற கஷ்டத்தில் கொண்டு போய்விடும். மேலும் அதனால் யாருக்கும் உதவியில்லை, என்பதை!

இந்தச் சூத்திரம் சொல்கிறது : ''தலையினுடைய ஏழு திறப்புகளையும் உன்னுடைய கைகளால் மூடுகையில், உனது கண்களின் இடையே உள்ள ஒரு வெளி, எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக மாறுகிறது.'' உன்னுடைய உள்வெளி எல்லாமும் கொண்ட பரவெளியாக மாறுகிறது.

## 16. உனது இதயத்தில் புலன்களை உள்வாங்கு.

நான்காவது மையம் கொள்ளும் யுக்தி : ''ஆசிர்வதிக்கப் பட்டவனே, இதயத்தில் புலன்கள் எல்லாம் உள்வாங்கிக் கொள்ளும் போது, தாமரையின் மையத்தை அடைவாயாக.''

ஒவ்வொரு யுக்தியும் ஒரு குறிப்பிட்ட வகை மனதிற்குப் பயன்படக் கூடியது. நாம் ஆலோசித்த மூன்றாவது யுக்தி – தலையினுடைய திறப்புக்களை மூடுவது – பலரும் பயன்படுத்த முடியக் கூடியது. அது மிகவும் எளிமையானது, அதோடு பெரிய ஆபத்து ஏதுமில்லாதது. நீ அதை வெகு சுலபமாகப் பயன்படுத்த முடியும். மேலும் திறப்புக்களை உனது கைகளாலேயே தான் மூட வேண்டும் என்பதில்லை. மூடுவதே தேவை. ஆகவே நீ காது அடைப்பான்களையும், கண்களுக்குக் கண் மறைப்பையும் பயன்படுத்தலாம். உண்மையான விஷயம், சில கணங்களுக்குத் தலையினுடைய எல்லாத் திறப்புகளையும் முழுதாக மூடிக் கொள்வதுதான் – சில கணங்களுக்கு அல்லது சில விநாடி களுக்கு, இதை முயற்சி செய். இதைப் ப்யிற்சி செய்யாதே – திடீரென்று மட்டுமே இது உதவும். இது திடீரென நடக்கும் பொழுது இது உதவி புரியும். நீ படுக்கையில் படுத்துக்

கொண்டிருக்கும் பொழுது திடீரென உன் எல்லாத் திறப்பு களையும் சில நொடிகளுக்கு மூடிக் கொண்டு, உள்ளே என்ன நடக்கிறதென்று பார்.

மூச்சு முட்டுவது போல உணரும் போதும் தொடரு. ஏனெனில் மூச்சை நிறுத்துவதால் அப்படித்தான் இருக்கும். முற்றிலும் பொறுக்க முடியாமல் ஆகும் வரை தொடரு. அப்படி முற்றிலும் பொறுக்க முடியாமல் போகும் பொழுது, உன்னால் திறப்புகளைத் தொடர்ந்து மேலும் மூடிக் கொள்ள முடியாமல் நீயே திறந்துவிடுவாய். ஆகவே நீ கவலைப்படத் தேவை யில்லை. உள்ளே எழும் சக்தியின் வேகம் எல்லாத் திறப்புகளின் அடைப்புகளையும் வீசி எறிந்துவிட்டுத் திறந்துவிடும். ஆகவே உன்னைப் பொருத்தவரை, நீ தொடரு. மூச்சு முட்டுவது வரும் பொழுது, அது தான் தருணம். ஏனெனில் அந்த மூச்சு முட்டுவது பழைய தொடர்புகளை அறுத்துவிடும். உன்னால் ஒரு சில கணங்கள் மேலும் தொடர முடியுமானால், அது மிகவும் நல்லது. அது கடினமாகவும், சிரமமாகவுமே இருக்கும், மேலும் நீ இறக்கப் போவதாக உணர்வாய் – ஆனால் பயப்படாதே, ஏனெனில் நீ இறக்க முடியாது. திறப்புக்களை மூடுவதனால் மட்டும் நீ இறந்து விட முடியாது. ஆனால் நீ இறக்கப் போவதாக உணரும் தருணமே, அது நடக்கக் கூடிய கணம்.

அந்தக் கணத்தில் நீ தொடர்ந்து இருக்க முடிந்தால், திடீரென்று எல்லாம் பிரகாசிக்கும். நீ, தொடர்ந்து பரவிக் கொண்டே போகும் உள்வெளியை உணர்வாய். மேலும் அதில் முழுமையும் உள்ளடங்கும். பிறகு உனது திறப்புகளைத் திற. திரும்பத் திரும்ப இதை முயற்சி செய்து கொண்டே இரு. உனக்கு எப்பொழுதெல்லாம் நேரம் கிடைக்கிறதோ, அப்பொழு தெல்லாம் முயற்சி செய். ஆனால் இதைப் பயிற்சி செய்யாதே. ஒரு சில கணங்களுக்கு மூச்சை நிறுத்துவதற்கு நீ பயிற்சி செய்து கொள்ள முடியும். ஆனால் அந்தப் பயிற்சியால் பலனேது மில்லை. திடீரென்ற ஒரு ஆட்டம் தேவை. இந்தத் திடீர் ஆட்டத்தில், குலுக்கலில், உன்னுடைய பழைய வழியில்

பிரக்ஞை ஓடுவது நிற்கிறது, அப்போது புதிய விஷயம் சாத்தியமாகிறது.

இன்றும் கூடப் பலர் இதைப் பயிற்சி செய்து வருகின்றனர் - இந்தியா முழுவதும் பலரும் செய்கின்றனர். அவர்கள் எல்லோரும் இதைப் பயிற்சி செய்கின்றனர். ஆனால் இது ஒரு திடீர் முறை. நீ பயிற்சி செய்தால், பின் எதுவும் நடக்காது. நான் திடீரென உன்னை இந்த அறையிலிருந்து வெளியே வீசினால், உன் எண்ணங்கள் நின்றுவிடும். ஆனால் தினந்தோறும் நாம் அதைப் பயிற்சியாகச் செய்தால், அப்போது எதுவும் நடக்காது. அது ஒரு இயந்திரத்தனமான பழக்கமாக மாறிவிடும். ஆகவே இதைப் பயிற்சி செய்யாதே. எப்பொழுது முடிகிறதோ அப்பொழுதெல்லாம் முயற்சி செய். அப்போது திடீரென்று, நீ உள்வெளியைப் பற்றிய விழிப்புணர்வை அடைவாய். அந்த உள்வெளி உன்னுடைய பிரக்ஞை நிலைக்கு, நீ இறப்பின் விளிம்பில் இருக்கும் போது தான் வரும். நீ, ''இப்போது ஒரு கணம் கூடத் தொடர முடியாது. இப்போது இறப்பு அருகில் வந்து விட்டது'' என்று உணரும் கணம் தான் சரியான தருணம். தொடர்ந்து இரு! பயப்படாதே. இறப்பு அவ்வளவு சுலபமானது அல்ல. இந்த முறையைப் பயன்படுத்தியதன் காரணமாக இதுவரை ஒரே ஒருவர் கூட இறந்ததில்லை. ஆகவே அதற்குச் சாத்தியமே இல்லை.

தயார் நிலையிலுள்ள பாதுகாப்பு ஏற்பாடுகள் உன் உடம்பில் உள்ளன, ஆகவே நீ இறக்க முடியாது. இறக்குமுன் ஒருவன் பிரக்ஞையை இழக்க வேண்டும். நீ பிரக்ஞையோடு இருக்கும் பொழுது, நீ இறக்கப் போவதாக உணர்ந்தால், பயப்பட வேண்டியதில்லை. நீ இன்னும் பிரக்ஞையோடு, சுய வுணர்வோடு இருக்கிறாய், ஆகவே நீ இறக்க முடியாது. மேலும் நீ பிரக்ஞையை இழந்து விட்டால், அப்போது உன்னுடைய சுவாசம் இயங்க ஆரம்பித்துவிடும். ஏனெனில் பிரக்ஞையற்ற நிலையில் உன்னால் அதைத் தடுத்து நிறுத்த முடியாது. ஆகவே நீ காதுகளுக்கு அடைப்பான்களைப் பயன்படுத்தலாம். கைகள்

தேவையில்லை. கைகள் பயன்படுத்தப்படுவதன் காரணம், நீ பிரக்ஞையற்று விழுந்துவிட்டால் அப்போது கைகள் தாமாகவே இலகி விடும். எனவே சுவாசம் தானாகவே மீண்டும் இயங்கத் துவங்கிவிடும்.

நீ காதுகளுக்கு அடைப்பான்களையும், கண்களுக்கு மறைப்பையும் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் மூக்கிற்கும், வாய்க்கும் எந்தவித அடைப்பையோ, கிளிப் பையோ பயன்படுத்த வேண்டாம். ஏனெனில் அப்படிச் செய்வது ஆபத்தாக முடியலாம். குறைந்த பட்சம் மூக்காவது எதானாலும் அடைக்கப்படாமல் இருக்க வேண்டும். அதை உன் கைகளால் மூடிக் கொள். அப்போதுதான் நீ பிரக்ஞையற்று விழுந்து விட்டால், கைகள் இலகி சுவாசம் நடக்க ஆரம்பிக்கும். இப்படித் தயார் நிலையான பாதுகாப்பு ஏற்பாடு உள்ளது. இந்த முறை பலராலும் பயன்படுத்த முடியக்கூடியது ஆகும்.

நான்காவது முறை, மிகவும் வளர்ந்த இதயமுள்ளவர் களுக்கு, நேசம் மிகுந்த, உணர்ச்சி பூர்வமான, உணர்வு மிகுந்தவர் களுக்கு உரியது. ''ஆசிர்வதிக்கப் பட்டவனே, இதயத்தில் புலன்கள் எல்லாம் உள்வாங்கிக் கொள்ளப்படும் போது, தாமரை யின் மையத்தை அடைவாயாக.'' இந்த முறை, இதயத்தை அடிப்படையாகக் கொண்டவர்களுக்கு மட்டுமே உரியது. ஆகவே முதலில் இதயத்தை அடிப்படையாகக் கொண்டவர் என்றால் யார் என்பதைப் புரிந்து கொள். அப்போது தான் இந்த முறையைப் புரிந்து கொள்ள முடியும்.

இதயத்தை அடிப்படையாகக் கொண்ட ஒருவருக்கு எல்லாமே இதயத்தைச் சென்றடைவதாகவே இருக்கும், எல்லாமே. நீ அவரை நேசித்தால், அவரது இதயம் உன் நேசத்தை உணரும். அவருடைய தலை அல்ல. தலையை முதன்மையாகக் கொண்ட ஒருவர், அவர் நேசிக்கப்படுவதைக் கூட, அவரது மூளையில்தான், தலையில்தான் உணர்வார். அவர் அதைப்பற்றி யோசிப்பார். அவர் அதைக் குறித்துத் திட்டமிடுவார். அவரது

நேசம் கூட மனம் திட்டமிட்டு எடுக்கும் ஒரு முயற்சியாகவே இருக்கும்.

உணரும் வகையைச் சார்ந்த ஒருவர், எந்தவிதக் காரண காரிய சிந்தனையுமற்று வாழ்வார். இதயத்திற்கு அதற்கே உரிய காரணங்கள் இருக்கின்றன என்றாலும், அது காரணகாரிய சிந்தனையற்றே வாழ்கிறது. யாராவது ஒருவர் உன்னிடம், ''நீ ஏன் நேசிக்கிறாய்?'' என்று கேட்கும் பொழுது, உன்னால் அதற்குப் பதில் சொல்ல முடிந்தால், நீ ஒரு தலையை அடிப்படையாகக் கொண்ட மனிதன். மாறாக நீ, ''எனக்குத் தெரியாது, நான் நேசிக்கிறேன் அவ்வளவுதான்'' என்று சொன்னால், நீ ஒரு இதயத்தை அடிப்படையாகக் கொண்ட மனிதன்.

ஒருவர் அழகாக இருப்பதால்தான் நான் நேசிக்கிறேன் என்று நீ சொன்னால் கூட அதுவும் ஒரு காரணம் என்றாகி விடுகிறது. ஒரு இதய அடிப்படையில் வாழ்பவனுக்கு, அவன் நேசிப்பதால் அந்த ஒருவர் அழகாக இருக்கிறார். தலையின் அடிப்படையில் வாழ்பவன், அவனோ, அவளோ அழகாயிருப்ப தால் நேசிப்பவன். முதலில் காரணமிருக்கிறது, பிறகு அன்பு வருகிறது. இதயம் அடிப்படையிலான ஒருவருக்கு முதலில் அன்பு வருகிறது, அதன்பின் அனைத்தும் பின்தொடர்கின்றன. உணர்ச்சிவசப்பட்டவர்கள் இதயத்தில் மையம் கொண்டிருக் கிறார்கள். ஆகவே எது நடந்தாலும் அது அவர்களது இதயத்தையே தொடுகிறது.

உன்னையே நீ ஆழந்து கவனி. உன்னுடைய வாழ்வில், ஒவ்வொரு கணமும் பல விஷயங்கள் நடந்து கொண்டிருக் கின்றன. அவை உன்னை எங்கே தொடுகின்றன? நீ நடந்து செல்கிறாய், ஒரு பிச்சைக்காரன் சாலையைக் கடக்கிறான். அந்தப் பிச்சைக்காரன் உன்னை எங்குத் தொடுகிறான்? நீ உடனே நாட்டின் பொருளாதார நிலையைப் பற்றி யோசிக்க ஆரம்பிக்கிறாயா? நீ பிச்சையெடுப்பதை எப்படி சட்டப்படி ஒழிக்க முடியும் என்று யோசிக்கிறாயா அல்லது பிச்சைக்

காரர்களே இல்லாமல் போய்விடுகிற ஒரு சோஷலிஸ சமுதாயத்தை எப்படி உருவாக்குவது என்று யோசிக்கிறாயா? இதுதான் தலையை அடிப்படையாகக் கொண்ட மனிதன். அந்தப் பிச்சைக்காரன் இவனுக்கு வெறும் ஒரு குறியீடாக இருக்கிறான். இவனது இதயம் தொடப்படவில்லை, வெறும் தலை மட்டுமே தொடப்படுகிறது. இவன் அந்தப் பிச்சைக்காரனுக்காக இப்போது, இந்தக் கணத்தில் எதுவும் செய்யப் போவதில்லை. இவன் கம்யூனிஸத்திற்காக ஏதாவது செய்வான். எதிர்காலத் திற்காக, ஏதோவொரு கனவுலகிற்காக, ஏதாவது செய்வான். இவன் அதற்காகத் தனது வாழ்வையே கூட அர்ப்பணிப்பான். ஆனால் இவனால் இந்தக் கணத்தில், இப்பொழுது எதுவும் செய்ய முடியாது.

மனம் எப்பொழுதும் எதிர்காலத்திலேயே வேலை செய்கிறது; இதயம் எப்பொழுதும் இங்கு, இப்பொழுது இருக்கிறது. ஒரு இதய அடிப்படையிலானவன் அந்தப் பிச்சைக் காரனுக்கு ஏதாவது இப்பொழுதே செய்வான். அந்தப் பிச்சைக்காரன் ஒரு மனிதன், வெறும் ஒரு குறியீடல்ல. ஆனால் தலை வயப்பட்டவனுக்கு, அந்தப் பிச்சைக்காரன் வெறும் ஒரு கணிதக் குறியீடு. தலை வயப்பட்டவனுக்கு, பிச்சையெடுப்பதை எப்படி ஒழிப்பது என்பதே பிரச்சனை. அந்தப் பிச்சைக்காரனுக்கு உதவ வேண்டும் என்பதல்ல – அது அவனுக்கு முக்கியமற்றது. ஆகவே உன்னை விலகி நின்று பார். பல சூழ்நிலைகளிலும் நீ எப்படி நடந்து கொள்கிறாய் என்பதைக் கவனி. நீ இதயத்தின் மேல் ஈடுபாடு கொண்டவனா அல்லது நீ தலையைக் குறித்து ஈடுபாடு கொண்டவனா?

நீ இதய வயப்பட்ட மனிதனாக உன்னை உணர்ந்தால், இந்த முறை உனக்கு மிகவும் உதவும். ஆனால் அதே சமயம், எல்லோரும் தங்களை இதய வயப்பட்டவன் என்று தாங்களே ஏமாற்றிக் கொள்ள முயல்கிறார்கள் என்பதை நன்றாக அறிந்து கொள். எல்லோரும் தாங்கள் மிகவும் அன்பானவர், உணர்ச்சி வயப்படும் வகையினர் என்று உணர்ந்து கொள்ளவே முயற்சிக்

கின்றனர். ஏனெனில் அன்பு அப்படிப்பட்ட ஒரு அடிப்படைத் தேவை. அன்பு இல்லை தனக்கு, அன்பான இதயமில்லை தன்னிடம் என்று ஒருவர் தன்னைப் பார்த்தால், அதை எவராலும் இலகுவாக, சரியானதாக எடுத்துக் கொள்ள முடிவதில்லை. ஆகவே ஒவ்வொருவரும் தாங்கள் அன்பானவரே என்று எண்ணிக் கொண்டும், நம்பிக் கொண்டும் இருக்கின்றனர். ஆனால் நம்புவதால் பயனில்லை. துளியும் பாரபட்சமில்லாமல் ஆழ்ந்து கவனிப்பது போல, பிறகு முடிவு செய் – ஏனெனில் உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளத் தேவையில்லை. மேலும் அது எந்தவிதத்திலும் உதவாது. உன்னையே நீ ஏமாற்றிக் கொண் டாலும், நீ இந்த யுக்தியை ஏமாற்ற முடியாது. ஆகவே நீ இந்த யுக்தியைச் செய்யும் போது, அங்கு எதுவுமே நடக்காமல் போவதை நீ உணர்வாய்.

மக்கள் என்னிடம் வருகிறார்கள், நான் அவர்களிடம் எந்த வகையைச் சேர்ந்தவர்கள் அவர்கள் என்று கேட்கிறேன். அவர்களுக்கு உண்மையில் தெரியாது. அவர்கள் ஒருபோதும் அதைப்பற்றி – எந்த வகையினர் நாம் என்பதைப் பற்றி – யோசித்ததில்லை. அவர்கள் அவர்களைப் பற்றிய பொதுவான கருத்துக்களையே கொண்டிருக்கிறார்கள். மேலும் அந்தக் கருத்துக்கள் உண்மையில் வெறும் கற்பனைகளாகவே உள்ளன. அவர்களுக்குக் குறிப்பிட்ட சில கற்பனைப் பாத்திரங்கள், சுய கற்பனை வடிவங்கள் இருக்கின்றன. மேலும் அவர்கள், தாங்கள் இந்தக் கற்பனை வடிவங்களே என்று எண்ணுகிறார்கள் அல்லது அப்படியிருக்கவே ஆசைப்படுகிறார்கள். ஆனால் அவர்கள் அப்படியிருப்பதில்லை. மாறாகப் பல சமயம் அவர்கள் அவர் களின் நினைப்புக்கு நேர் மாறானவர்களாக இருப்பதே நிகழ்கிறது.

இதற்கும் ஒரு காரணம் இருக்கிறது. ஒருவன் தனக்கு இதயமில்லை என்று உணர்வதினாலேயே, அதனால் அவனுக்கு ஏற்படும் பயத்தினாலேயே, தான் ஒரு இதய வயப்பட்டவன் என்று வலியுறுத்தக்கூடும். இதனால் இவன் தனக்கு இதய

மில்லை என்ற உண்மையைக் குறித்த விழிப்புணர்வு அடைய முடியாமல் போகிறது.

இந்த உலகத்தைப் பார்! எல்லோரும் அவர்களது இதயத்தைப் பற்றிக் கூறுவது சரியென்றால், இந்த உலகம் இவ்வளவு இதயமற்றதாக இருக்க முடியாது. இந்த உலகம் நமது கூட்டுத் தொகைதான். ஆகவே எங்கோ ஏதோ தவறு நேர்ந் திருக்கிறது. இதயம் இங்கில்லை. உண்மையில், இங்கிருப்பதற்கு அதற்கு எந்தப் பயிற்சியும் ஒருபோதும் கொடுக்கப்படவில்லை. மனதிற்குப் பயிற்சியளிக்கப்பட்டுள்ளது, ஆகவே அது இங்கிருக் கிறது. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் என்று மனதிற்குப் பயிற்சி கொடுப்பவை உள்ளன. ஆனால் இதயத்தைப் பயிற்றுவிக்க எந்த இடமும் இல்லை. மேலும் மனத்தைப் பயிற்றுவிப்பது ஆதாயமளிப்பதாக உள்ளது. ஆனால் இதயத்தைப் பயிற்றுவிப்பது அபாயகரமானது. உனது இதயம் பயிற்றுவிக்கப்பட்டால் நீ முற்றிலும் இந்த உலகத்திற்குப் பொருந்தாதவனாக ஆகிவிடுவாய். ஏனெனில் இந்த முழு உலகமும் காரண காரிய அடிப்படையிலேயே ஓடிக்கொண் டிருக்கிறது.

உனது இதயம் பயிற்றுவிக்கப்பட்டால், இப்பொழுதுள்ள வாழ்க்கை முறையின் முழுமையான பின்னணியில் நீ வெறும் மடத்தனமாகவே இருப்பாய். முழு உலகமும் வலது பக்கம் போகும் போது, நீ இடது பக்கம் போவாய். எல்லா இடத்திலும் நீ சிரமத்தை உணர்வாய். உண்மையில், மனிதன் எவ்வளவு அதிகம் நாகரிகமடைகிறானோ, அந்த அளவு மேலும் மேலும் குறைவாக இதயம் பயிற்றுவிக்கப்படுகிறது. நாம் உண்மையில் அதைப் பற்றியே மறந்து விட்டோம் – அதாவது அது இருக்கிறது என்பதை அல்லது அதைப் பயிற்றுவிக்க வேண்டிய தேவை இருக்கிறது என்பதை. அதனால் தான், இது போன்ற முறைகள், மிகச் சுலபமாக வேலை செய்யக் கூடியவை, ஒருபோதும் வேலை செய்வதில்லை.

பெரும்பாலான மதங்கள் இதய அடிப்படையிலான யுக்தி களைக் கொண்டு இருப்பவைகளே – கிறித்துவம், இஸ்லாம், இந்து மற்றும் பல. இவையெல்லாம் இதயவயப்பட்ட மனிதனை அடிப்படையாகக் கொண்டவை. எந்த அளவு ஒரு மதம் பழமையானதோ அந்த அளவு அதிகமாக இதயவயப்பட்ட மனிதனை அடிப்படையாகக் கொண்டதாக அது இருக்கும். உண்மையில், வேதங்கள் எழுதப்பட்ட போது, இந்துமதம் வளரும் வேளையில் இதயவயப்பட்ட மனிதர்களே அங்கு இருந்தார்கள். அப்பொழுது மனதின் வயப்பட்ட மனிதர்களைக் காண்பது உண்மையிலேயே கடினம். ஆனால் இன்று பிரச்சனை தலைகீழானது. நீ பிரார்த்திக்க முடியாது. ஏனெனில் பிரார்த்தனை ஒரு இதய அடிப்படையிலான யுக்தி. அதனால் தான், பிரார்த்தனையை அடிப்படையாகக் கொண்ட மதமான கிறித்துவ மதம் பரவி இருக்கும் மேற்கத்திய நாடுகளிலும் பிரார்த்தனை மிகவும் கடினமாகி விட்டது. குறிப்பாக கத்தோலிக்க சர்ச் பிரார்த்தனை அடிப்படையிலானது.

தியானம் என்ற ஒரு விஷயமே கிறித்துவ மதத்தில் கிடையாது. ஆனால் இப்போது மேற்கத்திய மக்களும் கூடத் தியானத்தைக் குறித்துக் கிறுக்குப் பிடித்தவர்களாக இருக் கிறார்கள். ஒருவரும் சர்ச்சுக்குப் போவதில்லை. மேலும் அப்படியே யாரோ ஒருவர் போனாலும் கூட அது ஒரு வெறும் சடங்குதான். வெறும் ஞாயிற்றுக்கிழமை மதம். மேற்கத்திய நாட்டில் ஒருவரும் சர்ச்சுக்குப் போவதில்லை. ஏனெனில் அங்கிருப்பவனுக்கு இதய அடிப்படையிலான பிரார்த்தனை முற்றிலும் தெரியாததாகி விட்டது.

தியானம் அதிகமாக மனதின் அடிப்படையிலானது, பிரார்த்தனை அதிகம் இதய அடிப்படையிலானது. அல்லது பிரார்த்தனை இதய வயப்பட்டவர்களுக்கான தியான யுக்தி என்று நாம் சொல்லலாம்.

இந்த யுக்தியும் இதய வயப்பட்டவர்களுக்கானதே. ''ஆசீர்வதிக்கப்பட்டவளே, இதயத்தில் புலன்கள் எல்லாம்

உள்வாங்கிக் கொள்ளப்படும் போது, தாமரையின் மையத்தை அடைவாயாக.''

எனவே இந்த யுக்தியில் செய்ய வேண்டியது என்ன? ''இதயத்தில் புலன்கள் எல்லாம் உள்வாங்கிக் கொள்ளப்படும் போது.....'' முயற்சி செய்! பல வழிகளில் இது சாத்தியம். நீ யாரோ ஒருவரைத் தொடுகிறாய்; நீ இதய வயப்பட்டவனாக இருந்தால், அந்தத் தொடுதல் உடனடியாக உனது இதயத்திற்குச் செல்லும். அதோடு நீ அந்தத் தொடுதலின் தன்மையை உணர முடியும். நீ தலைவயப்பட்ட ஒருவனின் கரங்களைத் தொட்டுப் பார்த்தால், அந்தக் கரங்கள் சில்லிட்டிருக்கும். வெறும் குளிர்ச்சி அல்ல அது. மாறாக அதன் இயல்புத் தன்மையே சில்லிட்டதாக இருக்கும். ஒரு இறந்து போன தன்மை, ஒரு இறந்து போன தன்மையின் குணம் அந்தக் கரங்களில் இருக்கும். அதே சமயம் இதய வயப்பட்டவனாக இருந்தால் அப்போது அங்கு ஒரு குறிப்பிடத்தக்க கதகதப்பு இருக்கும். அப்போது அவனது கரம் உன்னுடையதுடன் உண்மையிலேயே கரையும். நீ அவனுடைய கரத்திலிருந்து உன்னுடையதற்கு ஏதோ ஒன்று பாய்வதை உணர்வாய். அங்கு ஒரு சந்திப்பு நிகழும். ஒரு கதகதப்பான தொடர்பு ஏற்படும்.

இந்தக் கதகதப்பு இதயத்திலிருந்து வருகிறது. இது ஒருபோதும் தலையிலிருந்து வரமுடியாது. ஏனெனில் தலை எப்பொழுதும் குளிர்ந்தது.... சில்லிட்டது, கணக்கு போடுவது. இதயம் கதகதப்பானது, கணக்கு போடாதது. தலை எப்பொழுதும் எப்படி அதிகம் எடுத்துக் கொள்வது என்பதைப் பற்றியே யோசிக்கிறது; இதயம் எப்பொழுதும் அதிகம் கொடுப்பது எப்படி என்றே உணர்கிறது. அந்தக் கதகதப்பு ஒருவிதக் கொடுத்தல் – சக்தியைக் கொடுத்தல், உள்துடிப்பைக் கொடுத்தல், வாழ்வைக் கொடுத்தல். அதனால்தான் அதில் நீ ஒரு வித்தியாசமான தன்மையை உணர்கிறாய். அவன் உன்னை உண்மையாகக் கட்டித் தழுவினால், நீ அவனுடன் ஆழமாகக் கரைந்து போவதை உணர்வாய்.

தொடு! உன்னுடைய கண்களை மூடிக்கொண்டு எதை யாவது தொடு. உனது காதலனை அல்லது உனது காதலியைத் தொடு, உனது குழந்தையை அல்லது உனது தாயை அல்லது உனது நண்பனைத் தொடு, அல்லது ஒரு மரத்தை அல்லது ஒரு மலரைத் தொடு, அல்லது வெறும் பூமியைத் தொடு. உனது கண்களை மூடிக்கொண்டு, உனது இதயத்திற்கும் பூமிக்கும் அல்லது உனது காதலனுக்கும் ஏற்படும் தொடர்பை உணரு. பூமியைத் தொடுவதற்காக நீண்டுள்ள உனது இதயத்தின் பகுதியே உனது கை என்றுணர். தொடும் உணர்வு உனது இதயத்துடன் சம்பந்தப்பட்டதாக இருக்கட்டும்.

நீ இசையைக் கேட்டுக் கொண்டிருக்கிறாய். அதைத் தலையிலிருந்து கேட்காதே. உனது தலையை மறந்துவிடு. அதோடு உனக்குத் தலை இல்லை என்பதாக உணர், தலையே இல்லை என்பதைப் போல உணர். உனது படுக்கை அறையில் தலையில்லாத உனது புகைப்படத்தை வைத்திருப்பது நல்லது. அதன் மேல் கவனத்தைக் குவி; நீ தலையில்லாமல் இருக்கிறாய், தலை உள்ளே வர அனுமதிக்காதே. இசையைக் கேட்கும் பொழுது, அதை இதயத்திலிருந்து கேள். இசை உன்னுடைய இதயத்திடம் வருவதாக உணர். உன்னுடைய இதயம் அதோடு சேர்ந்து துடிக்கட்டும். உனது புலன்கள் இதயத்துடன் இணைந்த தாகட்டும், தலையோடு அல்ல. இதை எல்லா புலன்களுடனும் முயற்சி செய். மேலும் ஒவ்வொரு புலனும் இதயத்தினுள் போய் அதில் கரைவதாக மேலும் மேலும் அதிகமாக உணரு.

''ஆசிர்வதிக்கப்பட்டவளே, இதயத்தில் புலன்கள் எல்லாம் உள் வாங்கிக் கொள்ளப்படும் போது, தாமரையின் மையத்தை அடைவாயாக.'' இதயம் தான் தாமரை. ஒவ்வொரு புலனும் அந்தத் தாமரையின் திறப்பு, அந்தத் தாமரையின் இதழ்கள். முதலில் உனது புலன்களை இதயத்தோடு தொடர்புபடுத்திக் கொள்ள முயற்சி செய். இரண்டாவதாக ஒவ்வொரு புலனும் இதயத்தின் அடி ஆழம் வரை சென்று அதனுள் உள்வாங்கிக் கொள்ளப்படுவதாக எப்பொழுதும் நினை. இந்த இரண்டு

விஷயங்களும் நிர்மானமான பின்பு தான் உனது புலன்கள் உனக்கு உதவ ஆரம்பிக்கும். அவை உன்னை இதயத்திடம் கொண்டு சேர்க்கும். அப்போது உனது இதயம் ஒரு தாமரையாக மாறும்.

இந்த இதய தாமரை உனக்கு ஒரு மையத்தைக் கொடுக்கும். ஒரு முறை இதயத்தின் மையத்தை நீ அறிந்து விட்டால், நாபி மையத்தினுள் விழுவது மிகவும் சுலபம். இந்தச் சூத்திரம் இதைக் குறிப்பிடுவது கூட இல்லை – அதற்குத் தேவையில்லை. நீ உண்மையாக இதயத்தினுள் முழுமையாக உள்வாங்கிக் கொள்ளப்பட்டால்,காரணகாரிய அறிவு வேலை செய்வது நின்றுவிட்டால், பின் நீ கீழே விழுந்து விடுவாய். இதயத்திலிருந்து நாபியை நோக்கிக் கதவு திறந்துவிடும். தலையிலிருந்து நாபிக்குச் செல்வதுதான் கடினம். அல்லது நீ இரண்டிற்கும் இடையிலிருந்தால், இதயத்திற்கும் தலைக்கும் இடையே இருந்தால், அப்போதும் நாபிக்குச் செல்வது கடினம். ஒருமுறை நீ நாபிக்குள் உள்வாங்கிக் கொள்ளப்பட்டு விட்டால், நீ திடீரென்று இதயத்திற்கு அப்பால் சென்று விடுகிறாய். நீ நாபி மையத்தினுள், அடிப்படையான மையத்தில், அசலான, உண்மையான மையத்தில் விழுந்து விடுகிறாய்.

அதனால் தான் பிரார்த்தனை உதவக்கூடியதாயிருக்கிறது. அதனால்தான் ஜீஸஸ், ''அன்பே கடவுள்'' என்று சொல்ல முடிந்தது. இது மிகச் சரியாகப் பார்த்தால் தவறுதான். ஆனால் அன்பு தான் வாயில். நீ ஆழமான அன்பில் இருந்தால் – யாருடனாய் இருந்தாலும் சரி, அது யார் என்பது முக்கிய மானதல்ல.... அன்புதான் முக்கியம்; அன்பு யார் மேல், எதன் மேல் என்பதில் எந்த முக்கியத்துவமும் இல்லை. நீ யாருடனாவது ஆழமாக அன்பு கொண்டிருந்தால், தலையினு டைய எந்தச் சம்பந்தமும் இல்லாத அளவு அதிக அன்பு கொண் டிருந்தால், வெறும் இதயம் மட்டுமே இயங்கிக் கொண் டிருந்தால், அப்போது இந்த அன்பு பிரார்த்தனையாகி விடும். அதோடு உனது அன்பிற்குரியவர் தெய்வாம்சமாகி விடுவார்.

உண்மையில், இதயத்தின் கண்களால் தெய்விகத்தைத் தவிர வேறு எதையும் பார்க்க முடியாது. அதனால் தான் சாதாரண காதலில் கூடத் தெய்விகம் நிகழ்கிறது. நீ யாருடனாவது காதலில் விழுந்து விட்டால், அந்த யாரோ தெய்விகமாகிப் போகிறார். இது மிகவும் நிலைத்து நிற்கக் கூடியதாக இல்லாமல் போகலாம். இது மிகவும் ஆழமானதாக இல்லாமல் போகலாம். ஆனாலும் அந்தக் கணத்தில் காதலிப்பவரோ அல்லது காதலுக்குட்பட்ட வரோ தெய்விகமாக மாறிவிடுகின்றனர். விரைவிலோ அல்லது சிறிது காலத்திலோ தலை இந்த முழு விஷயத்தையும் அழித்து விடும். ஏனெனில் தலை உள்ளே நுழைந்து எல்லாவற்றையும் நிர்வகிக்க முயற்சி செய்யும். அன்பைக் கூட நிர்வகிக்க வேண்டும். அப்படித் தலை நிர்வகிக்க புகுந்தவுடன், எல்லாமும் அழிந்து விடுகிறது.

தலையினுடைய நிர்வகிப்பு உள்ளே வராமல் நீ அன்பு கொள்ள முடிந்தால், உன்னுடைய அன்பு கண்டிப்பாகப் பிரார்த்தனையாக மாறும். அதோடு உனது அன்பிற்குரியவர் இதயத்தின் வாயிலாக மாறுவார். உனது அன்பு உன்னை இதயத்தில் மையம் கொண்டவனாக்கும் – அதோடு நீ இதயத்தில் மையம் கொண்டவுடன், நீ தானாகவே ஆழத்தில், நாபி மையத்தினுள் விழுந்து விடுவாய்.

## 17. தேர்ந்தெடுக்காதே, நடுவில் வைத்திரு.

ஐந்தாவது மையம் கொள்ளும் யுக்தி :

''மனம் வைக்காத மனத்தை, நடுவில் வைத்திரு – அதுவரை.''

இவ்வளவுதான் சூத்திரம். எல்லா விஞ்ஞான சூத்திரங் களையும் போல இது சிறியது. ஆனால் இந்தச் சில சொற்கள் உனது வாழ்வையே முழுமையாக மாற்றியமைக்கக் கூடியது. ''மனம் வைக்காத மனத்தை, நடுவில் வைத்திரு – அதுவரை.''

''நடுவில் வைத்திரு....'' புத்தர் அவரது தியான யுக்தி முழுவதையும் இந்த சூத்திரத்திலிருந்தே பெற்றார். அவருடைய வழி ''மஜ்ஹிம் நிகாய்'' – அதாவது 'மத்திய வழி' என்று அறியப் படுகிறது. புத்தர் சொல்கிறார், ''எப்பொழுதும் நடுவிலேயே இரு – எல்லாவற்றிலும்.''

சரவண் என்ற ஒரு இளவரசன் தீட்சை பெற்றான். புத்தர் அவனுக்கு சந்நியாச தீட்சை அளித்தார். அந்த இளவரசன் ஒரு அரிய மனிதன். அவன் சந்நியாசம் எடுத்துக் கொண்ட போது, அவனுக்குத் தீட்சை அளிக்கப்பட்ட போது, அவனது முழு சாம்ராஜ்ஜியமும் அதைக் கண்டு ஆச்சரியத்தில் மூழ்கியது. இளவரசன் சரவண் சந்நியாசம் ஏற்பான் என்பதை அந்த நாட்டால் நம்ப முடியவில்லை, மக்களால் நம்ப முடியவில்லை. இதை ஒருவரும் ஒருபோதும் கற்பனை கூடச் செய்யவில்லை, ஏனெனில் அவன் இந்த உலகத்து மனிதன் – எல்லாவற்றிலும் ஈடுபடுபவன், கடைசிவரை ஈடுபடுபவன். மதுவும் மங்கையரும் தான் அவன் முழு உலகமும்.

அப்போது திடீரென்று புத்தர் அந்த நகரத்துக்கு வந்தார். இளவரசன் அவரது தரிசனத்திற்காக அவரைப் பார்க்கச் சென்றான். அவன் புத்தரின் பாதங்களில் விழுந்து சொன்னான், ''எனக்குத் தீட்சை கொடுங்கள். நான் இந்த உலகத்தைத் துறந்து விடுகிறேன்.''

அவனுடன் வந்த மற்றவர்களுக்கு இதைப்பற்றி ஏதும் தெரியாது.... இது மிகவும் திடீரென்று நடந்தது. ஆகவே அவர்கள் புத்தரிடம் கேட்டார்கள், ''என்ன நடக்கிறது? இது ஒரு அற்புதம். சரவண் இந்த வகை மனிதனல்ல, அதோடு அவன் மிகுந்த செல்வச் செழிப்பில் வளர்ந்தவன். இதுவரை நாங்கள் சரவண் சந்நியாசம் எடுப்பான் என்று கற்பனை கூடச் செய்த தில்லை. ஆகவே என்ன நடந்தது இப்போது? நீங்கள் ஏதோ செய்து விட்டீர்கள்.''

புத்தர் சொன்னார், ''நான் எதுவும் செய்யவில்லை. மனம் ஒரு முனையிலிருந்து மறு முனைக்கு ஊஞ்சல் போல சுலபமாக நகரக் கூடியது. இது தான் மனதின் வழி. ஒரு அதீத முனையி லிருந்து மற்றொரு அதீத முனைக்கு நகருவது. ஆகவே சரவண் புதிதாக எதுவும் செய்துவிடவில்லை. இது எதிர்பார்க்க வேண்டியதே. உங்களுக்கு மனதின் செயல் விதி தெரியாததால், நீங்கள் மிகவும் அதிர்ச்சி அடைந்திருக்கிறீர்கள்.''

மனம் ஒரு அதீத நிலையிலிருந்து மற்றொன்றுக்கு நகரும், இது தான் மனதின் வழி. எனவே தினந்தோறும் இது நிகழ்கிறது, செல்வத்தின் பின்னால் பயித்தியமாக இருந்த ஒருவன் எல்லா வற்றையும் துறக்கிறான். ஒரு நிர்வாண பக்கிரியாக மாறி விடுகிறான். நாம் நினைக்கிறோம், ''என்ன ஒரு அற்புதம் இது!'' ஆனால் இது ஒன்றுமேயில்லை – இது சாதாரண விதி. செல்வத்தின் பின்னால் பயித்தியமாக இல்லாத ஒருவன் அதைத் துறந்து விடுவான் என்று எதிர்பார்க்க முடியாது. ஏனெனில் நீ ஒரு அதிகபட்ச நிலையிலிருந்துதான் மற்றொரு அதிகபட்ச, அதீத நிலைக்கு நகர்கிறாய் – ஒரு கடிகாரத்தின் கீழே ஆடும் பெண்டுலத்தைப் போல, ஒரு பக்க அதிகபட்ச முனையிலிருந்து எதிர்ப்பக்கத்திற்கு.

ஆகவே செல்வத்தின் பின்னே செல்லும் ஒருவன், செல்வத்தின் பின்னே பயித்தியமாய் செல்பவன், அதை எதிர்ப் பதிலும் பயித்தியமாய் இருப்பான். ஆனால் அந்தப் பயித்தியக் காரத் தன்மை தொடர்ந்து இருக்கும் – அது தான் மனம். செக்சுக்காக, பாலுணர்வுக்காகவே மட்டும் வாழ்ந்த ஒருவன், ஒரு பிரம்மச்சாரியாக மாறலாம், தனியிடத்தில் வாழ ஆரம்பிக்கலாம். ஆனால் அந்தப் பயித்தியக்காரத் தன்மை தொடர்ந்து இருக்கும். முதலில் பாலுணர்ச்சிக்காக மட்டும் வாழ்ந்தான், இப்போது பாலுணர்ச்சியை எதிர்த்து மட்டும் வாழ்வான் – ஆனால் அந்த அணுகுமுறை, பார்வை, அப்படியே தான் இருக்கும்.

ஆகவே ஒரு பிரம்மச்சாரி உண்மையில் பாலுணர்வைக் கடந்தவன் அல்ல; அவனது முழு மனமும் பாலுணர்வு அடிப்படையிலானதுதான். அவன் எதிர்த்து நிற்பவன், ஆனால் கடந்து சென்றவனல்ல. கடந்து செல்லும் வழி எப்பொழுதும் நடுவிலுள்ளது. அது ஒருபோதும் அதீத நிலைகளில் இல்லை. ஆகவே புத்தர் சொன்னார், ''இதை எதிர்பார்த்திருக்க முடியும். எந்த அற்புதமும் நடக்கவில்லை. மனம் வேலை செய்யும் விதமே இப்படித்தான்.''

சரவண் ஒரு பிச்சைக்காரனாக, ஒரு சந்நியாசியாக மாறினான். அவன் ஒரு பிட்சுவாக, ஒரு துறவியாக மாறினான். அதன்பின் விரைவிலேயே புத்தரின் மற்ற சீடர்கள் அவன் மற்றொரு அதீத நிலைக்குச் செல்வதைக் கவனித்தார்கள். புத்தர் யாரையும் ஒருபோதும் நிர்வாணமாக இருக்கச் சொல்லிய தில்லை. ஆனால் சரவண் நிர்வாணமாக மாறினான். புத்தர் நிர்வாணத்தை ஆதரிப்பவரில்லை. அவர் சொன்னார், ''இது வெறும் மற்றொரு அதீத நிலை.''

ஆடைகளுக்காகவே வாழும் மனிதர்கள் இருக்கிறார்கள், ஏதோ அதில்தான் அவர்களது வாழ்வு இருப்பதுபோல. அதே சமயம் நிர்வாணமாக மாறி வாழும் மனிதர்களும் இருக்கிறார்கள் – ஆனால் இந்த இருசாராரும் ஒன்றையே நம்புகிறார்கள். அது ஆடையே வாழ்வு. புத்தர் ஒருபோதும் நிர்வாணத்தைப் போதிக்க வில்லை. ஆனால் சரவண் நிர்வாணமாக மாறினான். புத்தரின் சீடர்களில் நிர்வாணமாயிருந்த ஒரே சீடன் சரவண் தான். அவன் மிக மிக அதிகம் தன்னையே கொடுமைப்படுத்திக் கொள்பவ னாக மாறினான். புத்தர் எல்லா சந்நியாசிகளுக்கும் தினந்தோறும் ஒரு வேளை உண்ணுவதற்கு அனுமதித்திருந்தார். ஆனால் சரவண் ஒரு நாள் விட்டு ஒரு நாள் தான் ஒரு வேளை உணவு சாப்பிடுவான். அவன் மிகவும் மெலிந்தும், வலுவிழந்தும்

போனான். மற்ற எல்லாச் சீடர்களும் தியானத்திற்காக மரங்களின் அடியில், நிழல்களில் அமரும்போது, சரவண் மட்டும் ஒருபோதும் எந்த மரத்தின் அடியிலும் உட்கார மாட்டான். அவன் எப்பொழுதும் தகிக்கும் சூரியனின் அடியிலேயே இருப்பான். அவன் ஒரு அழகான மனிதன், அதோடு அவனுக்கு மிகவும் சிறந்த உடம்பும் இருந்தது. ஆனால் ஆறு மாதத்தில் அவனை யாரும் அடையாளம் காண முடியாதபடி ஆகி விட்டான். அவன் அசிங்கமாகவும், கறுத்தும், இருண்டும், சூடுபட்டும் மாறிப் போனான்.

புத்தர் ஒரு நாள் இரவு சரவணிடம் சென்று அவனிடம் கேட்டார், ''சரவண், நீ தீட்சைக்கு முன்பு, இளவரசனாக இருந்த போது, நீ எப்பொழுதும் வீணை வாசிப்பாய் என்றும், நீ ஒரு பெரிய இசைக் கலைஞன் என்றும் நான் கேள்விப்பட்டேன். அதனால் உன்னிடம் ஒரு கேள்வி கேட்கலாம் என்று நான் வந்தேன். வீணையின் கம்பிகள் மிகவும் தளர்ந்து இருந்தால், லூசாக இருந்தால் என்ன நிகழும்?''

சரவண் சொன்னான், ''கம்பிகள் மிகவும் தளர்ந்து இருந்தால், பிறகு இசை சாத்தியமில்லை.''

அதன் பின் புத்தர் கேட்டார், ''மேலும் அந்தக் கம்பிகள் மிகவும் இறுகி, வெகுவாக இழுபட்டு இருந்தால், அப்போது என்ன நிகழும்?''

சரவண் சொன்னார், ''அப்போதும் இசைக்க முடியாது, இசையை உருவாக்க முடியாது. கம்பிகள் நடுநிலையில் இருக்க வேண்டும் – தளர்வாகவோ, இறுக்கப்பட்டோ இருக்கக் கூடாது. ஆனால் மிகச் சரியாக இரண்டிற்கும் நடுவில் இருக்க வேண்டும்.'' சரவண் சொன்னான், ''வீணை வாசிப்பது சுலபம், ஆனால் ஒரு குரு மட்டுமே கம்பிகளைச் சரியாக அமைக்க முடியும், நடுவில் அமைக்க முடியும்.''

அதன்பின் புத்தர் சொன்னார், ''கடந்த ஆறு மாதங்களாக உன்னை ஆழ்ந்து கவனித்த பின்பு, நான் இதை உன்னிடம் சொல்ல விரும்புகிறேன் – வாழ்விலும் அதன் இசை, அதன் கம்பிகள் மிகவும் தளர்ந்தோ அல்லது மிகவும் இறுக்கப்பட்டோ இல்லாமல், நடுவில் இருக்கும்போது தான் வரும். ஆகவே துறப்பது சுலபம், ஆனால் ஒரு குரு மட்டுமே நடுவில் இருப்பது எப்படி என்பதை அறிவார். ஆகவே சரவண், ஒரு குருவாக இரு, வாழ்வின் இந்தக் கம்பிகள் நடுவிலேயே இருக்கட்டும் – எல்லாவற்றிலும். இந்த முனைக்கும் போகாதே, அந்த முனைக்கும் போகாதே. எல்லாவற்றிற்கும் இரண்டு முனைகள், இரண்டு அதீத நிலைகள் உள்ளன. ஆனால் நீ நடுவிலேயே இரு.''

ஆனால், மனம் மிகவும் மனம் வைக்காதது. அதனால் தான் சூத்திரம் சொல்கிறது, ''மனம் வைக்காத மனத்தை...'' நீ இதைக் கேட்பாய், நீ இதைப் புரிந்து கொள்வாய், ஆனால் மனம் இதை எடுத்துக் கொள்ளாது. மனம் எப்போதும் தொடர்ந்து அதீத நிலைகளையே தேர்ந்தெடுக்கும்.

மனதிற்கு அதீத நிலைகளின் மேல் ஒரு வசீகரிப்பு உண்டு. ஏன்? ஏனெனில் மத்தியில் இருக்கும்போது மனம் இறந்து விடுகிறது. பெண்டுலத்தைப் பார் : உன்னிடம் பழைய கடிகாரம் ஏதாவது இருந்தால், அதன் பெண்டுலத்தைப் பார். அது அதீத நிலை வரை, கடைசிவரை போய்க்கொண்டிருந்தால், அதனால் நாள் முழுவதும் ஓடிக் கொண்டிருக்க முடியும். அது இடது பக்கமாகப் போகும்போது வலது பக்கம் போவதற்கான விசையைச் சேகரித்துக் கொள்கிறது. அது வலது பக்கம் போகும் போது, அது இடது பக்கம் போவதற்கான விசையைச் சேகரிக்கிறது. இப்படி வலது – இடது, வலது – இடது என்று அதீத நிலைகள் உள்ளன.

பெண்டுலம் மத்தியில் நிற்கட்டும், அப்போது அதன் முழு விசையையும் இழந்துவிடுகிறது. அப்போது பெண்டுலத்திற்கு

சக்தி இல்லாமல் போகிறது. ஏனெனில் சக்தி ஏதாவது ஒரு அதீத நிலைக்குப் போவதிலிருந்தே கிடைக்கிறது. ஒரு அதீத நிலை அதை மற்றொன்றை நோக்கி வீசிவிடுகிறது, பிறகு திரும்பவும், இப்படி இது ஒரு வட்டம்.... பெண்டுலம் ஓடிக்கொண்டே இருக்கிறது. அது நடுவில் இருக்கட்டும், அப்போது முழு ஓட்டமும் நின்றுவிடும்.

மனம் ஒரு பெண்டுலம் போன்றதே, அது தினமும் அப்படித்தான் இயங்குகிறது. நீ ஆழ்ந்து கவனித்தால், நீ இதை அறிந்து கொள்வாய். நீ ஒரு விஷயத்தை அதன் அதீத நிலையில் முடிவு செய்கிறாய். பிறகு நீ மற்றொரு அதீதத்திற்கு நகருகிறாய். நீ கோபப்படுகிறாய்; பிறகு நீ அதற்காக வருந்துகிறாய். நீ முடிவு செய்கிறாய், ''இல்லை, இது போதும். இனிமேல் நான் ஒருபோதும் கோபப்பட மாட்டேன்.'' ஆனால் நீ அதீதத்தில் இருப்பதை உன்னால் பார்க்க முடிவதில்லை.

''ஒரு போதும்'' என்பது அதீதமானது, அதிகப்படியானது. நீ ஒருபோதும் கோபப்படமாட்டாய் என்று எப்படி உன்னால் அவ்வளவு உறுதி கொள்ள முடியும்? நீ என்ன சொல்கிறாய்? மறுபடியும் நினைத்துப் பார் – ஒருபோதும்? கடந்த காலத்தில் எவ்வளவு முறை நீ ''நான் ஒருபோதும் கோபப்பட மாட்டேன்'' என்று முடிவு செய்தாய் என்பதை நினைத்துப் பார். நீ, ''நான் ஒருபோதும் கோபப்பட மாட்டேன்'' என்று சொல்லும் போது, நீ கோபப்படும் பொழுது அதற்கு நேர்எதிரான அதீத நிலைக்குச் செல்ல நீ சேர்த்துக் கொண்ட விசைதான் இது என்பதை நீ அறிவதில்லை.

இப்போது நீ வருத்தப்படுகிறாய், நீ மோசமாக உணர்கிறாய். நீ உன்னைப் பற்றிக் கற்பனை செய்து கொண்டுள்ள உருவம் ஆட்டம் காண்கிறது, பாதிக்கப்படுகிறது. இப்போது, நான் ஒரு நல்ல மனிதன் என்று உன்னால் சொல்ல முடியாது.

நான் ஒரு மதத் தன்மை உள்ளவன் என்று உன்னால் சொல்ல முடியாது. நீ கோபப்பட்டு விட்டாய். ஆனால் எப்படி ஒரு மதத்தைப் பின்பற்றுபவன் கோபப்பட முடியும்? எப்படி ஒரு நல்ல மனிதன் கோபப்பட முடியும்? ஆகவே நீ உன்னுடைய நல்ல தன்மையைத் திரும்பப் பெறுவதற்காக வருத்தப்படு கிறாய். குறைந்த பட்சம் உன் கண்களுக்காவது நீ மீண்டும் நல்லவனாகத் தோன்றலாம். ஏனெனில் இப்போது நீ வருத்தப்பட்டு விட்டாய். மேலும் நீ இனிமேல் கோபம் கொள்வதில்லை என்று தீர்மானித்து விட்டாய். ஆட்டம் கண்ட கற்பனை வடிவம் திரும்பவும் அதன் பழைய நிலைக்கு வந்து விட்டது. இப்போது நீ இலகுவாக உணர்கிறாய், நீ இப்போது மற்றொரு அதித நிலைக்கு நகர்ந்து விட்டாய்.

ஆனால், ''இனிமேல் நான் ஒருபோதும் கோபப்பட மாட்டேன்'' என்று சொல்லும் மனம், மறுபடியும் கோபப்படும். நீ மறுபடியும் கோபம் கொள்கையில், நீ மறந்துவிடுவாய். கோபத்திற்குப் பிறகு, மறுபடியும் வருத்தப்படுவது வரும், முடிவு எடுப்பது வரும். ஆனால் நீ ஒருபோதும் இந்த ஏமாற்று வேலையை உணர்ந்து கொள்ள மாட்டாய். இது எப்பொழுதும் இப்படியே தான் போய்க் கொண்டிருக்கும்.

மனம் கோபத்திலிருந்து வருத்தப்படுவதற்கு, வருத்தப் படுவதிலிருந்து கோபத்திற்கு நகர்கிறது. நடுவில் இரு. கோபப் படாதே, வருத்தமும் படாதே. நீ கோபப்பட்டுவிட்டால், பின் தயவு செய்து இதையாவது செய் : வருத்தப்படாதே. மறு முனைக்குப் போகாதே. நடுவில் இரு. சொல்லிக் கொள், ''நான் கோபப்பட்டேன், நான் ஒரு மோசமானவன் தான், ஒரு அடிதடி செய்பவன்தான். நான் கோபம் கொண்டேன். இப்படித்தான் நான் இருக்கிறேன்.'' ஆனால் அதற்காக வருத்தப்படாதே; எதிர் முனைக்கு ஓடாதே. நடுவில் இரு. நீ அப்படி இருக்க முடிந்தால்,

நீ எந்த விசையையும் சேகரிக்க மாட்டாய், மறுபடியும் கோபம் கொள்ளும் சக்தி எதுவும் சேராது.

இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''மனம் வைக்காத மனத்தை, நடுவில் வைத்திரு - அதுவரை.'' மனமற்றுப் போகும்வரை. அதீத நிலைகளில் மனம் இருக்கிறது என்றால், அப்போது நடுவில் மனமற்றதே இருக்கும்.

ஆனால் உலகத்திலேயே மிகவும் கடினமான காரியம் இதுதான். இது சுலபமாகத் தெரிகிறது, எளிதாகத் தெரிகிறது; நீ இதைச் செய்துவிட முடியும் என்பது போலத் தெரியலாம். மேலும் எதற்காகவும் வருத்தப்படத் தேவையில்லை என்ற நினைப்பு உனக்கு நன்றாக இருக்கலாம். முயற்சி செய்து பார், அப்போது தெரியும், உன் மனம் நீ கோபப்பட்டவுடன் அதற்காக வருத்தப்படச் செய்வதை.

கணவன் மனைவி சண்டை தொடர்ந்து நடப்பது. பலபல நூற்றாண்டுகளாக, ஆலோசனை சொல்பவர்கள், புத்தி சொல் பவர்கள், எப்படி வாழ வேண்டும், அன்பாயிருக்க வேண்டும் என்று எடுத்துக் கூறிய பெரியோர்கள் என இருந்தும், அவர்கள் சண்டை தொடர்ந்து கொண்டே இருக்கிறது. 'ப்ராய்ட்' முதன் முறையாக, ஒரு விஷயத்தை உணர்ந்தார். அதாவது, அன்பு என்று நீ அழைத்துக் கொள்ளும் உன்னுடைய அன்பில் நீ இருக்கும் போது, நீ வெறுப்பிலும் இருக்கிறாய். காலையில் அது அன்பாக இருக்கிறது, மாலையில் அது வெறுப்பாக இருக்கிறது, இப்படிப் பெண்டுலம் நகர்ந்து கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு கணவனுக்கும், ஒவ்வொரு மனைவிக்கும் இது தெரியும். ஆனால் ப்ராய்ட் மிகத் தெளிவான ஒரு பார்வையைப் பெற்றிருந்தார். ப்ராய்ட் சொன்னார், அதாவது ஒரு தம்பதியினர் சண்டை போடுவதை நிறுத்திக் கொண்டு விட்டால், அன்பும் செத்துப் போய்விட்டது என்பதைப் புரிந்துகொள்.

வெறுப்போடும் சண்டையோடும் கூடிய அன்பு நீண்ட காலம் உயிர்வாழ முடியாது. எனவே நீ ஒருபோதும் சண்டையே போடாத தம்பதிகளைப் பார்த்தால், அவர்களை மிகச் சிறந்த தம்பதிகளாக நினைத்து விடாதே. உண்மையில் அதன் அர்த்தம் அவர்கள் தம்பதிகளே அல்ல. அவர்கள் இணைந்து வாழ் பவர்கள், ஆனால் ஒன்றாய் வாழ்பவர்கள் அல்ல. அவர்கள் ஒருபோதும் எங்குமே சந்தித்துக் கொள்ளாத இணை கோடுகள், சண்டையிடக்கூட சந்திக்காதவர்கள். அவர்கள் இருவரும் தனித்தனியாகச் சேர்ந்திருப்பவர்கள் – இணையானவர்கள்.

மனம் எதிரானதை நோக்கி நகரக் கூடியது. இதை அறிந்த தற்போதைய மனோதத்துவம் மேலும் நல்ல ஆலோசனைகளைக் கொடுக்கிறது. இந்த ஆலோசனைகள் மேலும் சிறந்தவை, அதிக ஆழமும், அதிகமாக ஊடுருவக் கூடியதாகவும் உள்ளன. அது சொல்கிறது, நீ அன்பு கொள்ள விரும்பினால் – மனத்தோடு கூடியது – சண்டை போடப் பின்வாங்காதே. உண்மையில் நீ மிக உறுதியாக சண்டையிட வேண்டும், அப்போது தான் நீ மற்றொரு அதீத நிலையான உறுதியான அன்பிற்குப் போக முடியும். ஆகவே நீ உன்னுடைய மனைவியுடன் சண்டையிடும்போது, அதைத் தவிர்க்க முயலாதே; அப்படிச் செய்தால் அன்பையும் தவிர்க்க வேண்டி வரும். சண்டைக்கான நேரம் வரும் பொழுது, கடைசி வரை சண்டையிடு. அப்போது நீ மாலையில் அன்பு கொள்ள முடியும்; மனம் அதற்கான விசையைச் சேகரித் திருக்கும். சாதாரணமான அன்பு சண்டையில்லாமல் இருக்க முடியாது. ஏனெனில் அங்கு மனதின் ஓட்டம் இருக்கிறது. மனதின் சம்பந்தமில்லாத அன்பு மட்டுமே சண்டையில்லாமல் இருக்க முடியும். ஆனால் அப்போது அது முற்றிலும் வேறுபட்ட விஷயமாகி விடுகிறது.

ஒரு புத்தர் அன்பு கொள்கிறார்.... அது முற்றிலும் வேறு விஷயம். ஆனால் புத்தர் உன்னிடம் அன்பு காட்ட வந்தால், நீ

நன்றாக உணர மாட்டாய். ஏனெனில் அதில் எந்தக் குறையும் இருக்காது. அது வெறும் இனிப்பாக, இனிப்பாக, இனிப்பாக மட்டுமே இருக்கும் - மேலும் சலிப்பாகவும் இருக்கும். ஏனெனில் சுவையே சண்டையிலிருந்துதான் கிடைக்கிறது. ஒரு புத்தர் கோபமடைய முடியாது, அவர் அன்பு மட்டுமே காட்ட முடியும். நீ அவருடைய அன்பை உணர முடியாது. ஏனெனில் உன்னால் எதிரெதிரானவைகளையே உணர முடியும். உன்னால் அதற்கு முழுதும் மாறுபட்ட தன்மையிருந்தால் தான் அன்பை உணர முடியும்.

பன்னிரண்டு வருடங்களுக்குப் பிறகு புத்தர் அவருடைய சொந்த நகரத்திற்குத் திரும்பி வந்தபோது, அவரது மனைவியால் அவரை வரவேற்க வர முடியவில்லை. அவரது மனைவியைத் தவிர அந்த நகரம் முழுவதும் அவரை வரவேற்கக் கூடியிருந்தது. புத்தர் சிரித்தார், பின் தனது முதன்மைச் சீடனான ஆனந்தாவிடம் சொன்னார், ''யசோதரா வரவில்லை. எனக்கு அவளை நன்கு தெரியும். அவள் இன்னும் என்னிடம் அன்பு கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அவள் பெருமை கொண்டிருக்கிறாள், அதோடு அவள் காயப்பட்டும் இருக்கிறாள். பன்னிரண்டு வருடம் என்பது நீண்ட காலம். ஆகவே அவள் இப்போது அன்பு கொண்டிருக்க மாட்டாள் என்று நான் நினைத்தேன். ஆனால் அவள் இன்னும் அன்பு கொண்டிருக்கிறாள் - இன்னும் கோபத்தோடிருக்கிறாள் என்று தெரிகிறது. அவள் என்னை வரவேற்க வரவில்லை. நான் வீட்டிற்குப் போக வேண்டும்.''

புத்தர் சென்றார். ஆனந்தா அவருடன் இருந்தார்; ஆனந்தா கொண்டுள்ள நிபந்தனை அது. ஆனந்தா தீட்சை எடுத்த போது அவன் புத்தரிடம் ஒரு நிபந்தனை போட்டான், புத்தரும் அதற்குச் சம்மதித்தார். அதன்படி ஆனந்தா எப்பொழுதும் புத்தருடன் இணைபிரியாமல் இருப்பான். ஆனந்தா ஒன்றுவிட்ட அண்ணன், எனவே புத்தர் ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஆனந்தா அவரைப் பின்பற்றி வீட்டினுள், அரண்மனைக்குள் வந்தான், அப்போது புத்தர் சொன்னார், ''இங்கு மட்டுமாவது நீ பின்தங்கி இரு, என்னுடன் வராதே, ஏனெனில் அவள் கொந்தளித்துக் கொண்டிருப்பாள். நான் பன்னிரண்டு வருடத்திற்குப் பிறகு திரும்பி வருகிறேன். அதோடு நான் அவளிடம் கூடச் சொல்லாமல் ஓடிப் போனவன். அவள் இன்னும் கோபத்தோடு இருக்கிறாள். ஆகவே என்னுடன் வராதே; அப்படி வந்தால், நான் அவள் ஏதாவது சொல்வதற்குக் கூட அனுமதிக்க மறுக்கிறேன் என்று அவள் நினைப்பாள். அவள் பல விஷயங்களைச் சொல்லத் துடிப்பாள். ஆகவே அவள் கோபப் படட்டும், என்னுடன் நீ வராதே.''

புத்தர் உள்ளே சென்றார். யசோதரா எரிமலையாக இருந்தாள். அவள் பொங்கினாள், வெடித்தாள். அவள் கதறிக் கொண்டு, அழுதுகொண்டு, பலவற்றையும் சொல்ல ஆரம்பித்தாள். புத்தர் அங்கேயே இருந்தார், காத்துக் கொண்டு இருந்தார். பின் சிறிது சிறிதாக அவள் அமைதி அடைந்தாள். அப்போது தான் புத்தர் இதுவரை ஒரு வார்த்தை கூடப் பேசாததை உணர்ந்தாள்.

அவள் தனது கண்களைத் துடைத்துக் கொண்டு புத்தரை நிமிர்ந்து பார்த்தாள். அப்போது புத்தர் சொன்னார், ''நான் ஒன்றைப் பெற்றுள்ளேன் என்று சொல்வதற்காகவே நான் வந்தேன். நான் ஒன்றை அறிவேன், நான் ஒன்றை உணர்ந்து கொண்டேன். நீ அமைதியடைந்தால், உனக்கு நான் அந்தச் செய்தியைக் கொடுக்க முடியும் – நான் உணர்ந்த அந்த உண்மையைக் கொடுக்க முடியும். நீ கொட்டித் தீர்க்கட்டும் என்று நான் இவ்வளவு நேரம் காத்திருந்தேன். பன்னிரண்டு வருடம் என்பது நீண்ட விஷயம் தான். நீ பல காயங்களைக் கண்டிப்பாக அடைந்திருப்பாய். ஆகவே உனது கோபம் புரிந்து கொள்ளக் கூடியதே; நான் இதை எதிர்பார்த்தேன். நீ இன்னும்

என் மேல் அன்பு கொண்டிருப்பதை இது காட்டுகிறது. ஆனால் இந்த அன்பைக் கடந்த வேறொரு அன்பு இருக்கிறது. மேலும் அந்த அன்பினாலேயே நான் உன்னிடம் அந்த ஒன்றைச் சொல்வதற்காகத் திரும்பி வந்துள்ளேன்.''

ஆனால் யசோதராவால் அந்த அன்பை உணர முடிய வில்லை. அதை உணருவது கடினம். ஏனெனில் அது மிகவும் மௌனமானது. அது, அதுவே இல்லாதது போன்ற அளவு மௌனமானது. மனம் நின்று விடும் பொழுது ஒரு மாறுபட்ட அன்பு நிகழ்கிறது. ஆனால் இந்த அன்பிற்கு எதிர்மறையான எதுவும் இல்லை. மனம் நின்று விடும்போது, உண்மையில், நடப்பது எதுவாக இருந்தாலும் அதற்கு நேர்மறையானவை கிடையாது. மனம் இருக்கும் பொழுது எப்பொழுதும் ஒரு எதிர்த்துருவமானதும் இருக்கும். மனம் ஒரு பெண்டுலத்தைப் போல நகர்கிறது.

இந்தச் சூத்திரம் அற்புதமானது, இந்தச் சூத்திரம் ஆச்சரியப் பட வைப்பது, இதன் மூலம் அற்புதங்கள் சாத்தியம் : ''மனம் வைக்காத மனத்தை, நடுவில் வைத்திரு – அதுவரை.''

ஆகவே முயற்சி செய். மேலும் இந்தச் சூத்திரம் உன் முழு வாழ்க்கைக்குமானது. நீ இதைச் சில நேரங்களில் மட்டும் பயிற்சி செய்ய முடியாது, நீ இடைவிடாத விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். செய்வது, நடப்பது, சாப்பிடுவது, உறவில், எல்லா இடத்திலும் நடுவில் இரு, முயற்சியாவது செய், ஒரு குறிப்பிட்ட அமைதித்தன்மை வளருவதை நீ உணர்வாய், ஒரு எதனாலும் பாதிக்கப்படாத தன்மை உன்னிடம் வரும், ஒரு மௌனமான மையம் உனக்குள் வளர ஆரம்பிக்கும்.

உன்னால் மிகச் சரியாக நடுவில் இருப்பதில் வெற்றி பெற முடியாவிட்டாலும் கூட நடுவில் இருப்பதற்கு முயற்சி செய்.

மெதுமெதுவாக நடுவில் என்பதன் அர்த்தம் என்ன என்பதை நீ உணர்வாய். எதுவாக இருந்தாலும் சரி – அன்பும் வெறுப்பும், கோபமும் வருத்தமும் – எப்பொழுதும் எதிரெதிர்த் துருவங்களை நினைவில் கொண்டு அவற்றின் மத்தியில் இரு. அப்போது விரைவில் அல்லது சிறிது காலத்தில் நீ மிகச் சரியான நடுப் புள்ளியைத் தெரிந்து கொள்வாய்.

ஒரு முறை இதை நீ அறிந்துவிட்டால், நீ ஒருபோதும் இதை மறக்க முடியாது. ஏனெனில் அந்த நடுப்புள்ளி மனதைக் கடந்தது, அந்த நடுப்புள்ளி தான் ஆன்மிகத்தின் முழு அர்த்தமும் ஆகும்.

## கேள்விகள்

- தயவு செய்து நாபி மையம், மூன்றாவது கண் மையம் மற்றும் முதுகுத் தண்டின் இழை ஆகியவற்றின் செயல்பாடுகளை விளக்குங்கள்.
- புத்தரின் துறவறம் உலக வாழ்க்கைக்கு எதிரானதாகத் தெரிகிறது, நடுப் பாதையாகத் தெரியவில்லை. தயவு செய்து விளக்குங்கள்.
- இதய மையத்தை வளர்த்துக் கொள்ள சில நடை முறை வழிகளைச் சொல்லுங்கள்.
- நடுப்பாதை வழியில் ஒருவன் அன்பு கொள்ள வேண்டுமா அல்லது அன்பு மற்றும் வெறுப்பு ஆகிய இரு துருவங்களிலும் முழுச் சக்தியோடு இருக்க வேண்டுமா?

★★★

பல கேள்விகள் உள்ளன. முதல் கேள்வி :

---

❖ ''ஞானமடையும் பொழுது இரண்டு புருவங்களுக்கும் இடையேயுள்ள வெளி, மூன்றாவது கண், எல்லாவற்றையும் உள்ளடக்கிக் கொண்டதாக மாறும் என்று நீங்கள் நேற்று இரவு கூறினீர்கள். வேறொரு நாள் எல்லா ஞானமடைந்தவர்களும் அவர்களுடைய நாபியில் மையம் கொண்டவர்களே என்று கூறினீர்கள். மேலும் மற்றொரு நாள் முதுகுத் தண்டின் மையத்திலுள்ள வெள்ளி இழை பற்றி விளக்கினீர்கள். இதிலிருந்து மூன்று அடிப்படை விஷயங்கள், மனிதனின் வேர்களாக இருப்பதைப் பற்றி நாம் அறிந்து கொண்டோம். தயவு செய்து நாபி மையம் மூன்றாவது கண், மற்றும் வெள்ளி இழை ஆகிய இந்த மூன்றிற்கும் இடையிலான தொடர்பின் முக்கியத்துவத்தையும், தொடர்பு கொண்ட செயல் முறைகளையும் விளக்குக.''

---

இந்த மையங்களைப் பற்றியெல்லாம் புரிந்து கொள்ள வேண்டிய அடிப்படையான விஷயம் இதுதான் : நீ உள்ளுக்குள் எப்பொழுதெல்லாம் மையம் கொள்கிறாயோ நீ மையம் கொள்ளும் கணத்திலேயே, மையம் எதுவாக இருந்தபோதிலும் நீ நாபியில் விழுந்து விடுகிறாய். நீ இதயத்தில் மையம் கொண்டால், இதயம் முக்கியமல்ல – மையம் கொள்ளுவதே முக்கியம். அல்லது நீ மூன்றாவது கண்ணில் மையம் கொண்டால், மூன்றாவது கண் அடிப்படையானது அல்ல; அடிப்படையான அம்சம் உனது உணர்வு மையம் கொண்டது தான். எனவே மையம் கொள்ளும் புள்ளி எதுவாக இருந்தபோதும், நீ மையம் கொண்டு விட்டால் – எந்த இடமாய் இருந்த போதும் – நீ நாபியில் விழுந்து விடுவாய்.

அடிப்படை உயிர் நிலையான மையம் நாபிதான். ஆனால் உனது செயல்பாட்டு மையம் எங்கு வேண்டுமானாலும் இருக்கலாம். நீ அந்த மையத்திலிருந்து தானாகவே கீழே விழுவாய். ஆகவே அதைப் பற்றி யோசிக்கத் தேவையில்லை. மேலும் இது, இதய மையம் அல்லது மூன்றாவது கண் மையத்திற்கு மட்டும்

பொருந்துவது அல்ல. நீ உண்மையில் காரணகாரிய அறிவில், தலையில் மையம் கொண்டிருந்தால் அங்கிருந்தும் நீ நாபி மையத்தில் விழுந்து விடுவாய்.

மையம் கொள்ளுவதுதான் முக்கியம். ஆனால் தலையில் மையம் கொள்வது மிகவும் கடினம். இதில் பிரச்சனைகள் உள்ளன. இதய மையம் அன்பு சரணாகதி நம்பகத்தன்மை ஆகியவற்றின் அடிப்படையிலானது. தலை சந்தேகத்தின் மறுப்பின் அடிப்படையிலானது.

முழுவதுமாக மறுப்பில், எதிர்ப்பில் இருப்பது உண்மை யில் சாத்தியமற்றது; முழுவதுமாகச் சந்தேகப்படுவதும் சாத்திய மற்றது. ஆனால் சில நேரங்களில் இதுவும் நிகழ்ந்தது. ஏனெனில் நடக்க முடியாததும் நடக்கிறது. சில நேரங்களில், நம்பிக்கை கொண்ட எதுவுமே இல்லாமல், சந்தேகப்படுகின்ற மனதைக் கூட நம்பாத அளவு உன்னுடைய சந்தேகம் அவ்வளவு கூர்மை யானதாக ஆகும் பொழுது, சந்தேகம் அதனிடமே திரும்பி எல்லாமும் சந்தேகமாய் ஆகிவிடும் பொழுது, நீ உடனே நாபி மையத்தினுள் விழுந்து விடுவாய். ஆனால் இது மிகவும் அரிதாகவே நடக்கக் கூடியது.

நம்பகத் தன்மை, விசுவாசம் கொள்வது சுலபமானது. நீ முழுதாக சந்தேகப்பட முடிவதைக் காட்டிலும் சுலபத்தில் முழுதாக நம்பகத் தன்மை கொள்ள முடியும். நீ முடியாது என்று சொல்வதைக் காட்டிலும் சுலபத்தில் முழுமையாக சரி என்று சொல்ல முடியும். எனவே நீ தலையில் மையம் கொண்டிருந் தாலும் கூட அடிப்படையானது மையம் கொண்டிருத்தலே. நீ மையம் கொண்டிருந்தால், நீ உனது உயிர் நிலையின் வேர்களில் விழுந்து விடுவாய். ஆகவே எங்கு வேண்டுமானாலும் மையம் கொள். முதுகுத்தண்டும் சரிதான், இதயமும் சரிதான், தலையும் சரிதான் – அல்லது உடம்பிலுள்ள மற்ற மையங்களையும் நீ எடுத்துக் கொள்ளலாம்.

புத்த மதத்தினர் ஒன்பது சக்கரங்களைப் பற்றிப் பேசு கின்றனர் – உடம்பிலுள்ள ஒன்பது பேராற்றல் மையங்கள். இந்துக்கள் ஏழு சக்கரங்களைப் பற்றிப் பேசுகிறார்கள் –

உடம்பிலுள்ள ஏழு பேராற்றல் மையங்கள். திபெத்தியர்கள் உடம்பிலுள்ள பதிமூன்று மையங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். நீயாகவே உன்னுடையதைக் கண்டு கொள்ள முடியும். இவை களைப் பற்றிப் படிக்க வேண்டிய எந்த அவசியமும் இல்லை.

உடம்பிலுள்ள எந்தப் புள்ளி வேண்டுமானாலும் மையம் கொள்வதற்கான பொருளாக முடியும். உதாரணமாக, தந்த்ரா பாலுணர்ச்சி மையத்தை மையம் கொள்ளப் பயன்படுத்துகிறது, பிரக்ஞையையும் கொண்டு வர முயற்சிக்கிறது. பாலுணர்ச்சி மையமும் சரிதான்.

தாவோவினர் கால் கட்டை விரலை மையமாகப் பயன் படுத்தினர். உனது உணர்வு முழுவதையும் கால் கட்டை விரலுக்கு நகர்த்து; அங்கேயே இரு, முழு உடம்பையும் மறந்து விடு. உனது முழு உணர்வும் கட்டை விரலுக்குச் செல்லட்டும். இதுவும் சரிதான். ஏனெனில் உண்மையில், எதன்மேல் மையம் கொள்ளுகிறாய் என்பது முக்கியமற்றது. நீ மையம் கொண் டிருக்கிறாய் – அதுதான் முக்கியமானது. நிகழ்வது மையம் கொண்டிருப்பதால் நடப்பதேயன்றி, மையத்தினால் நடப்பதல்ல – இதை நினைவில் கொள். மையம் முக்கியமானது அல்ல, மையம் கொள்வதே முக்கியமானது.

ஆகவே குழப்பமடையாதே. ஏனெனில் இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளில் பலவற்றில் பல்வேறு மையங்கள் பயன்படுத்தப்படும். எனவே எந்த மையம் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது, அல்லது எது உண்மையானது என்றெல்லாம் குழப்ப மடையாதே, எந்தவொரு மையமும் போதும். நீ உனது விருப்பத் திற்குத் தகுந்தாற் போலத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

உன் மனது மிகவும் பாலுணர்ச்சி கொண்டது என்றால், பாலுணர்வு மையத்தைத் தேர்ந்தெடுப்பது நல்லது. அதைப் பயன்படுத்து, ஏனெனில் உனது உணர்வு இயல்பாக அதை நோக்கிப் பாய்ந்து கொண்டிருக்கிறது – அப்போது அதைத் தேர்ந் தெடுப்பது தான் நல்லது. ஆனால் பாலுணர்வு மையத்தைத்

தேர்ந்தெடுப்பது கடினமானதாகி விட்டது. அது மிகவும் இயற்கையான மையங்களில் ஒன்று; உனது உணர்வு உடற்கூறால் அந்த மையத்தை நோக்கி இயல்பாகவே கவரப்படுகிறது. ஏன் இந்த உடல்கூறின் சக்தியை உள்நிலை மாற்றத்திற்காகப் பயன் படுத்திக் கொள்ளக் கூடாது? உனது மையமடைதலுக்கு அந்தப் புள்ளியை எடுத்துக் கொள்.

ஆனால் சமூகக் கட்டுக்குட்படுத்தப்பட்ட செயல் முறைகள், பாலுணர்வை அமுக்கி வைக்கும் போதனைகள், ஒழுக்கத்தைத் திணிப்பது – இவை ஆழமான கெடுதலைச் செய்து விட்டன. நீ உனது பாலுணர்வு மையத்திலிருந்து துண்டிக்கப் பட்டிருக்கிறாய். உண்மையில், நமது உண்மையான நிலை பற்றிய நமது கற்பனையில் பாலுணர்வு மையத்தையே விட்டுவிட்டோம். உனது உடம்பைக் கற்பனை செய்து பார் : உனது பாலுணர்வு உறுப்புகளை அதிலிருந்து நீ விட்டு விடுவாய்; இதனால் தான் மக்களில் பலர், தங்களுடைய பாலுணர்வு உறுப்புகள் ஏதோ அவர்களிடமிருந்து வேறுபட்டது போல உணர்கின்றனர். அவை அவர்களின் பாகமில்லாதது போல உணர்கின்றனர். அதனால் தான் இவ்வளவு ஒளிவு மறைவு இருக்கிறது, இவ்வளவு அதிக உணர்வற்ற நிலையடைதல் இருக்கிறது.

யாராவது ஒருவன் வானவெளியிலிருந்தோ, வேறு ஏதாவது கிரகத்திலிருந்தோ வந்து உன்னைப் பார்த்தால், உனக்கு ஏதாவது பாலுணர்வு மையம் இருக்கிறது என்று புரிந்து கொள்ளவே முடியாது. அவன் உன்னுடைய பேச்சைக் கேட்டால், பாலுணர்வு போன்ற ஏதும் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள சாத்தியமேயில்லை. அவன் உன்னுடைய சமூகத்தில், பொதுவாக உள்ள சமூகத்தில் பழகினால், பாலுணர்வுச் செயல் போன்ற ஏதும் நடப்பதாக அறிந்து கொள்ளவே முடியாது.

நாம் ஒரு பிளவை உருவாக்கி விட்டோம். ஒரு தடையை அங்கு வைத்துவிட்டோம், பாலுணர்வு மையத்தை நம்மிட மிருந்து துண்டித்துக் கொண்டு விட்டோம். உண்மையில்,

பாலுணர்வின் பொருட்டே நாம் உடலை இரண்டாகப் பிரித் துள்ளோம். மேல் என்றால் ''உயர்ந்தது'' என்று நமது மனத்தில் அர்த்தம், கீழ் என்றால் ''தாழ்ந்தது'' என்று அர்த்தம் – கீழ் என்பது கண்டனத்துக்குரியது. ஆகவே கீழ்ப் பகுதி என்பது உடம்பின் கீழுள்ள பாதிப் பகுதியை மட்டும் குறிக்கும் சொல்லல்ல, அது மதிப்புக் குறைவையும் காட்டுவது. நீயே உன்னுடைய உடம்பின் கீழ்ப்பகுதி உன்னுடையது என்று நினைப்பதில்லை.

யாராவது ஒருவர் உன்னிடம், ''உன்னுடைய உடம்பில் நீ எங்கிருக்கிறாய்?'' என்று கேட்டால், நீ உன்னுடைய தலையைச் சுட்டிக் காட்டுவாய். ஏனெனில் அதுதான் உயர்ந்திருப்பது. இதனால்தான் இந்தியாவிலுள்ள பிராமணர்கள் சொல்கிறார்கள், ''நாங்கள் தலை, மேலும் சூத்திரர்கள், தொடக் கூடாத அரிசனங்கள், அவர்கள் காலடி.'' காலடி தலையை விடக் கீழானது. உண்மையில் நீ தலை, காலும் மற்ற உறுப்புகளும் உன்னைச் சேர்ந்தவை, ஆனால் நீ அல்ல. இந்தப் பிரிவை ஏற்படுத்துவதற்காக, நாம் ஆடையை இரண்டு பகுதிகளாகச் செய்து விட்டோம் – சில மேல் உடம்பிற்கானவை, சில கீழ் உடம்பிற்கானவை. இது உடம்பை இரண்டாகப் பிரிப்பதற் காகவே. இப்படி ஒரு உள்ளார்ந்த பிரிவு ஏற்பட்டுவிட்டது.

உடம்பின் கீழ்ப் பகுதி உன்னுடைய பாகம் அல்ல. அது உன்னிடம் தொங்கிக் கொண்டிருக்கிறது – அது வேறு விஷயம். இதனால் தான் மையம் கொள்வதற்குப் பாலுணர்வு மையத்தைப் பயன்படுத்துவது சிரமமாகிவிட்டது. ஆனால் அதை நீ பயன்படுத்த முடிந்தால், அது தான் சிறந்தது. ஏனெனில் உடல் கூற்றின்படி உனது சக்தி அந்த மையத்தை நோக்கியே பாய்ந்து கொண்டிருக்கிறது. அதன் மேல் உன் கவனத்தைக் குவி. எப்பொழுதெல்லாம் நீ பாலுணர்ச்சியின் உந்துதலை உணர் கிறாயோ, அப்பொழுதெல்லாம் உன் கண்களை மூடி, உன் சக்தி பாலுணர்வு நோக்கிப் பாய்வதை உணரு.

இதை ஒரு தியான முறையாக ஆக்கிக் கொள், பாலுணர்வு மையத்தில் மையம் கொண்டவனாக உன்னை உணர். அப்போது

திடீரென்று அந்தச் சக்தியின் தன்மை மாறுவதை நீ உணர்வாய். பாலுணர்ச்சி மறைந்து விடும், மேலும் பாலுணர்வு மையம் பிரகாசிப்பதாக, ஒளி பொருந்தியதாக, சக்தி மிக்கதாக, பேராற்றல் கொண்டதாக மாறும். வாழ்வை அதன் உச்சத்தில் இந்த மையத்தில் நீ உணர்வாய். மேலும் நீ மையம் கொண்டிருந்தால், அந்தக் கணத்தில் உண்மையிலேயே பாலுணர்ச்சி முற்றிலுமாக மறக்கப்பட்டு விடும். பாலுணர்வு மையத்திலிருந்து உடம்பு முழுவதும் சக்தி பாய்வதை நீ உணர்வாய், உடம்பைக் கூட மாற்றி, பேரண்ட இயக்கத்திற்குள் புகுவதாக உணர்வாய். நீ முழுவதும் பாலுணர்வு மையத்தில் மையம் கொண்டு விட்டால், திடீரென நீ உனக்கு ஆதாரமான வேரிடம், நாபியிடம் தூக்கி வீசப்படுவாய்.

தந்த்ரா பாலுணர்வு மையத்தைப் பயன்படுத்தியுள்ளது. மேலும் மனிதனின் நிலைமாற்றத்திற்கான அணுகுமுறைகளில் தந்த்ரா மிகவும் விஞ்ஞானபூர்வமானவற்றுள் ஒன்று என்று நான் கருதுகிறேன். ஏனெனில் பாலுணர்வைப் பயன்படுத்துவது மிகவும் விஞ்ஞானபூர்வமானது. மனம் ஏற்கனவே அதை நோக்கிப் பாய்ந்து கொண்டிருக்கும் போது, ஏன் இந்த இயற்கையான ஓட்டத்தை ஒரு வாகனமாகப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது?

இதுதான் தந்த்ராவுக்கும், ஒழுக்க போதனைகள் என்று சொல்லிக் கொள்ளப் படுபவைகளுக்கும் உள்ள அடிப்படை வேறுபாடு. ஒழுக்க போதனையாளர்கள் ஒருபோதும் பாலுணர்வு மையத்தை நிலைமாற்றத்துக்காகப் பயன்படுத்த முடியாது – அவர்கள் பயப்படுகிறார்கள். மேலும் பாலுணர்வு சக்திக்கு எதிரான ஒருவனோ அல்லது ஒருத்தியோ, தங்களை நிலைமாற்றமடையச் செய்து கொள்வதை மிக மிகக் கடினமானதாகவே உண்மையில் பார்ப்பார்கள். ஏனெனில் அவர்கள் ஓட்டத்துக்கு எதிராகப் போராடுகிறார்கள், நதியின் ஓட்டத்திற்கு எதிராகத் தேவையில்லாமல் முயற்சிக்கிறார்கள்.

நதியோடு சேர்ந்து போவது சுலபம், மிதந்தால் போதும். எந்தவித முரண்பாடுமில்லாமல் உன்னால் மிதக்க முடியுமா

னால், நீ இந்த மையத்தை மையம் கொள்வதற்குப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

எந்த மையமாயிருந்தாலும் சரிதான். நீயே உன்னுடைய மையங்களை உருவாக்கிக் கொள்ள முடியும்.... மரபுப்படி இருக்க வேண்டிய அவசியமில்லை. எல்லா மையங்களும் கருவிகள்தான் – மையம் கொள்வதற்கான கருவிகள். நீ மையம் கொண்டுவிட்டால், தானாகவே நீ உனது நாபிக்கு வந்து விடுவாய். மையம் கொண்ட உணர்வு அதன் உண்மையான மூலாதாரத்திற்குத் திரும்பிச் செல்கிறது.

இரண்டாவது கேள்வி :

❖ *புத்தர், பெரும் எண்ணிக்கையிலான மக்கள் சந்நியாசிகளாக மாறுவதற்கு எழுச்சியூட்டினார் – தங்களது உணவிற்காகப் பிச்சை எடுத்துக் கொண்டு, சமூகம், வியாபாரம் மற்றும் அரசியல் ஆகியவற்றிலிருந்து விலகி வாழ்ந்தனர் அந்த சந்நியாசிகள். புத்தர் அவரே ஒரு துறவற வாழ்க்கையையே வாழ்ந்தார். இந்த மடத்து வாழ்க்கை உலக வாழ்க்கையின் மற்றொரு அதீத நிலையாகவே தெரிகிறது. இது நடுப்பாதையாகத் தெரியவில்லை. நீங்கள் இதை விளக்க முடியுமா?*

புரிந்து கொள்வது கடினமாகவே இருக்கும். ஏனெனில் உலக வாழ்வின் மற்றொரு முனை என்ன என்பது பற்றி விழிப்புணர்வு உனக்குக் கிடையாது. வாழ்வின் எதிர்முனை எப்பொழுதும் இறப்புதான். தற்கொலை ஒன்று மட்டுமே வழி என்று சொன்ன ஆசான்கள் இருந்திருக்கிறார்கள். கடந்த காலத்தில் மட்டுமல்ல, இப்பொழுது கூட, இந்தக் காலத்திலும், வாழ்க்கை அபத்தமானது என்று சொல்லுகிற சிந்தனாவாதிகள் இருக்கிறார்கள். வாழும் வாழ்க்கை அர்த்தமற்றது என்றாகி விட்டால், அப்போது இறப்பு அர்த்தமுள்ளது ஆகிவிடுகிறது. வாழ்வும் இறப்பும் எதிரெதிர்த் துருவங்கள். ஆகவே வாழ்வுக்கு எதிரானது இறப்புதான். இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய். உனக்கான வழியை நீயே கண்டுகொள்ள இது உதவியாக இருக்கும்.

வாழ்விற்கு எதிர்த் துருவம் இறப்புதான் என்றால், அப்போது இறப்பை நோக்கி நகர்வது மனதிற்கு மிகவும் சுலபம் – அப்படித்தான் நடக்கிறது. யாராவது ஒருவர் தற்கொலை செய்து கொண்ட பொழுது, அப்படித் தற்கொலை செய்து கொண்டவர் வாழ்க்கையோடு மிக அதிக பற்றுக் கொண்டவராக இருந்தவர் என்பதை நீ ஆழ்ந்து கவனித்திருக்கிறாயா? வாழ்க்கையில் மிகவும் பற்றுக் கொண்டு விட்டவர்களாலேயே தற்கொலை செய்து கொள்ள முடியும்.

உதாரணமாக, நீ உன்னுடைய கணவன் அல்லது மனைவி மீது மிகவும் பற்றுக் கொண்டவன், அதோடு நீ அவன் அல்லது அவள் இல்லாமல் உன்னால் உயிர் வாழ முடியாது என்று நினைக்கிறாய். அப்போது கணவனோ அல்லது மனைவியோ இறக்கும் பொழுது, நீ தற்கொலை செய்து கொள்கிறாய். மனம் எதிர்முனைக்கு நகர்ந்து விடுகிறது. ஏனெனில் அது வாழ்க்கை யோடு மிகவும் பற்றுக் கொண்டிருந்தது. வாழ்க்கை நொறுங்கும் போது, மனம் அடுத்த முனைக்கு நகர்ந்து விடுகிறது.

தற்கொலைகள் இரண்டு வகைப்படும் – மொத்தமான தற்கொலை, படிப்படியான தற்கொலை. உன்னை வாழ்க்கையி லிருந்து விலக்கிக் கொள்வதன் மூலம், உன்னைத் துண்டாக்கிக் கொள்வதன் மூலம், வாழ்வோடு உனக்குள்ள பிணைப்புகளை மெது மெதுவாக வெட்டிவிடுவதன் மூலம், நீ படிப்படியான தற்கொலையை, மெதுவாக சாவதை, செய்து கொள்ளலாம்.

புத்தரின் காலத்தில், தற்கொலையைப் போதித்த பள்ளி களும் இருந்தன. இவர்கள் தான் வாழ்க்கையின், உலக வாழ்வின் உண்மையான எதிர்நிலையாளர்கள். நாம் வாழ்க்கை என்று அழைத்துக் கொள்ளும் இந்த மடத்தனத்திலிருந்து வெளியேறும் ஒரே வழி, இந்தத் துன்பப்படுதலிலிருந்து வெளியேற உள்ள ஒரே வழி, தற்கொலை செய்து கொள்வது மட்டுமே என்று போதித்த பள்ளிகள் அங்கு இருந்தன. ''நீ உயிரோடு இருந்தால் நீ துன்பப்பட்டே ஆக வேண்டும்,'' அவர்கள் சொன்னார்கள், ''மேலும் நீ உயிரோடு இருக்கும் பொழுதே துன்பத்தைக் கடந்து

செல்ல எந்த வழியும் இல்லை. எனவே தற்கொலை செய்து கொள், உன்னையே அழித்துக்கொள்.'' நீ இதைக் கேட்கும் பொழுது இது மிகவும் அதிதமான பார்வை போலத் தெரிகிறது. ஆனால் இதை ஆழமாகப் புரிந்து கொள்ள முயற்சி செய். இதில் ஏதோ அர்த்தம் இருக்கிறது.

சிக்மண்ட் ப்ராய்ட் தனது நாற்பது வருட மனித மனத்தைப் பற்றிய இடைவிடாத உழைப்பின் முடிவில், ஒரு தனிமனிதன் செய்யக்கூடிய மிக நீண்ட கால ஆராய்ச்சிக்குப் பின், மனிதன் அவன் இருக்கிறபடியே மகிழ்ச்சியடைய முடியாது என்ற முடிவுக்கு வந்தார். மனம் செயல்படுகிற வழியே துன்பத்தை உண்டாக்குவதாக உள்ளது. எனவே குறைந்த துன்பம் அல்லது அதிகத் துன்பம் என்று தேர்ந்தெடுத்துக் கொள்வதே அதிக பட்சமாக முடியக் கூடியது. துன்பமில்லாமலிருப்பதைத் தேர்ந் தெடுக்க முடியாது. நீ உனது மனதைப் பக்குவப்படுத்திக் கொண்டால், நீ குறைந்த துன்பப்படுபவனாக இருப்பாய், அவ்வளவுதான். இதைப் பார்த்தால் மிகவும் நம்பிக்கையற்றே தெரிகிறது.

இருப்பதை மட்டுமே ஏற்றுக் கொள்பவர்கள் – சாத்ரே, காமுஸ் மற்றும் பலர் – சொல்கிறார்கள், வாழ்வு ஒருபோதும் பேரானந்தமாக இருக்க முடியாது. வாழ்வின் இயற்கையே பயம், வேதனை, துன்பம் தான். எனவே அதிகபட்சமாக ஒருவன் செய்யக் கூடியது அதைத் தைரியமாகச் சந்திப்பதுதான். அதில் எந்தப் பயனும் இல்லை என்றாலும், நீ அதைத் தைரியத்தோடு சந்திக்க மட்டுமே முடியும், அவ்வளவுதான் – எதையும் எதிர்பார்க்க முடியாது. இருக்கும் சூழ்நிலை முற்றிலும் நம்பிக்கை தராதது. காமுஸ் கேட்கிறார், ''சரி. இதுதான் சூழ்நிலை என்றால், பின் ஏன் தற்கொலை செய்து கொள்ளக் கூடாது? இந்தத் துன்பமான வாழ்க்கையைக் கடந்து செல்ல வழி ஏதும் இல்லை என்றால், பின் இந்த வாழ்வை ஏன் விட்டுவிடக் கூடாது?''

உலகத்தின் தலைசிறந்த நாவல்களில் ஒன்றான 'தோஸ்த்தோவ்ஸ்கி'யின் 'கார்மஸோவ் சகோதரர்கள்' நாவலின்

ஒரு பாத்திரப் படைப்பு கூறுகிறது, ''நான் உன்னுடைய கடவுள் எங்கேயிருக்கிறார் என்று கண்டுபிடிக்க முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். எதற்கென்றால், நுழைவுச் சீட்டை, வாழ்வின் நுழைவுச் சீட்டை அவரிடமே திருப்பிக் கொடுப்பதற்காக. நான் இங்கு இருக்க விரும்பவில்லை. மேலும் கடவுள் என்று யாராவது இருந்தால், அவன் மிகவும் கொடூரமும், வன்முறையும் கொண்டவனாகத்தான் இருக்க முடியும்.'' மேலும் அந்தப் பாத்திரப் படைப்பு சொல்கிறது, ''ஏனெனில் என்னைக் கேட்காமலே இந்த வாழ்க்கைக்குள் என்னைத் தள்ளி விட்டுவிட்டார் அவர். இதை நான் தேர்ந்தெடுக்கவே இல்லை. நான் தேர்ந்தெடுக்காத இதை நான் ஏன் வாழ வேண்டும்?''

புத்தரின் காலத்தில் பல பள்ளிகள் இருந்தன. மனித வரலாற்றில் மிகவும் அறிவுபூர்வமான பேராற்றல் கொண்ட காலங்களில் ஒன்றுதான் புத்தரின் காலம். உதாரணமாக, அப்போது 'அஜித் கேஷ்கம்பல்' இருந்தார். நீ இந்தப் பெயரைக் கேள்விப்படாமல் இருக்கலாம். ஏனெனில் தற்கொலையை உபதேசிப்பவரைச் சுற்றி ஒரு பின்தொடரும் கூட்டம் உருவாவது கடினம். எனவே அஜித் கேஷ்கம்பலைச் சுற்றி ஒரு கூட்டம் இருக்கவில்லை. ஆனால் அவர் தொடர்ந்து ஐந்து வருடங்களுக்கு, தற்கொலை மட்டுமே இருக்கும் ஒரே வழி என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

யாரோ ஒருவர் அஜித்திடம், ''பின் நீ ஏன் இதுவரை தற்கொலை செய்து கொள்ளவில்லை?'' என்று கேட்டதாகச் சொல்லப்படுகிறது.

அதற்கு அவர் சொன்னார், ''இதை உபதேசிப்பதற்காக நான் வாழ்வில் துன்பப்பட வேண்டியுள்ளது. இந்த உலகத்திற்குக் கொடுப்பதற்கு என்னிடம் ஒரு செய்தி உள்ளது. நான் தற்கொலை செய்து கொண்டால், பிறகு யார் உபதேசிப்பார்கள்? யார் இந்தச் செய்தியைப் போதிப்பார்கள்? இந்தச் செய்தியைக் கொடுப்பதற்காக மட்டுமே நான் இருக்கிறேன். அதைத் தவிர, வாழ்வை வாழ்வதற்கான மதிப்புள்ளது எதுவும் கிடையாது.'' இது தான்

வாழ்வுக்கு எதிரான அதீத நிலைப்பாடு, நாம் வாழ்கின்ற இந்த வாழ்வு என்று அழைத்துக் கொள்ளப்படுகின்றதன் எதிர்நிலை.

புத்தரினுடையது நடு வழி. புத்தர் இறப்பையோ வாழ்வையோ சொல்லவில்லை. இதுவே சந்நியாசத்தின் அர்த்தம் : வாழ்வோடு பற்றோ அல்லது எதிர்ப்போ கொள்ளாமல், நடுவில் இருப்பது. எனவே புத்தர் சொல்வது, சந்நியாசம் என்பது சரியாக நடுவிலிருப்பது. சந்நியாசம் என்பது வாழ்வை மறுப்பதல்ல. மாறாக, சந்நியாசம் என்பது வாழ்வு, இறப்பு இரண்டையும் மறுப்பது. எப்போது நீ வாழ்வைப் பற்றியோ, இறப்பைப் பற்றியோ அக்கறை கொள்ள வில்லையோ, அப்போது நீ ஒரு சந்நியாசி ஆகிறாய்.

உன்னால் வாழ்வும் இறப்பும் எதிரெதிர்த் துருவங்களாக இருப்பதைக் காண முடிந்தால், அப்போது சந்நியாசத்திற்கு புத்தர் கொடுக்கும் தீட்சை நடுவழிக்கான தீட்சையாக இருப்பதை அறிவாய். எனவே ஒரு சந்நியாசி உண்மையில் வாழ்க்கைக்கு எதிரானவன் அல்ல. அப்படி அவன் இருந்தால், அப்போது அவன் ஒரு சந்நியாசி அல்ல. அப்போது உண்மையில் அவன் ஒரு மனநோயாளி; அவன் அடுத்த அதீத நிலைக்குச் சென்று விட்டான். ஒரு சந்நியாசி மிகவும் சமச்சீரான உணர்வு, பிரக்ஞை உடையவன் – நடுவில் சரியாக சமன்பட்டு இருப்பவன்.

''வாழ்க்கை துன்பமானது என்றால்,'' மனம் சொல்லும், ''பின் அடுத்த முனைக்கு நகரு.'' ஆனால் புத்த மதத்தினருக்கு வாழ்க்கை துன்பமானது. ஏனெனில் நீ அதீத நிலை கொண் டிருக்கிறாய். இது தான் புத்த மதத்தினர் கருத்து : வாழ்க்கை துன்பமயமானது, ஏனெனில் அது ஒரு அதீத நிலைப்பாட்டில் இருக்கிறது. இறப்பும் துன்பமயமாகவே இருக்கும். ஏனெனில் அது மற்றொரு அதீத நிலையாக இருக்கிறது. பேரானந்தம் சரியாக நடுவில் இருக்கிறது, பேரானந்தம் என்பது சமனாக இருப்பதே.

ஒரு சந்நியாசி என்பவன் சமன்பட்டு இருப்பவன் – வலது பக்கமோ இடது பக்கமோ சாயாதவன், வலது சாரியோ இடது

சாரியோ அல்லாதவன், நடுவில் சரியாக இருப்பவன் – மவுன மாக, நகர்தல் இல்லாமல், இதையோ அதையோ தேர்ந்தெடுக் காமல், தேர்ந்தெடுத்தலே இல்லாமல், மையத்தில் இருப்பவன்.

எனவே இறப்பைத் தேர்வு செய்யாதே. தேர்ந்தெடுப்பதே துன்பம். நீ இறப்பைத் தேர்ந்தெடுத்தால் நீ துன்பத்தைத் தேர்வு செய்துவிட்டாய், நீ வாழ்வைத் தேர்ந்தெடுத்தால் நீ துன்பத்தைத் தேர்வு செய்து விட்டாய். ஏனெனில் வாழ்வும் சாவும் இரண்டு அதீத நிலைகள். மேலும் நினைவில் கொள், ஒரே பொருளின் இரண்டு அதீத நிலைகள், முனைகள் அவை. அவை உண்மையில் இரண்டல்ல. வாழ்வு, இறப்பு என்ற இரு துருவங்களைக் கொண்ட ஒரே ஒரு பொருள் தான்.

நீ ஒன்றைத் தேர்ந்தெடுத்தால், நீ மற்றொரு துருவத்திற்கு எதிராகப் போய் விடுவாய். இது துன்பத்தை உருவாக்குகிறது. ஏனெனில் இறப்பு வாழ்வில் மறைந்துள்ளது. நீ இறப்பைத் தேர்ந்தெடுக்காமல் வாழ்வைத் தேர்ந்தெடுக்க முடியாது. எப்படி அது உன்னால் முடியும்? நீ வாழ்வைத் தேர்ந்தெடுக்கும் கணத்திலேயே நீ இறப்பையும் தேர்ந்தெடுத்து விடுகிறாய். இது துன்பத்தை உண்டாக்குகிறது. ஏனெனில் நீ வாழ்வைத் தேர்ந் தெடுத்ததன் விளைவாக இறப்பு அங்கே இருக்கிறது. நீ மகிழ்ச்சியைத் தேர்ந்தெடுத்தாய்; அதே சமயத்தில், உன்னை அறியாமலேயே, நீ சோகத்தையும் தேர்ந்தெடுத்து விட்டாய். ஏனெனில் அது இரண்டும் ஒன்றாகச் சேர்ந்ததுதான்.

நீ அன்பைத் தேர்ந்தெடுத்தால், அப்போதே நீ வெறுப்பை யும் தேர்ந்தெடுத்து விடுகிறாய். ஒன்று மற்றொன்றின் உள்ளே இருக்கிறது, அங்கு மறைந்திருக்கிறது. ஆகையால் அன்பைத் தேர்ந்தெடுத்த ஒருவன் துன்பப்படுவான். ஏனெனில் அப்போது அவன் வெறுப்படையவும் செய்வான். அப்படி அவன் வெறுப் படைய வேண்டி வரும் பொழுது அவன் துன்பப்படுவான்.

தேர்ந்தெடுக்காதே, நடுவில் இரு. உண்மை, சத்தியம் நடுவில் இருக்கிறது. ஒரு முனையில் சாவும், மறுமுனையில் வாழ்வும் இருக்கிறது. ஆனால் இந்த இரண்டிற்கும் இடையே,

நடுவே ஓடிக்கொண்டிருக்கும் சக்தி தான் உண்மை, சத்தியம். எதையும் தேர்ந்தெடுக்காதே. ஏனெனில் தேர்ந்தெடுப்பதன் அர்த்தம், ஒன்றுக்கு எதிராக மற்றொன்றைத் தேர்ந்தெடுப்பதே. நடுவில் இருப்பது என்பதன் அர்த்தம், எதையும் தேர்வு செய்யாமல் இருப்பது. அப்போது நீ முழுவதையும் விட்டு விடுவாய். மேலும் நீ தேர்ந்தெடுக்கவில்லை என்றால், உன்னைத் துன்பப்பட வைக்க முடியாது.

தேர்ந்தெடுப்பதன் மூலமாகவே துன்பப்படுபவனாக மாறியுள்ளான். தேர்ந்தெடுக்காதே. வெறுமனே இரு! இது சிரமமானது, இது முடியவே முடியாதது போலத் தோன்றும். ஆனால் முயற்சி செய். எப்பொழுதெல்லாம் இரண்டு எதிரெதிரானது உன்முன் இருக்கிறதோ, அப்பொழுதெல்லாம் நடுவில் இருக்க முயற்சி செய். மெதுமெதுவாக உனக்கு ஒரு அறிதல், ஒரு உணர்வு வரும். அப்படி ஒரு முறை நடுவில் இருப்பதன் உணர்வை நீ அறிந்து விட்டால் – இது மிகவும் நுட்பமான விஷயம், வெகு நுட்பமானது, வாழ்வின் எல்லா விஷயங்களிலும் இதுவே மிக மிக நுட்பமானது – நீ ஒரு முறை உணர்ந்து விட்டால் எதுவும் உன்னைப் பாதிக்க முடியாது, எதுவும் உன்னைத் துன்பமடையச் செய்ய முடியாது. அதன்பின் நீ துன்பமில்லாமல் இருப்பாய்.

இதுதான் சந்நியாசம் என்பதன் அர்த்தம் : துன்பமில்லாமல் இருப்பது. ஆனால் துன்பமில்லாமல் இருப்பதற்கு நீ எந்த விதத் தேர்வும் இல்லாமல் இருக்க வேண்டும், நடுவில் இருக்க வேண்டும். புத்தர் முதன் முறையாக, மிகவும் பிரக்ஞையுடன், மிகுந்த உணர்வுடன், எப்பொழுதும் நடுவில் இருப்பதற்கான ஒரு வழியை உருவாக்க முயற்சி செய்தார்.

**மூன்றாவது கேள்வி :**

❖ ***"இதய மையத்தைத் திறப்பதற்கும் வளர்த்துக் கொள்வதற்கு மான சில நடைமுறை யுக்திகளைப் பற்றி எங்களுக்குப் புரிய வைப்பீர்களாக."***

முதல் யுக்தி : தலை இல்லாமல் இருக்க முயற்சி செய். உன்னைத் தலை இல்லாமல் கற்பனை செய்து பார்; தலை இல்லாமல் நட. இது அபத்தமாகப்படலாம். ஆனால் இது மிக முக்கியமான பயிற்சிகளில் ஒன்று. இதை முயற்சி செய், அதன்பின் நீ உணர்வாய். நட, உனக்கு தலை இல்லாதது போல உணரு. ஆரம்பத்தில் இது வெறும் முயற்சியாகவே இருக்கும். இது மிகவும் வினோதமாக இருக்கும். உனக்குத் தலை இல்லை என்ற உணர்வு உனக்கு வரும் பொழுது, அது மிகவும் வினோதமாக முற்றிலும் புதியதாக இருக்கும். ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக நீ இதயத்தில் குடிபுகுவாய்.

ஒரு விதி இருக்கிறது.... குருடாய் இருக்கும் ஒருவர் அதிக கூர்மையான, அதிக நுட்பமான காதுகளைப் பெற்றிருப்பார். குருடான மனிதர்கள் இசையை அதிகம் உணர்வார்கள்; அவர்களது இசைஉணர்வு ஆழமானதாக இருக்கும். ஏன்? சாதாரணமாகக் கண்களின் வழியே வெளியேறும் சக்தி இப்பொழுது அவைகளின் மூலம் வெளியேற முடியாது. எனவே அது வேறொரு வழியைத் தேர்ந்தெடுக்கிறது. அது காதுகளின் வழியே பாய்கிறது.

குருடான மனிதர்கள் ஆழமான தொடு உணர்ச்சியைக் கொண்டிருப்பார்கள். ஒரு குருடான மனிதன் உன்னைத் தொட்டால் நீ வித்தியாசத்தை உணர்வாய், ஏனெனில் சாதாரண மாக நாம் தொடும் வேலையைக் கண்களின் மூலமாகவே செய்கிறோம்; நாம் ஒருவரையொருவர் கண்களின் மூலமாகத் தொட்டுக் கொள்கிறோம். ஒரு குருடான மனிதன் கண்களின் மூலமாகத் தொட முடியாது. எனவே அந்த சக்தி அவனது கைகளின் மூலமாகப் பாய்கிறது. ஒரு குருடான மனிதன் கண்கள் உள்ள யாரை விடவும் அதிக நுட்பமான உணர்வு கொண் டிருப்பான். சில சமயங்களில் அது அப்படி இல்லாமல் போகலாம், ஆனால் பொதுவாக அப்படித்தான் இருக்கும். ஒரு மையம் இல்லையென்றால் அந்த சக்தி மற்றொரு மையத்தின் மூலம் பாயும்.

எனவே நான் பேசிக் கொண்டிருந்த இந்தப் பயிற்சியை – தலை இல்லாமல் இருக்கும் பயிற்சியை – செய்து பார். அப்போது திடீரென்று புதிதாக ஒரு விஷயத்தை உணர்வாய் : அது முதன்முறையாக நீ இதயத்தில் இருப்பதைப் போன்றது. தலையில்லாமல் நட. தியானத்திற்கு உட்கார், உன் கண்களை மூடு, உனக்குத் தலை இல்லாதது போல உணரு. ''எனது தலை மறைந்து விட்டது'' என்று உணரு. ஆரம்பத்தில் அது ஒரு முயற்சியாகவே இருக்கும். ஆனால் சிறிது சிறிதாக உண்மையி லேயே தலை மறைந்து விட்டதாக உணர்வாய். மேலும் உனது தலை மறைந்து விட்டதாக நீ உணர்கையில் உனது மையம் இதயத்தில் விழும் – உடனடியாக விழும். நீ இந்த உலகத்தைத் தலையின் மூலமாக அல்லாமல் இதயத்தின் மூலமாகப் பார்க்கத் தொடங்குவாய்.

மேற்கத்தியர்கள் முதன் முறை ஜப்பானை அடைந்த போது அவர்களால் நம்பமுடியவில்லை. எதுவென்றால், ஜப்பானியர் கள் வயிற்றின் மூலமாகவே தாங்கள் யோசிப்பதாகப் பல நூற்றாண்டுகளாக நம்பும் மரபைக் கொண்டிருந்தனர். நீ ஒரு ஜப்பானியக் குழந்தையை கேட்டால் – மேற்கத்திய வழியில் அது பயிற்றுவிக்கப்படாததாக இருந்தால் – ''உனது யோசனை எங்குள்ளது?'' அது அதனுடைய வயிற்றையே சுட்டிக் காட்டும்.

பல நூற்றாண்டுகள் கழிந்து விட்டன, ஜப்பான் தலை யில்லாமலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறது. இது ஒரு பொதுக் கருத்துதான். நான் உன்னை, ''உன்னுடைய சிந்தனை எங்கு ஓடிக் கொண்டிருக்கிறது?'' என்று கேட்டால், நீ தலையைச் சுட்டிக் காண்பிப்பாய். ஆனால் ஒரு ஜப்பானியன் வயிற்றைச் சுட்டிக் காண்பிப்பான், தலையை அல்ல. ஜப்பானிய மனம் அதிக அமைதியோடும் இரைச்சலின்றியும், சிதறாமலும் இருப்பதற் கான காரணங்களில் இதுவும் ஒன்று.

தற்போது இந்தப் பொதுக் கருத்து பாதிக்கப்பட்டுவிட்டது. ஏனெனில் மேற்கத்திய கருத்துகள் எல்லாவற்றின் மேலும் படிந்துவிட்டது. தற்போது கிழக்கு இல்லாமல் போய் விட்டது.

தீவு போல இங்குமங்கும் இருக்கும் ஒரு சில தனி மனிதர்களிடம் மட்டுமே கிழக்கு உயிர் வாழ்கிறது. மற்றபடி கிழக்கு மறைந்து விட்டது, தற்போது முழு உலகமும் மேற்கத்திய மயமாகி விட்டது.

தலை இல்லாமல் இருப்பதை முயற்சி செய். உன்னுடைய பாத்ரூம் கண்ணாடிக்கு முன்னால் நின்று கொண்டு தியானம் செய். உன்னுடைய கண்களை ஆழமாக ஊடுருவிப் பார், அப்போது இதயத்திலிருந்து நீ பார்ப்பதாக உணரு. கொஞ்சம் கொஞ்சமாக இதய மையம் வேலை செய்யத் துவங்கும். மேலும் இதயம் செயல்பட ஆரம்பித்தவுடன் அது உனது முழு தன்மையையும், முழு அமைப்பையும் முழுப் பழக்கத்தையும் மாற்றி விடுகிறது. ஏனெனில் இதயத்திற்கு அதற்கே சொந்தமான வழி இருக்கிறது.

எனவே முதல் விஷயம் : தலையில்லாமல் இருக்க முயற்சி செய். இரண்டாவதாக, அதிக அன்பு கொள். ஏனெனில் அன்பு தலையின் மூலமாகச் செயல்பட முடியாது. அதிக அன்பு கொண்டவனாய் இரு! இதனால் தான் யாராவது ஒருவன் அன்பில் நேசத்தில் இருக்கும் பொழுது அவன் அவனுடைய தலையை இழந்து விடுகிறான். மக்கள் அவனுக்குப் பயித்தியம் பிடித்து விட்டது என்று சொல்கிறார்கள். ஆனால் நீ அன்பில் பயித்தியமாக இல்லாவிட்டால், அப்போது நீ உண்மையில் அன்பாக இல்லை. தலை இழக்கப்பட வேண்டும். தலை அங்கு இருந்தால் பாதிக்கப்படாமல் சாதாரணமாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தால் அப்போது அன்பு சாத்தியம் இல்லை. ஏனெனில் அன்பிற்கு உனது இதயம் செயல்பட வேண்டும், தலை அல்ல. அன்பு இதயத்தின் செயல்பாடு.

ஒரு மிகவும் பகுத்தறிவோடு கூடிய மனிதன் அன்பில் காதலில் வீழ்ந்தால், அவன் மடையனாக மாறி விடுகிறான். என்ன மடத்தனம், என்ன சிறுபிள்ளைத்தனம் நான் செய்கிறேனென்று அவனே நினைப்பான். அவன் என்ன செய்கிறான்? இந்தக் கேள்விக்குப் பிறகு அவனுடைய வாழ்க்கையே

இரண்டாக அவன் ஆக்கிக் கொள்கிறான். அவன் ஒரு பிரிவை உருவாக்கிக் கொள்கிறான். இதயம் ஒரு மௌனமான மிக நெருக்கமான விஷயமாக ஆகிறது. அவன் வீட்டை விட்டு வெளியே போகும்போது, அவன் அவனது இதயத்திலிருந்து வெளியே வருகிறான். அவன் இந்த உலகத்தில் தலையின் மூலமாக வாழ்கிறான். அவன் தனது இதயத்திற்கு அவன் அன்பு கொள்ளும் பொழுது மட்டுமே திரும்ப வருகிறான். ஆனால் இது மிகவும் கடினமானதாக இருக்கிறது, சாதாரணமாக இது ஒரு போதும் நடப்பதில்லை.

நான் கல்கத்தாவில் ஒரு நண்பரின் வீட்டில் தங்கி யிருந்தேன். அந்த நண்பர் உயர்நீதி மன்றத்தில் ஒரு நீதிபதி. அவருடைய மனைவி என்னிடம் சொன்னாள், ''எனக்கு உங்களிடம் சொல்ல ஒரே ஒரு பிரச்சனைதான் இருக்கிறது. நீங்கள் எனக்கு உதவ முடியுமா?''

நான் கேட்டேன், ''என்ன பிரச்சனை?''

அவள் சொன்னாள், ''படுக்கையில் கூட அவர் உயர்நீதி மன்ற நீதிபதியாகவே இருக்கிறார். நான் ஒரு காதலனையோ, ஒரு நண்பனையோ, அல்லது ஒரு கணவனையோ அறிய முடிந்ததில்லை. அவர் ஒரு நாளின் இருபத்தி நான்கு மணி நேரமும் உயர்நீதிமன்ற நீதிபதியாகவே இருக்கிறார்.''

சிரமம்தான், உன்னுடைய பீடத்திலிருந்து இறங்கி வருவது சிரமம்தான். அது ஒரு நிலைத்துவிடும், விட முடியாத நடை முறை ஆகிவிடுகிறது. நீ ஒரு வியாபாரியாய் இருந்தால், நீ படுக்கையிலும் கூட ஒரு வியாபாரியாகவே தொடர்ந்து இருப்பாய். இரண்டு நபர்களை உள்ளுக்குள் வைத்துக் கொள்வது கடினமானது. மேலும் உன்னுடைய பழக்கத்தை முற்றிலுமாக, உடனடியாக, நீ விரும்பும் நேரத்தில் மாற்றிக் கொள்வது என்பது சுலபமானது அல்ல. இது சிரமம்தான், ஆனால் நீ அன்பு கொண்டால் நீ தலையிலிருந்து இறங்கி வந்துதான் ஆக வேண்டும்.

எனவே இந்தத் தியானத்திற்கு மேலும் மேலும் அன்போ டிருக்க முயற்சி செய். நான் அதிக அன்போடு இரு என்று சொல்லும் பொழுது, நான் சொல்வதன் அர்த்தம், உனது உறவின் தன்மையை மாற்றிக் கொள் என்பதே : அது அன்பின் அடிப் படையில் இருப்பதாகட்டும். உனது மனைவியிடமோ அல்லது உனது குழந்தையிடமோ அல்லது உனது நண்பனிடமோ மட்டுமல்லாமல், வாழ்வையே அன்பு கொள்பவனாக மாற்று. அன்பின் அடிப்படையில் உனது உறவுகள் எவ்வளவு அதிகம் அமைகின்றனவோ - எல்லாவித உறவுகளும் - அந்த அளவு உனது இதய மையம் அதிகமாகச் செயல்படும். அது வேலை செய்ய ஆரம்பிக்கும்; இந்த உலகத்தை நீ வேறு கண்களின் மூலமாகப் பார்ப்பாய். ஏனெனில் இதயம் அதற்கே சொந்தமான வழியில் இந்த உலகத்தைப் பார்க்கும். மனம் ஒருபோதும் இந்த வழியில் பார்க்க முடியாது - இது மனத்திற்குச் சாத்தியமில்லாதது. மனதால் பார்க்க மட்டுமே முடியும்! இதயம் ஒன்றாக்கும்; மனதால் துண்டு போட, பிரிக்க மட்டுமே முடியும் - அது ஒரு பிரிக்கும் சாதனம். இதயம் மட்டுமே ஒருங்கிணைக்கும்.

நீ இதயத்தின் மூலமாகப் பார்க்க முடியும்போது, இந்த முழு அண்டமும் ஒருங்கிணைந்ததாகவே தெரியும். நீ மனத்தின் மூலமாக அணுகும்போது, முழு உலகமும் தனித்தனி அணுக்க ளாகத் தெரியும். எந்த ஒருங்கிணைப்பும் இருக்காது. வெறும் அணுக்கள், அணுக்கள், அணுக்கள். இதயம் அனைத்தும் ஒருங் கிணைந்திருக்கும் அனுபவத்தைக் கொடுக்கிறது, அது ஒன்று சேர்க்கிறது, அதோடு முடிவான ஒருங்கிணைப்பே கடவுள் எனப் படுவது. நீ இதயத்தின் மூலமாகப் பார்க்க முடிந்தால், இந்த முழு அண்டமும் ஒன்றாகவே தெரியும். அந்த ஒருமைத் தன்மைதான் கடவுள்.

இதனால் தான் விஞ்ஞானம் கடவுளை ஒருபோதும் கண்டு பிடிக்க முடியவில்லை. அது சாத்தியமற்றது. ஏனெனில் பயன் படுத்தும் முறை ஒருபோதும் முடிவான ஒருங்கிணைப்பை

அடையக் கூடியதல்ல. விஞ்ஞானத்தின் முறையே காரணகாரியம் காண்பது, பகுத்தறிவது, பிரித்துப் பார்ப்பது தான். எனவே விஞ்ஞானம் அடிப்படைக் கூறு, அணுக்கள், எலக்ட்ரான்கள் .... என்று கண்டுபிடித்துக் கொண்டே வருகிறது. அவர்கள் பிரித்துக் கொண்டே போவார்கள். ஆனால் அவர்களால் முழுமையின் உயிரியக்கமுள்ள ஒருங்கிணைப்பை ஒருபோதும் கண்டடைய முடியாது. முழுமையைத் தலையின் மூலமாகப் பார்க்கும் சாத்தியமே இல்லை.

எனவே அதிக அன்போடிரு. நினைவில் கொள், நீ செய்வது எதுவாக இருந்தாலும், அன்பின் தன்மை அங்கு இருக்க வேண்டும். இது ஒரு இடைவிடாத நினைவாக இருக்க வேண்டும். நீ புல்லின் மீது நடந்து கொண்டிருக்கிறாய் – புல் உயிர்த்துடிப்போடு இருப்பதாக உணரு. ஒவ்வொரு புல்லின் இற்றும், நீ எந்த அளவு உயிர்த்துடிப்போடு இருக்கிறாயோ அந்த அளவு உயிர்த்துடிப்புள்ளது.

மகாத்மா காந்தி, ரவீந்தரநாத் தாகூருடன் அவருடைய சாந்தி நிகேதனில் தங்கியிருந்தார். அவர்களுடைய மாறுபட்ட அணுகுமுறைகளைப் பார்! காந்தியின் அஹிம்சை என்பது ஒரு மனதின் விஷயம். அவர் அதைக் குறித்து எப்போதும் விளக்கிக் கொண்டிருப்பார், அதைப் பற்றி அறிவுபூர்வமாக இருப்பார். அவர் அதைப் பற்றி யோசித்தார், அவை குறித்துப் போராடினார், அவர் எண்ணிப் பார்த்தார், சிந்தித்தார், அதன்பின் அவர் முடிவுக்கு வந்தார்; அவர் பரிசோதனைகள் செய்தார், அதன் பின் முடிவு செய்தார். நீ அவரது சுயசரிதத்தைப் படித்திருந்தால், நீ அந்தப் புத்தகத்திற்கு அவர் வைத்த பெயரான, ''சத்தியத்துடனான சோதனைகள்'' என்பதை நினைவு கூறலாம். 'சோதனைகள் என்ற சொல்லே விஞ்ஞானத்தைச் சேர்ந்தது, அறிவுபூர்வமானது – ஒரு பரிசோதனைக் கூடத்தின் வார்த்தை.

அவர் ரவீந்தரநாத் தாகூருடன் தங்கியிருந்தார். அவர்கள் இருவரும் தோட்டத்தில் நடந்து கொண்டிருந்தனர். நிலம்

பசுமையாக, உயிரோட்டத்துடன் இருந்தது, எனவே காந்தி ரவீந்தரநாத்திடம், ''புல்வெளிக்கு வாருங்கள்'' என்றார்.

ரவீந்தரநாத் சொன்னார், ''அது எனக்குச் சாத்தியமில்லை. என்னால் புல்வெளியின் மீது நடக்க முடியாது. அதன் ஒவ்வொரு கீற்றும் என்னைப் போலவே உயிர்த்துடிப்போடு இருக்கிறது. என்னால் அவ்வளவு உயிர்த்துடிப்புள்ள ஒன்றின் மீது கால் வைக்க முடியாது.''

ரவீந்தரநாத் அஹிம்சையைப் போதிப்பவர் அல்ல – சிறிது கூட அல்ல. அவர் ஒருபோதும் அஹிம்சையைப் பற்றிப் பேசிய தில்லை, ஆனால் அவரது அணுகுமுறை இதயத்தின் மூலமானது. அவர் புல்லை உணர்கிறார்.

காந்தி அவர் சொன்னதைக் குறித்து யோசித்துப் பார்த்து விட்டு, பிறகு சொன்னார், ''நீங்கள் சொல்வது சரிதான்.'' இதுதான் மனதின் அணுகுமுறை.

அன்போடிரு. பொருள்களிடமும் கூட அன்போடிரு. நீ ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தால், அன்போடிரு. நாற்காலியை உணரு; ஒரு நன்றியுணர்வு கொள். அந்த நாற்காலி உனக்கு ஒரு வசதியைத் தருகிறது. தொடுவதை உணரு, அதை நேசி, ஒரு அன்பான உணர்வு கொள். நாற்காலி முக்கியமல்ல, நீ அன்பா யிருப்பதே முக்கியம். நீ உணவு அருந்தும் பொழுது, அன்போடு உணவு உட்கொள்.

இந்தியர்கள் சொல்வார்கள், உணவு தெய்விகம் என்று. இதன் அர்த்தம் என்னவென்றால், நீ சாப்பிடும் பொழுது, உணவு உனக்கு வாழ்வை, சக்தியை, வலிவைக் கொடுக்கிறது. எனவே நன்றியோடிரு, அதனிடம் அன்போடிரு.

சாதாரணமாக நாம் உணவை மிகவும் வன்முறையோடு தான் சாப்பிடுகிறோம். ஏதோ நாம் எதையோ கொல்லுவது போல, நாம் எதையோ உள்வாங்கிக் கொள்வது போல அல்ல, மாறாக நாம் கொல்வது போல. அல்லது கொஞ்சமும் சம்பந்த

மில்லாமல் நீ உன்னுடைய வயிற்றுக்குள் எதையோ வீசிக் கொண்டிருக்கிறாய், எந்தவித உணர்வும் இல்லாமல். உனது உணவை அன்போடு தொடு, நன்றியோடு தொடு; அது உன் வாழ்வு. உள்ளே அருந்து, அதைச் சுவை, அதை அனுபவி. சம்பந்தமில்லாமல் இருக்காதே, வன்முறையோடும் இருக்காதே.

நமது பற்கள் மிகவும் வன்முறை கொண்டது. ஏனெனில் நாம் மிருகங்களின்வழி வந்தவர்கள். மிருகங்களுக்கு வேறு எந்த ஆயுதங்களும் கிடையாது; நகங்களும் பற்களும் தான் அவற்றின் வன்முறைக்கான ஒரே ஆயுதங்கள். உன்னுடைய பற்கள் அடிப் படையில் ஒரு ஆயுதம். எனவே மக்கள் அவர்களுடைய பற்கள் மூலமாகக் கொலை செய்து கொண்டே இருக்கிறார்கள் – அவர்கள் தங்கள் உணவைக் கொலை செய்கிறார்கள். அதனால் தான், நீ எந்த அளவு அதிகமான வன்முறையோடிருக்கிறாயோ அந்த அளவு அதிக உணவு உனக்குத் தேவைப்படுகிறது.

ஆனால் சாப்பிடுவதற்கு ஒரு எல்லை இருக்கிறது. எனவே ஒருவன் புகைபிடித்துக் கொண்டே இருக்கிறான் அல்லது ஒருவன் சூயிங்கம் மென்றுகொண்டே இருக்கிறான். இது வன்முறை. நீ இதை அனுபவிக்கிறாய். ஏனெனில் நீ உனது பற்களினால் ஏதோவொன்றைக் கொல்கிறாய், உனது பற்களி னால் ஏதோவொன்றை அரைக்கிறாய். எனவே தான் ஒருவன் சூயிங்கம் அல்லது பாக்கு என்று ஏதோவொன்றை மென்று கொண்டே இருக்கிறான். இது வன்முறையின் ஒரு பகுதி. நீ எதைச் செய்வதானாலும் அதை அன்போடு செய். சம்பந்த மில்லாமல் இருக்காதே. அன்போடு செய்யும்போது உனது இதய மையம் இயங்க ஆரம்பிக்கும். மேலும் நீ இதயத்தின் ஆழத்திற்கு வந்து விடுவாய்.

முதலில் தலையில்லாமல் இருப்பதை முயற்சி செய். இரண்டாவதாக அன்பை முயற்சி செய். மூன்றாவதாக மேலும் மேலும் அதிக நுட்ப உணர்வுள்ளவனாக இரு – அழகைக் குறித்தும், இசையைக் குறித்தும், இதயத்தைத் தொடும் மற்ற எல்லாவற்றைக் குறித்தும் நுட்ப உணர்வு கொள். இந்த

உலகத்தை அதிகமாக இசைக்கும் குறைவாகக் கணக்கிற்கும் பயிற்றுவிக்க முடிந்தால், நமக்கு மேலும் சிறந்த மனிதகுலம் கிடைக்கும்; நம்மால் மனத்தை அதிகமாகக் கவிதைக்கும் குறைவாகத் தத்துவத்திற்கும் பயிற்றுவிக்க முடிந்தால், நமக்கு மேலும் சிறந்த ஒரு மனிதகுலம் கிடைக்கும். ஏனெனில் நீ இசையைக் கேட்கும்பொழுதோ அல்லது வாசிக்கும்பொழுதோ மனம் தேவைப்படுவதில்லை, நீ மனத்திலிருந்து விடுபட்டு விடுகிறாய்.

மேலும் அதிக அழகுணர்ச்சியுள்ளவனாக, அதிக கவித்துவ முள்ளவனாக, அதிக நுண்ணுணர்வு உடையவனாக இரு. நீ ஒரு மாபெரும் இசைக் கலைஞனாக அல்லது மாபெரும் கவிஞனாக அல்லது மாபெரும் ஓவியனாக இல்லாமல் போகலாம். ஆனாலும் நீ சந்தோஷமாக அனுபவிக்க முடியும். மேலும் உன்னுடைய அளவில் சொந்தமான ஒன்றை நீ படைக்க முடியும். 'பிக்காஸோ'வாக இருக்க வேண்டியதில்லை. உன்னுடைய வீட்டை நீயே வர்ணம் பூசலாம், நீ சில படங்களை வரையலாம்.

ஒரு மேதையாக வேண்டிய, ஒரு 'அலாவுதீன் கான்' ஆக வேண்டிய அவசியமில்லை. நீ உனது வீட்டில் ஏதாவது வாசிக்க லாம், நீ ஒரு புல்லாங்குழலை ஊதலாம், எவ்வளவு சரி யில்லாமல் இருந்தாலும்தான் என்ன? ஆனால் இதயத்திற்குத் தொடர்புடைய ஏதோவொன்றைச் செய். பாடு, ஆடு, இதயத்தின் சம்பந்தப்பட்ட ஏதோவொன்றைச் செய். இதயத்தின் உலகத்தைப் பற்றி அதிக உணர்வோடிரு – நுட்பமான உணர்வோடிருப்ப தற்குப் பெரிதாக எதுவும் தேவையில்லை.

ஒரு ஏழை மனிதனும் கூட நுட்ப உணர்வோடிருக்க முடியும்; செல்வங்கள் தேவையில்லை. நீ நுட்பமான உணர் வோடு இருக்க முடியக் கூடிய ஒரு அரண்மனை உனக்கு இல்லாமலிருக்கலாம். ஆனால் கடற்கரையில் நீ படுத்துக் கிடந்தால், நுட்ப உணர்வோடிருக்க அதுவே போதும். நீ மணலைக் குறித்து நுண்ணுணர்வோடிருக்கலாம், சூரியனைக் குறித்து நுண்ணுணர்வோடிருக்கலாம், அலைகளைக் குறித்து

நுண்ணுணர்வோடிருக்கலாம், காற்றைக் குறித்து, மரங்களைக் குறித்து, வானத்தைக் குறித்து நுண்ணுணர்வோடிருக்கலாம். முழு உலகமும், நீ அதைக் குறித்து நுண்ணுணர்வு கொள்ள, உனக்காக இங்கே இருக்கிறது. அதிக நுண்ணுணர்வோடு, உயிர்த் துடிப்போடு இருக்க முயற்சி செய் – மேலும் செயல்பாட்டோடு கூடிய நுண்ணுணர்வு கொள். ஏனெனில் முழு உலகமும் செயலற்றதாக மாறிவிட்டது.

நீ ஒரு சினிமா தியேட்டருக்குச் செல்கிறாய்; யாரோ ஒருவர் ஏதோவொன்றைச் செய்து கொண்டிருக்கிறார், நீ உட்கார்ந்து பார்த்துக் கொண்டு மட்டும் இருக்கிறாய். யாரோ ஒருவர் திரையில் காதலிக்கிறார், நீ அதைப் பார்த்துக் கொண் டிருக்கிறாய். நீ ஒரு வெறும் அடுத்து நடப்பதை வேடிக்கை பார்ப்பவன் – கையாலாகாதவன், பிணம், எதுவும் செய்யாதவன். நீ ஒரு பங்கேற்பவன் அல்ல. நீ பங்கேற்காத வரையில், உன்னுடைய இதய மையம் செயல்படாது. எனவே சில நேரங்களிலாவது ஆடுவது நல்லது.

நீ ஒரு மாபெரும் நடனக் கலைஞன் ஆகப்போவதில்லை – அதற்குத் தேவையுமில்லை. எவ்வளவு அசிங்கமாயிருந்தாலும், ஆடு. அது இதயத்தின் உணர்வை உனக்குக் கொடுக்கும். நீ நடனமாடிக் கொண்டிருக்கும் பொழுது உன்னுடைய மையம் இதயமாகவே இருக்கும். அது ஒருபோதும் மனமாக இருக்க முடியாது. குதி, குழந்தைகளுடன் விளையாடு. சில சமயங்களில் உனது பெயர், உனது கௌரவம், உனது பட்டப்படிப்பு எல்லா வற்றையும் முழுமையாக மற. அவற்றை முழுதாக மறந்துவிடு, குழந்தையைப் போல இரு. இறுகி இருக்காதே. சில நேரங்களில் வாழ்வை வேடிக்கையாக எடுத்துக் கொள், அப்போது இதயம் வளரும். இதயம் சக்தி பெறும்.

மேலும் உயிர்த் துடிப்புள்ள இதயத்தோடு நீ இருக்கும் பொழுது, உன்னுடைய மனத்தின் தன்மையும் மாறும். அதன் பின் நீ மனத்திற்குப் போகலாம், நீ மனத்தின் மூலமாகச் செயல்படலாம். ஆனால் மனம் வெறும் ஒரு கருவியாகிவிடும் – நீ அதைப் பயன்படுத்தலாம். அப்போது நீ அதிலேயே மூழ்கிக்

கிடப்பதில்லை. மேலும் நீ விரும்பும் எந்தக் கணத்திலும் உன்னால் அதை விட்டு விலகி வந்துவிட முடியும். அப்போது நீ ஒரு எஜமானன். இதயம் உனக்கு நீ ஒரு எஜமானன் என்ற உணர்வைக் கொடுக்கும்.

மற்றொரு விஷயம் : நீ இதயமுமல்ல, தலையுமல்ல என்பதை நீ அறிந்து கொள்வாய். ஏனெனில் நீ இதயத்திலிருந்து தலைக்கும், தலையிலிருந்து இதயத்துக்கும் நகர முடியும். அப்போது நீ ஏதோ வேறொன்று என்பதை நீ அறிவாய். நீ தலையிலேயே தொடர்ந்து இருப்பவனாய், ஒருபோதும் வேறு எங்கும் நகராதவனாய் இருந்தால் நீ தலையோடு அடையாளம் கண்டவனாக மாறிவிடுவாய். நீ மாறுபட்டவன் என்பது உனக்குத் தெரியாது. இதயத்திலிருந்து தலைக்கு, மற்றும் தலையிலிருந்து இதயத்திற்குப் போய் வருவது உனக்கு நீ முற்றிலும் வேறுபட்ட ஒருவன் என்ற உணர்வைக் கொடுக்கும். சில நேரங்களில் நீ இதயத்தில் இருக்கிறாய் மற்றும் சில நேரங்களில் நீ தலையில் இருக்கிறாய். ஆனால் நீ இதயமுமல்ல, தலையுமல்ல.

இந்த மூன்றாவது விஷயத்தை அறிந்து கொள்வது, விழிப்புணர்வு பெறுவது உன்னை மூன்றாவது மையத்திற்கு, நாபி மையத்திற்குக் கொண்டு செல்லும். மேலும் நாபி உண்மையில் ஒரு மையமல்ல, அது நீதான்! அதனால்தான் அதை வளர்த்த முடியாது, அதைக் கண்டு கொள்ள மட்டுமே முடியும்.

நான்காவது கேள்வி :

---

❖ **மேற்கத்திய உளவியலாளர்கள் அன்பான உறவில் சண்டையைத் தவிர்க்காமல் இருப்பதே நல்லதென்றும் மேலும் அது வரும் பொழுது அதைச் சந்திப்பது அன்பை மேலும் ஆழமாக்கும் என்றும் கூறுவதாக நீங்கள் சொன்னீர்கள். பிறகு நீங்கள் இரண்டு அதீத நிலைகளையும் விட்டுவிடும் புத்தரின் நடுவழி பற்றிப் பேசினீர்கள். இரண்டு துருவங்களையும் கடந்த அன்பு நிலையை இன்னும் அடையாதவர்களுக்கு எந்த வழி சிறந்தது என்ற உங்கள் கருத்தைச் சொல்லுங்கள்."**

---

சில அடிப்படைக் குறிப்புகள். முதலாவதாக மனதின் மூலமான அன்பு, அன்பு வெறுப்பு என்ற இரு துருவங்களுக்கு இடையேயும் நகர்ந்து கொண்டுதான் இருக்கும். மனத்துடன் இரட்டைத் தன்மை கண்டிப்பாக இருக்கவே செய்யும். எனவே நீ யாரோ ஒருவரை மனதின் மூலமாக நேசித்தால், நீ மற்றொரு துருவத்திலிருந்து தப்ப முடியாது. நீ அதை மறைக்கலாம், நீ அதை அமுக்கலாம், நீ அதைப் பற்றி மறந்து விடலாம் – நாகரிகமடைவதாக அழைத்துக் கொள்வதெல்லாம் எப்பொழு தும் இதையே செய்கின்றன. ஆனால் அப்போது அவர்கள் மரத்துப் போனவர்களாக, இறந்தவர்களாக ஆகிவிடுகின்றனர்.

உன்னால் நீ நேசிப்பவரிடம் சண்டை போட முடியா விட்டால், உன்னால் கோபப்பட முடியாவிட்டால், அப்போது அந்த அன்பு தனது வலுவை இழந்து விடுகிறது. நீ உனது கோபத்தை அடக்கி வைத்தால் அந்த அடக்கி வைக்கப்பட்டுள்ள கோபம் உன்னுடைய ஒரு பாகமாகி விடும். மேலும் அந்த அமுக்கி வைக்கப்பட்டுள்ள கோபம் நீ அன்பில் இருக்கும் பொழுதும் உன்னை முழுதாக இருக்க அனுமதிக்காது. அது எப்போதும் அங்கிருக்கும். நீ அதைப் பிடித்து வைத்துக் கொண் டுள்ளாய்; நீ அதை அடக்கி வைத்துள்ளாய்.

நான் கோபம் கொண்டு, ஆனால் நான் அதை அடக்கி வைத்துக் கொள்ளும் பொழுதும், நான் அன்பு கொள்ளும் போதும் அந்த அடக்கி வைத்துள்ள கோபம் அங்கே இருக்கும். மேலும் அது எனது அன்பை உயிரற்றதாகச் செய்யும். நான் எனது கோபத்தில் ஆணித்தரமாக இல்லாவிட்டால் நான் எனது அன்பில் வலுவிழந்தே இருக்க முடியும். நீ உறுதியோடும் உண்மை யோடும் இருந்தால், அப்போது நீ இரண்டிலும் அப்படி இருப்பாய். நீ ஒன்றில் உறுதியும் உண்மையும் இல்லாம விருந்தால், நீ மற்றொன்றில் உறுதியோடும் உண்மையோடும் இருக்க முடியாது.

உலகம் முழுவதுமுள்ள போதனைகள், நாகரிகங்கள், பண்பாடுகள் என்று அழைக்கப்படுபவை எல்லாம் அன்பை

முற்றிலுமாக சாகடித்து விட்டன. அன்பின் பெயரால் இதுதான் நடந்துள்ளது. அவை சொல்கின்றன, ''நீ யாரையாவது நேசித்தால், அவர்களிடம் கோபம் கொள்ளாதே; நீ கோபம் கொண்டால் உனது அன்பு பொய். மேலும் சண்டை போடாதே, வெறுப்புக் கொள்ளாதே.''

பார்ப்பதற்கு இது தர்க்க ரீதியாகச் சரியாகத் தெரிகிறது. நீ அன்பு கொண்டிருந்தால், நீ எப்படி வெறுக்க முடியும்? எனவே நாம் வெறுப்புப் பகுதியை வெட்டி விட்டோம். ஆனால் வெறுப்பைத் துண்டாக்கிய பின், அன்பு வீரியமற்றதாகி விட்டது. இது ஒரு மனிதனின் ஒரு காலை வெட்டிவிட்டு அவனிடம், ''இப்போது நீ போ! இப்போது நீ ஓடு, இப்போது நீ ஓடத் தடையேதுமில்லை'' என்று சொல்வது போன்றது. ஆனால் நீ ஒரு காலை வெட்டி விட்டாய், எனவே அவன் நகர முடியாது.

வெறுப்பும் அன்பும் ஒரே விஷயத்தின் இரண்டு துருவங்கள். நீ வெறுப்பை வெட்டினால், அன்பும் இறந்துவிடும், ஆற்றலில்லாததாகி விடும். இதனால் தான் எல்லாக் குடும்பங் களும் ஆற்றல் இல்லாதவையாகி விட்டன. அதன்பின் நீ தங்கு தடையற்று அனுமதிக்கப் பயப்படுகிறாய். நீ அன்பில் இருக்கும் பொழுது உன்னால் தங்குதடையற்று வருவதை முழுதாக அனுமதிக்க முடிவதில்லை. ஏனெனில் நீ பயப்படுகிறாய். நீ தங்கு தடையற்று வருவதை அனுமதித்தால், மறைத்து வைக்கப் பட்டுள்ள, அமுக்கி வைக்கப்பட்டுள்ள கோபம், வன்முறை, வெறுப்பு வெளியே வரலாம். எனவே நீ அவைகளைத் தொடர்ந்து கீழே அமுக்கிக் கொண்டே இருக்க வேண்டும். அடி ஆழத்தில் நீ தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டே இருக்க வேண்டும். மேலும் அதோடு சண்டையிட்டுக் கொண்டே நீ இயற்கையாக, தங்குதடையற்ற இயல்போடு இருக்க முடியாது. அப்போது நீ அன்பு கொள்வதைப் போலக் காட்டிக் கொள் கிறாய். நீ நடிக்கிறாய், அது எல்லோருக்கும் தெரியும் : நீ நடித்துக் கொண்டிருக்கிறாய் என்று உன் மனைவிக்குத் தெரியும், உன் மனைவி நடித்துக் கொண்டிருக்கிறாள் என்று உனக்குத் தெரியும்.

எல்லோரும் நடித்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால் இந்த முழு வாழ்க்கையும் பொய்யாகப் போகிறது.

மனதைக் கடந்து செல்வதற்கு இரண்டு விஷயங்களைச் செய்ய வேண்டும். முதலாவது, தியானத்தினுள் செல், அதனால் உன்னுள் இருக்கும் மனமற்ற நிலையைத் தொடு. அதன்பின் எந்த எதிர்த் துருவமும் இல்லாத அன்பை நீ அடைவாய். ஆனால் அந்த அன்பில் எந்தக் கிளர்ச்சியும், உணர்ச்சி வசப்படுதலும் இருக்காது. அந்த அன்பு மவுனமானது – ஒரு குமிழி கூட இல்லாத ஆழமான அமைதி அது.

ஒரு புத்தர், ஒரு ஜீஸஸ், இவர்களும் அன்பாயிருந்தார்கள். ஆனால் அந்த அன்பில் எந்தக் கிளர்ச்சியும், எந்த ஜுரமும் இல்லை. ஜுரம் எதிர்த் துருவத்திலிருந்துதான் வருகிறது, கிளர்ச்சி எதிர்த் துருவத்திலிருந்தே வருகிறது. இரண்டு எதிரெதிர்த் துருவங்கள் இறுக்கத்தை உண்டாக்குகின்றன. ஆனால் புத்தரின் அன்பு, ஜீஸஸின் அன்பு ஒரு மவுனமான விஷயம். எனவே மனமற்ற நிலையை அடைந்தவர்களால் மட்டுமே அவர்களின் அன்பைப் புரிந்து கொள்ள முடியும்.

ஜீஸஸ், ஒருநாள் மதியம், வெயில் நேரத்தில், நடந்து சென்றார். அவர் சோர்ந்து போயிருந்தார். எனவே அவர் ஒரு மரத்தின் அடியில் ஓய்வெடுத்தார். அந்த மரம் யாருக்குச் சொந்தமானது என்று அவருக்குத் தெரியாது. அது 'மேரி மேக்டலினுக்குச்' சொந்தமானது. அவள் ஒரு விபச்சாரி.

மேரி மேக்டலின் தனது வீட்டு ஜன்னலிலிருந்து இந்த மிக அழகான மனிதனை – இதுவரை தோன்றியவர்களிலேயே அதிக அழகுள்ளவர்களில் ஒருவர் – பார்த்தாள். அவள் வசிகரிக்கப் பட்டாள். வெறும் வசிகரிக்கப்பட்டதோடு மட்டுமல்ல, அவர் உணர்ச்சி வசப்படவும் செய்தாள். எனவே அவள் வெளியே வந்து ஜீஸஸிடம் சொன்னாள், ''எனது வீட்டிற்குள் வாருங்கள். ஏன் இங்கு ஓய்வெடுக்கிறீர்கள்? உங்களை நான் வரவேற்கிறேன்.''

ஜீஸஸ் அவள் உணர்ச்சி வசப்பட்டிருப்பதை, அவளின் அன்பை – அன்பு என்று அழைக்கப்படுவதை அவளுடைய கண்களில் கண்டார். ஜீஸஸ் சொன்னார், ''அடுத்த முறை இங்குக் கடந்து செல்லுகையில், நான் மறுபடியும் சோர்ந்து போகும் போது, நான் உன்னுடைய வீட்டிற்கு வருகிறேன். இப்போது எனது தேவை பூர்த்தியாகி விட்டது. நான் மறுபடியும் நடக்கத் தயாராகிவிட்டேன், எனவே உனக்கு நன்றி.''

மேரி அவமானமாக உணர்ந்தாள். இது மிகவும் அரிது...., அவள் இதற்குமுன் யாரையும் ஒருபோதும் வரவேற்றதில்லை. அவளை ஒருமுறை பார்ப்பதற்காகவே நீண்ட தூரங்களிலிருந்து மக்கள் வருவார்கள். அரசர்கள் கூட அவளிடம் வருவதுண்டு, அப்படியிருக்க இந்தப் பிச்சைக்காரன் இவளை மறுத்துவிட்டான். ஜீஸஸ் ஒரு வெறும் பிச்சைக்காரன், ஒரு நாடோடி – வெறும் ஒரு ஹிப்பி, இப்படிப்பட்டவன் அவளை மறுத்துவிட்டான். மேரி ஜீஸஸிடம் கேட்டாள், ''எனது அன்பை உன்னால் உணர முடியவில்லையா? இது அன்பின் அழைப்பு. எனவே வா! என்னை உதாசீனப்படுத்தாதே. உனது இதயத்தில் அன்பு சிறிது கூட இல்லையா?''

ஜீஸஸ் அதற்கு அவளிடம் பதிலளித்தார், ''நானும் உன்னை நேசிக்கிறேன் – மேலும் உண்மையிலேயே, உன்னிடம் வருபவர்கள் எல்லாம் உன்னை நேசிப்பதாக நடிப்பவர்கள், அவர்கள் உன்னை நேசிக்கவில்லை.'' அவர் சொன்னார், ''நான் மட்டுமே உன்னை நேசிக்க முடியும்.''

அவர் கூறியது சரிதான். ஆனால் அந்த அன்பின் தன்மை வேறாக இருக்கும். அந்த அன்பிற்கு எதிர் துருவம், மாறுபட்டது இருக்காது. எனவே இறுக்கம் இருக்காது, கிளர்ச்சி இருக்காது. அவர் அன்பைக் குறித்துக் கிளர்ச்சி அடையவில்லை, ஜுரம் கொள்ளவில்லை. மேலும் அவருக்கு அன்பு ஒரு உறவல்ல, அது ஒரு இருப்பு நிலை.

மனதைத் தாண்டிச் செல்; மனமற்ற நிலையை அடைக. அப்போது அன்பு மலரும், ஆனால் அந்த அன்பிற்கு எதிரானது

எதுவும் இருக்காது. மனம் கடந்த நிலையில் எதற்கும் எதிரானது இருக்காது. மனத்தைக் கடந்துவிட்டால் எல்லாம் ஒன்றுதான். மனதின் உள்ளே, எல்லாம் இரண்டாகப் பிரிந்திருக்கிறது. ஆனால் நீ மனதின் உள் இருந்தால், அப்போது பொய்யாய் இருப்பதை விடவும் உண்மையோடும் உறுதியோடும் இருப்பது சிறந்தது.

எனவே உனது அன்பிற்குரியவரிடம் நீ கோபம் கொள்ளும் பொழுது, அதில் உண்மையோடும் உறுதியோடும் இரு. நீ கோபத்தில் உண்மையோடும் உறுதியோடும் இரு, அதன் பிறகு எந்த அடக்கி வைக்கப்பட்டதும் இல்லாமல் அன்பு கொள்ளும் கணம் வரும் பொழுது, மனம் அடுத்த அதீத நிலையான அன்பிற்கு நகரும் பொழுது நீ தங்கு தடையற்றுப் பொங்கிப் பெருகுவாய். எனவே மனத்தோடு இருக்கும் பொழுது, சண்டையை அன்பின் ஒரு பாகமாக எடுத்துக் கொள். எதிரெதிர் துருவங்களில் பேராற்றலோடு வேலை செய்யக் கூடியது மனம். எனவே உனது கோபத்தில் ஆணித்தரமாக இரு, உனது சண்டையில் ஆணித்தரமாக இரு; அப்போது உனது அன்பிலும் நீ ஆணித்தரமாக, அதாவது உண்மையோடும் உறுதியோடும் இருக்க முடியும்.

எனவே காதலர்களுக்கு நான் சொல்ல விரும்புவது : ஆணித்தரமாக இருங்கள். அப்படி நீங்கள் உண்மையிலேயே இருந்தால் ஒரு புதுமை நிகழும். நீங்கள் எதிரெதிர்த் துருவங் களுக்கு நகர்ந்து கொண்டேயிருக்கும் மடத்தனத்தால் சலிப்பும் சோர்வும் அடைவீர்கள். ஆனால் ஆணித்தரமாக இருங்கள்; இல்லாவிட்டால் நீங்கள் ஒருபோதும் சலிப்படைந்தவர்கள் ஆகமாட்டீர்கள். ஒரு அடக்கி வைக்கப்பட்ட மனத்தால் ஒருபோதும் அது எதிரெதிர் துருவங்களால் பீடிக்கப்பட் டிருப்பதைப் பற்றிய உண்மையான விழிப்புணர்வை அடைய முடியாது. அவன் ஒருபோதும் உண்மையாகக் கோபப்பட வில்லை, அவன் ஒருபோதும் உண்மையாக அன்பு கொள்ள வில்லை. எனவே அவனுக்கு மனதைப் பற்றிய உண்மையான அனுபவம் ஏதுமில்லை. அதனால்தான் நான் ஆணித்தரமாக

இருக்க வற்புறுத்துகிறேன். பொய்யாக இருக்காதே. உண்மை யாகவே இரு! மேலும் உண்மையாகவும், உறுதியோடும் இருப்பதில் அதற்கென்று ஒரு அழகு இருக்கிறது. நீ உண்மையாக – ஆணித்தரமாக – கோபப்படும் பொழுது, அதை உன்னிடம் அன்பு கொண்டவர் புரிந்து கொள்வார். பொய்யான கோபம் அல்லது பொய்யான அன்பை மட்டுமே மன்னிக்க முடியாது. பொய் முகத்தை மட்டுமே மன்னிக்க முடியாது. ஆணித்தரமாக இரு, அப்போது அன்பிலும் நீ ஆணித்தரமாக இருப்பாய். அந்த ஆணித்தரமான அன்பு, ஆணித்தரமான கோபத்தை சரி செய்து விடும். மேலும் இந்த ஆணித்தரமான வாழ்வின் மூலம் நீ சலிப்படைந்து விடுவாய். நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய் என்று நீயே ஆச்சரியமடைவாய் – நீ ஏன் பெண்டுலம் போல ஒரு துருவத்திலிருந்து மற்றொன்றிற்கு ஆடிக் கொண்டிருக்கிறாய். நீ சலித்துப் போவாய், அதன் பிறகு மட்டுமே நீ துருவங்களைக் கடந்தும் மனதைக் கடந்தும் செல்ல முடிவு செய்வாய்.

ஒரு உண்மையும் உறுதியும் கொண்ட ஆணாக இரு. அல்லது உண்மையும் உறுதியும் கொண்ட ஒரு பெண்ணாக இரு. எந்தப் பொய்யானதையும் அனுமதிக்காதே, நடிக்காதே. உண்மை யாய் இரு, இருக்கும் துன்பத்தை அனுபவி. துன்பப்படுதல் நல்லதுதான். துன்பப்படுதல் உண்மையில் ஒரு பயிற்சி, ஒரு ஒழுங்கு நடவடிக்கை. எனவே துன்புறு! கோபத்தில் துன்புறு, அன்பில் துன்புறு, வெறுப்பில் துன்புறு. ஒன்றை மட்டும் நினைவில் கொள் : ஒருபோதும் பொய்யாக இருக்காதே. நீ அன்பாக உணரவில்லையென்றால், அப்போது நீ அன்பாக உணரவில்லை என்று சொல்லிவிடு. நடிக்காதே; நீ அன்போடு இருப்பதாகக் காட்டிக் கொள்ள முயற்சிக்காதே, நீ கோபமாக இருந்தால் அப்போது நான் கோபமாக இருக்கிறேன் என்று சொல், மேலும் கோபமாய் இரு.

மிகுந்த துன்பம் அங்கிருக்கும், ஆனாலும் துன்புறு. அந்தத் துன்பத்தின் மூலமாக ஒரு புதிய உணர்வுநிலை பிறக்கும். அன்பு மற்றும் வெறுப்பு என்பதன் முழு மடத்தனத்தைப் பற்றிய விழிப்

புணர்வை நீ அடைவாய். நீ ஒருவரை வெறுக்கிறாய், அதோடு அந்த ஒருவரையே நேசிக்கிறாய், மேலும் நீ ஒரு வட்டத்திலேயே சுற்றி வந்து கொண்டிருக்கிறாய். அந்த வட்டம் தெள்ளத் தெளிவாக உனக்குத் தெரிந்துவிடும், அப்படி அது தெள்ளத் தெளிவாகத் தெரிவது துன்புறுவதன் மூலமாக மட்டுமே நடக்கும்.

துன்பத்திலிருந்து தப்பிக்காதே. உனக்கு உண்மையான துன்பம் தேவை. அது தீயைப் போன்றது; அது உன்னை எரித்து விடும். பொய்யானவை எல்லாம் அதில் எரிந்துவிடும், உண்மை யானவை எல்லாம் அங்கிருக்கும். இதைத்தான் 'இருப்பதை மட்டும் ஏற்றுக் கொள்பவர்கள்' ஆணித்தரமானது என்று அழைக் கிறார்கள். ஆணித்தரமாக இரு. அதன் பிறகு நீ இனிமேலும் மனத்துடன் இருக்க முடியாது. உண்மையில்லாமல் இரு, நீ பிறவி பிறவியாக மனத்துடனேயே இருப்பாய்.

நீ இரட்டைத் தன்மையில் சலிப்படைவாய். ஆனால் ஒருவன் நடித்துக் கொண்டும் இரட்டைத் தன்மையில் உண்மையாக இல்லாமலும் இருந்தால் எப்படி அவன் இரட்டைத் தன்மையால் சலிப்படைய முடியும்? நீ சலிப்படை யும் பொழுது அன்பு என்று அழைத்துக் கொள்ளப் படுகின்ற மனத்தினுடைய அன்பு ஒரு நோய் என்பதை அறிந்து கொள்வாய்.

ஒரு காதலனால் தூங்க முடியாததை நீ ஆழ்ந்து கவனித் திருக்கிறாயா? அவன் சகஜமாக இல்லை – அவன் ஜுரத்தில் இருக்கிறான். நீ அவனைப் பரிசோதித்தால், அவன் பல நோய் களின் அறிகுறிகளைக் காட்டுவான். இந்த அன்பு, அப்படி அழைத்துக் கொள்ளப்படுகின்ற மனம் மற்றும் உடம்பின் அன்பு, உண்மையிலேயே ஒரு நோய்தான். ஆனால் இதனால் ஒருவன் தொடர்ந்து ஆட்கொள்ளப்படுகிறான் – இதன் செயல்பாடே இங்கு ஆக்ரமிப்புதான். இது இல்லாவிட்டால் நீ செய்வதற்கு எதுவும் இல்லாதது போல உணர்வாய், நீ இந்த உலகத்தில் எதுவும் செய்யாமலிருப்பது போல உணர்வாய். உனது முழு வாழ்க்கையும் வெறுமையாகக் காட்சியளிக்கும்.

மனம் அதுவே ஒரு நோய். எனவே மனத்தைச் சேர்ந்தது எதுவாக இருந்தாலும் அதுவும் நோயாகவே இருக்கும். மனத்தை தாண்டினால் மட்டுமே நீ இரட்டை தன்மையாகப் பிரிக்கப்படாத பொழுது மட்டுமே நீ ஒன்றாக இருக்கும் இடத்திலேயே ஒரு மாறுபட்ட அன்பு மலரும். ஜீஸஸ் இதை அன்பு என்றழைக்கிறார். இதையே புத்தர் கருணை என்றழைக்கிறார். இது ஒரு வித்தியாசத்தை ஏற்படுத்துவதற்காக மட்டுமே. நீ இதை எப்படி அழைக்கிறாய் என்பதால் எந்த வித்தியாசமும் ஏற்படாது.

அதற்கு எதிரானது ஒன்று இல்லாத ஒரு அன்புக்குச் சாத்தியம் இருக்கிறது. ஆனால் நீ இந்த அன்பைக் கடந்து போனால் மட்டுமே அந்த அன்பு வர முடியும். நீ கடந்து போவதற்கு, ஆணித்தரமாக இரு என்று நான் வலியுறுத்துகிறேன். உண்மையாகவும் உறுதியாகவும் இருப்பது – வெறுப்பில், அன்பில், கோபத்தில், எல்லாவற்றிலும் ஆணித்தரமாக இரு : உண்மையாக நடிக்காமல் இரு. ஏனெனில் உண்மையானவற்றை மட்டுமே கடந்து செல்ல முடியும். நீ பொய்யானவற்றைக் கடந்து போக முடியாது.

## சூத்திரங்கள்

18. ''ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார். மற்றொரு பொருளுக்குத் தாவாதே. இங்கு இந்தப் பொருளின் மத்தியில் – ஆசிர்வதிக்கப் படுவாயாக.''

19. ''பாதம் அல்லது கைகளின் துணையில்லாமல், புட்டத்தில் மட்டும் உட்காரு. திடீரென, மையம் கொள்வாயாக.''

20. ''ஓடும் வாகனத்தினுள் ஒரே சீராகச் சாய்ந்தாடு கையில் அனுபவத்தைப் பெறுவாயாக, அல்லது நிற்கும் வாகனத்தினுள் மெதுவான கண்ணிற்குத் தெரியாத வட்டங்களில் ஆடவிட்டு விடும் பொழுது.''

21. ''அமிர்தம் நிறைந்த உனது உருவத்தின் ஏதாவது ஒரு பகுதியை ஊசியால் குத்து, அப்போது அந்தக் குத்தலில் இதமாக நுழைந்து அகத்தின் தூய்மையைப் பெறுவாயாக.''

★★★

மனித உடல் ஒரு புதிரான இயந்திர இயக்கம். அதன் இயக்கம் இரண்டு பரிமாணங்களைக் கொண்டது. வெளியே செல்ல வேண்டியதன் பொருட்டு, உனது பிரக்ஞை, உணர்வு, புலன்களின் மூலமாக இந்த உலகத்தைச் சந்திக்கச் செல்கிறது, பொருளைச் சந்திக்கச் செல்கிறது. ஆனால் இது உனது உடம்பினுடைய செயல்பாட்டின் ஒரு பரிமாணம் மட்டுமே. உனது உடம்பிற்கு மற்றொரு பரிமாணமும் உள்ளது: அது உன்னை உள்ளே அழைத்துச் செல்லும். உணர்வு வெளியே செல்லும்போது, நீ அறிந்து கொள்வதெல்லாம் பொருள் அடிப்படையிலானவை; உணர்வு உள்ளே செல்லும்போது, நீ அறிந்து கொள்வதெல்லாம், பொருள் அடிப்படையற்றவை.

ஆனால் உண்மையில், இப்படி எந்தப் பிரிவும் அங்குக் கிடையாது: பொருளும், பொருளற்றதும் ஒன்றே. ஆனால் இந்த உண்மையான ஒன்றை, நீ கண்களின், புலன்களின் வழியாகப் பார்க்கும் பொழுது, அது பொருளைப் போலத் தெரிகிறது. அதே உண்மையாக இருக்கும் ஒன்றை, உள்ளிருந்து, புலன்களின் வழியாக அல்லாமல், மாறாக மையம் கொள்ளுவதன் மூலமாகப் பார்க்கும்பொழுது, அது பொருள் அல்லாததைப் போலத் தெரிகிறது. உண்மையில் இருப்பது ஒன்றுதான். ஆனால் நீ அதை இரண்டு வழிகளில் பார்க்கலாம். ஒன்று புலன்களின் மூலமாக, மற்றொன்று புலன்களை விடுத்து. இந்த எல்லா மையம் கொள்ளும் யுக்திகளும் உண்மையில் உன்னை உனக்குள் உள்ள ஒரு புலன்கள் வேலை செய்யாத புள்ளிக்குக் கொண்டு செல்பவைகளே. அங்கு நீ புலன்களைக் கடந்தவனாய் இருப்பாய்.

இந்த யுக்திகளுக்குள் நுழையுமுன்பாக நாம் மூன்று விஷயங்களைப் புரிந்து கொள்ள வேண்டும். முதலாவது, நீ கண்களின் மூலமாகப் பார்க்கும் பொழுது, கண்கள் பார்ப்ப தில்லை, அவை பார்ப்பதற்கான வெறும் திறப்புகள் மட்டுமே. பார்ப்பவன் கண்களுக்குப் பின்னால் இருக்கிறான். கண்களின் மூலமாக எது பார்க்கிறதோ அது கண்கள் அல்ல. அதனால் தான்

நீ கண்களை மூடிய பின்பும், கனவுகளை, காட்சிகளை, கற்பனை வடிவங்களைப் பார்க்க முடிகிறது. பார்ப்பவன் புலன்களுக்குப் பின்னால் இருக்கிறான்; அவன் புலன்களின் மூலமாக இந்த உலகத்திற்கு நகர்கிறான். ஆனால் உனது புலன்களை மூடி விட்டால், பார்ப்பவன் உள்ளேயே தங்கிவிடுவான்.

இந்தப் பார்ப்பவன், இந்தப் பிரக்ஞை உணர்வு, மையம் கொண்டால், திடீரென்று அவன் அவனைப் பற்றிய விழிப் புணர்வை அடைகிறான். மேலும் நீ உன்னைப் பற்றிய விழிப் புணர்வை அடையும் பொழுது, நீ முழுப் பிரபஞ்ச இருப்பைப் பற்றியும் விழிப்புணர்வு அடைகிறாய். ஏனெனில் நீயும் பிரபஞ்ச இருப்பும் இரண்டல்ல. ஆனால் ஒருவன் தன்னைப் பற்றிய விழிப்புணர்வு அடைய, அவன் மையம் கொள்ள வேண்டும். மையம் கொள்ளுதல் என்று நான் சொல்லுவதன் அர்த்தம், உனது உணர்வு பல திசைகளிலும் பிரிந்து கிடக்காமல், உனது உணர்வு எங்கும் நகராமல், தனக்குள்ளேயே தங்கிவிட்டதாக.... நகராமல், வேர்கொண்டதாக, எந்தத் திசையும் இல்லாமல், அங்கு மட்டும் இருப்பதாக, உள்ளே இருப்பது.

உள்ளே தங்கியிருப்பது கடினம் போலத் தோன்றுகிறது. ஏனெனில் நமது மனத்திற்கு, எப்படி உள்ளே தங்கியிருப்பது என்ற இந்த யோசனை கூட, ஒரு வெளியே செல்லும் செயலாக ஆகிவிடுகிறது. நாம் யோசிக்க ஆரம்பித்துவிடுகிறோம்: ''எப்படி'' என்பது சிந்தனையை ஆரம்பித்துவிடுகிறது. உள்ளே என்பதைப் பற்றிய யோசனை, இந்த அகம், இதுவும் நமது ஒரு எண்ணமாகவே இருக்கிறது – மேலும் எல்லா எண்ணங்களும், அது எதுவானாலும், வெளிப்புறத்தைச் சேர்ந்ததே, ஒருபோதும் அகத்தைச் சேர்ந்ததல்ல. ஏனெனில் உள்ஆழத்திலுள்ள மையத்தில் நீ வெறும் உணர்வாக மட்டுமே இருக்கிறாய்.

எண்ணங்கள் மேகங்களைப் போன்றவை. அவை உன்னிடம் வருகின்றன. ஆனால் அவை உன்னைச் சேர்ந்தவை அல்ல. எல்லா எண்ணங்களும் வெளியிலிருந்து வருபவையே. நீ, உனக்குள், அகத்தில், ஒரே ஒரு எண்ணத்தைக் கூட உருவாக்க

முடியாது. எல்லா எண்ணங்களும் வெளியிலிருந்து வருபவை, உள்ளே எண்ணங்களை உருவாக்கும் சாத்தியமே இல்லை. எண்ணங்கள் என்பவை உன்னை நோக்கி வரும் மேகங்களைப் போன்றவை. எனவே எப்பொழுதெல்லாம் யோசித்துக் கொண் டிருக்கிறாயோ, அப்பொழுதெல்லாம் நீ உள்ளே இல்லை என்பதை நினைவில் கொள். யோசனையில் இருப்பது என்பது வெளியே இருப்பது. எனவே நீ அகம், ஆன்மா, சுயம் பற்றி யெல்லாம் யோசித்துக் கொண்டிருந்தாலும் கூட, நீ உள்ளே இல்லை.

சுயத்தைப் பற்றிய, உனக்குள் உள்ளது பற்றிய, அகத்தைப் பற்றிய இந்த எல்லா எண்ணங்களும் உனக்கு வெளியேயிருந்து வந்தவைதான்; அவை உன்னைச் சேர்ந்தவை அல்ல. உன்னைச் சேர்ந்தது வெறும் பிரக்ஞை நிலை, உணர்வு நிலை, வானத்தைப் போன்ற, மேகங்கள் இல்லாத வானத்தைப் போன்ற உணர்வு நிலை மட்டுமே.

எனவே என்ன செய்வது? வெறும் பிரக்ஞை நிலையை, உணர்வை உள்ளே பெறுவது எப்படி? சில யுக்திகள் பயன் படுத்தப்படுகின்றன. ஏனெனில் நேரடியாக நீ எதுவும் செய்ய முடியாது. உன்னை உள்ளே வீசக்கூடிய, அதை நோக்கி எறியக்கூடிய சில யுக்திகள் தேவை. இந்த மையம் எப்பொழுதும் மறைமுகமாகவே அணுகக் கூடியது, நீ அதை நேரடியாக அணுக முடியாது. இதைத் தெளிவாகப் புரிந்துகொள், ஏனெனில் இது மிகவும் அடிப்படையானது.

நீ ஏதாவது ஒன்றை இசைக்கிறாய், பிறகு அது மிகவும் ஆனந்தமாக இருந்ததாக நீ சொல்கிறாய். நீ, ''நான் மிகவும் சந்தோஷத்தை உணர்ந்தேன், நான் அதை அனுபவித்தேன். ஒரு மெலிதான சந்தோஷத்தை அது எனக்குள் விட்டுப் போயிருக் கிறது'' என்கிறாய். இதை யாரோ ஒருவர் கேட்டுக் கொண்டிருக் கிறார். அவரும் சந்தோஷத்தைத் தேடிக் கொண்டிருப்பவர் தான். எல்லோரும் தான். அவர் சொல்கிறார், ''அப்படியானால் நானும் வாசிக்க வேண்டும். ஏனெனில் இசைப்பதால் சந்தோஷத்தை

அடைய முடியுமென்றால், அப்போது நானும் அதை அடைய வேண்டும்.'' அவரும் வாசிக்கிறார், ஆனால் அவர் நேரடியாக சந்தோஷத்தில் அக்கறை கொண்டுள்ளார், ஆனந்தத்தில், மகிழ்ச்சியான அனுபவத்தில் அக்கறை கொண்டுள்ளார். சந்தோஷம் என்பது ஒரு பக்க–விளைவு. நீ முழுமையாக உனது வாசிப்பில் இருந்தால், மூழ்கியிருந்தால், சந்தோஷம் கிடைக்கும். ஆனால் நீ தொடர்ந்து சந்தோஷத்தையே குறிவைத்தால், எதுவும் நடக்காது.

நீ இசையைக் கேட்டுக்கொண்டிருக்கிறாய். அப்படிக் கேட்கும் ஒருவர் சொல்கிறார், ''நான் மிகவும் ஆனந்தத்தை உணர்கிறேன்.'' ஆனால் இடைவிடாது நீ நேரடியாக ஆனந்தத்திலேயே அக்கறை கொண்டிருந்தால், உன்னால் கேட்கக் கூட முடியாமல் போய்விடும். ஆனந்தத்தின் மேலான அந்தக் குறிவைப்பு, அந்தப் பேராசையே ஆனந்தத்தை அடைய ஒரு தடையாகிவிடும். ஆனந்தம் ஒரு பக்க விளைவு, அதை நீ நேரடியாகக் கைப்பற்ற முடியாது. அது மிகவும் நுட்பமானது. எனவே நீ அதை மறைமுகமாக மட்டுமே அணுக வேண்டும். வேறு ஏதாவது ஒன்றைச் செய், அது நிகழும். நீ அதை நேரடியாக நிகழச் செய்ய முடியாது.

எவையெல்லாம் அழகானவையோ, எவையெல்லாம் காலம் கடந்ததோ, அவையெல்லாம் மிகவும் நுட்பமானவை, நீ அவைகளைப் பறிக்க நேரடியாக முயற்சி செய்தால் அதனால் அவை அமுக்கப்பட்டுவிடும். அதனால் தான் யுக்திகளும், முறைகளும் அர்த்தமுள்ளவை ஆகின்றன. இந்த யுக்திகள் உன்னை ஏதாவதொன்றைச் செய்யச் சொல்கின்றன. அப்படி நீ செய்யும் செயலில் எந்த முக்கியத்துவமும் இல்லை, அதன் விளைவே முக்கியமானது. ஆனால் உன்னுடைய மனம் செயலிலேயே யுக்தியிலேயே அக்கறை கொண்டதாக இருக்க வேண்டும். விளைவில் அக்கறை கொண்டதாக இருக்கக் கூடாது. விளைவு நிகழ்கிறது. அது கண்டிப்பாக நிகழும். ஆனால் அது எப்பொழுதும் மறைமுகமாகவே நிகழ்கிறது. எனவே விளைவைப் பற்றி

அக்கறை கொள்ளாதே. யுக்தியைப் பற்றி அக்கறை கொள். எவ்வளவு முடியுமோ அந்த அளவு முழுமையாக அதைச் செய், விளைவைப் பற்றி மறந்துவிடு. அது நிகழ்கிறது, ஆனால் நீயே அது நிகழ ஒரு தடையாக மாறிவிடலாம்.

நீ விளைவின் மேல் மட்டுமே அக்கறை கொண்டிருந்தால், அப்போது அது ஒருபோதும் நிகழாது. அப்போது அது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. மக்கள் என்னிடம் வந்து சொல்கிறார்கள், ''தியானம் செய்தால் இப்படி நடக்கும் என்று சொன்னீர்கள், ஆனால் நாங்கள் தியானம் செய்தோம், அப்படி எதுவும் நடக்கவில்லையே.'' அவர்கள் சொல்வது சரிதான், ஆனால் அவர்கள் நிபந்தனையை மறந்துவிட்டனர்: நீ விளைவைப் பற்றி மறந்து விட வேண்டும். அப்பொழுது தான் அது நடக்கும். நீ செயலிலேயே முழுமையாக இருக்க வேண்டும். நீ எந்த அளவு அதிகமாகச் செயலில் இருக்கிறாயோ, அந்த அளவு விரைவில் விளைவு நிகழும்.

ஆனால் அது எப்பொழுதும் மறைமுகமானதுதான். நீ அதைக் குறித்துப் பலத்தைப் பயன்படுத்த முடியாது, நீ அதைக் குறித்து வன்முறையில் இறங்க முடியாது. அது மிகவும் நுட்பமானது. அதை நீ தாக்க முடியாது. நீ முழுமையாக ஏதாவது ஒன்றில் ஈடுபட்டிருக்கையில், அப்போது உனது உள்வெளி தூய்மையாக எதுவுமற்று இருக்கையில், அது உன்னிடம் வருகிறது. இந்த யுக்திகள் அனைத்தும் மறைமுகமானவை. ஆன்மிக நிகழ்விற்கான எந்த நேரடியான யுக்தியும் இல்லை.

## 18. ஒரு பொருளை அன்போடு பார்.

இப்போது யுக்தி – மையம் கொள்வதற்கான ஆறாவது யுக்தி: ''ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார். மற்றொரு பொருளுக்குத் தாவாதே. இங்கு இந்தப் பொருளின் மத்தியில் – ஆசிர்வதிக்கப்படுவாயாக.''

நான் இதைத் திருப்பிச் சொல்ல வேண்டும் : ''ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார். மற்றொன்றிற்குத் தாவாதே....

மற்றொரு பொருளுக்குப் போகாதே. இங்கு இந்தப் பொருளின் மத்தியில் – ஆசிர்வதிக்கப்படுவாயாக.''

''ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார்....'' அன்போடு என்பது தான் சாவி. நீ எப்பொழுதாவது ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார்த்ததுண்டா? நீ பார்த்ததுண்டு என்று கூடச் சொல்வாய். ஏனெனில் ஒரு பொருளை அன்போடு பார்ப்பது என்றால் என்ன என்பதே உனக்குத் தெரியாது. நீ காமத்தோடு ஒரு பொருளைப் பார்த்திருக்கலாம் – அது வேறு விஷயம். அது முற்றிலும் மாறுபட்டது, நேர் எதிரானது. ஆக முதலில், இந்த வித்தியாசம், இந்த வித்தியாசத்தை உணர முயற்சி செய்.

ஒரு அழகான முகம், ஒரு அழகான உடல் – நீ அதைப் பார்க்கிறாய், நீ அதை அன்போடு பார்ப்பதாக நீ உணர்கிறாய். ஆனால் நீ ஏன் அதைப் பார்க்கிறாய்? நீ அதிலிருந்து எதையாவது அடைய விரும்புகிறாயா? அப்படியானால் அது காமம், அன்பல்ல. நீ அதைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறாயா? அப்படியானால் அது காமம், அன்பல்ல. அப்போது உண்மையில், எப்படி இந்த உடம்பைப் பயன்படுத்துவது, எப்படி அதைச் சொந்தமாக்கிக் கொள்வது, எப்படி உன்னுடைய சந்தோஷத்திற்கான கருவியாக அந்த உடம்பை மாற்றுவது என்று நீ யோசிக்கிறாய்.

உன்னுடைய சந்தோஷத்திற்காக ஏதாவதொன்றை எப்படிப் பயன்படுத்துவது என்பதுதான் காமம்; உன்னுடைய சந்தோஷத்தைப் பற்றிச் சிறிதும் அக்கறைப்படாதது என்பதுதான் அன்பு. உண்மையில், ஒன்றிடமிருந்து எப்படி எதையாவது பெறுவது என்பது காமம், எப்படி எதையாவது கொடுப்பது என்பது அன்பு. அவை நேர் எதிரானவை.

நீ ஒரு அழகான முகத்தைப் பார்த்து, அந்த முகத்தின் மேல் நீ அன்பை உணர்ந்தால், அப்போது அந்த முகத்தை சந்தோஷப் படுத்த எப்படி ஏதாவது செய்வது, அந்த ஆண் அல்லது அந்தப் பெண் சந்தோஷமடைய எப்படி ஏதாவது செய்வது என்ற

உணர்வுதான் உடனடியாக உனது பிரக்ஞையில் ஏற்படும். உன்னைப் பற்றிய அக்கறை ஏற்படாது. மாறாக அடுத்தவரைப் பற்றிய அக்கறையே வரும்.

அன்பில் அடுத்தவரே முக்கியமானவர்; காமத்தில் நீயே முக்கியம். எப்படி அடுத்தவரை உனது கருவியாக்குவது என்பது தான் காமத்தில் உன் யோசனையாக இருக்கும்; எப்படி நீயே ஒரு கருவியாக மாறுவது என்பதுதான் அன்பில் உன் யோசனை யாக இருக்கும். காமத்தில் நீ மற்றவர்களைப் பலி கொடுப்பாய்; அன்பில் நீ உன்னையே தியாகம் செய்வாய். அன்பின் அர்த்தம் கொடுத்தல், காமத்தின் அர்த்தம் பெறுதல். அன்பு ஒரு சரணாகதி; காமம் ஒரு ஆக்கிரமிப்பு.

நீ என்ன பேசுகிறாய் என்று முக்கியமல்ல, காமத்தில் கூட நீ அன்பு மொழியிலேயே பேசுகிறாய். உன்னுடைய பேச்சு மிகவும் அர்த்தம் கொண்டது அல்ல, எனவே அதனால் ஏமாறாதே. உனக்குள் பார், அப்போது நீ உனது வாழ்நாளில் ஒரு முறை கூட எந்தவொரு ஆளையோ அல்லது பொருளையோ அன்போடு பார்த்தது இல்லை என்பதைப் புரிந்துகொள்வாய்.

வேறுபடுத்திக் காட்டக்கூடிய இரண்டாவது விஷயம்: இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார்...'' உண்மையில், நீ ஏதாவது ஒரு பருப் பொருளை, உணர்ச்சியற்றதை அன்போடு பார்த்தால் கூட, அந்தப் பொருள் ஒரு ஆளாக ஆகிவிடும். நீ அதை அன்போடு பார்த்தால், உனது அன்புதான் எதையும் ஆளாக மாற்றக்கூடிய சாவி. நீ ஒரு மரத்தை அன்போடு பார்த்தால், அந்த மரம் ஒரு ஆளாக மாறிவிடும்.

அன்று ஒரு நாள் நான் எனது காரியதரிசி விவேக்கிடம் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது நான் புது ஆஸ்ரமத்திற்குப் போனவுடன் ஒவ்வொரு மரத்திற்கும் பெயர் வைப்போம், ஏனெனில் ஒவ்வொரு மரமும் ஒரு ஆள் என்று அவரிடம் சொன்னேன். ஒரு மரத்திற்குப் பெயர் சூட்டியுள்ள யாராவது

ஒருவரைப் பற்றி நீ எப்போதாவது கேள்விப்பட்டிருக்கிறாயா? ஒருவரும் மரத்திற்குப் பெயர் வைப்பதில்லை. ஏனெனில் அவற்றின் மேல் ஒருவரும் அன்பு கொள்வதில்லை. அப்படி இல்லாமல் அன்போடு இருந்தால், ஒரு மரம் ஒரு ஆளாக மாறி யிருக்கும். அப்போது அது வெறும் கூட்டத்தில் ஒன்றாக இருக்காது, அது தனித்தன்மை பெறும்.

நீ நாய்களுக்கும் பூனைகளுக்கும் பெயர் வைக்கிறாய். நீ ஒரு நாய்க்குப் பெயர் சூட்டி அதை அந்தப் பெயரிட்டு நீ அழைக்கும் பொழுது, அந்த நாய் ஒரு ஆளாக மாறுகிறது. அதன் பின் மற்ற நாய்களைப் போல அது ஒரு வெறும் நாயல்ல, அதற்கென்று ஒரு முகம் இருக்கிறது, நீ ஒரு ஆளை உருவாக்கி யிருக்கிறாய். நீ எப்பொழுதெல்லாம் ஏதாவது ஒன்றை அன்போடு பார்க்கிறாயோ, அப்பொழுதெல்லாம் அது ஒரு ஆளாக மாறுகிறது.

இதற்கு மாறுபட்டதும் உண்மை. நீ எப்பொழுதெல்லாம் காமக்கண்களோடு ஒரு ஆளைப் பார்க்கிறாயோ, அப்பொழு தெல்லாம் அந்த ஆள் ஒரு பொருளாக, ஜடமாக மாறி விடுகிறார். அதனால்தான் காமமுள்ள கண்கள் எதிர்ப்பைச் சந்திக்கின்றன – ஏனெனில் ஒருவருக்கும் ஒரு பொருளாகும் விருப்பம் கிடையாது. நீ உன்னுடைய மனைவியைக் காமம் நிறைந்த கண்களோடு பார்க்கும் பொழுது – அல்லது எந்த ஒரு பெண்ணையோ அல்லது ஆணையோ அப்படிப் பார்க்கும் பொழுது – அந்த ஒருவர் காயப்படுகிறார். உண்மையில் நீ என்ன செய்கிறாய்? நீ ஒரு ஆளை, ஒரு வாழ்ந்து கொண்டிருக்கும் ஆளை, ஒரு உயிரற்ற கருவியாக மாற்றுகிறாய். நீ எப்படிப் 'பயன்படுத்துவது' என்று யோசிக்கும் பொழுதே அந்த மனிதர் கொலை செய்யப்படுகிறார்.

அதனால் தான் காமம் நிறைந்த கண்கள் அசிங்கமாகவும் எதிர்ப்பை உருவாக்குவதாகவும் உள்ளன. நீ ஒருவரை அன்போடு பார்க்கும் பொழுது அந்த ஒருவர் உயர்த்தப்படுகிறார். அவர் தனித்தன்மை பெறுகிறார். திடீரென்று பொருட்கள் கூட ஆளாக

மாறுகின்றன. ஒரு ஆளின் இடத்தை இன்னொரு ஆளால் நிரப்ப முடியாது. ஆனால் பொருட்களைப் பொருத்தவரை அப்படி அல்ல. ஒரு பொருள் என்பதன் அர்த்தம் அதை மாற்றிக் கொள்ள லாம்; ஒரு ஆள் என்பதன் அர்த்தம் அதை மாற்ற முடியாது: ஒரு அவனையோ அவளையோ மாற்றிக் கொள்ளக் கூடிய சாத்தியம் ஏதுமில்லை. ஒரு ஆள் தனித்தன்மை கொண்டவன்; ஒரு பொருள் தனித்தன்மை கொண்டது அல்ல.

அன்பு எதையும் தனித்தன்மை வாய்ந்ததாக ஆக்குகிறது. அதனால்தான் அன்பு இல்லாவிட்டால் நீ ஒருபோதும் ஒரு ஆளாக உணர்வதில்லை. உன்னை யாராவது ஒருவர் ஆழமாக நேசித்தாலொழிய நீ உனக்கு எந்தத் தனித்தன்மையும் இருப்பதாக ஒருபோதும் உணர்வதில்லை. நீ வெறும் கூட்டத்தில் ஒருவன் – வெறும் எண்ணிக்கையில் ஒன்று. உன்னை இன்னொன்றால் மாற்றிக் கொள்ளலாம்.

உதாரணமாக நீ ஒரு அலுவலகத்தில் எழுத்தர் அல்லது ஒரு பள்ளியில் ஆசிரியர் அல்லது ஒரு பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் என்று வைத்துக் கொண்டால், உனது தொழில் மற்றொருவரால் இட்டு நிரப்பக் கூடியது. மற்றொரு பேராசிரியர் உன் இடத்திற்கு வரலாம்; அவர் உனக்குப் பதிலாக எந்தக் கணத்திலும் மாறிக் கொள்ளலாம். ஏனெனில் நீ அங்கு ஒரு பேராசிரியராக மட்டுமே பயன்படுத்தப் படுகிறாய். உனக்குச் செயலைப் பொருத்தே அர்த்தமும் முக்கியத்துவமும் இருக்கிறது.

நீ ஒரு எழுத்தர் என்றால், வேறொருவர் அந்த வேலையை சுலபமாகச் செய்துவிட முடியும். வேலை உனக்காகக் காத்திருக்காது. நீ இந்தக் கணத்தில் இறந்து விட்டால் அடுத்த கணமே வேறொருவர் உனக்குப் பதிலாக வந்து விடுவார், அந்த இயந்திர இயக்கம் தொடரும். நீ ஒரு வெறும் கருவி – மற்றொரு கருவி போதும். நீ ஒரு வெறும் பயன்பாடு.

ஆனால் இப்போது அந்த எழுத்தரிடமோ அல்லது அந்தப் பேராசிரியரிடமோ யாரோ ஒருவர் காதலில் விழுந்துவிட்டார்.

திடீரென்று அந்த எழுத்தர் வெறும் எழுத்தர் மட்டுமல்ல, அவர் ஒரு தனித்தன்மை கொண்ட ஒரு ஆளாக மாறிவிட்டார். அவர் இறந்துவிட்டால், அப்போது அவரை நேசிப்பவரால் அவருடைய இடத்தை வேறொருவரை கொண்டு நிரப்ப முடியாது. அவர் இட்டு நிரப்ப முடியாதவர். பிறகு முழு உலகமும் எப்போதும் போல் போய்க் கொண்டிருக்கலாம். ஆனால் அவரை நேசித்தவர் அப்படி இருக்க முடியாது. இந்தத் தனித்தன்மை, ஒரு ஆளாக இருக்கும் இந்தத் தன்மை அன்பின் மூலமாகவே நிகழ்கிறது.

இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார்.'' இது ஒரு பொருளுக்கும் ஒரு ஆளுக்கும் இடையே எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தவில்லை. அதற்கு எந்தத் தேவையும் இல்லை, ஏனெனில் நீ அன்போடு பார்க்கும் பொழுது எதுவாக இருந்தாலும் ஒரு ஆளாக மாறி விடுகிறது. அந்தப் பார்வையே மாற்றி விடுகிறது, உயர்த்தி விடுகிறது.

நீ ஒரு குறிப்பிட்ட காரையே, உதாரணத்திற்கு ஒரு பியட் காரையே ஓட்டிக் கொண்டிருந்தால் என்ன நிகழ்கிறது என்பதை நீ ஆழ்ந்து கவனித்திருக்கிறாயா? ஆயிரம் ஆயிரம் பியட் கார்கள் அச்சாக உன்னுடையதைப் போன்றே ஓடிக்கொண்டிருக்கின்றன. ஆனாலும் நீ உனது காரை நேசிக்கும் பொழுது, உன்னுடைய கார் தனித்தன்மை பெறுகிறது, ஒரு ஆளாக மாறிவிடுகிறது. அதை நீ மாற்ற முடியாது; ஒரு உறவு உண்டாகி விடுகிறது. இப்போது நீ இந்தக் காரை ஒரு ஆளாக உணர்கிறாய். அதில் ஏதாவது தவறாகப் போனால்.... ஒரு சிறிய சத்தம், அதை நீ உடனே உணர்கிறாய். மேலும் கார்கள் மிகவும் தனக்கே உரிய குணத்தைக் கொண்டவை. உனது காரின் குணம் உனக்குத் தெரியும் – எப்போது அது நன்றாக உணரும், எப்போது அது மோசமாக நடந்து கொள்ளும் என்பது உனக்குத் தெரியும். கார், கொஞ்சம் கொஞ்சமாக, ஒரு ஆளாக மாறிவிடுகிறது.

ஏன்? அங்கு அன்பான உறவிருந்தால், எதுவும் ஒரு ஆளாக மாறிவிடும். அங்குக் காமம் கொண்ட உறவிருந்தால், அப்போது

ஒரு ஆள் கூடப் பொருளாக மாறிவிடுவான். மேலும் இது ஒரு மனிதன் செய்யக்கூடிய மிக மோசமான மனிதத் தன்மையற்ற செயல்களில் ஒன்று – ஒருவனைப் பொருளாக ஆக்குவது.

''ஏதாவது ஒரு பொருளை அன்போடு பார்....'' ஆக ஒருவன் செய்ய வேண்டியது என்ன? நீ அன்போடு பார்க்கும் பொழுது, நீ என்ன செய்ய வேண்டும்? முதல் விஷயம்: உன்னை மற. உன்னை சுத்தமாக மறந்துவிடு! ஒரு மலரைப் பார், அதோடு உன்னைச் சுத்தமாக மறந்துவிடு. அந்த மலர் அங்கு இருக்கட்டும்; நீ முழுமையாக இல்லாமல் போய்விடு. மலரை உணரு, அப்போது உனது பிரக்ஞை நிலையிலிருந்து, உணர்வு நிலையிலிருந்து, மலரை நோக்கி ஒரு ஆழமான அன்பு பொங்கிப் பெருகும். மேலும் உனது பிரக்ஞை நிலை முழுவதும் ஒரே ஒரு எண்ணத்தால் நிறையட்டும் – அது, நீ எப்படி இந்த மலருக்கு மேலும் அதிகமாகப் பூக்க, மேலும் அதியமாக அழகுபெற, மேலும் அதிக ஆனந்தம் பெற உதவ முடியும். நீ அதற்கு என்ன செய்ய முடியும்?

உன்னால் செய்ய முடியுமா அல்லது முடியாதா என்பதில் எந்த அர்த்தமும் இல்லை; அது முக்கியமற்றது. நீ என்ன செய்ய முடியும் என்ற உணர்வு – இந்த வேதனை, நீ இந்த மலரை அதிக அழகுள்ளதாக, அதிக உயிர்த் துடிப்புள்ளதாக, அதிக மலர்ச்சி கொண்டதாக ஆக்க என்ன செய்ய முடியும் என்பதைக் குறித்த இந்த ஆழமான வலி – அர்த்தமுள்ளது. இந்த எண்ணம் உனது முழு இருப்பிலும் வியாபிக்கட்டும். உன்னுடைய உடம்பின் ஒவ்வொரு நரம்பும் மனமும் இந்த உணர்வு கொள்ளட்டும். நீ ஒரு பரவசத்திற்கு எடுத்துச் செல்லப்படுவாய், மேலும் அந்த மலர் ஒரு ஆளாக மாறிவிடும்.

''மற்றொரு பொருளுக்குத் தாவாதே....'' நீ தாவ முடியாது. நீ ஒரு அன்பான உறவில் இருந்தால், நீ போகவோ தாவவோ முடியாது. நீ யாரோ ஒருவரை நேசித்தால், அப்போது நீ முழு உலகத்தையும் மறந்து விடுவாய், ஒரே ஒரு முகமே நினைவில் இருக்கும். உண்மையில், நீ வேறு யாரையுமே காண முடியாது.

நீ ஒரே ஒரு முகத்தையே காண்பாய். மற்ற எல்லோரும் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் அடியில் போய் விட்டார்கள் – உனது பிரக்ஞை நிலையின் எல்லைக் கோட்டிற்குப் போய் விட்டார்கள். அவர்கள் இல்லை. அவர்கள் வெறும் நிழல்களாகி விட்டார்கள்; ஒரே ஒரு முகமே நிலைத்திருக்கிறது. நீ யாராவது ஒருவரை நேசித்தால் பிறகு அந்த முகம் மட்டுமே தங்கி யிருக்கும், எனவே நீ விலகிப் போக முடியாது.

மற்றொரு பொருளிடம் போகாதே, ஒன்றுடனேயே தங்கி விடு. ஒரு ரோஜாப் பூவுடன் இருந்து விடு அல்லது ஒரு அன்புக்குரியவரின் முகத்துடன் இருந்து விடு. அங்கு அன்போடும், பெருகி ஓடிக் கொண்டும், ஒரே இதயத்துடனும், ''நான் நேசிக்கும் ஒன்றை மேலும் மகிழ்ச்சியோடும், ஆனந்தத்தோடும் இருக்கச் செய்ய நான் என்ன செய்ய முடியும்?'' என்ற உணர்வோடும் நிலைத்திரு.

''இங்கு அந்தப் பொருளின் நடுவில் – ஆசீர்வதிக்கப் படுவாயாக.'' அப்படி நிலைத்திருக்கையில் நீ இல்லாமல் ஆகி விடுவாய், உன்னைப் பற்றிய அக்கறை சிறிதும் இருக்காது, சுயநலம் இருக்காது, உனது சந்தோஷத்திற்காக உனது உயர்வுக் காக யோசிக்க மாட்டாய். நீ உன்னை முழுவதுமாக மறந்து விட்டாய், மேலும் நீ மற்றொருவருக்காகவே யோசித்துக் கொண்டிருக்கிறாய். அந்த மற்றொன்று உனது அன்பின் மையமாகி விட்டது, உனது பிரக்ஞை நிலை, உனது உணர்வு நிலை அந்த மற்றொன்றை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறது. ஆழமான கருணையுடன், ஆழமான அன்பு உணர்வுடன் நீ, ''நான் நேசிப்பவரை ஆனந்தமடையச் செய்ய என்னால் என்ன செய்ய முடியும்?'' என்று யோசிக்கிறாய். இந்த நிலையில் திடீரென்று, ''இங்கு அந்தப் பொருளின் மையத்தில் – ஆசீர்வதிக்கப் படுவாயாக.'' திடீரென்று, ஒரு பக்க விளைவாக, ஆசீர்வதிக்கப்படுகிறாய். திடீரென்று நீ மையம் கொள்கிறாய்.

இது பார்ப்பதற்கு முரண்பட்டதாகத் தெரிகிறது, ஏனெனில் இந்த சூத்திரம் உன்னைச் சுத்தமாக மறந்துவிடச் சொல்லுகிறது.

சுய மையம் கொள்ளாதே என்கிறது, மற்றொன்றிடம் முழுமை யாகப் போய்விடச் சொல்லுகிறது. புத்தர் தொடர்ந்து இதைச் சொல்லிக் கொண்டிருந்தாராம், அதாவது நீ பிரார்த்தனை செய்யும் பொழுதெல்லாம் மற்றவர்களுக்காகவே பிரார்த்தனை செய் - ஒருபோதும் உனக்காகச் செய்யாதே. அப்படி இல்லா விடில் பிரார்த்திப்பதில் எந்தப் பயனும் இல்லை.

ஒரு மனிதன் புத்தரிடம் வந்து சொன்னான், ''நான் உங்கள் போதனைகளை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் ஒன்றை மட்டும் ஏற்றுக் கொள்வது மிகவும் கடினமாக இருக்கிறது. நீங்கள் சொல்கிறீர்கள், எப்பொழுதெல்லாம் நாங்கள் பிரார்த்தனை செய்கிறோமோ, அப்பொழுதெல்லாம் நாங்கள் எங்களைப் பற்றி நினைக்கக் கூடாது, நாங்கள் எங்களுக்காக எதுவும் கேட்கக் கூடாது. நாங்கள், 'எனது பிரார்த்தனையின் பலன் எதுவாக இருந்தாலும் அது எல்லோருக்கும் கிடைக்கட்டும். ஆசீர்வதிக்கப் படுவது நிகழ்ந்தால் அதுவும் எல்லோருக்கும் கிடைக்கட்டும்' என்று சொல்ல வேண்டும்.'' அந்த மனிதன் மேலும் சொன்னான், ''இதை ஏற்றுக் கொள்கிறேன், ஆனால் நான் ஒரே ஒரு மாறுதலை மட்டும் செய்து கொள்ள முடியுமா? எனது பக்கத்து வீட்டிலிருப்பவனை மட்டும் சேர்க்கக் கூடாது - அவன் என் எதிரி. இந்த ஆசீர்வாதம் எனது பக்கத்து வீட்டுக்காரனைத் தவிர எல்லோருக்கும் கிடைக்கட்டும்.''

மனம் சுய மையம் கொண்டது, எனவே புத்தர் சொன்னார், ''உனது பிரார்த்தனை பயனற்றது, அதிலிருந்து எந்தப் பலனும் வராது - நீ எல்லோருக்கும் கொடுக்கத் தயாராகாத வரை. நீ எல்லோருக்கும் கொடு, அப்போது எல்லோருடையதும் உன்னுடையதும் ஆகும்.''

அன்பில் நீ உன்னை மறக்க வேண்டும். இது முரண்பட்ட தாகத் தெரிகிறது... பின் எப்படி எங்கு மையம் கொள்ளுதல் நிகழும்? முழுவதுமாக மற்றவர்களைப் பற்றி அக்கறையுடன், மற்றவர்களின் மகிழ்ச்சியுடன், நீ உன்னை முழுவதுமாக மறந்து

மற்றவர் மட்டுமே அங்கு இருக்கும் பொழுது, திடீரென்று நீ ஆனந்தத்தில் நிறைவாய் – ஆசீர்வதிக்கப்படுவாய்.

ஏன்? ஏனெனில் நீ உன்னைப் பற்றி அக்கறை கொள்ளாமல் இருக்கும் பொழுது நீ எதுவுமில்லாமல், வெற்றிடமாக ஆகிவிடுகிறாய்; உள்வெளி உருவாக்கப்படுகிறது. உனது மனம் மற்றொருவரைப் பற்றி முழுதாக அக்கறை கொண்டிருக்கும் பொழுது நீ உள்ளே மனமற்றவனாக ஆகி விடுகிறாய். அப்போது உள்ளே எந்த எண்ணங்களும் இருப்பதில்லை. மேலும் அப்போது, ''நான் எப்படி உதவ முடியும்? நான் எப்படி அதிக இன்பத்தை உருவாக்கிக் கொடுக்க முடியும்? மற்றொருவரை எப்படி அதிக சந்தோஷப்படுத்த முடியும்?'' என்ற எண்ணமும் தொடர்ந்து இருக்க முடியாது. ஏனெனில் உண்மையில், நீ செய்யக் கூடியது எதுவுமில்லை. இந்த எண்ணம் ஒரு முற்றுப் புள்ளியாக மாறிவிடும். நீ செய்யக் கூடியது எதுவுமில்லை. நீ என்ன செய்ய முடியும்? நீ என்ன செய்ய முடியும் என்று நீ யோசித்தால், நீ இன்னும் உன்னைப் பற்றியே யோசித்துக் கொண்டிருக்கிறாய் – உன் அகந்தை இன்னும் இருக்கிறது.

ஒரு பொருளின் மேல் அன்பு வைத்து விட்டால், ஒருவன் முழுதும் உதவியற்றவனாக ஆகிவிடுவான் – இதை நினைவில் கொள். நீ எப்பொழுதெல்லாம் ஒருவரை நேசிக்கிறாயோ அப்பொழுதெல்லாம் நீ முழுதும் உதவியற்றவனாக, எதற்கும் உதவாதவனாக உணர்வாய். இது தான் அன்பின் வேதனை; என்ன செய்யலாம் என்று ஒருவனால் உணர முடியாது. அவன் எல்லாவற்றையும் செய்ய விரும்புகிறான், அவன் இந்த முழு அண்டத்தையும் தான் அன்பு காட்டுபவருக்குக் கொடுக்க விரும்புகிறான் – ஆனால் அவனால் என்ன செய்ய முடியும்? இதைச் செய்யலாம் அல்லது அதைச் செய்யலாம் என்று உன்னால் சிந்திக்க முடிந்தால், நீ இன்னும் அன்பான உறவு கொள்ளவில்லை. அன்பு சிறிதும் உதவ முடியாதது, முற்றிலும் கையாலாகாதது. ஆனால் அந்த உதவ முடியாத தன்மை தான் அழகு. ஏனெனில் அந்த உதவ முடியாத தன்மையில் தான் நீ சரணாகதி அடைகிறாய்.

யாராவது ஒருவரை நேசி, அப்போது நீ எந்த உதவியு மற்றவனாக உணர்வாய்; யாரையாவது வெறுத்தால், அப்போது நீ ஏதாவது செய்ய முடியும். யாரையாவது நேசித்தால், அப்போது நீ முழுவதும், எந்தவிதத்திலும் உதவ முடியாதவனாக இருப்பாய் – ஏனெனில் உன்னால் என்ன செய்ய முடியும்? நீ செய்வது எதுவாயிருந்தாலும், அது முக்கியமற்றதாக, அர்த்தமற்றதாகத் தெரியும்; அது ஒருபோதும் திருப்தியாக இருக்காது. எதுவும் செய்ய முடியாது. மேலும் எதுவும் செய்ய முடியாது என்று ஒருவர் உணரும்போது, ஒருவர் எதுவும் உதவ முடியாதவராகத் தன்னை உணர்கிறார். ஒருவர் எல்லாவற்றையும் செய்ய விரும்பி, ஆனால் எதுவுமே செய்ய முடியாது என்று உணரும்போது, மனம் நின்றுவிடுகிறது. இந்த உதவ முடியாத தன்மையில் சரணாகதி நிகழ்கிறது. நீ வெற்றிடமாயிருக்கிறாய். அதனால் தான் அன்பு ஒரு ஆழமான தியானமாகிறது.

உண்மையில், நீ யாராவது ஒருவரை நேசித்தால், வேறு எந்தத் தியானமும் தேவையில்லை. ஆனால் எவருமே அன்பா யிருப்பதில்லை. எனவே தான், நூற்றிப் பன்னிரண்டு முறைகள் தேவைப்படுகின்றன – மேலும் இவை கூடப் போதுமானதாக இல்லாமலிருக்கலாம்.

அன்றொரு நாள் இங்கு ஒருவர் இருந்தார். அவர் என்னிடம் சொன்னார், ''இது எனக்கு மிகவும் நம்பிக்கை யளிக்கிறது. நான் முதல் தடவையாக உங்களிடமிருந்து நூற்றிப் பன்னிரண்டு முறைகள் இருக்கின்றன என்பதைக் கேட்டேன். இது எனக்கு மிகவும் நம்பிக்கையளிப்பதாய் உள்ளது. ஆனாலும் மனத்தின் எங்கோ ஓரிடத்தில் ஒரு தன்னிரக்கம் வருகிறது: வெறும் நூற்றிப் பன்னிரண்டு முறைகள் மட்டும்தானா? மேலும் இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளும் எனக்கு வேலை செய்ய வில்லை என்றால், பிறகு அங்கே ஒரு நூற்றிப் பதிமூன்றாவது இல்லையா?''

அவர் சொலவது சரிதான். அவர் சரிதான்! இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளும் உனக்கு வேலை செய்யவில்லை

என்றால், அதன்பின் போவதற்கு இடமில்லை. எனவே அவர் சொல்வதைப் போல, நம்பிக்கைக்குப் பின் ஒரு தன்னிரக்கமும் வருகிறது. ஆனால் உண்மையில், முறைகள் தேவைப்படு கின்றன. ஏனெனில் அடிப்படையான முறை இல்லாமல் போய்விட்டது. நீ அன்புகொள்ள முடிந்தால், எந்த முறையும் தேவையில்லை.

அன்பே மிக உயர்ந்த முறை, ஆனால் அன்பு கடினமானது – ஒரு விதத்தில் சாத்தியமில்லாதது. அன்பு என்பது உன்னை உனது பிரக்ஞை நிலைக்கு வெளியே தள்ளிவிடுவது. மேலும் அந்த இடத்தில், உனது அகந்தை இருந்து வந்த அந்த இடத்தில், வேறு யாரோ ஒருவரை இருக்க வைப்பது. உனக்குப் பதிலாக வேறு யாரோ ஒருவரை வைப்பது என்பது தான் அன்பு – ஏதோ இப்போது நீ இல்லாமல் போய்விட்டது போலவும், அடுத்தவர் மட்டுமே இருப்பது போலவும் ஆவதுதான் அன்பு.

'ஜீன் பால் சாத்தரே' சொல்கிறார், அடுத்தவர் தான் நரகம், அவர் சொல்வது சரிதான். அவர் சரிதான். ஏனெனில் அடுத்தவர் உனக்கு நரகத்தை மட்டுமே உண்டாக்குகிறார். ஆனால் அவர் தவறும் கூட, ஏனெனில் அடுத்தவர் நரகமாக முடியுமென்றால் அடுத்தவர் சொர்க்கமும் ஆக முடியும். நீ காமத்தின் அடிப்படை யில் வாழ்ந்தால், அடுத்தவர் ஒரு நரகம்தான். ஏனெனில் அப்போது நீ அந்த ஆளைக் கொல்லப் பார்க்கிறாய். நீ அந்த ஆளை ஒரு பொருளாக ஆக்க முயற்சி செய்கிறாய். அப்போது அந்த ஆளும் அதையே திரும்பிச் செய்வான், உன்னை ஒரு பொருளாக்க முயற்சி செய்வான், அப்போது அது நரகத்தை உருவாக்குகிறது.

எனவே ஒவ்வொரு கணவனும், ஒவ்வொரு மனைவியும், அவர்கள் ஒருவருக்கொருவர் நரகத்தை உருவாக்குகிறார்கள். ஏனெனில் ஒவ்வொருவரும் அடுத்தவரைச் சொந்தமாக்கிக் கொள்ள, உடைமையாக்கிக் கொள்ள முயற்சிக்கின்றனர். பொருள்களை மட்டுமே உடைமையாக்கிக்கொள்ள முடியும், மனிதர்களிடம் ஒருபோதும் முடியாது. ஒரு ஆள் உன்னை

உடைமையாக்கிக் கொள்ளலாம் - உன்னை ஒரு பொருளாக மாற்றிவிடலாம் - ஆனால் நீ ஒரு ஆளை உடைமையாக்கிக் கொள்ள ஒருபோதும் முடியாது. ஒரு பொருளை மட்டுமே உடைமையாக்கிக் கொள்ள முடியும். ஆனால் நீ ஆட்களை உடைமையாக்கிக் கொள்ள முயற்சிக்கிறாய். இந்த முயற்சியின் மூலம் ஆட்கள் பொருள்களாக மாறுகின்றனர். நான் உன்னை ஒரு பொருளாக மாற்றினால், நீ அதை எதிர்ப்பாய். அதன் பின் நான் உனது எதிரி. பிறகு நீ என்னை ஏதாவது ஒரு பொருளாக்க முயற்சிப்பாய் - இது நரகத்தை உருவாக்கும்.

நீ உனது அறையில் தனியாக உட்கார்ந்திருக்கிறாய், அப்போது திடீரென்று யாரோ ஒருவர் சாவித் துவாரத்தின் வழியாக உன்னைப் பார்ப்பதாக நீ உணருகிறாய். அப்போது என்ன நடக்கிறதென்று உன்னிப்பாகக் கவனி. நீ ஏதாவது மாற்றத்தை உணர்ந்தாயா? மேலும் ஏன் உனக்கு அந்த ஓட்டையில் பார்க்கும் யாரோ ஒருவனிடம் கோபம் வருகிறது? அவன் உன்னை எதுவும் செய்யவில்லை - ஓட்டை வழியாகப் பார்க்கிறான் அவ்வளவுதான். நீ ஏன் கோபமடைகிறாய்? அவன் உன்னை ஒரு பொருளாக மாற்றி விட்டான். அவன் கவனிக்கிறான்; அவன் உன்னை ஒரு பொருளாக, உயிரற்ற ஜடமாக ஆக்கிவிட்டான். இது உனக்கு ஒரு சங்கடத்தைக் கொடுக்கிறது.

நீ சாவித் துவாரத்தின் அருகில் வந்து அதன் வழியாகப் பார்த்தால், இதுவேதான் அவனுக்கும் ஏற்படும். அவன் உடைந்து போவான், அதிர்ச்சி அடைவான். அவன் ஒரு கணத்திற்கு முன்பு வரை ஒரு ஆள், ஒரு சுயம்; அவன் பார்ப்பவன், நீ பார்க்கப்படும் பொருள். இப்போது திடீரென்று அவன் பிடிபட்டு விட்டான். உன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டான். அதனால் இப்போது அவன் ஒரு பொருளாக ஆகிவிட்டான். உன்னை யாரோ ஒருவர் உன்னிப்பாகக் கவனிக்கும் போது, திடீரென்று நீ உனது சுதந்திரம் பாதிக்கப்படுவதாக, அழிக்கப்பட்டுவிட்டதாக உணர்கிறாய். அதனால் தான், நீ யாரோ ஒருவரிடம் அன்பு கொண்டிருக்காமல், நீ உற்றுப் பார்க்க முடியாது. அப்படி உற்றுப்

பார்ப்பது அசிங்கமாகவும், வன்முறையாகவும் ஆகிவிடுகிறது – நீ அன்பு கொண்டிருக்காவிட்டால். நீ அன்பு கொண்டிருந்தால் அப்போது உற்றுப் பார்ப்பது ஒரு அழகான விஷயம், ஏனெனில் உன்னுடைய பார்வை அடுத்தவரை ஒரு பொருளாக மாற்றுவதில்லை. அப்போது நீ நேரடியாக கண்களுக்குள் பார்க்க முடியும். அப்போது நீ அடுத்தவரின் கண்களுக்குள் ஆழம் வரை போக முடியும். நீ அவரை ஒரு பொருளாக மாற்றுவதில்லை. மாறாக, உனது அன்புப் பார்வை அவரை ஒரு ஆளாக மாற்றுகிறது. அதனால் தான் காதலர்களின் கண் வீச்சு மட்டுமே அழகானதாக இருக்கிறது, மற்றபடி உற்றுப் பார்ப்பது அசிங்கமாக இருக்கிறது.

உளவியலாளர்கள் இதற்கு ஒரு கால வரையறை உள்ளது என்று சொல்லுகிறார்கள். உங்கள் எல்லோருக்கும் தெரியும் அல்லது கவனித்தால் நீ தெரிந்து கொள்ளலாம். யாரோ ஒருவருடைய, முன்பின் தெரியாத யாரோ ஒருவருடைய கண்களுக்குள் நீ எவ்வளவு நேரம் உற்றுப் பார்க்கலாம் என்று கால அளவைத் தெரிந்து கொள்ளலாம். ஒரு கணம் அதிகமானால், அந்த மற்றொருவர் கோபமடைந்து விடுவார். பொது இடத்தில் ஒரு கடந்து செல்லும் பார்வையை மன்னித்து விடலாம். ஏனெனில் அது நீ ஏதோ வேடிக்கை பார்ப்பது போலத் தெரியும், உற்று நோக்குவதாகாது.

பார்வை ஒரு ஆழமான விஷயம். நான் கடந்து செல்லும் போது உன்னைப் பார்ப்பது என்பதால் எந்த உறவும் ஏற்படுவதில்லை. அல்லது நான் கடந்து செல்கிறேன், அப்போது நீ பார்க்கிறாய், நான் கடப்பதைப் பார்க்கிறாய் – இதில் எந்தத் தவறும் இல்லை, இது சரி. ஆனால் நீ திடீரென்று எழுந்து நின்று என்னைப் பார்த்தால், நீ என்னைக் கவனிப்பவன் ஆகிறாய். அப்போது உன்னுடைய பார்வை என்னைப் பாதிக்கும். மேலும் நான் அவமானமாக உணர்வேன்: ''நீ என்ன செய்கிறாய்? நான் ஒரு ஆள், ஒரு பொருளல்ல. இப்படிப் பார்ப்பது சரியல்ல.''

இந்தக் காரணத்தினாலேயே, ஆடைகள் மிக அர்த்த முள்ளவை ஆகிவிட்டன. நீ யாராவது ஒருவரை நேசித்தால் மட்டுமே நீ சுலபமாக நிர்வாணமாக இருக்க முடியும். ஏனெனில்

நீ நிர்வாணமாகும் கணத்திலேயே உன்னுடைய முழு உடம்பும் பார்க்கக் கூடியதாக ஆகிவிடுகிறது. யாராவது ஒருவர் உனது முழு உடம்பையும் பார்க்க முடியும். அப்போது அவர் உன்னிடம் அன்பு கொள்ளாதவராய் இருந்தால், அவரது கண்கள் உனது முழு உடம்பையும், உன்னுடைய முழு இருப்பையும், ஒரு பொருளாக மாற்றிவிடும். ஆனால் நீ யாராவது ஒருவரிடம் அன்பு கொண்டிருந்தால், நீ நிர்வாணமாக இருக்கிறோம் என்ற உணர்வின்றி நீ நிர்வாணமாக இருக்க முடியும். மேலும் நீ நிர்வாணமாக இருக்க விரும்பலாம். ஏனெனில் இந்த உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லும் அன்பு உன்னுடைய உடம்பையும் ஒரு ஆளாக உயர்த்த நீ விரும்பலாம்.

எப்பொழுதெல்லாம் நீ யாரோ ஒருவரை ஒரு பொருளாக நீ மாற்றுகின்றாயோ, அப்பொழுதெல்லாம் அந்தச் செயல் ஒழுக்கக்கேடானது. ஆனால் நீ அன்பால் நிறைந்திருந்தால், எந்தப் பொருளுடன் நீ அன்பு நிறைந்து இருக்கும் கணத்திலும், இந்த நிகழ்வு, இந்த ஆசிர்வாதம், சாத்தியமானது. இது நிகழும்.

''இந்தப் பொருளின் மத்தியில் – ஆசிர்வதிக்கப்படுவாயாக.'' திடீரென்று நீ உன்னை மறந்து விட்டாய் – மற்றொருவர் அங்கிருக்கிறார். அப்போது சரியான நேரம் வருகையில் நீ அங்கு இல்லாமல் போகையில், முற்றிலும் இல்லாமல் போகையில் அந்த மற்றொருவரும் இல்லாமல் போய் விடுவார். அப்போது இருவருக்கிடையில் ஆசிர்வதிக்கப்படுதல் நிகழ்கிறது. இதையே காதலர்கள் உணர்கிறார்கள். இந்த ஆசிர்வதித்தலும், ஒரு அறியாத, தன்னுணர்வற்ற தியானத்தினாலேயே கிடைக்கிறது.

இரண்டு காதலர்கள் இருக்கும் பொழுது கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் இருவரும் இல்லாமல் போகிறார்கள். ஒரு தூய்மையான இருப்பு நிலை மட்டுமே மிஞ்சியிருக்கிறது – எந்த அகந்தைகளும் இல்லாமல், எந்தப் பூசல்களும் இல்லாமல்... வெறும் ஒரு பரிமாற்றம். அந்தப் பரிமாற்றத்தில் ஒருவன் ஆனந்தத்தை, பரவசத்தை உணர்கிறான். மற்றொருவரால் இந்த ஆனந்தம் உனக்குக் கொடுக்கப் படுகிறது என்று தவறாகக் கருதப்

படுகிறது. அந்தப் பேரானந்தம் வந்ததன் காரணம் உன்னை அறியாமல் நீ ஒரு ஆழமான தியான முறையில் மூழ்கியதுதான்.

நீ இதை உணர்வோடு செய்ய முடியும் – மேலும் இதை நீ உணர்வோடு செய்யும் பொழுது இது மேலும் ஆழமாகச் செல்லும். ஏனெனில் இப்போது நீ மற்றொன்றுடன் பிடிப்புள்ள வனாக இருக்க மாட்டாய். இது தினந்தோறும் நடந்து கொண் டிருக்கிறது. நீ யாரோ ஒருவரை நேசித்தால், நீ ஆனந்தத்தை உணர்கிறாய், அதன் காரணம் அன்பு, அதன் காரணம் அவனோ அவளோ அல்ல. அன்பின் காரணத்தால் ஏன்? ஏனெனில் இந்த சூத்திரம் கூறும் இந்த விஷயம் நடக்கிறது.

ஆனால் பிறகு நீ பிடிப்புள்ளவனாக மாறிவிடுகிறாய். பிறகு நீ வெளி ஒருவரால், உதாரணமாக 'ஆ' என்பவரால் – 'ஆ'வின் அருகாமையால், நெருக்கத்தால், 'ஆ'வின் அன்பால், இந்த ஆசீர்வாதம் நிகழ்ந்ததாக நீ நினைக்கிறாய். அப்போது நீ யோசிக்கிறாய், ''நான் 'ஆ'வை உடைமையாக்கிக் கொள்ள வேண்டும். ஏனெனில் 'ஆ' இல்லாமல் நான் மறுபடியும் இந்த ஆசிர்வாதத்தை அடைய முடியாமல் போகலாம்.'' நீ பொறாமை கொள்கிறாய். வேறு யாரோ ஒருவர் 'ஆ'வை உடைமையாக்கிக் கொண்டால் அப்போது அவர் ஆனந்தமடைந்து விடுவார், மேலும் நீ துன்பப்படுவாய் என்று நினைப்பதால், நீ 'ஆ'வை வேறு எவரும் உடைமையாக்கிக் கொள்ளும் எல்லா சாத்தியங் களையும் நீக்கிவிட விரும்புகிறாய். 'ஆ' உனக்கு மட்டுமே உடைமையாய் இருக்க வேண்டும். ஏனெனில் அவர் மூலமாக நீ வேறு ஒரு உலகத்தை சுவைத்து விட்டாய். ஆனால் நீ உடைமை யாக்கிக் கொள்ள முயற்சிக்கும் கணத்திலேயே நீ முழு அழகை யும், முழு நிகழ்வையும் அழித்து விடுவாய்.

அன்பு கொண்டவரை உடைமையாக்கும் பொழுதே, அன்பு போய்விட்டது. பிறகு அன்பு கொண்டவர் வெறும் ஒரு பொருள்தான். நீ அதைப் பயன்படுத்தலாம், ஆனால் ஒரு போதும் அந்த ஆசிர்வாதம் திரும்ப வராது. ஏனெனில் அந்த ஆசிர்வாதம், அடுத்தவர் ஒரு ஆளாக இருக்கும் போது வருவது. அந்த அடுத்த ஆள் உருவாக்கப்பட்டவர், ஏற்படுத்தப்பட்டவர்,

அடுத்தவரிடம் நீயே ஆளை உருவாக்கினாய், அந்த அடுத்தவரே உன்னிடம் ஆளை உருவாக்கினார். இருவரும் பொருளல்ல. இருவரும் அகத்தின் சந்திப்பு – இரு ஆட்களின் சந்திப்பு – ஒரு ஆள் மற்றும் ஒரு பொருள் சந்தித்துக் கொள்வதல்ல.

ஆனால் நீ உடைமையாக்கிக் கொள்ளும் கணமே, இது சாத்தியமற்றதாகி விடும். மேலும் மனம் உடைமையாக்கிக் கொள்ளவே முயற்சிக்கும். ஏனெனில் மனம் பேராசையின் அடிப்படையிலேயே யோசிக்கும்: ''ஒரு நாள் ஆனந்தம் நிகழ்ந்தது, எனவே அது எனக்குத் தினமும் நடக்க வேண்டும். அதற்கு நான் கண்டிப்பாக உடைமையாக்கிக் கொள்ள வேண்டும்.'' ஆனால் இந்தப் பேரானந்தம், உடைமையற்ற தன்மையாலேயே நிகழ்ந்தது. மேலும் இந்தப் பேரானந்தம் நிகழ்வதற்குக் காரணம் உண்மையில் அடுத்தவர் அல்ல, உன்னாலேயே இது நிகழ்ந்தது. இதை நினைவில் கொள், பேரானந்தம் உன்னால் ஏற்படுகிறது. நீ அடுத்தவரிடம் அந்த அளவு மூழ்கியிருப்பதால், பேரானந்தம் நிகழ்கிறது.

அது ஒரு ரோஜாப்பூவுடன் ஏற்பட முடியும், அது ஒரு பாறையுடன் ஏற்பட முடியும், அது மரங்களுடன் ஏற்பட முடியும், அது எதனுடனும் ஏற்பட முடியும். அது ஏற்படும் சூழலை ஒரு முறை நீ அறிந்துவிட்டால், அது எங்கு வேண்டு மானாலும் நிகழ முடியும். நீ இல்லாமல் போவதை நீ அறியும் பொழுது, மேலும் ஆழமான அன்பில் உனது உணர்வு நிலை அடுத்தவரிடம் போய்விட்ட போது – ஒரு மரத்திடம், ஆகாயத்திடம், ஒரு நட்சத்திரத்திடம், ஏதாவது ஒன்றிடம்; உனது முழு உணர்வும் அடுத்தவரை நோக்கியதாக இருக்கும் பொழுது அது உன்னை விட்டுவிடுகிறது, அது உன்னை விட்டுவிட்டுச் சென்று விடுகிறது – அந்த உனது சுயம் இல்லாத நிலையில் ஆசிர்வாதம் இருக்கிறது.

## 19. உனது புட்டத்தில் மட்டும் உட்காரு.

ஏழாவது மையம் கொள்ளும் யுக்தி: ''பாதம் அல்லது கைகளின் துணையில்லாமல், புட்டத்தில் மட்டும் உட்காரு. திடீரென, மையம் கொள்வாயாக.''

இந்த யுக்தி சைனாவில் பல நூற்றாண்டுகளாக தாவோவின ரால் பயன்படுத்தப்பட்டு வருகிறது, இது ஒரு ஆச்சரியமான யுக்தி – மிகவும் எளிதானவற்றில் ஒன்று. இதை முயற்சி செய்: ''பாதம் அல்லது கைகளின் துணையில்லாமல், புட்டத்தில் மட்டும் உட்காரு. திடீரென, மையம் கொள்வாயாக.''

செய்ய வேண்டியது என்ன? உன்னிடம் இரண்டு விஷயங் கள் இருக்க வேண்டும். முதலில், மிகவும் நுட்பமான உணர் வுடைய உடல், அது உனக்குக் கிடையாது. உன்னிடம் இறந்த உடலே இருக்கிறது; அதை ஒரு சுமையாக நீ வைத்துக் கொண் டிருக்கிறாய் – நுட்பமான உணர்ச்சியுடையதல்ல அது. முதலில் உனது உடலை நுண்ணிய உணர்ச்சியுடையதாக ஆக்க வேண்டும், இல்லாவிட்டால் இந்த யுக்தி வேலை செய்யாது. எனவே முதலில் நான் உனது உடம்பை அதிக உணர்வுடையதாக ஆக்குவது பற்றிச் சொல்கிறேன். குறிப்பாக உனது புட்டத்தை, ஏனெனில் சாதாரணமாக உனது உடம்பிலேயே மிகவும் உணர்ச்சியில்லாத பாகமாக உன்னுடைய புட்டங்கள் உள்ளன. அவை அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனெனில் நீ நாள் முழுவதும் உனது புட்டங்களின் மேல் உட்கார்ந்து கொண்டிருக் கிறாய். அவை மிகவும் உணர்வோடிருந்தால், இது சிரமமாகி விடும்.

எனவே உனது புட்டங்கள் உணர்ச்சியற்று உள்ளன – அவை அப்படி இருக்க வேண்டியுள்ளது. பாதத்தின் அடித் தோலைப் போல, இவை உணர்ச்சியற்று உள்ளன. தொடர்ந்து அவற்றின் மேல் உட்கார்ந்திருக்கிறாய், நீ ஒருபோதும் உனது புட்டங்களின் மீது உட்கார்ந்திருப்பதை உணர்வதில்லை. இதற்கு முன் எப்போதாவது இதை நீ உணர்ந்திருக்கிறாயா? இப்போது நீ உனது புட்டங்களின் மீது உட்கார்ந்திருப்பதை உணர முடியும், ஆனால் இதற்கு முன்பு நீ இதை ஒருபோதும் உணரவில்லை – நீ உனது புட்டங்களின் மீது உன் வாழ்நாள் முழுவதும் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய், ஒருபோதும் அதைப்பற்றிய விழிப்புணர்வு கொள்ளாமல். அவற்றின் வேலை அப்படி, அவை மிகவும் உணர்ச்சியுடையதாக இருக்க முடியாது.

எனவே முதலில் நீ அவற்றை நுட்ப உணர்வுடையதாக ஆக்க வேண்டும். ஒரு மிகவும் சுலபமான முறையை முயற்சி செய்.... மேலும் இந்த முறையை உடம்பின் எந்தப் பாகத்திற்கும் செய்யலாம்; அப்போது உடல் நுட்ப உணர்வுடையதாக, அதிக உணர்வுடையதாக மாறும். ஒரு நாற்காலியில் உட்கார், தளர்வாக உட்கார், பின் உனது கண்களை மூடு. உனது இடது கையை அல்லது வலது கையை உணரு – ஏதாவது ஒன்றை. உனது இடது கையை உணரு. முழு உடம்பையும் மறந்துவிடு, வெறும் இடது கையை மட்டும் உணரு. நீ அதை அதிகமாக உணருமளவு அது அதிக பளுவாக மாறும்.

தொடர்ந்து இடது கையை உணரு. முழு உடம்பையும் மறந்துவிட்டுத் தொடர்ந்து இடது கையையே உணரு, நீ வெறும் இடது கை மட்டும் தான் என்பது போல. அந்தக் கை மேலும், மேலும் பளுவானதாக ஆகிக் கொண்டே போகும். அது தொடர்ந்து பளுவானதாக ஆகிக் கொண்டே இருக்கையில், நீ அதை மேலும் மேலும் பளுவானதாக உணர்ந்து கொண்டே போ. அப்போது கையில் என்ன நிகழ்கிறது என்று உணர முயற்சி செய். எந்த உணர்ச்சியாயிருந்தாலும், குறித்துக் கொள்; எந்த உணர்ச்சி, எந்தக் குலுக்கல், எந்தச் சிறிய அசைவானாலும், இது நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்று உன் மனத்தில் குறித்துக் கொள். மேலும் இதைத் தினந்தோறும் குறைந்தது மூன்று வாரங்களுக்கு இடைவிடாமல் செய்து வா. பகலில் ஏதோ ஒரு நேரத்தில், பத்து நிமிடம், பதினைந்து நிமிடங்களுக்கு இதைச் செய். இடது கையை மட்டும் உணரு, முழு உடம்பையும் மறந்துவிடு.

மூன்று வாரங்களில் நீ ஒரு புதிய இடது கை அல்லது வலது கை உனக்கு வந்துவிட்டதாக உணர்வாய். அது அந்த அளவு நுட்பமான உணர்வோடிருக்கும். மேலும் நீ உனது கையில் ஏற்படும் மிக மிகச் சிறிய, நுண்ணிய உணர்வுகளைக் கூட உணர்வாய்.

நீ உனது கைகளிடம் வெற்றி கண்ட பிறகு, புட்டங்களிடம் முயற்சி செய். பிறகு முயற்சி செய்: உனது கண்களை மூடிக்

கொள், வெறும் இரண்டு புட்டங்கள் மட்டுமே இருப்பதாக உணரு; நீ அங்கு இல்லை. உனது முழு உணர்வும் புட்டங்களுக்குப் போய் விடட்டும். இது சிரமமானது இல்லை. நீ முயற்சித்தால், இது ஆச்சரியப்பட வைக்கும். மேலும் இதனால் உடம்புக்கு வரும் உயிர்த்துடிப்பு உணர்வே மிகவும் ஆனந்தமானது. பிறகு நீ புட்டங்களை உணர முடிகையில், அவை மிகவும் நுட்ப உணர்வு உள்ளவையாக மாறுகையில் உள்ளே நடக்கும் எதையும் நீ உணர முடிகையில் – ஒரு சிறிய அசைவு, ஒரு சிறிய வலி அல்லது எதுவானாலும் – அப்போது நீ ஆழ்ந்து கவனிக்க முடியும், நீ அறிந்து கொள்ள முடியும். அப்போது உனது உணர்வு நிலை புட்டங்களோடு இணைந்து விடுகிறது.

முதலில் கையுடன் முயற்சி செய். ஏனெனில் கை மிகவும் உணர்வுள்ளது, சுலபமானது. உனது கையை நீ நுட்ப உணர்வு உள்ளதாக மாற்றும் தன்னம்பிக்கை பெற்றுவிட்டால், இது உனது புட்டங்களை நுட்ப உணர்வு உள்ளதாக்க உதவுகிறது. பிறகு இந்த யுக்தியைச் செய். எனவே உனக்கு இந்த யுக்திக்குள் நுழைவதற்கு முன் ஆறு வாரங்களாவது வேண்டும் – உனது கைகளுக்கு மூன்று வாரங்களும் பிறகு உனது புட்டங்களுக்கு மூன்று வாரங்களும் – அவைகளை மேலும் மேலும் அதிக நுட்ப உணர்வு உடையதாகச் செய்வதற்கு வேண்டும்.

படுக்கையில் படுத்துக் கொண்டு முழு உடம்பையும் மறந்துவிடு. வெறும் இரண்டு புட்டங்கள் மட்டுமே இருப்பதாக நினைவு கொள். தொடுதலை உணரு – படுக்கை விரிப்பு, குளிர்ச்சி அல்லது மெதுவாக வரும் கதகதப்பு – இதை உணரு. உனது பாத்ரூம் தொட்டியில் படுத்துக் கொண்டு உடம்பை மற. புட்டங்களை மட்டும் நினைவு கொள் – உணரு. ஒரு சுவரோடு உன்னுடைய புட்டங்கள் மட்டும் அதைத் தொட்டுக் கொண்டிருக்குமாறு சேர்ந்து நில் – அந்த சுவற்றினுடைய குளிர்ச்சியை உணரு. உனது அன்பிற்குரியவருடன், உனது மனைவி அல்லது கணவருடன் புட்டமும் புட்டமும் ஒட்டியிருக்குமாறு நில் – அந்த மற்றொருவரை புட்டங்களின் மூலமாக உணரு. இது உனது

புட்டங்களை உருவாக்குவதற்காக மட்டுமே, அவற்றை உணர ஆரம்பிக்கும் ஒரு சூழலுக்குக் கொண்டு வருவதற்காக.

பிறகு இந்த யுக்தியைச் செய்: ''பாதம் மற்றும் கைகளின் துணையில்லாமல் புட்டத்தில் மட்டும் உட்காரு.'' புத்தரின் ஆசனம் சரியாக இருக்கும், பத்மாசனம் சரியாக இருக்கும். அல்லது சித்தாசனம் சரியாக இருக்கும் அல்லது எந்தச் சாதாரண ஆசனமாய் இருந்தாலும் சரிதான். ஆனால் உனது கைகளைப் பயன்படுத்தாமல் இருப்பது நல்லது. வெறும் புட்டங்களின் மேல் மட்டும் இரு, புட்டங்களின் மேல் மட்டும் உட்காரு. பிறகு என்ன செய்வது? உனது கண்களை மூடு. புட்டங்கள் தரையைத் தொடுவதை உணரு. புட்டங்களின் நுட்ப உணர்வு பெற்று விட்டதால் நீ ஒரு புட்டம் அதிகமாக அழுத்திக் கொண்டிருப்பதை உணர்வாய். ஒரு புட்டத்தின் மேல் நீ சாய்ந்திருக்கிறாய், அதனால் மற்றொன்று குறைவாகத் தொட்டுக் கொண்டிருக்கிறது. இப்போது மற்றொன்றின் பக்கம் சாய். உடனடியாக மறுபக்கம் நகரு; பிறகு திரும்பவும் மற்றொன்றுக்கு நகரு. ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு மாறிக் கொண்டே இரு, அப்போது கொஞ்சம் கொஞ்சமாக சமநிலை பெறுவாய்.

சமநிலை என்பதன் அர்த்தம் உனது இரு புட்டங்களும் ஒன்று போலவே உணர வேண்டும். உனது எடை இரண்டு புட்டங்களிலும் ஒரே அளவாக இருக்க வேண்டும். உனது புட்டங்கள் நுட்ப உணர்வோடு இருக்கும் பொழுது இது கடினமாக இருக்காது, நீ இதை உணர்ந்து கொள்ள முடியும். அப்படி உனது புட்டங்கள் இரண்டும் மிகச் சரியாகச் சமநிலை அடைகையில் ''திடீரென்று மையம் கொள்வாயாக.'' சமநிலையில், திடீரென்று நீ உனது நாபி மையத்திற்கு வீசப் படுவாய், நீ உள்ளே மையம் கொள்வாய். நீ புட்டங்களை மறந்து விடுவாய், நீ உடம்பை மறந்துவிடுவாய். நீ உள் மையத்தினுள் வீசப்படுவாய்.

இதனால் தான் நான் மையங்கள் அர்த்தமுள்ளவை அல்ல என்று சொல்கிறேன், ஆனால் மையம் கொள்ளுதல் – அது

நிகழ்வது இதயத்திலானாலும், அல்லது தலையிலானாலும் அல்லது புட்டங்களில் ஆனாலும் அல்லது வேறு எங்காய் இருந் தாலும் – அதுவே அர்த்தமுள்ளது. நீ புத்தர் உட்கார்ந்திருப்பதைப் பார்த்திருக்கிறாய். நீ அவர்கள் தங்களுடைய புட்டங்களைச் சமநிலைப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்று கற்பனை செய்திருக்க மாட்டாய். நீ கோவிலுக்குப் போகிறாய், அங்கு மகாவீரர் உட்கார்ந்திருப்பதை புத்தர் உட்கார்ந்திருப்பதைப் பார்க் கிறாய்; இப்படி உட்கார்ந்திருப்பது புட்டங்களைச் சமநிலைப் படுத்துவதற்காகவே என்று நீ ஒருபோதும் கற்பனை செய்திருக்க மாட்டாய். ஆனால் அது அப்படித் தான் – மேலும் சமநிலை அங்கு ஏற்படும்போது திடீரென்று அந்தச் சமநிலை உனக்கு மையம் கொள்ளுதலைக் கொடுக்கிறது.

## *20. ஓடும் வாகனத்தில் தியானம் செய்வது எப்படி?*

எட்டாவது மையம் கொள்ளும் யுக்தி: ''ஒரு ஓடும் வாகனத்தினுள், ஒரே சீராகச் சாய்ந்தாடுகையில், அனுபவத்தைப் பெறுவாயாக. அல்லது நிற்கும் வாகனத்தினுள் மெதுவான கண்ணிற்குத் தெரியாத வட்டங்களில் ஆட விட்டு விடும் பொழுது.''

இது அதுவேதான் வேறொரு வழியில். ''நகரும் வாகனத்தினுள்...'' நீ ஒரு ரயிலில் அல்லது ஒரு மாட்டு வண்டியில் பயணம் செய்கிறாய் – இந்த யுக்தி கண்டு பிடிக்கும் பொழுது மாட்டு வண்டி மட்டுமே இருந்தது. நீ ஒரு மாட்டு வண்டியினுள் இந்திய ரோட்டில் போய்க் கொண்டிருக்கிறாய் – இன்றும் கூடப் பாதை அதுவே தான். ஆனால் நீ அப்படிப் போகும் பொழுது, உன்னுடைய முழு உடம்பும் ஆடுகிறது. அப்போது அது பயனற்றது.

''ஒரு ஓடும் வாகனத்தினுள் ஒரே சீராகச் சாய்ந் தாடுகையில்....'' சீராகச் சாய்ந்தாட வேண்டும். புரிந்து கொள்ள முயற்சி செய், இது மிகவும் நுட்பமானது. எப்பொழுதும் நீ ஒரு மாட்டு வண்டியிலோ அல்லது வேறு வாகனத்திலோ

போகும் பொழுது நீ போராடுகிறாய். மாட்டு வண்டி இடது பக்கம் சாய்கிறது. ஆனால் நீ அதை எதிர்த்துப் போராடுகிறாய். நீ சமப்படுத்துவதற்காக வலது பக்கம் சாய்கிறாய்; இல்லா விட்டால் நீ விழுந்துவிடுவாய். எனவே நீ இடைவிடாது போராடிக் கொண்டிருக்கிறாய். ஒரு மாட்டு வண்டியினுள் உட்கார்ந்து கொண்டு நீ அதன் அசைவுகளை எதிர்த்துச் சண்டை யிட்டுக் கொண்டிருக்கிறாய். அது இந்தப் பக்கம் சாய்கிறது. அப்போது நீ அந்தப் பக்கம் சாய்கிறாய்.

இதனால் தான் ஒரு ரயிலில் உட்கார்ந்திருக்கும் பொழுது நீ களைப்படைகிறாய். நீ எதுவும் செய்து கொண்டு இருப்பது இல்லை. பின் ஏன் இவ்வளவு களைப்பு உனக்கு? உனக்குத் தெரியாமலே நீ நிறைய செய்து கொண்டிருக்கிறாய். நீ ரயிலுடன் இடைவிடாது சண்டை போட்டுக் கொண்டிருக்கிறாய்; அங்கு போராட்டம் இருக்கிறது. எதிர்த்துப் போராடாதே – இது தான் முதல் விஷயம். நீ இந்த யுக்தியைச் செய்ய விரும்பினால், போராடாதே. பதிலாக, அசைவுகளோடு நீயும் அசை, அசைவு களோடு சாய்ந்தாடு. மாட்டு வண்டியின் பாகமாக மாறிவிடு, அதனுடன் போராடாதே. பாதையின் மேல் மாட்டு வண்டி எப்படிப் போனாலும் அதனுடைய பாகமாக மாறிவிடு. இதனால் தான் குழந்தைகள் பயணம் செய்வதில் ஒருபோதும் களைப் படைவது இல்லை.

பூனம் தனது இரு குழந்தைகளுடன் லண்டனில் இருந்து இப்போது தான் வந்தாள், அவர்களுக்கு உடம்பு சரியில்லாமல் போய்விடும் என்று அவள் பயந்தாள், அவர்கள் இந்த நீண்ட பயணத்தினால் களைப்படைந்து விடுவார்கள் என்று எண்ணி னாள். ஆனால் அவள் களைப்படைந்து விட்டாள், குழந்தைகள் சிரித்துக் கொண்டு வந்தனர். அங்கு இங்கு வந்து சேர்ந்த பொழுது முற்றிலும் களைப்படைந்து விட்டாள். அவள் என்னுடைய அறையில் நுழைந்தபோது அவள் முற்றிலும் சோர்வடைந்து போயிருந்தாள், ஆனால் இரண்டு குழந்தைகளும் அங்கேயே அப்போதே விளையாட ஆரம்பித்து விட்டார்கள்.

லண்டனிலிருந்து பம்பாய் வரும் பதினெட்டு மணி நேர நீண்ட பயணத்தால் அவர்கள் சிறிது கூடக் களைப்படையவில்லை. ஏன்? ஏனெனில் எப்படிப் போராடுவது என்று அவர்களுக்கு இன்னும் தெரியாது.

எனவே ஒரு குடிகாரன் ஒரு மாட்டு வண்டியினுள் இரவு முழுவதும் பயணம் செய்ய முடியும், காலையில் அவன் எப்பொழுதும் போல உற்சாகமாய் இருப்பான், ஆனால் உன்னால் முடியாது. இது ஏனெனில் ஒரு குடிகாரன் போராட முடியாது. அவன் வண்டியுடன் அசைவான்; அங்கு சண்டை இருக்காது. அங்கு சண்டையிடுதல் இருக்காது. அவன் ஒன்றி யிருப்பான்.

''ஒரு ஓடும் வாகனத்தினுள், ஒரே சீராகச் சாய்ந்தாடு கையில்....'' எனவே ஒரு விஷயத்தைக் கடைபிடி: போராடாதே. மேலும் இரண்டாவது விஷயம் ஒரு சீரை உருவாக்கு. உனது அசைவுகளில் ஒரு சீரை உருவாக்கு. அதை ஒரு அழகான இசைவாக ஆக்கு. பாதையைப் பற்றி மறந்து விடு; பாதையையும் அரசாங்கத்தையும் சபிக்காதே – அவைகளை மற. மாட்டையோ, மாட்டு வண்டியையோ அல்லது ஓட்டுபவனையோ சபிக்காதே – அவைகளை மற. உனது கண்களை மூடு, போராடுவதை விடு. ஒரே சீராக அசைந்தாடு, உனது அசைவில் ஒரு இசையை உருவாக்கு. அதை ஒரு நடனமாக மாற்று. ''ஒரு ஓடும் வாகனத்தினுள், ஒரே சீராகச் சாய்ந்தாடுகையில் அனுபவத்தைப் பெறுவாயாக.'' அனுபவம் உன்னிடம் வரும் என்று சூத்திரம் சொல்கிறது. ''அல்லது நிற்கும் வாகனத்தினுள்....'' எங்கே ஒரு மாட்டு வண்டி கிடைக்கும் என்று கேட்காதே, உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளாதே. ஏனெனில் சூத்திரம் சொல்கிறது, ''அல்லது நிற்கும் வாகனத்தினுள் மெதுவான கண்ணிற்குத் தெரியாத வட்டங்களில் ஆடவிட்டு விடும் பொழுது.'' இங்கு உட்கார்ந்து கொண்டே ஒரு வட்டமாக ஆடு. முதலில் ஒரு பெரிய வட்டத்தை எடுத்துக் கொள். பிறகு அதை மெதுவானதாக ஆக்கு.... மெதுவானதாக, மெதுவானதாக, அதைச் சிறியதாக

இன்னும் சிறியதாக இன்னும் சிறியதாக ஆக்கு, உனது உடம்பின் அசைவு கண்ணிற்குத் தெரியாத அளவிற்கு வரும் வரை, உனக்குள் ஒரு நுட்பமான அசைவை உணர வேண்டும்.

பெரிய வட்டத்துடன் ஆரம்பி, கண்களை மூடிக் கொண்டு. இல்லாவிட்டால் உடம்பு நிற்கும் பொழுது நீயும் நின்று விடுவாய். கண்களை மூடிக் கொண்டு பெரிய வட்டங்கள் போட ஆரம்பி; உட்கார்ந்து கொண்ட நிலையிலேயே ஒரு வட்டமாக ஆடு. ஆடிக் கொண்டே போ, அந்த வட்டத்தை மேலும் மேலும் சிறியதாக்கிக் கொண்டே போ. கண்ணால் பார்க்கும் பொழுது நீ நிறுத்தியிருப்பாய்; நீ இன்னும் ஆடிக் கொண்டிருக்கிறாய் என்று எவரும் கண்டுபிடிக்க முடியாது. ஆனால் உள்ளே நீ ஒரு நுட்பமான அசைவை உணர்வாய். இப்போது உடம்பு அசைவ தில்லை. மனம் மட்டுமே அசைகிறது. இதை மேலும் மேலும் மெதுவாக்கு, அப்போது அனுபவத்தைப் பெறு. இது ஒரு மையம் கொள்ளுதலாக மாறும். ஒரு வாகனத்தில் ஒரு ஓடும் வாகனத்தினுள் போராடாத ஒரே சீரான அசைவு ஒரு மையம் கொள்ளுதலை உனக்கு உருவாக்கும்.

குருட்ஜிப் இது போன்ற யுக்திகளுக்காகப் பல நடனங் களை உருவாக்கினார். அவர் இந்த யுக்தியைக் கொண்டு வேலை செய்தார். அவர் அவரது பள்ளியில் பயன்படுத்திய எல்லா நடனங்களும் உண்மையில் வட்டங்களாகச் சாய்ந்தாடுவதே ஆகும். எல்லா நடனங்களும் வட்டங்களாகவே இருந்தன - வெறும் சுழலுதல். ஆனால் உள்ளுக்குள் விழிப்புணர்வுடன் இருத்தல், கொஞ்சம் கொஞ்சமாக வட்டங்களை மேலும் மேலும் சிறியதாக ஆக்குதல். உடம்பு நிற்கும் நேரம் ஒன்று வரும், ஆனால் மனம் உள்ளே தொடர்ந்து போய்க் கொண்டே இருக்கும்.

இருபது மணி நேரம் ரயிலில் பயணம் செய்து கொண்டு இருந்தால், நீ வீட்டிற்குத் திரும்பி வந்த பிறகும், நீ ரயிலை விட்டு வந்த பிறகும், நீ உனது கண்களை மூடினால் நீ இன்னும் பயணம் செய்து கொண்டு இருப்பதைப் போலவே நீ உணர்வாய்.

இன்னும் நீ பயணம் செய்து கொண்டிருக்கிறாய். உடம்பு நின்று விட்டது. ஆனால் மனம் இன்னும் வாகனத்தை உணர்ந்து கொண் டிருக்கிறது. எனவே இந்த யுக்தியை முயற்சி செய்.

குருட்ஜிப் குறிப்பிடத்தக்க நடனங்களை மிகவும் அழகானவற்றை உருவாக்கினார். இந்த நூற்றாண்டில் அவர் அற்புதங்களைச் செய்தார். சத்திய சாயிபாபா செய்வது போன்ற அற்புதங்கள் அல்ல. சாயிபாபா செய்பவை அற்புதங்கள் அல்ல. தெருவோர மாஜிக் செய்பவன் எவனும் அவைகளைச் செய்ய முடியும். ஆனால் குருட்ஜிப் உண்மையிலேயே அற்புதங்களை உருவாக்கினார். அவர் தியான நடனமாடும் நூறு மக்களைக் கொண்ட ஒரு குழுவைத் தயார் செய்தார். மேலும் அந்த நடனத்தை முதன்முறையாக நியூயார்க் நகரில் பார்வையாளர்கள் முன்பு நடத்திக் காட்டினார். நடனமாடுபவர்கள் நூறு பேர் மேடையின் மீது சுழன்று கொண்டிருந்தனர். பார்வையாளர்களாக இருந்தவர்களின் மனங்களும் கூட சுழல ஆரம்பித்தது. மேடை யில் நடனமாடும் நூறு பேர், வெள்ளை அங்கி அணிந்தவர்கள், சுழன்று கொண்டு இருந்தார்கள்.

அவர் கை அசைத்த போது அவர்கள் சுழலுவார்கள், அவர் 'நிறுத்து' என்று சொல்லும் கணத்தில் அங்கு ஆழமான அமைதி ஏற்படும். அது பார்ப்பவர்களுக்கு ஒரு நிறுத்தம், ஆனால் நடன மாடுபவர்களுக்கு அல்ல – ஏனெனில் உடலால் உடனடியாக நிற்க முடியும். ஆனால் அதன்பின் மனம் அந்த அசைவை உள்ளே எடுத்து சென்று விடுகிறது; அது தொடர்ந்து போய்க் கொண்டிருக்கும். பார்ப்பதற்குக் கூட இது அழகாக இருக்கும். ஏனெனில் நூறு பேர் திடீரென்று உயிரற்ற சிலைகளாக மாறி விடுகின்றனர். இது பார்வையாளர்களுக்கும் ஒரு திடீர் அதிர்ச்சியை ஏற்படுத்தியது, ஏனெனில் நூறு அசைவுகள் – அழகான அசைவுகள், ஒரே சீரான அசைவுகள் – திடீரென நிறுத்தப்படுகிறது. அவர்கள் அசைவுகளை, சுழல்வதை, ஆடுவதை நீ பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது திடீரென ஆடுபவர்கள் நின்று விடுகின்றனர். அப்போது உன்னுடைய எண்ணங்களும் நின்று விடும்.

நியூயார்க் நகரத்தில் பலரும் இதை அசாதாரணமான நிகழ்வாக உணர்ந்தார்கள், அவர்களது எண்ணங்கள் உடனடியாக நின்று போனதை. ஆனால் நடனமாடுபவர்களுக்கு நடனம் உள்ளே தொடர்கிறது. மேலும் உள் சுழற்சி வட்டங்கள் சிறியதாகிக் கொண்டே போகின்றன, அவர்கள் மையம் கொள்ளும்வரை.

ஒருநாள் அவர்கள் நடனமாடிக் கொண்டே மேடையின் விளிம்பிற்கு வந்து கொண்டிருந்தனர். அவர்கள் அங்கிருந்து விழுந்து விடுவதற்கு முன் குருட்ஜிப் அவர்களை நிறுத்துவார் என்பது எதிர்பார்க்கப்பட்டது, கருதப்பட்டது. நடனமாடு பவர்கள் நூறு பேர் மேடையின் விளிம்பிற்கு வந்துவிட்டார்கள். ஒரு அடி மேலே எடுத்து வைத்தால் அவர்கள் அனைவரும் அந்த அரங்கத்தின் தரையில் விழுந்து விடுவார்கள். முழு அரங்கமும் குருட்ஜிப் நிறுத்து என்று சொல்லப் போவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. ஆனால் அவர் தனது சிகரெட்டைப் பற்ற வைப்பதற்காக மறுபுறம் திரும்பிவிட்டார். அவர் நடனமாடுபவர் களுக்குத் தனது முதுகைக் காட்டியபடி சிகரெட்டைப் பற்ற வைக்க திரும்பிவிட்டார். அந்த நடனமாடும் நூறுபேரும் மேடையிலிருந்து தரையில் விழுந்து விட்டனர் - எதனாலும் மூடப்படாத கல் தரை அது.

முழு அரங்கமும் எழுந்து நின்றுவிட்டது. அவர்கள் அலறி, கூச்சலிட்டார்கள். மேலும் பலருக்கு எலும்புகள் உடைந்திருக்கு மென்று நினைத்தார்கள் - அது அப்படிப்பட்ட ஒரு மோதல். ஆனால் ஒருவருக்குக்கூட காயம் படவில்லை; ஒரு சிராய்ப்புகூட ஒருவருக்கும் இல்லை.

அவர்கள் என்ன நடந்தது என்று குருட்ஜிப்பைக் கேட்டனர். ஒருவருக்குக்கூட அடிபடவில்லை. ஆனால் அந்த மோதலைப் பார்க்கும்போது, இது நம்பக் கூடியதாக இல்லை. இதற்குக் காரணம் ஒன்றுதான்: உண்மையில் அவர்கள் அந்தக் கணத்தில் தங்கள் உடம்புகளில் இல்லை. அவர்கள் தங்களுடைய உள் வட்டத்தைச் சிறியதாக்கிக் கொண்டிருந்தனர். அவர்கள் தற்போது தங்களுடைய

உடம்புகளை முழுவதுமாக மறந்து விட்டார்கள் என்பதைப் பார்த்த குருட்ஜிப் அதன்பின் அவர்களைக் கீழே விழுவதற்கு அனுமதித்துவிட்டார்.

நீ உனது உடலை முற்றிலும் மறந்துவிட்டால் அங்குப் போராட்டம் இருக்காது. போராட்டத்தினால்தான் எலும்பு முறிகிறது. நீ கீழே விழும்போது நீ போராடுகிறாய்: நீ புவி ஈர்ப்பின் வேகமான இழுப்பை எதிர்க்கிறாய். இந்த எதிராகச் செயல் படுவதுதான் இந்தப் போராட்டம், பிரச்சனை - புவிஈர்ப்பு விசை அல்ல. உன்னால் புவிஈர்ப்பு விசையுடன் சேர்ந்து கீழே விழ முடியுமானால், நீ அதற்கு ஒத்துழைப்பு கொடுக்க முடியுமானால், அப்போது அடிபடுவது என்ற பேச்சுக்கே இடமில்லை.

இந்தச் சூத்திரம்: ''ஓடும் வாகனத்தினுள் ஒரே சீராக சாய்ந்தாடுகையில் அனுபவத்தைப் பெறுவாயாக. அல்லது நிற்கும் வாகனத்தினுள் மெதுவான கண்ணிற்குத் தெரியாத வட்டங்களில் ஆடவிட்டுவிடும் பொழுது.'' நீ இதைச் செய்ய முடியும். வாகனம் எதுவும் தேவையில்லை. குழந்தைகளைப் போலச் சுழலு. உனது மனம் கிறுகிறுப்பு அடையும் பொழுது, நீ விழுந்து விடுவாய். இப்போது என்று உணரும் பொழுது, நிறுத்தாதே - தொடர்ந்து செய்! நீ விழுந்துவிட்டால்கூட அதைப் பற்றிக் கவலைப்படாதே, உனது கண்களை மூடிக்கொண்டு சுழலு. உனது மனம் சுழன்று கொண்டிருக்கும், நீ கீழே விழுந்து விடுவாய். உனது உடம்பு கீழே விழுந்தவுடன் உள்ளே உணரு! சுழற்சி தொடரும். அது மேலும் மேலும் அருகில் வரும், அப்போது திடீரென நீ மையம் கொள்வாய்.

குழந்தைகள் இதை மிகவும் அனுபவிக்கின்றனர். ஏனெனில் அவர்களுக்கு இது மிகப் பெரிய போதையைக் கொடுக்கிறது. பெற்றோர்கள் ஒருபோதும் குழந்தைகளைச் சுழல அனுமதிப்பதில்லை. இது நல்லதல்ல: அவர்கள் அனுமதிக்கப் பட வேண்டும் - அதற்கும் மேலாக உற்சாகப்படுத்தப்பட வேண்டும். மேலும் நீ அவர்களுக்கு உள் சுழற்சியைப் பற்றியும்.

விழிப்புணர்வு கொடுக்க முடிந்தால் நீ அவர்களுக்கு சுழற்சியின் மூலமாகத் தியானத்தைக் கற்றுக் கொடுக்கலாம். அவர்கள் இதை அனுபவிக்கின்றனர். ஏனெனில் உடலற்ற உணர்வை இது அவர்களுக்குக் கொடுக்கிறது. அவர்கள் சுழலும்போது திடீரென அவர்கள் உடம்பு சுற்றுகிறது. ஆனால் அவர்கள் சுற்றுவதில்லை என்பதைக் குழந்தைகள் உணர்கின்றனர். உள்ளுக்குள் அவர்கள் ஒரு மையம் கொள்ளுதலை உணர்கின்றனர். ஆனால் இது நமக்கு சுலபமாக வருவதில்லை. ஏனெனில் அவர்களது உடம்பும் ஆன்மாவும் இன்னும் சிறிது விலகியே இருக்கின்றன; அங்கு ஒரு இடைவெளி இருக்கிறது.

நீ உனது தாயின் கருப்பைக்குள் வரும்பொழுது நீ உடனடியாக முழுவதும் உடம்பிற்குள் வந்துவிட முடியாது; அதற்குக் காலம் பிடிக்கும். ஒரு குழந்தை பிறக்கும் பொழுது, அப்பொழுதும் கூட அது முழுவதும் பொருந்தி விடுவதில்லை, அதனுடைய ஆன்மா முழுதுமாக உடம்பில் பொருந்தி விடுவ தில்லை; அங்கு இடைவெளிகள் உள்ளன. அதனால் தான் குழந்தையால் பல விஷயங்களைச் செய்ய முடிவதில்லை. அதனுடைய உடம்பு தயாராகவே இருக்கிறது, ஆனாலும் அதனால் செய்ய முடிவதில்லை. நீ ஆழ்ந்து கவனித்திருந்தால் புதிதாகப் பிறந்த குழந்தை இரண்டு கண்களாலும் பார்க்க முடியாது. அது எப்போதும் ஒரு கண்ணாலேயே பார்க்கிறது என்பதை நீ அறிந்திருப்பாய். நீ ஆழ்ந்து கவனித்தால் குழந்தை எதையாவது பார்த்துக் கவனிக்கும் பொழுது அது இரண்டு கண்களாலும் பார்க்க முடியாமல் இருப்பதை நீ பார்க்கலாம். அது எப்பொழுதும் ஒரு கண்ணாலேயே பார்க்கிறது – ஒரு கண் மட்டும் பெரிதாகும். ஒரு கண்ணின் கருவிழி மட்டும் விரியும், மற்றொரு கருவிழி சிறியதாகவே இருக்கும். புதிதாகப் பிறந்த குழந்தையின் உணர்வு நிலை இன்னும் பொருந்தவில்லை. அது தளர்ந்தே இருக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாக அது பொருந்தும். அப்போது குழந்தை இரண்டு கண்களாலும் பார்க்கும். புதிதாகப் பிறந்த குழந்தைகளால் அவற்றின் உடலையும் மற்றவர்களின் உடலையும் இன்னும் வித்தியாசப்படுத்தி உணர முடியாது. அது

சிரமமானது. அந்தக் குழந்தைகள் இன்னும் பொருந்தவில்லை. ஆனால் கொஞ்சம் கொஞ்சமாகப் பொருந்தும்.

தியானம் மறுபடியும் ஒரு இடைவெளியை உருவாக்கு வதற்கான ஒரு முயற்சி. நீ பொருந்தி விட்டாய், உன்னுடைய உடலுடன் இறுக்கமாகப் பொருந்தி விட்டாய். அதனால் தான் நீ, 'இந்த உடலே நான்' என்று உணர்கிறாய். ஒரு இடைவெளியை உருவாக்க முடிந்தால் தான் அப்பொழுது மட்டுமே, நீ வெறும் உடலல்ல, மாறாக உடலைத் தாண்டிய ஏதோ ஒன்று என்பதை உணர்வாய். சாய்ந்தாடுதலும் சுழலுதலும் உதவக் கூடியவை. அவை ஒரு இடைவெளியை உருவாக்கும்.

## 21. உனது உடம்பின் ஒரு வலியின் மேல் கவனத்தைக் குவி.

ஒன்பதாவது மையம் கொள்ளும் யுக்தி : ''அமிர்தம் நிறைந்த உனது உருவத்தின் ஏதாவது ஒரு பகுதியை ஊசியால் குத்து, அப்போது அந்தக் குத்துதலில் இதமாக நுழைந்து அகத்தின் தூய்மையைப் பெறுவாயாக.''

இந்தச் சூத்திரா சொல்கிறது : ''அமிர்தம் நிறைந்த உனது உருவத்தின் ஏதாவது ஒரு பகுதியை ஊசியால் குத்து.....'' உனது உடல் வெறும் உடல் மட்டுமல்ல, அது உன்னால் நிரப்பப் பட்டிருக்கிறது. அந்த நீதான் அமிர்தம். உனது உடலைக் குத்து. நீ உனது உடலைக் குத்தும் போது நீ குத்தப்படுவதில்லை – உடம்பு மட்டுமே குத்தப்படுகிறது. ஆனால் நீயே குத்தப்பட்டது போல நீ உணர்கிறாய்; அதனால்தான் நீ வலியை உணர்கிறாய். உடம்பு மட்டுமே குத்தப்படுகிறது, நீ குத்தப்படுவதில்லை என்ற விழிப்புணர்வை நீ அடைந்தால் வலிக்குப் பதிலாக நீ பரவசத்தை உணர்வாய். ஊசியின் மூலம் இதைச் செய்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. தினந்தோறும் பலவும் நடக்கின்றன; இந்தச் சூழ்நிலைகளை நீ தியானத்திற்குப் பயன்படுத்திக் கொள்ள முடியும். அல்லது நீயே ஒரு சூழ்நிலையை உருவாக்கிக் கொள்ள முடியும்.

உனது உடம்பில் ஏதாவது வலி இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். ஒன்று செய்; முழு உடம்பையும் மறந்து விடு, உடம்பின் வலிக்கும் பகுதியில் மட்டும் உனது கவனத்தைக் குவி. அதன்பின் ஒரு புதுமையான விஷயத்தைத் தெரிந்து கொள்வாய். உனது உடம்பின் வலிக்கும் பகுதியில் நீ உனது கவனத்தைக் குவிக்கும்போது, அந்தப் பகுதி சுருங்குவதை நீ காண்பாய். முதலில் நீ வலியை, வேதனையை உன் முழுக் காலிலும் உணர்ந்தால், நீ கவனத்தைக் குவிக்கும் பொழுது, அது முழுக் காலிலும் இல்லை என்பதை உணர்வாய். அது பெரிது படுத்தப்பட்டது – அது வெறும் முட்டியில் மட்டும் தான் இருக்கிறது.

மேலும் அதிகமாகக் கவனத்தைக் குவி, அப்போது அது முழு முட்டியிலும் இல்லை, மாறாக ஒரு குறிப்பிட்ட புள்ளியில் மட்டுமே என்று உணர்வாய். அந்தப் புள்ளியின் மீது மட்டும் கவனத்தைக் குவி; முழு உடம்பையும் மறந்துவிடு. உனது கண்களை மூடிக் கொண்டு, வலி இருக்கும் இடத்தைத் தேடித் தொடர்ந்து கவனத்தைக் குவித்துக் கொண்டே போ. அது சுருங்கிக் கொண்டே போகும், அந்த இடம் மேலும் மேலும் சிறியதாகிக் கொண்டே வரும். அப்போது அது ஒரு வெறும் புள்ளியாகிவிடும் கணம் ஒன்று வரும். அந்தக் குறிப்பிட்ட புள்ளியையே உற்று நோக்கிக் கொண்டிரு, திடீரென அந்தக் குறிப்பிட்ட புள்ளி மறைந்துவிடும், அப்போது நீ பரவசத்தால் நிறைந்திருப்பாய். வலிக்குப் பதிலாக நீ பரவசத்தால் நிறைந் திருப்பாய்.

இது ஏன் ஏற்படுகிறது? ஏனெனில் நீயும் உனது உடம்பும் ஒன்றல்ல, அவை வேறு வேறானவை. கவனத்தைக் குவிக்கும் ஒருவன்தான் நீ. உடம்பின் மேல் கவனம் குவிக்கப்படுகிறது – அது ஒரு வெளிப்பொருள். நீ கவனத்தைக் குவிக்கும் பொழுது, இடைவெளி அதிகமாகிறது, ஒன்றோடொன்று கொண்டிருக்கும் அடையாளம் உடைகிறது. நீ கவனத்தைக் குவிப்பதற்காக உள்ளே போகிறாய், உடம்பை விட்டு விலகிப் போகிறாய்.

வலிக்கும் இடத்தை உன் பார்வைக்கு உட்படுத்த, நீ உடம்பிலிருந்து விலகிச் செல்கிறாய். அந்த விலகல் ஒரு இடைவெளியை உருவாக்குகிறது. மேலும் நீ வலியின் மீது கவனத்தைக் குவிக்கும் பொழுது, நீ முன்பு கொண்டிருந்த அடையாளத்தை மறந்து விடுகிறாய், நீ, ''எனக்கு வலிக்கிறது'' என்பதை மறந்துவிடுகிறாய்.

இப்போது நீ ஆழ்ந்து பார்த்துக் கொண்டிருப்பவன், அதோடு வலி வேறு எங்கோ இருக்கிறது. நீ வலியை ஆழ்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறாய், வலியை உணர்ந்து கொண்டிருக்க வில்லை. இந்த உணர்விலிருந்து ஆழ்ந்து பார்ப்பதற்கு மாறு கின்ற மாற்றம் இடைவெளியை உண்டாக்குகிறது. மேலும் அந்த இடைவெளி பெரிதாகும் பொழுது, திடீரென நீ உடம்பை முழுவதுமாக மறந்துவிடுகிறாய், நீ உணர்வு நிலை அல்லது பிரக்ஞை நிலையைப் பற்றிய விழிப்புணர்வு மட்டுமே கொண்டிருக்கிறாய்.

நீ இந்த யுக்தியையும் பயன்படுத்தலாம் : ''அமிர்தம் நிறைந்த உனது உருவத்தின் ஏதாவது ஒரு பகுதியை ஊசியால் குத்து, அப்போது அந்தக் குத்துதலில் இதமாக நுழைந்து ....'' உடலில் எங்காவது வலி என்றால் அப்போது முதலில் நீ முழுப் பகுதியிலும் கவனத்தைக் குவிக்க வேண்டும்; பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அது ஒரு குறிப்பிட்ட புள்ளிக்கு வரும்.

ஆனால் அப்படிக் காத்திருக்க அவசியமில்லை. நீ ஒரு ஊசியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஊசியை நுட்ப உணர்வுள்ள ஏதாவது ஒரு பகுதியில் பயன்படுத்திக் கொள். உடம்பில் பல இடங்கள் உணர்வற்ற இடங்கள்; அவை பயன் படாது. உடம்பில் உணர்வற்ற இடங்களைப் பற்றி நீ கேள்விப் படாதிருக்கலாம். அப்படியானால் யாராவது ஒருவரிடம், உன் நண்பரிடம், ஒரு ஊசியைக் கொடுத்து, அவரிடம் உனது முதுகில் பல புள்ளிகளில் ஊசியால் குத்தச் சொல். அப்போது பல புள்ளிகளில் நீ எந்த வலியையும் உணர மாட்டாய். நீ சொல்வாய், ''நீ இன்னும் ஊசியைக் குத்தவில்லை. நான் எந்த வலியையும்

உணரவில்லை.'' இவைகள் உணர்வற்ற இடங்கள். உனது கன்னத்தில் இரண்டு உணர்வற்ற இடங்கள் உள்ளன, அவற்றைச் சோதிக்க முடியும்.

நீ இந்தியக் கிராமங்களுக்குச் சென்றால் மத விழாக்களில் பல சமயங்களில் அவர்கள் தங்களது கன்னத்தை ஒரு சிறு அம்பால் துளைத்துக் கொள்வார்கள். இது பார்ப்பதற்கு ஒரு அற்புதம் போலத் தோன்றும். ஆனால் இது அப்படியல்ல. கன்னங்களில் இரண்டு உணர்வற்ற இடங்கள் உள்ளன. நீ அந்த இடங்களின் மூலம் குத்திக் கொண்டால், ரத்தம் வராது, மேலும் எந்த வலியும் இருக்காது. உனது முதுகில் ஆயிரக்கணக்கான உணர்வற்ற இடங்கள் உள்ளன. அங்கெல்லாம் நீ எந்த வலியையும் உணர மாட்டாய். உனது உடலில் இரண்டு வகையான இடங்கள் உள்ளன – நுட்ப உணர்வுடைய உயிர்த் துடிப்புள்ள இடங்கள் மற்றும் உணர்வற்ற இடங்கள். எனவே ஒரு நுட்ப உணர்வுள்ள இடத்தை, லேசாகத் தொடுவதைக் கூட நீ உணரும் இடத்தைக் கண்டுபிடி. பிறகு ஊசியால் குத்து. பிறகு குத்துதலில் நுழை. இது தான் விஷயம்; இதுதான் தியானம். ''குத்துதலில் இதமாக நுழைந்து....'' ஊசி உள்ளே நுழையும் போது உனது தோலினுள் புகும்போது நீ வலியை உணரும் போது, நீயும் நுழை. உனக்குள் வலி நுழைவதாக உணராதே; வலியை உணராதே, அதனுடன் அடையாளம் கொள்ளாதே. ஊசியுடன் நுழை. ஊசியுடன் குத்துதலாக நுழை.

உனது கண்களை மூடு; வலியை ஆழ்ந்து பார். வலி குத்துதலில் உள்ளே போகும் பொழுது நீயும் உனக்குள் குத்திக் கொண்டு போ. மேலும் ஊசி உன்னைத் துளைக்கும் பொழுது உனது மனத்தால் சுலபமாக கவனத்தை குவிக்க முடியும். அந்தப் புள்ளியின் வலியை, ஆழமான வலியைப் பயன்படுத்து, மேலும் அதை ஆழந்து பார். இதுதான், 'குத்துதலில் இதமாக நுழைந்து' என்பதன் அர்த்தம்.

'அகத்தின் தூய்மையைப் பெறுவாயாக' நீ ஆழ்ந்து பார்த்துக் கொண்டிருப்பவனாக, அடையாளம் கொள்ளாதவ

னாக, சம்பந்தப்படாதவனாக, தூரத்தில் விலகி நிற்பவனாக, வலி உனக்கு ஏற்படுவதாக உணராதவனாக நுழைய முடிந்தால், அதே சமயம் ஊசி உடம்பைத் துளைப்பதைப் பார்த்துக் கொண்டு நீ பார்வையாளனாக மட்டும் இருந்தால், நீ அகத்தின் தூய்மையைப் பெறுவாய்; அகத்தின் வெகுளித் தன்மை உன்னிடம் வெளிப்படும்.

முதல் தடவையாக நீ உடல் அல்ல என்ற விழிப்புணர்வை நீ பெறுவாய். மேலும் ஒரு முறை நீ உடம்பல்ல என்பதை அறிந்து விட்டால் உன்னுடைய வாழ்க்கை முற்றிலும் மாறி விடும். ஏனெனில் உன்னுடைய முழு வாழ்க்கையும் இப்போது உடம்பைச் சுற்றியே உள்ளது. ஒரு முறை நீ உடம்பல்ல என்பதை நீ அறிந்து விட்டால், நீ இந்த வாழ்க்கையைத் தொடர முடியாது. மையத்தை இழந்து விட்டாய்.

நீ உடம்பு அல்ல என்கிற பொழுது, நீ வேறு ஒரு வாழ்க்கையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். அந்த வாழ்க்கை தான் சன்னியாச வாழ்க்கை. அது வேறு வாழ்க்கை; இப்போது மையம் வேறு. இப்போது இந்த உலகத்தில் நீ ஒரு ஆன்மாவாக இருக்கிறாய், ஒரு உடம்பாக அல்ல. நீ ஒரு உடம்பாக இருந்தால், அப்போது நீ ஒரு உலகத்தை உருவாக்கிக் கொள்கிறாய் : பொருளீட்டுதல், பேராசை, காமம், பாலுணர்ச்சி, சுயநலம். நீ உன்னைச் சுற்றி ஒரு உலகத்தை உருவாக்கிக் கொள்கிறாய்; இது உடல் அடிப்படையிலான உலகம்.

ஒரு முறை நீ உடம்பு அல்ல என்று அறிந்து விட்ட பின், உன்னுடைய முழு உலகமும் மறைந்து விடுகிறது. நீ இனிமேல் அதைத் தாங்கிப் பிடிக்க முடியாது. வேறு ஒரு உலகம், ஆன்மாவைச் சுற்றியுள்ள உலகம் எழுகின்றது – கருணையின் உலகம், அன்பின், அழகின், சத்தியத்தின், நல்லதின், வெகுளித் தனத்தின். மையம் மாறிவிட்டது, அது இப்போது உடம்பில் இல்லை. அது உணர்வு நிலையில் உள்ளது.

இன்று இது போதும்.

## கேள்விகள்

- ஏன் பேரண்ட இயக்க உணர்வு நிலை – சமாதி – மையம் கொள்ளுதல் என்று அழைக்கப்படுகிறது?
- ''அன்பு மட்டுமே போதும்'' தியானம் தேவையில்லை என்பதை மேலும் விளக்குக.
- ஏன் மனிதன் உணர்வற்று இருக்கிறான்?

★★★

*முதல் கேள்வி:*

❖ ***ஞானமடைவது அல்லது சமாதி என்பதன் அர்த்தம் முழு உணர்வு நிலை, பேரண்ட உணர்வு நிலை, எங்கும் நிறைந்திருக்கும் உணர்வு நிலை என்றால், அப்போது இந்தப் பேரண்ட உணர்வு நிலையை 'மையம் கொள்ளுதல்' என்று அழைப்பது மிகவும் ஆச்சரியத்தைத் தருகிறது. ஏனெனில் மையம் கொள்ளுதல் என்ற சொல் ஒரு புள்ளியாதல் என்பதையே குறிக்கிறது. ஏன் பேரண்ட உணர்வு நிலை அல்லது சமாதி 'மையம் கொள்ளுதல்' என்று அழைக்கப்படுகிறது?***

மையம் கொள்ளுதல் என்பது வழி அடையுமிடம் அல்ல. மையம் கொள்ளுதல் என்பது முறை. விளைவு அல்ல. சமாதி நிலை மையம் கொள்ளுதல் என்று அழைக்கப்படுவதில்லை; மையம் கொள்ளுதல் என்பது சமாதி நிலைக்கு ஒரு யுக்தி. அவை முரண்பட்டவையாகவே தெரியும். ஏனெனில் ஒருவன் உணர்வடையும்போது, ஞானமடையும்போது, அங்கு எந்த மையமும் இருப்பதில்லை.

ஜோகப் பொஹிமி கூறியுள்ளார். அதாவது ஒருவன் தெய்விகத்தை அடையும் பொழுது அதை இரண்டு வழிகளில் விவரிக்க முடியும்: இப்போது எல்லா இடத்திலும் மையம் இருக்கிறது என்றோ அல்லது எங்குமே மையம் கிடையாது என்றோ சொல்லலாம்; இரண்டின் அர்த்தமும் ஒன்றுதான். எனவே 'மையம் கொள்ளுதல்' என்ற சொல் முரண்பாடாகத் தெரியலாம். ஆனால் பாதை அடையுமிடமல்ல. முறை விளைவு அல்ல. மேலும் முறை முரண்பட்டதாக இருக்கலாம். எனவே இதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளும் மையம் கொள்வதற்கான முறைகளே ஆகும்.

ஆனால் ஒரு முறை நீ மையம் கொண்டு விட்டால் நீ வெடித்து விடுவாய். மையம் கொள்ளல் உன்னை முழுவதுமாக ஒரே

புள்ளியில் சேர்ப்பதற்காகத்தான். நீ அப்படி ஒரு புள்ளியில் ஒன்று சேர்ந்து விட்டால், ஒரு புள்ளியில் ஸ்படிகமாக இறுகி விட்டால், அந்தப் புள்ளி தானாகவே வெடித்துவிடும். பிறகு எந்த மையமும் அங்கில்லை. அல்லது பிறகு மையம் எங்கும் இருக்கிறது. எனவே மையம் கொள்ளுதல் வெடிப்பதற்கான ஒரு வழி.

ஏன் மையம் கொள்ளுதல் ஒரு முறையாக ஆகியுள்ளது? நீ மையம் கொள்ளாவிட்டால், உன்னுடைய சக்தி இலக்கற்றதாக இருக்கிறது. அது வெடிக்க முடியாது. அது பரந்து கிடக்கிறது. எனவே அது வெடிக்க முடியாது. வெடிப்பதற்கு மிக அதிக சக்தி தேவை. வெடிப்பது என்பதன் அர்த்தம், இப்போது நீ பரந்து கிடக்கவில்லை. மாறாக நீ ஒரே புள்ளியில் இருக்கிறாய். நீ அணுத் தன்மை பெற்று விட்டாய்; நீ உண்மையில் ஒரு ஆன்மிக அணு ஆகிவிட்டாய். மேலும் நீ ஒரு அணு ஆகுமளவு மையம் கொண்டால் மட்டுமே நீ வெடிக்க முடியும். அப்போது அங்கு ஒரு அணுத்தன்மை கொண்ட வெடிப்பு, மாபெரும் வெடிப்பு நிகழும்.

அந்த வெடிப்பைப் பற்றிப் பேசப்படவில்லை. ஏனெனில் அது முடியாதது. எனவே வெறும் முறை மட்டும் கொடுக்கப்பட்டுள்ளது. அதன் விளைவு பற்றிப் பேசப்படவில்லை. அதைப் பற்றிப் பேச முடியாது. நீ இந்த முறையைச் செய்தால் விளைவு தொடரும். ஆனால் அதை வெளிப்படுத்த எந்த வழியும் இல்லை.

எனவே இதை நினைவில் கொள்: அடிப்படையாக மதம் ஒருபோதும் அந்த அனுபவத்தைப் பற்றிப் பேசுவதில்லை, அது விதிமுறையைப் பற்றி மட்டுமே பேசுகிறது; அது எப்படி என்பதைக் காட்டுகிறது, என்ன என்பதை அல்ல. அந்த என்ன என்பது உன்னிடம் விடப்படுகிறது. நீ எப்படி என்பதைச் செய்தால், அந்த என்ன என்பது உன்னிடம் வரும். மேலும் அதை மற்றொருவருக்குச் சொல்ல எந்த வழியும் இல்லை. ஒருவனால் அதை அறிந்து கொள்ள முடியும். ஆனால் அவனால் அதை எடுத்துச் சொல்ல முடியாது. அது அப்படி ஒரு எல்லையற்ற

அனுபவம், அதை வெளிப்படுத்த மொழி பயனற்றது. எந்தச் சொல்லும் வெளிப்படுத்தும் திறமையற்ற அளவிற்கு அது பரந்து விரிந்தது.

புத்தர் நாற்பது வருடங்களாகத் தொடர்ந்து இதையே சொல்லிக் கொண்டிருந்தாராம், ''என்னிடம் சத்தியத்தைப் பற்றி, தெய்விகத்தைப் பற்றி, நிர்வாண நிலை பற்றி, மோட்சம், விடுதலை பற்றிக் கேட்காதீர்கள். இவை போன்றவற்றைப் பற்றி எதுவும் கேட்காதீர்கள். எப்படி அங்கே போவது என்பதை மட்டும் கேளுங்கள். நான் உங்களுக்குப் பாதையைக் காட்ட முடியும், ஆனால் வார்த்தைகளில் கூட, நான் உங்களுக்கு அந்த அனுபவத்தைக் கொடுக்க முடியாது.'' அந்த அனுபவம் ஒருவருக்கே சொந்தமானது; விதிமுறை எல்லோருக்குமானது. வழிமுறை விஞ்ஞான பூர்வமானது, தனியொருவரைச் சாராதது; அனுபவம் எப்பொழுதும் தனிப்பட்டது, கவிதை போன்றது.

நான் இப்படி வித்தியாசப்படுத்துவதின் அர்த்தம் என்ன? வழிமுறை விஞ்ஞான பூர்வமானது. நீ அதைச் செய்ய முடிந்தால், மையம் கொள்ளுதல் அதனால் கிடைக்கும். வழிமுறைப்படி செய்தால் கண்டிப்பாக மையம் கொள்ளுதல் அதன் பலனாகக் கிடைக்கும். மையம் கொள்ளுதல் நிகழவில்லையென்றால், நீ ஏதோ ஒரு இடத்தில் தவறு செய்திருக்கிறாய் என்பதை நீ முடிவு செய்து கொள்ளலாம். ஏதோவொரு இடத்தில் நீ வழிமுறையைத் தவறவிட்டிருக்கிறாய், நீ அதைக் கடைபிடிக்கவில்லை. வழிமுறை விஞ்ஞானபூர்வமானது, மையம் கொள்ளுதல் விஞ்ஞானபூர்வமானது, ஆனால் அந்த வெடிப்பு உன்னிடம் நிகழுகையில், அது கவித்துவமானது.

கவித்துவமானது என்று நான் சொல்வதன் அர்த்தம் உங்களின் ஒவ்வொருவரும் அதை வெவ்வேறு விதமாக அனுபவப்படுவீர்கள் என்பதே. பிறகு அங்குப் பொதுவானது என்பதே இல்லை. அதை ஒவ்வொருவரும் வெவ்வேறு வழிகளில் வெளிப்படுத்துவர். புத்தர் ஏதோவொன்று சொல் கிறார், மகாவீரர் ஏதோவொன்று சொல்கிறார், கிருஷ்ணர் வேறு

ஏதோவொன்று சொல்கிறார், மேலும் ஜீஸஸ், மொகமது, மோஸஸ், லா வோட்ஸு, இவர்கள் எல்லோரும் வித்தியாசப் படுகிறார்கள் – வழிமுறைகளில் அல்ல, அவர்களுடைய அனுபவத்தை வெளிப்படுத்தும் விதத்தில் வேறுபடுகிறார்கள். ஒரே ஒரு விஷயத்தில் தான் இவர்கள் எல்லோரும் ஒத்துப் போகிறார்கள், அவர்கள் எந்தவிதமாகச் சொல்லும் போதும் அப்படிச் சொல்வது அவர்கள் உணர்ந்ததை வெளிப்படுத்துவ தில்லை. இந்த ஒன்றில் மட்டுமே அவர்கள் எல்லோரும் ஒத்துப் போகிறார்கள்.

ஆனாலும் அவர்கள் முயற்சிக்கிறார்கள். முடியாது என்றாலும் கூட, அவர்கள் எப்படியாவது, ஒரு துளி கொடுக்க முயற்சி செய்கிறார்கள். அது சாத்தியமில்லாததாகவே தெரிகிறது, ஆனாலும் நீ இரக்கப்படக் கூடிய இதயமுள்ளவனாயிருந்தால் ஏதாவது தெரிந்து கொள்ளலாம். ஆனால் அதற்கு ஆழமான இரக்க உள்ளமும், அன்பும், ஆழ்ந்த மரியாதையும் தேவை. எனவே உண்மையில், நீ எப்பொழுதெல்லாம் எதையாவது தெரிந்து கொள்கிறாயோ அப்பொழுதெல்லாம் அது தெரியப் படுத்தியவரைச் சார்ந்தது அல்ல, மாறாக அது உன்னைச் சார்ந்ததே. நீ ஆழமான அன்போடும், ஆழ்ந்த மரியாதையோடும் பெற்றுக்கொள்ள முடியும்போது, ஏதாவது உன்னை அடைகிறது. ஆனால் நீ ஒன்றைப் பற்றிக் குறை கூறுபவனாக இருந்தால், அப்போது எதுவும் உன்னிடம் வராது. முதலில் அவர்கள் அதை வெளிப்படுத்துவது கடினம். அப்படியே அது வெளிப்படுத்தப் பட்டாலும் நீ குறை காண்கிறாய் – அப்போது செய்தி சாத்தியமற்றுப் போகிறது; எந்தச் செய்தித் தொடர்பும் அங்கில்லை.

செய்திப் பரிமாற்றம் மிகவும் நுட்பமானது. அதனால் தான் இந்த நூற்றிப் பன்னிரண்டு முறைகளிலும் அது முற்றிலும் விட்டுவிடப் பட்டுள்ளது – வெறும் கோடி காட்டுதல் மட்டுமே உள்ளது. சிவா பல முறை சொல்கிறார், ''இதைச் செய், அப்போது அந்த அனுபவம்,'' அதன்பின் அவர் மவுனமாகி

விடுகிறார். ''இதைச் செய், அப்போது ஆசிர்வதிக்கப்படுவா யாக,'' அதன் பின் அவர் மவுனமாகி விடுகிறார்.

அந்த ஆசீர்வாதம், அந்த அனுபவம், அந்த வெடிப்பு : அவற்றிற்கு அப்பால் தனியொருவரின் அனுபவமே உள்ளது. வெளிப்படுத்த முடியாத அதை, வெளிப்படுத்த முயற்சிக்காமல் இருப்பதே நல்லது – ஏனெனில் வெளிப்படுத்த முடியாத அதை வெளிப்படுத்த முயற்சித்தால், அது தவறாகவே புரிந்து கொள்ளப் படும். எனவே சிவா மவுனமாயிருக்கிறார். அவர் முறைகளை, யுக்திகளை, எப்படி அவைகளைச் செய்வது என்பதைப் பற்றி மட்டுமே பேசுகிறார்.

எனவே மையம் கொள்ளுதல் முடிவல்ல, அது வெறும் பாதை. மேலும் ஏன் மையம் கொள்ளுதல் நடக்கிறது, வளர் கிறது, வெடிப்பு வரை செல்கிறது? ஏனெனில் அதிக சக்தி ஒரு புள்ளியில் மையம் கொண்டால், அந்தப் புள்ளி வெடிக்கும். புள்ளி மிகச் சிறியது, சக்தி மிகப் பெரியது, அந்தப் புள்ளியால் அதை வைத்துக்கொள்ள முடியாது; ஆகவே வெடிக்கிறது.

மின்சார பல்ப் ஒரு குறிப்பிட்ட அளவு மின்சாரத்தையே தாங்கும். அதிக மின்சாரத்தில், பல்ப் வெடித்துவிடும். இது தான் மையம் கொள்ளுதலின் காரணம். மேலும் எந்த அளவு அதிகமாக மையம் கொள்ளுகிறாயோ அந்த அளவு அதிக சக்தி உனது மையத்தில் சேருகிறது. அந்த மையம் தாங்கிக் கொள்ள முடியாத அளவு அதிக சக்தி சேரும் கணத்தில், அது வெடித்து விடும்.

எனவே இது விஞ்ஞானபூர்வமானது, இது வெறும் ஒரு விஞ்ஞானபூர்வமான விதி. மேலும் மையம் இன்னும் வெடிக்கவில்லையென்றால், நீ இன்னும் மையம் கொள்ள வில்லை என்று பொருள். நீ மையம் கொண்டவுடன், உடனடி யாக வெடிப்பு தொடரும். அங்கு எந்தக் கால இடைவெளியும் இருக்காது. எனவே வெடிப்பு இன்னும் வரவில்லையே என்று நீ உணர்ந்தால், நீ இன்னும் இலக்கை நோக்கிக் குவியவில்லை என்றே பொருள். இன்னும் உனக்குப் பல மையங்கள் உள்ளன,

ஒரே மையமாக இல்லை, இன்னும் நீ பிரிந்திருக்கிறாய், இன்னும் உனது சக்தி வீணாகிக் கொண்டிருக்கிறது, இன்னும் உனது சக்தி வெளியே போய்க் கொண்டிருக்கிறது.

சக்தி வெளியே போகும்போது உன்னில் சக்தி குறைகிறது, வீணாகிப் போகிறது. முடிவில் நீ சக்தியற்றவன் ஆகிவிடுவாய். உண்மையில், இறப்பு வரும்பொழுது நீ ஏற்கனவே இறந்துதான் இருக்கிறாய். நீ வெறும் இறந்து போன உடம்பாகவே இருக்கிறாய். நீ இடைவிடாது சக்தியை வெளியே வீசிக் கொண்டிருக்கிறாய் – எனவே அதன் அளவு என்னவாக இருந்தாலும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் நீ காலியாகி விடுவாய். வெளியே போகும் சக்தியின் அர்த்தம் இறப்பு. நீ ஒவ்வொரு கணமும் இறந்து கொண்டிருக்கிறாய்; உனது சக்தி காலியாகிக் கொண்டிருக்கிறது; நீ உனது சக்தியை வீசிக் கொண்டிருக்கிறாய், அதை வீணாக்கிக் கொண்டிருக்கிறாய்.

பல கோடி வருடங்களாக ஒளி வீசிக் கொண்டிருக்கும் சூரியனும் கூட, அவ்வளவு பெரிய சக்தி மண்டலம் கூட, தொடர்ந்து காலியாகிக் கொண்டிருப்பதாகச் சொல்கிறார்கள். மேலும் நானூறு கோடி ஆண்டுகளில் அது அழிந்துவிடும். சூரியன் இறந்துவிடும். ஏனெனில் ஒளிவீச அதனிடம் சக்தி இருக்காது. தினந்தோறும் அது இறந்து கொண்டிருக்கிறது. ஏனெனில் தன் ஒளிக் கற்றைகள் அதனுடைய சக்தியை அண்டத்தின் எல்லை வரை எடுத்துச் செல்கின்றன – அப்படி எல்லைகள் ஏதாவது இருந்தால். சக்தி வெளியே சென்று கொண்டிருக்கிறது.

மனிதனுக்கு மட்டுமே சக்தியின் திசையை மாற்றக் கூடிய, நிலை மாற்றம் செய்யக்கூடிய திறமை இருக்கிறது. இல்லாவிட்டால் இறப்பு இயற்கையாக நிகழும் – எல்லாமும் இறக்கிறது. மனிதனுக்கு மட்டுமே இறப்பு இல்லாததை, அழிவு இல்லாததை அறியக்கூடிய திறமை இருக்கிறது.

எனவே நீ இந்த முழு விஷயத்தையும் ஒரு விதியாக மாற்றி விடலாம். சக்தி வெளியேறிக் கொண்டிருக்கும் பொழுது இறப்பு

தான் அதன் விளைவாக இருக்கும். மேலும் நீ ஒருபோதும் வாழ்க்கையின் அர்த்தத்தை அறிய மாட்டாய். நீ மெதுவாக இறந்து கொண்டிருப்பதை மட்டுமே அறிய முடியும். நீ ஒரு போதும் உயிர்த் துடிப்புள்ள ஆழமான வாழ்க்கையை உணர முடியாது. சக்தி வெளியே சென்றால் அப்போது அதன் விளைவு இறப்பாகவே இருக்கும் – எதுவாக இருந்தாலும். நீ சக்தியின் திசையை மாற்ற முடிந்தால் – சக்தி வெளியே செல்லாமல் உள்ளே திரும்பினால் – அப்போது ஒரு முழு மாற்றம், ஒரு நிலை மாற்றம் ஏற்படுகிறது.

அப்போது உள்ளே வரும் சக்தி உன்னில் ஒரு புள்ளியில் மையம் கொள்ளுகிறது. அந்தப் புள்ளி நாபிக்கு அருகில் இருக் கிறது. ஏனெனில் உண்மையில் நீ ஒரு நாபியாகவே பிறக்கிறாய். நீ உனது தாயுடன் நாபியின் மூலமாகவே இணைந்துள்ளாய். உயிர்ச்சக்தி தாயினால் நாபியின் மூலமாகவே கொடுக்கப் படுகிறது. மேலும் நாபிக் கொடி அறுக்கப்படும் பொழுது நீ தாயிடம் இருந்து பிரிக்கப்படுகிறாய். நீ ஒரு தனி மனிதன் ஆகிறாய். அதற்கு முன்பு நீ ஒரு தனி மனிதன் அல்ல. உனது தாயின் ஒரு பாகமே.

எனவே உண்மையான பிறப்பு நாபிக் கொடியைத் துண்டிக்கும் பொழுதே ஏற்படுகிறது. அதன்பின் குழந்தை அதனுடைய வாழ்க்கையை ஆரம்பிக்கிறது, அது தனக்கே உரிய மையம் கொள்கிறது. அந்த மையம் நாபியிலேயே இருக்க முடியும். ஏனெனில் நாபியின் மூலமாகவே சக்தி குழந்தைக்குக் கிடைத்தது. அதுவே தொடர்பு கொள்ளும் சாதனமாக இருந்தது. எனவே இன்னும், நீ உணர்ந்திருந்தாலும் உணராவிட்டாலும் உன்னுடைய நாபியே தொடர்ந்து மையமாக இருக்கிறது.

சக்தி உள்ளே வரத் துவங்கி விட்டால், நீ சக்தியின் திசையை அது உள்ளே வருமாறு திருப்பி விட்டால், அது நாபியைத் தாக்கும். அது தொடர்ந்து உள்ளே வந்து நாபியில் மையம் கொள்ளும். நாபி தாங்க முடியாத அளவு சக்தி

அதிகமாகும் பொழுது மையம் சக்தியை இனிமேலும் தாங்க முடியாது என்னும் பொழுது அந்த மையம் வெடிக்கிறது. அந்த வெடிப்பில், மறுபடியும் நீ தனிமனிதன் இல்லாமல் போகிறாய். நீ உனது தாயுடன் இணைந்திருக்கும்போது ஒரு தனி மனிதன் அல்ல; மறுபடியும் நீ இப்போது ஒரு தனி மனிதன் அல்ல.

ஒரு புதிய பிறப்பு நடந்திருக்கிறது. நீ பேரண்ட இயக்கத் துடன் ஒன்றிவிட்டாய். இப்போது உனக்கு எந்த மையமும் இல்லை; நீ, 'நான்' என்று சொல்ல முடியாது. இப்போது அகந்தை இல்லை. ஒரு புத்தர், ஒரு கிருஷ்ணர், 'நான்' என்ற சொல்லைப் பேசிக் கொண்டும் பயன்படுத்திக் கொண்டும் இருந்தனர். ஆனால் அது வெறும் உருவத்தைக் குறிப்பது; அவர்களுக்கு எந்த அகந்தையும் இல்லை. அவர்களே அங்கு இல்லை.

புத்தர் இறந்து கொண்டிருந்தார். அவர் இறக்கும் நாளில் ஏராளமான மக்கள், சீடர்கள், சன்னியாசிகள் கூடி இருந்தனர். மேலும் அவர்கள் சோகத்தோடு இருந்தனர்; அவர்கள் அழுது கொண்டும் அரற்றிக் கொண்டும் இருந்தனர். எனவே புத்தர் கேட்டார், ''ஏன் நீங்கள் அழுகிறீர்கள்?''

யாரோ ஒருவர் சொன்னார், ''ஏனெனில் விரைவில் நீங்கள் இல்லாமல் போய் விடுவீர்கள்.''

புத்தர் சிரித்துவிட்டுச் சொன்னார், ''ஆனால் நான் இல்லாமல் போய் நாற்பது வருடங்கள் ஆகிவிட்டனவே. நான் ஞானமடைந்த அன்றே நான் இறந்துவிட்டேன். நாற்பது வருடங் களாக மையம் அங்கு இல்லை. எனவே அழ வேண்டாம், சோகப்பட வேண்டாம். இப்போது யாரும் இறக்கவில்லை. நான் இல்லாதவன்! ஆனால் இன்னும் 'நான்' என்ற சொல்லை நான் இல்லாதவன் என்று சொல்வதற்குக் கூடப் பயன்படுத்த வேண்டி யிருக்கிறது.''

சக்தி உள்நோக்கிப் பாய்வதே முழு மதமும், இதுவே ஆன்மிகத் தேடல் என்பதன் அர்த்தம். எப்படி சக்தியை உள்ளே

செலுத்துவது, எப்படி ஒரு முழுத் திருப்பத்தை ஏற்படுத்துவது? இந்த முறைகள் உதவும். எனவே நினைவில் கொள், மையம் கொள்ளுதல் சமாதி நிலை அல்ல, மையம் கொள்ளுதல் அந்த அனுபவமல்ல. மையம் கொள்ளுதல் என்பது அனுபவத்திற்கான வாயில். மேலும் அங்கு அனுபவம் இருக்கும் பொழுது மையம் கொள்ளுதல் இருக்காது. எனவே மையம் கொள்ளுதல் ஒரு கடந்து செல்லும் வழி.

நீ இப்போது மையம் கொண்டவனாய் இல்லை. உண்மையில், நீ பல மையங்கள் உடையவனாய் இருக்கிறாய் – அதனால் தான் நான் இப்போது நீ மையம் கொண்டவன் இல்லை என்கிறேன். நீ மையம் கொண்டவனாய் மாறும்போது, ஒரே ஒரு மையம்தான் இருக்கும். அப்போது பல மையங்களுக்கும் பாய்ந்து கொண்டிருக்கும் சக்தி திரும்பி வருகிறது; இது ஒரு வீடு திரும்பல். அப்போது நீ உன்னுடைய மையத்தில் இருக்கிறாய்; அப்போது.... பெரு வெடிப்பு நிகழ்கிறது. மறுபடியும் மையம் இல்லாமல் போகிறது. ஆனால் இப்போது நீ பல மையங்கள் உடையவன் அல்ல. இப்போது மையமே இல்லாமல் போய் விடுகிறது. நீ பேரண்ட இயக்கத்துடன் ஒன்றிவிடுகிறாய். அதன் பின் பிரபஞ்ச இருப்பு, நீ ஆகிய இரண்டின் அர்த்தமும் ஒன்றாக, ஒன்றையே குறிப்பாக ஆகிவிடுகிறது.

உதாரணமாக, ஒரு பனிப் பாறை கடலில் மிதந்து கொண்டிருக்கிறது. பனிப் பாறை அதற்கென ஒரு மையம் இருக்கிறது. அதற்கு ஒரு தனித்தன்மை இருக்கிறது; அது கடலிலிருந்து வேறானது. அடி ஆழத்தில் அது தனியானது அல்ல. ஏனெனில் அது ஒரு குறிப்பிட்ட டிகிரி வெப்பத்தில் இருக்கும் தண்ணீரே தான். கடல் தண்ணீருக்கும், பனிப் பாறைக்கும் இருக்கும் வித்தியாசம் அவற்றின் இயற்கையால் அல்ல – இயற்கையில் அவை ஒன்றே. வித்தியாசம் வெறும் வெப்ப டிகிரியில் மட்டும் தான். பிறகு சூரியன் எழுகிறது, சூழ்நிலை உஷ்ணமடைகிறது, அப்போது பனிப் பாறை உருக ஆரம்பிக்கிறது. பிறகு அங்குப் பனிப் பாறையே இல்லாமல் போகிறது; அது உருகிப் போகிறது.

இப்போது நீ அதைப் பார்க்க முடியாது. எந்தத் தனித்தன்மையும் அங்கு இல்லை, எந்த மையமும் இல்லை. அது கடலுடன் ஒன்றிவிட்டது.

உனக்குள்ளும் புத்தருக்குள்ளும், ஜீஸஸை சிலுவையில் அறைந்தவர்களுக்குள்ளும் ஜீஸஸுக்குள்ளும், கிருஷ்ணருக்குள்ளும், அர்ச்சுனனுக்குள்ளும், இயற்கையில் எந்த வித்தியாசமும் கிடையாது. அர்ச்சுனன் ஒரு பனிப்பாறை போன்றவன். கிருஷ்ணர் கடலைப் போன்றவர். இயற்கையில் எந்த வித்தியாசமும் கிடையாது. அவர்கள் இருவரும் ஒன்றே, ஒரு பொருளே. ஆனால் அர்ச்சுனனுக்கு ஒரு வடிவம் ஒரு பெயர் இருக்கிறது – ஒரு தனித்தன்மை தனித்த இருப்பு இருக்கிறது. அவன், ''நான் இருக்கிறேன்'' என்று உணர்கிறான்.

இந்த மையம் கொள்ளும் முறைகளின் மூலமாக, வெப்ப நிலை மாறும், பனிப்பாறை உருகும், அதன் பிறகு அங்கு எந்த வித்தியாசமும் இருக்காது. அந்தக் கடலாக உணரும் உணர்வே சமாதி; அந்தப் பனிப்பாறையாக இருப்பது மனம். மேலும் கடலாக உணர்வது என்பது மனமற்ற நிலை.

மையம் கொள்ளுதல் ஒரு நடந்து செல்லும் வழி, பனிப்பாறை இல்லாமல் போவதன் துவக்கம். இதற்கு முன்பு அங்குக் கடல் இல்லை – ஒரு பனிப்பாறை மட்டுமே இருந்தது. அதற்குப் பின்பு அங்குப் பனிப்பாறை இல்லை – கடல் மட்டுமே உள்ளது. கடலாக உணர்வதே சமாதி; இது ஒருவனை முழுமையுடன் ஒன்று கலந்தவனாக உணர்வது.

ஆனால் நான் முழுமையுடன் ஒன்று கலந்தவனாக நினைத்துக்கொள்ளச் சொல்லவில்லை. நீ நினைத்துக் கொள்ளலாம். ஆனால் அப்படி எண்ணிக் கொள்வது மையம் கொள்ளுதலுக்கு முன்பு நடப்பது; இது உணர்வு அடைவது அல்ல. உனக்குத் தெரியாது – நீ கேள்விப்பட்டிருக்கிறாய்; நீ படித்திருக்கிறாய். நீ ஏதாவது ஒரு நாள் இது உனக்கும் நடக்கக்கூடும் என்று விரும்புகிறாய். ஆனால் நீ உணர்ந்து கொண்டவன் அல்ல.

மையம் கொள்வதற்கு முன்பு நீ தொடர்ந்து நினைத்துக் கொண்டே இருக்கிறாய். ஆனால் அந்த எண்ணத்தால் எந்தப் பயனும் இல்லை. மையம் கொண்ட பிறகு நினைத்துப் பார்ப்பவன் அங்கு இல்லை. நீ அறிவாய்! அது நிகழ்ந்து விட்டது! நீ இல்லாமல் போய் விட்டாய்; கடல் மட்டுமே உள்ளது. மையம் கொள்ளுதல் வழிமுறை, சமாதி நிலை முடிவு.

சமாதி நிலையில் என்ன நடக்கிறது என்பது பற்றி எதுவும் சொல்லப்படவில்லை ஏனெனில் எதுவும் சொல்ல முடியாது. மேலும் சிவா மிகவும் விஞ்ஞானபூர்வமானவர். அவர் சொல்லிக் கொண்டிருப்பதில் சிறிதும் ஆர்வமில்லாதவர். அவர் தந்தி போலச் சொல்கிறார்; அவர் ஒரு சொல் கூட அதிகம் பயன்படுத்த மாட்டார். எனவே அவர் கோடி காட்டுவதோடு சரி : ''அந்த அனுபவம், அந்த ஆசிர்வாதம், அந்த நிகழ்வு.'' இது மட்டுமல்ல, சில நேரங்களில் அவர், ''பிறகு,'' என்று மட்டுமே சொல்வார். அவர் சொல்வார், ''இரண்டு மூச்சுகளுக்கிடையே மையம் கொண்டிரு. அதன் பின்.'' அதன் பின் அவர் நிறுத்தி விடுவார். சில நேரங்களில் அவர் சொல்வார், ''நடுவிலிரு. இரண்டு அதீத நிலைகளுக்கு நடுவில் சரியாக இரு, அப்போது அது.''

இவை சுட்டிக் காட்டுபவை : அது, பிறகு அந்த அனுபவம், அந்த ஆசிர்வாதம், அந்த நிகழ்வு, அந்த வெடிப்பு. ஆனால் பிறகு அவர் முற்றிலும் நிறுத்தி விடுகிறார். ஏன்? நாம் அவர் இன்னும் கொஞ்சம் ஏதாவது சொல்ல வேண்டுமென்று விரும்புகிறோம்.

இரண்டு காரணங்கள். ஒன்று : அது விளக்க முடியாதது. ஏன் அதை விளக்க முடியாது? அனுபவிக்க முடியக் கூடியதை விளக்கிச் சொல்லவும் முடியும் என்று கூறும் சிந்தனையாளர்கள் இருக்கிறார்கள் – உதாரணமாக நவீன ஆதரவாளர்கள் மொழி வல்லுநர்கள் மற்றும் பலர் ஐரோப்பாவில் இருப்பவர்கள். அவர்கள் கூறுவதிலும் உண்மையிருக்கிறது. அவர்கள் சொல்கிறார்கள் நீ அதை அனுபவிக்க முடியுமென்றால், பின் ஏன் நீ

அதைச் சொல்ல முடியாது? மேலும் அனுபவம் என்பது என்ன? நீ அதைப் புரிந்து கொண்டு விட்டாய், எனவே நீ ஏன் மற்றவர் களை அதைப் புரிந்துகொள்ளச் செய்ய முடியாது? அவர்கள் சொல்கிறார்கள், அதாவது ஏதாவது ஒரு அனுபவம் இருந்தால் அப்போது அதை வெளிப்படுத்தவும் முடியும். மேலும் உன்னால் வெளிப்படுத்த முடியவில்லையென்றால் உனக்கு அனுபவம் ஏற்படவில்லை என்பதையே அது காட்டுகிறது. அப்போது நீ ஒரு புத்தி பேதலித்தவன் – குழம்பியவன் – தெளிவில்லாதவன். மேலும் உன்னால் அதை வெளிப்படுத்தக் கூட முடியவில்லை யென்றால் அப்போது அதை அனுபவிக்கும் திறன் உன்னிடம் இருப்பதற்குச் சாத்தியமே இல்லை.

இந்த நிலையிலிருந்து பார்க்கும் காரணத்தால் அவர்கள் மதத்தை மடத்தனமானது என்று சொல்கிறார்கள். நீ அனுபவித் திருக்கிறாய் என்று சொன்னால் ஏன் நீ வெளிப்படுத்த முடியாது? அவர்களது நிலைப்பாடு பலரைக் கவர்கிறது. ஆனால் அவர்களது வாதம் அடிப்படையற்றது. மதத் தன்மை வாய்ந்த அனுபவங்கள் ஒரு புறம் இருக்கட்டும், சாதாரண அனுபவங்களையே விளக்கவும் வெளிப்படுத்தவும் முடியாது – மிக எளிதான அனுபவங்களை.

எனக்குத் தலை வலிக்கிறது, ஆனால் நீ ஒருபோதும் தலைவலியை அனுபவிக்காதவனாய் இருந்தால், நான் தலைவலி என்றால் என்ன என்று உனக்கு விளக்க முடியாது. இதன் அர்த்தம் நான் புத்தி பேதலித்தவன் என்பது அல்ல. இதன் அர்த்தம் நான் தலைவலியை அனுபவிக்கவில்லை, வெறும் நினைப்பு மட்டுமே என்பதல்ல. தலைவலி அங்கு இருக்கிறது. நான் அதை முழுவதுமாக அனுபவிக்கிறேன், அதன் முழு வலியையும் உணர்கிறேன். ஆனால் நீ தலைவலியை அனுபவித்திருக்கா விட்டால், அதை விளக்க முடியாது, அதை உன்னிடம் வெளிக்காட்ட முடியாது. நீயும் அதை அனுபவித்திருந்தால், பிறகு அங்கு எந்தப் பிரச்சனையும் இல்லை, அதை வெளிப் படுத்த முடியும்.

புத்தரின் சிரமம் எதுவென்றால் அவர் புத்தரல்லாதவர்களிடம் பேச வேண்டும் – புத்த மதத்தைச் சேராதவர்களிடம் என்று அர்த்தமல்ல. ஏனெனில் புத்த மதத்தைச் சேராதவர்களும் புத்தர்களாக முடியும். ஜீஸஸ் புத்த மதத்தைச் சேராதவர், ஆனால் அவர் ஒரு புத்தர். புத்தர் அனுபவம் பெறாதவர்களிடம் செய்திப் பரிமாற்றம் செய்ய நேர்ந்ததால், அங்கு சிரமம் ஏற்பட்டது. உனக்குத் தலைவலி என்றால் என்ன என்று தெரியாது. தலைவலியை அறியாத பலர் இருக்கிறார்கள். அவர்கள் அந்த வார்த்தையை மட்டும் கேட்டிருக்கிறார்கள்; மற்றபடி அது அவர்களுக்கு எந்த அர்த்தத்தையும் கொடுப்பதில்லை.

நீ ஒரு குருடனிடம் ஒளியைப் பற்றிப் பேச முடியும், ஆனால் அதன் மூலம் நீ எதையும் தெரிவிப்பதில்லை. அவன் 'ஒளி' என்ற வார்த்தையைக் கேட்கிறான், அவன் அதன் விளக்கத்தைக் கேட்கிறான். அவனால் ஒளி பற்றிய முழுச் செயல்பாட்டு விளக்கத்தையும் புரிந்து கொள்ள முடியும். ஆனாலும் இன்னும் 'ஒளி' என்ற சொல் அவனுக்கு எதையும் தெரிவிப்பதில்லை. அவன் அனுபவம் அடைந்தால் மட்டுமே செய்திப் பரிமாற்றம் சாத்தியம். எனவே குறித்துக் கொள் : ஒரே அனுபவம் பெற்ற இரண்டு நபர்கள் அதைப் பற்றிச் செய்தி பரிமாறிக் கொள்வது மட்டுமே சாத்தியமானது, மற்ற வகை செய்திப் பரிமாற்றம் எதுவும் சாத்தியமில்லை.

சாதாரண வாழ்க்கையில் நம்மால் செய்திப் பரிமாற்றம் செய்து கொள்ள முடிகிறது. ஏனெனில் நமது அனுபவங்கள் ஒரே மாதிரியானவை. ஆனால் அதில் கூட, ஒருவன் மிகவும் ஆராய ஆரம்பித்தால் அப்போது அங்கும் சிரமம்தான் ஏற்படும். வானம் நீலம் என்று நான் சொல்கிறேன், நீயும் வானம் நீலம் என்று சொல்கிறாய், ஆனால் எனது நீலத்தின் அனுபவமும் உனது நீலத்தின் அனுபவமும் ஒன்றுதான் என்று எப்படி முடிவு செய்வது? அதை முடிவு செய்ய எந்த வழியும் இல்லை.

நான் ஒருவித நீல நிறத்தைப் பார்த்துக் கொண்டிருக்கலாம், நீ மற்றொரு வித நீல நிறத்தைப் பார்த்துக் கொண்டிருக்கலாம்,

ஆனால் நான் எந்தவித நீலத்தை அனுபவிக்கிறேன், எந்தவித நீலத்தை உள்ளே பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்பதை உனக்குத் தெரியப்படுத்த முடியாது. நான் வெறும் 'நீலம்' என்று சொல்கிறேன். நீயும் 'நீலம்' என்கிறாய், ஆனால் நீலத்தில் ஆயிரக்கணக்கான சாயல்கள் உள்ளன – அது மட்டுமல்ல : 'நீலம்' என்பதற்கு ஆயிரக்கணக்கான அர்த்தங்கள் உள்ளன. என் மனத்தின் அமைப்புப்படி, நீலம் என்பதன் அர்த்தம் ஒன்றாக இருக்கலாம். உனக்கு அதன் அர்த்தம் வேறொன்றாக இருக்கலாம். ஏனெனில் நீலம் என்பது அர்த்தமல்ல. அர்த்தம் எப்பொழுதும் மனத்தின் அமைப்புப்படியே பிறக்கிறது. எனவே சாதாரண அனுபவங்களில் கூடச் செய்திப் பரிமாற்றம் சிரம மாகவே இருக்கிறது.

அதற்கு மேல், இதற்கு அப்பாலுள்ள பல அனுபவங்கள் உள்ளன. உதாரணமாக, ஒருவன் காதலில் விழுந்துவிட்டான். அவன் ஏதோவொன்றை அனுபவிக்கிறான். அவனது முழு வாழ்க்கையும் அதிலேயே அடங்கியிருக்கிறது. ஆனால் அவனுக்கு என்ன நேர்ந்தது, என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று அவனால் விளக்க முடியாது. அவனால் அழ முடியும், அவனால் பாட முடியும், அவனால் ஆட முடியும்; இவை யெல்லாம் அவனுள் ஏதோவொன்று நடந்து கொண்டிருக்கிறது என்பதற்கான அறிகுறிகள். ஆனால் அவனுள் என்ன நடந்து கொண்டிருக்கிறது? ஒருவனுக்கு அன்பு மலரும்போது, உண்மை யில் என்ன நடக்கிறது? மேலும் அன்பு சாதாரணமாக நடப்பது தான். இது எல்லோருக்கும் ஏதோவொரு விதத்தில் நடக்கிறது. ஆனாலும் கூட, உள்ளே என்ன நிகழ்கிறது என்பதை இன்னும் நம்மால் வெளிப்படுத்த முடிவதில்லை.

அன்பை ஒரு ஜுரத்தைப் போல, ஒரு வித நோயைப் போல உணர்பவர்கள் இருக்கிறார்கள். 'ரோசியூ' சொல்கிறார், "இளமை மனித வாழ்வின் சிகரம் அல்ல. ஏனெனில் இளமை காதலெனும் நோய்க்கு இடம் கொடுப்பதாய் இருக்கிறது. அன்பு என்பதன் முழு அர்த்தத்தையும் இழந்துவிட்ட அந்த வயதான

காலத்திலேயே, மனம் குழம்புவதையும், பேதலிப்பதையும் நிறுத்தும். எனவே கூர்ந்த அறிவைப் பெறுவது மிக மிக வயதான போது மட்டுமே சாத்தியம். அன்பு இருக்கும் வரை அது அறிவொளியை அடைய விடாது.'' இது அவருடைய உணர்வு.

வேறுவிதமாக உணர்பவர்களும் இருக்கிறார்கள். உண்மையில் அறிவொளி பெற்றவர்கள் அன்பைக் குறித்து மவுனம் கொள்கிறார்கள். அவர்கள் எதுவும் சொல்ல மாட்டார்கள் – ஏனெனில் அந்த உணர்வு எல்லையற்றது, மிகவும் ஆழமானது, கண்டிப்பாக மொழி அதைச் சரியாக வெளிப்படுத்தாது. மேலும் அதை வெளிப்படுத்திவிட்டால் அதன்பின் ஒருவன் குற்றவுணர்வு அடைகிறான், ஏனெனில் எல்லையற்ற அந்த உணர்வை ஒருபோதும் சரியாக வெளிப்படுத்த முடியாது. எனவே ஒருவன் எந்த அளவு ஆழமாக அனுபவிக்கிறானோ, அந்த அளவு அதை வெளிப்படுத்தும் சாத்தியம் குறைந்துவிடுகிறது, அவன் மவுனமாக இருந்து விடுகிறான்.

புத்தர் கடவுளைக் குறித்து மவுனமாக இருந்ததன் காரணம், கடவுள் இல்லை என்பதல்ல. மேலும் கடவுளைப் பற்றி வாய் கிழியப் பேசுபவர்கள் எல்லோரும் உண்மையில் அந்த அனுபவம் அவர்களுக்கு இல்லை என்பதையே காட்டுகிறார்கள். புத்தர் மவுனமாக இருந்தார். அவர் செல்லும் இடத்திலெல்லாம், அவர் அறிவிப்பார், ''தயவுசெய்து கடவுளைப் பற்றி எதுவும் கேட்காதீர்கள். நீங்கள் எதைப் பற்றி வேண்டுமானாலும் கேளுங்கள், ஆனால் கடவுளைப் பற்றிக் கேட்க வேண்டாம்.''

படிப்பாளிகள், பண்டிதர்கள், உண்மையான அனுபவமில்லாமல் வெறும் அறிவைக் கொண்டவர்கள், புத்தரைப் பற்றிப் பேச ஆரம்பித்தனர், வதந்திகளை உருவாக்கினர், அவர்கள் சொன்னார்கள், ''அவர் மவுனம் சாதிக்கிறார். ஏனெனில் அவர் அறியமாட்டார். அவர் அறிந்திருந்தால் பிறகு ஏன் அவர் சொல்லக் கூடாது?'' இதற்குப் புத்தர் சிரித்திருப்பார். அந்தச் சிரிப்பை ஒரு சிலரால் மட்டுமே புரிந்துகொள்ள முடியும்.

அன்பை வெளிப்படுத்த முடியாது என்றால், அப்போது கடவுளை எப்படி வெளிப்படுத்த முடியும்? மேலும் எந்த வகையில் வெளிப்படுத்துவதும் கெடுதலானது – இது ஒரு விஷயம். இதனால் தான் சிவா அந்த அனுபவத்தைப் பற்றி மவுனமாய் இருக்கிறார். அவர் அதைச் சுட்டிகாட்டக் கூடிய எல்லை வ்ரை போகிறார் – அப்போது, அது, அந்த அனுபவம் – அதன் பின் அவர் மவுனமாகி விடுகிறார்.

இரண்டாவது காரணம் என்னவென்றால் : ஒரு குறிப்பிட்ட விதமாக அதை வெளிப்படுத்த முடியும் என்றாலும் கூட, அதனை சிறு அளவிற்கு வெளிப்படுத்த முடியும் என்றாலும் கூட – அதாவது அதை வெளிப்படுத்த முடியாது என்றாலும் உண்மை யில் சில இணையானவற்றை உனக்கு உதவும் பொருட்டு உருவாக்க முடியும் – ஆனால் இவைகளையும் கூட சிவா செய்யவில்லை, அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. அதன் காரணம், நமது மனங்கள் மிகவும் பேராசை கொண்டவை. எனவே அந்த அனுபவத்தைப் பற்றி ஏதாவது கூறினால் மனம் அதைப் பிடித்துக் கொள்ளும். பிறகு மனம் வழிமுறையை மறந்து விட்டு, அந்த அனுபவத்தை மட்டுமே நினைத்துக் கொண்டிருக்கும். ஆனால் வழிமுறைக்கு முயற்சி தேவை – சில நேரங்களில் கடினமான, சில நேரங்களில் ஆபத்தான, நீண்ட முயற்சி தேவை. ஒரு நீண்ட இடைவிடாத முயற்சி தேவைப்படுகிறது.

நாம் வழிமுறையைப் பற்றி மறந்துவிடுகிறோம். நாம் பலனை நினைத்துக் கொண்டு கற்பனை செய்வதும், ஆசைப் படுவதும், விருப்பம் கொள்வதும் என்பதாக ஆகிவிடுகிறோம். மேலும் ஒருவன் தன்னை மிகச் சுலபமாக ஏமாற்றிக் கொள்ள முடியும். ஒருவன் விளைவை அடைந்து விட்டோம் என்று கற்பனை செய்துகொள்ள முடியும்.

சில தினங்களுக்கு முன்பு இங்கு ஒருவர் இருந்தார். அவர் ஒரு சன்னியாசி – வயதானவர், மிகவும் வயதானவர். அவர் முப்பது வருடங்களுக்கு முன்பு சன்னியாசம் எடுத்தவர்,

இப்போது அவருக்கு எழுபது வயது. அவர் என்னிடம் வந்து சொன்னார், ''நான் சிலவற்றை விசாரித்துக்கொள்ள, சில விஷயங்களை அறிந்துகொள்ள வந்திருக்கிறேன்.

எனவே நான் அவரிடம் கேட்டேன், ''நீங்கள் என்ன அறிந்துகொள்ள விரும்புகிறீர்கள்?''

திடீரென அவர் மாறிவிட்டார். அவர் சொன்னார், ''இல்லை, உண்மையில் எதையும் தெரிந்து கொள்வதற்காக அல்ல – வெறுமனே உங்களை சந்திக்க மட்டும் தான். ஏனெனில் அறிய முடியக் கூடிய எல்லாவற்றையும் நான் ஏற்கனவே அறிந்து விட்டேன்.''

முப்பது வருடங்களாக அவர் கற்பனை செய்து கொண்டும், ஆசைப்பட்டுக் கொண்டும் இருக்கிறார் – பரவசத்தில் ஆசை வைத்து, தெய்விக அனுபவங்களில் – இப்போது இந்த வாழ் நாளின் கடைசி வருஷங்களில் அவர் சக்தியிழந்து போய் விட்டார். இப்போது அவர் அந்த அனுபவத்தைப் பெற்று விட்டதாக சுய கற்பனைகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறார். எனவே நான் அவரிடம் சொன்னேன், ''நீங்கள் அனுபவித் திருந்தால், இப்போது மவுனமாய் இருங்கள். என்னுடன் சில கணங்கள் இங்கிருங்கள். ஏனெனில் இப்போது பேச வேண்டிய தேவை ஏதுமில்லை.'' உடனே அவர் பரபரப்படைந்தார். அவர் சொன்னார், ''சரி! இப்போது நான் அனுபவம் அடையவில்லை என்று வைத்துக் கொள்வோம். எனவே எனக்கு ஏதாவது சொல்லுங்கள்.''

நான் அவரிடம் சொன்னேன், ''வைத்துக் கொள்வோம் என்ற பேச்சுக்கே என்னிடம் இடமில்லை. நீங்கள் அறிந்திருக் கிறீர்கள் அல்லது நீங்கள் அறியவில்லை.'' நான் சொன்னேன், ''எனவே அதைப் பற்றி முதலில் தெளிவாக இருங்கள். நீங்கள் அறிவீர்கள் என்றால் அப்போது மவுனமாய் இருங்கள். சில கணங்கள் இங்கிருந்து விட்டுப் பிறகு செல்லுங்கள். நீங்கள் அறியவில்லையென்றால் அதில் தெளிவாய் இருங்கள். அதை என்னிடம் சொல்லுங்கள்.''

அவர் குழப்பமடைந்தார். அவர் சில வழிமுறைகளைப் பற்றி விசாரிப்பதற்காக வந்திருக்கிறார். பிறகு அவர் சொன்னார், ''உண்மையில் நான் அந்த அனுபவத்தை அடையவில்லை, ஆனால் நான் 'அம் பிரம்மாஸ்மி' – நானே பிரம்மா – என்பதைப் பற்றி நிறைய யோசித்துக் கொண்டிருப்பவன், அதனால் சில நேரங்களில் நான் யோசித்துக் கொண்டு மட்டுமே இருக்கிறேன் என்பதை நான் மறந்து விடுகிறேன். நான் அதை இரவு பகலாக, தொடர்ந்து முப்பது வருடங்களாக இடைவிடாது சொல்லிக் கொண்டிருக்கிறேன். அதனால் சில நேரங்களில் நான் அதை இன்னும் அறியவில்லை என்பதையே முற்றிலுமாக நான் மறந்து விடுகிறேன். அது ஒரு கடன் வாங்கப்பட்ட கூற்றே என்பதை மறந்து விடுகிறேன்.''

எது அனுபவம், எது அறிவு என்று நினைவு வைத்துக் கொள்வது சிரமம். அவை குழம்பி விடுகின்றன; அவை கலந்து விடுகின்றன. உனது அறிவு உனது அனுபவமாகி விட்டது போல உணர்வது மிகவும் சுலபம். மனித மனம் மிகவும் தந்திரமானது, ஏமாற்றக் கூடியது, எனவே இது சாத்தியம் தான். சிவா அனுபவத்தைப் பற்றி மவுனமாக இருந்து விட்டதற்கு இது மற்றொரு காரணம். அவர் அதைப் பற்றி எதுவும் கூற மாட்டார். அவர் முறைகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போவார், அவர் விளைவைப் பற்றி முற்றிலும் மவுனமாகவே இருப்பார். உன்னையே நீ ஏமாற்றிக் கொள்வதற்கு அவர் இடமளிக்க மாட்டார்.

இந்தப் புத்தகம், மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த புத்தகங்களுள் ஒன்றான இது, இதுநாள் வரையிலும் அறியப்படாததாகவே இருந்து வந்ததற்கு இதுவும் ஒரு காரணம். இந்த 'விஞ்ஞான் பைரவ் தந்த்ரா' இந்த உலகத்தின் மிக முக்கியத்துவம் வாய்ந்த புத்தகங்களில் ஒன்று. பைபிளோ, வேதமோ, கீதையோ அவ்வளவு முக்கியமானதல்ல. ஆனால் இது முற்றிலும் அறியப் படாததாகவே இருந்து வந்துள்ளது. காரணம்? இது எளிய முறைகளை மட்டுமே கொண்டுள்ளது. இதில் பலனைப் பற்றி

எதுவும் இல்லை. எனவே உனது பேராசை எதையும் பற்றிக் கொள்ளும் சாத்தியமில்லை.

மனம் பலனைப் பற்றிக் கொள்ளவே விரும்புகிறது. மனத்திற்கு முறையில் ஈடுபாடு கிடையாது, அது முடிவில் கிடைக்கும் பலனிலேயே ஈடுபாடு கொண்டுள்ளது. மேலும் நீ முறையைக் கடைபிடிக்காமலே தாண்டிச் சென்று பலனை அடைய முடிந்தால், மனம் மிகுந்த மகிழ்ச்சியடையும்.

யாரோ ஒருவர் என்னிடம், ''ஏன் இத்தனை முறைகள்? கபீர் சொல்லியிருக்கிறார், 'சகஜ் சமாதி பலி – சகஜமாக இரு, இயல்பாக இரு.' இயல்பான பரவசமல்லவா நல்லது, இந்த முறைகள் எல்லாம் தேவையற்றவை'' என்று சொன்னார்.

நான் அவரிடம் சொன்னேன், ''நீ 'சகஜ் சமாதி – இயல்பான பரவசம்' – அடைந்திருந்தால், அப்போது எந்த முறையும் பயனற்றது தான்; அவை தேவையில்லை தான். ஆனால் பின் எதற்கு இங்கு வந்தாய்?''

அவர் சொன்னார், ''நான் இன்னும் அடையவில்லை, ஆனால் 'சகஜ் – இயல்பானது' – சிறந்தது என்று நான் உணர்கிறேன்.'' நான் கேட்டேன், ''இயல்பானதே சிறந்தது என்று ஏன் நீ உணருகிறாய்?'' ஏனெனில் எந்த முறையும் அங்கில்லை, மனம் நீ செய்வதற்கு எதுவுமில்லை என்பதில் மகிழ்ச்சி யடைகிறது – மேலும் எதுவும் செய்யாமலே, நீ எல்லா வற்றையும் பெற முடியும்!

இதனாலேயே மேற்கத்திய நாடுகளை ஜென் மிகவும் கவர்ந்துள்ளது, கிறுக்குப் பிடிக்க வைத்துள்ளது – ஏனெனில் ஜென் சொல்கிறது, அதை முயற்சியில்லாமல் பெறு; முயற்சி செய்யவேண்டிய அவசியமில்லை. ஆனால் நினைவில் கொள், இந்த முயற்சி தேவைப்படாத நிலையை அடைய உனக்கு நீண்ட, மிக நீண்ட கால முயற்சி தேவை. எந்த முயற்சியும் தேவைப்படாத ஒரு புள்ளியை அடைய, எதுவும் செய்யாம லிருப்பதில் தொடர்ந்து இருக்கக்கூடிய ஒரு புள்ளியை அடைய,

ஒரு நீண்ட முயற்சி தேவைப்படும். ஆனால், ஜென் எந்த முயற்சியும் தேவையில்லை என்று சொல்வதாகக் கருதும் மேலோட்டமான கருத்து மேற்கை மிகவும் வசிகரித்துள்ளது. எந்த முயற்சியும் தேவையில்லை என்றால், அப்போது மனம் சொல் கிறது : இதுதான் சரியானது. ஏனெனில் நீ எதுவும் செய்யாமலே செய்துவிட முடியும். ஆனால் ஒருவரும் இதைச் செய்ய முடியாது.

'சூசுகி', ஜென்னை மேற்கே அறிமுகப்படுத்தியவர், ஒரு நல்லதும், ஒரு நன்மையற்றதும் சேர்த்துச் செய்திருக்கிறார். மேலும் அந்த நன்மையற்றது நீண்ட காலம் இருக்கும். அவர் மிகவும் ஆணித்தரமான மனிதர், இந்த நூற்றாண்டின் அசைக்க முடியாத மனிதர்களில் ஒருவர். மேலும் அவரது வாழ்நாள் முழுவதும் மேற்கே ஜென்னின் செய்தியைக் கொண்டு செல்வதற் காகவே போராடியவர். மேலும் தனியாக, அவரது சொந்த முயற்சியில், அவர் மேற்கே ஜென்னை அறியும்படி செய்தார். இப்போது அங்கே ஒரே கிறுக்குப் பிடித்துவிட்டது; மேற்கே எல்லா இடத்திலும் ஜென் நண்பர்கள் இருக்கிறார்கள். இப்போது ஜென்னைப் போலக் கவருவது எதுவும் இல்லை.

ஆனால் முக்கிய புள்ளி விடுபட்டுவிட்டது. எந்த முறையும் தேவையில்லை, எந்த முயற்சியும் தேவையில்லை என்று ஜென் சொல்லும் ஒரே காரணத்தினாலேயே இந்தக் கவர்ச்சி வந்தது. நீ எதுவும் செய்ய வேண்டியதில்லை; இயற்கையாக அது பூக்கும்.

இது சரிதான் – ஆனால் நீ இயற்கையாக இல்லை, எனவே அது ஒருபோதும் உன்னிடம் பூக்காது. இயற்கையாக இரு .... இது பார்ப்பதற்கு மடத்தனமாகவும் முரண்பட்டதாகவும் தெரிகிறது. ஏனெனில் நீ இயற்கையாக மாற பல முறைகளில் உன்னைத் தூய்மைப்படுத்த வேண்டி உள்ளது. உன்னை வெகுளித்தனம் கொண்டவனாக மாற்ற வேண்டும். அப்போது தான் நீ இயற்கையாக இருக்க முடியும், இல்லாவிட்டால் நீ எதிலும் இயற்கையாக இருக்க முடியாது.

இந்த 'விஞ்ஞான் பைரவ் தந்த்ரா' ஆங்கிலத்தில் பால் ரெப்ஸ் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டது. அவர் 'ஜென் பிளஷ், ஜென் போன்' என்ற ஒரு அழகான ஆங்கிலப் புத்தகம் எழுதினார். (ஜென்னின் சதையும் ஜென்னின் எலும்பும் என்ற புத்தகம் அது) அதன் பிற்சேர்க்கையில் அவர் இந்த 'விஞ்ஞான் பைரவ் தந்த்ரா' புத்தகத்தைச் சேர்த்துள்ளார். அந்த முழுப் புத்தகமும் ஜென்னைப் பற்றியது; அதன் பிற்சேர்க்கையில் அவர் இந்தப் புத்தகத்தையும், இந்த நூற்றிப் பன்னிரெண்டு முறைகளையும் சேர்த்துள்ளார். மேலும் அவர் இதை ஜென்னனிற்குக் கூறியுள்ளார். (முந்திய நிலையாக) இதை ஜென்னைப் பின்பற்றும் பலர் விரும்பவில்லை. ஏனெனில் அவர்கள் சொன்னார்கள், ''ஜென் எந்த முயற்சியும் தேவையில்லை என்கிறது. ஆனால் இந்தப் புத்தகம் முயற்சிகளைப் பற்றி மட்டுமே சொல்கிறது. இந்தப் புத்தகம் வழிமுறைகளை மட்டுமே குறிப்பிடுவதாக இருக்கிறது. ஆனால் ஜென் எந்த வழிமுறையும் இல்லை, எந்த முயற்சியும் தேவையில்லை என்று சொல்கிறது. எனவே இது ஜென்னிற்கு எதிரானது, ஜென்னிற்கு முந்திய நிலை அல்ல.'' மேலோட்டமாக அவர்கள் சரிதான். ஆனால் அடி ஆழத்தில் அவர்கள் தவறு. ஏனெனில் இயற்கை ஓட்டத்தின்படியான இருப்பை அடைய ஒருவன் நீண்ட தூரம் பயணப்பட வேண்டும்.

குருட்ஜிப்பின் சீடர்களில் ஒருவரான 'ஆஸ்பென்ஸ்கி', எப்பொழுதெல்லாம் யாராவது ஒருவர் அவரிடம் வந்து பாதையைப் பற்றிக் கேட்கிறார்களோ அப்பொழுதெல்லாம் கூறுவார், ''எங்களுக்குப் பாதையைப் பற்றி எதுவும் தெரியாது. நாங்கள் சில காலடித் தடங்களைப் பற்றி மட்டுமே கற்றுத் தருகிறோம், அவை பாதையை நோக்கிக் கொண்டு செல்லும். பாதை எங்களுக்கும் தெரியாது.'' நீ ஏற்கனவே பாதையில் சென்று கொண்டு இருப்பதாக நினைத்து விடாதே. பாதை இன்னும் வெகு தூரம் இருக்கிறது. நீ இருக்கும் இடத்தில் இருந்து, அந்தப் புள்ளியில் இருந்து, பாதை வெகு தூரத்தில் இருக்கிறது. எனவே முதலில் நீ பாதையை அடைய வேண்டும்.

'ஆஸ்பென்ஸ்கி' மிகவும் எளிய மனிதர், மதத்தன்மை கொண்டவராய் இருந்து அதே சமயம் எளியவனாய் இருத்தல் மிகவும் சிரமமானது – மிக மிக சிரமம். ஏனெனில் உனக்குத் தெரியும் என்று நீ உணர ஆரம்பித்த உடனேயே, தலைக்குப் பயித்தியம் பிடித்து விடுகிறது. 'ஆஸ்பென்ஸ்கி' எப்பொழுதும் சொல்வார், ''எங்களுக்குப் பாதையைப் பற்றி எதுவும் தெரியாது. அது வெகு தொலைவில் உள்ளது. மேலும் இப்போது அதைப் பற்றி ஆலோசிக்க வேண்டிய தேவை இல்லை.'' நீ எங்கிருந்தாலும் முதலில் நீ ஒரு தொடர்பை, ஒரு சிறிய பாலத்தை, ஒரு நடைபாதையை உருவாக்க வேண்டும். அது உன்னைப் பாதையிடம் கொண்டு போய் சேர்க்கும் இயற்கை ஓட்டம் – சகஜ் யோகா – என்பது உன்னிடம் இருந்து வெகு தொலைவில் உள்ளது. நீ இருக்கும் இடத்தில் நீ முழுவதும் செயற்கைத் தனமாக, வளர்க்கப்பட்ட விதமாக, நாகரிகம் அடைந்தவனாக இருக்கிறாய். எதுவும் இயற்கையான ஓட்டத்தில் இல்லை – எதுவும், நான் சொல்கிறேன் இயற்கையின் ஓட்டத்தில் இல்லை. உனது வாழ்க்கையில் எதுவும் இயற்கையின் ஓட்டத்தில் இல்லாத பொழுது, எப்படி மதம் இயற்கையின் ஓட்டத்தோடு இருக்க முடியும்? எதுவும் இயற்கையின் ஓட்டத்தில் இல்லாத பொழுது, அன்பு கூட இயற்கையின் ஓட்டத்தோடு இல்லை. அன்பு கூட விலை பேசப்படுகிறது, அன்பு கூடக் கணக்குக்குட்பட்டே இருக்கிறது, அன்பு கூட ஒரு முயற்சியாக இருக்கிறது. அப்போது எதுவுமே இயற்கையின் ஓட்டத்தோடு இருக்க முடியாது. எனவே அப்போது பேரண்ட இயக்கத்தினுள் இயற்கையான ஓட்டத்தின் படியே வெடிப்பது என்பது சாத்தியமற்றது.

நீ இருக்கும் சூழ்நிலையில், அந்தச் சூழ்நிலையிலிருந்து இது சாத்தியமற்றது. முதலில் நீ உனது எல்லா செயற்கைத்தனங்களையும் உனது எல்லா பொய்யான அணுகுமுறைகளையும் உனது எல்லா வேரோடிப் போயிருக்கிற மரபுகளையும் உனது எல்லா சார்புகளையும், நீ வீசி எறிந்துவிட வேண்டும். அப்போது மட்டுமே ஒரு இயற்கை ஓட்டத்தின்படியான நிகழ்வு சாத்தியம். நீ எதுவும் செய்வதற்குத் தேவையற்ற நிலையைக் கொடுக்கும்

ஒரு புள்ளியை அடைய உனக்கு இந்த முறைகள் உதவும் - அங்கு நீ இருப்பது மட்டுமே போதுமானது. ஆனால் மனம் ஏமாற்றி விடக் கூடும். மேலும் மனம் சுலபமாக ஏமாற்றி விடுகிறது. ஏனெனில் அப்போது அது நீ உண்மையில் அடையவில்லையென்றாலும் கூட ஒரு ஆறுதலைக் கொடுக்கிறது.

சிவா ஒருபோதும் எந்த விளைவைப் பற்றியும் பேசுவதில்லை, முறைகளையே பேசுகிறார். இந்த வலியுறுத்தலை நினைவு கொள். ஏதாவது செய், அதன் மூலம் எதுவும் செய்யத் தேவையில்லாத ஒரு கணத்தை அடைவது சாத்தியம். அப்போது உனது மைய இருப்பு பேரண்ட இயக்கத்தினுள் கரைந்து போய் விட முடியும். ஆனால் இது அடைய வேண்டிய ஒன்று. ஜென்னின் கவர்ச்சி தவறான காரணங்களுக்காக, இதுவே கிருஷ்ணமூர்த்திக்கும் பொருந்தும். ஏனெனில் அவர் எந்த யோகாவும் தேவையில்லை, எந்த முறையும் தேவையில்லை என்று சொல்கிறார். உண்மையில், தியான முறைகள் எதுவும் கிடையாது என்று அவர் சொல்கிறார், அவர் சரிதான்.

அவர் சரிதான், ஆனால் சிவா இந்த நூற்றிப் பன்னிரண்டு தியான முறைகள் உள்ளன என்று சொல்கிறார், சிவாவும் சரிதான். மேலும் உன்னைப் பொருத்தவரையில் சிவா சொல்வதே அதிகம் பொருந்தும். மேலும் நீ கிருஷ்ணமூர்த்திக்கும் சிவாவுக்கும் இடையே ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றால், அப்போது சிவாவைத் தேர்ந்தெடு. கிருஷ்ணமூர்த்தி உனக்குப் பயன்பட மாட்டார். உனக்கு உதவுவதற்காக இப்படிக் கூடச் சொல்லலாம். அதாவது கிருஷ்ணமூர்த்தி முற்றிலும் தவறு. நினைவில் கொள்: உனக்கு உதவுவதற்காக என்று நான் சொல்கிறேன். மேலும் அவரால் கெடுதலே ஏற்படும் என்றும் உனக்கு உதவுவதற்காக நான் சொல்கிறேன். ஏனெனில் நீ அவருடைய தர்க்கத்தை எடுத்துக் கொண்டால் நீ சமாதி நிலையை அடைய மாட்டாய். நீ ஒரே ஒரு முடிவையே அடைவாய். அது எந்த முறையும் தேவை இல்லை. ஆனால் அது ஆபத்தானது. உனக்கு வழிமுறை தேவை!

எந்த வழிமுறையும் தேவையில்லாத ஒரு கணம் வரும். ஆனால் அந்தக் கணம் உனக்கு இன்னும் வரவில்லை. மேலும் அந்தக் கணம் வருவதற்கு முன்பே, ஒன்றைப் பற்றித் தெரிந்து கொள்வது ஆபத்தானது. அதனால் தான் சிவா மௌனமாய் இருக்கிறார். அவர் எதிர்காலத்தைப் பற்றி, என்ன நடக்குமென்று எதுவும் சொல்ல மாட்டார். அவர் உன்னுடனேயே இருப்பவர். நீ என்னவாக இருக்கிறாய் மற்றும் உன்னிடம் செய்ய வேண்டியது என்ன என்பதோடு மட்டும் இருக்கிறார். கிருஷ்ணமூர்த்தி உன்னால் புரிந்து கொள்ள முடியாததைப் பற்றியே தொடர்ந்து பேசிக் கொண்டு இருக்கிறார்.

அவரது தர்க்கத்தை உணர முடியும். அந்த தர்க்கம் சரிதான்; அது அழகானது. நீ கிருஷ்ணமூர்த்தியின் தர்க்கத்தை நினைவில் வைத்துக் கொள்ள முடிந்தால், அது மிகவும் நல்லது. அவர் சொல்கிறார், அதாவது நீ ஏதாவது யுக்தியைச் செய்கிறாய் என்றால், அப்போது அந்த யுக்தியைச் செய்வது யார்? மனமே அதைச் செய்கிறது. மேலும் மனத்தினால் செய்யப்படும் எந்த யுக்தியினாலும் மனதை எப்படி இழக்க முடியும்? மாறாக, நேர் எதிராக அது மனதை மேலும் வலிமையாக்கும்; அது உனது மனதை அதிக வலுவுள்ளதாக்கும். அது ஒரு பயிற்சிக் குட்படுத்தப்பட்ட (Condition) ஒரு செயல் முறையாகி விடும், அது பொய்யானதாகவே இருக்கும்.

எனவே தியானம் இயற்கை ஓட்டத்தோடு கூடியது; நீ அது குறித்து எதுவும் செய்ய முடியாது. நீ அன்பைக் குறித்து என்ன செய்ய முடியும்? நீ நேசிப்பதுஎப்படி என்று எந்த முறையிலும் பயிற்சி செய்ய முடியாது. நீ பயிற்சி செய்தால், அப்போது உனது அன்பு பொய்யானதாகவே இருக்கும். அது நிகழ்வது, அதைப் பயிற்சி செய்ய முடியாது. அன்பைக் கூடப் பயிற்சி செய்ய முடியாது என்றால் எப்படிப் பிரார்த்தனையைப் பயிற்சி செய்ய முடியும்? எப்படித் தியானத்தைப் பயிற்சி செய்ய முடியும்?

இந்த தர்க்கம் முழுமையாக, மிகவும் சரியானதே - ஆனால் உனக்கு அல்ல. ஏனெனில் இந்தத் தர்க்கத்தைத் தொடர்ந்து

கேட்டுக் கொண்டிருப்பதால் நீ இந்தத் தர்க்கத்தினால் பயிற்சிகுட்படுத்தப்பட்ட (conditioning) செயல் முறை கொண்டவனாகி விடுவாய். மேலும் நாற்பது வருடங்களாக கிருஷ்ணமூர்த்தி சொல்வதைக் கேட்டுக் கொண்டிருப்பவர்கள்தான் நான் இதுவரை பார்த்ததிலேயே மிக அதிகமாகக் (conditioning) கட்டுக்குட்படுத்தப்பட்ட செயல்முறை கொண்டவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் எந்த முறையும் இல்லை என்று சொல்கிறார்கள். ஆனாலும் அவர்கள் எதையும் அடையவில்லை.

நான் கேட்டேன், ''நீங்கள் எந்த முறையும் இல்லை என்பதைப் புரிந்து கொண்டு விட்டீர்கள், மேலும் நீங்கள் எந்த முறையையும் பயிற்சி செய்வதில்லை. ஆனால் உங்களில் இயற்கையான ஓட்டம் மலர்ந்து விட்டதா?'' அவர்கள் சொன்னார்கள், ''இல்லை!''

நான் அவர்களிடம், அப்படியானால் ஏதாவது முறையைப் பயற்சி செய்யுங்கள் என்று சொன்னால் உடனே அவர்களின் கட்டுக்குட்படுத்தப்பட்ட செயல்முறை உள்ளே வரும். அவர்கள் சொல்வார்கள், எந்த முறையும் கிடையாது.''

அவர்கள் எந்த வழிமுறையையும் பயிற்சி செய்யவில்லை. ஆனால் சமாதி நிலையும் கிடைக்கவில்லை. நீ அவர்களிடம் அப்படியானால் ஏதாவது ஒரு வழிமுறையை முயற்சி செய்யுங்களேன் என்று சொன்னால், அவர்கள் முறை எதுவும் கிடையாது என்கிறார்கள். எனவே அவர்கள் குழப்பத்தில் இருக்கிறார்கள். அவர்கள் சிறிது கூட நகரவில்லை. அதன் காரணம், அவர்களுக்கு ஆகாதது அவர்களிடம் சொல்லப் பட்டதுதான்.

இது சிறிய குழந்தைக்குப் பாலுணர்ச்சியைப் பற்றிச் சொல்லித் தருவது போன்றது. நீ சொல்லிக் கொடுத்துக் கொண்டே போகலாம். ஆனால் இன்னும் அந்தக் குழந்தைக்கு அர்த்தத்தைக் கொடுக்காத ஏதோ ஒன்றை நீ சொல்லிக் கொண்டிருக்கிறாய். மேலும் உனது கற்பித்தல் ஆபத்தானது. ஏனெனில் நீ அதன் மனதைக் கட்டுப்படுத்துகிறாய். அந்தக் குழந்தைக்குப் பாலுணர்ச்சி

என்றால் என்ன அர்த்தம் என்பது தெரியாது. ஏனெனில் அதனுடைய சுரப்பிகள் இன்னும் செயல்படத் துவங்கவில்லை. அதன் உடல் இன்னும் பாலுணர்ச்சி கொண்டதாக மாறவில்லை. அதனுடைய சக்தி உடல் ரீதியாக இன்னும் பாலுணர்வு மையத்திற்கு நகரவில்லை. ஆனால் நீ அதனிடம் பேசிக் கொண்டிருக்கிறாய். அதற்குக் காதுகள் இருப்பதனால், நீ எதை வேண்டுமானாலும் கற்றுத் தரலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? அது தலையை ஆட்டுவதால் நீ எதை வேண்டுமானாலும் கற்றுத் தரலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா?

நீ கற்றுக் கொடுக்க முடியும், மேலும் நீ கற்றுத் தருவது ஆபத்தாகவும், கெடுதலாகவும் ஆக முடியும். பாலுணர்ச்சி அதன் தேடல் அல்ல, அது அதற்கு ஒரு பிரச்சனை அல்ல. அது பாலுணர்ச்சி முக்கியமானதாக மாறுகின்ற அளவிற்கு இன்னும் வளர்ச்சி அடையவில்லை. பொறு! அது தேட ஆரம்பிக்கும் பொழுது, அது வளர்ந்துவிட்ட பொழுது, அது கேள்விகள் கேட்க ஆரம்பிக்கும் பொழுது, அப்போது அதனிடம் சொல். மேலும் ஒருபோதும் அது புரிந்து கொள்ளும் அளவிற்கு மேல் சொல்லாதே. ஏனெனில் அந்த அதிகப்படியானது அதன் தலையில் பாரமாகி விடும். தியானத்திற்கு இதுவே பொருந்தும்.

உனக்கு மட்டுமே கற்றுத் தரலாம், விளைவுகளைப் பற்றி அல்ல - அது தாண்டிச் செல்வது ஆகிவிடும். வழிமுறையில் காலூன்றாமல் தாண்டுவது வெறும் ஒரு மூளை விஷயம். மனத்தின் செயலாக ஆகிவிடும். அதன் பின் நீ எப்பொழுதும் வழிமுறையைத் தவற விட்டு விடுவாய்.

இது சிறு குழந்தைகள் கணக்குப் பாடம் படிப்பதைப் போலத்தான். அவர்கள் கணக்குப் புத்தகத்தின் கடைசிப் பக்கங்களைப் புரட்டிப் பார்த்து விடையைத் தெரிந்து கொள்ள முடியும். விடை புத்தகத்தின் கடைசியில் கொடுக்கப்பட்டிருக்கும். அவர்கள் கேள்வியைப் பார்த்துவிட்டு, பிறகு கடைசியில் புரட்டி விடையைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் ஒரு

குழந்தை விடையைத் தெரிந்து கொண்டு விட்டால், பிறகு அது கணக்குப் போடும் முறையைக் கற்றுக் கொள்வது மிகவும் கடினம். ஏனெனில் அதற்குத் தேவையில்லை என்றாகிவிடுகிறது. அதற்கு ஏற்கனவே விடை தெரியும்போது, வழி தேவை யில்லை.

பிறகு உண்மையில், அந்தக் குழந்தை முழு விஷயத்தையும் தலைகீழ் வரிசையில் செய்யும். பிறகு ஏதாவது ஒரு பொய்யான, போலியான வழிமுறை மூலம் அது விடையைக் கொண்டு வரும். அதற்கு அடைய வேண்டியது தெரியும், அதற்கு விடை தெரியும், எனவே அது ஒரு இல்லாத வழியை உருவாக்கிக் கொண்டு விடையை அடைந்துவிட முடியும். இது மதத்தைப் பொருத்தவரை மிகவும் அதிகம். மேலும் இதைப் பார்க்கையில், மதத்தைப் பொருத்தவரை எல்லோரும் குழந்தைகள் செய் வதையே செய்து கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது.

எனவே விடையை அறிந்துகொள்வது உனக்கு நல்லதல்ல. கேள்வி அங்கே இருக்கிறது, வழிமுறை அங்கே இருக்கிறது, விடையை நீதான் சென்றடைய வேண்டும். வேறு யாரும் விடையை உனக்குக் கொடுக்கக் கூடாது. உண்மையான ஆசிரியர்கள் வழிமுறையைச் செய்வதற்கு முன்னால் விடையைத் தெரிந்துகொள்ள உதவ மாட்டார்கள், அவர்கள் நீ வழிமுறைப் படி போகவே உதவுவார்கள். உண்மையில், எப்படியாவது நீ தெரிந்து கொண்டு விட்டால் கூட, எங்கிருந்தாவது நீ விடை யைத் திருடியிருந்தாலும் கூட, அவர்கள் அந்த விடை தவறு என்றே சொல்வார்கள். அது சரியானதாக இருக்கலாம், ஆனால் அவர்கள் சொல்வார்கள், ''இது தவறு. இதை எறிந்துவிடு – இது தேவையில்லை.'' அவர்கள், நீயாக உண்மையான விடையை அறிவதற்கு முன்பு, உன்னை அதைத் தெரிந்து கொள்ள அனுமதிக்க மாட்டார்கள். அதனால்தான் எந்தப் பதிலும் கொடுக்கப்படவில்லை.

சிவாவின் அன்பிற்குரியவள், தேவி, அவரிடம் கேள்விகள் கேட்கிறாள். அவர் எளிய வழிமுறைகளைக் கொடுக்கிறார்.

கேள்வி அங்கிருக்கிறது, முறை அங்கிருக்கிறது. விடை, நீ வேலை செய்து தெரிந்துகொள்ள, வாழ்ந்து பார்த்து அறிந்து கொள்ள, உன்னிடமே விடப்பட்டுள்ளது.

எனவே நினைவில் கொள், மையம் கொள்ளுதல் என்பது வழிமுறை, பலன் அல்ல. பலன் பேரண்ட இயக்கம், பெருங் கடல் அனுபவம். அப்போது மையம் எதுவும் கிடையாது.

**இரண்டாவது கேள்வி :**

---

❖ **ஒருவனால் உண்மையாக அன்போடு இருக்க முடிந்தால், அப்போது அன்பு மட்டுமே போதும், இந்த நூற்றிப் பன்னிரண்டு தியான முறைகளும் அவசியமில்லை என்று நீங்கள் சொன்னீர்கள். நீங்கள் உண்மையான அன்பு எது என்று விளக்கம் அளித்தபடி, எனக்கு அத்தகைய அன்பு இருப்பதாக நான் உணர்கிறேன், நான் நம்புகிறேன். ஆனால் அன்பில் நான் அனுபவிக்கும் ஆழமான நிறைவுக்கு முற்றிலும் மாறுபட்ட பரிமாணம் கொண்டதாகத் தியானத்தில் எதிர்ப்படும் பரவசம் இருப்பதாக நான் உணர்கிறேன். மேலும் என்னால் தியானம் செய்யாமல் இருப்பதைக் கற்பனையில் கூடச் செய்ய முடியாது. எனவே எப்படித் தியானமில்லாமல் அன்பு மட்டுமே போதும் என்பதை இன்னும் கொஞ்சம் அதிகமாக விளக்குங்கள்.**

---

பல விஷயங்கள் புரிந்து கொள்ளப்பட வேண்டும். ஒன்று, நீ உண்மையிலேயே அன்போடு இருந்தால் தியானத்தைப் பற்றிய தேடலே உன்னிடம் இருக்காது – ஏனெனில் அன்பு அவ்வளவு முழுமையான நிறைவைத் தரும். ஆகவே ஏதாவதொன்று இல்லை என்றோ, எந்த இடைவெளியையாவது நிரப்ப வேண்டும் என்றோ, இன்னும் ஏதோவொன்று வேண்டும் என்றோ, நீ ஒருபோதும் உணரமாட்டாய். நீ இன்னும் ஏதோவொன்று வேண்டும் என்று நீ உணர்ந்தால், அந்த இடைவெளி அங்கிருக்கிறது. இன்னும் ஏதோவொன்று செய்ய வேண்டியுள்ளது, அனுபவிக்க வேண்டியுள்ளது என்று நீ

உணர்ந்தால், அப்போது அன்பு இருப்பதான உணர்ச்சி மட்டுமே உள்ளது, உண்மையாக அது இல்லை. நான் உனது நம்பிக்கையை சந்தேகிக்கவில்லை, நீ அன்போடு இருப்பதாக நீ நம்பிக் கொண்டிருக்கலாம். உனது நம்பிக்கை ஆணித்தரமானது; நீ யாரையும் ஏமாற்றவில்லை. நீ அன்போடு இருப்பதாக நீ உணர்கிறாய். ஆனால் உனது அறிகுறிகளை வைத்துப் பார்த்தால் உன்னிடம் அது இல்லை.

அன்போடு இருப்பதற்கான அறிகுறிகள் என்னென்ன? மூன்று விஷயங்கள். முதலாவது, பரிபூரண நிறைவு. வேறு எதுவும் தேவையில்லை; கடவுள் கூடத் தேவையில்லை. இரண் டாவது, எதிர்காலமற்று இருப்பது. அன்பின் இந்தக் கணமே அழிவற்றது என்று இருப்பதாக இருக்கிறது. அடுத்த கணம், எதிர்காலம், நாளை எதுவுமில்லை. அன்பு நிகழ்காலத்தில் மட்டுமே நிகழ்வது. மூன்றாவது, நீ இருக்க மாட்டாய், நீ இல்லாமல் போய்விடுவாய். இன்னும் நீ இருந்தால், அப்போது இன்னும் நீ அன்பின் கோயிலில் அடியெடுத்து வைக்கவில்லை.

இந்த மூன்று விஷயங்களும் நடந்தால்.... நீ இல்லை யென்றால், பிறகு யார் தியானம் செய்யப் போவது? எதிர்காலம் இல்லையென்றால், பிறகு எல்லா முறைகளும் பயனற்றவை. ஏனெனில் முறைகள் எதிர்காலத்திற்கானவை, பலனுக்கானவை. மேலும் இந்தக் கணத்திலேயே நீ நிறைவோடிருந்தால், பரிபூரண நிறைவோடிருந்தால், எதையாவது செய்வதற்கான உந்துதல் எங்கிருந்து வரும்?

உளவியலாளர்கள் பள்ளி ஒன்று இருக்கிறது – நவீன சிந்தனையின் மிக முக்கியமான ஒரு திசைகாட்டலாக இது இருக்கிறது – இது 'வில்லியம் ரிச்'சால் ஆரம்பிக்கப்பட்டது. அவர் சொன்னார் அதாவது எல்லா மனவியாதிகளும் அன்பின் பற்றாக்குறையினாலேயே ஏற்படுகிறது. ஏனெனில் நீ ஆழமான அன்பை உணர முடியாத போது நீ அதில் முழுமையாக இல்லாத பொழுது, இந்த நிறைவடையாத இருத்தல் பல பரிமாணங் களிலும் நிறைவுக்காக ஏங்குகிறது.

நான், ''நீ அன்போடு இருந்தால் எதுவும் தேவையில்லை'' என்று சொல்லும் பொழுது, அன்பு மட்டுமே போதும் என்ற அர்த்தத்தில் சொல்வதில்லை. நான் சொல்வதன் அர்த்தம், அதாவது நீ ஆழமான அன்பு கொண்டிருந்தால் அன்பு ஒரு வாயிலாக மாறுகிறது – எந்தத் தியான முறையையும் போல. தியானம் என்ன செய்யப் போகிறது? இந்த மூன்று விஷயங் களைத்தான் : அது நிறைவை உண்டாக்கும்; அது உன்னை நிகழ்காலத்தில் இருக்கச் செய்யும், நீ நிகழ்காலத்தில் இருக்க உதவி புரியும்; மேலும் அது உன்னுடைய அகந்தையை அழிக்கும். இந்த மூன்று விஷயங்களையே தியானம் செய்யப் போகிறது – ஏதாவது ஒரு முறையில். எனவே நீ இதை இந்த விதமாகக் கூறலாம் : அன்பு இயற்கையான முறை. இயற்கையான முறையை விட்டுவிட்டால், அப்போது செயற்கை முறைகள் வழங்கப்பட வேண்டும்.

ஆனால் ஒருவன் அவன் அன்போடு இருப்பதாக உணர்ந்து கொள்ள முடியும்; அப்போது அதை முடிவு செய்ய இந்த மூன்று விஷயங்களும் அவனுக்கு உதவும். அவன் இவைகளை உரை கல்லாக ஆக்கிக் கொள்ள வேண்டும், அளவுகோலாகப் பயன் படுத்த வேண்டும். மேலும் இவை மூன்றும் நிகழ்கின்றனவா என்று ஆழ்ந்து கவனிக்க வேண்டும். இவை நடக்காவிட்டால், அப்போது அவனது உணர்வு வேறு பல விஷயங்களாகவும் இருக்கலாம், அது அன்பு அல்ல. மேலும் அன்போடு இருக்கும் உணர்வு ஒரு மாபெரும் நிகழ்வு, அது பல விஷயங்களாகவும் இருக்கலாம். அது காமமாக இருக்கலாம்; அது வெறும் பாலுணர்வாக இருக்கலாம்; அது ஒரு உடமை கொள்ளும் தன்மையாய் இருக்கலாம். அது நீ தனியாக இருப்பதால் தேவைப்படும் ஒரு செயலாக இருக்கலாம். மேலும் உனக்கு யாராவது ஒருவர் தேவை. ஏனெனில் நீ பயப்படுகிறாய், உனக்குப் பாதுகாப்பு தேவைப்படுகிறது. மற்றவர்கள் உன்னுடன் இருப்பது பாதுகாப்பு உணர்வைக் கொடுக்கிறது. அல்லது அது வெறும் பாலுணர்ச்சி உறவாக இருக்கலாம்.

சக்திக்கு வெளியேறும் வழிகள் தேவை. சக்தி சேர்ந்து கொண்டே போகிறது - அப்போது அது ஒரு சுமையாகி விடுகிறது. நீ அதை எறிய வேண்டும், விடுவிக்க வேண்டும். எனவே உனது அன்பு வெறும் விடுவிப்பதாகக் கூட இருக்கலாம். அன்பு பல விஷயங்களாகவும் இருக்க முடியும். மேலும் அன்பு பல விஷயங்களைக் கொண்டிருக்கிறது. மேலும் சாதாரணமாக, அன்பு பல விஷயங்களைக் கொண்டிருக்கிறது அன்பைத் தவிர. எனக்கு அன்பு என்றால் தியானம். எனவே இதை முயற்சி செய் : உனது அன்பிற்குரியவருடன் தியானத்தில் இரு. எப்பொழுதெல்லாம் உனது அன்பிற்குரியவர் உன்னோடு இருக்கிறாரோ, அப்பொழுதெல்லாம் ஆழமான தியானத்தில் இரு. இப்படிச் சேர்ந்திருப்பதை இருவரும் தியானமாக்கிக் கொள்ளுங்கள்.

சாதாரணமாக நீ நேர் எதிரானதைச் செய்கிறாய். நேசிப்பவர்கள் ஒன்றாக இருக்கும் பொழுது அவர்கள் எப்பொழுதும் சண்டையிட்டுக் கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் பிரிந்து இருக்கும் பொழுது ஒருவரையொருவர் நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள், அவர்கள் சேர்ந்து இருக்கும் பொழுது அவர்கள் சண்டையிடுகிறார்கள். அவர்கள் மறுபடியும் பிரியும் பொழுது, மறுபடியும் ஒருவரையொருவர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் மறுபடியும் ஒன்று சேர்ந்தால் மறுபடியும் சண்டை துவங்குகிறது. இது அன்பல்ல!

எனவே நான் சில ஆலோசனைகள் கூறுகிறேன். உனது அன்பிற்குரியவர் உன்னோடு இருப்பதை ஒரு தியான நிலையாக மாற்று. மௌனமாக இரு. நெருங்கி இரு, ஆனால் மௌனமாக இரு. இருவரும் சேர்ந்திருப்பதை மனதை விட்டுவிடப் பயன் படுத்து; யோசிக்காதே. நீ நேசிப்பவருடன் இருக்கும் பொழுது நீ யோசித்துக் கொண்டிருந்தால், அப்போது நீ நேசிப்பவருடன் அங்கு இல்லை. எப்படி நீ அங்கு இருக்க முடியும்? நீங்கள்

இருவரும் ஒரே இடத்தில் இருந்தாலும் வெகு தூரம் விலகி இருக்கிறீர்கள். நீ உன்னுடைய எண்ணங்களை யோசித்துக் கொண்டும், உன் அன்பிற்குரியவர் அவருடைய எண்ணங்களை யோசித்துக் கொண்டும் இருக்கிறீர்கள். நீங்கள் அருகருகில் இருப்பது போல் தோன்றுகிறீர்கள். ஆனால் நீங்கள் அப்படி இல்லை – ஏனெனில் இரண்டு மனங்கள் யோசித்துக் கொண் டிருக்கும்போது அவை ஆளுக்கொரு துருவத்தில் இருக்கும். உண்மையான அன்பு என்பது யோசிப்பது நின்று விடுவது. உனது அன்பிற்குரியவர் இருக்கையில், யோசிப்பதை முற்றிலும் நிறுத்தி விடு; அப்போது மட்டுமே நீ அருகிலிருக்கிறாய். அப்போது திடீரென நீங்கள் ஒன்றாகி விடுகிறீர்கள், பிறகு உடல்கள் உங்களைப் பிரிக்க முடியாது. அப்போது உடம்பின் அடி ஆழத்தில் உள்ள தடை உடைக்கப்படுகிறது. மௌனம் தடையை உடைத்து விடுகிறது – இது ஒரு விஷயம்.

உங்களது உறவு கொள்ளுதலைப் புனிதமான நிகழ்ச்சியாக ஆக்குங்கள். நீ உண்மையிலேயே அன்பு கொள்கையில் நீ அன்பு கொள்ளும் பொருள் தெய்விகமாக மாறுகிறது. அப்படி மாறா விட்டால், அப்போது அது ஒரு அன்பான உறவல்ல என்பதை நன்றாகத் தெரிந்து கொள்; அது அன்பாக இருக்க சாத்தியமே இல்லை. உறவு அன்பானதாயிருந்தால் அந்த உறவு புனிதமற்றது அல்ல. ஆனால் நீ எப்பொழுதாவது உனது அன்பிற்குரியவரைப் புனிதமானவராக உணர்ந்திருக்கிறாயா? நீ மற்ற பலவாறாக உணர்ந்து இருக்கலாம், ஆனால் ஒருபோதும் புனிதமானவராக உணர்ந்ததில்லை.

இது நினைத்துப் பார்க்க முடியாததாகத் தெரிகிறது, ஆனால் இந்தியா பல வழிகளில் முயற்சித்திருக்கிறது.... அதனால்தான் இந்தியாவில் இந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலான அன்பான உறவு ஒரு புனிதமான நிகழ்ச்சியாக இருக்க வற்புறுத்தப்பட்டு வருகிறது. இது சாதாரண உலக

உறவு அல்ல. அன்பிற்குரியவர், அன்பு செலுத்துபவர், இருவரும் தெய்விகமாகி விடுகிறார்கள். நீ அவர்களை வேறு எந்த விதமாகவும் பார்க்க முடியாது.

நான் ஆச்சரியப்படுகிறேன், நீ எப்படி உனது மனைவியைப் பற்றி ஏதாவது புனிதமாக உணர முடியும்? அந்த விஷயமே முட்டாள்தனமாகத் தெரிகிறது – ஒரு மனைவியிடம் புனிதமா? அந்தக் கேள்வியே எழுவதில்லை. நீ அவள் தவறென்று உணரலாம், நீ எதை வேண்டுமானாலும் உணர முடியும். ஆனால் ஒரு போதும் புனிதத்தை அல்ல. இந்த உறவு உலகத்தைச் சேர்ந்தது மட்டுமே; நீங்கள் ஒருவரையொருவர் பயன்படுத்திக் கொள்கிறீர்கள். நான் கணவனுக்கு மரியாதை கொடுக்கிறேன் என்று மனைவி சொல்லலாம், ஆனால் நான் உண்மையிலேயே மரியாதை கொடுக்கும் ஒரு மனைவியைக் கூடக் கண்டதில்லை. மரபுப்படி கணவனுக்கு மரியாதை கொடுப்பது என்ற வழக்கத்தின் காரணத்தால், மனைவி மரியாதை கொடுப்பதாகச் சொல்லிக் கொள்கிறாள், மேலும் அதனால் அவள் அவனுடைய பெயரைக் கூடச் சொல்ல மாட்டாள். மரியாதையினால் அல்ல, ஏனெனில் அவள் எதையும் சொல்வாள், ஆனால் அவள் அவன் பெயரை மரபு காரணமாகவே சொல்வதில்லை.

எனவே இரண்டாவது விஷயம் புனிதம். உனது அன்பிற்குரியவரின் முன்னிலையில் புனிதத்தை உணரு. உன்னால் தெய்விகத்தை உனது அன்பிற்குரியவரிடம் காண முடியவில்லையென்றால் நீ வேறு எங்கும் அதைக் காண முடியாது. எப்படி நீ அதை ஒரு மரத்தில் காண முடியும்? அங்கு எந்தத் தொடர்பும் இல்லை. ஆழமான, நெருக்கமான தொடர்பு இல்லாதிருக்கையில் எப்படி நீ அதை ஒரு பாறையிடமோ அல்லது ஒரு மரத்தினிடமோ காண முடியும்? நீ தொடர்ந்து இருக்கிறாய். உன்னால் நீ நேசிக்கும் ஒருவரிடம் அதைக் காண முடியவில்லை

என்றால், அங்கு நீ கடவுளை உணரமுடியவில்லை என்றால், அவரை நீ வேறு எங்குமே உணர முடியாது. மேலும் அவரை அங்கு உணர முடிந்தால், விரைவில் அல்லது சிறிது தாமதமாக நீ அவரை எங்கும் உணர்வாய் – ஏனெனில் ஒரு முறை கதவு திறந்துவிட்டால், ஒரு முறை நீ கணநேர தெய்விக தரிசனத்தை ஏதாவது ஒருவரிடம் பெற்று விட்டால், அப்போது நீ அந்தக் கணநேர தரிசனத்தை மறக்க முடியாது. மேலும் அதனால், பிறகு எல்லாமே ஒரு வாயிலாக மாறிவிடும். இதனால் தான் நான் அன்பே ஒரு தியானம் என்று சொல்கிறேன்.

மேலும் மாறுபட்டவைகளாக இவைகளை எண்ணாதே. அன்பாக இருப்பதா அல்லது தியானம் செய்வதா என்று யோசிக்காதே. அதுவல்ல என்னுடைய அர்த்தம். அன்பு கொள்வதா அல்லது தியானம் செய்வதா என்று தேர்ந்தெடுக்க முயற்சி செய்யாதே. அன்போடு தியானம் செய் அல்லது தியானத் தோடு அன்பு கொள். எந்தப் பிளவையும் உண்டாக்காதே. அன்பு மிகவும் இயற்கையான நிகழ்வு. எனவே அதை ஒரு வாகனமாகப் பயன்படுத்த முடியும். தந்த்ரா அதை ஒரு வாகனமாகப் பயன் படுத்தி உள்ளது – அன்பு மட்டுமல்ல, பாலுணர்வைக் கூட தந்த்ரா ஒரு வாகனமாகப் பயன்படுத்தி உள்ளது.

தந்த்ரா சொல்கிறது, அதாவது ஒரு ஆழமான கலவியின் போது நீ மனதின் மற்ற எல்லா நிலைகளையும் விட அதிக சுலபமாகத் தியானம் செய்ய முடியும் – ஏனெனில் இது இயற்கை யான, உடல் ரீதியான பரவச நிலை. ஆனால் கலவியைப் பற்றி அறியப்பட்டிருக்கும் எல்லாமே மிகவும் வக்கிரம் பிடித்ததாகவே உள்ளது. எனவே எப்பொழுதெல்லாம் அவை போன்றவை சொல்லப்படுகின்றனவோ அப்பொழுதெல்லாம் நீ சங்கடத்தை உணருகிறாய். ஏனெனில் நீ பாலுணர்வின் பெயரால் அறிந் துள்ளவை எல்லாம் பாலுணர்வு அல்ல. அது வெறும் நிழல், ஏனெனில் இந்த முழு சமூகமும் உனது மனதைப் பாலுணர்வுக்கு எதிராகப் பண்படுத்தி உள்ளது.

எல்லோரும் அடக்கி வைத்துள்ள நபர்களே. எனவே இயற்கையான பாலுணர்வு சாத்தியம் அற்றது. மேலும் நீ கலவியில் ஈடுபட்டிருக்கும் போதெல்லாம் ஒரு ஆழமான குற்ற உணர்வு எப்பொழுதும் அங்கிருக்கிறது. அந்தக் குற்ற உணர்வு ஒரு தடையாக மாறிவிடுகிறது. அதனால் மிகப் பெரிய வாய்ப்புகளில் ஒன்றை இழந்து விடுகிறாய். நீ உனக்குள் அடி ஆழத்திற்குச் செல்ல இதைப் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம்.

தந்த்ரா சொல்கிறது, கலவியின் போது தியானத்தில் இரு. முழு நிகழ்வையும் புனிதமானதாக உணரு; குற்ற உணர்வு கொள்ளாதே. பதிலாக, இயற்கையின் ஆசீர்வாதத்தால் உனக்கு ஒரு வழி உள்ளதை உணரு. மேலும் அதன் மூலமாக நீ பரவசத்திற்குள் ஆழமாக உடனே போக முடியும். மேலும் அப்போது, அதில் முழுமையான சுதந்திரத்தோடு இரு. எதையும் அமுக்கி வைக்காதே, எதையும் அடக்காதே. பாலுணர்வுப் பரிமாற்றம் உன்னைத் தன் கையில் எடுத்துக் கொள்ளட்டும். உன்னை மறந்து விடு, உன்னிடம் உள்ள இயற்கைக்கு எதிரானவைகளையெல்லாம் எறிந்து விடு. பரிபூரண இயற்கை யாய் இரு, அப்போது ஒரு ஆழமான இசையை உடலில் நீ உணர்வாய்.

இரண்டு உடல்களும் ஒரே ஒத்திசைவை அடையும் பொழுது, நீ இருப்பதையே முற்றிலுமாக நீ மறந்து விடுவாய் – ஆனாலும் இன்னும் நீ இருப்பாய். அப்போது நீ 'நான்' என்பதை மறந்து விடுவாய்; அங்கு 'நான்' என்பது இருக்காது, வெறும் பிரபஞ்ச இருப்பு பிரபஞ்ச இருப்புடன் விளையாடிக் கொண்டிருக்கும், ஒரு இருத்தல் மற்றொன்றுடன். மேலும் அந்த இரண்டும் ஒன்றாகி விடும். எந்தச் சிந்தனையும் அங்கு இருக்காது; எதிர்காலம் நின்று விடும். நீ இந்தக் கணத்தில் இருப்பாய். எந்தக் குற்ற உணர்வும் இல்லாமல், இயற்கைக்கு எதிரானது எதுவும் இல்லாமல், அதை ஒரு தியானமாக்கு,

அப்போது பாலுணர்வு உயர்ந்த நிலைக்கு மாறும். அப்போது பாலுணர்வே ஒரு வாயிலாக மாறும்.

பாலுணர்வு ஒரு வாயிலாக மாறிவிட்டால், கொஞ்சம் கொஞ்சமாகப் பாலுணர்வு பாலுணர்ச்சி ஊட்டுவதாக இருப்பது நின்றுவிடும். மேலும் பாலுணர்வு உன்னை விட்டுப் போய் விடும் ஒரு கணம் வரும் – அதன் வாசனை மட்டும் இருக்கும். அந்த வாசனை தான் அன்பு. மேலும் சிறிது காலத்தில், அந்த வாசனையும் மறைந்து போய்விடும், அப்போது எது இருக்கிறதோ அதுவே சமாதி நிலை.

தந்த்ரா சொல்கிறது, எதையும் பகைவனாக எடுத்துக் கொள்ளக் கூடாது. எல்லா சக்தியும் நட்பானதே; அதை எப்படிப் பயன்படுத்துவது என்று மட்டும் ஒருவன் அறிந்துகொள்ள வேண்டும். எனவே எதையும் தேர்ந்தெடுக்காதே. உனது அன்பை தியானமாக மாற்று. மேலும் உனது தியானத்தை அன்பாக மாற்று. அப்போது விரைவில் நீ சொல்லை மறந்து விடுவாய். நீ உண்மையானதை, வார்த்தை அல்லாததை அறிவாய். அன்பு என்ற சொல் அன்பல்ல, தியானம் என்ற சொல் தியானமல்ல, மேலும் கடவுள் என்ற சொல் கடவுளல்ல. இவை எல்லாம் வெறும் வார்த்தைகள். மேலும் நீ உள்ளே ஊடுருவ முடிந்தால் அப்போது கடவுள், தியானம், அன்பு இவை அனைத்தும் ஒன்றாகி விடும்.

இன்னும் ஒரு கேள்வி : மனிதனுடைய உணர்வற்ற தன்மைக்கான காரணங்கள் என்ன, மேலும் அவற்றை எப்படி நீக்குவது?

ஒரு குழந்தை பிறக்கும்பொழுது அந்தக் குழந்தை நிராதர வாக இருக்கிறது. குறிப்பாக மனித குழந்தை முற்றிலும் நிராதரவாக இருக்கிறது. அது உயிரோடு இருப்பதற்கு, மற்றவர் களைச் சார்ந்தே ஆக வேண்டும். இந்தச் சார்ந்திருத்தல் ஒரு

பேரம், ஒரு கொடுக்கல் வாங்கல். குழந்தை இந்தப் பேரத்தில் பல விஷயங்களைக் கொடுக்க வேண்டும், அதில் உணர்வோடு இருப்பதும் ஒன்று. குழந்தை நுட்ப உணர்வோடு இருக்கிறது, அதனுடைய முழு உடலும் நுட்ப உணர்வோடு இருக்கிறது. ஆனால் அது ஆதரவற்றது, அது தனியாக இருக்க முடியாது; அது பெற்றோர்களை, குடும்பத்தை, சமூகத்தைச் சார்ந்தே ஆக வேண்டும்; அது சார்ந்தே இருந்தாக வேண்டும். இந்தச் சார் பாலும், ஆதரவற்ற நிலையினாலும், பெற்றோர்களும் சமூகமும் குழந்தையின் மீது பலவற்றைத் திணித்துக் கொண்டே போகிறார்கள். மேலும் அதற்கு அந்தக் குழந்தை விட்டுக் கொடுத்தே ஆக வேண்டும். இல்லாவிட்டால் அது தொடர்ந்து வாழ முடியாது, அது இறந்து விடும். எனவே இந்த பேரத்தில் அது பல விஷயங்களைக் கொடுத்தாக வேண்டும். இதில் முதலாவது மிகவும் ஆழமான மற்றும் முக்கியமான விஷயம் நுட்ப உணர்வு; அது அதை விட வேண்டும். ஏன்? ஏனெனில் ஒரு குழந்தை எந்த அளவு அதிக உணர்வுடையதாய் இருக்கிறதோ அந்த அளவு அது சிரமப்படும், அந்த அளவு அது பாதுகாப்பற்று இருக்கும். ஒரு சிறிய உணர்ச்சி, உடனே அது அழ ஆரம்பித்து விடும். அந்த அழுகையைப் பெற்றோர்கள் நிறுத்தியாக வேண்டும். மேலும் அவர்கள் எதுவும் செய்ய முடியாது. ஆனால் குழந்தை ஒவ்வொரு உணர்ச்சியையும் துல்லியமாக உணர ஆரம்பித்தால், அந்தக் குழந்தை ஒரு தொந்தரவாகப் போய்விடும். மேலும் குழந்தைகள் தொந்தரவாகி விடுகின்றனர். எனவே பெற்றோர்கள் அவைகளின் நுட்ப உணர்வுகளைத் துண்டிக்க வேண்டி உள்ளது. ஒரு குழந்தை தன்னையே எதிர்க்கக் கற்றுக்கொள்ள வேண்டும், அது கட்டுப் படுத்தக் கற்றுக்கொள்ள வேண்டும். மேலும் கொஞ்சம் கொஞ்ச மாகக் குழந்தை அதனுடைய மனதை இரண்டாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். பல உணர்ச்சிகளை உணர்வதை அது நிறுத்திக் கொள்கிறது. ஏனெனில் அவை 'நல்லவை' அல்ல – அதற்காக இது தண்டிக்கப்படுகிறது.

ஒரு குழந்தையின் முழு உடம்பும் உணர்ச்சி நிறைந்தது. அது அதனுடைய விரல்களை அனுபவிக்க முடியும். அது அதனுடைய உடலை அனுபவிக்க முடியும்; முழு உடலும் உணர்ச்சியால் நிறைந்துள்ளது. அது அதனுடைய உடலைத் தொடர்ந்து அறிந்துகொள்ள முற்படுகிறது; அதற்கு இது மாபெரும் நிகழ்வு. அது அதனுடைய அறிந்து கொள்ளும் முயற்சியில் ஒரு குழந்தை பிறப்புறுப்பை அடையும் ஒரு கணம் வருகிறது. அப்போது அது ஒரு பிரச்சனை ஆகிவிடுகிறது. ஏனெனில் தாய் தந்தை இருவருமே அடக்கி வைத்திருப்பவர்கள். ஒரு ஆண் அல்லது பெண் குழந்தை பிறப்புறுப்பைத் தொடும் கணத்தில், அதன் பெற்றோர்கள் சங்கடம் அடைகிறார்கள். இதை ஆழமாகக் கூர்ந்து கவனிக்க வேண்டும். அவர்களது நடவடிக்கை திடீரென மாறுகிறது, மேலும் அதைக் குழந்தை கவனிக்கிறது. ஏதோ தவறு நடந்துவிட்டது. அவர்கள் 'தொடாதே!' என்று கத்துகிறார்கள். அப்போது குழந்தை, பிறப்புறுப்பில் ஏதோ தவறு இருப்பதாக உணர ஆரம்பிக்கிறது, அது அடக்கிக் கொள்கிறது. மேலும் பிறப்புறுப்பு உனது உடலில் மிகவும் நுட்ப உணர்வு உடைய பகுதி – மிக அதிக உணர்வுள்ளது, உனது உடலில் அதிக உயிர்த் துடிப்புள்ள பகுதி, அதிக மென்மையானது. ஒரு குழந்தையின் பிறப்புறுப்பைத் தொட்டு அனுபவிக்க அனுமதிக்க வில்லையென்றால், நீ நுட்ப உணர்வின் மூலாதாரத்தையே கொன்று விடுகிறாய். பிறகு அந்தக் குழந்தை உணர்வற்றதாக மாறி விடுகிறது, அது வளர வளர அதன் உணர்வற்ற தன்மையும் வளர்கிறது.

எனவே முதலில் அங்கு ஒரு பேரம் – தேவையானது ஆனால் கெட்டது. எனவே இதைப் புரிந்துகொள்ள ஆரம்பித்த கணத்தில் இருந்து, இந்தப் பேரத்தை எறிந்து விட வேண்டும். மேலும் நீ உனது நுட்ப உணர்வைத் திரும்பப் பெற வேண்டும். இந்தப் பேரத்திற்கான இரண்டாவது காரணம், பாதுகாப்பிற்காக.

நான் ஒரு நண்பருடன் பல வருடங்களாகப் பழகி வந்தேன்; நான் அவரது பங்களாவில் தங்கி இருந்தேன். முதல் நாளிலிருந்தே நான் கூர்ந்து கவனித்தேன், அதாவது அவர் வேலைக்காரர்களை நிமிர்ந்து பார்ப்பதில்லை. அவர் ஒரு செல்வந்தர், ஆனால் அவர் ஒருபோதும் அவரது வேலைக் காரர்களை நன்றாகப் பார்ப்பதில்லை, அவர் தனது குழந்தை களையும் ஒரு போதும் சரிவரப் பார்ப்பதில்லை. அவர் பங்களாவினுள் ஓட்டமாக வருவார், பிறகு பங்களாவிலிருந்து ஓட்டமாக அவரது காருக்குப் போவார். எனவே நான் அவரிடம் கேட்டேன், ''இது என்ன சங்கதி?''

அவர் சொன்னார், ''நீ உனது வேலைக்காரர்களைப் பார்த்தால் அவர்கள் நட்பாக உணர ஆரம்பித்து விடுவார்கள், அதன்பின் அவர்கள் பணம் மற்றும் இது, அது என்று கேட்க ஆரம்பித்து விடுவார்கள். நீ உனது குழந்தைகளோடு பேசினால் பிறகு நீ அவர்களுக்கு ஆணையிட முடியாது, பிறகு நீ அவர்களைக் கட்டுபடுத்த முடியாது.'' எனவே அவர் தன்னைச் சுற்றிலும் ஒரு பொய்யான உணர்வற்ற தன்மையை உருவாக்கிக் கொண்டு இருக்கிறார். அவர் ஒரு வேலைக்காரனுடன் பேசினால், அவனுக்கு உடல்நிலை சரியில்லை என்று உணர வேண்டி வரலாம். அப்போது அவர் இரக்கம் கொண்டால், பிறகு அவர் சிறிது பணம் கொடுக்கவோ அல்லது உதவி செய்யவோ வேண்டி வரலாம் என்று அவர் பயப்படுகிறார்.

எல்லோரும் விரைவிலோ அல்லது தாமதமாகவோ, தங்கள் நுட்ப உணர்வோடு இருந்தால் பல விஷயங்களாலும் பாதிக்கப்படுவோம் என்பதைக் கற்றுக் கொள்கின்றனர். நீ உன்னை உள்ளே இழுத்துக் கொள், நீ உன்னைச் சுற்றிலும் ஒரு தடையை உருவாக்கிக் கொள், அது ஒரு பாதுகாப்பு வளையம் – ஒரு பாதுகாப்புச் செயல். பிறகு நீ வீதிகளின் வழியே செல்லலாம்.... பிச்சைக்காரர்கள் பிச்சையெடுத்துக் கொண்டிருக்

கிறார்கள், அழுக்காய் இருக்கிறார்கள், அசிங்கமான சேரிகள், ஆனால் நீ எதையும் உணர்வதில்லை, நீ எதையும் பார்ப்ப தில்லை. இந்த அசிங்கமான சமுதாயத்தில் ஒருவன் தன்னைச் சுற்றிலும் தடையை உருவாக்கிக் கொள்ள வேண்டும். ஒரு சுவர் – நுட்பமாகப் பார்த்தால் தெரியாத ஒரு சுவர் – அதற்குப் பின்னால் அவன் ஒளிந்து கொள்ளலாம். இல்லாவிட்டால் ஒருவன் எல்லாவற்றினாலும் பாதிக்கப்படுவான். அப்போது வாழ்வது மிகவும் கடினம்.

அதனால்தான் உணர்வற்ற தன்மை வந்து சேர்கிறது. அது இந்த அசிங்கமான உலகத்தில் நீ பாதிக்கப்படாமல் இருக்க உதவுகிறது. ஆனால் அதற்கு ஒரு விலை கொடுக்க வேண்டி இருக்கிறது – அந்த விலை மிகவும் அதிகம். நீ இந்த உலகத்தில் சுலபமாக, பாதிக்கப்படாமல் இருக்கிறாய். ஆனால் அப்போது நீ தெய்விகத்தினுள், முழுமையினுள், நுழைய முடியாது. நீ அந்த உலகத்தில் நுழைய முடியாது. இந்த உலகத்திற்கு உணர்வற்ற தன்மை நல்லது என்றால், அந்த உலகத்திற்கு நுட்ப உணர்வோடிருப்பதே நல்லது, இது பிரச்னையை உருவாக்குகிறது.

நீ உண்மையிலேயே அந்த உலகத்தினுள் நுழைவதில் ஈடுபாடு கொண்டவனாய் இருந்தால், நீ நுட்பவுணர்வை உருவாக்கிக்கொள்ள வேண்டும். நீ இந்த எல்லா சுவர்களையும், இந்த எல்லாப் பாதுகாப்புகளையும் எறிந்துவிட வேண்டும். அப்படிச் செய்கையில், நீ எதனாலும் பாதிக்கப்படுபவனாக, அரணயற்று ஆகிவிடுவாய். நீ நிறைய பாதிக்கப்படுவாய், ஆனால் நுட்பவுணர்வின் மூலமாக நீ அடையக் கூடிய பேரானந்தத்தை ஒப்பிடுகையில் இந்தப் பாதிப்புகள் ஒன்று மில்லாதவை. அதிகம் நுட்பவுணர்வு அடைகையில், நீ அதிகம் கருணையை உணர்வாய். ஆனால் நீ பாதிப்புக்குள்ளாவாய், ஏனெனில் உன்னைச் சுற்றிலும் நரகமே இருக்கிறது. நீ மூடிக்

கொண்டுள்ளாய், அதனால் தான் நீ அதை உணர முடியாமலிருக்கிறாய். நீ திறந்தவனாகி விட்டால், நீ இரண்டிற்கும் திறந்திருப்பாய் – இந்த உலகத்தின் நரகத்திற்கும், அந்த உலகத்தின் சொர்க்கத்திற்கும். நீ இரண்டிற்கும் திறந்தவனாகி விடுவாய்.

மேலும் ஒன்றிற்கு மட்டும் மூடிக்கொண்டு, மற்றொன்றிற்குத் திறந்திருப்பது சாத்தியமில்லை, ஏனெனில் உண்மையில், நீ மூடிக்கொண்டிருக்கிறாய் அல்லது திறந்திருக்கிறாய். நீ மூடிக்கொண்டிருந்தால், நீ இரண்டிற்கும் மூடியே இருப்பாய். நீ திறந்திருந்தால், நீ இரண்டிற்கும் திறந்திருப்பாய். எனவே நினைவில் கொள் : ஒரு புத்தர் பேரானந்தத்தால் நிறைந்திருக்கிறார், ஆனால் அதே சமயம் முற்றிலும் பாதிக்கப்பட்டும் இருக்கிறார்.

அந்தப் பாதிப்புகள் அவரைச் சேர்ந்தவை அல்ல, அவை மற்றவர்களுக்காகத்தான். அவர் ஆழமான பேரானந்தத்தில் இருக்கிறார். ஆனால் அவர் மற்றவர்களுக்காகப் பாதிப்புக்கு உள்ளாகிறார். மகாயான புத்தமதத்தினர் சொல்கிறார்கள், புத்தர் நிர்வாணா நிலையின் வாயிலை அடைந்த போது, வாயில் காப்பவன் கதவைத் திறந்தான் – இது ஒரு புராணம், ஆனால் மிகவும் அழகானது – காவலாளி கதவைத் திறந்தான், ஆனால் புத்தர் உள்ளே நுழைய மறுத்து விட்டார். வாயில்காப்பவன் கேட்டான், ''ஏன் நீங்கள் உள்ளே வராமலிருக்கிறீர்கள்? நாங்கள் கோடிக்கணக்கான வருடங்களாக உங்களுக்காகக் காத்திருக்கிறோம். தினந்தோறும் செய்தி வந்து கொண்டே இருந்தது, அதாவது 'புத்தர் வருகிறார், புத்தர் வருகிறார்!' முழு சொர்க்கமும் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. உள்ளே வாருங்கள்! உங்களை வரவேற்கிறோம்!''

புத்தர் சொன்னார், ''என்னால் உள்ளே நுழைய முடியாது. அதற்கு எனக்கு முன்னால் மற்ற எல்லோரும் உள்ளே

நுழைந்துவிட வேண்டும். நான் காத்திருப்பேன்! ஒருவர் பாக்கி யின்றி ஒவ்வொரு தனி மனிதனும் நுழையும் வரை, சொர்க்கம் எனக்கு வேண்டியதில்லை.''

புத்தருக்கு மற்றவர்களுக்காகப் படும் கஷ்டங்கள் உள்ளன. அவரைப் பொருத்தவரை, அவர் ஆழமான பேரானந்தத்தில் இருக்கிறார். இந்த இணையானதைப் பாருங்கள்? நீ ஆழமான துன்பத்தில் இருக்கிறாய், மேலும் நீ மற்ற எல்லோரும் வாழ்க்கையை அனுபவிப்பதாகத் தொடர்ந்து உணர்கிறாய். இதற்கு முற்றிலும் மாறானது புத்தருக்கு நடக்கிறது. அவர் இப்போது ஆழமான பேரானந்தத்தில் இருக்கிறார். மேலும் மற்ற எல்லோரும் எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள் என்பதை அறிந்திருக்கிறார்.

இந்த முறைகள் எல்லாம் உணர்வற்ற தன்மையை போக்கிக் கொள்வதற்கான முறைகள். எப்படிப் போக்கிக் கொள்வதென மேலும் நாம் ஆலோசிப்போம்.

இப்போது போதும்.

## சூத்திரங்கள்

22. "நீ பார்த்துக் கொண்டிருக்கும் ஏதாவது இறந்த காலம் நடந்து கொண்டிருக்கும் இடத்தில் உனது முழுக் கவனமும் இருக்கட்டும். மேலும் அப்போது உனது உருவமும் கூட அதனுடைய தற்போதைய குணாதிசயங்களைக் கொண்டதாக இருக்காது. இந்தக் கவனிப்பில் உயர் நிலைக்கு மாறுவாயாக."

23. "உனக்கு முன்னால் உள்ள ஒரு பொருளை உணரு. மேலும் இந்த ஒன்றை தவிர மற்ற எல்லா பொருள்களும் இல்லாமல் போய் விட்டதை உணரு. பிறகு பொருளை உணர்வதையும் இல்லாததை உணர்வதையும் விட்டுவிடுகையில் உணர்ந்து கொள்வாயாக."

24. "யாரோ ஒருவருக்கு எதிராக அல்லது யாரோ ஒருவருக்கு ஆதரவாக ஒரு உணர்ச்சி எழும்போது, அதை அந்தக் கேள்விக்குரிய நபரின் மேல் சுமத்தாதே, மாறாக மையம் கொண்டிரு."

***

இந்தக் காலத்தின் மாபெரும் தந்த்ரா ஞானிகளில் ஒருவரான ஜார்ஜ் குருட்ஜிப் சொல்கிறார், அடையாளம் கொள்வதே ஒரே பாலம். அடுத்த சூத்திரம், மையம் கொள்ளுவதற்கான பத்தாவது சூத்திரம் - நாம் இன்று இரவு ஊடுருவப் போகும் அது - அடையாளம் கொள்வதைப் பற்றியதே ஆகும். எனவே முதலில் அடையாளம் கொள்வது என்றால் என்ன என்பதைத் தெள்ளத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள்.

நீ ஒரு காலத்தில் ஒரு குழந்தையாக இருந்தாய்; இப்போது நீ அப்படியல்ல. ஒருவர் இளமையடைகிறார், ஒருவர் முதுமை யடைகிறார், குழந்தைப் பருவம் ஒரு கடந்த கால விஷயமாக ஆகிவிடுகிறது. குழந்தைப் பருவம் போய் விடுகிறது. ஆனால் இன்னும் நீ உன்னுடைய குழந்தைப் பருவத்தோடு அடையாளம் கொண்டிருக்கிறாய். நீ இதை வேறு ஒருவருக்கு நடப்பதைப் போல விலகி நின்று பார்க்க முடியாது; நீ இதை ஒரு சாட்சியாக இருந்து பார்க்க முடியாது. நீ உன்னுடைய குழந்தைப் பருவத்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் நீ அதிலிருந்து விலகி இருக்க முடியாது, நீ அதோடு ஒன்றாகி விடுகிறாய். ஒருவன் தன்னுடைய இளமைப் பருவத்தை நினைக்கும் பொழுதெல்லாம் அவன் அதோடு ஒன்றிவிடுகிறான்.

உண்மையில், இப்போது அது வெறும் ஒரு கனவுதான். மேலும் உனது குழந்தைப் பருவத்தை ஒரு கனவாக, உனக்கு முன் ஓடும் ஒரு சினிமாவாகப் பார்க்க முடிந்தால், அதனுடன் அடையாளம் கொள்ளாமல் உன்னால் இருக்க முடிந்தால், நீ ஒரு சாட்சியாக மட்டும் இருந்தால், நீ உன்னைப் பற்றிய மிக நுட்பமான பார்வையை அடைய முடியும். உனது கடந்த காலத்தை ஒரு சினிமாவைப் போல, ஒரு கனவைப் போலப் பார்க்க முடிந்தால் - நீ அதன் பாகமாக இல்லாமல், நீ அதன் வெளியே இருந்து..... அப்படி நீ உண்மையிலேயே இருந்தால் - அப்போது பல விஷயங்கள் நடக்கும். நீ உனது குழந்தைப் பருவத்தைப் பற்றி யோசிக்கும் பொழுது நீ அதில் இல்லை - நீ இருக்க முடியாது. குழந்தைப் பருவம் வெறும் ஒரு ஞாபகம், வெறும் ஒரு கடந்த கால ஞாபகம். நீ விலகி இருந்து அதைப்

பார்க்கிறாய். நீ வேறாக இருக்கிறாய்; நீ சாட்சியாய் இருக்கிறாய். உன்னால் இந்த சாட்சியாய் இருத்தலை உணர முடிந்தால், அப்போது உன்னுடைய குழந்தைப் பருவத்தைத் திரையில் ஓடும் சினிமா போலப் பார்க்க முடியும், அப்போது பல விஷயங்கள் நடக்கும்.

ஒன்று : நீ பார்க்கக் கூடிய ஒரு வெறும் கனவாக உன்னுடைய குழந்தைப் பருவம் மாறிவிட்டால், அப்போது என்னவெல்லாம் இப்போது நடக்கிறதோ அவையெல்லாம் அடுத்த நாள் ஒரு கனவாக மாறி விடும். நீ இளமையானவனாக இருந்தால், அப்போது உன்னுடைய இளமை ஒரு கனவாக மாறிவிடும். நீ முதுமையடைந்தவனாக இருந்தால், அப்போது உனது முதுமை ஒரு கனவாக மாறிவிடும். ஒரு நாள் நீ குழந்தையாக இருந்தாய்; இப்போது அந்த உனது குழந்தை – பருவம் ஒரு வெறும் கனவாக மாறிவிட்டது. மேலும் அதை நீ கூர்ந்து கவனிக்கவும் முடிகிறது.

இறந்த காலத்திலிருந்து ஆரம்பிப்பது நல்லது. இறந்த காலத்தைக் கூர்ந்து கவனி, மேலும் அதனோடு உன்னை அடையாளம் கொள்வதை விடு; ஒரு சாட்சியாக மாறு. பிறகு எதிர்காலத்தைக் கூர்ந்து கவனி, எதிர்காலத்தைப் பற்றி நீ கற்பனை செய்து கொண்டிருப்பதையெல்லாம் பார். மேலும் அதற்கும் ஒரு சாட்சியாக இரு. அப்போது உன்னுடைய நிகழ்காலத்தை மிகச் சுலபமாக நீ கூர்ந்து கவனிக்க முடியும். ஏனெனில் இப்போது நிகழ்காலமாக இருப்பவையெல்லாம் நேற்று எதிர்காலமாக இருந்தவையே என்பதும் அவை நாளை இறந்த காலமாக மாறி விடும் என்பதும் உனக்குத் தெரியும். ஆனால் உன்னுடைய சாட்சி பாவம் ஒருபோதும் இறந்த காலமோ அல்லது ஒருபோதும் எதிர்காலமோ அல்ல. உன்னுடைய சாட்சி பாவ உணர்வு நிலை என்றென்றும் இருப்பது; அது காலத்தின் பாகமல்ல. அதனால் தான் காலத்தில் நடக்கும் அனைத்தும் ஒரு கனவாக மாறிவிடுகிறது.

இதையும் நினைவில் கொள் : இரவில் ஏதாவது ஒன்றை கனவு காணும் பொழுதெல்லாம் நீ அதனோடு அடையாளம் கொண்டவனாகிறாய். மேலும் நீ ஒருபோதும் உன்னுடைய

கனவில் இது ஒரு கனவு என்று நினைவு கொள்வதில்லை. காலையில் எழுந்தவுடன் மட்டுமே, நீ அந்தக் கனவிலிருந்து விழித்த பின்பே, அது ஒரு கனவு உண்மை அல்ல என்பதை உன்னால் நினைவு கொள்ள முடிகிறது. ஏன்? ஏனெனில் இப்போது நீ அந்தக் கனவிலிருந்து விலகி விட்டாய், அதனுள் இல்லை. இப்போது ஒரு இடைவெளி இருக்கிறது. எனவே நீ அதை ஒரு கனவாகப் பார்க்க முடிகிறது.

உன்னுடைய முழு இறந்த காலமும் என்ன? ஒரு இடைவெளி அங்கிருக்கிறது, ஒரு தூரம் அங்கிருக்கிறது. அதை ஒரு கனவாகப் பார்க்க முயற்சி செய். இப்போது அது ஒரு கனவு; இப்போது அது ஒரு கனவைத் தவிர வேறு எதுவும் அல்ல. ஏனெனில் ஒரு கனவு ஒரு நினைவாக மாறுவதைப் போலவே உன்னுடைய இறந்த காலமும் ஒரு நினைவாக மாறி இருக்கிறது. உனது குழந்தைப் பருவம் என்னவென்றெல்லாம் நீ நினைக்கிறாயோ, அவையெல்லாம் உண்மையானதா அல்லது வெறும் ஒரு கனவா என்பதை நீ நிரூபிக்க முடியாது. அதை நிரூபிப்பது கடினம். அது ஒரு வெறும் கனவாக இருக்கலாம், அது உண்மையாகவும் இருக்கலாம். அது உண்மையா அல்லது கனவா என்பதை நினைவைக் கொண்டு சொல்ல முடியாது. உளவியலாளர்கள் சொல்கிறார்கள், அதாவது முதுமையடைந்தவர்கள் சில நேரங்களில், உண்மையானதற்கும் அவர்களது கனவிற்கும் இடையே குழம்பிப் போய் விடுகிறார்கள்.

குழந்தைகள் எப்பொழுதும் குழப்பமடைகிறார்கள். காலையில் சிறு குழந்தைகளால் வித்தியாசப்படுத்திக் கொள்ள முடியாது. அவர்கள் கனவு கண்டவையெல்லாம் உண்மையல்ல என்று அறியாமல் அவர்கள் கனவில் ஒரு பொம்மை உடைந்து விட்டதற்காக அழக் கூடும். மேலும் நீயும் கூட தூக்கம் கலைந்த சில நிமிடங்களுக்கு உனது கனவால் இன்னும் கூடப் பாதிக்கப் படுகிறாய். கனவில் யாராவது ஒருவர் உன்னைக் கொலை செய்கிறார் என்றால் நீ தூக்கம் கலைந்து முற்றிலும் விழித்து விட்டாலும் கூட, உனது இதயம் இன்னமும் வேகமாக அடித்துக் கொண்டிருக்கிறது, உனது இரத்த ஓட்டம் வேகமாக ஓடுகிறது. உனக்கு இன்னும் வியர்த்துக் கொண்டிருக்கலாம். மேலும் ஒரு சிறிய பயம் இன்னும் உனக்குள் ஓடிக் கொண்டிருக்கும்.

இப்போது நீ விழித்து விட்டாய். மேலும் அந்தக் கனவு போய் விட்டது. ஆனாலும் அது ஒரு வெறும் கனவு தான் வேறொன்று மில்லை என்பதை உணர்ந்து கொள்வதற்கு உனக்குச் சில நிமிடங்கள் பிடிக்கும். நீ அதை ஒரு கனவு என்று உணர்ந்து கொள்ள முடியும் போது, அப்போது நீ அதிலிருந்து வெளி வந்து விட்டாய். மேலும் எந்தப் பயமும் அங்கில்லை.

உன்னால் இறந்த காலத்தை வெறும் ஒரு கனவாக உணர முடிந்தால் – நீ இறந்த காலத்தை வெறும் ஒரு கனவு என்ற ஒரு கருத்தைத் திணிப்பதாலோ, அந்தக் கருத்தின் விளைவாகவோ நீ இப்படி நினைத்துக் கொள்வதாலோ அல்லாமல் – உன்னால் அதைக் கூர்ந்து கவனிக்க முடிந்தால், அதில் சம்பந்தப்படாமல் அதைப் பற்றிய விழிப்புணர்வோடு இருக்க முடிந்தால், அதனுடன் அடையாளம் கண்டு கொள்ளாமல் இருக்க முடிந்தால் நீ அதிலிருந்து தனியாக விலகி அதைப் பார்க்க முடிந்தால், அது ஒரு கனவாக மாறும். நீ சாட்சி பாவத்தில் இருந்து பார்க்கக் கூடிய எல்லாமே ஒரு கனவே.

இதனால் தான் சங்கரரும் நாகார்ஜுனாவும் இந்த உலகத்தை ஒரு வெறும் கனவு என்று சொல்ல முடிந்தது. இது ஒரு கனவு என்பதல்ல, அவர்கள் மடையர்களல்ல, இந்த உலகம் உண்மையி லேயே ஒரு கனவு என்று ஏமாறக் கூடியவர்களல்ல. அவர்கள் இதன் மூலம் சொன்னதன் அர்த்தம், அவர்கள் சாட்சி பாவமாக மாறிவிட்டனர் என்பதே. மிகவும் நடைமுறையில் இருக்கும் இந்த உலகத்தைப் பொருத்த வரையிலும் கூட, அவர்கள் சாட்சி பாவமடைந்து விட்டார்கள். மேலும் நீ எதற்கு சாட்சி பாவமாக மாறினாலும், அது ஒரு கனவாக மாறிவிடும். இந்த உலகத்தை மாயா, பொய் என்று அழைப்பதன் காரணம் இதுதான். இது உண்மையல்ல என்பதனால் அல்ல, ஆனால் ஒருவன் இதற்கு சாட்சி பாவமாக மாறிவிட முடியும். மேலும் நீ சாட்சி பாவமாக மாறிவிட்டால் – விழிப்போடிரு, முழு விழிப்போடிரு – முழு விஷயமும் ஒரு வெறும் கனவைப் போல உன்னிடமிருந்து விலகிவிடும். ஏனெனில் அங்கு இடைவெளி உள்ளது. மேலும் நீ அதனோடு அடையாளம் கொண்டிருக்க வில்லை. ஆனால் நாம் தொடர்ந்து அடையாளம் கொண்டவர் களாகவே இருக்கிறோம்.

சில தினங்களுக்கு முன்பு நான் 'ஜின்-ஜாக்குயூஸ் ரோஸியூ'வினுடைய 'கன்பெஷன்ஸ்' - குற்றங்களை ஒத்துக் கொள்ளுதல் என்ற புத்தகத்தைப் படித்தேன். இது ஒரு அரிய புத்தகம். உலக இலக்கியத்தில் ஒருவர் தன்னை முற்றிலும் நிர்வாணப்படுத்திக் கொள்ளும், வெளிக்காட்டிக் கொள்ளும் முதல் புத்தகம் உண்மையிலேயே இதுதான். அவர் செய்த பாவங்களையெல்லாம், ஒழுங்கீனமற்றவைகளையெல்லாம், அவர் அவரை முழுதாக, முழு நிர்வாணமாகத் திறந்து காட்டுகிறார். ஆனால் நீ அந்தப் புத்தகத்தைப் படித்தால், அவர் அவைகளை சந்தோஷமாக அனுபவிப்பது போல உணர்வாய்; அதில் அவர் மிகவும் பெரிதாக உணருகிறார். அவருடைய பாவங்களைப் பற்றிப் பேசுவதில், அவருடைய ஒழுக்கக் கேடுகளைப் பற்றிப் பேசுவதில், அவர் உயர்வாக உணர்கிறார். அவர் அதை மிகவும் மகிழ்ச்சியோடு அனுபவிப்பதாகத் தெரிகிறது. ஆரம்பத்தில், முன்னுரையில் ரோஸியூ சொல்கிறார், ''கடைசி தீர்ப்பு நாள் வரும் பொழுது நான் கடவுளிடம், எல்லாம் வல்ல இறைவனிடம் சொல்வேன், நீங்கள் என்னைப் பற்றித் தெரிந்து கொள்ள சிரமப்பட வேண்டாம், இந்தப் புத்தகத்தைப் படியுங்கள், நீங்கள் எல்லாவற்றையும் தெரிந்து கொள்வீர்கள்.''

இதற்கு முன்பு எவரும் இவ்வளவு உண்மையாகத் தன் குற்றங்களை ஒத்துக் கொண்டதில்லை. மேலும் அந்தப் புத்தகத்தின் முடிவில் அவர் சொல்கிறார், ''எல்லாம் வல்ல இறைவனே, அழிவில்லாத கடவுளே, எனது ஒரே ஆசையை நிறைவேற்று. நான் எல்லாவற்றையும் ஒத்துக் கொண்டிருக்கிறேன்; இப்போது அதைக் கேட்பதற்கு மாபெரும் கூட்டம் கூடட்டும்.''

எனவே அவர் செய்யாத சில பாவங்களைக் கூடச் செய்ததாகச் சொல்லி இருக்கக் கூடும் என்று சந்தேகப்படுவது சரியானதே. அவர் அந்த முழு விஷயத்தையும் மிகவும் அனுபவிக்கிறார். மேலும் அவர் மிக உயர்வாக உணர்கிறார். அவர் அவைகளுடன் அடையாளம் கொண்டவராய் இருக்கிறார். மேலும் அவர் ஒத்துக் கொள்ளாத ஒரே பாவம் உள்ளது - அடையாளம் கொள்ளும் பாவம். அவர் செய்த அல்லது செய்யாத எல்லாப் பாவங்களுடனும்

அடையாளம் கொண்டவராய் இருக்கிறார். மேலும் மனித மனம் எப்படி இயங்குகிறது என்பதை ஆழமாக உணர்ந்தவர்களுக்கு இது ஒன்று மட்டுமே பாவமாகும்.

முதல் தடவையாக அவர் அவரது புத்தகத்தை ஒரு சிறிய அறிவு ஜீவிகளின் கூட்டத்தில் படிக்கும் பொழுது, பூமி நடுங்குவதைப் போல ஏதாவது பெரிதாக நடக்கும் என்று நினைத்தார். ஏனெனில் அவரே சொல்வதைப் போல இவ்வளவு உண்மையாக பாவங்களை ஒத்துக் கொண்ட முதல் மனிதன் அவர்தான். அந்த அறிவு ஜீவிகள் கேட்டார்கள், மேலும் அவர்கள் மிகவும் சலிப்படைந்து போனார்கள். ரோஸியூவிற்கு மிகவும் சங்கடமாகப் போய்விட்டது. ஏனெனில் ஏதோ அற்புதம் நடக்கப் போகிறதென்று அவர் நினைத்துக் கொண்டிருந்தார். அவர் படித்து முடித்தவுடன் அனைவரும் தப்பித்துக் கொண்டதாக உணர்ந்தனர். மேலும் எவரும் எதுவும் சொல்லவில்லை. ஒரு சில கணங்களுக்கு முழு மவுனம் நிலவியது. ரோஸியூவினுடைய இதயம் நொறுங்கிப் போனது. அவர் மிகவும் புரட்சிகரமான ஒன்றை, பூமியை நடுங்க வைப்பதை, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததை, உருவாக்கி இருப்பதாக எண்ணிக் கொண்டிருந்தார். ஆனால் அங்கு வெறும் மவுனமே நிலவியது. ஒவ்வொருவரும் எப்படி அங்கிருந்து வெளியேறுவது என்றே யோசித்துக் கொண்டிருந்தனர்.

உன்னுடைய பாவங்களில் உன்னைத் தவிர வேறு யாருக்கு ஆர்வம்? உன்னுடைய புண்ணியங்களில் ஒருவருக்கும் அக்கறை இல்லை, உன்னுடைய பாவங்களிலும் ஒருவருக்கும் அக்கறை கிடையாது. மனிதன் அவனுடைய புண்ணியங்களாலும் அல்லது அவனுடைய பாவங்களாலும் மிக உயர்ந்தவனாய், தன்னுடைய அகந்தை வலுப் பெற்றவனாய் ஆகிவிடுகிறான். இந்தப் புத்தகத்தை எழுதிய பிறகு, ரோஸியூ தன்னை ஒரு முனிவர், தன்னை ஒரு புனிதத் துறவி என்று எண்ணிக் கொள்ள ஆரம்பித்தார். ஏனெனில் அவர் ஒத்துக் கொண்டு விட்டாராம். ஆனால் அடிப்படை பாவம் அப்படியே இருக்கிறது. காலத்தினூடே நிகழ்பவைகளுடன் அடையாளம் கொண்டவராக இருப்பதே அடிப்படையான பாவம். காலத்தில் நிகழ்பவை எதுவாக இருந்தாலும் அவை கனவு போன்றவை. மேலும்

அவற்றுடன் நீ அடையாளம் கொள்ளாமலும் தொடர்பு அற்றவனாகவும் மாறாவிட்டால், நீ ஒருபோதும் பேரானந்தம் என்றால் என்ன என்பதை அறிந்து கொள்ள முடியாது.

அடையாளம் கொள்ளுதலே துன்பம்; அடையாளம் கொள்ளாதிருத்தலே பேரானந்தம். இந்தப் பத்தாவது யுக்தி அடையாளம் கொள்ளுதலிலிருந்து விடுபடுவதைப் பற்றியது.

*22. அடையாளம் கொள்ளாமல் உனது இறந்த காலத்தைப் பார்.*

பத்தாவது மையம் கொள்ளும் யுக்தி: ''நீ பார்த்துக் கொண்டிருக்கும் ஏதாவது இறந்த காலம் நடந்து கொண்டிருக்கும் இடத்தில் உனது முழுக் கவனமும் இருக்கட்டும். அப்போது மேலும் உனது உருவமும் கூட அதனுடைய தற்போதைய குணாதிசயங்களைக் கொண்டதாக இருக்காது. இந்தக் கவனிப்பில் உயர் நிலைக்கு மாறுவாயாக.''

நீ உனது இறந்த காலத்தை நினைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாய் - ஏதாவது ஒரு நிகழ்வை. உனது குழந்தைப் பருவம், உனது காதல் அனுபவங்கள், உனது தாய் அல்லது தந்தையின் இறப்பு... ஏதோ ஒன்று. அதை பார், ஆனால் அதில் ஈடுபாடு கொண்டு விடாதே. அதை வேறு யாரோ ஒருவருடைய வாழ்வை நினைத்துப் பார்ப்பது போல நினைத்துப் பார். மேலும் இந்த நிகழ்வு மறுபடியும் காட்சி அளிக்கும்போது, மறுபடியும் திரையில் தோன்றும்போது கவனமாக இரு. தனியாக விலகி இரு. உன்னுடைய இந்த இறந்த காலத்தில் இருந்த உருவமே அந்தக் காட்சியில், அந்தக் கதையில் இருக்கும்.

நீ உனது காதல் அனுபவத்தை நினைத்துப் பார்த்தால் - உனது முதல் காதல் அனுபவத்தை - நீ உனது அன்பிற்குரிய வருடன் அங்கிருப்பாய்; உனது அன்பிற்குரியவருடன் உனது இறந்த கால உருவம் அங்கிருக்கும். அப்படி இல்லாவிட்டால் நீ நினைவு கொள்ள முடியாது. உனது இறந்த காலம் உருவத்தினிடம் இருந்தும் விலகி இரு. அந்த முழு நிகழ்வையும், யாரோ ஒருவர் யாரோ ஒருவரைக் காதலிப்பது போல, அந்த முழு விஷயமும் உன்னைச் சேர்ந்தது அல்ல என்பது போல பார். நீ வெறும் கூர்ந்து கவனிப்பவன், சாட்சியாய் இருப்பவன்.

இது ஒரு மிக மிக அடிப்படை யுக்தி. இது மிக அதிகமாக பயன்படுத்தப்பட்டது. குறிப்பாக புத்தரால். இந்த யுக்திக்குப் பல வடிவங்கள் உள்ளன; நீ இதை அணுகுவதற்கு உன்னுடைய சொந்த வழியைக் கண்டு பிடித்துக் கொள்ளலாம். உதாரணமாக, இரவில் நீ தூக்கத்தில் ஆழ்ந்து விடுவதற்கு முன், தூக்கத்தில் ஆழ்ந்து விடுவதற்குத் தயாராய் இருக்கும் பொழுது, அன்றைய தினத்தின் முழு நினைவுகளிலும் பின்னோக்கிச் செல். காலையிலிருந்து துவங்காதே. நீ இருக்கும் இடத்திலிருந்து துவங்கு, படுக்கையிலிருந்து ஆரம்பித்து - கடைசியாக செய்ததிலிருந்து - பின்நோக்கிச் செல், பிறகு மெதுமெதுவாக, படிப்படியாகப் பின்நோக்கிச் செல். மேலும் அப்படிப் பின்னோக்கிச் செல்லும் பொழுது நீ அதில் சம்பந்தப்பட்டு விடாமல் தொடர்ந்து கவனமாய் இரு.

உதாரணமாக மதியம் யாரோ ஒருவர் உன்னை அவமானப்படுத்தி இருக்கிறார். உன்னைப் பார், அப்போது இருக்கும் உன்னைப் பார், யாரோ ஒருவரால் அவமானப்படுவதைப் பார், ஆனால் நீ கூர்ந்து கவனிப்பவனாக மட்டும் இரு. அதில் ஈடுபாடு கொள்ளாதே; மறுபடியும் கோபம் கொள்ளாதே. நீ மறுபடியும் கோபம் கொண்டால், அப்போது நீ அடையாளம் கொண்டு விடுகிறாய். பிறகு நீ தியானத்தை தவற விட்டு விடுகிறாய். கோபம் கொள்ளாதே. அவன் உன்னை அவமானப்படுத்தவில்லை, அவன் மதியம் இருந்த உருவத்தை அவமானப்படுத்துகிறான். அந்த உருவம் இப்பொழுது போய் விட்டது.

நீ ஒரு ஆற்றோட்டத்தைப் போல; உருவங்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன. உனது குழந்தைப் பருவத்தில் உனக்கு ஒரு வடிவம் இருந்தது. ஆனால் இப்பொழுது அந்த வடிவம் உனக்கு இல்லை; அந்த வடிவம் போய் விட்டது; ஆற்றைப் போல நீ இடைவிடாமல் மாறிக் கொண்டிருக்கிறாய். எனவே இரவில் நீ பின்னோக்கிச் செல்லும் தியானம் செய்து கொண்டு இருக்கும் பொழுது அன்று நிகழ்ந்தவைகளைப் பார்க்கும் பொழுது, நீ சாட்சி பாவத்தில் இருப்பதை நினைவில் கொள் - கோபப்படாதே. யாரோ ஒருவர் உன்னைப் புகழ்கிறார் -

அதனால் நீ உயர்ந்து விடாதே. அந்த முழு விஷயத்தையும் ஒரு படக் காட்சியை விலகி இருந்து பார்ப்பது போல் பார். மேலும் பின்னால் செல்வது மிகவும் உதவக் கூடியது. முக்கியமாகத் தூங்குவதில் ஏதாவது பிரச்சனை உள்ளவர்களுக்கு இது உதவும்.

தூங்குவதில் உனக்கு ஏதாவது சிரமம் இருந்தால், தூங்க முடியாமல் இருந்தால், தூக்கமின்மை வியாதி இருந்தால், நீ தூக்கத்தில் ஆழ்ந்து போக முடியவில்லையென்றால், இது ஆழமாக உதவி புரியும். ஏன்? ஏனெனில் இது மனதை திருப்பிச் சுற்றுவது. நீ பின்னால் போகும் போது நீ மனம் சுற்றி வைத்திருப்பதைப் பிரித்தெடுக்கிறாய். காலையில் நீ சுற்ற ஆரம்பிக்கிறாய், மேலும் பல விஷயங்களில் பல இடங்களில் மனம் சிக்கலாகிப் போகிறது. முடிவடையாமலும் நிறைவடை யாமலும் பல விஷயங்கள் மனதில் தங்கி விடுகின்றன. மேலும் அவற்றைச் சரி செய்து கொள்வதற்கு அவை நடக்கும் அந்தக் கணத்தில் நேரம் இருப்பதில்லை.

எனவே இரவில் பின்னோக்கிச் செல். இது ஒரு அவிழ்க்கும் செயல். மேலும் நீ பின்னோக்கிச் சென்று காலையில் படுக்கையிலிருந்து எழுந்து முதல் செயலைச் சென்றடையும் பொழுது நீ காலையில் எழும் பொழுது பெற்றிருந்த உற்சாகமான மனத்தை மீண்டும் பெறுவாய். பிறகு நீ ஒரு சிறு குழந்தையைப் போல ஆழமாக உறங்க முடியும்.

இந்தத் திரும்பிச் செல்லும் யுக்தியை நீ உனது முழு வாழ்க்கைக்கும் பயன்படுத்த முடியும். மகாவீரர் இந்தத் திரும்பிச் செல்லும் யுக்தியை மிகவும் பயன்படுத்தினார். அமெரிக்காவில் இப்போது 'டயனடிக்ஸ்' என்ற ஒரு இயக்கம் உள்ளது. அவர்கள் இந்த முறையைப் பயன்படுத்துகிறார்கள். மேலும் இது மிக, மிகப் பயனுள்ளதாக இருப்பதைக் கண்டறிந்துள்ளார்கள். இந்த இயக்கம், டயனடிக்ஸ், சொல்கிறது, அதாவது உனது எல்லா வியாதிகளும் இறந்த காலத்தின் எஞ்சிய சுமைகளே. அவர்கள் சொல்வது சரிதான். நீ பின்னால் திரும்பிப் போய் உனது முழு வாழ்க்கையையும் அவிழ்க்க முடிந்தால், அந்தச் சுற்றலை அவிழ்க்கையில் பல வியாதிகள் முற்றிலுமாக மறைந்து போகும். மேலும் இது பல வெற்றிகரமான சம்பவங்களால் நிரூபிக்கப்

பட்டுள்ளது; இப்போது பல வெற்றி பெற்ற உதாரணங்கள் உள்ளன.

பல நபர்கள் ஏதாவது ஒரு குறிப்பிட்ட நோயால் துன்பப் படுகின்றனர். மேலும் உடற்கூறு ரீதியான எதுவும், மருத்துவ ரீதியான எதுவும் அவர்களுக்கு உதவுவதில்லை; நோய் தொடர் கிறது. நோய் மனோவியாதி என்றே தோன்றுகிறது. இதற்கு என்ன செய்வது? ஒருவரிடம் அவரது நோய் உளவியல் சம்பந்தப் பட்டது என்று சொல்வதால் எந்த உதவியும் இல்லை. பதிலாக, அது கெடுதலாக முடியலாம். ஏனெனில் அவரது வியாதி உளவியல் ரீதியானது என்று சொன்னால் ஒருவரும் நன்றாக உணர்வதில்லை. பிறகு அவர் என்னதான் செய்வது? அவர் ஆதரவற்றவராக உணர்கிறார்.

இந்தப் பின்னால் திரும்பிச் செல்வது ஒரு அற்புதமான முறை. நீ மெதுவாகப் பின்னால் சென்றால் – இந்த வியாதி ஏற்பட்ட முதல் கணம் வரை மெதுவாக மனத்தின் சுற்றை அவிழ்த்தால் – நீ கொஞ்சம் கொஞ்சமாக இந்த வியாதி உன்னை முதன்முதலில் தாக்கிய கணத்திற்குத் திரும்பிச் சென்றால், நீ அந்தக் கணம் வரை அவிழ்க்க முடிந்தால், இந்த நோய் அடிப்படையில் குறிப்பிட்ட சில விஷயங்களின் சிக்கலால், குறிப்பிட்ட சில உளவியல் விஷயங்களால் ஏற்பட்டுள்ளதை, நீ அறிய முடியும். திரும்பிச் செல்வதால் அந்த விஷயங்கள் கொப்பளித்து மேலே வரும்.

அந்த நோய் முதன் முதலில் உன்னைத் தாக்கிய கணத்தை நீ கடந்து சென்று விட்டால், திடீரென எந்த உளவியல் பிரச்சனைகள் அதை ஏற்படுத்தின என்ற விழிப்புணர்வு உனக்கு வந்துவிடும். மேலும் நீ எதுவும் செய்ய வேண்டியதில்லை, நீ அந்த உளவியல் தன்மைகள் குறித்து விழிப்புணர்வோடு மட்டும் இருக்க வேண்டும். மேலும் தொடர்ந்து பின்னோக்கிச் செல். பல நோய்கள் உன்னிடமிருந்து மறைந்து போகும். ஏனெனில் அந்த சிக்கல் தீர்க்கப்பட்டு விடுகிறது. அந்தச் சிக்கலைப் பற்றி நீ விழிப்புணர்வடைந்தவுடன், பிறகு அந்த நோய்க்கான தேவை அங்கில்லை; நீ சுத்தமாகி விட்டாய், மன அழுக்கு நீக்கப் பட்டுவிட்டது.

இது ஒரு ஆழமான வெளியேற்றல் (catharis). மேலும் நீ இதை தினமும் செய்ய முடிந்தால், நீ ஒரு புதிய ஆரோக்கியத்தை உணர்வாய், ஒரு புதிய புத்துணர்வு உன்னிடம் வரும். மேலும் தினமும் இதைச் செய்வதற்கு குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்க முடிந்தால், அவர்கள் ஒருபோதும் அவர்களுடைய இறந்த காலத்தால் சுமையை அடைய மாட்டார்கள். அவர்கள் இறந்த காலத்திற்குப் போக வேண்டிய தேவையே இருக்காது, அவர்கள் எப்பொழுதும் இங்கு, இப்போது இருப்பார்கள். எந்த இறந்த கால மிச்சமும் இருக்காது, இறந்த காலத்திலிருந்து எதுவும் அவர்களை வட்டமிட்டுக் கொண்டிருக்காது.

நீ தினமும் இதைச் செய்ய வேண்டும். அது முழு தினத்தையும் பின்னோக்கிச் சென்று பார்ப்பதற்கான ஒரு புதிய உண்மையை உனக்குக் கொடுக்கும். மனம் காலையிலிருந்து ஆரம்பிக்கவே விரும்பும். ஆனால் நினைவில் கொள், ஆனால் அங்கு அப்போது அவிழ்ப்பது நடக்காது. பதிலாக முழு விஷயமும் மீண்டும் வலியுறுத்தப்படும். நீ காலையிலிருந்து ஆரம்பித்தால், நீ மிகவும் தவறான விதத்தில் செய்கிறாய்.

இந்தியாவில் ஆசான்கள் என்று அழைக்கப்படுகின்ற பலர் இதைச் செய்யச் சொல்லி ஆலோசனை சொல்கிறார்கள் – முழு நாளையும் திரும்பப் பார்ப்பது – அவர்கள் எப்பொழுதும் காலையிலிருந்து துவங்கி மறுபடியும் செய்யச் சொல்கின்றனர். இது தவறானது, கெடுதலானது. ஏனெனில் நீ முழு விஷயத்தையும் மீண்டும் வலியுறுத்துகிறாய், அதனால் அந்தச் சிக்கல் மேலும் ஆழமடைகிறது. ஒருபோதும் காலையிலிருந்து மாலைக்குப் போகாதே, எப்போதும் பின்னால் திரும்பியே போ. அப்பொழுது மட்டுமே முழு விஷயத்தையும் சுத்தம் செய்ய முடியும், முழு விஷயத்தையும் நீக்க முடியும். மனம் காலையி லிருந்து துவங்கவே விரும்பும், ஏனெனில் அது சுலபம்; மனதிற்கு அது தெரியும். மேலும் அதில் எந்தப் பிரச்சனையும் இல்லை. நீ பின்னால் போக ஆரம்பிக்கும் பொழுது, திடீரென நீ காலைப் பொழுதிற்குக் குதித்துவிட்டதாக உணர்வாய். மேலும் நீ மறுபடியும் முன்னால் போகத் துவங்குவாய். இதைச் செய்யாதே – விழிப்புணர்வோடு இரு, பின்னால் திரும்பிப் போ.

நீ உனது மனதிற்குப் பின்னால் போவதற்கு மற்ற விஷயங்கள் மூலமாகவும் பயிற்சி கொடுக்கலாம். நூறிலிருந்து பின்னால் போ – 99, 98, 97.... பின்னால் போ. நூறிலிருந்து ஒன்றிற்கு போ, பின்னால் திரும்பி போ. உனக்குக் கடினமாக இருக்கும். ஏனெனில் ஒன்றிலிருந்து நூறுக்குப் போவதற்கே மனம் பழகி இருக்கிறது, ஒரு போதும் நூறிலிருந்து ஒன்றிற்குப் போகப் பழகவில்லை. இதே போல நீ இந்த யுக்தியில் பின்னால் திரும்பிப் போக வேண்டும். என்ன நிகழும்? பின்னால் திரும்பிப் போவதில் மனதின் சுற்றை அவிழ்ப்பதில் நீ சாட்சிபாவத்தோடு இருப்பாய். நீ உனக்கு நடந்தவைகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பாய். ஆனால் இப்பொழுது அவை உனக்கு நடப்பவை அல்ல. இப்போது நீ வெறும் கூர்ந்து கவனிப்பவன். மேலும் அவை மனதின் திரையில் நடந்து கொண்டிருக்கின்றன.

தினமும் இதைச் செய்து வரும் பொழுது, திடீரென ஒரு நாள் பகல் பொழுதின் இடையே மார்க்கெட்டில், உன் அலுவலகத்தில் அல்லது வேறு எங்காவது வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது, நீ அந்தக் கணத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளுக்கே ஒரு சாட்சியாளனாக இருக்க முடியும் என்ற விழிப்புணர்வை நீ பெறுவாய். நீ பின்னால் ஒரு சாட்சியாளனாக இருக்க முடியும் என்றால் உன்னை அவமானப்படுத்திய யாரோ ஒருவனை அதற்காகக் கோபம் கொள்ளாமல் உன்னால் திரும்பிப் பார்க்க முடியுமென்றால், ஏன் இப்பொழுதே கூடாது, இந்தக் கணத்தில் நடப்பதற்கே ஏன் அப்படி இருக்கக் கூடாது?

யாரோ ஒருவர் உன்னை அவமானப்படுத்துகிறார் : என்ன சிரமம் இருக்கிறது? நீ இப்பொழுதே உன்னை ஒரு புறமாக ஒதுக்கிக்கொண்டு உன்னை யாரோ ஒருவன் அவமானப் படுத்துவதைப் பார்க்க முடியும். உன்னுடைய உடம்பிலிருந்து, உன்னுடைய மனதிலிருந்து, அவமானப்படுத்தப்படுவதிலிருந்து நீ வேறுபட்டு இருக்க முடியும். நீ சாட்சிபாவத்தோடு அதைக் காண முடியும். நீ அதை சாட்சிபாவத்தோடு பார்க்க முடிந்தால், நீ கோபம் கொள்ள மாட்டாய்; அப்போது அது சாத்தியமற்றது. நீ அடையாளம் கொள்ளும் பொழுது மட்டுமே கோபப்படுவது சாத்தியம். நீ அடையாளம் கொள்ளவில்லையென்றால் கோபம்

சாத்தியம் அற்றது – கோபம் என்பதன் அர்த்தம் அடையாளம் கொண்டுவிடுதல்.

இந்த யுக்தி சொல்கிறது, இறந்த காலத்தில் நடந்த எதைப் பார்த்தாலும் உனது வடிவம் அங்கு இருக்கும். இந்த சூத்திரம் சொல்கிறது, நீயல்ல, உனது வடிவம் மட்டுமே அங்கிருக்கும். நீ ஒருபோதும் அங்கில்லை. எப்பொழுதும் உனது வடிவமே சம்பந்தப்பட்டிருக்கிறது; நீ ஒருபோதும் சம்பந்தப்படுவதில்லை. நீ என்னை அவமானப்படுத்தும் பொழுது, நீ அவமானப் படுத்துவது என்னை அல்ல. நீ என்னை அவமானப்படுத்த முடியாது, நீ வடிவத்தை மட்டுமே அவமானப்படுத்த முடியும். நான் அங்கு இருக்கும் வடிவமே உனக்கு முன் இருப்பது. நீ அந்த வடிவத்தை அவமானப்படுத்தலாம். மேலும் நான் அந்த வடிவத்திடமிருந்து என்னை விலக்கிக் கொண்டு விடலாம். இதனால் தான் இந்துக்கள் எப்பொழுதும் பெயரிலிருந்தும், வடிவத்திலிருந்தும் விலகியிருப்பதை வலியுறுத்துகிறார்கள். நீ உனது பெயரும் அல்ல, உனது வடிவமும் அல்ல. நீ வடிவத் தையும், பெயரையும் அறிந்துகொள்கிற உணர்வுநிலை, பெயரை யும் அறிந்து கொள்கிற உணர்வுநிலை, மேலும் உணர்வுநிலை வேறானது, முற்றிலும் வேறானது.

ஆனால் அதை உணர்வது சிரமம். எனவே இறந்த காலத்தி லிருந்து ஆரம்பி, அப்போது அது சுலபம். ஏனெனில் இறந்த காலத்திலிருந்து துவங்குவதில் எந்த அவசரமும் இல்லை. யாரோ ஒருவர் இருபது வருடங்களுக்கு முன் உன்னை அவமானப் படுத்தி விட்டார். அதில் அவசரம் எதுவும் இல்லை. அந்த மனிதன் இறந்திருக்கலாம், எல்லாம் முடிந்து போயிருக்கலாம். அது ஒரு இறந்து போன விஷயம், இறந்த காலத்திய சுமை, அதைப் பற்றி விழிப்புணர்வு கொள்வது சுலபம். ஆனால் நீ விழிப்புணர்வு கொண்டவனாக மாறிவிட்டால், அப்போது, இங்கு இப்போது நடப்பவைகளுக்கும் அது போலவே விழிப் புணர்வோடு இருப்பதில் எந்தச் சிரமமும் இருக்காது.

ஆனால் இங்கு இப்போதிலிருந்து ஆரம்பிப்பது கடினம். பிரச்சனை நீ எங்கும் நகர முடியாத அளவிற்கு அருகாமையில், முன்னிலையில் இருக்கிறது. ஒரு இடைவெளியை உருவாக்கி,

அந்தச் சம்பவத்திலிருந்து விலகிச் செல்வது என்பது கடின மானது. அதனால் தான் இந்தச் சூத்திரம் இறந்த காலத்திலிருந்து துவங்கச் சொல்கிறது; உன்னுடைய சொந்த வடிவத்தையே பார், விலகியிருந்து, தனியாக நின்று, வேறுபட்டவனாய் பார், அதன் மூலம் உயர்நிலைக்குச் செல்வாயாக.

நீ இதன் மூலமாக உயர்நிலையை அடைவாய். ஏனெனில் இது ஒரு ஆழமான சுத்தப்படுத்தல், ஒரு சிக்கலை அவிழ்த்தல். பிறகு, உனது உடலோ, உனது மனமோ, காலத்தின் ஊடேயுள்ள உனது இருப்போ, உன்னுடைய அடிப்படையான உண்மை நிலைகள் அல்ல என்பதை நீ அறிந்து கொள்வாய். உனது அடிப்படை உண்மை நிலை மாறுபட்டது. அதன் மேல் பல விஷயங்களும் வந்து போகும். ஆனால் அவை சிறிது கூட அதைத் தொடுவதில்லை, நீ தொடப்படாதவனாக, குழந்தைத் தனம் கொண்டவனாக, மாசுபடாதவனாகவே இருக்கிறாய். முழு விஷயமும் நடக்கிறது, முழு வாழ்க்கையும் நடக்கிறது; நல்லதும் கெட்டதும், வெற்றியும் தோல்வியும், புகழ்வதும் இகழ்வதும் – எல்லாம் நடக்கிறது. ஆரோக்கியமும் நோயும், இளமையும் முதுமையும், இறப்பும் பிறப்பும் – எல்லாமும் நடக்கிறது. ஆனால் நீ இவைகளால் தொடப்படுவதில்லை.

ஆனால் இந்தத் தொடப்படாத உனக்குள் இருக்கும் உண்மை நிலையை எப்படி அறிவது? அது தான் இந்த யுக்தியின் பயன். இறந்த காலத்திலிருந்து ஆரம்பி. இறந்த காலத்தைப் பார்க்கும் பொழுது அங்கு ஒரு இடைவெளி இருக்கிறது; விலகி யிருந்து பார்க்கும் பார்வை சாத்தியம். அல்லது எதிர்காலத்தைப் பார். ஆனால் எதிர்காலத்தைப் பார்ப்பது கடினம். வெகு சிலருக்கு மட்டுமே எதிர்காலத்தைக் கூர்ந்து பார்ப்பது சிரமமற்றது – கவிஞர்களுக்கு, எதிரிலுள்ளதைப் பார்ப்பது போல எதிர்காலத்தைப் பார்க்கக்கூடிய அளவிற்குக் கற்பனா சக்தியுள்ள வர்களுக்கு மட்டுமே இது சிரமமற்றது. ஆனால் சாதாரணமாக இறந்த காலத்தைப் பயன்படுத்துவது நல்லது; உன்னால் இறந்த காலத்தைப் பார்க்க முடியும். இளைஞர்களுக்கு எதிர்காலத்தைப் பார்ப்பது நல்லது. அவர்களுக்கு எதிர்காலத்தைப் பார்ப்பது சுலபமாய் இருக்கும். ஏனெனில் இளமைக் காலம் எதிர்காலக் கனவுகளை அடிப்படையாகக் கொண்டது.

முதுமை அடைந்த மனிதனுக்கு இறப்பைத் தவிர வேறு எதிர்காலம் எதுவுமில்லை. அவர்கள் எதிர்காலத்தைப் பார்க்க முடியாது, அவர்கள் அதற்குப் பயப்படுகிறார்கள். அதனால் தான் வயதானவர்கள் எப்பொழுதும் இறந்த காலத்தைப் பற்றி யோசிக்க ஆரம்பிக்கிறார்கள். அவர்கள் எப்பொழுதும் திரும்பத் திரும்ப தங்கள் பழைய நினைவுகளுக்கே போவார்கள், ஆனால் அவர்களும் அதைத் தவறாகவே செய்கிறார்கள். இறந்த காலத்தில் ஆரம்பித்து இப்போது அவர்கள் உள்ள நிலைக்கு வருகிறார்கள் – இது தவறு, அவர்கள் பின்னோக்கித் திரும்பிச் செல்ல வேண்டும்.

அவர்கள் அப்படிப் பலமுறை பின்னோக்கிச் சென்றால், கொஞ்சம் கொஞ்சமாக அவர்களது முழு இறந்தகாலமும் அவர் களிடமிருந்து நீங்கி விட்டதை அவர்கள் உணர்வார்கள். அதன்பின் ஒருவன் இறந்த காலத்தின் பிடிப்புகள் எதுவு மில்லாமல் இறக்க முடியும். எந்த இறந்த காலப் பிடிப்பும் இல்லாமல் நீ இறக்க முடிந்தால், நீ உணர்வோடு இறப்பாய், நீ முழு விழிப்புணர்வோடு இறப்பாய். அப்போது இறப்பு உனக்கு இறப்பாக இருக்காது. பதிலாக, அது இறப்பற்றதைச் சந்திப்ப தாகவே இருக்கும்.

இறந்த காலத்தின் அடி ஆழம் வரை முழு உணர்வு நிலை யையும் சுத்தம் செய். அப்போது உனது முழு இருப்பும் அதன் மூலம் உயர்நிலையை அடையும். இதை முயற்சி செய். இந்த முறை மிகவும் கடினமானது அல்ல, தொடர்ந்த முயற்சி மட்டுமே தேவை; இந்த முறையைச் செய்வதில் எந்தச் சிரமமும் இல்லை. இது எளிதானது, மேலும் நீ ஒரு நாளிலிருந்து இதை ஆரம்பிக்கலாம். இன்று இரவு உனது படுக்கையில் பின்னோக்கிச் செல், நீ மிகவும் அழகாக உணர்வாய், நீ மிகவும் ஆனந்தமாக உணர்வாய். அப்போது முழு நாளும் கடந்து செல்லும். ஆனால் அவசரப்படாதே, எதையும் தவறவிட்டுவிடாமல் மெதுவாக அது நடக்கட்டும். இது மிகவும் புதுமையான உணர்வைக் கொடுக்கும். ஏனெனில் உனது கண்களின் முன்பு பல விஷயங்கள் வரும் – நீ அந்த நாளின் நடப்பில் உண்மையிலேயே தவறவிட்ட பல விஷயங்கள். ஏனெனில் நீ ஏதாவது ஒன்றில் மிகவும் சம்பந்தப்பட்டுப் பலதைத் தவறவிடுகிறாய். ஆனால் நீ

உணரவில்லை என்றாலும் கூட, மனம் சேகரித்துக் கொண்டே இருக்கிறது.

நீ ஒரு வீதியின் வழியே போய் கொண்டிருக்கிறாய். யாரோ பாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் நீ அதைச் சிறிதும் கவனிக்காமல் போகிறாய். அந்த வீதியில் நடக்கும்பொழுது நீ அந்தச் சப்தத்தைக் கேட்ட உணர்வுகூட உனக்கு இல்லாமல் இருக்கலாம். ஆனால் மனம் அதைக் கேட்டுப் பதிவு செய்து கொள்கிறது. இப்போது அது உன்னைப் பிடித்துக் கொள்கிறது, அது தேவையற்ற சுமையாக உன்னிடம் தங்கிவிடுகிறது. எனவே பின்னோக்கிப் போ, ஆனால் மிகவும் மெதுவாகப் போ, ஒரு படக்காட்சி உன்னிடம் மெதுவாக நகரும்படி காட்டப் படுவதைப் போல. பின்னோக்கிப் போ, விவரமாக அனைத்தை யும் பார், அப்போது உன்னுடைய ஒரு நாள் மிக மிக நீண்டதாகத் தோன்றும். அது உண்மையில் அப்படித்தான். ஏனெனில் மனதிற்கு ஏகப்பட்ட விவரங்கள் அதில் கிடைத்துள்ளது. மேலும் மனம் எல்லாவற்றையும் பதிவு செய்துள்ளது. இப்போது பின்னோக்கிச் செல்.

கொஞ்சம் கொஞ்சமாகப் பதிவு செய்யப்படும் எல்லா வற்றையும் அறிந்து கொள்ளும் ஆற்றலை நீ அடைவாய். மேலும் ஒரு முறை நீ பின்னோக்கிச் சென்று விட்டால், அனைத்தும் அழிந்து விடும். நீ காலையை அடையும் சமயம், நீ உறக்கத்தில் ஆழ்ந்துவிடுவாய். மேலும் அந்த உறக்கத்தின் தன்மை முற்றிலும் மாறுபட்டதாக இருக்கும் – அது தியானத்தன்மையோடு இருக்கும். பிறகு மறுபடியும், காலையில் நீ விழித்துக் கொண்ட தாக உணர்கையில், உனது கண்களை உடனே திறக்காதே. இரவில் நடந்தவற்றைப் பின்னோக்கிச் சென்று பார்.

ஆரம்பத்தில் இது கடினமாக இருக்கும். நீ சிறிதுதான் பின்னால் போவாய். ஒரு பகுதி, உனது தூக்கம் கலையுமுன்பாக நீ கனவு கண்டுகொண்டிருந்த ஒரு கனவின் ஏதாவது ஒரு பாகம் மட்டுமே உனது மனதில் வரும். ஆனால் மெது மெதுவாக, படிப்படியான முயற்சியில், நீ மேலும் மேலும் அதிகமாக ஊடுருவ முடியும். மேலும் மூன்று மாதங்களுக்குப் பிறகு நீ தூக்கத்தில் விழும் கணம் வரை உன்னால் பின்னோக்கிப் போக

முடியும். மேலும் உனது உறக்கத்தினுள் உன்னால் ஆழமாகப் பின்னோக்கிப் போக முடிந்தால், உனது உறக்கம் மற்றும் விழித்திருக்கும் நிலைகளின் தன்மை முற்றிலும் மாறிவிடும். ஏனெனில் இப்போது நீ கனவு காண முடியாது; கனவுகாணுதல் அவசியமற்றதாகி விடும். நீ பகல், இரவு இரண்டிலும் பின்னோக்கிப் போக முடிந்தால், கனவுகாணுதல் தேவை யில்லை.

தற்போது உளவியலாளர்கள் சொல்கிறார்கள், அதாவது கனவுகாணுதல் உண்மையில் மனம் சுற்றிக் கொண்டதை அவிழ்ப்பதே. இதை உனக்கு நீயே செய்து கொள்ளும்போது, கனவிற்கு எந்தத் தேவையுமில்லை. மனதில் தொற்றிக் கொண்டிருக்கும், நிறைவேறாமல், முடிவடையாமல் தங்கி யிருக்கும் அனைத்தும் கனவில் முழுமையடைய முயற்சி செய்கின்றன.

நீ நடந்து செல்லும்போது நீ ஏதோவொன்றைப் பார்க்கிறாய் – ஒரு அழகான வீடு – அதை உனக்கு உடைமை யாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை ஆழத்தில் எழுகிறது. ஆனால் நீ உனது அலுவலகத்திற்குப் போய்க் கொண்டிருக் கிறாய். எனவே பகல் கனவு கண்டுகொண்டிருக்க நேரமில்லை. ஆகவே நீ வெறுமனே கடந்து சென்றுவிட்டாய்.

உனது மனம் இந்த வீட்டை உடைமையாக்கிக் கொள்ளும் ஒரு ஆசையை உண்டாக்கியதைக் கூட நீ குறித்துக் கொள்ள வில்லை. ஆனால் இப்போது அந்த ஆசை அங்குத் தொற்றிக் கொண்டிருக்கிறது. மேலும் அதை அகற்ற முடியாவிட்டால் உறங்குவது மிகவும் கடினம்.

உறங்குவதில் சிரமம் என்பதற்கு அடிப்படையில் ஒரே ஒரு அர்த்தம்தான். அதாவது உனது பகல் இன்னும் உன்மேல் தொற்றிக் கொண்டிருக்கிறது. மேலும் உன்னால் அதை அகற்ற முடியவில்லை. நீ அதைப் பிடித்துக் கொண்டிருக்கிறாய். அப்போது இரவில் நீ அந்த வீட்டிற்குச் சொந்தக்காரன் ஆகிவிட்டது போலவும், இப்போது நீ அந்த வீட்டில் வாழ்ந்து

கொண்டிருப்பது போலவும் கனவு காண்பாய். இந்தக் கனவு உனக்கு வரும் கணத்திலேயே உனது மனம் அதிலிருந்து விடுபடுகிறது.

எனவே சாதாரணமாகக் கனவுகள் தூக்கத்திற்கு இடையூறு செய்பவை என்று மக்கள் நினைக்கிறார்கள், ஆனால் அது முற்றிலும் தவறானது. கனவுகள் உன்னுடைய தூக்கத்திற்கு இடையூறு அல்ல. அவை உனது தூக்கத்தைக் கெடுப்பதில்லை, அவை உண்மையில் உதவவே செய்கின்றன; அவை இல்லாமல் நீ கொஞ்சம் கூட உறங்க முடியாது. நீ இருக்கும் நிலையில், கனவுகள் இல்லாமல் நீ உறங்க முடியாது. ஏனெனில் நிறைவேறாமல் தங்கி இருப்பவைக்குக் கனவுகளே உதவி செய்கின்றன.

மேலும் நிறைவு செய்ய முடியாத பல விஷயங்களும் உள்ளன. உனது மனம் நிறைவேற முடியாத விஷயங்களின் மேல் ஆசைப்பட்டுக் கொண்டே இருக்கிறது. மேலும் அவை உண்மையில் முழுமை பெற முடியாதவை. எனவே என்ன செய்வது? அந்த முழுமையடையாத ஆசைகள் உன்னில் இருந்து கொண்டே இருக்கும். மேலும் அவை உன்னை எதிர்பார்க்கச் செய்யும், அவை உன்னை யோசித்துக் கொண்டே இருக்கும்படி ஆக்கும். எனவே என்ன செய்வது? நீ ஒரு அழகான பெண்ணைப் பார்க்கிறாய், மேலும் அவளிடம் நீ வசீகரிக்கப்படுகிறாய். இப்போது அவளை உடைமையாக்கிக் கொள்ள விருப்பம் எழுகிறது. ஆனால் அது சாத்தியம் இல்லை என்றால் அந்தப் பெண் உன்னைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை என்றால், என்ன செய்வது? கனவு உனக்கு உதவும்.

கனவில் நீ அந்தப் பெண்ணை உடைமையாக்கிக் கொள்ள முடியும். அப்போது மனம் அதிலிருந்து விடுபடுகிறது. மனதைப் பொருத்த வரையில் கனவிற்கும் உண்மை நிலைக்கும் இடையே எந்த வித்தியாசமும் கிடையாது. என்ன வித்தியாசம் இருக்கிறது? உண்மையில் ஒரு பெண்ணை அன்பு செய்வதற்கும், கனவில் ஒரு பெண்ணை அன்பு செய்வதற்கும் மனதிற்கு என்ன வித்தியாசம் இருக்கிறது? எந்த வித்தியாசமும் இல்லை. அல்லது இது வேண்டுமானால் ஒரே வித்தியாசமாக இருக்கலாம். கனவில்

நடப்பது அதிக அழகாக இருக்கலாம். ஏனெனில் அங்கு அந்தப் பெண் உன்னைப் பார்க்க முடியாது. இது உனது கனவு, இதில் நீ எது வேண்டுமானாலும் செய்யலாம். மேலும் அந்தப் பெண் உனக்கு எந்தப் பிரச்சினையையும் கொடுக்க முடியாது. மற்றவர் முற்றிலுமாக இல்லை, நீ மட்டுமே இருக்கிறாய். எந்தத் தடையும் இல்லை, ஆகவே நீ விரும்பும் எதை வேண்டு மானாலும் உன்னால் செய்ய முடியும்.

மனதிற்கு எந்த வித்தியாசமும் இல்லை; எது கனவு, எது உண்மை என்று மனதால் அவற்றைப் பிரிக்க முடியாது. உதாரணமாக நீ ஒரு வருடம் முழுவதும் கோமாவில் வெளி உலக உணர்வற்ற நிலை – வைக்கப்பட்டால், நீ தொடர்ந்து கனவு கண்டுகொண்டே இருப்பாய். மேலும் அந்த ஒரு வருடமும் நீ பார்த்துக் கொண்டிருப்பது கனவு தான் என்பதை எந்த வழியிலும் உன்னால் உணர முடியாது. அது உனக்கு உண்மையாகவே இருக்கும், மேலும் கனவு காணுதல் வருடம் முழுவதும் தொடர்ந்து இருக்கும்.

உளவியலாளர்கள் சொல்கிறார்கள், அதாவது நீ ஒரு மனிதனை நூறு வருடத்திற்கு கோமாவில் வைக்க முடிந்தால், அவன் நூறு வருடமும் கனவு கண்டு கொண்டிருப்பான். மேலும் அவன் செய்து கொண்டிருப்பது எல்லாம் வெறும் கனவில் தான் என்று ஒரு கணம் கூட சந்தேகம் கொள்ள மாட்டான். மேலும் அவன் அப்படியே இறந்து விட்டால் அவனுக்கு அவனது வாழ்க்கை வெறும் ஒரு கனவுதான். அது ஒருபோதும் உண்மையாக இருந்ததில்லை என்பதை அவன் ஒருபோதும் அறிய மாட்டான். மனதிற்கு எந்த வித்தியாசமும் இல்லை : உண்மை நிலையும் கனவும் ஒன்று தான். எனவே மனம் கனவில் தன்னையே அவிழ்த்துக் கொள்ள முடியும்.

நீ இந்த யுக்தியைச் செய்தால், அங்கு அப்போது கனவு களுக்கு அவசியம் இல்லை. உனது உறக்கத்தின் தன்மை முற்றிலும் மாறிவிடும். ஏனெனில் கனவுகள் அற்று விடும்போது நீ உனது இருப்பின் அடி ஆழத்திற்குச் செல்லுகிறாய், மேலும்

கனவுகளற்று விடும்போது உனது உறக்கத்திலும் நீ விழிப் புணர்வு கொண்டிருப்பாய்.

எல்லோரும் ஆழமாக உறங்கிக் கொண்டிருக்கையில் யோகி உறங்குவதில்லை, யோகி விழித்திருக்கிறான் என்று கிருஷ்ணர் கீதையில் சொல்வது இதைத்தான். இதன் அர்த்தம் யோகி உறங்குவதில்லை என்பது அல்ல – அவனும் உறங்கவே செய்கிறான், ஆனால் அந்த உறக்கத்தின் குணம் மாறுபடுகிறது. உனது உறக்கம் போதையின் உணர்வற்ற நிலையைப் போல. ஒரு யோகியின் உறக்கம் ஒரு ஆழமான தளர்வு நிலை. மேலும் அதில் உணர்வற்ற தன்மை எதுவும் கிடையாது. அவனது முழு உடலும் தளர்வுற்று இருக்கிறது; அவனது உடம்பிலுள்ள ஒவ்வொரு நாடி நரம்பும், செல்களும், எந்தவித இறுக்கமும் இன்றித் தளர்வுற்று இருக்கின்றன. ஆனால் இந்த முழு நிகழ்வையும் பற்றிய விழிப் புணர்வு யோகிக்கு இருக்கிறது.

இந்த யுக்தியை முயற்சி செய். இன்று இரவிலிருந்து துவங்கு, முயற்சி செய், மேலும் காலையிலும் இதைச் செய். மேலும் நீ இந்த யுக்தியுடன் இசைவை உணர்ந்தால், அதாவது நீ இதைச் செய்ய முடியும் என்று உணர்ந்தால், ஒரு வாரத்திற்குப் பிறகு உனது முழு இறந்த காலத்திற்கும் இதை முயற்சி செய். ஒரு நாள் முழுதும் விலகியிரு. ஏதாவது தனிமையான இடத்திற்குச் சென்று விடு. நீ உணவருந்தாமல் இருப்பது நல்லது – உண்ணாமல் மௌனமாக இரு. ஏதாவது தனிமையான கடற்கரையில் அல்லது ஏதாவது மரத்தின் அடியில் படுத்துக் கொள். மேலும் உனது இறந்த காலத்தை நோக்கிப் பின்னால் இந்த இடத்திலிருந்து நகரத் துவங்கு; நீ கடற்கரையில் மணலையும் சூரியனையும் உணர்ந்து கொண்டு படுத்திருக் கிறாய், இப்போது இங்கிருந்து பின்னோக்கிச் செல். தொடர்ந்து ஊடுருவிக் கொண்டே, ஊடுருவிக் கொண்டே, ஊடுருவிக் கொண்டே செல், மேலும் நீ நினைவில் வைத்திருக்கும் கடைசி விஷயத்தைக் கண்டுபிடி.

நீ வியப்படைவாய். சாதாரணமாக நீ அதிகம் நினைவு வைத்திருக்க முடியாது. மேலும் நீ நான்கு அல்லது ஐந்து வயதின் தடையைத் தாண்டிச் செல்ல முடியாது. மிக நல்ல ஞாபக சக்தி

கொண்டவர்கள் மூன்று வயதின் தடை வரை பின்னால் செல்ல முடியும், ஆனால் பிறகு திடீரென ஒரு தடை வரும். எல்லாம் இருட்டாகி விடும். ஆனால் நீ இந்த யுக்தியைத் தொடர்ந்து முயற்சித்தால் கொஞ்சம் கொஞ்சமாக நீ இந்தத் தடையை உடைப்பாய், மேலும் மிகச் சுலபமாக நீ பிறந்த முதல் தினத்தை உன்னால் நினைவுக்குக் கொண்டு வர முடியும். இது ஒரு புதிய உண்மையை அறிவதாக இருக்கும்.

திரும்ப மறுபடியும் உனது கடற்கரையில் சூரியனுடன் நீ மாறுபட்ட மனிதனாக இருப்பாய். நீ மேலும் அதிகம் முயற்சித்தால், நீ கருப்பை வரை ஊடுருவ முடியும். நீ கருப்பைக்குள் இருந்த நினைவுகளை அடைவாய் – உனது தாயுடன் இருந்த ஒன்பது மாத நினைவுகளும் வரும். அந்த ஒன்பது மாத காலமும் மனதில் பதிவாகி உள்ளது. உனது தாய் மனச்சோர்வு அடைந்த பொழுது நீ அதைப் பதிவு செய்திருக்கிறாய். ஏனெனில் நீயும் அப்போது மனச்சோர்வை உணர்ந்திருக்கிறாய். நீ தாயோடு அந்த அளவு இணைந்தவனாக, அந்த அளவு ஒன்றானவனாக, அந்த அளவு ஒன்றாகவே இருந்திருக்கிறாய். எனவே உன் தாய்க்கு நிகழ்ந்தது அனைத்தும் உனக்கும் நிகழ்ந்துள்ளது. அவள் கோபமடைந்த பொழுது நீயும் கோபத்தில் இருந்தாய். அவள் மகிழ்ச்சியாய் இருந்த பொழுது நீயும் மகிழ்ந்திருந்தாய். அவள் பாராட்டுதலை உணர்ந்த பொழுது நீயும் அதை உணர்ந்தாய். அவள் நோய்வாய்ப்பட்ட போது நீ வலியை, துன்பத்தை உணர்ந்தாய் – எல்லாவற்றையும் உணர்ந்தாய்.

நீ கருப்பை வரை ஊடுருவ முடிந்தால், இப்போது நீ சரியான பாதையில் செல்கிறாய். அதன் பிறகு, கொஞ்சம் கொஞ்சமாக, நீ அதிகம் ஊடுருவ முடியும். மேலும் நீ கருப்பைக்குள் நுழைந்த முதல் கணத்தை உன்னால் நினைவு படுத்திக் கொள்ள முடியும்.

இந்த நினைவின் காரணத்தினால் மட்டுமே, மகாவீரரும் புத்தரும் முற்பிறவிகள், மறுபிறப்பு இருக்கிறது என்று சொல்ல முடிந்தது. முற்பிறவி என்பது உண்மையில் ஒரு கோட்பாடு அல்ல, அது வெறும் ஒரு ஆழமான உளவியல் அனுபவம். மேலும் நீ உனது தாயின் கருவினுள் நுழைந்த முதல் கணத்தை

நினைவுபடுத்திக் கொள்ள முடிந்தால், பிறகு நீ மேலும் ஊடுருவ முடியும். அப்போது உனது முற்பிறவியின் இறப்பை உன்னால் நினைவுபடுத்திக் கொள்ள முடியும். நீ இந்த இடம் வரை வந்துவிட்டால் பிறகு இந்த யுக்தி உனது கைகளில்; பிறகு நீ வெகு சுலபமாக உனது எல்லா முற்பிறவிகளுக்குள்ளும் செல்ல முடியும்.

இது ஒரு அனுபவம், இதன் விளைவு முக்கியமானதாகும். ஏனெனில் இதனால் நீ இப்பொழுது வாழ்கின்ற அதே முட்டாள் தனமான வாழ்வையே பலபல பிறவிகளாக வாழ்ந்திருப்பதை அறிந்து கொள்வாய். நீ இந்த முழு முட்டாள்தனத்தையும் பல தடவைகளாகத் திரும்பத் திரும்பச் செய்து கொண்டிருக்கிறாய். அதே முறையில், அதே வடிவில், விவரங்கள் மட்டுமே மாறுகின்றன. நீ வேறு ஏதோ பெண்ணை நேசித்தாய், இப்போது நீ இந்தப் பெண்ணை நேசிக்கிறாய். நீ பணத்தைச் சேகரித்தாய்..... அந்த நாணயங்கள் ஒரு விதம், இப்போது நாணயங்கள் வேறு. ஆனால் முழு முறையும் ஒன்றுதான், திரும்பத் திரும்ப அதுவேதான்.

பல பல பிறவிகளாக நீ அதே முட்டாள்தனமான வாழ்க்கையையே வாழ்ந்திருக்கிறாய், சுற்றிச் சுற்றி வருகின்ற இந்த முழு வட்டமும் மடத்தனமானது என்பதை நீ பார்க்கின்ற பொழுது, திடீரென நீ விழிப்படைகிறாய். மேலும் அந்த முழு விஷயமும் கனவாக ஆகி விடுகிறது. நீ அதிலிருந்து வெளியேறி விட்டாய், மேலும் நீ அதையே எதிர்காலத்தில் திரும்பச் செய்ய விரும்பவில்லை.

ஆசை நின்றுவிடுகிறது. ஏனெனில் ஆசை என்பது எதிர்காலத்திற்குக் கொண்டு வரப்படும் இறந்த காலமேயன்றி வேறொன்றுமில்லை. ஆசை என்பது திரும்பவும் மற்றொரு முறை நடக்க விரும்பும் இறந்த கால அனுபவமேயல்லாமல் வேறொன்றுமில்லை. ஆசையின் அர்த்தம் நீ பழைய அனுபவத்தைத் திரும்ப மறுபடியும் விரும்புவதல்லாமல் வேறொன்றுமல்ல.

நீ இந்த முழு நிகழ்வையும் பற்றிய விழிப்புணர்வு பெறாமல், நீ ஆசையை விட முடியாது. நீ எப்படி அதை விட

முடியும்? இறந்த காலம் அங்கு மாபெரும் தடையாக, பாறை போலத் தடையாக இருக்கிறது. அது உனது தலை மேல் இருந்து கொண்டு, அது உன்னை எதிர்காலத்தை நோக்கி உந்தித் தள்ளு கிறது. ஆசைகள் இறந்த காலத்தால் உருவாக்கப்படுகின்றன, எதிர்காலத்தினுள் கொண்டு வரப்படுகின்றன. நீ இறந்த காலத்தை ஒரு கனவைப் போல அறிய முடிந்தால், எல்லா ஆசைகளும் சக்தியற்றுப் போய் விடுகின்றன. அவை விழுந்து விடுகின்றன, அவை உதிர்ந்து போய் விடுகின்றன – மேலும் எதிர்காலம் மறைந்து போய் விடுகிறது. இந்த எதிர்காலம் மற்றும் இறந்த காலத்தின் மறைவில், நீ உயர்நிலைக்கு மாற்றம் அடைகிறாய்.

## 23. ஒரு பொருளை உணரு, அதுவாக மாறு.

பதினொன்றாவது மையம் கொள்ளும் யுக்தி, ''உனக்கு முன்னால் உள்ள ஒரு பொருளை உணரு. மேலும் இந்த ஒன்றைத் தவிர மற்ற எல்லாப் பொருள்களும் இல்லாமல் போய்விட்டதை உணரு. பிறகு பொருளை உணர்வதையும், இல்லாததை உணர்வதையும் விட்டுவிடுகையில் உணர்ந்து கொள்வாயாக.''

''உனக்கு முன்னால் உள்ள ஒரு பொருளை உணரு'' – ஏதாவது ஒரு பொருளை. உதாரணமாக ஒரு ரோஜாப்பூ. எதுவாக இருந்தாலும் சரிதான். ''உனக்கு முன்னால் உள்ள ஒரு பொருளை உணரு.'' முதலில் அதை உணரு. பார்ப்பது பற்றாது – அதை உணரு. நீ ஒரு ரோஜாப் பூவைப் பார்க்கிறாய், ஆனால் உனது இதயத்தை அது தொடவில்லை, நீ அதை உணரவில்லை; உணர்ந்திருந்தால் நீ கண்ணீர் விடவும் அழவும் ஆரம்பித் திருப்பாய், உணர்ந்திருந்தால் நீ ஆடவும் சிரிக்கவும் ஆரம்பித் திருக்கக் கூடும். நீ அதை உணரவில்லை, நீ அதைப் பார்க்க மட்டுமே செய்கிறாய். மேலும் அந்தப் பார்ப்பது கூட முழுமை யானதாக இருப்பதில்லை. ஏனெனில் நீ ஒருபோதும் முழுமை யாகப் பார்ப்பதில்லை. இறந்த காலம், நினைவு, இது ஒரு ரோஜா என்று சொல்கிறது, நீ கடந்து சென்று விடுகிறாய். நீ அதை உண்மையில் பார்க்கவில்லை. இது ஒரு ரோஜா என்று

மனம் சொல்கிறது. அதைப் பற்றி உனக்கு எல்லாம் தெரியும், முன்பே ரோஜாக்களைப் பற்றி நீ அறிந்திருக்கிறாய். எனவே இதைப் பற்றி என்ன? ஆகவே நீ கடந்து சென்று விடுகிறாய். ரோஜாக்களைப் பற்றிய உனது இறந்த கால அனுபவம் நினைவில் இருந்து வருவதற்கு, ஒரு பார்வையே போதுமானதாக இருக்கிறது, நீ கடந்து சென்று விடுகிறாய். பார்ப்பது கூட முழுமையானதாக இருப்பதில்லை.

ரோஜாவுடன் இரு. அதைப் பார், பிறகு அதை உணரு. அதை உணர என்ன செய்வது? அதை முகர்ந்து பார், அதைத் தொடு, அது ஒரு ஆழமான உடலின் அனுபவமாக ஆகட்டும். முதலில் உன் கண்களை மூடிக்கொண்டு அந்த ரோஜா உனது முழு முகத்தையும் தொடுவதற்கு அனுமதி. அதை உணரு. அதை உனது கண்களின் மேல் வைத்துக் கொள். அதைக் கண்கள் தொட்டுப் பார்க்கட்டும்; அதை நுகர்ந்து பார். அதை உனது இதயத்தோடு சேர்த்து வைத்துக் கொள். அதனோடு மௌனமாயிரு; அந்த ரோஜாவிற்கு உன் உணர்வைக் கொடு. எல்லாவற்றையும் மற, முழு உலகத்தையும் மறந்துவிடு.

''உனக்கு முன்னால் உள்ள ஒரு பொருளை உணரு. மேலும் இந்த ஒன்றைத் தவிர மற்ற எல்லா பொருட்களும் இல்லாமல் போய்விட்டதை உணரு.'' ஏனெனில் இன்னும் உனது மனம் மற்ற பொருள்களைப் பற்றியெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தால் அப்போது இந்த உணர்வு ஆழமாக ஊடுருவிச் செல்லாது. மற்ற எல்லா ரோஜாக்களையும் மறந்துவிடு, மற்ற எல்லோரையும் மறந்துவிடு, எல்லாவற்றையும் மறந்துவிடு. வெறும் இந்த ரோஜா மட்டும் அங்கிருக்கட்டும். இந்த ரோஜா, இந்த ரோஜா, இந்த ரோஜா மட்டும்! மற்ற எல்லாவற்றையும் மறந்துவிடு. இந்த ரோஜா உன்னை முழுதாகச் சுற்றிக் கொள்ளட்டும்..... நீ இந்த ரோஜாவினுள் மூழ்கிவிடு.

இது கடினமாய் இருக்கும். ஏனெனில் நாம் அவ்வளவு நுட்ப உணர்வு உடையவர்கள் அல்ல. ஆனால் இது பெண்களுக்கு அவ்வளவு கடினமாக இருக்காது; அவர்கள் இதை மிகச்

சுலபமாக உணர முடியும். ஆண்களுக்கு இது சிறிது அதிக சிரமமாய் இருக்கலாம், அவர்கள் மிகவும் அழகுணர்ச்சி இல்லாதவர்களாய் இருந்தால், ஒரு கவிஞனைப் போல அல்லது ஒரு ஓவியனைப் போல அல்லது ஒரு இசைக்கலைஞனைப் போல இல்லாமல் இருந்தால் அவர்களால் உணர முடியாது. ஆனால் முயற்சி செய். குழந்தைகள் இதை மிக எளிதாகச் செய்ய முடியும்.

நான் இந்த முறையை எனது நண்பர் ஒருவரின் மகனுக்குச் சொல்லிக் கொடுத்தேன். அவனால் மிகச் சுலபமாக உணர முடிந்தது. நான் அவனிடம் ஒரு ரோஜாப் பூவைக் கொடுத்து, உங்களிடம் இப்போது கூறியவற்றையெல்லாம் அவனிடமும் கூறினேன். அவன் அதைச் செய்தான். மேலும் அவன் அதை ஆழமாக அனுபவித்தான். அதன் பிறகு நான் கேட்டேன், ''நீ எப்படி உணர்கிறாய்?''

அவன் சொன்னான், ''நான் ஒரு ரோஜாப் பூவாக மாறி விட்டேன் - உணர்ந்தது இது தான். நான் ஒரு ரோஜாப் பூவாக மாறி விட்டேன்.'' குழந்தைகள் இதை மிகச் சுலபமாகச் செய்ய முடியும். ஆனால் நாம் ஒருபோதும் அவர்களைப் பழக்குவ தில்லை; இல்லாவிட்டால் அவர்கள் மிகச் சிறப்பாகத் தியானம் செய்பவர்கள் ஆகக் கூடும்.

மற்ற எல்லா பொருள்களையும் முற்றிலும் மறந்து விடு. ''மேலும் இந்த ஒன்றைத் தவிர மற்ற எல்லா பொருட்களும் இல்லாமல் போய் விட்டதை உணரு.'' அன்பில் நிகழ்வது இதுதான். நீ ஒருவரிடம் அன்பு கொண்டிருந்தால், நீ முழு உலகத்தையும் மறந்து விடுகிறாய். நீ இன்னும் உலகத்தை நினைவு வைத்துக் கொண்டிருந்தால் அப்போது நீ கொண் டிருப்பது அன்பல்ல என்பதைத் தெரிந்து கொள். நீ முழு உலகத்தையும் மறந்து விட்டாய்; உனது அன்பிற்குரியவர் மட்டுமே இருக்கிறார், இதனால் தான் நான் அன்பை ஒரு தியானம் என்று சொல்கிறேன். நீ இந்த யுக்தியை அன்பின் யுக்தியாகவும் பயன்படுத்தலாம் : மற்ற எல்லாவற்றையும் மறந்து போகிறாய்.

சில தினங்களுக்கு முன்பு ஒரு நண்பர் அவரது மனைவியுடன் என்னிடம் வந்தார். அவரது மனைவிக்கு ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றிய புகார் இருந்தது : அதனால் தான் அவளும் வந்திருந்தாள். அந்த நண்பர் சொன்னார், ''நான் ஒரு வருடமாகத் தியானம் செய்து வருகிறேன், இப்போது அதில் ஆழமாகச் சென்றிருக்கிறேன். மேலும் நான் தியானம் செய்யும் பொழுது, எனது தியானத்தில் ஒரு உச்ச கட்டம் வரும்போது திடீரென, 'ரஜ்னீஷ், ரஜ்னீஷ், ரஜ்னீஷ்!' என்று கூவுவது எனக்கு மிகவும் உதவியாய் இருப்பதை நான் கண்டுகொண்டேன். இது எனக்கு உதவுகிறது. ஆனால் தற்போது புதுமையாக ஒன்று நடக்கத் துவங்கியுள்ளது. நான் எனது மனைவியுடன் கலவியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கையில், நான் எனது பாலுணர்ச்சியின் உச்சக் கட்டத்தை அடைகையில், 'ரஜ்னீஷ், ரஜ்னீஷ், ரஜ்னீஷ்!' என்று நான் கூவ ஆரம்பிக்கிறேன். இதனால் எனது மனைவி மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறாள். மேலும் அவள் சொல்கிறாள், 'நீங்கள் என்னுடன் கலவியில் ஈடுபட்டு இருக்கிறீர்களா அல்லது வேறு என்ன செய்கிறீர்கள்? மேலும் இந்த 'ரஜ்னீஷ்' எதற்காக நடுவில் வருகிறது?'''

மேலும் அவர் என்னிடம் சொன்னார், ''இப்போது மிகவும் சிரமமாகி விட்டது. ஏனெனில் நான், 'ரஜ்னீஷ், ரஜ்னீஷ்!' என்று கூவவில்லையென்றால் என்னால் உச்சக் கட்டத்தை எட்ட முடியாது. மேலும் நான் கூவினால் எனது மனைவி மிகவும் பாதிக்கப்படுகிறாள். அவள் அழுது புலம்பி ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்து விடுகிறாள். எனவே என்ன செய்வது? இதற்காகத் தான் எனது மனைவியையும் அழைத்து வந்து இருக்கிறேன்.'' பார்க்கும் பொழுது, அவரது மனைவியின் புகார் சரியானதே. ஏனெனில் அவர்களுக்கிடையே வேறு யாரோ ஒருவர் வருவதை அவள் விரும்பவில்லை. இதனாலேயே அன்புக்கு அந்தரங்கம் தேவைப்படுகிறது – பரிபூரண அந்தரங்கம். அந்த அந்தரங்கம் அர்த்தமுள்ளது, மற்ற எல்லாவற்றையும் மறந்துவிட அது தேவை.

ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் இப்போது பாலுணர்ச்சி குழு தோன்றியுள்ளது. இது மடத்தனமானது – ஒரே அறையில் பல ஜோடிகள் கலவி புரிவது இது. இது முழு மடத்தனம். ஏனெனில் அப்போது அன்பு ஒருபோதும் ஆழமாகச் செல்ல முடியாது. அது வெறும் பாலுணர்வுப் புணர்ச்சியாக மட்டுமே இருக்கும். மற்றவர்கள் முன்னால் இருப்பது ஒரு தடை; அப்போது அது தியானத் தன்மை அடைய முடியாது.

எந்தப் பொருளுடனானாலும், உன்னால் முழு உலகத்தை யுமே மறக்க முடிந்தால், அப்போது நீ ஆழமான அன்போ டிருக்கிறாய் – அது ரோஜாவானாலும் அல்லது ஒரு கல்லானா லும் அல்லது வேறு எதுவாயிருந்தாலும் சரிதான். நிபந்தனை என்னவென்றால், இந்தப் பொருள் இருப்பதை உணர்வதும், மற்ற எல்லாமும் இல்லாமலிருப்பதை உணர்வதும் தான். உனது உணர்வு நிலையில் இருக்கும் விஷயம் இந்த ஒரே பொருளாய் மட்டும் இருக்கட்டும். நீ இயற்கையாகவே அன்பு கொண் டிருக்கும் ஏதாவது ஒரு பொருளுடன் இதை முயற்சி செய்வது சுலபமாக இருக்கும்.

ஒரு கல்லை, ஒரு பாறையை நீ முன்னால் வைத்துக் கொண்டு இந்த உலகத்தையே மறந்துவிட முயல்வது சிரமமான காரியம். இது சிரமமாக இருக்கும், ஆனால் ஜென் குருக்கள் இதைச் சாதித்துள்ளனர். அவர்கள் தியானத்திற்குப் பாறைத் தோட்டங்கள் அமைத்திருந்தனர். பூக்கள் கிடையாது, மரங்கள் கிடையாது, எதுவும் கிடையாது – வெறும் பாறைகளும் மணலும் மட்டும். அவர்கள் பாறையைப் பார்த்துத் தியானம் செய்தனர். ஏனெனில், அவர்கள் கூறுவார்கள், உன்னால் ஒரு பாறையுடன் ஆழமாக அன்பு கொள்ள முடிந்தால், பிறகு எந்த மனிதனாலும் உனக்கு ஒரு தடையை உருவாக்க முடியாது. மேலும் மனிதர்கள் பாறையைப் போலவே இருக்கிறார்கள். உன்னால் ஒரு பாறையை நேசிக்க முடிந்தால், அப்போது நீ ஒரு மனிதனையும் நேசிக்க முடியும்; பிறகு அங்கு எந்தப் பிரச்னையும் இருக்காது. மனிதர்கள் பாறைகளைப் போலவே உள்ளனர் – அவைகளை விட அதிகம் இறுகி உள்ளனர். அவர்களை உடைப்பதும், அவர்களுக்குள் ஊடுருவுவதும் கடினமானது.

ஆனால் நீ இயற்கையாக நேசிக்கும் ஏதாவது ஒரு பொருளைத் தேர்ந்தெடு, அதன் பின் முழு உலகத்தையும் மறந்து விடு. அதன் முன்னிலையை அனுபவி, அதன் முன்னிலையை சுவை, அதை உணரு, அதனுள் ஆழமாகப் போ. மேலும் அது உன்னுள் ஆழமாகப் போகட்டும். ''பிறகு பொருளை உணர்வதை யும், இல்லாததை உணர்வதையும் விட்டுவிடுகையில்....'' இப்போது வருகிறது இந்த யுக்தியின் மிகவும் கடினமான பகுதி. நீ மற்ற எல்லாப் பொருட்களையும் விட்டுவிட்டாய், ஒரே ஒரு பொருள் மட்டுமே தங்கியிருக்கிறது. நீ எல்லாவற்றையும் மறந்துவிட்டாய், ஒன்று மட்டும்தான் எஞ்சியுள்ளது.

இப்போது ''பொருளை உணர்வதையும்....'' விட்டுவிட வேண்டும். இப்போது இந்தப் பொருளைப் பற்றி உனக்குள்ள உணர்வையும் ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும். ''பொருளை உணர்வதையும், இல்லாததை உணர்வதையும் விட்டு விடுகையில்....'' – மற்ற பொருட்களைப் பற்றியுள்ள உணர்வை யும் ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும். மற்ற எல்லாமும் இல்லாமல் போய்விட்டது. இப்போது அந்த இல்லாமல் போய்விட்ட உணர்வையும் விட்டுவிடு. இந்த ரோஜா, இந்த முகம், இந்தப் பெண், இந்த ஆண், இந்தப் பாறை மட்டுமே முன்னால் இருப்பது. இதையும் விட்டுவிடு, மேலும் அந்த உணர்வையும் விடு. திடீரென நீ ஒரு முழுமையான வெற்றிடத்துள் விழுவாய், எதுவும் அங்கிருக்காது. சிவா சொல்கிறார், ''உணர்ந்து கொள்வாயாக.'' இந்த வெற்றிடத்தை, இந்த எதுவுமில்லாததை உணர்ந்து கொள். இதுவே உனது இயற்கை, இதுவே உன் தூய்மையான இருப்பு.

இந்த எதுவுமற்ற தன்மையை நேரடியாக அணுகுவது சிரமம் – மிகவும் சிரமமானது, கடினமானது. எனவே ஒரு பொருளை வாகனமாகப் பயன்படுத்தி, அதன் மூலமாக அடைவது சுலபம். முதலில் ஒரு பொருளை மனதில் வை, மேலும் மற்ற எல்லாவற்றையும் மறந்துவிடுகிற அளவிற்கு அதை முழுமையாக உணரு. உனது முழு உணர்வு நிலையும் இந்தப் பொருளாலேயே நிறைந்திருக்கட்டும். பிறகு இதையும் விடு, இதையும் மறந்துவிடு.

நீ ஒரு அடிமுடியில்லாத ஆழத்தினுள் விழுகிறாய். இப்போது எதுவும் இருப்பதில்லை, வெளியே எந்தப் பொருளு மில்லை. வெறும் உன்னுடைய அகம் மட்டுமே இருக்கிறது – தூய்மையான, மாசு மருவற்ற, எதுவுமில்லாததாக இருக்கிறது. இந்தத் தூய்மையான இருப்பே, இந்தத் தூய்மையான உணர்வு நிலையே, உனது இயற்கை. ஆனால் இதைப் படிப்படியாகச் செய்; முழு யுக்தியையும் ஒரேயடியாக முயற்சி செய்யாதே. முதலில் ஒரு பொருளைப் பற்றிய உணர்வை உண்டாக்கு. சில நாட்களுக்கு இதை மட்டுமே செய், முழு யுக்தியையும் செய்யாதே.

முதலில் ஒரு சில நாட்களுக்கு, அல்லது ஒரு சில வாரங்களுக்கு, ஒரு பகுதியை மட்டும் செய் – முதல் பகுதியை. ஒரு பொருளின் உணர்வை உண்டாக்கு; அந்தப் பொருளால் நிறைந்திரு. மேலும் ஒரு பொருளையே பயன்படுத்து, பொருளை மாற்றிக் கொண்டே போகாதே. ஏனெனில் ஒவ்வொரு புதுப் பொருளுடனும் நீ மறுபடியும் முழு முயற்சி யையும் ஆரம்பத்திலிருந்து செய்ய வேண்டும். நீ ஒரு ரோஜாப் பூவைப் பயன்படுத்து. அதனால் நிறைந்திரு, அப்படி இருப்பதால் ஒரு நாள் நீ கூறுவாய், ''இப்போது நான் அந்தப் பூ.'' இந்த நிலையில் முதல் பகுதி பூர்த்தியாகிவிட்டது. பூ மட்டுமே இருக்கிறது, மற்ற அனைத்தையும் மறந்துவிட்டாய் என்கிற பொழுது, இந்த நிலையைச் சில நாட்கள் ஆனந்தமாக அனுபவி. இது, இந்த நிலையே அழகானது – மிக, மிக அழகானது, வாழ்வின் சக்தி நிறைந்தது.

சில நாட்களுக்கு இதை உணரு. அதன் பிறகு, இதற்கு நீ இசைவு கொண்டவுடன், இது உனக்குச் சுலபமாக மாறியவுடன், அப்போது நீ முயற்சி செய்யத் தேவையில்லை. அப்போது திடீரென அந்த பூ அங்கு வருகிறது, முழு உலகத்தையும் மறந்து விடுகிறாய், அந்த பூ மட்டுமே அங்கிருக்கிறது.

பிறகு இரண்டாவது பகுதியை முயற்சி செய்; உனது கண்களை மூடிக் கொண்டு அந்தப் பூவையும் மற. நீ முதல் பகுதியைச் செய்து முடித்திருந்தால், இரண்டாவது பகுதி

சிரமமாய் இருக்காது – இதை நினைவில் கொள். ஆனால் முழு யுக்தியையும் ஒரேயடியாக முயற்சி செய்தால், இரண்டாவது பகுதி சாத்தியப்படாது – ஏனெனில் உன்னால் முதல் பகுதியைச் செய்ய முடிந்தால், ஒரு பூவிற்காக உன்னால் முழு உலகத்தையும் மறக்க முடிந்தால், உன்னால் வெறுமைக்காக அந்தப் பூவை மறக்க முடியும். எனவே இரண்டாவது பகுதி நடக்கும். ஆனால் நீ அதற்காகப் படிப்படியாக முயற்சி செய்ய வேண்டும். ஆனால் மனம் மிகவும் தந்திரமானது. மனம் முழு யுக்தியையும் முயற்சிக்கவே எப்பொழுதும் சொல்லும். பிறகு நீ அதில் வெற்றி பெற மாட்டாய். அப்போது மனம் சொல்லும், ''இதனால் பிரயோசனமில்லை, பயனில்லை'' அல்லது ''இது எனக்கானது இல்லை.'' நீ வெற்றி பெற விரும்பினால் பகுதிகளாக முயற்சி செய். முதல் பகுதி முழுமை அடையட்டும், பிறகு இரண்டாவதைச் செய். அப்போது வெளிப் பொருள் எதுவுமில்லாமல் போகிறது, உனது உணர்வு நிலை மட்டுமே அங்கிருக்கிறது, ஒரு ஒளியைப் போல, தன்னைச் சுற்றி எதுவுமற்ற ஒரு சுடராக இருக்கிறது.

உன்னிடம் ஒரு விளக்கு இருக்கிறது. மேலும் அந்த விளக்கின் வெளிச்சம் பல பொருள்களின் மேலும் விழுகிறது. இதைக் கற்பனை செய்துகொள். உனது அறையில் பலபல பொருட்கள் உள்ளன. நீ ஒரு விளக்கை இருட்டு அறையினுள் கொண்டு வந்தால், எல்லாப் பொருட்களும் வெளிச்சம் பெறு கின்றன. விளக்கின் ஒளி எல்லாப் பொருட்களின் மீதும் பாய்கிறது, அதனால் அவை எல்லாவற்றையும் உன்னால் பார்க்க முடிகிறது. இப்போது ஒரு பொருள் மட்டும் இருக்கட்டும்; ஒரே ஒரு பொருள் அங்கிருக்கட்டும். விளக்கு அதுவேதான், ஆனால் அதன் ஒளியில் இப்போது ஒரு பொருள் மட்டுமே இருக்கிறது. இப்போது அந்த ஒரு பொருளையும் எடுத்துவிடு; இப்போது ஒளி எந்தப் பொருளும் இல்லாமல் இருக்கிறது.

உனது உணர்வு நிலைக்கும் இதுபோலவே நிகழ்கிறது. நீ ஒரு சுடர், ஒரு ஒளி; இந்த முழு உலகமும் உனது பொருட்கள். நீ இந்த முழு உலகத்தையும் விட்டுவிட்டு, ஒரு பொருளை மட்டும் உனது கவனத்தைக் குவிக்கத் தேர்ந்தெடுக்கிறாய். உனது

சுடர் அதுவே தான். ஆனால் பல பொருட்களால் நிறைந் திருப்பதற்குப் பதிலாக, ஒரு பொருளால் மட்டும் அது நிறைந் துள்ளது. பிறகு அந்தப் பொருளையும் விட்டுவிடு. திடீரென அங்கு ஒளி மட்டும் இருக்கும் – உணர்வுநிலை மட்டும். அது எந்தப் பொருளின் மேலும் விழுவதில்லை. இதைத்தான் புத்தர் 'நிர்வாணா' என்று அழைத்தார்; இதையே மகாவீரர் 'கைவல்யா' – முற்றிலும் தானாயிருத்தல் – என்று அழைத்தார். உபநிஷத்துக்கள் இந்த அனுபவத்தை 'பிரம்மா' அல்லது 'ஆன்மா' என்று அழைத்தன. சிவா சொல்கிறார், நீ இந்த ஒரு யுக்தியைச் செய்ய முடிந்தால், நீ மிக உயர்வானதை உணர்ந்து கொள்ளுவாய்.

## 24. எழும் உணர்ச்சிகளைக் கவனி.

பன்னிரண்டாவது மையம் கொள்ளும் யுக்தி : ''யாரோ ஒருவருக்கு எதிராக அல்லது யாரோ ஒருவருக்கு ஆதரவாக ஒரு உணர்ச்சி எழும்போது, அதை அந்தக் கேள்விக்குரிய நபரின் மேலும் சுமத்தாதே, மாறாக மையம் கொண்டிரு.''

யாராவது ஒருவருக்கு ஆதரவாக அல்லது எதிராக அன்பு அல்லது வெறுப்பு எழுகிறது என்றால், நாம் என்ன செய் கிறோம்? நாம் அதை அந்த நபரின் மீது சுமத்துகிறோம். நீ என் மீது வெறுப்பை உணர்ந்தால், நீ அந்த வெறுப்பில் உன்னை முற்றிலும் மறந்து விடுகிறாய்; நான் மட்டுமே உனக்குத் தெரியும் பொருளாக ஆகிவிடுகிறேன். நீ என்மேல் அன்பை உணர்ந்தால், நீ உன்னை முழுதாக மறந்து விடுகிறாய்; நான் மட்டுமே தெரிகிறேன். நீ உனது அன்பை அல்லது வெறுப்பை எதுவா னாலும் அதை என் மீது சுமத்துகிறாய். நீ உனது இருப்பின் உள் மையத்தை முற்றிலும் மறந்து விடுகிறாய்; மற்றவர் உனது மையமாகி விடுகிறார். இந்த சூத்திரம் சொல்கிறது, வெறுப்பு எழும்பொழுது அல்லது அன்பு எழும்பொழுது அல்லது எந்த உணர்ச்சி எழும்பொழுதும் எந்த ஒருவரையாவது எதிர்த்தோ ஆதரித்தோ எழும் பொழுதும் அதை அந்தக் குறிப்பிட்ட நபரின் மேல் சுமத்தாதே. நினைவில் கொள், நீதான் அதன் பிறப்பிடம்.

நான் உன்னை நேசிக்கிறேன் – சாதாரணமாக நாம் உணர்வது என்னவென்றால் நீதான் என் அன்பின் பிறப்பிடம். உண்மையில் அது அப்படியல்ல. நான்தான் பிறப்பிடம். நான் எனது அன்பைச் செலுத்திப் பார்க்கும் ஒரு திரை மட்டுமே நீ. நீ வெறும் திரை; நான் எனது அன்பை உன்மேல் செலுத்துகிறேன். ஆனால் நான் சொல்கிறேன், நீதான் என் அன்பின் பிறப்பிடம் என்று. இது உண்மையல்ல, இது கட்டுக்கதை. நான் எனது அன்பெனும் சக்தியைத் தோண்டி எடுத்து உன்மேல் அதைப் பாய்ச்சுகிறேன். அந்த அன்பெனும் சக்தி உன்மேல் பாய்வதால், நீ அன்பானவனாக மாறுகிறாய். நீ வேறு ஒருவருக்கு அன்பான வனாக இல்லாமல் போகலாம், நீ வேறு ஒருவருக்கு முற்றிலும் பிடிக்காதவனாக இருக்கலாம். ஏன்? அன்பின் பிறப்பிடம் நீயாக இருந்தால் அப்போது எல்லோரும் உன்னிடம் அன்பை உணர்வார்கள். ஆனால் நீ அல்ல பிறப்பிடம். நான் அன்பைச் செலுத்துகிறேன், அப்போது நீ அன்பாக மாறுகிறாய்; யாரோ ஒருவர் வெறுப்பைச் செலுத்துகிறார், அப்போது நீ பிடிக்காதவனாக மாறுகிறாய். மேலும் மற்றொருவர் எதையும் செலுத்துவதில்லை, அவர் விருப்பு வெறுப்பில்லாமல் இருக்கிறார்; அவர் உன்னைப் பார்ப்பது கூட இல்லை. என்ன நடக்கிறது? நாம் நம்முள் எழும் நமக்குச் சொந்தமான உணர்ச்சிகளை மற்றவர்கள் மீது சுமத்துகிறோம்.

இதனால்தான், நீ உனது தேனிலவில் இருக்கும்போது, நிலவு அழகானதாக, அற்புதமானதாக, வியக்க வைப்பதாகத் தோன்றுகிறது. முழு உலகமும் மாறுபட்டதாகத் தோன்றுகிறது. ஆனால் அதே வேளையில் உனது பக்கத்து வீட்டுக்காரருக்கு இந்த அற்புதமான இரவு சிறிது கூட இல்லாமல் போகலாம். அவனது குழந்தை இறந்து விட்டது – அப்போது அதே நிலவு சோகமானதாக, தாங்கிக் கொள்ள முடியாததாக இருக்கிறது. ஆனால் உனக்கு அது மகிழ்ச்சியைக் கொடுப்பதாக, உற்சாகம் ஊட்டுவதாக இருக்கிறது; அது உன்னைப் பயித்தியமாக

அடிக்கிறது. ஏன்? நிலவு பிறப்பிடமா அல்லது அது வெறும் திரை, மேலும் நீ உன்னை அதன்மேல் சுமத்துகிறாயா?

இந்தச் சூத்திரம் சொல்கிறது, ''யாரோ ஒருவருக்கு எதிராக அல்லது யாரோ ஒருவருக்கு ஆதரவாக ஒரு உணர்ச்சி எழும் போது, அதை அந்தக் கேள்விக்குரிய நபரின் மேல் சுமத்தாதே.'' – அல்லது கேள்விக்குரிய பொருளின் மீது சுமத்தாதே. மையம் கொண்டிரு. நீதான் பிறப்பிடம் என்பதை நினைவு கொள். எனவே அடுத்தவரிடம் போகாதே. பிறப்பிடத்தை நோக்கி நகரு. நீ வெறுப்பை உணரும் பொழுது வெளிப் பொருளை நோக்கிப் போகாதே. வெறுப்பு எங்கிருந்து வருகிறதோ, அந்த இடத்திற்குச் செல். அது எந்த நபரை நோக்கிப் போகிறதோ அவரை நோக்கிப் போகாதே. பதிலாக அது எங்கிருந்து வருகிறதோ அந்த மையத் திற்கு போ. மையத்தை நோக்கி போ, உள்நோக்கி போ. உனது வெறுப்பை அல்லது அன்பை அல்லது கோபத்தை அல்லது எதுவாக இருந்தாலும் அதை உனது உள்மையத்தை, பிறப் பிடத்தை நோக்கிய பயணத்திற்குப் பயன்படுத்து. பிறப்பிடத்தை நோக்கிச் செல். மேலும் அங்கேயே மையம் கொண்டிரு.

இதை முயற்சி செய்! இது மிக மிக விஞ்ஞானபூர்வமான, உளவியல் ரீதியான யுக்தி. யாரோ ஒருவர் உன்னை அவமானப் படுத்திவிட்டார் – திடீரென கோபம் கொப்பளிக்கிறது, நீ ஜுரம் வந்தவன் போல் ஆகிவிடுகிறாய். கோபம் உன்னை அவமானப்படுத்தியவனை நோக்கிப் பாய்கிறது. இப்போது நீ முழு கோபத்தையும் அவன் மேல் காட்டுவாய். அவன் எதுவும் செய்யவில்லை. அவன் உன்னை அவமானப்படுத்தினான் என்றால், அவன் செய்தது என்ன? அவன் உன்னை வெறுமனே குத்திக் காட்டினான். அவன் உனது கோபம் எழும்புவதற்கு உதவி செய்தான் – ஆனால் கோபம் உன்னுடையது. அவன் புத்தரிடம் சென்று அவரை அவமானப்படுத்தினால், அவரிடம் எந்தக் கோபத்தையும் அவனால் உண்டாக்க முடியாது. அல்லது அவன் ஜீஸஸிடம் சென்றால், ஜீஸஸ் தனது அடுத்த கன்னத்தை அவனுக்குக் காட்டுவார். அல்லது அவன் போதி தர்மாவிடம்

சென்றால் அவர் சிரிப்புடன் கர்ஜிப்பார். எனவே அது உன்னைச் சார்ந்தது.

மற்றவர் அதன் பிறப்பிடம் அல்ல, அதன் மூலம் தோற்றுவாய் எப்பொழுதும் உனக்குள்ளேயே இருக்கிறது. மற்றவர் அந்தத் தோற்றுவாயைத் தாக்குகிறார். ஆனால் உனக்குள் எந்தக் கோபமும் அங்கில்லாவிட்டால் அது வெளியே வர முடியாது. நீ ஒரு புத்தரைத் தாக்கினால், கருணை மட்டுமே வெளிவரும். ஏனெனில் கருணை மட்டுமே அங்கிருக்கிறது. கோபம் வெளியே வராது. ஏனெனில் கோபம் அங்கு இல்லை. நீ ஒரு வாளியை வறண்ட கிணற்றிற்குள் விட்டு இழுத்தால், எதுவும் வராது. ஒரு தண்ணீர் நிறைந்த கிணற்றுக்குள் நீ வாளியை விட்டு எடுத்தால் தண்ணீர் வரும். ஆனால் அந்தத் தண்ணீர் கிணற்றிலிருந்து வருவது. அந்த வாளி அதை வெளியே கொண்டு வர மட்டுமே உதவியது. எனவே உன்னை அவமானப்படுத்தும் ஒருவர் வெறும் வாளியை உன்னுள் வீசுகிறார். மேலும் அப்போது அந்த வாளி கோபத்தால், வெறுப்பால் அல்லது உன்னுள் இருக்கும் நெருப்பால் நிறைந்து வெளியே வருகிறது. நீதான் தோற்றுவாய், இதை நினைவு கொள்.

இந்த யுக்திக்கு, நீ மற்றவர்கள் மேல் காட்டும் அனைத்திற்கும் நீயே தோற்றுவாய் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். மேலும் ஆதரவாக அல்லது எதிராக ஒரு உணர்ச்சி தோன்றும் பொழுதெல்லாம் உடனே உனக்குள் செல், அது எங்கிருந்து வருகிறதோ அந்தத் தோற்றுவாய்க்குச் செல். அங்கு மையம் கொண்டவனாய் இரு; வெளிப் பொருளை நோக்கிப் போகாதே. நீ உனது கோபத்தைப் பற்றிய விழிப்புணர்வு கொள்ள யாரோ ஒருவர் வாய்ப்பு கொடுத்திருக்கிறார் – அவருக்கு நன்றி சொல்லி விட்டு உடனே அவரை மறந்து விடு. கண்களை மூடிக் கொண்டு உனக்குள் போ, இப்போது இந்தக் கோபம் அல்லது அன்பு எந்த இடத்திலிருந்து பிறக்கிறது என்பதைப் பார். எங்கிருந்து வருகிறது? உனக்குள் போ, உனக்குள் செல். நீ அதன் தோற்றுவாயைக் கண்டுபிடிப்பாய். ஏனெனில் அந்தக் கோபம் உன்னிடம் இருந்து தான் பிறக்கிறது.

வெறுப்பு அல்லது அன்பு அல்லது எதுவானாலும் உன்னிடம் இருந்துதான் வருகிறது. நீ கோபத்தில் அல்லது அன்பில் அல்லது வெறுப்பில் இருக்கும் கணத்தில் அதனுடைய பிறப்பிடத்திற்குச் செல்வது சுலபம். ஏனெனில் அப்போது நீ சூடாயிருக்கிறாய். அப்போது செல்வது சுலபம். அந்த இணைப்பு சூடாயிருக்கிறது, நீ அதோடு உள்ளே போகலாம். மேலும் நீ உனக்குள் குளிர்ந்த புள்ளியை அடையும் பொழுது நீ திடீரென ஒரு மாறுபட்ட பரிமாணத்தை உணர்வாய், ஒரு மாறுபட்ட உலகம் உனக்கு முன்னால் விரியும். கோபத்தைப் பயன்படுத்து, வெறுப்பைப் பயன்படுத்து, அன்பைப் பயன்படுத்து – உனக்குள் போகப் பயன்படுத்து.

நாம் எப்பொழுதும் அடுத்தவரிடம் போகவே இதைப் பயன்படுத்துகிறோம். மேலும் வெளிக்காட்ட அங்கு ஒருவரும் இல்லையென்றால் நாம் மிகவும் மனமுடைந்து போகிறோம். அப்போது நாம் உயிரற்ற பொருள்கள் மீது கூடக் காட்டுகிறோம். கோபத்தைத் தங்களது செருப்பிடம் கூடக் காட்டுபவர்களை, அவற்றை வீசி எறிபவர்களை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் என்ன செய்கிறார்கள்? கோபம் கொண்டவர்கள் கதவை ஓங்கிச் சாத்துவதை, தங்களது கோபத்தைக் கதவின் மேல் காட்டுவதை, கதவைத் திட்டுவதை, கதவை நோக்கி அசிங்கமான வார்த்தைகள் பேசுவதை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் என்ன செய்கிறார்கள்?

இதைப் பற்றிய ஒரு ஜென்னின் ஆழமான பார்வையோடு நான் முடித்துக் கொள்கிறேன். மாபெரும் ஜென் குருக்களில் ஒருவரான 'லின் சி' இப்படிச் சொல்லுவது வழக்கம்; ''நான் இளமையாய் இருந்த பொழுது படகோட்டுவதில் மிகுந்த ஆர்வமுள்ளவனாய் இருந்தேன். என்னிடம் ஒரு சிறிய படகிருந்தது, அதில் நான் ஏரியில் தனியாகப் போவது வழக்கம். பல மணி நேரங்கள் தொடர்ந்து நான் அங்கேயே இருப்பேன்.

ஒரு முறை நான் எனது படகில் மூடிய கண்களுடன் அழகான இரவில் தியானம் செய்து கொண்டிருந்தேன். ஒரு

காலிப் படகு நீரின் ஓட்டத்தில் மிதந்து வந்து எனது படகின் மீது மோதியது. நான் கண்களை மூடி இருந்ததால் நினைத்துக் கொண்டேன், 'அந்தப் படகிலிருக்கும் யாரோ ஒருவர் எனது படகின் மீது கொண்டு வந்து மோதி விட்டார்.' கோபம் எழுந்தது. நான் கண்களைத் திறந்தேன், அதே சமயத்தில் அந்த மனிதனிடம் கோபத்தோடு எதையோ சொல்லப் போனேன்; அப்போது தான் அந்த படகு காலியாய் இருப்பதை உணர்ந்தேன். அப்போது எந்தப் பக்கமும் நகர முடியவில்லை. யாரிடம் என் கோபத்தைக் காட்டுவது? படகு காலியாய் இருக்கிறது. அது நீரின் ஓட்டத்தில் மிதந்து வந்து எனது படகை மோதி இருக்கிறது. எனவே செய்வதற்கு அங்கு எதுவும் இல்லை. அந்த காலிப் படகின் மேல் கோபத்தைக் காட்ட எந்தச் சாத்தியக் கூறும் இல்லை.''

'லின் சி' சொன்னார், ''எனவே நான் கண்களை மூடிக் கொண்டேன். கோபம் அங்கு இருக்கிறது. ஆனால் வெளியேற எந்த வழியும் இல்லை, நான் கண்களை மூடிக் கொண்டேன். மேலும் அந்தக் கோபத்துடன் பின்னோக்கி மிதந்து சென்றேன். அந்தக் காலிப் படகினால் தான் நான் உணர்ந்து கொண்டேன். நான் அந்த மௌனமான இரவில் எனக்குள் இருக்கும் புள்ளிக்கு வந்து சேர்ந்தேன். அந்தக் காலிப் படகு தான் எனது குரு. இப்போது யாராவது ஒருவர் வந்து என்னை அவமானப்படுத்தி னால் நான் சிரித்துக் கொண்டே சொல்கிறேன், 'இந்தப் படகும் காலிதான்.' நான் கண்களை மூடிக் கொண்டு எனக்குள் சென்று விடுகிறேன்.''

இந்த யுக்தியைப் பயன்படுத்துங்கள். இது உங்களுக்கு அற்புதமாய் வேலை செய்யும்.

## கேள்விகள்

- நமக்கு மற்றவர்கள் மேல் எழும் உணர்ச்சிகளை, நம்மை அடக்கிவைத்துக் கொள்ளாமல், அவர்கள் மேல் காட்டாமல் இருப்பது எப்படி?
- ஏன் மேற்கத்திய உளவியலாளர்கள் இந்த மனதின் சுற்றை அவிழ்க்கும் யுக்தியில் பெருமளவு வெற்றி பெறவில்லை?
- ஒருவர் தீட்சை பெற்றாலொழிய எந்த முறையும் சக்தியுள்ளதாய் இருக்காது என்பது உண்மையா?
- அடையாளம் கொள்ளல் ஒன்றே பாவம் எனும்போது, ஏன் பல யுக்திகள் அதைப் பயன்படுத்துகின்றன. மேலும் ஒரு பொருளோடு ஒன்றிவிடச் சொல்கின்றன?

★★★

## முதல் கேள்வி :

❖ **"யாரோ ஒருவருக்கு ஆதரவாக அல்லது யாரோ ஒருவருக்கு எதிராக ஒரு உணர்ச்சி எழும்போது, அதை அந்தக் கேள்விக்குரிய நபரின் மேல் சுமத்தாமல், மையம் கொண்டவனாய் இரு என்று நேற்று நீங்கள் பேசிய கடைசி யுக்தி சொல்கிறது. ஆனால் இந்த யுக்தியை எங்கள் கோபம், வெறுப்பு, அது போன்ற மற்றவற்றின் மேல் நடைமுறைப்படுத்திப் பார்த்தபொழுது, நாங்கள் எங்களது உணர்ச்சிகளை அடக்கிக் கொள்வதாக உணர்கிறோம். மேலும் அது அடக்கிக் கொள்வதால் வரும் குணச்சிக்கலாக மாறிவிடுகிறது. எனவே இந்த மேலே சொன்ன யுக்தியைப் பயன்படுத்தும்போது, எப்படி இந்த அடக்கிக் கொள்வதால் வரும் குணச்சிக்கல் வராமல் தடுத்துக் கொள்வது என்பதைத் தயவுகூர்ந்து தெளிவு செய்ய வேண்டும்."**

---

வெளிப்படுத்துவது மற்றும் அடக்கிவைப்பது ஆகிய இரண்டும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்களாகும். அவை முரண்பட்டவை. ஆனால் அடிப்படையில் அவைகளுக்குள் எந்த வேறுபாடும் இல்லை. வெளிப்படுத்துவது, அடக்கிவைப்பது ஆகிய இரண்டிலும், அடுத்தவர்தான் மையமாக இருக்கிறார். நான் கோபமாய் இருக்கிறேன் – நான் கோபத்தை அடக்கிக் கொள்கிறேன். நான் கோபத்தை உனக்கு எதிராக வெளிப்படுத்தப் போகிறேன்; இப்போது நான் கோபத்தை உனக்கு எதிராக அடக்கிக் கொள்கிறேன். ஆனால் வெளிப்படுத்துவதாயிருந் தாலும், அடக்கிக் கொள்வதாய் இருந்தாலும், கோபம் உன் மீதுதான் சுமத்திப் பார்க்கப்படுகிறது. இந்த யுக்தி அடக்கிக் கொள்வதற்கானது அல்ல. இந்த யுக்தி, அடக்கிக் கொள்வது மற்றும் வெளிப்படுத்துவது ஆகிய இரண்டின் அடிப்படைத் தன்மைகளையே மாற்றுகிறது.

இந்த யுக்தி சொல்கிறது, அடுத்தவரின் மீது சுமத்திப் பார்க்காதே, நீ தான் அதன் பிறப்பிடம், தோற்றுவாய். நீ வெளிப் படுத்தினாலும் அல்லது அடக்கிக் கொண்டாலும், நீயே அதன்

தோற்றுவாய். நீ வெளிப்படுத்துவதையோ அல்லது அடக்கிக் கொள்வதையோ இந்த யுக்தி வலியுறுத்துவதில்லை. கோபம் எங்கிருந்து எழுகிறது என்பதை அறிந்துகொள்வதையே வலியுறுத்துகிறது. கோபம், வெறுப்பு அல்லது அன்பு எழுமிடமாயிருக்கின்ற தோற்றுவாய்க்கு, மையத்திற்கு நீ செல்ல வேண்டும். நீ அடக்கிக் கொள்ளும்போது, நீ மையத்தை நோக்கிச் செல்வதில்லை, மாறாக நீ வெளிப்படுத்துவதுடன் மட்டுமே போராடுகிறாய்.

கோபம் எனக்கு எழுகிறது. சாதாரணமாக நான் இரண்டு காரியங்கள் செய்யலாம் : யாரோ ஒருவர் மேல் வெளிக் காட்டுவது அல்லது அடக்கிக் கொள்வது. ஆனால் இந்த இரண்டிலுமே, நான் அடுத்தவரைச் சார்ந்து நடந்து கொள் கிறேன். மேலும் மேல்மட்டத்திற்கு வந்துவிட்ட கோபத்தைப் பொறுத்து நடந்து கொள்கிறேன் – ஆனால் தோற்றுவாயைப் பொறுத்து அல்ல.

இந்த யுக்தியில் அடுத்தவரை முற்றிலும் மறந்துவிட வேண்டும். உனது சக்தி கோபத்தில் எழுவதைப் பார். மேலும் அது எங்கிருந்து வந்துகொண்டிருக்கிறதோ, உனக்குள் அதன் தோற்றுவாய் எதுவோ, அதைக் கண்டுபிடிக்க ஆழமாகச் செல். மேலும் நீ தோற்றுவாயைக் கண்டுபிடித்த கணமே, அதில் மையம் கொண்டவனாய் அங்கேயே இரு. கோபத்துடன் எதுவும் செய்யாதே – இதை நினைவில் கொள். வெளிப்படுத்தும் பொழுது நீ கோபத்துடன் ஏதோவொன்றைச் செய்கிறாய், அடக்கிக் கொள்வதிலும் நீ கோபத்துடன் ஏதோவொன்றைச் செய்கிறாய். கோபத்துடன் எதுவும் செய்யாதே; அதைத் தொடாதே, அதை வெறும் ஒரு பாதையாகப் பயன்படுத்து. அதனுடன் அடி ஆழத்திற்குச் சென்று, அது எங்கிருந்து எழுகிறது என்பதை அறிந்து கொள்வதை மட்டும் செய். மேலும் நீ தோற்றுவாயைக் கண்டுகொண்ட கணத்திலேயே, அங்கு மையம் கொள்வது மிகவும் சுலபமாகிவிடும். உண்மையில், தோற்று வாயைக் கண்டுபிடிக்க ஒரு பாதையாகக் கோபம் பயன்படுத்தப் பட வேண்டும். எந்த உணர்ச்சியையும் பயன்படுத்த முடியும்.

நீ அடக்கிக் கொள்ளும் போது நீ தோற்றுவாயைக் கண்டுபிடிக்கப் போவதில்லை. நீ, மேலே வந்து வெளிப்படுத்த விரும்பும் சக்தியோடு சண்டை போடுகிறாய். உன்னால் அடக்கிக் கொள்ள முடியும். ஆனால் அது விரைவிலோ அல்லது சிறிது கழிந்தோ வெளிப்படுத்தப்பட்டே ஆக வேண்டும். ஏனெனில் மேலே வந்துவிட்ட சக்தியுடன் நீ எப்பொழுதும் போராடிக் கொண்டே இருக்க முடியாது. அதை வெளிப்படுத்தியே ஆக வேண்டும். எனவே நீ அதை 'அ'விடம் வெளிப்படுத்தாமலிருக்கலாம், ஆனால் அப்போது நீ அதை 'ஆ' அல்லது 'இ'யிடம் வெளிப்படுத்துவாய். உன்னை விட வலிமை குறைந்த யாரோ ஒருவரைப் பார்க்கும் பொழுது, நீ அந்த சக்தியை வெளிப்படுத்துவாய். நீ அதை வெளிப்படுத்தாதவரை, நீ சுமையாக, இறுக்கமாக, கனமாக, நலம்குன்றியே இருப்பாய்.

எனவே அது வெளிப்படுத்தப்படும். நீ அதைத் தொடர்ந்து அடக்கிக் கொண்டிருப்பது முடியாது. எங்கிருந்தாவது அது கசிந்துவிடும். ஏனெனில் அது வெளியேறாதவரை நீ அதைப் பற்றி இடைவிடாது கவலைப்பட்டும் கொண்டிருப்பாய். எனவே அடக்கிக் கொள்வது என்பது உண்மையில் வெளிப்படுத்தலைத் தள்ளிப் போடுவதே. நீ தள்ளிப் போடுகிறாய் அவ்வளவே.

நீ உனது முதலாளியிடம் கோபம் கொள்கிறாய், மேலும் அதை நீ வெளிக்காட்ட முடியாது; அது உனது பொருளாதாரத்திற்கு நல்லதல்ல. நீ அதை அப்படியே அமுக்கிக் கொள்ள வேண்டும்; நீ அதை உனது மனைவியின் மேலோ, அல்லது உனது குழந்தையின் மேலோ அல்லது வேறு எங்காவதோ, உனது வேலைக்காரன் மேலோ வெளிப்படுத்தும் வரை நீ காத்திருக்கிறாய்.... நீ வீட்டை அடைந்தவுடன், நீ அதை வெளிப்படுத்துவாய். நீ அதற்கான காரணங்களைக் கண்டு பிடித்துக் கொள்வாய். ஏனெனில் மனிதன் ஒரு காரணம் கண்டுகொள்ளும் மிருகம். அவன் காரணம் சொல்வான்; அவன் ஏதாவதொன்றை, மிகவும் அல்பமாக ஏதாவதொன்றைக் கண்டுபிடிப்பான். ஆனால் இப்போது அது மிகவும் அர்த்தமுள்ளதாக மாறிவிடும்.

ஏனெனில் உன்னை வெளிப்படுத்த ஏதோவொன்று கிடைத்துவிடும்.

அடக்கிக் கொள்வது என்பது ஒத்திப் போடுவதைத் தவிர வேறல்ல. நீ பல மாதங்களுக்கு, வருடங்களுக்குத் தள்ளிப் போடலாம். மேலும் அறிந்தவர்கள் சொல்வார்கள், நீ பல பிறவி களுக்குக் கூடத் தள்ளிப் போடலாம், ஆனால் அதை வெளிப் படுத்தியே ஆகவேண்டும். இந்த யுக்தி வெளிப்படுத்துவதிலோ அல்லது அடக்கிக் கொள்வதிலோ சிறிது கூட ஈடுபாடு கொண்ட தல்ல. இந்த யுக்தி உன்னுடைய சக்தியை, உன்னில் எழும் உணர்ச்சியை, உனக்குள் அடி ஆழத்திற்குச் செல்ல ஒரு பாதை யாகப் பயன்படுத்துகிறது.

உன்னிடம் கோபம் அல்லது வெறுப்பு அல்லது வேறு ஏதாவது உணர்ச்சி எழுவதைத் திணிக்கும்படியான சூழ்நிலை களை எப்பொழுதும் குருட்ஜிப் உருவாக்குவார். இது அவரால் உண்டாக்கப்படும் ஒரு நிகழ்வாக இருக்கும். என்ன நடக்கப் போகிறது என்பதைப் பற்றி நீ அறிய மாட்டாய்.

குருட்ஜிப் தனது சீடர்களுடன் அமர்ந்திருக்கிறார், அப்போது நீ நுழைகிறாய், ஆனால் என்ன நடக்கப் போகிறது என்பதை நீ அறியவில்லை. அதே சமயம் அவர்கள் உன்னிடம் கோபத்தை உருவாக்கத் தயாராய் இருக்கின்றனர். அவர்கள் அப்படி நடந்து கொள்வார்கள்.... யாராவது ஒருவர் ஏதோ ஒன்றைச் சொல்வார். மேலும் அந்த முழுக் குழுவும், நீ கோபம் கொண்டு சீறும் அளவிற்கு உன்னை அவமானப்படுத்தும்விதமாக நடந்து கொள்வார்கள். திடீரெனக் கோபம் வந்துவிடும்; உனக்கு தீப்பிடித்துக் கொள்ளும். மேலும் அப்போது, ஆழமாகச் செல்லலாம் அல்லது நீ வெளியேற்ற வேண்டும் என்ற ஒரு புள்ளியை அடையும் பொழுது, நீ ஒரு உச்சக் கட்டத்திற்கு வந்துவிட்டாய், நீ வெடிக்கப் போகிறாய் என்ற நிலையை அடையும் பொழுது, குருட்ஜிப் சொல்வார், ''உனது கண்களை மூடு. இப்போது உன் கோபத்தைப் பற்றிய விழிப்புணர்வு கொள், மேலும் உள்நோக்கித் திரும்பிப் போ.''

அப்போது தான் இந்தச் சூழ்நிலை உருவாக்கப்பட்ட ஒன்று என்பதை நீ உணர்வாய். உன்னை அவமானப்படுத்துவதில் யாருக்கும் ஆர்வமில்லை – அது ஒரு வெறும் நாடகம், ஒரு உளரீதியான நாடகம் – ஆனால் கோபம் எழுந்துவிட்டது. மேலும் இது ஒரு வெறும் நாடகம் தான் என்பதை நீ அறிய வந்த பின்னும், அந்த சக்தி திடீரெனக் குறைய முடியாது, அதற்கு நேரம் எடுக்கும். இப்போது நீ விழுந்து கொண்டிருக்கும் சக்தியோடு சேர்ந்து கீழே, தோற்றுவாய்க்குச் செல்ல முடியும். இந்த சக்தி, அது எங்கிருந்து வந்ததோ அந்த இடத்திற்கு உன்னைக் கொண்டு செல்ல உதவும்; நீ இப்போது அசலான தோற்றுவாயுடன் தொடர்பு கொள்ள முடியும். மேலும் இது மிகவும் வெற்றிகரமான தியானங்களில் ஒன்றாகும்.

எந்த ஒரு உணர்ச்சியையாவது எழுப்பு.... ஆனால் அதற்குத் தேவையில்லை. ஏனெனில் நாள் முழுவதும் உணர்ச்சிகள் எழும்பிய வண்ணமே உள்ளன. எந்த எழும் உணர்ச்சியை வேண்டுமானாலும் தியானத்திற்குப் பயன்படுத்து. அப்போது நீ அடுத்தவரை முற்றிலும் மறந்துவிடுகிறாய். மேலும் நீ எதையும் அடக்கிவைத்துக் கொள்வதும் இல்லை. நீ மேலே எழுந்த ஏதோவொரு உணர்ச்சியுடன் ஆழத்திற்குச் செல்கிறாய், அவ்வளவே. எல்லா சக்திகளும் ஒரே மூலத்திலிருந்து, தோற்றுவாயிலிருந்தே வருகின்றன, இப்போது பாதை கதகதப்பாய் இருக்கிறது. எனவே நீ திரும்பிச் செல்வதற்கு அந்தப் பாதையைப் பயன்படுத்திக் கொள்ள முடியும். மேலும் நீ அசலான மூலஸ்தானத்தை அடையும் கணத்திலேயே, அந்த சக்தியும் மூலஸ்தானத்தினுள் ஒடுங்கிவிடும். இது அடக்கிக் கொள்வது அல்ல; சக்தி அது தோன்றிய இடத்திற்கே திரும்பச் சென்றுவிட்டது. மேலும் உனது சக்தியை உனது அசலான மூலஸ்தானத்தோடு மறுபடியும் ஒன்றுசேரச் செய்ய உன்னால் முடியும்போது, நீ உனது உடலின், உனது மனதின், உனது சக்தியின் எஜமானன் ஆகிவிடுகிறாய். நீ குருவாகி விட்டாய். இப்போது நீ உன்னுடைய சக்தியைச் சிதற விடமாட்டாய்.

உனது சக்தி எப்படி உன்னோடு சேர்ந்து பின்னால் விழுகிறது என்பதை நீ அறிந்து கொண்டு விட்டால், பிறகு எந்த அடக்கி வைத்துக் கொள்வதும் தேவையில்லை, எந்த வெளிப் படுத்தலும் தேவையில்லை. இந்தக் கணத்தில் என் முன் நீ கோபமாய் இல்லை. நான் ஏதோவொன்றைச் சொல்கிறேன் – நீ கோபமடைந்து விடுகிறாய். எங்கிருந்து இந்த சக்தி வருகிறது? ஒரு கணம் முன்பாக நீ கோபமாக இல்லை, ஆனால் சக்தி உன்னிடம் இருந்தது. இந்த சக்தி மறுபடியும் பின்னால் விழுந்து அதன் தோற்றுவாயை அடைய முடிந்தால், நீயும் மறுபடியும் ஒரு கணத்திற்கு முன்பு இருந்ததைப் போலவே ஆக முடியும்.

இதை நினைவில் கொள் : சக்தி என்பது கோபமோ, அன்போ, வெறுப்போ அல்ல. சக்தி வெறும் சக்திதான் – எந்தக் குணமுமற்றது. அதே சக்திதான் கோபமாக மாறுகிறது; அதே சக்திதான் பாலுணர்ச்சியாக மாறுகிறது; அதே சக்திதான் அன்பாக மாறுகிறது; அதே சக்திதான் வெறுப்பாக மாறுகிறது. இவை யெல்லாம் ஒரே சக்தியின் பல வடிவங்கள். நீ வடிவத்தைக் கொடுக்கிறாய், உன்னுடைய மனம் வடிவத்தைக் கொடுக்கிறது. அப்போது அதில் சக்தி நுழைந்து கொள்கிறது.

எனவே நினைவு கொள், நீ ஆழமாக நேசித்தால், அப்போது கோபம் கொள்வதற்கு உனக்கு அதிக சக்தி இருக்காது. நீ நேசிக்கவே இல்லையென்றால், அப்போது கோபம் கொள்ள அதிக சக்தி உன்னிடம் இருக்கும். மேலும் நீ கோபம் கொள்வதற்கான சூழ்நிலைகளைக் கண்டுபிடித்தபடியே இருப்பாய். உனது சக்தி பாலுணர்வில் வெளிப்படுத்தப்பட்டு விட்டால், உனது வன்முறை குறையும். உனது சக்தி பாலுணர்வு மூலமாக வெளிப்படுத்தப்படாவிட்டால், உன்னிடம் வன்முறை அதிகமிருக்கும். அதனால்தான் ராணுவத்தில் ஒருபோதும் படைவீரர்களுக்குப் பாலுணர்வுத் தொடர்புகள் அனுமதிக்கப் படுவதில்லை. அது அனுமதிக்கப்பட்டால், ராணுவங்கள் சண்டையிடும் திறமையை முற்றிலுமாக இழந்துவிடும்.

இதனால்தான், எப்பொழுதெல்லாம் ஒரு நாகரிகம் சிகரத்தை எட்டுகிறதோ, அப்பொழுதெல்லாம் அதனால் சண்டையிட முடிவதில்லை. எனவே எப்பொழுதும், அதிக நாகரிகமும், அதிக பண்பாடும் கொண்ட சமூகங்கள், குறைந்த நாகரிகமடைந்தவற்றால் தோற்கடிக்கப்பட்டு அழிக்கப் பட்டுள்ளன – எப்பொழுதும், ஏனெனில் ஒரு வளர்ந்த சமுதாயம் அதன் தனிமனிதர்கள் ஒவ்வொருவரின் அனைத்துத் தேவை களிலும், பாலுணர்வு உட்பட, அக்கறை கொண்டுள்ளது. எனவே ஒரு சமூகம் உண்மையிலேயே வளர்ந்துவிடும் பொழுது, செழிப்படைந்து விடும்பொழுது, எல்லோருடைய பாலுணர்வுத் தேவையும் நிறைவடைந்து விடுகிறது – ஆனால் பாலுணர்வுத் தேவை பூர்த்தியடைந்து விடும்போது உன்னால் சண்டையிட முடியாது. உன்னுடைய பாலுணர்வுத் தேவை பூர்த்தி அடையாத போது உன்னால் வெகு சுலபமாக சண்டையிட முடியும். எனவே நீ அமைதியான உலகத்தை விரும்பினால், பாலுணர்விற்கு அதிக சுதந்திரம் கொடுக்க வேண்டும். நீ போரிடும், சண்டையிடும் உலகத்தை விரும்பினால், அப்போது பாலுணர்வை மறு, பாலுணர்வை அடக்கி வை, பாலுணர்வுக்கு எதிரான அணுகு முறைகளை உருவாக்கு.

இது மிகவும் முரண்பாடான விஷயம் : துறவிகள் மற்றும் முனிவர்கள் என்று அழைக்கப்படுபவர்கள் எல்லோரும் ஒரு புறம் அமைதியைப் பற்றிப் பேசிக் கொண்டே போகிறார்கள். மறுபுறம் பாலுணர்வுக்கு எதிராகப் பேசிக் கொண்டே போகிறார் கள். அவர்கள் பாலுணர்வுக்கு எதிரான சூழலை உருவாக்கிக் கொண்டே போகிறார்கள். அதே சமயம் அவர்கள் இந்த உலகத்திற்கு அமைதி தேவை, போர் வேண்டாம் என்றும் கூறிக் கொண்டே போகிறார்கள். இது மடத்தனமானது. ஹிப்பிக்கள் இவர்களை விட பரவாயில்லை; அவர்களது கோஷம் சரிதான் : ''கலவியில் ஈடுபடு, சண்டையில் ஈடுபடாதே.'' இது சரியானது. நீ அதிகம் அன்பு செய்வதில் ஈடுபட்டால், உண்மையில் உன்னால் போரில் ஈடுபட முடியாது.

இதனால் தான் சன்னியாசிகள் என்று அழைக்கப் படுபவர்கள், பாலுணர்வை அடக்கிக் கொண்டுள்ள இவர்கள், எப்பொழுதும் வன்முறையாளர்களாய், ஒன்றுமில்லாததற்கு எல்லாம் கோபமடைபவர்களாய் இருக்கிறார்கள். அவர்கள் கோபமும், வன்முறையும் நிறைந்தவர்களாய், கொப்பளித்துக் கொண்டு, வெடிக்கத் தயாராயிருக்கிறார்கள். அவர்களது முழு சக்தியும் வெளிப்படுத்தப்படாமல் இருக்கிறது. சக்தி அதன் பிறப்பிடத்தில், மூலஸ்தானத்தில் பின்னோக்கி விழாத வரையில், பிரம்மச்சரியம், உண்மையான பிரம்மச்சரியம் சாத்தியமில்லை. நீ பாலுணர்வை அடக்கிக் கொள்ளலாம் – அப்போது அது வன்முறையாக மாறும். பாலுணர்வு சக்தி மையத்தை நோக்கி விழுந்தால், நீ ஒரு குழந்தையைப் போல இருப்பாய்.

குழந்தைக்கு உன்னைவிட அதிகமாகப் பாலுணர்வு சக்தி இருக்கிறது. ஆனால் அது இன்னும் மூலஸ்தானத்திலேயே இருக்கிறது; அது இன்னும் உடம்பிற்கு வரவில்லை. அது வரும். உடல் தயாரானவுடன், சுரப்பிகள் தயாரானவுடன், உடம்பு பக்குவமடைந்தவுடன், அந்த சக்தி நகர்ந்து வரும். ஏன் ஒரு குழந்தை அவ்வளவு வெகுளியாகத் தோன்றுகிறது? சக்தி அதன் மூலஸ்தானத்திலேயே இருக்கிறது; அது இன்னும் நகரவில்லை. மறுபடியும் இதுவே நடக்கிறது. ஒருவர் ஞானமடையும் போது முழு சக்தியும் மூலஸ்தானத்திற்கு நகர்கிறது, அந்த நபர் குழந்தையைப் போலாகிவிடுகிறார். ஜீஸஸ், ''குழந்தையைப் போல இருப்பவர்கள் மட்டுமே எனது கடவுளின் சாம்ராஜ்யத்தில் நுழைய முடியும்'' என்று சொன்னதன் அர்த்தம் இதுதான்.

இதன் அர்த்தம் என்ன? விஞ்ஞான ரீதியாக இதன் அர்த்தம், உனது முழு சக்தியும் அதன் மூலஸ்தானத்திற்குத் திரும்பிவிட்டது. நீ வெளிப்படுத்தினால், அது வெளியே போய் விடுகிறது. மேலும் நீ வெளிப்படுத்தும்போது அந்த சக்திக்கு வெளியே செல்லும் பழக்கத்தை, வெளியேறும் பழக்கத்தை உருவாக்குகிறாய். நீ அடக்கி வைத்துக் கொள்ளும் பொழுது அந்த சக்தி மூலஸ்தானத்திற்கும் திரும்பாமல் வெளியேயும்

செல்லாமல், அது ஊசலாடிக் கொண்டிருக்கிறது. மேலும் இந்தத் தொங்கிக் கொண்டிருக்கும் சக்தி ஒரு சுமையாக ஆகிவிடுகிறது.

அதனால்தான், நீ உண்மையில் கோபத்தை வெளிப்படுத்தி விட்டால் நீ விடுபட்டவனாக உணர்கிறாய். நீ பாலுணர்வை அனுபவித்தாலும் நீ விடுபட்டவனாக உணர்கிறாய். நீ ஏதாவது ஒன்றை உடைத்தால், உன்னுடைய வெறுப்பு வெளியேறுகிறது. அப்போது நீ விடுபட்டவனாக உணர்கிறாய். ஏன் இந்த விடுபட்ட உணர்வு வருகிறது? ஏனெனில் தொங்கிக் கொண் டிருக்கும் சக்தி ஒரு சுமையாக ஒரு கனமாக இருக்கிறது. அது மேகமூட்டத்தைப் போல உனது மனதின் மேல் கவிந்துள்ளது. நீ அதை வெளியே வீச வேண்டும் அல்லது அதன் அசலான மூலஸ்தானத்திற்கு அது திரும்பிப் போக அனுமதிக்க வேண்டும் : இந்த இரண்டு வழிகள் மட்டுமே உள்ளன.

அது மூலஸ்தானத்திற்குத் திரும்பிச் சென்றால் அது வடிவிழந்து போய்விடும். மூலஸ்தானத்தில் சக்திக்கு எந்த வடிவமும் இல்லை. உதாரணமாக, மின்சாரம் வடிவற்றது. அது ஒரு மின்விசிறிக்குள் புகும்பொழுது அது ஒரு வகை வடிவத்தை எடுக்கிறது. அது மின் விளக்குக்குள் போகும்போது அது மற்றொரு வடிவம் எடுக்கிறது. நீ அதை ஆயிரக்கணக்கான வழிகளில் பயன்படுத்தலாம் – ஆனால் அந்த சக்தி ஒன்றுதான். அது எதற்குள் நகர்கிறதோ அதன் இயக்கத்தைப் பொருத்த வடிவத்தை எடுக்கிறது.

கோபம் ஒரு இயந்திர இயக்கம்; பாலுணர்வு ஒரு இயந்திர இயக்கம், அன்பு ஒரு இயந்திர இயக்கம், வெறுப்பு ஒரு இயந்திர இயக்கம். சக்தி வெறுப்பின் பாதையில் நகரும்போது அது வெறுப்பாக மாறுகிறது. அதே சக்தி அன்பினுள் நகர்ந்தால் அது அன்பாக மாறுகிறது. மேலும் அது மூலஸ்தானத்திற்கே திரும்ப வும் நகர்ந்தால் அது வடிவற்ற சக்தியாக, தூய சக்தியாக ஆகிவிடுகிறது. அது வெறுப்போ அல்லது அன்போ அல்லது கோபமோ அல்லது பாலுணர்வோ அல்ல, அது வெறும் சக்தி. அப்போது அது வெகுளித் தன்மையோடு இருக்கிறது. ஏனெனில்

வடிவமற்ற தன்மையே பரிபூர்ண வெகுளித் தன்மை. இதனால் தான் புத்தர் அவ்வளவு வெகுளியாக, குழந்தையைப் போலத் தோன்றுகிறார். சக்தி மூலஸ்தானத்திற்குப் போய்விட்டது.

வெளிப்படுத்தாதே, ஏனெனில் நீ உனது சக்தியை வீணாக்குகிறாய். மேலும் அடுத்தவரும் அவரது சக்தியை வீணாக்கக் காரணமாகிறாய். அடக்கிக் கொள்ளாதே, ஏனெனில் அப்போது நீ ஒரு தொங்கிக் கொண்டிருப்பதை உருவாக்குகிறாய். மேலும் அதை நீ விடுவித்தே ஆக வேண்டும். அப்போது என்னதான் செய்வது?

இந்த யுக்தி சொல்கிறது, எழும்பும் உணர்ச்சியை, அதை நீ எதுவும் செய்யாதே, அந்த உணர்ச்சி பிறந்த இடமான மூலஸ்தானத்திற்குத் திரும்பிச் செல். மேலும், எழுந்த உணர்ச்சி சூடாக இருக்கும் பொழுதே பாதை தெளிவாக, உள்ளே பார்க்கும்படி இருக்கும் பொழுதே, அதன் வழியே திரும்பிச் செல். எழும் உணர்ச்சிகளைத் தியானத்திற்குப் பயன்படுத்து. அதன் விளைவு அற்புதமானதாக, நம்பமுடியாததாக இருக்கும். மேலும் எப்படி சக்தியை மூலஸ்தானத்தினுள் திரும்பச் சேர்ப்பது என்பதற்கான சாவியை நீ கண்டுபிடித்து விட்டால் உனது நடைமுறை முற்றிலும் மாறுபட்ட தன்மையைப் பெறும். பிறகு நீ எதையும் சிதறடிக்க மாட்டாய், அப்படிச் செய்வது மடத்தனமாகத் தோன்றும்.

புத்தர் சொல்லியிருக்கிறார், அதாவது நீ யாராவது ஒருவருக்கு எதிராகக் கோபம் கொள்ளும் பொழுதெல்லாம், நீ அடுத்தவருடைய தவறான செய்கைக்காக உன்னைத் தண்டித்துக் கொள்கிறாய். அவன் உன்னை அவமானப்படுத்தினான் – அது அவன் செயல் – ஆனால் அதற்காக நீ கோபம் கொள்வதால் உன்னையே நீ தண்டித்துக் கொள்கிறாய்; உனது சக்தியை நீ சிதறடிக்கிறாய். இது மடத்தனம். ஆனால் பிறகு, புத்தர், மகாவீரர், ஜீஸஸ் இவர்கள் சொல்வதைக் கேட்ட பிறகு, நாம் அடக்கிக் கொள்ள ஆரம்பித்திருக்கிறோம்; நாம் நமது சக்தியை அமுக்கிக் கொள்ள ஆரம்பித்திருக்கிறோம். இப்போது நாம்

நினைத்துக் கொள்கிறோம், அதாவது கோபம் நல்லதல்ல, கோபப்படுவது மடத்தனமானது.

ஆகவே என்ன செய்வது? கோபத்தை அடக்கி வைத்துக் கொள், கோபப்படாதே, நீ சுருங்கிக் கொள், உன்னை மூடிக் கொள். உன்னுடைய கோபத்தோடு சண்டை போட்டு அதை அடக்கிக் கொள். ஆனால் இப்போது, எந்தக் கணமும் வெடிக்கக் கூடிய ஒன்றின் மீது நீ உட்கார்ந்திருக்கிறாய். நீ ஒரு எரிமலை மீது உட்கார்ந்திருக்கிறாய் – எந்தக் கணமும் அது வெடிக்கலாம்.

நீ சேகரித்துக் கொண்டே போகிறாய். முழு நாளின் கோபத்தையும் சேகரித்துள்ளாய். முழு மாதத்தின் கோபத்தையும் சேகரித்துள்ளாய்; முழு வருடத்தின் கோபத்தையும், மேலும் உனது முழு வாழ்க்கையின் கோபத்தையும், அதன் பிறகு பல பிறவிகளின் கோபத்தையும் சேகரித்துள்ளாய். அது அங்கே இருக்கிறது; அது எந்தக் கணமும் வெடிக்கலாம். அப்போது நீ உயிர் வாழ்வதற்குக் கூட மிகவும் பயம் கொண்டவனாகிறாய். ஏனெனில் எந்தக் கணமும் ஏதாவது ஒன்று உள்ளே போகலாம், உடனே நீ வெடித்து விடுவாய். நீ பயமடைகிறாய், ஒவ்வொரு கணமும் உள்ளே ஒரு போராட்டமாகிறது.

உளவியலாளர்கள் சொல்கிறார்கள், அடக்கிக் கொள்வதை விடவும் வெளிப்படுத்துவது சிறந்தது. ஆனால் மதம் இதைச் சொல்ல முடியாது. மதம் சொல்கிறது, இரண்டுமே மடத்தனம். வெளிப்படுத்துவதில் நீ அடுத்தவருக்குக் கெடுதல் செய்கிறாய், உனக்கும் செய்து கொள்கிறாய். அடக்கி வைத்துக் கொள்வதில் நீ உனக்குக் கெடுதல் செய்து கொள்கிறாய், வேறொருவருக்கு வேறு ஏதாவது ஒரு நாள் கெடுதல் செய்வாய். மூலஸ்தானத்தை நோக்கிச் செல், அப்போது சக்தி மூலஸ்தானத்தில் விழுந்து வடிவத்தை இழக்கும். அப்போது நீ கோபமில்லாமலே மிகவும் சக்தியுள்ளவனாக உணர்வாய். அப்போது நீ சக்தியை உணர்வாய் – உயிர்ச் சக்தியை. நீ உயிர்த் துடிப்போடு இருப்பாய், நீ எந்த வடிவமும் கொள்ளாமல் சக்தி மிகுந்த ஆழமான வாழ்க்கையைப் பெறுவாய். உனது முன்னிலையே எவரையும் வசீகரிக்கும். நீ

எவரையும் ஆணையிடத் தேவையில்லை, உனது முன்னிலையே போதும், அவர்கள் ஏதோவொரு சக்திப் பெட்டகம் வந்துள்ளது என்று உணர்வார்கள்.

ஒருவர் புத்தரிடமோ, கிருஷ்ணரிடமோ போகும் பொழு தெல்லாம், திடீரென அவரது சக்தி சூழ்நிலையில் ஒரு மாற்றத்தை உணரும். ஏனெனில் அவர்கள் அவ்வளவு சக்தி மிகுந்த தோற்றுவாயாய், சக்திப் பெட்டகமாய் இருக்கிறார்கள். நீ அருகில் செல்லும் கணத்திலேயே, நீ ஈர்க்கப்படுகிறாய். யாரும் உன்னை ஈர்க்க முயல்வதில்லை, யாரும் எதுவும் முயற்சி செய்வதில்லை, அங்கு ஒன்றின் இருத்தல் இருக்கிறது அவ்வளவே. யாரோ உன்னை வசியம் செய்துவிட்டதாக நீ உணரலாம். ஆனால் யாரும் வசியப்படுத்துவதில்லை. புத்தர் ஒருவரின் முன்னிலை – வடிவமற்றதாக மாறிவிட்ட சக்தியைக் கொண்டவர், தோற்றுவாய்க்கே திரும்பிவிட்ட சக்தியைக் கொண்டவர், தனது மூலஸ்தானத்திலேயே மையம் கொண் டுள்ளவர் – அவரது முன்னிலையே வசியப் படுத்துவதா யிருக்கிறது. அது காந்த சக்தி உள்ளதாய் மாறுகிறது.

புத்தர் ஞானமடைந்தார். அவர் ஞானமடைவதற்கு முன் அவருக்கு ஐந்து சீடர்கள். அவர்கள் தவசிகள். மேலும் புத்தர் அவரே ஒரு மாபெரும் தவசியாக இருந்த பொழுது, அவரது உடம்பைப் பலபல வழிகளில் துன்புறுத்திக் கொண்டிருந்த பொழுது, தன்னைத் துன்புறுத்திக் கொள்ள மேலும் அதிக கொடூரமான, புதிய முறைகளைக் கண்டுபிடித்துக் கொண்டிருந்த பொழுது, இவர்கள் ஐவரும் அவரது அசைக்க முடியாத சீடர்கள். பிறகு புத்தர் இது முழுவதும், முற்றிலும் மடத்தனமானது என்று உணர்ந்தார். ஒருவன் தனது உடம்பைக் கொடுமைப்படுத்திக் கொள்வதால் அவன் தன்னை உணர்ந்து கொள்ள முடியாது. இதை அவர் உணர்ந்தவுடன், அவர் தவசியின் வழிகளை விட்டுவிட்டார். அந்த ஐந்து சீடர்களும் அவரைவிட்டு உடனே

சென்று விட்டனர். அவர்கள் சொன்னார்கள், ''நீங்கள் கீழே விழுந்து விட்டீர்கள். நீங்கள் இனிமேலும் ஒரு தவசி அல்ல.'' அவர்கள் போய்விட்டனர்.

புத்தர் ஞானமடைந்தவுடன், அவரது மனதில் முதலில் தோன்றியது அந்த ஐந்து சீடர்களைப் பற்றித்தான். அவர்கள் இவரது சீடர்களாக முன்பு இருந்தவர்கள். எனவே இவர் கண்டிப்பாக அவர்களிடம் போக வேண்டும். அவர் இதை ஒரு கடமையாக உணர்ந்தார் – அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து அவர்களிடம், இவர் கண்டடைந்ததைச் சொல்ல வேண்டும். எனவே அவர் அவர்களைத் தேடினார். மேலும் அவர் பீஹாரில் புத்தகயாவிலிருந்து காசி வரை அவர்களைக் கண்டுபிடிப் பதற்காகவே பயணம் செய்தார். அவர்கள் சாரநாத்தில், காசியின் ஒரு பகுதியில் இருந்தனர். புத்தர் பிறகு ஒருபோதும் காசிக்குத் திரும்பி வரவில்லை. சாரநாத்துக்குத் திரும்பி வரவில்லை. ஏனெனில் அவர் அந்த ஐந்து சீடர்களுக்காக மட்டும் அங்கு வந்தார்.

அவர் சாரநாத்துக்கு வந்தார். அது மாலை நேரம், சூரியன் மறைந்து கொண்டிருக்கிறது, மேலும் அந்த ஐந்து தவசிகளும் ஒரு குன்றின் மீது உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்கள் புத்தர் வருவதைப் பார்த்துவிட்டுக் கூறினார்கள், ''அந்த விழுந்துவிட்ட கௌதம புத்தர், அந்தப் பாதை தவறி படுகுழியில் விழுந்துவிட்ட கௌதம சித்தார்த்தா வந்து கொண்டிருக்கிறான். அவனுக்கு நாம் எந்த மரியாதையும் கண்டிப்பாகக் காட்டக் கூடாது. நாம் அவனுக்குச் சாதாரண மரியாதையைக் கூடத் தரக் கூடாது.

எனவே அவர்கள் கண்களை மூடிக் கொண்டனர். புத்தர் நெருங்கி வர வர, அந்த ஐந்து தவசிகளும் ஒரு மாற்றத்தை – மனம் மாறுவதை – உணர ஆரம்பித்தனர். அவர்கள் சங்கட மடைந்தனர். புத்தர் அவர்களை நெருங்கியவுடன், திடீரென ஐந்து பேரும் கண்களைத் திறந்தனர், புத்தரின் காலடியில் விழுந்து வணங்கினர். புத்தர் கேட்டார், ''ஆனால் நீங்கள் ஏன் இதைச் செய்கிறீர்கள்? நீங்கள் எனக்கு எந்த மரியாதையும்

கொடுப்பதில்லை என்று முடிவு செய்தீர்கள். எனவே ஏன் இதைச் செய்கிறீர்கள்?''

அவர்கள் சொன்னார்கள், ''நாங்கள் இதைச் செய்ய வில்லை, இது ஒரு நிகழ்வு. நீங்கள் அடைந்தது என்ன? நீங்கள் ஒரு காந்த சக்தியாக மாறிவிட்டீர்கள். நாங்கள் அதனால் இழுக்கப்பட்டோம், அவ்வளவுதான். நீங்கள் எங்களிடம் என்ன செய்தீர்கள்? நீங்கள் எங்களை வசியப்படுத்தி விட்டீர்களா?'' புத்தர் சொன்னார், ''இல்லை! நான் உங்களிடம் எதுவும் செய்ய வில்லை, ஆனால் எனக்குள் ஏதோவொன்று நிகழ்ந்திருக்கிறது. எல்லா சக்திகளும் மூலஸ்தானத்தில் விழுந்து விட்டன. எனவே நான் எங்கு நகர்ந்தாலும், திடீரென அங்கு ஒரு காந்த சக்தியை உணர முடிகிறது.''

இதனால் தான் புத்தருக்கு அல்லது மகாவீரருக்கு எதிரான வர்கள் பல நூற்றாண்டுகளாகச் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள், ''அந்த மனிதன் நல்லவனல்ல; அவன் மக்களை வசியப்படுத்துகிறான்.'' யாரும் வசியப்படுத்துவதில்லை. நீ வசியமடைகிறாய் – அது வேறு விஷயம். உனது சக்தி அதன் அசலான தோற்றுவாய்க்குள் திரும்ப விழும்பொழுது, நீ ஒரு காந்த சக்தி மையமாக மாறுகிறாய். இந்த யுக்தி இந்தக் காந்த சக்தி மையத்தை உன்னிடம் உருவாக்கும்.

**இரண்டாவது கேள்வி :**

---

❖ ***''நேற்று நீங்கள் மனதின் சுற்றை அவிழ்க்கும் தியானமுறை மிகவும் சிறப்பானது என்று கூறினீர்கள். ஆனால் மேற்கே நூற்றுக்கணக்கான 'பிராய்டின் வழியினரும்,' 'ஜங்கின் வழியினரும்' ஆன உளவியலாளர்கள், மனோதத்துவ நிபுணர்கள் இந்த யுக்தியைக் கடைபிடித்து வருகிறார்கள். ஆனால் மனிதனின் இருப்புநிலையை உயர் நிலைக்கு மாற்றும் முயற்சியில் அவர்களுக்குக் குறிப்பிடத் தகுந்த எந்த வெற்றியும் கிடைக்கவில்லை. அவர்கள் அப்படித் தோற்றுப் போவதற்குக் காரணங்கள் என்ன?''***

---

பல விஷயங்களை இங்கே குறிப்பிட வேண்டும். ஒன்று : மேற்கத்திய உளவியலுக்கு மனிதனின் இருப்பின் மேல், ஜீவனின் மேல், நம்பிக்கை இன்னும் ஏற்படவில்லை, அது மனதை மட்டுமே நம்புகிறது. மேற்கத்திய உளவியலுக்கு இன்னும் மனதைத் தாண்டி எதுவும் இல்லை. மனதைத் தாண்டி எதுவும் இல்லை என்றால், அப்போது நீ செய்வது எதுவும் உண்மையில் மனிதனுக்கு உதவப் போவது இல்லை. அதிக பட்சமாக அது மனிதன் சாதாரண இயல்போடு, சராசரியாக இருக்க உதவலாம் – அதிக பட்சம்!

இந்த சாதாரண இயல்பு என்றால் என்ன? சாதாரண இயல்போடு இருப்பது என்றால் என்ன? சராசரியாக இருப்பது. சராசரி மனிதன் என்று குறிப்பிடப்படுபவனே சாதாரண இயல்போடு இல்லாவிட்டால், அப்போது சாதாரண இயல்போடு இருப்பது என்பதற்கு எந்த அர்த்தமுமில்லை. நீ கூட்டத்தோடு ஒத்துப் போகிறாய் என்பதே இதன் அர்த்தமாக இருக்கிறது. எனவே மேற்கத்திய உளவியல் ஒரே ஒரு செயலையே செய்கிறது : ஒருவன் ஒத்துப்போகத் தவறும் பொழுதெல்லாம் மேற்கத்திய முறைகள் மறுபடியும் கூட்டத்தோடு ஒத்துப் போகுமாறு அவனைத் திருத்துகின்றன. கூட்டத்தை ஒருபோதும் எந்தக் கேள்வியும் கேட்பதில்லை; கூட்டம் சரியாக இருக்கிறதா என்ற கேள்வி எழுவதேயில்லை.

கிழக்கத்திய உளவியலில் கூட்டம் முக்கியமல்ல. இந்த வேறுபாட்டை நினைவில் கொள் : கிழக்கத்திய உளவியலுக்குக் கூட்டம் முக்கியமானதல்ல, சமூகம் முக்கியமானதல்ல. சமூகமே நோய்வாய்ப் பட்டிருக்கிறது. அப்படியானால் எது முக்கியம்? நமக்கு புத்தர் தான் முக்கியம், லட்சியம். நீ புத்தரைப் போல ஆகவில்லை என்றால், நீ நோய்வாய்ப்பட்டவன்.

மேற்கத்திய உளவியலுக்கு சமூகமே முக்கியம். ஏனெனில் அங்கு புத்தர் முக்கியத்துவம் பெற முடியாது. அவர்கள், உள்இருப்பு, ஜீவன் என்று ஒன்று இருப்பதாகவே நம்புவ

தில்லை. உள்இருப்பு ஒன்று இல்லை எனும்பொழுது, ஞான மடைவது என்பதே அங்கிருக்க முடியாது. ஆனால் உள்இருப்பு பிரகாசம் அடையும்போது, அப்போது அங்கு ஞானமடைவது இருக்கிறது.

எனவே மேற்கத்திய உளவியல் உண்மையில் வெறும் சிகிச்சை ரீதியானது, மருந்தின் ஒரு பகுதி மட்டுமே. அது முயற்சி செய்கிறது, அது நீ மறுபடியும் ஒத்துப் போகும்படியாக மாற உதவுகிறது. ஆனால் அது கடந்து சென்ற நிலை அல்ல. கிழக்கத்திய முயற்சி, எப்படி மனதைக் கடந்து செல்வது என்பதற்கானது. ஏனெனில் நமக்கு மனநோய் என்பதே கிடையாது, இதை நினைவில் வை. நமக்கு மனநோய்கள் என்று எதுவும் கிடையாது – பதிலாக, மனமேதான் நோய். மேற்கத்திய உளவியலுக்கு மனம் ஒரு நோயல்ல. மனமே நீ, அது ஒரு நோயல்ல. மனம் ஆரோக்கியமாகவும் இருக்கலாம், மனம் நோய்வாய்ப்பட்டும் இருக்கலாம்.

நமக்கு மனம்தான் நோய், மனம் ஒருபோதும் ஆரோக்கிய மாக இருக்க முடியாது. நீ மனதைக் கடந்து செல்லாவிட்டால், நீ ஒருபோதும் ஆரோக்கியமாக இருக்க முடியாது. நீ கூட்டத்தோடு ஒத்துப் போகும் ஒரு வகை நோயுடன் இருக்க முடியும், நீ ஒத்துப்போகாத ஒருவனாக நோயுடன் இருக்க முடியும். ஆனால் நீ ஒருபோதும் ஆரோக்கியமாக இருக்க முடியாது. எனவே சாதாரண இயல்பு கொண்ட மனிதன் உண்மையில் ஆரோக்கிய முள்ளவன் அல்ல. அவன் எல்லையை மீறவில்லை, அவன் குறிப்பிட்ட எல்லைக்குள் நோயோடிருக்கிறான். சாதாரண இயல்புப்படி இல்லாத ஒருவன் என்பவன் எல்லை கடந்து சென்று விட்டவன்; மேலும் இந்த இருவருக்கிடையிலுள்ள வேறுபாடு வெறும் டிகிரியில் மட்டுமே – வேறுபாடு அளவில் மட்டுமே, தன்மையில் அல்ல.

பயித்தியக்கார விடுதியில் இருக்கும் ஒரு பயித்தியக் காரனுக்கும் உனக்கும் – குணரீதியாகத் தன்மையில் எந்த

வேறுபாடும் கிடையாது, அளவு ரீதியாக மட்டுமே வித்தியாசம். அவன் உன்னைவிட சிறிது அதிக பயித்தியமாக இருக்கிறான்; நீ குறிப்பிட்ட எல்லைக்குள் இருக்கிறாய். செயல்பாட்டில், நீ தொடர முடியும். அவன் இப்போது செயல்பட முடியாது; அவன் உன்னைத் தாண்டி அதிகம் சென்றுவிட்டான். அவன் முத்திப் போன ஆள், வேறு ஒன்றுமில்லை. நீயும் அதே பாதையில்தான் நடந்து கொண்டிருக்கிறாய், அவன் போய்ச் சேர்ந்து விட்டான்.

மேற்கத்திய உளவியல் அவனைத் திரும்பவும் அந்தக் கூட்டத்திற்கு, அந்த மந்தைக்கு, அந்தத் தொகுப்புக்குக் கொண்டு வந்து சேர்க்க முயற்சிக்கிறது. அது அவனைச் சாதாரண இயல்புக்குக் கொண்டு வர முயற்சிக்கிறது. இது நல்லது; இது நடக்கும் வரை இது நல்லதுதான். ஆனால் நமக்கு ஒருவர் மனதைக் கடந்து செல்லும் வரை அவன் பயித்தியம்தான். ஏனெனில் நமக்கு மனமே பயித்தியகாரத்தனம்.

எனவே நாம் மனதின் சுற்றை அவிழ்க்க முயற்சிப்பது, அதைத் தாண்டியுள்ளதைத் தெரிந்து கொள்வதற்காக. அவர்களும் இதே முறையை முயற்சிக்கிறார்கள், ஆனால் மனதை ஒத்துப் போகச் செய்வதற்காக, ஏனெனில் அதைத் தாண்டிய ஏதும் அவர்களுக்கு இல்லை. மேலும் இதை நினைவில் கொள் : நீ உன்னைக் கடந்து செல்ல முடியவில்லை என்றால், மதிப்பு மிக்கது எதுவும் நிகழாது. நீ உன்னைக் கடந்துள்ள ஏதோ ஒன்றை அடைய முடியவில்லை என்றால், வாழ்க்கை அர்த்தமற்றது.

மற்ற சில விஷயங்களும் கூட..... பிராய்டிற்கும், அவரது வழியினருக்கும், மனிதன் உண்மையில் மகிழ்ச்சியாய் இருக்க முடியாதவன். அவர்களைப் பொருத்தவரை மனிதன் என்னும் இருப்பே மகிழ்ச்சியாய் இருக்க முடியாத ஒன்று. நீ துன்ப மில்லாமல் இருந்தால், அதுவே முடியக் கூடியது. நினைவில் கொள். நீ துன்பமில்லாமல் இருந்தால், திருப்தி கொள் – அது போதும். நீ மகிழ்ச்சியாய் இருக்க முடியாது. ஏன்? ஏனெனில், பிராய்டின் உளவியல் சொல்கிறது, அதாவது மகிழ்ச்சி

அனிச்சையாக – உனது கட்டுப்பாடில்லாமல் – உயிர் வாழ்வதில் தான் இருக்கிறது, ஆனந்தம் விலங்குகளைப் போல உயிர் வாழ்வதில் தான் இருக்கிறது, ஆனால் மனிதனால் அப்படி வாழ முடியாது. காரண அறிவு தொடர்ந்து இடையூறு செய்து கொண்டே இருக்கும். நீ உனது காரண அறிவை இழந்து ஒரு விலங்கைப் போல மாறிவிட்டால், அப்போது உன்னால் ஆனந்த மாக இருக்க முடியும். ஆனால் அப்போது ஆனந்தமாய் இருக்கிறோம் என்ற விழிப்புணர்வு உனக்கு இருக்காது. அவர்களைப் பொருத்தவரை இது ஒரு முரண்பாடு.

நீ கீழ்நோக்கி விழுந்து ஒரு விலங்காக மாறிவிட்டால், நீ ஆனந்தமாய் இருப்பாய். ஆனால் நீ விழிப்புணர்வோடு இருக்க மாட்டாய். நீ விழிப்புணர்வோடு இருக்க முயற்சித்தால் உன்னால் ஆனந்தமாய் இருக்க முடியாது. ஏனெனில் அப்போது நீ ஒரு விலங்கைப் போல ஆக முடியாது. காரண அறிவு எல்லா வற்றிலும் குறுக்கிட்டுக் கொண்டே இருக்கும். மனிதனால் காரண அறிவை இழக்க முடியாது, அதே சமயம் மனிதனால் காரண அறிவோடு ஆனந்தமாக வாழவும் முடியாது – இதுதான் பிரச்னை. எனவே பிராய்டைப் பொருத்தவரை நீ ஆனந்தமாய் இருக்க முடியாது. அதிகபட்சமாக, நீ புத்திசாலியாய் இருந்தால், நீ துன்பப்படாத அளவிற்கு உனது வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம். இது மிகவும் எதிரிடையான அணுகுமுறை.

கிழகத்திய உளவியலுக்கு அல்லது ஆன்மிகத்துக்கு அல்லது மதத்துக்கு ஒரு வளர்ச்சி கொடுக்கும் குறிக்கோள் உள்ளது. நீ ஆனந்தமாய் இருக்க முடியும். ஆனந்தமாய் மட்டுமல்ல, நீ பேரானந்தமாய் இருக்க முடியும். மேலும் கிழக்கத்திய உளவியல் சொல்கிறது, நீ, ஆனந்தமற்று இருப்பதை உணர முடிந்தால், அது உன்னால் ஆனந்தமாய் இருக்க முடியும் என்ற உனது ஆற்றலையே காட்டுகிறது; இல்லாவிட்டால் உன்னால் ஆனந்த மற்று இருப்பதையும் உணர முடியாமல் போக வேண்டும்.

ஒரு மனிதனால் அவனது கண்கள் மூலமாக இருட்டைப் பார்க்க முடிகிறது என்றால், இருட்டைப் பார்க்க முடியும்

ஒருவனால் ஒளியையும் பார்க்க முடியும். நினைவில் கொள், குருடான மனிதன் இருட்டையும் பார்க்க முடியாது. குருடான மனிதன் இருளில் வாழ்வதாக நீ நினைத்துக் கொண்டிருக்கலாம் – அதை முற்றிலும் மறந்து விடு. அவர்களால் இருட்டைப் பார்க்க முடியாது. ஏனெனில் இருட்டைப் பார்ப்பதற்குக் கூடக் கண்கள் தேவை. நீ ஆனந்தமற்று இருப்பதை உணர்கிறாய் என்றால் உனக்குக் கண்கள் இருக்கிறது, நீ ஆனந்தமற்றதை உணர முடிந்தால் உன்னால் ஆனந்தத்தையும் உணர முடியும். உண்மையில், நீ ஆனந்தத்தை உணரவில்லை என்றால், ஆனந்த மற்றதை உணர எந்தச் சாத்தியக் கூறும் இல்லை. அவை எதிரெதிர்த் துருவங்கள்.

உனக்கு முழு ஆனந்தத்தோடு இருக்கும் திறன் இருக்கிறது, அப்படி என்றால் அங்கு மனம் இருக்க முடியாது. இந்த விதமாக எடுத்துக் கொள் : நீ கீழ் நோக்கி விழுந்து வெறும் உடலாக மட்டும் மாறிவிட்டால், நீ ஆனந்தத்தில் இருப்பாய். பிராய்டும் இதை ஏற்றுக் கொள்கிறார். நீ உனது காரண அறிவை முற்றிலும் மறந்து கீழ்நோக்கி விழுந்துவிட்டால், நீ ஒரு விலங்கைப் போல, ஒரு உடலாக மட்டும் மாறி விட்டால், நீ ஆனந்தமாக இருப்பாய். ஆனால் நீ அதை அறிய மாட்டாய். மனத்தோடு, நீ அதை அறிய முடியும். ஆனால் அப்போது உன்னால் ஆனந்தமாய் இருக்க முடியாது. ஏனெனில் மனம் தொந்தரவு கொடுத்துக் கொண்டே இருக்கும். உடல் ஆனந்தமாய் இருக்க முடியும். ஆனால் மனம் தொந்தரவு கொடுத்துக் கொண்டே இருக்கும்.

மற்றொரு சாத்தியக் கூறு உள்ளது. அதையே கிழக்கு செயல்படுத்தியது : அது கடந்து செல்வது. பிராய்டு சொல்கிறார், அதாவது நீ கீழ்நோக்கி விழுந்து ஒரு விலங்காக மாறினால் நீ ஆனந்தமாக இருப்பாய். ஆனால் உன்னால் அதை அறிய முடியாது; நீ மனத்தோடு இருந்தால் நீ அறியலாம். ஆனால் நீ ஆனந்தமாக இருக்க முடியாது. கிழக்கத்திய தேடல் சொல்கிறது, அதாவது நீ மனதைக் கடந்து போனால் நீ ஆனந்தமாக இருக்கலாம், அதோடு அதை உணரவும் செய்யலாம். இதுதான் மூன்றாவது புள்ளி – கடந்த நிலையில் இருப்பது.

எனவே இவையே மூன்று புள்ளிகள். மனிதன் நடுவில் இருக்கிறான்; அவனுக்குக் கீழே விலங்கு இருக்கிறது. காட்டிற்குச் சென்று விலங்குகளைப் பார், அவை ஆனந்தமாய் இருப்பதை அவை உணராமல் இருக்கலாம், ஆனால் அவை ஆனந்தமாய் இருப்பதை நீ உணர்வாய். காலை வேளையில் கடற்கரைக்குச் செல் அல்லது காலை வேளையில் தோட்டத் திற்குச் செல், அங்குப் பறவைகளின் கானத்தைக் கேள். அவை களுக்கு அது தெரியாமல் இருக்கலாம், ஆனால் நீ அவைகள் ஆனந்தமாய் இருப்பதை உணர்வாய். நீ ஒருபோதும் இதைப் போலப் பாடியது கிடையாது. அவற்றின் கண்களின் உள்ளே ஆழமாகப் பார் – அவை வெகுளியாக எதனாலும் மூடப்படாமல் இருக்கிறது. அவை ஆனந்தமாய் உள்ளன, ஆனால் நீ ஆனந்தம் இல்லாமல் இருக்கிறாய்.

கீழ் நோக்கி விழுந்து வெறும் உடம்பு மட்டுமாக ஆகிவிடு. அப்போது நீ ஆனந்தமாக இருப்பாய் அல்லது கடந்து சென்று ஆன்மாவாக அல்லது உயிரிருப்பாக மாறி விடு, நீ ஆனந்தமாக இருப்பாய். ஆனால் நடுவில் எப்பொழுதும் நீ இறுக்கமாகவே இருப்பாய். ஏனெனில் உண்மையில் மனம் ஒரு முடிவல்ல. அது இரண்டு உண்மைகளுக்கு இடையில் நீண்டு கிடக்கும் கயிறு, அதாவது உடலுக்கும் ஆன்மாவிற்கும்.

எனவே நீ கயிற்றின் மேல் ஒரு கழைக் கூத்தாடியைப் போல, கயிற்றின் மேல் நடப்பவனாக இருக்கிறாய். கயிற்றின் மேல் நடப்பவன் லகுவாக இருக்க முடியாது. அவன் திரும்பிப் போக வேண்டும் அல்லது முன்னால் போக வேண்டும், ஆனால் அவன் கயிற்றின் மேலேயே இருக்க முடியாது. அவன் கயிற்றை விட்டுக் கீழே வர வேண்டும்; மேலும் அதற்கு இரண்டு சாத்தியக் கூறுகள் உள்ளன : அவன் பின்னோக்கிச் செல்லலாம் அல்லது அவன் முன்னோக்கிக் கடந்து செல்லலாம். மனம் ஒரு கயிறு, மேலும் மனத்தோடு வாழ்வது என்பது கயிற்றின் மேல் நடப்பது போன்றது. நீ கண்டிப்பாக சமநிலையற்று, சங்கடத்திலேயே இருப்பாய்; ஒவ்வொரு கணமும் வேதனையும் பதட்டமும் தான்.

மனதின் வாழ்வு இறுக்கமானது. அதனால்தான் மேற்கத்திய உளவியல் உன்னைச் சாதாரணமானவனாக ஆக்குவதில் வெற்றி அடைகிறது. ஆனால் உன்னைத் தன்னையறிந்த மனிதனாக ஆக்குவதில் தோல்வி அடைகிறது.

ஆனால் புதிய பாதைகள் பிறந்துள்ளன, மக்கள் சிந்திக்கின்றனர், மேலும் கிழக்கு மேற்கை மிக ஆழமாக இப்போது ஊடுருவிக் கொண்டிருக்கிறது. உண்மையில் இதுவே கிழக்கு வெற்றி கொள்ளும் வழியாகும். மேற்கு கிழக்கை வெற்றி கொண்டது – அவர்களது வழி மிகவும் மேலோட்டமானது. கிழக்கிற்கு அதற்கே சொந்தமான வெற்றி கொள்ளும் வழிகள் உள்ளன – மிக நுட்பமான வழிகள், மௌனமான வழிகள். இப்போது கிழக்கு மேற்கத்திய மனத்தை ஆழமாக ஊடுருவிக் கொண்டிருக்கிறது. எந்த வன்முறையும் இல்லாமல், வெளியே தெரியும் எந்தப் பூசலும் இல்லாமல் கிழக்கு வெகு ஆழமாக மேற்கை ஊடுருவிக் கொண்டிருக்கிறது. விரைவிலோ அல்லது தாமதமாகவோ மேற்கத்திய உளவியல் உயர்நிலைக்குக் கடந்து செல்வது குறித்து, மனதைக் கடந்து செல்வது குறித்து, கோட்பாடுகளை உருவாக்கிக் கொண்டாக வேண்டும்.

மனதின் பின்னலை அவிழ்ப்பது இரண்டு விதமாகவும் உதவ முடியும். நீ ஒரு சாதாரண மனதை உருவாக்க முயற்சி செய்தால், அதற்கும் அது உதவும். ஆனால் அப்போது உன்னுடைய குறிக்கோள் கடந்து செல்லுதல் அல்ல. உன்னுடைய குறிக்கோள் கடந்து செல்லுதலாக இருந்தால் அப்போது இது உதவும். இந்த எல்லா யுக்திகளையும் சாதாரண மன அமைதிக்கும் பயன்படுத்தலாம். மேலும் இந்த எல்லா யுக்திகளையும் மனதைச் சாராத உண்மையான மௌனத்தை அடைவதற்கும் பயன்படுத்தலாம்.

இரண்டு விதமான மௌனங்கள் உள்ளன : மனதைச் சேர்ந்தது ஒன்று. இதில் மனம் மௌனமாக இருக்கும், மற்றொரு மௌனம் மனம் இல்லாமல் போய் விடும்போது. மனம் இல்லாமல் போய் விடும்போது ஏற்படும் மௌனம் மன

அமைதிக்கு முற்றிலும் மாறுபட்டது. மன அமைதியில் மனம் அங்கே இருக்கிறது, மிகவும் பயித்தியமாய் இல்லை, அவ்வளவுதான். பயித்தியக்காரத்தனம் குறைவாக இருக்கிறது – அவ்வளவுதான்.

மேற்கத்திய உளவியல் பௌதீகம் தாண்டியதாகக் கண்டிப்பாக மாற வேண்டும், அப்போது மட்டுமே மனிதன் கடந்து செல்ல முடியும். அது ஒரு தத்துவமாகவும் கண்டிப்பாக மாற வேண்டும், மேலும் இறுதியில் அது கண்டிப்பாக மதமாக மாற வேண்டும். அப்பொழுது மட்டுமே மனிதன் கடந்த நிலைக்குச் செல்வதற்கு அது உதவ முடியும்.

**மூன்றாவது கேள்வி :**

❖ *"நீங்கள் பல தியான முறைகளை எங்களுக்கு விளக்கிக் கொண்டு வருகிறீர்கள். ஆனால், ஒரு முறையில் ஒருவன் தீட்சை பெறாவிட்டால், அந்த முறை முழு சக்தியுள்ளதாக இருக்காது என்பது உண்மையல்லவா?*

ஒரு முறையில் நீ தீட்சை பெறும்போது, அதன் தன்மையில் மாறுபாடு ஏற்படுகிறது. நான் முறைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன் – நீ அவைகளைப் பயன்படுத்த முடியும். நீ அதன் பின்னாலுள்ள விஞ்ஞானத் தத்துவத்தையும், வழியையும், செயல்படும் வழியையும் ஒரு முறை அறிந்து விட்டால், நீ அதைப் பயன்படுத்தலாம். ஆனால் தீட்சை அதன் தன்மையில் மாற்றத்தை உருவாக்குகிறது. நான் உன்னை ஒரு குறிப்பிட்ட முறையில் செல்வதற்காக தீட்சையளித்தால் அது மாறுபட்டதாய் இருக்கும். ஏனெனில் தீட்சை கொடுப்பதில் பல விஷயங்கள் அடங்கியுள்ளன.

நான் ஒரு முறையைப் பற்றிப் பேசும்போது நான் அதை உனக்கு விளக்குகிறேன், நீ அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம். முறை உனக்கு விளக்கப்பட்டுள்ளது, ஆனால் அது உனக்குப் பொருந்துமா அல்லது பொருந்தாதா, அது உன்மேல் எப்படி வேலை செய்யும், நீ எந்த வகையைச் சேர்ந்த மனிதன்

என்பதெல்லாம் ஆலோசிக்கப் படவில்லை. அதற்கு சாத்தியம் இல்லை.

தீட்சையில் யுக்தியை விட நீ அதிக முக்கியத்துவம் பெறுகிறாய். குரு உனக்குத் தீட்சை கொடுக்கும்போது அவர் உன்னை ஆழ்ந்து கவனிக்கிறார். நீ எந்த வகையானவன் என்று அவர் கண்டுபிடிக்கிறார், உனது முற்பிறவிகளில் நீ எவ்வளவு தூரம் வேலை செய்திருக்கிறாய் என்று அவர் கண்டு பிடிக்கிறார், இந்த கணத்தில் நீ எங்கிருக்கிறாய், இப்போது நீ எந்த மையத்தின் மூலமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறாய் என்று பார்க்கிறார், அதன் பின் அவர் முறையைப் பற்றி முடிவு செய்கிறார் : அவர் முறையைத் தேர்ந்து எடுக்கிறார். இது தனி ஒருவருக்காக மேற்கொள்ளும் அணுகுமுறை. இங்கு முறை முக்கியம் அல்ல, நீ முக்கியம்; நீ பரிசீலிக்கப்படுகிறாய், கவனிக்கப்படுகிறாய், அலசப்படுகிறாய்.

உனது முற்பிறவிகள், உனது உணர்வு நிலை, உனது மனம், உனது உடல் இவை துண்டுதுண்டாக உள்ளன. நீ எங்கு இருக்கிறாய் என்று ஆழமாகக் குருவால் உணரப்படுகிறாய். ஏனெனில் அந்தப் புள்ளியிலிருந்தே பயணம் துவங்குகிறது – நீ இந்தக் கணத்தில் இருக்கும் புள்ளியில் இருந்து எல்லா முறைகளும் பொருந்தாது.

பிறகு குரு ஒரு குறிப்பிட்ட முறையை உனக்குத் தேர்ந்து எடுக்கிறார். மேலும் இந்தக் குறிப்பிட்ட முறை உனக்காக மாற்றப்பட வேண்டும் என்று உணர்ந்தால், அந்த நுண்ணிய மாற்றங்களை அல்லது சில சேர்க்கப்பட வேண்டி வரலாம், அவர் சேர்க்கிறார். அவர் நீக்குகிறார், அவர் அந்த முறையை உனக்குப் பொருத்தமாக மாற்றுகிறார். அதன் பிறகு அவர் தீட்சை கொடுக்கிறார்; அப்போது அவர் உனக்கு யுக்தியைக் கொடுக்கிறார். இதனால் தான் ஒரு முறையில் உனக்குத் தீட்சை கொடுக்கப்படும் பொழுது, நீ அதைப் பற்றிப் பேசக் கூடாது என்று வலியுறுத்தப்படுகிறது. அது ரகசியமாக இருக்க வேண்டும். ஏனெனில் அது உனக்கு மட்டுமே பொருந்துவது. நீ அதை வேறு யாரோ ஒருவரிடம் கூறினால், அது உதவாமல் போகலாம் அல்லது அது கெடுதலைக் கூட ஏற்படுத்தலாம்.

அது ரகசியமாகக் காப்பாற்றப் பட வேண்டும். நீ அடையும் வரை, மேலும் உனது குரு இப்போது நீ மற்றவர் களுக்கு தீட்சை கொடுக்கலாம் என்று சொல்லும் வரை, அதைப் பற்றிச் சிறிது கூடப் பேசக் கூடாது – எதுவும் சொல்லக் கூடாது. உனது கணவனிடம் அல்லது மனைவியிடம் அல்லது நண்பனிடம் கூடச் சொல்லக் கூடாது. கூடாது, அது பரிபூரண ரகசியமாய் இருக்க வேண்டும். ஏனெனில் அது ஆபத்தானது, அது மிகவும் சக்தி வாய்ந்தது. அது தேர்ந்து எடுக்கப்பட்டு உனக்காக மாற்றப்பட்டுள்ளது. அது உனக்கு வேலை செய்யும், ஆனால் இந்த உலகத்திலுள்ள வேறு எந்தத் தனி நபருக்கும் அது பொருந்தாது. உண்மையில், ஒவ்வொரு தனி மனிதனும் அவனுக்கென்று ஒரு தனி முறை தேவை என்ற அளவிற்குத் தனித்தன்மை பெற்றவன். மேலும் ஒரு யுக்தியில் மிகச் சிறிய மாற்றம் செய்தால் அது பொருத்தமானதாக மாறிவிட முடியும்.

நான் பேசிக் கொண்டிருக்கும் இந்த நூற்றிப்பன்னிரெண்டு வழிமுறைகளும் பொதுவான வழிமுறைகள். இவை நூற்றிப் பன்னிரெண்டு பொதுவழிகள், பயன்படுத்தப்பட்டு வருகின்ற எல்லா முறைகளும் இவற்றில் அடங்கும். இது ஒரு பொதுவான வடிவம். எனவே நீ இதைப்பற்றித் தெரிந்து கொள்ளலாம். நீ முயற்சிக்க முடியும் – ஏதாவது ஒன்று உனக்குப் பொருந்தினால் நீ தொடாந்து போகலாம். ஆனால் இது அந்த முறையில் தீட்சை பெறுவது அல்ல. தீட்சை பெறுவது தனிப்பட்ட சொந்த விஷயம். அது குருவிற்கும் சீடனுக்கும் இடையேயானது. அது ரகசியமாகக் கொடுக்கப்படும் ஒன்று. மேலும் மற்ற பல விஷயங்களும் தீட்சையில் அடங்கியுள்ளன. குரு உனது உணர்வற்ற நிலையின் ஆழத்திற்குச் செல்லக்கூடிய சரியான கணத்தைத் தேர்ந்தெடுத்து அப்போது வழிமுறையை உனக்குக் கொடுக்கிறார்.

நான் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, உனது உணர்வு உள்ள மனம் கேட்டுக் கொண்டிருக்கிறது. நீங்கள் மறந்து விடுவீர்கள். நான் நூற்றிப்பன்னிரெண்டு வழிமுறைகளைப் பற்றியும் பேசி முடிக்கும் பொழுது, நீ அவற்றின் பெயர்களைக் கூடத் திரும்பச் சொல்ல முடியாது. நீ பலவற்றை முற்றிலும் மறந்து விடுவாய். நீ சிலவற்றை நினைவில் வைத்திருப்பாய்.

மேலும் அப்போது நீ ஒன்றொடொன்று கலந்து குழப்பம் கொண்டவனாய் இருப்பாய். உனக்கு எது எதுவென்று தெரியாது.

குரு உனது உணர்வற்ற நிலை திறந்திருக்கும் சரியான கணத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அப்போது உனக்கு அந்த வழிமுறையைக் கொடுக்க வேண்டும். அப்போது தான் அது உணர்வற்ற நிலையின் அடி ஆழத்திற்குச் செல்லுகிறது. எனவே பல நேரங்களில் உன் உறக்கத்தில் தீட்சை கொடுக்கப்படுகிறது, நீ உணர்வோடு இருக்கும் பொழுது அல்ல. பல நேரங்களில் நீ ஆழமான வசிய மயக்கத்தில் இருக்கும் பொழுது தீட்சை கொடுக்கப்படுகிறது. உனது உணர்வுள்ள மனம் முற்றிலும் உறக்கத்திலும் உனது உணர்வற்ற மனம் திறந்திருக்கும் பொழுதும் கொடுக்கப்படுகிறது.

இதனால் தான் தீட்சை பெறுவதற்கு சரணாகதி மிக முக்கியமாகத் தேவைப்படுகிறது. நீ சரணாகதி அடையாவிட்டால் தீட்சை கொடுக்க முடியாது. ஏனெனில் நீ சரணாகதி அடையாவிட்டால் உனது உணர்வுள்ள மனம் எப்பொழுதும் ஜாக்கிரதையாகக் காத்து நிற்கிறது. நீ சரணாகதி அடையும் பொழுது உனது உணர்வுள்ள மனம் அதன் கடமையிலிருந்து விடுவிக்கப்படுகிறது, மேலும் உனது உணர்வற்ற மனத்திடம் குரு நேரடியாகத் தொடர்பு கொள்ள முடிகிறது.

சரியான நேரத்தைக் கணிக்க வேண்டும். மேலும் உன்னைத் தீட்சை பெறத் தகுந்தவனாகத் தயார் செய்ய வேண்டும். உன்னைத் தயார் செய்யப் பல மாதங்கள் ஆகலாம். அங்குச் சரியான உணவு சரியான உறக்கம் ஆகியவை வேண்டும். மேலும் எல்லாமும் ஒரு அமைதியான புள்ளிக்கு வர வேண்டும்; அப்போது மட்டுமே உனக்கு தீட்சை கொடுக்க முடியும். எனவே தீட்சையளிப்பது ஒரு நீண்ட தொடர் செயல், ஒரு தனி மனிதத் தொடர் செயல். ஒருவர் முற்றிலும் சரணாகதி அடையத் தயாராகாத வரை, தீட்சை சாத்தியமில்லை.

எனவே நான் உனக்கு இந்த வழிமுறைகளுக்கான தீட்சை அளிப்பதைச் செய்யவில்லை. நான் இந்த முறைகளை உனக்கு அறிமுகப்படுத்துகிறேன், அவ்வளவுதான். யாராவது ஒருவர் எந்த

வழிமுறையாவது அவருக்குப் பொருந்தும் என்று ஆழமாக நினைத்தால், மேலும் அவர் அந்த வழிமுறைக்கு தீட்சை பெற வேண்டும் என்று உணர்ந்தால், நான் அவருக்கு அந்த வழிமுறையில் தீட்சை கொடுக்க முடியும். ஆனால் அப்போது அது ஒரு நீண்ட செயல் முறையாக இருக்கும். அப்போது உனது தனிமனிதத்தன்மை முற்றிலுமாக அறியப்பட வேண்டும். நீ முற்றிலும் நிர்வாணமாக, எதுவும் மறைக்கப்படாதவனாக ஆக வேண்டும். அதன் பிறகு அது மிகவும் எளிது – ஏனெனில் சரியான கணத்தில் சரியான வழிமுறை சரியான நபருக்குக் கொடுக்கப்பட்டால் அது உடனே வேலை செய்யும்.

சில நேரங்களில் இது நிகழ்கிறது, அதாவது சீடனுக்குத் தீட்சை கொடுத்துக் கொண்டிருக்கும் பொழுதே, சீடன் ஞானமடைந்து விடுகிறான், வெறும் தீட்சையே ஞானமடைத லாக ஆகிவிடுகிறது. குருவினால் தனியாக ஒருவருக்கு மட்டும் அது கொடுக்கப்படும் பொழுது, அந்த வழிமுறை உயிர் பெறுகிறது. இப்போது நான் செய்வது எதுவும் தீட்சை கொடுப்பது அல்ல, இதை நினைவில் கொள். நூற்றிப் பன்னிரெண்டு வழிமுறைகளையும் திரும்பக் கொண்டு வருவதற் காக, அவைகளை அறியச் செய்வதற்காக மேற்கொண்டுள்ள விஞ்ஞான பூர்வமான அணுகுமுறைதான் இது.

யாராவது ஒருவர் ஈடுபாடு கொண்டால், அவர் தீட்சை பெற முடியும். மேலும் நீ உண்மையிலேயே ஈடுபாடு கொள்ளும் பொழுது நீ தீட்சை பெற விரும்புவாய். ஏனெனில் ஒரு வழிமுறையில் தனியாக முயற்சி செய்வது என்பது மிக நீண்ட கால விஷயம். அது பல வருடங்கள் எடுக்கலாம், பல பிறவிகள் எடுக்கலாம். மேலும் மிக நீண்ட காலத்திற்குள் அதை விடாமல் முயற்சி செய்ய உன்னால் முடியாமல் போகலாம். தீட்சை பெறுவதன் மூலம் அது மிக சுலபமாகிறது. மேலும் அப்போது அந்த வழிமுறை உனக்குள் செலுத்தப்படுகிறது. பிறகு அந்த முறையின் மூலம் குரு உனக்குள் வேலை செய்ய ஆரம்பிக்கிறார். தீட்சை குருவுடன் கொள்ளும் உயிருள்ள உறவு, மேலும் ஒரு நீண்ட கால உறவு, மேலும் ஆழமாகச் செல்வது. அது உன்னை மாற்றுகிறது, உன்னை நிலைமாற்றம் செய்கிறது.

அடுத்த கேள்வி :

❖ **"அடையாளம் கொள்வதே ஒரே பாவச்செயல்' என்று ஜார்ஜ் குருட்ஜிப் சொல்லியிருப்பதாக நீங்கள் கூறினீர்கள், ஆனால் பல யுக்திகளில் இந்த அடையாளம் கொள்ளும் செயல் முறை பயன்படுத்தப்படுகிறது. அவை சொல்கின்றன, உதாரணமாக, அன்பிற்குரியவருடன் ஒன்றாகிவிடு, ரோஜாப் பூவுடன் ஒன்றிவிடு, அல்லது குருவுடன் ஒன்றிவிடு. மேலும், அதோடு, அடுத்தவராக மாறி அவரை உணர்ந்து கொள்வது என்பது ஒரு ஆன்மிக மற்றும் தியானத் தன்மையாகவே கருதப்படுகிறது, எனவே 'ஜார்ஜ் குருட்ஜிப்' சொல்லியிருப்பது முழு உண்மையல்ல, ஒரு சில குறிப்பிட்ட யுக்திகளுக்கு மட்டுமே பொருந்துவது என்றே தோன்றுகிறது."**

அப்படியல்ல! அது அரைகுறை உண்மையல்ல, அது முழுதும் உண்மை. ஆனால் நீ புரிந்துகொள்ள வேண்டும். அடையாளம் கொள்வது உணர்வற்ற நிலை, ஆனால் அதை நீ தியான யுக்தியில் பயன்படுத்தும் போது அதை உணர்வோடு செய்கிறாய்.

உதாரணமாக, உனது பெயர் ராம். யாரோ ஒருவர் "ராமை" அவமானப்படுத்துகிறார் - உடனே நீ அவமானத்தை உணர்கிறாய். ஏனெனில் நீ ராம் என்ற பெயரோடு அடையாளம் கொண்டிருக்கிறாய். ஆனால் இது உணர்வோடு கூடிய செயலல்ல உனக்கு, இது உணர்வற்றது. உனது மனம், "நான் ராம் என்று அழைக்கப்படுகிறேன். பார்க்கப் போனால், நான் ராம் அல்ல, அது எனது பெயர் மட்டுமே, மேலும் எல்லோரும் பெயரின்றியே பிறக்கிறார்கள். இந்தப் பெயர் மற்றவர்களால் வைக்கப்பட்டது, இது வெறும் குறியீடு. இந்த மனிதன் என்னுடைய குறியீடாக இருக்கும் பெயரையே அவமானப் படுத்துகிறான். எனவே இதற்காக நான் கோபப்பட வேண்டுமா அல்லது வேண்டாமா?" என்றெல்லாம் கேட்டுக் கொண்டிருப்ப தில்லை. நீ ஒருபோதும் இப்படி, இந்தவிதமாகப் பகுத்தாராய முடியாது. நீ இந்தவிதமாகப் பகுத்தாராய்ந்தால், நீ கோபம்

கொள்ளவே முடியாது. திடீரென யாரோ ஒருவர் ''ராமை'' அவமானப்படுத்துகிறார், உடனே நீ அவமானப்படுகிறாய், ஆனால் பெயர் வெறும் குறியீடுதான். இந்த அடையாளம் கொள்ளல் உணர்வற்றது, இது உணர்வுள்ளது அல்ல.

நீ ஒரு ரோஜாப் பூவுடன் ஒன்றிவிட, அடையாளம் கொள்ள முயற்சிக்கும் போது, அது ஒரு உணர்வோடு கூடிய முயற்சி. நீ ரோஜாப் பூவுடன் அடையாளம் கொண்டிருப்ப தில்லை. நீ ரோஜாவுடன் உன்னை அடையாளம் கொள்ள முயற்சிக்கிறாய், மேலும் நீ உன்னை மறந்துவிட முயற்சிக் கிறாய். நீ ரோஜாவுடன் ஒன்றிவிட முயற்சிக்கிறாய், மேலும் நீ ஆழமான உணர்வோடு இருக்கிறாய், முழுச் செயல்பாட்டையும் உணர்ந்திருக்கிறாய். நீ இதைச் செய்கிறாய். உணர்வோடு அடையாளம் கொள்ளும் போது அது தியானமாகிறது. மேலும் நீ எந்தவொரு யுக்தியையும் உணர்வற்ற நிலையில் செய்தால், அது தியானமல்ல – நினைவில்கொள்.

நீ உனது பிரார்த்தனையை காலையிலும் இரவிலும் உணர்வற்றுச் செய்துகொண்டே இருக்கலாம், வெறும் ஒரு வழக்கமான விஷயமாக. அதைச் செய்யும் பொழுது நீ என்ன செய்கிறாய் என்ற உணர்வு சிறிது கூட இல்லாமல் செய்து கொண்டிருக்கிறாய். பிரார்த்தனையில் என்ன சொற்களை நீ சொல்கிறாய் என்ற உணர்வு உனக்குச் சிறிது கூட இருக்காது. நீ ஒரு கிளியைப் போல அவைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறாய். இது தியானமல்ல. மேலும் நீ உணர்வோடு குளித்தால், குளிப்பது கூட தியானம் தான். எனவே இதை நினைவில் கொள் : உணர்வோடு, கவனமாய் இருந்து, முழு விழிப்புணர்வோடு, செய்வது எதுவாயிருந்தாலும் அது தியானமாக மாறிவிடுகிறது. உணர்வோடு, முழு உணர்வோடு இருக்கையில் நீ யாரையாவது கொன்றால் கூட, அது தியானத் தன்மை கொண்டதே.

இதைத்தான் கிருஷ்ணர் அர்ச்சுனனுக்குச் சொல்கிறார் : ''பயப்படாதே. கொல்லு, கொலை செய், முழு உணர்வோடு, எவரும் கொல்லப்படுவதில்லை, எவரும் இறப்பதில்லை என்ற முழு அறிதலோடு.'' அர்ச்சுனன் உணர்வற்ற நிலையில் மிகச்

சுலபமாக எதிரிகளைக் கொன்று விடுவான். அவன் வெறிபிடித்து அதன் உன்மத்தம் பிடித்த நிலையில் கொன்றுவிட முடியும் – அது சுலபம். ஆனால் கிருஷ்ணர் சொல்கிறார், ''கவனமாய் இரு, முழு உணர்வோடு இரு. தெய்விகத்தின் கைகளில் வெறும் கருவியாக இரு. மேலும் எவரும் கொல்லப்படுவதில்லை, எவரும் கொல்லப்பட முடியாது என்பதை நன்றாக அறிந்திரு. உள் இருப்பு அழிவில்லாதது, என்றும் இருப்பது. எனவே நீ வெறும் வடிவங்களையே அழிக்கிறாய், அந்த வடிவங்களுக்குப் பின்னால் இருப்பதை அல்ல. எனவே வடிவங்களை அழி.'' அர்ச்சுனன் இவ்வளவு தியானத் தன்மையோடு விழிப்புணர்வில் இருந்தால், அப்போது அங்கு எந்த வன்முறையும் இல்லை, எவரும் கொல்லப்படவில்லை, எந்தப் பாவமும் செய்யப்பட வில்லை.

நான் நாகார்ஜுனாவின் வாழ்க்கையிலிருந்து ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன். இந்தியா உருவாக்கிய மாபெரும் ஞானிகளில் ஒருவர் நாகார்ஜுனா. புத்தர், மகாவீரர், கிருஷ்ணர் ஆகியோரை ஒத்தவர். மேலும் நாகார்ஜுனா மிகவும் அரிய மேதை. உண்மையில், அறிவாளிகள் மட்டத்தில், முழு உலகத்தி லும் அவருக்கு நிகராக ஒருவரும் இல்லை; அப்படிப்பட்ட கூர்மையான, ஊடுருவும் அறிவு அரிதாகவே நிகழ்கிறது.

அவர் ஒரு நகரத்தைக் கடந்து கொண்டிருந்தார், ஒரு தலைநகரம் அது. மேலும் அவர் எப்பொழுதும் நிர்வாணமாகவே இருந்து வந்தார். அந்த ராஜ்ஜியத்தின் அரசி அவரை நம்புபவள், பின்பற்றுபவள், மேலும் அவரை நேசிப்பவள், ஒரு பக்தை. எனவே நாகார்ஜுனா உணவு கேட்க அரண்மனைக்கு வந்தார். அவரிடம் ஒரு மரத்தாலான பிச்சைப் பாத்திரம் இருந்தது.

அரசி சொன்னாள், ''இந்தப் பிச்சைப் பாத்திரத்தை எனக்குக் கொடுங்கள். நான் அதை ஒரு பரிசாகப் போற்றிப் பாதுகாப்பேன். மேலும் நான் உங்களுக்கு வேறொன்று செய்து வைத்துள்ளேன். நீங்கள் அதை எடுத்துக் கொள்ளுங்கள்.''

நாகார்ஜுனா சொன்னார், ''சரி!'' அந்த ஒன்று தங்கத்தால் ஆனது. மேலும் பல அபூர்வக் கற்கள் அதில் பதிக்கப்பட் டிருந்தது; அது மிகவும் மதிப்புமிக்கது. நாகார்ஜுனா எதுவும்

சொல்லவில்லை. சாதாரணமாக எந்த சந்நியாசியும் அதை எடுத்துக் கொள்ள மாட்டார், அவர் சொல்வார், ''நான் தங்கத்தைத் தொட மாட்டேன்.'' ஆனால் நாகார்ஜுனா அதை எடுத்துக் கொண்டார். தங்கம் உண்மையில் வெறும் களிமண் தான் என்றால், பிறகு எதற்கு வித்தியாசம் பார்க்க வேண்டும்? அவர் அதை எடுத்துக் கொண்டார்.

அரசி கூட இதை நன்றாக உணரவில்லை. அவள் நினைத்தாள், ''ஏன்? அவர் முடியாது என்றல்லவா சொல்லி யிருக்க வேண்டும். எவ்வளவு பெரிய துறவி! ஏன் அவர் நிர்வாணமாக வாழும் பொழுது, துணிகள் கூட இல்லாம லிருக்கும் போது, எந்த உடைமையும் வைத்துக் கொள்ளாத போது, இவ்வளவு மதிப்புள்ளதை ஏன் எடுத்துக் கொண்டார்? ஏன் அதை மறுக்கவில்லை?''

நாகார்ஜுனா அதை மறுத்திருந்தால், அரசி வலியுறுத்தி இருப்பாள், பணிந்து வேண்டியிருப்பாள், ஆனால் அப்போது அவள் நன்றாக உணர்ந்திருப்பாள். நாகார்ஜுனா அதை எடுத்துக் கொண்டு போய் விட்டார். அவர் நகரத்தினூடே நடந்து செல்வதை ஒரு திருடன் பார்த்தான், அந்தத் திருடன் நினைத்தான், ''இந்த மனிதனால் இந்தப் பிச்சைப் பாத்திரத்தைக் காப்பாற்றி வைக்க முடியாது, யாரோ ஒருவன் இதைக் கண்டிப்பாகத் திருடிவிடுவான் அல்லது யாரோ ஒருவன் இவனிடமிருந்து கண்டிப்பாக எடுத்துக் கொண்டு விடுவான். இப்படி நிர்வாணமாய் இருந்து கொண்டு – இதை எப்படி இவன் பாதுகாப்பான்?'' எனவே திருடன் பின்தொடர்ந்தான் ..... அவன் நாகார்ஜுனாவைப் பின்பற்றினான்.

நாகார்ஜுனா அந்த நகரத்திற்கு வெளியே உள்ள ஒரு பழைய மடாலயத்தில் தங்கியிருந்தார், தனியாக; அந்த மடாலயம் வெறும் இடிபாடுகளாய்க் கிடந்தது. அவர் உள்ளே சென்றார், அவர் ஒரு ஆளின் காலடி சப்தத்தைக் கேட்டார். ஆனால் பின்னால் திரும்பிப் பார்க்கவில்லை. ஏனெனில் அவர் நினைத்துக் கொண்டார், ''அவன் கண்டிப்பாக இந்தப் பிச்சைப் பாத்திரத்திற்காக வந்தவனாய் இருக்க வேண்டும், எனக்காக அல்ல, ஏனெனில் யார் வருவார்கள்? இந்தப் பாழடைந்த

மடாலயத்திற்கு, என்னைப் பின்பற்றி எப்போதும் யாரும் வந்ததில்லை.''

அவர் உள்ளே சென்றார். அந்தத் திருடன் ஒரு சுவரின் பின்னால் நின்றவாறு காத்திருந்தான். நாகார்ஜுனா, அவன் வெளியில் காத்திருப்பதைப் பார்த்துவிட்டு, பிச்சைப் பாத்திரத்தை வெளியே வீசி எறிந்தார்.

அந்தத் திருடனால் புரிந்து கொள்ள முடியவில்லை : ''என்ன விதமான மனிதன் இவன்? நிர்வாணமாயிருக்கிறான், இவ்வளவு அரிய பொருளுடன் இருந்தான், இப்போது அதை வெளியே வீசி விட்டான்.'' எனவே அவன் நாகார்ஜுனாவிடம் கேட்டான், ''தயவுசெய்து நான் உள்ளே வரலாமா? நான் ஒரு கேள்வி கேட்க வேண்டும்.''

நாகார்ஜுனா சொன்னார், ''நான் அந்தப் பாத்திரத்தை வெளியே வீசியதே நீ உள்ளே வருவதற்காகத்தான் – நீ உள்ளே வருவதற்கு உதவத்தான். ஏனெனில் நான் இப்போது எனது மதிய குட்டித் தூக்கம் தூங்கப் போகிறேன். நீ இந்தப் பிச்சைப் பாத்திரத்திற்காகத்தான் வந்திருக்க வேண்டும், ஆனால் நான் தூங்கிய பின் உன்னைச் சந்திக்க முடியாமல் போய்விடும். எனவே உள்ளே வா.''

அந்தத் திருடன் உள்ளே வந்தான். அவன் சொன்னான், ''எவ்வளவு அரிய பொருள், அதை வெளியே எறிந்துவிட்டீர்களே ஏன்? மேலும் நீங்கள் பெரிய மகான், உங்கள் முன் என்னால் பொய் சொல்ல முடியாது – நான் ஒரு திருடன்.''

நாகார்ஜுனா சொன்னார், ''கவலைப்படாதே, எல்லோரும் திருடர்கள்தான். நீ போய்க்கொண்டே இரு, இது போன்ற தேவையற்ற விஷயங்களுக்காக எல்லாம் நேரத்தை வீணடிக்காதே.''

அந்தத் திருடன் சொன்னான், ''சில நேரங்களில், உங்களைப் போன்றவர்களைப் பார்க்கும் பொழுது, இந்த நிலையை எப்படி அடைவது என்று அறிந்து கொள்ளும் ஆசை என் மனத்திற்கும் வருகிறது. ஆனால் நான் பிரார்த்திக்கிறேன், நான் எதிர்பார்த்து நம்பிக்கையோடு காத்திருக்கிறேன், அதாவது

என்றாவது ஒரு நாள் நானும் இவ்வளவு அரிய பொருளை வீசியெறியக் கூடியவனாக மாறுவேன். ஏதாவது எனக்குக் கற்றுக் கொடுங்கள். நான் பல மகான்களிடம் போவதுண்டு, மேலும் நான் ஒரு பிரபலமான திருடன். எனவே எல்லோருக்கும் என்னைத் தெரியும். அவர்கள் சொல்கிறார்கள், ''முதலில் உனது தொழிலை, வேலையை விடு, அதன் பிறகே நீ தியானத்தில் முன்னேற முடியும். இது எனக்கு சாத்தியம் இல்லை, நான் இதை விட முடியாது, எனவே நான் தியானத்தை கடைபிடிக்க முடியாது.''

நாகார்ஜுனா கூறினார், ''யாராவது ஒருவர் உன்னிடம் முதலில் திருட்டை விடு அதன் பிறகு தியானத்தைக் கடைபிடி என்று சொன்னால், அப்போது அவருக்குத் தியானத்தைப் பற்றி எதுவுமே தெரியாது – ஏனெனில் தியானத்திற்கும் திருட்டுக்கும் என்ன சம்பந்தம்? எந்த சம்பந்தமும் இல்லை. எனவே நீ என்ன செய்து கொண்டிருக்கிறாயோ அதையே தொடர்ந்து செய். நான் உனக்கு ஒரு யுக்தியைக் கொடுக்கிறேன், நீ அதைப் பயிற்சி செய்.''

அந்தத் திருடன் சொன்னான், ''இப்போது நாம் இருவரும் ஒன்று சேரலாம் போலத் தெரிகிறது. நான் எனது தொழிலைத் தொடர்ந்து செய்யலாமல்லவா? எனவே என்ன யுக்தி? உடனே எனக்குச் சொல்லுங்கள்!''

நாகார்ஜுனா சொன்னார், ''நீ உணர்வோடு இருக்க வேண்டும் – விழிப்புணர்வோடு. நீ எதையாவது திருட செல்லும் பொழுது, முழு உணர்வோடும் அதைப் பற்றிய விழிப்புணர் வோடும் இரு. நீ ஏதாவது ஒரு வீட்டினுள் திருடப் போகும் பொழுது, முழு உணர்வோடு இரு. நீ பணப்பெட்டியை உடைக்கும் பொழுது முழு உணர்வோடு இரு. நீ பணப்பெட்டியி லிருந்து எதையாவது எடுக்கும் பொழுது முழு உணர்வோடு இரு. அதை உணர்வோடு செய். நீ என்ன செய்கிறாய் என்பதில் எனக்கு அக்கறை இல்லை. மேலும் பதினைந்து நாட்களுக்குப் பிறகு வா, ஆனால் நீ பயிற்சி செய்யவில்லை என்றால் வராதே. பதினைந்து நாட்களுக்குப் பயிற்சி செய்; நீ எவற்றையெல்லாம் செய்து கொண்டிருக்கிறாயோ அவைகளைத் தொடர்ந்து செய், ஆனால் அவைகளை முழு உணர்வோடு செய்.''

மூன்றாவது நாள் அந்தத் திருடன் திரும்பி வந்து சொன்னான், ''பதினைந்து நாட்கள் என்பது மிகவும் அதிகம், மேலும் நீங்கள் மிகவும் தந்திரமான ஆள். நான் முழு உணர்வோடு இருக்கும் பொழுது என்னால் திருட முடிவ தில்லை, இப்படி ஒரு யுக்தியை எனக்குக் கொடுத்து விட்டீர்கள். கடந்த மூன்று தினங்களாகத் தொடர்ந்து நான் அரண்மனைக்குத் திருடச் சென்றேன். நான் கஜானாவை அடைந்தேன், நான் அதைத் திறந்தேன், அரிதான பொருள்கள் என் முன் இருந்தன, ஆனால் அப்போது நான் முழு உணர்வையடைந்தேன். மேலும் நான் முழு உணர்வை அடைந்த கணமே நான் புத்தரின் சிலையைப் போலாகி விட்டேன். என்னால் மேற்கொண்டு தொடர முடியவில்லை; எனது கைகள் அசைய மறுத்துவிட்டன, மேலும் அந்த முழு கஜானாவும் பயனற்றதாகத் தெரிந்தது. எனவே நான் திரும்பத் திரும்ப முயற்சி செய்தேன். நான் என்ன செய்வது? மேலும் நீங்கள் என்னிடம் தொழிலை விட வேண்டிய தேவை இல்லை என்று கூறினீர்கள். ஆனால் உங்களது முறையிலேயே அது அடங்கியிருக்கும் போலத் தெரிகிறது.''

நாகார்ஜுனா சொன்னார், ''மறுபடியும் என்னிடம் வராதே. இப்போது நீதான் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். நீ தொடர்ந்து திருட விரும்பினால் தியானத்தை மறந்து விடு. நீ தியானத்தை விரும்பினால் அப்போது திருட்டை மறந்து விடு. நீயே தேர்ந்தெடுத்துக் கொள்.''

அந்தத் திருடன் சொன்னான், ''நீங்கள் என்னை சங்கடத்தில் மாட்டி வைத்து விட்டீர்கள். இந்தக் கடந்த மூன்று நாட்களாக நான் உயிர்த்துடிப்போடு இருப்பதை நான் உணர்ந்து கொண்டேன். மேலும் அரண்மனையிலிருந்து எதையும் எடுக்காமல் திரும்பி வந்த பொழுது, முதல் தடவையாக நான் ஒரு முழு சுதந்திரம் உள்ளவனாக, ஒரு திருடனாய் இல்லாமல், என்னை உணர்ந்தேன். இந்த மூன்று தினங்களும் பேரானந்தமாய் இருந்தன. எனவே இப்போது என்னால் தியானத்தை விட முடியாது. நீங்கள் தந்திரம் செய்து விட்டீர்கள்; இப்போது எனக்குத் தீட்சை கொடுத்து உங்களது சீடனாக ஏற்றுக்

கொள்ளுங்கள். மேலும் முயற்சி செய்து பார்க்க வேண்டிய தேவையில்லை. மூன்று நாட்களே போதும்.''

பொருள் எதுவாயிருந்தாலும், நீ உணர்வோடு இருந்தால் அது தியானமாகி விடும். அடையாளம் கொள்வதை உணர்வோடு முயற்சி செய் – அது தியானமாக மாறிவிடும். உணர்வற்ற நிலையில் அது ஒரு பெரும் பாவம்.

நீங்கள் எல்லோரும் பலவற்றோடு அடையாளம் கொண்டிருக்கிறீர்கள் : ''இது என்னுடையது, அது என்னுடையது.....'' நீ அடையாளம் கொண்டிருக்கிறாய்! ''இது என்னுடைய நாடு, இது என்னுடைய தேசம், இது என்னுடைய தேசியக் கொடி ......'' யாராவது ஒருவர் உனது நாட்டின் தேசியக் கொடியை வீசி எறிந்தால் நீ கோபப்படுகிறாய் – அவன் என்ன செய்கிறான்? உனக்கு எந்த நாடும் இல்லை, மேலும் எல்லாத் தேசியக் கொடிகளும் புனைகதைகளே. அவற்றை விளையாட்டாக எடுத்துக் கொள்வது நல்லது – குழந்தைகள் செய்வது போல – அவைகள் விளையாட்டுப் பொம்மைகள். ஆனால் நீ அவற்றிற்காகக் கொலை செய்கிறாய், கொலை செய்யப்படுகிறாய், மேலும் ஒரு தேசியக் கொடியை அவமானபடுத்துவதால் நாடுகள் அழிக்கப்படுகின்றன. புதிய நாடுகள் உருவாக்கப் படுகின்றன. ஆனால் அது ஒரு வெறும் துண்டுத் துணி.

என்ன நடக்கிறது? நீ அதோடு அடையாளம் கொள்கிறாய். இந்த அடையாளம் கொள்ளல் உணர்வற்றது. உணர்வற்ற தன்மைதான் பாவம்.

இன்று இது போதும்.

## ஓஷோ குறித்து...

இன்றைய சமுதாயம் எதிர்கொண்டுள்ள அரசியல் பிரச்சனைகளுக்கும், வெகு அவசரமான சமூகப் பிரச்சனைகளுக்கும் விடை தேடும் தனி நபர்களின் தேடல் தாகத்தைத் தணிப்பவர், ஓஷோ. மதம், தேசம், இனம், மொழி போன்ற எந்த ரகமான பிரிவையும், கும்பலையும் எதிர்ப்பவர், ஓஷோ. இன்றைய விரைவு யுக வாழ்க்கையை நெறிப்படுத்துவதற்கான, அகமாற்று அறிவியலையும் தியான அணுகுமுறையையும் தந்த ஒரு புரட்சியின் மறுவடிவம்தான், ஓஷோ.

உடலிலும் உள்ளத்திலும் அடுக்கடுக்காய்க் குவியும் அழுத்தத்தை வெளியேற்றுவதற்கு ஏற்ற வகையில் தனித்துவத்துடன் உருவாக்கப்பட்டுள்ளன, ஓஷோவின் ஆக்டிவ் தியான முறை. (Osho Active Meditations™) இந்த முறை, தியானத்திற்கு உகந்த, சலனமில்லாத, சிந்தனையற்ற ஒரு மனநிலையைச் சுலபமாக எட்ட வைக்கிறது.

பூமியில் வலுவாய்ப் பதியும் பாதங்களும், வானத்து நட்சத்திரங்களை எட்டும் கரங்களும் கொண்ட 'ஸோர்பா புத்தர்' என்ற ஒரு புதுமையான மானுடம் பிறப்பதற்கான சூழலை உருவாக்குவதற்காக, ஒரு தெள்ளத் தெளிவான குறிக்கோள் கொண்டவர், ஓஷோ.

ஓஷோவின் சிந்தனை ஓட்டங்கள் முழுவதிலும் ஊடும் பாவுமாகக் கலந்துள்ளது, அவரது தொலைநோக்குப் பார்வை. கீழை நாட்டின் காலங்களைக் கடந்த ஞானக் கருவூலமும், மேலை நாட்டின் மேன்மையான அறிவியல் தொழில் நுட்பத்தையும் உள்ளடக்கியது, அந்தத் தீர்க்க தரிசனம். நாம், அதைப் புரிந்து

கொண்டு, நமது வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தினால், மனித இனத்தின் தராதரத்தில் ஒரு புரட்சி மலரும்.

ஓஷோ நூல்கள், எழுத்து வடிவம் அல்ல. முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக, முன்தயாரிப்பு ஏதும் இல்லாமல், அவர் அருவியாய்ப் பொழிந்த பேச்சு ஒலிநாடாக்களிலும், வீடியோ விலும் பதிவாகி உள்ளது. அவற்றின் தொகுப்புகள் தான் இப்போது புத்தகங்களாக வெளியிடப்படுகின்றன. 'இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய ஆயிரம் சிற்பிகளில் ஒருவர் ஓஷோ' என்று புகழாரம் சூட்டியுள்ளது இலண்டனிலிருந்து வெளிவரும் 'சண்டே டைம்ஸ்' இதழ்.

இந்திய தேசத்தின் தலைவிதியை மாற்றிய மாமனிதர்கள் (காந்தி, நேரு, புத்தரையும் சேர்த்து) பத்துப் பேரில் இவரும் ஒருவர் என்று 'சண்டே மிட்-டே' என்ற இந்திய இதழ் மகுடம் சூட்டியுள்ளது.

தந்த்ரா சொல்கிறது உனது இயற்கை
நல்லது: பாலுணர்வு நல்லது; அதனிடம்
உண்மையாயிரு. அதனுள் போ.
வாழ்விலும் உணர்விலும்
ஆர்வம் கொண்டவன் தானாகவே
பாலுணர்விலும் ஆர்வம் கொள்வான்
ஏனெனில் பாலுணர்வே வாழ்வின்



அன்பின் பிறப்பிடம். ஆனால்
தந்த்ரா நீ அதிலேயே கிடக்க உதவுவது
அல்ல. அதை மாற்றுவதற்கானது. எனவே
உன்னை ஏமாற்றிக்கொள்ளாதே. தந்த்ரா
சொல்லுகிறது. எதையும் எதிரியாக
எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை.